श्री:



श्रीमते निगमान्त महादेशिकाय नमः ।

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிய

# சில்லரை ரஹஸ்யங்கள்

## முதல் பாகம்

(மூலம், ரஹஸ்யார்த்த விவரணம் அடங்கியது)

மூலக்ரந்த பரிசோதனை
ஜநாதிபதி விருதுபெற்ற ஸ்ரீ உ.ப. வே. வித்வான்
**வ.ந. ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி**
ஒப்பிலியப்பன் ஸந்நிதி

புத்தக அமைப்பு
**Dr. S. பார்த்தசாரதி**
பெஸண்ட் நகர், சென்னை.

ஸாஹித்ய ரத்ன, ஸ்ரீ உ.ப. வே. வித்வான் நடாதூர்
**D. ராஜகோபாலன்,** M.A., B.Ed.
ஹரிநகர் – புதுதில்லி – 64.

வெளியீடு
பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமம்,
ஸ்ரீரங்கம்.
**1998**

ஸ்ரீ:



ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவர்

**ஸமர்ப்பணம்**

ஸ்ரீமத் வேத மார்க்கேத்யாதி ஞான வைராக்யாநுஷ்டான சேவதி,
பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய பௌண்டரீகபுரம்
ஸ்ரீமதாண்டவன்

*ஸ்ரீநிவாஸ மஹாதேசிகன்*

கரகமலங்களில் இவ்விரண்டாம் பதிப்பு மிக்க பக்தியுடனும்
விநயத்துடனும் ஸமர்ப்பிக்கப்படுகிறது.



விண்ணாற்றங்கரை ஸ்ரீநிவாஸ மஹாதேசிகன்
பங்குனி - அனுஷம்.



ஸ்ரீ நாராயண மஹாதேசிகன்
புரட்டாசி - திருவாதிரை

# சில்லரை ரஹஸ்யங்கள் – முதல் பாகம்

## பொருளடக்கம்

॥ श्रीः ॥

श्रीमते श्रीनिवास महादेशिकाय नमः ।

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

श्रीनिवासं परं ब्रह्म तन्नाम्नश्च गुरूत्तमान् ।

नारायणं रङ्गनाथौ प्रणम्येदं विलिख्यते ॥

माहयास्यं उपासेऽहं मन्मानस विलासकम् ।

अभीष्टदानकोशाक्षमालापद्मकरैर्युतम् ॥

ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் (வழுத்தூர்) வேதாந்த லக்ஷ்மண முனிவரின் நேர்ஸந்யஸ்த குரு பரம்பரையாம் மணிஹாரத்தின் நாயகரத்னமான **ஸ்ரீமத் பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவனின் ஆச்ரமத்தில் எழுந்தருளி யிருக்கும் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீகோபால தேசிக மஹாதேசிகன்** அருளிய

# ஸ்ரீமுகம்

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் ஸ்ரீவைஷ்ணவர்கள் தேயுரிய விசிஷ்டாத்வைத வேதாந்த தத்துவக் கருத்துக்களை நூற்றுக்கும் மேற்பட்ட பற்பல நூல்களின் வாயிலாக நிலைநாட்டி விளக்கியிருப்பதை யாவரும் அறிவர். அவற்றை சாஸ்த்ர ஞானமில்லாதவர்களும் எளிதாக அறிந்துகொள்வதற்காக சில்லரை ரஹஸ்யங்களுள் அம்ருத ரஞ்ஜனி (அமிழ்தத்தைப் போல் மகிழ்விக்கும்) எனும் பதினாறு ரஹஸ்யங்களைக் கொண்டது இந்நூல். இது ரஹஸ்யத்ரயத்தில் அறிய வேண்டிய தத்வார்த்தங்களை குழந்தைகட்கு சொட்டெண்ணை வைப்பது போல் சிறிது சிறிதாக, படிப்படியாக ஒன்றை விட மற்றொன்றில் மிகுதியான விஷயங்களைக் கூறி அதை நன்கு அறிந்த பிறகு அடுத்ததில் சிறிது மிகுதியாகக் கூறுவது என்கிற முறையில் இந்நூலை அமைத்திருப்பது அவருடைய சிஷ்யவாத்ஸல்யத்திற்கு எடுத்துக் காட்டாகும்.

இதை அச்சேற்றி வெளியிட்டிருப்பது ஸ்ரீவைஷ்ணவர்கட்குச் செய்த பேருதவியாகும். இதை, அழகாகவும் பிழையறவும் வெளியிட உதவிய சென்னை, பெஸண்ட் நகர், டாக்டர். எஸ்.பார்த்தஸாரதி ஐயங்காரும், கூத்தப் பாக்கம் வித்வான் K.N.தேசிகாசாரியரும், தில்லி – ஹரிநகர் – டி.ராஜகோபாலாசாரியரும் ஆற்றிய தொண்டுகள் அளப்பரியனவாகும்.

மேற்கூரியவர்களும், தேவையான உயர்வகைக் காகிதத்தை மனமுவந்து அளித்த உயர் நீதிமன்ற வழக்குரைஞர் B.T.சேஷாத்ரி ஐயங்காரும், பொருளுதவி செய்த – வெளிநாட்டில் வாழும் ஸ்ரீவைஷ்ணவர்களும், அச்சேற்றியவர்களும் ஸ்வாமி தேசிகனுடையவும் ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகளினுடையவும் இன்னருளால் ஸர்வாபீஷ்டங்களையும் பெற்று வாழ நாராயண ஸ்மரணம் பண்ணுகிறோம்.

*நாராயண நாராயண*



***ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ஹன்***

## ஒப்பிலியப்பன் ஸந்நிதி – வங்கீபுரம் – நவநீதம்
# ஸ்ரீராமதேசிகாசாரியார் ஸ்வாமி எழுதிய முதற் பதிப்பு விண்ணப்பம்

ஸர்வேச்வரன் சீலமில்லாச் சிறியனும் சிறிய ஞானத்தனுமான அடியேனை ஒரு பொருளும் கருவியுமாக்கிக் கொண்டு ஸ்ரீ தேசிக தர்சனத்துக்குப் பாங்கான சில தொண்டுகளைச் செய்வித்து உள்ளங்குளிர்கின்றான் போலும். ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்துக்கு அடிப்படையாக முதலில் அருளிச்செய்த பல சில்லரை ரஹஸ்யங்களுள் அமிர்த ரஞ்ஜனி ரஹஸ்யமென வழங்கும் ரஹஸ்யங்கள் இந்த ஸ்ரீகோச வடிவில் முதற் பாகமாக அவதரிக்கின்றன. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் கூருத விஷயம் இல்லையென்னும் படி ஸகல விஷயங்களையும் பொதிந்து ஸ்வாமி அந்த ஸ்ரீ ஸூக்தியை அவதரிப் பித்திருந்த போதிலும் அதிலும் காணாத சில விஷயங்களைச் சில்லரை ரஹஸ்யங்களில் அருளிச் செய்திருப்பதை நன்கு காணப் பெறலாம். படிப்படியாக ஆத்ம ஜ்ஞானத்தைப் பெறுவதற்கு ஏற்றவாறு 'தத்துவம்', 'ரஹஸ்யம்' என்ற பிரிவுகளில் முந்தியதற்குப் பிந்தியது விரிவு என்ற முறையில் ரஹஸ்யங்களின் வரிசையை ஸ்ரீதேசிகன் அமைத்தருளியுள்ளார். முதலில் நம் ஸம்ப்ரதாயத்தில் மிகத் தெளிவான ஞானம் எல்லோருக்கும் ஏற்படவேண்டுமென்பதற்காக அறிய வேண்டிய அவசியமான பற்பல விஷயங்களை ஸ்ரீஸம்ப்ரதாய பரிசுத்தியில் விளக்கியருளிப் பிறகு தத்துவங்கள் – ரஹஸ்யங்கள் இவற்றைப் பற்றி மாற்றி மாற்றி விஷயங்களை ஸ்வாமி அடுக்கிக் கொண்டே போயிருக்கும் அழகு கூறற்பாலதன்று.

இந்தச் சில்லரை ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகள் எல்லோரும் அநுபவித்து மகிழவேண்டுமென்று குளிர்ந்த எண்ணத்தாலே இவற்றுக்கு மிக விரிவாகத் தாத்பர்யம் எழுதி வெளியிடுமாறு ஸ்ரீ V.R.R.ஸ்வாமி அடியேனுக்கு நியமித்தபடி 'ரஹஸ்யார்த்த விவரணம்' ஒன்று எழுதிச் சேர்க்கப் பட்டுள்ளது.

இப்பதிப்பை அச்சிடும் முறையிலும் பொருட்செலவு செய்கையிலும் ஸ்ரீ V.R.R.ஸ்வாமி பரிபூர்ண சுதந்திரத்தையும் முழுப் பொறுப்பையும் அடியேனுக்கு அளித்துவிட்டபடியால் ச்ரத்தையும் சிந்தையும் மிக்கவனாய்த் திருவிண்ணகரப்பன் திருவருளையும் ஆசார்ய கடாக்ஷத்தையுமே நம்பி ஒரு வகையில் கைங்கர்யத்தைப் பூர்த்தி செய்ய வாய்த்தது. அடியேன் முயற்சி

எவ்வளவுக்குப் பயன் அளித்ததென்பது ஸ்ரீஸூக்தியை ஸேவிப்பவர்கள் கண்டறிய வேண்டியதாகும். மஹாவித்வானாய் ஆத்மகுண பரிபூர்ணராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருக் கோஷ்டியூர் ஸ்வாமி ஏட்டில் உள்ள பல மாத்ருகைகளைக் கொண்டு பாடநிர்ணயம் செய்து வைத்தருளிய ஒரு குறிப்பு அடியேன் நண்பர் புதுக்கோட்டை வித்வான் ஸ்ரீ உ.ப. வே. A.ஸ்ரீநிவாஸராகவாசாரியார்,M.A., ஸ்வாமியிடமிருந்து கிடைத்தது. சில இடங்களில் பாட நிர்ணயம் செய்ய உபகாரமாயிருந்தமைக்கு, ஸ்வாமிக்கு க்ருதஜ்ஞதையுடையேன்.

அடியேன் ஒவ்வோர் அம்சத்தையும் மிக்க கவனத்துடன் ஆய்ந்து நிர்ணயித்தே ஒரு க்ரந்தத்தை எழுதினாலும் அதைப் பெரியோர்களிடம் ஸமர்ப்பித்துக் கடாக்ஷிக்கச் செய்தாலன்றி அடியேனுக்குப் பூர்ணத்ருப்தி ஏற்படுவதில்லை. அடியேனுக்கு ஸதீர்த்யரும் சரீரபந்துவும் ஆத்ம பந்துவும் பால்யம் முதல் பரம ஸுஹ்ருத்துமாய் இப்பொழுது ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மதுராந்தகம் ஸ்ரீ உப. வித்வான் திருமலை - ஈச்சம்பாடி - வீரராகவாசார்யர் ஸ்வாமியை பிரார்த்தித்து அடியேன் எழுதிய ரஹஸ்யார்த்த விவரணத்தை கடாக்ஷிக்கச் செய்தேன். அடியேனுடைய ப்ரார்த்தனைக்கு இணங்கி அந்த ஸ்வாமி முழுவதும் கடாக்ஷித்துச் சில பரிஷ்காரங்களைச் செய்தருளியதற்கு அடியேனுடைய அனந்த ப்ரணாமங்களே கைம் மாறாகும்.

இந்தப் பெரிய கைங்கர்யத்தை அடியேனுக்கு இட்டதற்கு அடியேனுடைய க்ருதக்ஞதையையுந் தெரிவித்துக் கொண்டு திருவிண்ணகரப்பன் திருவருளையும் ஆசார்ய கடாக்ஷத்தையும் துணைகொண்டு அடுத்த கைங்கர்யத்தில் ஈடுபடப் பாரிக்கிறேன்.

ஒப்பிலியப்பன் ஸந்நிதி — இங்ஙனம்

11.6.1972. — அடியவர்கள் தம்மடியான்

**வ.ந.ஸ்ரீராமதேசிக தாஸன்.**



ஸ்ரீ உ. வே. வித்வான் ஒப்பிலியப்பன் கோவில்
வங்கீபுரம் நவநீதம்
ஸ்ரீ ராமதேசிகாசார்ய ஸ்வாமி

श्रीमते गोपालदेशिक महादेशिकाय नम: ।

## சில்லரை ரஹஸ்யம் – முதல் பாகம் – இரண்டாம் பதிப்பு முன்னுரை

இற்றைக்குச் சற்றேறக்குறைய இருபத்தாறு ஆண்டுகட்கு முன் ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி ஜ்ஞான வைராக்யாநுஷ்டான பரிபூர்ண பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய இராஜமன்னார்கோயில் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீரங்கநாத மஹா தேசிகன் நியமனப்படி ஸ்ரீ உ.வே. வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசாரியார் ஸ்வாமி இந்த முதல் பாக சில்லரை ரஹஸ்யத்தை தன் சொந்த உரையான 'ரஹஸ்யார்த்த விவரணத்துடன்' வெளியிட்டதை ஸ்ரீவைஷ்ணவ உலகம் நன்கு அறியும். இந்த ஸ்ரீ கோசத்தின் அருமை பெருமைகளை உணர்ந்தவர் நன்கு பயன் படுத்திக் கொண்டனர். பல்லாண்டுகளாக இந்நூலுக்குத் தேவை அதிகரித்தது. தற்போது ஏற்ற பல சிறப்பு அம்சங்களுடன் திருத்தமான இரண்டாம் பதிப்பு வெளியிடப்படுகிறது. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு அடிப்படையாக ஸ்ரீஸ்வாமி தேசிகன் முதலில் அருளிச் செய்த 'அமிர்த ரஞ்சனி' என வழங்கும் சில்லரை ரஹஸ்யங்கள் – இம்முதல் பாகமாக அவதரிக்கின்றன.

***ப்ரக்ருதம் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீ கோபால தேசிக மஹா தேசிகன் உறுதியும் ஆர்வமும் :***

இந்த ஸ்ரீகோச வெளியீடு நம் ஆச்ரம வெளியீட்டாளர் Dr. S.பார்த்தசாரதி அவர்களிடம் ஒப்படைக்கப் பட்டது. அவரும் முதன்மையாகச் செய்ய வேண்டிய செயல்களைச் செவ்வனே செய்து முடித்தார். ஆனால் அவர் வெளிநாடு செல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. தகுந்த சிறந்த 'கணினிப் பொறியியலர்', அச்சகம் முதலியவற்றை கண்டறிந்து ஸ்ரீரங்கத்திலேயே அச்சிட வேண்டும் என்று ஸ்ரீமத் ஆண்டவன் உறுதியோடு கூறியதால் மூலப்ரதிகள் சென்னையிலிருந்து ஸ்ரீரங்கம் – ஆச்ரமம் வந்து சேர்ந்தன. உடனடியாக ஏற்பாடு செய்யப்பட்டது. அடியேனையும், 'புதுதில்லி - ஹரிநகர் திரும்பிச் செல்லுமுன் இந்நூல் வெளி வரவேண்டும். அதற்கான காரியங்களைத் துரிதமாகச் செய்ய வேண்டும்' என்றும் ஸ்ரீமத் ஆண்டவன் நியமித்தாயிற்று. ஸ்ரீமதாண்டவன் ஆக்ஞையை சிரஸா வகித்து யதாசக்தி பூர்த்தியாயுள்ளது.

*ஸ்ரீ B.T. சேஷாத்ரி அவர்களின் பேருதவி :-*

சென்னை – மைலாப்பூர் – அட்வகேட் ஸ்ரீ B.T..சேஷாத்ரி அவர்கள் செய்த உதவி மிகப் பெரியது. அவர் J.K. Paper millலிலிருந்து இந்நூல் அச்சிடத் தேவையான பேப்பர்களை வாங்கி அனுப்பித் தந்தார். இவர் அளித்த பெரிய நன்கொடை உடனடியாக இந்நூல் வெளிவரத்துணை புரிந்தது. ஆதலால் முதன் முதல் அவர்க்கு நன்றி பல தெரிவிக்கக் கடப்பாடுடையேன்.

*அருளோடு பொருளுதவிய பெரியோர் :-*

திருமலை திருப்பதி தேவஸ்தானம் 'ஆன்மீய நூல்களை வெளியிடப் பொருளுதவும் திட்டத்'தின் கீழ் பொருளுதவி செய்துள்ளனர். ஸ்ரீ வேதாந்த தேசிகன் ஸ்ரீ ஸூக்திகளை வெளியிடப் போவதைக் கேட்டதும் ஸ்ரீ உப. வே. N.S.பார்த்தசாரதி ஐயங்கார் (The Hindu) கணிசமான தொகையை அனுப்பி வைத்ததார். 'இது போன்ற ஸ்ரீகோசங்களை வெளியிடும்போது அவசியம் தன்னைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும்' என்று முன் கூட்டியே தன்னிச்சையாகப் பிரார்த்தித்துக் கொண்டு Mumbai - B-308, Arthi Apartments ஸ்ரீ உப. வே. நம்பி அவர்கள் பெருந்தொகை அனுப்பி ஊக்குவித்தனர். சுந்தரம் சாரிடீஸ் நிறுவனம் நிதியுதவி வழங்கியுள்ளது.

Dr. S.பார்த்தசாரதி அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க ஸ்ரீ ரமேஷ் சார்ங்கபாணி Internet மூலம் கடல்கடந்து அமெரிக்கா/சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வாழும் ஸ்ரீவைஷ்ணவ பக்தர்களுக்கு விடுத்த வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து – ஸ்ரீமதி மாலதி திலீபன், ஸ்ரீ மாதவக் கண்ணன், ஸ்ரீ முரளீரங்கஸ்வாமி, ஸ்ரீ ரமேஷ் சார்ங்கபாணி, ஸ்ரீ மணி வரதராஜன், ஸ்ரீ ஸம்பத்ரங்கராஜன், ஸ்ரீமதி லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன், ஸ்ரீ ஆனந்த் – காவல்பாக்கம், ஸ்ரீமதி கல்யாணி க்ருஷ்ணமாசாரி, ஸ்ரீசடாரி S.ரமேஷ், ஸ்ரீமுரளிதர் ராஜகோபாலன், ஸ்ரீ கேசவ ராஜகோபாலன், ஸ்ரீ V.சடகோபன், ஸ்ரீ கோபால் லக்ஷ்மணன், ஸ்ரீ G.N.மாதவன், ஸ்ரீ K.R.ஸ்ரீநிவாஸன், ஸ்ரீ ஜகன்னாத் பாரத்வாஜ், ஸ்ரீ K.ரங்கமணி, ஸ்ரீ விச்வ சாந்த் கோலா ஆகியோர் ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் ஸ்ரீ ஸூக்திகளிடத்தில் உள்ள பக்தியாலும் ஸ்ரீ பௌண்டரீகபுரம் ஆண்டவன் ஆச்ரமம் நம் ப்ரக்ருதம் ஸ்ரீமத் ஆண்டவன் மீதுள்ள பற்றுதலாலும் இத்தகு ஸ்ரீகோசங்கள் மேன்மேலும் வெளிவந்து கொண்டிருக்க வேண்டுமென்ற ஆர்வத்தாலும் மிகப் பெரிய தொகையைத் திரட்டி ஸ்ரீ அஹோபில மடம் (1908, Preswood Drive) HIXSON, மூலம் ஸ்ரீ திலீபன் அனுப்பி உதவியுள்ளனர். இங்ஙனம்

பொருளுதவி புரிந்த பெருந்தகையோர்க்கு ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகள் அருளும் ஸ்ரீமதாண்டவன் (பறவாக்கோட்டை) அநுக்ரஹமும் அனவரதமும் பெற்றுய்வார்களாக.

### இரண்டாம் பதிப்பின் சிறப்பு :

முதற்பதிப்பினும் இப்பதிப்பில் காலக்ஷேபம் ஸாதிப்பவர், பண்ணுகிறவர்கள் ஸௌகர்யத்தைக் கருதி ஸ்ரீஸ்வாமி தேசிகன் எடுத்தாண்ட மேற்கோள்கள் அவ்வவ்விடத்திலேயே முழுமையாகப் பொருளுடன் தரப்பட்டுள்ளன. இடத்திற்கேற்பத் தேவையான 'குறியீட்' டெண்கள் கொடுக்கப் பட்டுள்ளன. அறிஞர்கட்கு ஐயமெழும் போது இவை பயன்படும். ஒவ்வொரு ரஹஸ்யத்தின் முதலிலும் அவ்வவ் ரஹஸ்யத்தின் விளக்க உரையான ரஹஸ்யார்த்த விவரணத்தின் பக்க எண்கள் எழுதப்பட்டுள்ளன. பாசுரங்கள், ச்லோகங்களின் முதற்குறிப்பு அட்டவணை சேர்க்கப் பட்டுள்ளது. இன்னும் '*ரஹஸ்யார்த்த விவரணம்*' எனும் விளக்க உரை எழுதியருளியதோடு மூலக்ரந்தத்தில் உள்ள கடினபதங்கட்கு எளிய இனிய தமிழ்ப் பொருளையும் எழுதிப் பேருபாகரம் புரிந்தவர் ஒப்பிலியப்பன் ஸந்நிதி வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீ உ.ப. வே. ஸ்ரீராமதேசிகாசாரியார் ஸ்வாமியே யாவர்.

### ப்ரூப் (Proof) திருத்துதல் பணி

ப்ரூப் (Proof) திருத்துதல் தான் நூல் அச்சிடுவதில் தலையாய பணியாகும். இப்பணியில் நன்கு தேர்ச்சி பெற்றவர் கூத்தப்பாக்கம் வித்வான் ஸ்ரீ உ.ப. வே. K.N.தேசிகாசாரியார் ஸ்வாமி. இதற்கு முன் வெளியீடுகளிலும் தம் பணி சிறக்கச் செய்தவரிவரே. இவ்வெளியீட்டிற்கும் அடியனோடிருந்து இரவு பகல் பாராது அயராது (Proof Correction) ப்ரூப் திருத்தி இந்நூல் நன்முறையில் வெளிவரச் செய்தமைக்கு அவர்க்கு நன்றி தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இங்ஙனம் Proof திருத்தம் செய்த போதிலும் சில இடங்களில் எழுத்துப் பிழை சொற்பிழை ஏற்பட்டிருக்கலாம். இவற்றைக் கண்ணுறும் காலக்ஷேபாதிகாரிகளும் படிப்போரும் பிழைதிருத்தி வாசித்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

*இதயங்கனிந்த நன்றி*

ப்ரக்ருதம் ஸ்ரீமத் ஆண்டவன் (பறவாக்கோட்டை) ஸ்ரீகோபாலதேசிக மஹா தேசிகன் தன் திருமேனி அசக்தியைப் பொருட்படுத்தாது மேற்கோள் பாசுரங்கள், மூலக்ரந்த ஸம்ஸ்க்ருத ச்லோகங்கள் முதலியவற்றின் பொழிப்புரை, கருத்துரை, பதவுரைகளைச் சரி பார்த்தும் இந் நூலில் பிழைபாடி'லாது வெளிவர அவ்வப் போது நேரும் சிக்கல்களை நீக்கியும், ஆலோசனைகளைக் கூறியும் மிக விரைவில் இந்நூல் வெளியிடக் காரணமாயிருந்தமைக்கு ஸ்ரீஸ்வாமி தேசிகன் பக்தர்களான ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் ஸஹஸ்ரச: ப்ரணம்ய க்ருதக்ஞதையைச் செலுத்தக் கடமைப் பட்டவராவர்.

சீலமிலாச் சிற்றறிவினனாகிய அடியேனையும் ஒரு பொருளாக மதித்து இப்பணியில் ஈடுபடுத்தி ஸச்சிஷ்யனாக்கி ஆட்கொண்டருளிய ப்ரக்ருதம் ஸ்ரீமதாண்டவன் தேனே மலரும் திருவடித் தாமரைகளில் புந: புந: அனந்தகோடி ஸாஷ்டாங்க ப்ரணாமங்களை ஸமர்ப்பித்துக் கொள்கிறேன்.

Dr. D.பார்த்தஸாரதி அவர்களோடுடனிருந்து உதவிய ஸ்ரீ உ.ப. வே. தி. ஈ. ரங்கநாதாசாரியர் ஸ்வாமிக்கு ஸவிநயம் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழும் தேவநாகரி லிபியும் பின்னிப் பிணைந்து இணைந்த மணிப்ரவாள நடைபொருந்திய மூலக்ரந்தத்தை கணிணிபொறியியல் (Computer) மூலம் மிக அழகிய முறையில் அச்சடித்துத் தந்த ஸ்ரீ R.ஸ்ரீநிவாஸ ஐயங்கார் குமாரர் ஸ்ரீகாந்த் அவர்களுக்கும் அதே முறையில் ரஹஸ்யார்த்த விவரணத்தை அச்சடித்துதவிய இராகவேந்த்ரா ப்ரிண்டர்ஸ் இயக்குனர் எஸ்.சுப்பாராவ் அவர்களுக்கும் இத்துறையில் மேன்மேலும் முன்னேற்றமடைந்து சிறந்தோங்கி வளர ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகளைப் ப்ரார்த்தித்துக் கொள்கிறேன். ஒரு நூல் கட்டுக்கோப்புக் குலையாமல் இருக்க நல்ல Binding – அவசியம். பைண்டர் ஸ்ரீ நரசிம்மாசாரியார் இவ்வேலையில் மிகவும் கெட்டிக்காரர். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தை அழகாக சேவை மனப்பான்மையுடன் செய்து தந்தவர் இவர். இப்பொழுதும் சிறந்த முறையில் பைண்டு செய்து தந்துள்ளமைக்கு அவர்க்கும் அவர் குழுவினர்க்கும் ஸ்ரீமதாண்டவன் அனுக்ரஹத்தால் மேன்மேலும் அபிவிருத்தியடையப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூல் வெளியீட்டுக்குப் பலவிதத்திலும் உதவிய அனைவருக்கும் ஸ்ரீரங்கம் திவ்ய தம்பதிகளின் திருவருளும் ஸ்ரீஸ்வாமிதேசிகன் க்ருபையும், ஸ்ரீபௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன் (பறவாக்கோட்டை) ஸ்ரீகோபால தேசிக மஹாதேசிகன் அனுக்ரஹமும் பெற்று இந்த ஸ்ரீகோசத்தை நன்கு காலக்ஷேபம் செய்து ஆன்மீக தத்துவஞானம் பிறந்து பரமைகாந்திகளாக வாழ்வாங்கு வாழ ஸ்ரீமந் நாராயணனின் திருவடி யிணைக்கமலங்களைப் ப்ரார்த்திக்கிறன்.

43/A-13, ஆச்ரமம் ரோடு,
பௌண்டரீகபுரம் ஸ்ரீமதாண்டவன்
ஆச்ரமம்,
ஸ்ரீரங்கம்.

தாஸன்,
புதுதில்லி – ஹரிநகர்–
**தே. இராஜகோபாலன்.**

श्री:



श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிய

# சில்லறை ரஹஸ்யங்கள்

## பொதுத்தனியன்

குமார நயினாராசார்யர் அருளியது

श्रीमान् वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி அருளியது

रामानुजदयापात्रं ज्ञानवैराग्यभूषणम् ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्तदेशिकम् ॥

பிள்ளை லோகாசாரியர் அருளியது

*சீரொன்று தூப்புற் றிருவேங் கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள் – ஓரொன்று*
*தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
*வானேறப் போமளவும் வாழ்வு.*

# 1 श्री संप्रदायपरिशुद्धिः

(விளக்கம் – ரஹ. விவ. – 1–44)

# 1 ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி

**[எம்பெருமானிடம் தொடங்கி இன்றுவரை வருகின்ற நம் ஸம்ப்ரதாயம் மிகப்பரிசுத்தமாய் எவ்வகைக் குற்றமும் அற்றது என்பதை விளக்கும் ரஹஸ்யம் ]**

விஷயச்சுருக்கம் : *ஸதாசார்யனை வழிபட்டு ஸம்ப்ரதாயமுறையில் வந்த நேரிய அர்த்தத்தைக்கேட்டுத் தெளிதலின் அவசியம் – ஸத்ஸம்ப்ரதாயம் – ஸதஸ்யம்–ரஹஸ்யம்–விளக்கம் ப்ரமாணங்களுள் முரண்பாடின்மையும் தத்வ–அநுஷ்டான விஷயங்களில் முரண்பாடின்மையை ஞானிகளிடம் கேட்டுணர்தலும் – முன் யுகத்தில் வேதாந்த ஸம்ப்ரதாயம் வருமுறையும் கலியுகத்தில் நம்மாழ்வார் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராதலும் – திருமந்திரப்பொருளில் முரண்பாடின்மை, மூன்றுவகையில் அர்த்தபஞ்சகம் முதலியன – த்வயம் மந்த்ரப்பொருள் விளக்கம் சரமச்லோக விளக்கம்.*

***தம்பரமென்றிரங்கித் தளராமனந்தந்தருளால்***
***உம்பர்தொழுந் திருமால் உகந்தேற்கு முபாயமொன்றால்***
***நம்பிறவித் துயர்மாற்றிய ஞானப்பெருந் தகவோர்***
***சம்பிரதாயமொன்றிச் சதிர்க்குந்நெறி சார்ந்தனமே.*** (1)

தம்பரம் என்று இரங்கி – (நம்மைக்காப்பது) தம் பொறுப்பு என்று (நம்மீது) இரக்கம்வைத்து; அருளால் – க்ருபையினால்; தளரா மனம் தந்து – கலங்காத மனத்தைக்கொடுத்து; உம்பர்தொழும் திருமால் – நித்யஸூரிகளால் வணங்கப்படும் எம்பெருமான்; உகந்து ஏற்கும் உபாயம் ஒன்றால் – மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளக்கூடிய (ப்ரபத்தி என்னும்) ஒரே உபாயத்தினால்; நம் பிறவித்துயர் மாற்றிய – நம்முடைய ஸம்ஸாரதுக்கத்தை ஒழித்தவர்களும்; ஞானப்பெரும் தகவோர் – ஞானத்தையும் மிக்க கருணையையும் உடையவர்களுமான ஆசார்யர்களுடைய; சம்பிரதாயம் ஒன்றி – ஸம்ப்ரதாயத்தில் சேர்ந்து; சதிர்க்கும்நிலைசார்ந்தனம் – (சிறிய உபாயத்தால் பெரியபலனை அடையும்) சிறந்த நிலையைப் பெற்றோம்;

### ஸதாசார்யனை வழிபட்டு ஸம்ப்ரதாய முறையில் வந்த நேரிய அர்த்தத்தைக் கேட்டுத் தெளிதல்

सदाचार्य ஸம்ப்ரதாயத்தாலே अध्यात्मशास्त्र - अर्थविशेष निर्णयம்[a] பண்ணவேண்டுமென்னுமிடம் உபநிஷத்துக்களிலும் उपबृम्हणங்களிலும்[b] प्रसिध्दम्. சாஸ்த்ரார்த்த நிரூபணம்[c] பண்ணுமிடத்தில் சக்தியில்லாதவர்களுக்கு 'उपदेशात् हरिम् बुद्ध्वा'[1] என்கிற படியே சாஸ்த்ரஜ்ஞ-ஸம்ப்ரதாய-மாத்ரமும் अपेक्षित-अर्थनिर्णायकமாம்[d]. ஸத் ஸம்ப்ரதாய ரஹிதமான சாஸ்த்ரத்தால் अर्थनिर्णयம்[e] दुष्करம்[f]. सुकरந்தாகிலும்[g] உபயுக்தமாகாது.

### ஸத்ஸம்ப்ரதாயம் – ஸதஸ்யம் – ரஹஸ்யம் – விளக்கம்

अत्यन्त-अतीन्द्रिय[h] விஷயத்தில் சாஸ்த்ரமூலமல்லாத ஸம்ப்ரதாயமும் सम्प्रतिपन्न[i] शास्त्र-विरुद्धமான ஸம்ப்ரதாயமும் भ्रमविप्रलम्भ संभावनையுண்டாகையால்[j] बाஹ்ய[k] துல்யமாகையாலே அவிச்வஸநீயம்[l]. பரஸ்பர विरुद्धமாக सदस्यமும்[m] ரஹஸ்யமும்

a - வேதாந்த சாஸ்த்ரத்தின் உட்கருத்தை நிச்சயித்தல்; b - வேதம் கூறுவதை விளக்கும் ஸ்ம்ருதிகள் முதலியன; c - சாஸ்த்ரத்தைக் கொண்டு ஆராய்தல் ; d - வேண்டிய அர்த்தத்தை நிச்சயித்துத் தருவது; e - கருத்தை நிச்சயித்தல்; f - செய்யமுடியாதது; g - செய்ய எளிது; h - முற்றிலும் இந்திரியங்களுக்கு எட்டாத; i - ப்ரமாணமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட; j - ஒன்றை வேறொன்ருக எண்ணுதலோ வஞ்சனையோ இருப்பதாக எண்ணுதற்கு இடம்; k - வேதத்துக்குப் புறம்பான மதம்; l - நம்பத்தகாதது; m - வெளிப்படையானது

1 शास्त्रज्ञानं बहुक्लेशं बुद्धेश्चलनकारणम् ।
उपदेशाद्धरिं बुद्ध्वा विरमेत् सर्वकर्मसु ॥

மனவுறுதியற்றவர்கள் சாஸ்த்ரங்களைக்கற்பதில் மிக்கசிரமம் உள்ளது. அதனால் புத்திக்குக் கலக்கம் உண்டாகும். ஆதலால் ஆசார்யர்களுடைய உபதேசத்தால் எம்பெருமானையும் மற்ற முக்கிய விஷயங்களையும் அறிந்துகொண்டு சாஸ்த்ரம் கற்கும் செயல்களினின்று ஓய்ந்துவிட வேண்டும்.

என்று சொல்லுமவையிரண்டும் ஸ்வவாக்கியத்தாலே बाधितங்களாம்[a]. திரளிலே சொல்லுமவை सदस्यம். சில अर्थங்களை एकान्तத்தில்[b] சொல்ல விதிக்கையாலே அவற்றை ரஹஸ்யமென்கிறது. ப்ரஜாபதிவாக்யம் முற்பட அஸுரேந்த்ரனை विरोचनனை மோஹிப்பிக்கைக்காகச் சொல்லப்பட்டு, பிற்பட தேவேந்த்ரனைப்பர்வக்ரமத்தாலே[c] परिशुद्ध ஆத்ம விஷயத்திலே[d] प्रतिष्ठित-बुद्धियாக்குகிறது[e]. உபகோஸல- வைச்வாநராதி வித்யைகளிலே முற்பட वेद्य उपादेयங்களைப்பற்ற[f] एकदेश-उपदेशம் क्रमेण-शेषपूरणार्थம். ஸர்வேச்வரன்தானும் தான் உபதேசித்த ஜ்ஞானத்தைப் பின்னையும் तद्विद्धि-प्रणिपातेन-परिप्रश्नेन-सेवया[89*1] என்று பலஞாநிகள் பக்கலிலே கேட்க விதித்தானிறே. இப்படிகளால் संप्रतिपन्न शास्त्रविरोध மின்றிக்கே[g] शास्त्र मूलत्व संप्रतिपत्तियுண்டான[h] ஸம்ப்ரதாயமே உபஜீவ்யம்[i].

### உபநிஷத் ப்ரமாணங்களுள் முரண்பாடின்மையும் தத்வ, அனுஷ்டான விஷயங்களில் முரண்பாடின்மையை ஞானிகளிடம் கேட்டுணர்தலும்

இப்படிப்பட்ட ஸத்ஸம்ப்ரதாயத்தில் தோற்றும் விரோதம் தத்வவிஷயமாகில் तात्पर्यभेदத்தாலே[j] विरोधशान्तिயுண்டாம்[k], அநுஷ்டாந விஷயமாகில் அவ்வோ अधिकारिக்கு அநுகுணமாக

a - மறுக்கப்பட்டவை; b - ரஹஸ்யத்தில்; c - படிப்படியாக; d - ஸம்ஸார ஸம்பந்தமற்ற; e - உறுதியான எண்ணமுடையனாக; f - அறியவேண்டியன கைக்கொள்ள உரியன; g - ப்ரமாணமாக ஏற்றுக் கொண்ட; h - சாஸ்த்ரத்தை ஆதாரமாகக் கொண்டதென்று ஏற்றுக்கொள்ளப்பட்ட; i - பாதுகாப்பாகக் கொள்ள ஏற்றது; j - உட்கருத்தின் வேறுபாட்டால்; k - முரண்பாடு நீங்குதல்.

व्यवस्थित-अव्यवस्थित-प्रक्रि யையாலே[a] விகல்பமாம். ந்யாஸ-உபாஸநங்களிலே[b] अधिकारि भेदத்தை யிட்டு व्यवस्थित विकल्प மென்று பார்க்கிலும் फल ஸாம்யத்தையிட்டுத் तुल्यविकल्प மென்று பார்க்கிலும் विरोधமில்லை.

### முன்யுகத்தில் வேதாந்த ஸம்ப்ரதாயம் வருமுறையும் கலியுகத்தில் நம்மாழ்வார் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராதலும்

ஸர்வலோகஹிதமான இந்த अध्यात्मசாஸ்த்ர[c] ஸம்ப்ரதாயத்திற்கு प्रथम-प्रवर्तकன் ஸர்வேச்வரன். மற்றுள்ளா ரெல்லாரும் அவன் தானேயாதல் चेतनान्तर-मुखத்தாலேயாதல்[d] மயர்வற மதிநலமருள, प्रवर्तिப் பிக்கிறவர்கள்.

இப்படி अनसूयादिगुणयुक्त[e]ராய் 'प्रणिपत्याभिवाद्य च[1]' इत्यादिகளிற்படியே संयक्-उपसन्नरான[f] अधिकारिகளைப் பற்ற यथार्थदशिகளாய்[g] यथादृष्ट-अर्थवादि[h]களான व्यासबोधायनादिகளாலே यथाधिकारम्-प्रवर्तितமான வேதாந்த ஸம்ப்ரதாயத்திற்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் प्रवर्तकராஞர். 'प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्रियाद्वा वैश्यात्

---

a - வ்யவஸ்த்தித விகல்பம் – இன்ஞர் தாம் இதைத்தான் செய்ய வேண்டுமென்ற வரையறையுடன் இரண்டில் ஒன்றை ஏற்றல். அவ்யவஸ்த்தித விகல்பம் – வரையறை ஏதுமின்றி யாரும் இரண்டினுள் எதையும் செய்யலாமென்பது ப்ரக்ரியை – முறை; b - ந்யாஸம் – ப்ரபத்தி. உபாஸநம் பக்தியோகம்; c - வேதாந்தம்; d - வேறுசேதநர் வாயிலாக; e - பொருமை யின்மை முதலிய குணங்களுடையவராய்; f- முறைப்படி வழிபட்டவர்; g - உண்மையுணர்ந்தவர்; h - தாம் உணர்ந்தபடியே உபதேசிப்பவர்.

1 पराशरं मुनिवरं कृतपूर्वाह्निक क्रियम् ।
मैत्रेयः परिपप्रच्छ प्रणिपत्याभिवाद्य च ॥

விபு (1-1-1) : முற்பகலில் செய்யவேண்டிய பகவதாராதநம் முதலிய கர்மங்களைச்செய்து முடித்துத் தூயமனம் படைத்த பராசர மஹர்ஷியை மைத்ரேயர் வணங்கி அபிவாதநம் செய்து பின் வருமாறு கேட்டார்.

शूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम्[1] इत्यादि प्रमाण बलத்தாலே 'மிக்க வேதியர் வேதத் தினுட்பொருள் நிற்கப்பாடி என்னெஞ்சுள் நிறுத்தினேன்'[2] என்கிறது உபபந்நம்[a]. वेदान्त-अर्थवैशद्य-हेतुவாகையாலே[b] भाषान्तरமும்[c] உபஜீவ்யம். धर्मव्याध–तुलाधारादि-वृत्तान्तங்களையும் இங்கே अनुसन्धिப்பது, 'शूद्रयोनावहं जातो नातोऽन्यद्वक्तुमुत्सहे'[3]

---

a - பொருத்தமானது; b - வேதாந்தக்கருத்தைத்தெளிவு படுத்தக்காரணம்; c -வேறு மொழி இங்கு தமிழ்.

1 प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्रियाद्वा वैश्यात् शूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम् ।
श्रद्धातव्यं श्रद्दधानेन नित्यं न श्रद्धिनं जन्ममृत्यू विशेताम् ॥

பார(சாந்தி–323–88): ஞானத்தை அந்தணனிடமிருந்தோ, க்ஷத்ரியனிடமிருந்தோ, வைச்யனிடமிருந்தோ, வேளாளனிடமிருந்தோ, அதற்கும் தாழ்ந்த குலத்தில் பிறந்தவனிடமிருந்தோ அடிக்கடி ஸம்பாதிக்க வேண்டும். ஞானம் பெறுவதில் எப்பொழுதும் சிரத்தை இருக்க வேண்டும். சிரத்தையுடன் ஞானம் பெற்றவனைப் பிறப்பு இறப்பு வருந்தமாட்டா.

2 மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் .
நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினேன் .
தக்கசீர்ச்சடகோபன் என்நம்பிக்கு . ஆட்
புக்ககாதல் அடிமைப்பயனன்றே.

கண்ணிநுண் (9): பரமவைதிகர்கள் ஓதுகின்ற வேதாந்த ஸாரம் நிலை நிற்கும்படி திருவாய்மொழியை அருளிச்செய்து என்மனத்துள் அதுநிற்கும்படி அருளினார் ஆழ்வார். அவர் விஷயத்தில் கைங்கர்யம் செய்ய எழுந்த ஆசையானது அப்பொழுதே கைங்கர்யம் செய்யும் வாய்ப்பாகிய பயனைப் பெற்று நிறைவேறியது.

3 शूद्रयोनावहं जातो नातोऽन्यद्वक्तुमुत्सहे ।
कुमारस्य तु या बुद्धिर्वेद तां शाश्वतीमहम् ॥

பார (உத்யோ–41–5,6): சூத்ரயோனியில் பிறந்த நான் இதற்குமேல் வேறொன்றையும் சொல்லத் துணியமாட்டேன். (த்ருதராஷ்டரனைக் குறித்து விதுரன் சொல்லியது)

குமாருடைய அநாதியாக வந்த கொள்கையை நான் அறிவேன். (பிராம்மண ஜன்மத்தை அடைந்தவரான அவர் (ஸநத் ஸுஜாதர்) ரஹஸ்யத்தையும் சொல்லுவார். அதனால் அவர் தேவர்களுக்கு

ब्राह्मीं हि योनिमापन्न: सुगुह्यमपि यां वदेत् ।
न तेन गर्ह्या देवानां तस्मादेतत् ब्रवीमि ते ॥

நிந்திக்கக் கூடியவராகமாட்டார். ஆகையினால் நான் உமக்கு இதனைச் சொல்லுகிறேன்.

என்கிறது விஷயभेदத்தாலே परिहृतம். மதுரகவி முதலான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் प्रादुर्भाव विशेषத்தாலும்[a] नाथमुनिகளுக்கு ஆழ்வார் ஆசார்யராஞர். இவரை ப்ரபந்ந- ஸந்தாந- கூடஸ்த்தரையாலே ஆளவந்தார் 'आद्यस्य नः कुलपतेः'[1] என்றருளிச் செய்தார்.

நாதமுனிகள் தம்முடைய திருப்பேரஞரான ஆளவந்தாருக்குத்தாம் உபதேசியாதே தம்முடைய சிஷ்ய-ப்ரசிஷ்யர்களை இவருக்கு आकाங்க்ஷை[b] பிறந்தபோது உபதேசியுங்களென்று ஆஜ்ஞாபித்தது गुरुपुत्र पौत्रादिகளும் विद्याप्रदानத்திற்கு ப்ரசஸ்த பாத்ரங்க ளென்றும்,[c] ஜ்ஞாநஸந்ததியிலே முற்பட்டவர்களும் गुरुக்களாக आदरणीयறென்றும், आकाங்க்ஷையின்றி யிருக்கச் செய்தே சொன்ஞல் शिष्यबुद्धिயில் अर्थம் प्रतिष्ठितமாகாதென்றும்[d] தெளிவித்தபடி.

மணக்கால்நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சை- யிட்டு[e] ஒரு விரகாலே[f] आकाங்க்ஷையுண்டாக்கி உபதேசித்தது.

---

a - விசேஷ முறையில் தோன்றிய அவதாரம்; b - ஆவல்; c - சிறந்த தகுதியுடையவர்; d - நிலைநிற்காது; e - உகந்த வஸ்துவைத் தந்து; f - வழியாலே;

[1] माता पिता युवतयस्तनया विभूतिः
सर्वं यदेव नियमेन मदन्वयानाम् ।
आद्यस्य नः कुलपतेर्वकुलाभिरामं
श्रीमत्तदङ्घ्रियुगलं प्रणमामि मूर्ध्ना ॥

(ஆள ஸ்தோ(5) : தாய்-தந்தை-மனைவி-புதல்வர்-பணியாளர்- செல்வம் முதலியன - மற்றும் இம்மை மறுமைப் பயன்கள் - அவற்றுக்குச் சாதனம் ஆகிய அனைத்தும் நாதமுனி ஸம்ப்ரதாயத்தைச் சார்ந்த நமக்கும் நம் பின்ஞேர்க்கும் ப்ரபந்ந ஸந்தாந கூடஸ்த்தரான ஆழ்வாருடைய மகிழமணம் பெற்ற இரண்டு திருவடிகளே. இம்மையிலும் மோக்ஷத்திலும் பற்றுக்கோடாகி, ஒன்ருேடொன்று இணைந்து அழகியனவாய் இரு தெய்வங்களாய் உள்ள அவற்றை பக்திப்பெருக்குடன் மனத்தாலும் வாக்கிஞலும் முடியிஞலும் வணங்குகிறேன்.

ஆசார்ய குலத்திற்குத் தாமொரு किञ्चित्कारम्[a] பண்ணுகை யிலும் आचार्य-नियोगத்தைக்[b] கடுகத்தலைக்கட்டுகையிலும்[c] உண்டான त्वரையாலும்[d], चिरकाल-परीक्षादिகள் வேண்டாதபடி 'बोधनं च मुहु: क्रमात्'[1] என்கிற युगधर्म-अनुसारத்தாலும் उपपन्नம்.

ஆளவந்தார் தாம் நாதமுனிகளை முன்னிட்டு ஸ்தோத்ரம் பண்ணிற்றும் ஶரணம் புக்கதுவும் தம்முடைய ஆசார்யனுக்கு இது ப்ரியதமமென்றும்[e] தமக்கு ஆசார்யவத்தை முதலான ஸம்பத்துக்களுக்கும் அடி[f] நாதமுனி வம்சத்தில் பிறவி யென்றும் தோற்றுகை க்காகவும், ஆசார்ய விஷயத்திற் போலே ப்ராசார்யாதி விஷயத்திலும் कृतज्ञतादिகள்[g] வேண்டு மென்கைக்காகவும், आचार्यपङ्क्तिயில் சிலரை ग्रन्थங்களிலே வ்யபதேசித்து[h] அவர்களையும் மற்றுமுள்ளவர்களையும் அநுஸந்திப்பர்கள்.

ஆளவந்தாருடைய नियोगத்தாலே[i] ஸ்ரீபாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரியநம்பி, அவரைத்தமக்கு सब्रह्मचारिகளான[j] திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே अर्थशिक्षै[k] பண்ணவும், திருமாலை யாண்டான் பக்கலிலே திருவாய் மொழி கேட்கவும், ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் பக்கலிலே நல்வார்த்தை கேட்கவும் नियोगித்ததும்[l] 'बहुभ्य: श्रोतव्य बहुधा श्रोतव्यम्,[2] 'ज्ञानवृद्धामयाराजन् बहव: पर्युपासिता:'[3] इत्यादिகளையும்,

**a** - சிறுதொண்டு ; **b** - கட்டளை நியமநம்; **c** - விரைவில்; **d** - விரைதல்; **e** - மிகப்ரியம்; **f** - காரணம்; **g** - நன்றியறிதல் முதலியன; **h** - குறிப்பிட்டு; **i** - நியமநத்தாலே; **j** - சேர்ந்து காலக்ஷேபம் செய்தவர்கள்; **k**- ரஹஸ்யார்த் தங்களை விரிவாய்க்கற்றல்; **l** - நியமித்ததும்

[1] அடிக்கடி உபதேசிப்பது என்ற முறையில்.; [2] பலபெரியோர்களிடம் பலபடிகளில் கேட்டு ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும்
[3] அரசனே! அறிவு முதிர்ந்த மிகப்பெரியோர்கள் பலர் என்னால் பூஜிக்கப்பட்டார்கள்

शुकादि-वृत्तान्तங்களையும் பார்த்து शिष्यभूतரை बहु-मुख[a]மாகத் திருத்த வேண்டுமென்கிற अभिसंधिயாலே[b] உபபந்நதமம். இப்படி आचार्य-अभिमत விஷயத்தில்[c] ஆசார்ய-அநுஜ்ஞையாலே[d] அபேக்ஷித-ஜ்ஞாந-உபஜீவநம்[e] பண்ணுவது शास्त्रार्थ மென்னுமிடம் अन्तिम-दशावधिயாக[f] अत्यन्त-अवहितராய்க் கொண்டு[g] सदाचार-अनुपालनம்[h] பண்ணின ஸ்ரீபாஷ்யகாரருடைய அநுஷ்டாநத்தாலே सिद्धம்.

अध्यात्म[i] விஷயத்தில் प्रधान-अप्रधान-अंशங்களை ஒருவர்க்குப் பலராக உபதேசிக்க வேதாந்தங்களில் பலவிடங்களிலே கண்டோம். ஓர் ஆசார்யன் பக்கலிலே कृत्स्न-उपदेशம்[j] மைத்ரேயாதிகளுக்குப் போலே சிலருக்கு உண்டாம். प्रधानश्रुत[k]த்தினுடைய प्रतिष्टार्थ[l]மாகப் பலர் உபதேசித்தால்

[1] अल्पं वा बहु वा यस्य श्रुतस्योपकरोति यः।
तमपीह गुरुं विद्यात् श्रुतोपक्रियया तया ॥

என்கையாலே அவர்கள் பக்கலிலும் ஆசார்ய ப்ரதிபத்தி[m] பண்ண ப்ராப்தம்[n]. अव्यवहित-मोक्षोपाय-व्यवसायம்[o] பிறப்பிக்கை प्रधान-आचार्य कृत्यம். இது கலங்காதபடி பண்ணுகையும், परिकर-पूर्तिயுண்டாக்குகையும்[p] ஆசார்ய-அபிமத-சிக்ஷகாந்தர-

a - பலவகையாக; b - கருத்தாலே; c - திருவுள்ளத்துக்கு உகந்தவர்; d - அநுமதியாலே; e - ஸம்பாதித்தல்; f - திருநாட்டுக்கு எழுந்தருளும் வரை; g - மிகவும் கவனமுடையராய்; h - நல்ல ஆசாரத்தைக் காத்தல்; i - வேதாந்த; j - எல்லாவற்றின் உபதேசம்; k - கற்றவற்றுள் முக்கியப் பகுதியின்; l - மனத்தில் நிலைநிற்பதற்காக; m - மதிப்புக் கொள்ளல்; n - கடமையாகும்; o - மோக்ஷத்துக்கு நேர் உபாயத்தைப் பற்றிய உறுதியான எண்ணம்; p - அங்கங்களின் பூர்த்தி

[1] கல்விப் பயிற்சியில் சிறிதளவோ மிகுதியாகவோ கற்பித்து உதவி செய்தவரையும் குருவாகக் கருதவேண்டும். அவர் கல்வி கற்க உதவி புரிந்துள்ளானல்லனோ ?

க்ருத்யம். आचार्यसंबन्धத்தை உண்டாக்கினவர்களும் प्रबन्ध-मुखத் தாலே परंपरया உபகரித்தவர்களும் आदरणीयர்[a]. இவர்களில் प्रधानतमன் ஸர்வ ப்ரேரகனை[b] श्रिय:पति. இவனொருவனே தனக்கோர் ஆசார்யனில்லாத பரமாசார்யன்.

ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய–ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் अर्थविरोधமில்லை. वाक्ययोजनाभेद[c]மே உள்ளது. देश-काल अवस्था-विशेषங்களாலே வரும் அநுஷ்டான வைஷம்யம்[d] शास्त्र-अनुमतம். चोरापराध[e]த்தை மாண்டவ்யன் பக்கல் ஆரோபித்தாற் போல[f] स्वेच्छैக்கு अनुगुणமாக அறிபுணர்[g] சொல்லுமது वक्ता[h]க்களுக்கே தோஷமாம்.

### திருமந்திரப்பொருளில் முரண்பாடின்மையும் மூன்றுவகையில் அர்த்தபஞ்சகமும் முதலியன

திருமந்திரத்தில் पदार्थ-वाक्यार्थங்களெல்லாம் मूलभूत–निरुक्तादि வாக்ய விசேஷங்களாலே வந்தவை. இதில் पदत्रयத்திலுமாகவாதல் प्रथम-पदத்திலேயாதல் प्रथम - अक्षरத்திலேயாதல் ஸங்க்ஷேப–[i] விஸ்தரக்ரமத்தாலே[j] शब्द-अर्थ-स्वभावங்களைக் கொண்டு अर्थपञ्चक अनुसन्धानம் பண்ணுமதுவும் अन्योन्य[k]-विरुद्धமன்று. இப்படி प्रथम–द्वितीय-अक्षरங்களாலே आर्थ[l]மாகவாதல் शाब्द[m]மாகவாதல் शरण्य-सहधर्मचारिणी–प्रतिपादन[n]ம் பண்ணுமதுவும் அவ்வோ வாக்ய விசேஷ மூலம். मध्यम अक्षरம் पत्नीपरமென்னும் நிர்வாஹத்தில்[o]

---

a - ஆதரிக்கப்பட உரியர்; b - நியமிப்பவன்; c - வாக்யங்களின் பதங்களைக் கூட்டிப் பொருள் கொள்வதில் வேற்றுமை; d - வேறுபாடு; e - திருடனது குற்றத்தை; f - ஏற்றிக் கூறியதுபோல்; g - அறியாதார்; h -சொல்லும் அவர்களுக்கே; i - சுருக்கம்; j - விளக்கம்; k - ஒன்றுக் கொன்று; l - கருத்தால் கிடைப்பது; m - சொல்லால் கிடைப்பது; n - கூறுதல்; o - பொருள் கொள்ளும்முறை;

विशेष-उपादान-बल[a]த் தாலே अवधारण[b]ம் अर्थसिद्धம். இந்த अवधारणத்தாலே शरीर-आत्म-भावம் सिद्धिக்கிறதென்பார்க்கு शेषत्व-अयोग-व्यवच्छेद[c]த்திலே तात्पर्यம் கொள்ளலாம். `मकारार्थो जीव:`[1] इत्यादिகளிற்படியே तृतीयाक्षरம் जीवजातीय[d] सर्वपरமென்பார்க்கும் இதில் स्वानुसन्धानம் आर्थமென்ன வேண்டும். `अकारार्थायैव-स्वमहमं`[2] என்று விசேஷித்து[e] வ்யாக்யாநம் பண்ணினவர்களுக்கும் இவ்வநுஸந்தாநம் सर्व-जीव-साधारण-आकारविषय[f]ம். பகவத்சேஷத்வம் தோற்றுமிடமெல்

a - இருவரையும் குறிப்பிட்டு எடுத்த வலிமையால் ; b - இருவருக்கே அடிமை என்பது; c - இருந்தே தீரவேண்டுதல்; d - ஜீவ வகுப்பைச் சேர்ந்த; e - குறிப்பிட்டு எடுத்து; f - பொதுவான தன்மையைக் குறிப்பது

1 *अकारार्थो विष्णुर्जगदुदयरक्षाप्रळयकृत्*
*मकारार्थो जीवस्तदुपकरणं वैष्णवमिदम् ।*
*उकारोऽनन्यार्हं नियमयति संबन्धमनयो:*
*त्रयीसारस्त्यात्मा प्रणव इममर्थं समदिशत् ॥*

*அஷ்டச்லோகி (1) : உலகைப் படைத்துக் காத்து அழிப்பவனாகிய விஷ்ணு அகாரத்தின் அர்த்தம். மகாரத்தின் அர்த்தம் ஜீவன். அவன் விஷ்ணுவுக்குச் சேஷபூதன். உகாரம் இருவருக்கும் உள்ள ஸம்பந்தம் வேறொருவருக்கும் உரியதன்று என வரையறுக்கின்றது. மூன்று வேத ஸாரமாய் மூன்று அக்ஷரமாயுள்ள ப்ரணவம் இந்த அர்த்தத்தைச் சொல்லிற்று.*

2 *अकारार्थायैव स्वमहमथ मह्यं न निवहा:*
*नराणां नित्यानामयनमिति नारायणपदम् ।*
*यमाहास्मै कालं सकलमपि सर्वत्र सकला-*
*स्ववस्थास्वाविस्स्युर्मम सहजकैंकर्य विधय: ॥*

*அஷ்டச்லோகி (3) : அகாரத்துக்கு அர்த்தமாகிய எம்பெருமானுக்கே நான் சேஷ பூதன். நான் எனக்காக இருக்கவில்லை. நாராயணன் என்ற பதமானது 'நித்யர்களான ஜீவர்களுடைய ஸமூஹமானது அவனுக்கு இருப்பிடமாயிருக்கிறது' என்று எவனைச் சொல்லுகிறதோ, அந்த நாராயணன் பொருட்டு, எனக்கு ஸ்வபாவமாய் ஏற்பட்ட கைங்கர்யங்களின் ப்ரகாரங்கள் எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் எல்லா நிலைகளிலும் உண்டாக வேண்டும்.*

லாம் பாகவத சேஷத்வ பர்யந்தமாக அநுஸந்திக்க प्राप्तமாயிருக்க, औचित्य-अतिशय[a]த்தாலே मध्यमपदத் திலே இத்தை अनुसन्धिக்குமது उपपन्नம். प्रथम-द्वितीय-चतुर्थिகளுக்கு एकार्थत्व-भिन्नार्थत्व[b]ங்களும் प्रमाण-अनुगुण-वाक्यार्थ-विवक्षा-भेद[c]த்தாலே சொன்னவை.

## 'த்வயம்' மந்த்ர பொருள் விளக்கம்

द्वयத்தில் पूर्व-अपर-श्रीमच्छब्दங்களிலும், पूर्व-अपर-नारायण शब्दங்களிலும், சில आकार-विशेष[d]ங்களைப் பிரித்து अनुसन्धिக்குமது उपाय-फल-दशैகளுக்கு உபயுக்ததம[e] அம்சநிஷ்கர்ஷம் பண்ணினபடி. चरणங்களை उपायமென்கிறதற்கு चरण-विशिष्ट-वशीकार्यன் பக்கலிலே தாத்பர்யமாகையாலே सिद्धोपाय-भेदமும் साध्योपाय बाधமும் வாரா. नमस्सு नानार्थ[f]மாக अहिर्बुध्न्य-सहितादिகளில் निरुक्तமாகையாலே प्रथम-द्वितीय ரஹஸ்யங்களில் मध्यम चरम पदங்களுக்கு वाक्यार्थ अनुगुणமாக अर्थ भेदம் கொள்ளலாம். द्वितीय तृतीय रहस्यங்களில் கிடக்கிற शरणशब्दம் उपायपरமானதடியாக வசீகரண—உபாயத்துக்குச் சிலர் பண்ணும் अतिवाद[g]மெல்லாம் सिद्धोपाय-प्राधान्यपरம். ஸ்வாநுஸந்தான பரமாயும் विधिपरமாயும் நிற்கிற आख्यात[h]ங்களில் आवृत्ति[i]க்கு ज्ञापक[j]மில்லாமையாலும், अनावृत्ति[k]க்குக் कण्ठोक्ति[l]யுண்டாகையாலும் वर्तमान-व्यपदेश[m]ம் अनुष्ठानकाल-अभिप्रायம். प्रपत्तिக்கு யாவஜ்ஜீவ அநுவ்ருத்தி[n]

---

a - மிகுதியான பொருத்தத்தாலே; b - ஒரே பொருளையுடைமையும் வெவ்வேறு பொருளையுடைமையும்; c - கொள்ளும் முறை; d - விசேஷத் தன்மை; e - மிகப் பயன்படக்கூடிய; f - பல்வேறு பொருளுடையதாக; g - மிகைப்படச் சொல்வது; h - வினைமுற்றுக்களில்; i - பன்முறை செய்தலுக்கு; j - அறிவிக்கும் அம்சம்; k - ஒரே முறை செய்தற்கு ; l - வெளிப்படைச் சொல்; m - நிகழ் காலத்தால் குறித்தல்; n - தொடர்ந்து செய்தல்

சொல்லுவார்க்கும் 'द्वयमर्थानुसंधानेन सह सदैवं वक्ता ' इत्यादिகளிற் சொன்ன सुखासि[a]கையிலே தாத்பர்யம் கொள்ளலாம். 'न्यास: पञ्चाङ्गसंयुत:[1]' என்று சொன்ன ப்ரபத்தி–அங்கங்களிலே சிலர் कतिपय-अनादर[b]ம் பண்ணுமது अङ्गियுனுடைய वैभवार्थ[c]ம். விசேஷித்துக் कतिपय-अङ्ग-उपादान[d]ம் பண்ணுமதுவும் अङ्गान्तरங்களிற் காட்டில் இவ்வங்கங்களுடைய प्रशंसार्थ[e]ம்.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய – முதலிய **चरमश्लोक** விளக்கம்

चरमश्लोकத்தில் विधिக்கிற प्रपत्ति सकल फल साधनமாகையாலே அங்கமாகவும் ஸ்வதந்த்ரமாகவும் வ்யாக்க்யாநம் பண்ணின भाष्य-गद्य ங்களுக்கு विरोधமில்லை. सर्व-धर्म शब्दத்தில் संकुचित असंकुचित वृत्ति[f]களைக் கொள்ளுமவர்களுக்குப் परपक्षத்திற்போலே सर्वधर्म-स्वरूप-त्याग-विधि-विव[g]க்ஷையில்லாமையாலே स्वतन्त्र-आज्ञा-अनुपालन-विरोध[h]மில்லை. परित्यज्यशब्दத்திலும் एकशब्दத்திலும் मूलप्रमाण-अनुगुणமாகச் சொல்லும் பல அர்த்தங்களிலும் परस्परविरोधமில்லை. அவற்றில் புநருக்தி[i] வாராதபடி அநுஸந்திக்குமதே வேண்டுவது. शरण्यனுக்கு प्रपत्ति-कर्मत्वத்தையும் मोक्ष-कर्तृत्वத்தை யும் प्रतिपादि[j]க்கிற माम्-अहम् என்கிற பதங்களிலே सर्वस्वीकार-उपयुक्त-

---

**a** - கவலையற்றுச் சுகமாயிருத்தல் ; **b** - சிலவற்றை ஒதுக்கல் ; **c** - பெருமையை அறிவிப்பதற்காக ; **d** - எடுத்துச் சொல்லியிருத்தல் ; **e** - புகழ்ச்சிகாக.
**f** - பொருளைச் சுருக்கியும், சுருக்காமலும் கூறும் முறை ; **g** - எல்லாக் கர்மங்களையும் விட்டுவிடுவதை விதிப்பதில் நோக்கம் ; **h**- எம் பெருமானது கட்டளையை நடத்துவதற்கு இடர்பாடு; **i** - கூறியதையே கூறல்; **j** - விளக்குகின்ற

1 *निक्षेपापरपर्यायो न्यास: पञ्चाङ्गसंयुत: ।*
*संन्यासस्त्याग इत्युक्त: शरणागतिरित्यपि ॥*

*ல.த. (17-74) : ஆத்மநிக்ஷேபம் எனப்படும் பரந்யாஸம் ஐந்து அங்கங்களுடன் கூடியது. அது த்யாகம், சரணாகதி என்றெல்லாம் வழங்கும்.*

மான सौलभ्यமும் सर्व-कार्य-करत्व-उपयुक्त[a] மான परत्व[b] மும் அநு ஸந்திக்குமிடத்தில் அபேக்ஷித விசேஷங்களைப் பிரித்து அநு ஸந்திக்குமது शेषव्यवच्छेदार्थ[c] மன்று. 'व्रज' என்றும் 'त्वा' என்றும் அர்ஜுநனை ஒருவனைக் குறித்துச் சொன்னாலும் தாத்பர்ய விசேஷத்தாலே இது प्रपत्ति-अधिकारिகளெல்லாருக்கும் வரும். ஸர்வபாப மோக்ஷவசநத்தில் बुद्धिपूर्व-उत्तराघ[d] த்தையும் கூட்டுவார்க்கு शरण्य-अभिप्रायमूल-पुन:-प्रपदनादि-मुख[e] த்தாலே அவைகளுக்கு விநாசம் விவக்ஷிதமாகையால் शास्त्रविरोधமில்லை. मोक्षयिष्यामि[167*2] என்கிற संकल्पத்தின் फलம் प्रारब्ध-कर्म-अवसान[f] த்திலே என்றவர்களுக்கும் ப்ரபத்தி பண்ணுகிறவன் கோரின காலத்திலே என்றவர்களுக்கும் आर्ति[g] யில் तारतम्यத் திற்கு ஈடாக फल-अनुभवத்தாலேயாதல் प्रपत्ति-वैभवத்தாலேயாதல் प्रारब्ध-कर्म-अवसानத்திலே मोक्षம் तुल्यம். அர்ஜுநனுக்கு शोकनिमित्तம் வேறேயாகிலும் 'मा शुच: संपदं दैवीम्[1]' என்கிறவிடத்திற்போலே

---

**a** - எல்லாக் காரியங்களையும் செய்தற்குப் பயன்படக் கூடிய; **b** - எல்லோரினும் மேம்பட்ட தன்மை; **c** - மற்றவற்றை மறுப்பதற்காகவன்று ; **d** - ப்ரபத்திக்குப் பின் அறிந்தே செய்யும் பாபங்களையும்; **e** - எம்பெருமான் திருவுள்ளத்தைத் தழுவிய ப்ராயச்சித்த ப்ரபத்தி முதலியவற்றின் வாயிலாக; **f** - பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மத்தின் முடிவிலே; **g** - மோக்ஷம் பெறுதலில் உள்ள ஆவலில்;

1 *दैवी संपद्विमोक्षाय निबन्धायासुरी मता ।*
*मा शुच: संपदं दैवीं अभिजातोऽसि पाण्डव ॥*

*கீதை (16-5) : அர்ஜுநனே! என் கட்டளைப்படி நடத்தலாகிய தைவஸம்பத்துக் காலக்ரமத்தில் ஸம்ஸாரபந்தம் நீங்கி என்னை அடையும்படி செய்யும். என் கட்டளையை மீறி நடத்தலாகிய அஸுர ஸம்பத்து அதோகதியை அடையச்செய்யும். உன்னைப் பற்றித் தான் அஸுரஸம்பத்தையுடையனோ? என்று நினைத்து மறுபடி ஸம்ஸார ஸமுத்ரத்தில் மூழ்கவேண்டி வருமோவென்று அஞ்சி வருந்தாதே. நீ தைவஸம்பத்தை அடைந்தவனாகின்றாய். தைவஸம்பத்து நிறைந்தவராய்த் தார்மிகர்களுள் தலை சிறந்தவரான பாண்டுவின் புத்திரனல்லனோ நீ ?*

*`मोक्षयिष्यामि मा शुचः'*[167*2] என்ற இடத்திலும் प्रकरण-अनुगुण-निमित्त-विशेष-अनुसंधान[a]ம் उचितம்.

மற்றும் இப்படி वेदान्त-सिद्धங்களான तत्व-हित-पुरुषार्थங்களில் परस्पर-विरोधமும் पूर्व-अपर-विरोधமும் இல்லாத शुद्ध-संप्रदाय-क्रमத்தை संग्रहि[b]த்தனம். *`सुव्याहृतानि महताम्'*[1] इत्यादिகளையும் இங்கே संग्रहिத்துக் கொள்வது.

[2] *கடலமுதத்தைக் கடைந்து சேர்த்த*
*திருமாலடி காட்டிய நம்*
*தேசிகர் தம்நிலைபற்றிச் சேர்ந்தோமே. (2)*

**a** - ஸந்தர்பத்திற்கு ஏற்ற துக்கத்தின் காரணத்தைக் கூறுதல்; **b** - சுருக்கிக் கூறினோம்.

*1* *सुव्याहृतानि महतां सुकृतानि ततस्ततः ।*
*संचिन्वन् धीर आसीत सिलहारी सिलं यथा ॥*

*பார உத் (33-34) : சிந்திய தாந்யங்களால் ஜீவிப்பவன் அவற்றைப் பொறுக்கிச் சேர்த்துவைத்துக் கொள்வது போல் பெரியோர்களின் நல்வார்த்தைகளையும் நல்ல அநுஷ்டாநங்களையும் பார்த்துத் தனக்கு வேண்டியவற்றைக் கைக்கொண்டு கவலையற்று இருக்கவேண்டும்.*

*2* *கடல்கடைந்து - கடலைக் கடைந்து; அமுதத்தைச் சேர்த்த - தேவருக்கு அமுதத்தைக் கொடுத்த; திருமால் அடி காட்டிய - எம்பெருமானுடைய திருவடிகளை சமக்கு உபாயமாகக் காட்டிக் கொடுத்த; நம் தேசிகர் தம் நிலை - நம் ஆசார்யர்களின் அநுஷ்டானத்தை; பற்றிச் சேர்ந்தோம் - சிறந்ததாக பற்றி ஈடுபட்டோம்.*

*आसर्वज्ञादस्मदाचार्य-पङ्क्तेः अप्रत्यूहं सत्पथं स्थापयन्ती ।*[1]
*सैषा नित्यं संप्रदायस्य शुद्धिः श्रद्धातव्या चातकन्यायनिष्ठैः ॥*

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु श्रीसंप्रदायपरिशुद्धिः समाप्ता

**ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி முற்றும்.**

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

1 *आसर्वज्ञात् - எல்லாம் அறிந்த எம்பெருமான் தொடங்கி ; अस्मदाचार्य पङ्क्तेः - நம் ஆசார்ய பரம்பரையில்; सत्पथं - நல்ல மார்க்கத்தை; अप्रत्यूहं - ஒருவித முரண்பாடும் இல்லாதபடி; स्थापयन्ती - நிலை நிறுத்துகிற; सैषा - இந்த ; संप्रदायस्य - शुद्धिः ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி என்ற ரஹஸ்யம் चातक - न्याय - निष्ठैः - சாதகப்பறவை மழை நீரைமட்டுமே எதிர்பார்த்திருப்பது போல் திருமால் திருவருள் ஒன்றையே எதிர்பார்த்து நிற்கின்ற பரமைகாந்திகளாலே; नित्यं - எப்பொழுதும்; श्रद्धातव्या - ஆராதிக்கத்தக்கது.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नम:

# 2 तत्त्वपदवी

(விளக்கம் – ரஹ. விவ. – 45–48)

# 2 தத்த்வ பதவீ

[முன்னுரை : இந்த ரஹஸ்யம் சேதநம், அசேதநம், ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களை அறிவதற்கு வழி காட்டுவதால் இப்பெயர் பெற்றது.]

*விஷயச்சுருக்கம் : சேதநன் தான் நற்கதி பெற விரும்பினால் சிறந்த ஓர் ஆசார்யனை அடைய வேண்டும். அவன் அருளோடு செய்யும் உபதேசத்தால் உயர்ந்த, தாழ்ந்த தத்வங்களைப் பற்றிய விளக்கமான அறிவைப்பெற வேண்டும். பின் ஸர்வேச்வரன் திருவடிகளே சாதனமாகவும் பலனாகவும் ஆவதை உணர்ந்து அவன் திருவடிகளில் சரணாகதி செய்ய வேண்டும். இதுவே சேதனன் நல்வாழ்வுபெற ஏற்ற வழி.*

[1] *प्रसादात् देशिकेन्द्राणां परावरविभागवित् ।*

*प्रपन्न: परमात्मानं प्राप्नोति परमं पदम् ॥*

सदाचार्य-प्रसाद[a]த்தாலே पर-अवर-तत्त्वज्ञान[b]ம் பிறந்தவன் ஸர்வேச்வரன் திருவடிகளையே உபாய–உபேயங்களாகப்[c] பற்றி உஜ்ஜீவிக்க வேண்டும். परतत्त्वமாவது- स्वव्यतिरिक्त[d] வஸ்துக்களெல்லாவற்றுக்கும் धारक[e]னுமாய் नियन्ता[f]வுமாய் சேஷியுமான[g]

---

**a** - *சிறந்த ஆசார்யனது அநுக்ரஹத்தால்;* **b** - *உயர்ந்ததும் தாழ்ந்தவையுமான தத்வங்களைப் பற்றிய அறிவு;* **c** - *ஸாதநமாகவும் பலனாகவும்;* **d** - *தன்னைத் தவிர மற்ற ;* **e** - *ஸ்வரூபத்தால் தரிப்பவன்;* **f** - *ஸங்கல்பத்தால் நியமிப்பவன்;* **g** - *பயனைப் பெறுமவன்;*

[1] *देशिकेन्द्राणां - ஆசார்யர்களின் ; प्रसादात् - அநுக்ரஹத்தினால்; पर-अवर विभाग वित् - உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம் இவற்றின் பாகுபாடுகளை அறிந்து; परमात्मानं - எம் பெருமானை; प्रपन्न: - சரணமடைந்தவன், परम पदं - மிக உயர்ந்த ஸ்தானமாகிற ஸ்ரீவைகுண்டத்தை; प्राप्नोति - அடைகிறான்.*

श्रिय: पति. இவன் स्वत:[a] ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தி யாய்ப் பரம காருணிகனாய் ஸர்வசரண்யனாய்ப் परमोदार[b]னாய் மோக்ஷप्रदனாய் मुक्त-प्राप्यனாய் परव्यूहादि[c]-पञ्चप्रकार[d]-शुभाश्रय[e] दिव्य-मङ्गळविग्रह-विशिष्ट[f]னாயிருக்கும் இவனை யொழிந்தவை அவர தத்த்வம். இது சேதநமென்றும் அசேதநமென்றும் இரண்டு வகையாயிருக்கும். [$1] சேதநமான அவரதத்த்வம் परिच्छिन्न[g]மான अहमर्थ[h]ம். இதற்கு ज्ञातृत्व-कर्तृत्व-भोक्तृत्व[i]ங்கள் परायत्त[j]ங்களாயிருக்கும். இது बद्ध-मुक्त-नित्यरूपத்தாலே त्रिविधம். बद्धராவார்—ஸம்ஸரிக்குமவர்கள். முக்தராவார் – ஸம்ஸாரம் கழித்தவர்கள். நித்யராவார் – ஒருகாலத்திலும் ஸம்ஸாரமில்லாத நித்யஸூரிகள். [$2] அசேதநமாவது – அறிவில்லாத வஸ்து. अचेतनद्रव्यம் त्रिगुणமென்றும் காலமென்றும் शुद्धஸத்த்வமென்றும் धर्मभूत ஜ்ஞாநமென்றும் चतुर्विधமாயிருக்கும். त्रिगुणமாவது – सत्वादि-गुणत्रय-आश्रय[k]மான द्रव्यம். இது प्रकृति-विकृति-विभागத்தாலே இருபத்தினாலு வகையாய் भगवल्लीलार्थமாக क्षेत्रज्ञ[l]ருக்குக் काय-करणादि-रूपेण[m] பரிணமித்து भगवत्-स्वरूप-तिरोधानादि[n]களைப் பண்ணும். காலமாவது – क्षणादि-विभागத்தையுடையதாய் सर्वकर्तावான ஈச்வரனாலே ஸஹகாரியாக ஸ்வீக்ருதமாயிருக்கும் த்ரவ்யம். शुद्ध ஸத்த்வமாவது – ரஜஸ் தமஸ்ஸுக்களின்றிக்கே ஸத்த்வ गुणाश्रयமான த்ரவ்யம். இது ஈச்வரனுக்கும் நித்யருக்கும் முக்தருக்கும்

---

a - இயற்கையாகவே ; b - பெருங்கொடையாளன்; c - பரம், வ்யூஹம் முதலிய; d - ஐந்து வகையான; e - பாபத்தைத் தீர்ப்பதும் நினைத்தற்கு எளியதுமான; f - சிறந்த மங்களமான திருமேனியுடன் கூடியவன்; g - அளவில் சிறியதான; h - ஜீவன்; i - அறிவுடைமை – செயல்புரிதல் – பலனை அநுபவித்தல்; j - எம்பெருமானால் வருமவையாய் இருக்கும்; k - ஸத்துவம் முதலிய மூன்று குணங்களுக்கும் உறைவிடமான; l - ஜீவர்களுக்கு; m - சரீரம், இந்த்திரியம் முதலியனவாக; n - ஸ்வரூபத்தை மறைத்தல் முதலியவற்றை

विग्रहादिरूपेण[a]-विचित्रभोग्य[b]மாயிருக்கும். धर्मभूतஜ்ஞாநமாவது – पर-अवर-आत्माக்களுக்கு ஸ்வாத்மாவையும் स्वव्यतिरिक्त[c] வஸ்துக்களையும் ப்ரகாசிப்பிக்கவற்றான ஜ்ஞாநம். இந்த ஜ்ஞாநத்தாலே ஆத்மாக்களுக்கு ज्ञातृत्व-कर्तृत्व-भोक्तृत्वங்கள் உண்டாகின்றன. बद्धருக்கு निषिद्ध-काम्य-कर्तृत्व[d]ம் ஸம்ஸாரஹேது. तत्वज्ञानमूल-निवृत्तिधर्म-कर्तृत्व[e]ம் மோக்ஷஹேது. बद्धன் முன்பு பண்ணின बन्धक[f]ங்களுக்கெல்லாம் தன் अधिकार-अनुगुणமாக प्रपत्त्यादि-प्रायश्चित्तம் பண்ணி, மேல் अपराधம் பண்ணாதே प्रारब्ध-कर्मத்தையும் ஒருவழியாலே கழித்து முக்தனாம்.

1 *முக்திக்கருள் கூட மூன்றைத் தெளிமுன்னம்*
*இத்திக்கா லேற்கு மிதம்.* (3)

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु **तत्त्वपदवी** संपूर्णा

**தத்வ பதவீ முற்றும்.**

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

a - திருமேனி முதலியனவாக; b - ஆச்சர்யமான போக்யவஸ்து; c - தன்னையன்றி மற்ற; d - பாபச் செயல்களையும் இம்மைப் பயனுக்காகக் காம்ய கர்மங்களைச் செய்தல்; e - தத்வங்களை அறிந்து மறுமைக்கு வேண்டிய தர்மங்களைச் செய்தல்; f - ஸம்ஸாரபந்தத்தைத் தரும் கர்மங்கள்

1 *முக்திக்கு அருள் கூட - (மோக்ஷத்திற்குக் காரணமான பகவானுடைய) க்ருபையைப் பெறுவதற்கு; மூன்றை - சேதநம், அசேதநம், ஈச்வரன் என்னும் மூன்று தத்வங்களை; முன்னம் தெளி - முதலில் தெளிந்து கொள்; இத் திக்கால் இதம் ஏற்கும் - இந்த வழியால் உபாயம் பொருந்தும்.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 3 रहस्यपदवी

(விளக்கம் – ரஹ. விவ. – 49–55)

# 3 ரஹஸ்ய பதவீ

[முன்னுரை : திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களின் உட்பொருளைக் கூறி வழிகாட்டுவதால் இப்பெயர் வந்தது.]

விஷயச்சுருக்கம் : *வேதாந்த சாஸ்த்ரங்கள் தத்வம் - ஹிதம் - புருஷார்த்தம் ஆகியவற்றை விளக்கிக் கூறுகின்றன. எதற்காக ? நெடுங்காலமாக ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு உழலும் ஜீவாத்மாக்கள் அவற்றை அறிந்து நற்கதி பெறுவதற்காகத் தான். திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களும் அவற்றைச் சுருக்கமாகக் காட்டும்.*

*அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போந்த ஜீவாத்மாக்களுடைய உஜ்ஜீவநார்த்*[a]*மாக,* अध्यात्म[b] *சாஸ்த்ரங்கள் தத்த்வ-ஹித-புருஷார்த்தங்களை* प्रतिपादि[c]*க்கும். அவற்றை* संग्रहेण[d] *ரஹஸ்ய த்ரயம் ப்ரகாசிப்பிக்கும்.*

*இவற்றில் திருமந்திரம் ஸர்வஸங்க்ரஹம். இதுதான் மூன்று பதமாய் எட்டுத் திருவக்ஷரமாயிருக்கும். இதில்* प्रथमपद*மான ப்ரணவம் ஸாரதமஸங்க்ரஹம்*[e]*. இது மூன்று பதமாய் மூன்று அக்ஷரமாயிருக்கும். அதில்* प्रथम-*அக்ஷரம் ஸர்வகாரண* भूत*னாய் ஸர்வரக்ஷகனாய்* नित्य-निरुपाधिक-शेषत्व-प्रतिसंबन्धि[f]*யான* श्रियःपति*யைச் சொல்கிறது. இதில் சதுர்த்தி சேஷத்வமாகிற ஸம்பந்தத்தைக் காட்டுகிறது.* मध्यम-*அக்ஷரம் இஸ்ஸம்பந்தத்தை மற்றவரோடு துவக்கற*[g] *நியமிக்கிறது*[h]*.*

**a** - நல்வாழ்வு பெறுதற்காக ; **b** - வேதாந்த ; **c** - விளக்கிக் கூறும்; **d** - சுருக்கமாக; **e** - மிகவும் ஸாரமானதைச் சுருக்கிக் கூறுவது; **f** - எப்பொழுதும் இயற்கையான அடிமையை ஏற்பவன்; **g** - தொடர்பின்றி; **h** - வரையறுக்கிறது

तृतीय-அக்ஷரம் இஸ்ஸம்பந்தத்துக்கு ஆச்ரயனாய் ரக்ஷணீயனாய் ज्ञान-आनन्द-स्वरूप-गुणனாய் அணுவாய் देहादिவிலக்ஷணனான ஜீவாத்மாவைச் சொல்கிறது. ஆக இப் ப்ரணவத்தால் 'கண்ணபுரமொன்றுடையானுக்கடியேனொருவர்க்குரியேனோ'[1] என்கிறபடியே இஜ்ஜீவாத்மா பகவதநந்யார்ஹ[a] சேஷபூத னென்றதாயிற்று. मध्यमपदமான நமஸ்ஸு இரண்டு அக்ஷரமாய் இரண்டு பதமாய் 'நான் எனக்கு உரியனல்லேன், என் காரியத்துக்கு நான் நிரபேக்ஷஸ்வதந்த்ரனுமல்லேன்'[b] என்கிறது. இங்கே பாகவத சேஷத்வம் फलित[c]ம். இந் நமஸ்ஸுக்கு शரணாகதியிலும் தாத்பர்யம். அநிஷ்ட நிவ்ருத்தியை[d] ப்ரார்த்திக்கிறதாகவுமாம். இப்படி நமஸ்ஸு தன்னிலே தத்த்வ-ஹித-புருஷார்த்த-ப்ரகாசநம் உண்டு. நாராயண சப்தம் நாரங்களுக்கு அயநமென்றும் நாரங்களை அயநமாகவுடையனென்றும் सर्वाधारत्वादि-विशिष्ट[e]னை

---

a - வேறொருவர்க்குமன்றி எம்பெருமானுக்கே அடியன்; b - பிறனை எதிர்பாராத சுதந்திரமுடையனுமல்லேன் ; c - கருத்தால் தேறியது ; d - தீங்கு ஒழிதலை ; e-எல்லாவற்றுக்கும் ஆதாரனாந்தன்மை முதலியவற்றுடன் கூடிய ;

1 விடையேழன் றடர்ந்து வெகுண்டுவிலங்கலுற
படையாலாழிதட்டப் பரமன்பரஞ்சோதி
மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுர மொன்
றுடையானுக்கு அடியேனொருவர்க்குரியேனோ.

(பெரிய-8-9-3) : நப்பின்னையின் ஈடுபாடு அறிந்த போது ஏழு எருதுகளிடம் கோபித்து அடக்கியொழிந்தவனும், தன்னை ஆச்ரயித்த ஸீதை கவலைப்படும்போது வானர சேனைகளைக் கொண்டு மலைகளால் கடலை அடைத்தவனும் தன்னைவிட உயர்ந்தவன் இல்லாத பரவாசுதேவனும் நீர் தேங்குமிடங்களில் மலர்ந்த கருநெய்தல்கள் வளருமிடமான வயல்கள் சூழ்ந்த ஒப்பற்ற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமானுக்கே (அதாவது ஸ்ரீமந் நாராயணனுக்கே) அடிமையான நான் வேறு ஒருவர்க்கு சேஷனாக உரியேனோ ? (உரியனாகேன்)

श्रिय:पति யைச் சொல்லுகிறது. இதில் சதுர்த்தி तादर्थ्य[a]த்தை முன்னிட்டுக் கொண்டு அதன் फल மான கைங்கர்யத்தைக் காட்டுகிறது. இத்தால் `ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி-வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்'[1] என்றதாயிற்று. `अकारार्थायैव'[11*2] என்கிற ஶ்லோகத்தை இங்கே அநுஸந்திப்பது.

இப்படி திருமந்த்ரத்தில் संगृहीत[b]ங்களான தத்த்வ-ஹித-புருஷார்த்தங்களை विशद[c]மாக்குகிறது த்வயம். இதில் पूर्वखण्ड[d]ம் ஒரு வாக்யமாய் उपायपरம். उत्तरखण्ड[e]ம் இரண்டுவாக்யமாய் उपेयपर[f]ம். இவை ஒரொன்றும் மூன்று பதமாயிருக்கும். प्रथम खण्डத்தில் प्रथमपदம் மூன்று पदங்கூடிய समस्तपद[g]மாயிருக்கும். இதில் ஸ்ரீமத்சப்தம் ஸர்வருக்கும் ஆச்ரயணீயையாய்

a - சேஷத்வத்தை (அடியனாந்தன்மையை); b - சுருக்கிக் கூறப்பட்ட; c-தெளிவாக; d - முற்பகுதி; e - பிற்பகுதி; f - பலனைக் கூறுவது; g - ஒன்று கூட்டிய முழுப்பதம்;

1 ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி
வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து
எழில்கொள்சோதி யெந்தைதந்தை தந்தைக்கே.

(திருவாய்-3-1-1) : முழங்கும் ஓசையுடைய அருவிகள் நிறைந்த திருவேங்கட மலையில், மிக அழகிய திருமேனியையுடைய ஸர்வ லோக பிதாவான என் ஸ்வாமிக்கு எல்லா நிலைகளிலும் அவனுடன் கூடியிருந்து குற்றமற்ற குறைவற்ற எல்லாக் கைங்கர்யங்களையும் நாம் செய்ய வேண்டும். அங்கு குற்றமாவது நான் செய்கிறேன் எனக்காகச் செய்கிறேன் என்று எண்ணுதல்.

'அகலகில்லேன்'[1] னென்கிறபடியே தன்னை ஆச்ரயித்திருக்கிற பெரியபிராட்டியாரோடு பிரிவற்றவனென்கிறது. நாராயண சப்தம் 'நிகரில் புகழாய்' इत्यादिகளிற் சொன்ன 'वात्सल्य'[a]-स्वामित्व[b] सौशील्य[c]-सौलभ्यादि[d]களையுடையனை ஸர்வேச்வரனைச் சொல்லுகிறது. चரணசப்தம் சரண்ய விஷயத்தில் कृपोत्त-भनादि[e]களுக்காக दासभूतन் பற்றும் துறையான திருவடிகளைக் காட்டுகிறது. शரணம் என்கிற பதம் திருவடிகளுடைய उपाय भावத்தைச் சொல்கிறது. प्रपद्ये என்கிற பதம் அகிஞ்சந[f]- அதிகாரி சரண்யன் திருவடிகளை உபாயமாகக் கொண்டு महाविश्वासादि-विशिष्ट-भरन्यासம் பண்ணுகிறபடியை ப்ரகாசிப்பிக்கிறது.

---

a - குற்றத்தைப் பொருட்படுத்தாத இரக்கம்; b - தலைவனுந்தன்மை; c - மேம்பட்டவன் தாழ்ந்தவர்களுடன் கலந்து பழகுதல்; d - எல்லோரும் காணும்படி அவதரித்தல்; e - கருணையை வளர்த்தல்; f - பக்தியோகமாகிய கைம்முதலில்லாத;

1 அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பா!
நிகரில்புகழாயுலகமூன்றுடையாய் ! என்னையாள்வானே !
நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே !
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

(திருவாய்-6-10-10) : ஒரு க்ஷணமும் உன்னைவிட்டுப் பிரியச் சக்தியில்லையென்று தாமரையிலிருக்கும் பெரிய பிராட்டி வஸிக்கும் திருமார்பையுடையவனே ! அளவற்ற கருணையாகிய குணத்தையுடையவனே ! மூன்றுவிதமான சேதநாசேதநங்களுக்கும் ஸ்வாமியாய் அவைகளைக் காக்க வேண்டிய பொறுப்பு உள்ளவனே! தாழ்ந்தவனான என்னையும் உனக்கு அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்யும்படி செய்து உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டியவனே ! உன் கைங்கர்யத்தில் நிஷ்டையுடையவர்களும் உன் கல்யாண குணங்களை அநுபவிப்பவர்களுமான நித்யஸூரிகளும் ஆசைப்பட்டு வந்து சேவிக்கும் திருமலையில் எல்லோருக்கும் ஸுலபனாய் எழுந்தருளியிருக்கிறவனே! எனக்கு உன்னைத் தவிர வேறு உபாயமில்லை. ஆகையால் பெரிய பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு என்னைக் காக்கவேண்டிய சுமையை வேறுபயனை நாடாமல் உன் திருவடிகளில் சரணடைந்து ஸமர்ப்பித்து விட்டேன். இப்பொழுதே என்னுடைய எல்லா ப்ரதிபந்தங்களும் போய் , உனக்கு எல்லா இடங்களிலும், எல்லா காலங்களிலும், எல்லா நிலைகளிலும், எல்லாவிதமான கைங்கர்யங்களையும் பண்ணப்பெற வேண்டும்.

[$1] ஸ்ரீமதே என்கிற பதம் ப்ராபகனான[a] நாராயணன் ப்ராப்யனாய்[b]க் கொண்டு कैङ्कर्य-प्रतिसंबन्धि[c] யாம்போது பத்நீ விசிஷ்டனாயிருக்கும்படியைக் காட்டுகிறது. இங்குற்ற நாராயண சப்தம் ஸர்வப்ரகார விசிஷ்டனாய்க் கொண்டு निरतिशयभोग्य[d]னான ஸர்வசேஷியை प्रतिपादि[e]க்கிறது. இதன் சதுர்த்தியிலும் திருமந்திரத்தில் போலே கைங்கர்ய-ப்ரார்த்தனையைக் கண்டுகொள்வது. இக்கைங்கர்யம் सर्वविरोधिरहित[f]மான படியை இந்நமஸ் கணிசிக்கிறது. [$2] ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளில் களையற்ற நித்ய கைங்கர்யம் பெறுகைக்கு ஸ்ரீமானான நாராயணன் திருவடிகள் இரண்டையும் சரணமாகப் பற்றுகிறேனென்று இதில் திரண்டபொருள்.

[$3] இப்படி திருமந்திரத்திலும் த்வயத்திலும் ப்ரகாசித்த உபாயத்துக்கு अकिञ्चन-अधिकारित्व[g]-निरपेक्षत्वादि[h] களைக் காட்டிக் கொண்டு, विधिमुख[i]த்தாலே உபப்ரும்ஹணம்[j] பண்ணுகிறது சரம சுலோகம். இதுதான் மூன்று வாக்யமாய்ப் பன்னிரண்டு பதமாய் இருக்கும். இப்படி ரஹஸ்யத்ரயம் உத்தரோத்தரம்[k] பதங்களின் இரட்டிப்பாய் विशदीकरण[l]மாயிருக்கும். இச்ச்லோகத்தில் प्रथमவாக்யம் उपाय-विधायक[m]ம். मध्यमவாக்யம்

---

**a** - அடைதற்கு உபாயமான; **b** - அடையப்படும் பலனாய்; **c** - ஏற்றுக் கொள்பவன்; **d** - இவனுக்குமேல் இனியன் இல்லையென்னும்படி மிகவும் இனியனான; **e** - விளக்கிக் கூறுகின்றது; **f** - ஒரு தடையுமில்லாமையை; **g** - கைம்முதலற்றவனையே தகுதியுடையனாய்க் கொண்டமை; **h** - வேறொன்றையும் எதிர் பாராமை; **i** - கட்டளையிடும் வாயிலாக; **j** - தெளிவாய் விளக்குதல்; **k** - அடுத்து அடுத்து; **l** - தெளிவாக்குதல்; **m** - உபாயத்தை விதிப்பது;

[$1]- பிற்பகுதியின் பொருள்; [$2]- த்வயத்தின் திரண்ட பொருள்; [$3]- சரம சுலோகத்தின் பொருள்; [$4]- சரம சுலோகத்தின் அமைப்பு (ரஹஸ்யார்த்த விவரணத்தில் பொருள் காண்க)

फलप्रति-पादक[a]ம். உத்தரவாக்யம் कृतकृत्यत्वादि तत्पर[b]ம். [$1] `सर्वधर्मங் களையும் விட்டு' என்கிற இரண்டு பதங்களாலே `நின்னிலங்கு பாதமின்றி மற்றோர்பற்றிலே னெம்மீசனே'[1] என்கிறபடியே अभिमत-सिद्धि[c]க்கு उपायान्तर[d]மற்றிருக்கிற अधिकारिவிசேஷத்தையாதல், ப்ரபத்தியினுடைய धर्मान्तर-नैरपेक्ष्यादि[e]களை யாதல் சொல்லுகிறது. `என்னை ஒருவனை' என்கிற இரண்டு பதங்களாலே सौलभ्यादि-गुण-विशिष्टமும் प्रधान-उपायत्व[f]-निरपेक्षत्व[g]-सर्वफल प्रदत्वादि[h]-विशिष्टமுமான सनातन[i]-धर्मத்தைக் காட்டுகிறது. `சரணமாகப் பற்று' என்கிற இரண்டு பதங்களாலே महाविश्वासादि-विशिष्ट-भरन्यासத்தை விதிக்கிறது. [$2]`நானுன்னை' என்கிற இரண்டு பதங்களாலே भरस्वीकार[j]ம் பண்ணின ஸர்வசக்தியையும் न्यस्तभर[k]னுடைய चातकवृत्ति[l]யையும் சொல்கிறது. எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கக் கடவேன் என்கிற இரண்டு பதங்களாலே

a - பலனைக் கூறுவது; b - செய்யவேண்டியதைச் செய்துமுடித்தல் முதலியவற்றைக் காட்டுமது; c - விரும்பியதைப் பெறுதற்கு; d - வேறு உபாயம்; e - வேறு ஒன்றையும் எதிர்பாராமை முதலியவற்றை; f - முக்கிய உபாயமாயுள்ளமை; g - வேறொன்றையும் எதிர்பாராமை; h - எல்லாப் பயனையும் அளித்தல்; i - ஸித்தோபாயத்தை; j - ப்ரபந்நனின் பொறுப்பை ஏற்றுக்கொண்ட; k - பரந்யாஸம் செய்த; l - சாதகப்பறவை போல் பயனை எதிர்பார்த்தல்

1 குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன்,
நலங்களாயநற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்,
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன் புனித, நின்
இலங்குபாதமன்றிமற்றோர் பற்றிலேனெம்மீசனே.

(திருச்சந்த 90 ) : எம்பெருமானே! நல்லது செய்வதற்கு ஏற்ற நான்கு குலத்திலும் நான் பிறக்கவில்லை. நான்கு வேதங்களையும் கற்கவில்லை. இந்த்ரியங்கள் ஐந்தும் வென்றவனல்லேன். உலக விஷயங்களில் ஈடுபட்டுள்ளேன். உன் பிரகாசமான திருவடிகளையன்றி வேறு கதி எனக்கு இல்லை.

$1 - முற்பாதியின் பொருள்; $2 - பிற்பாதியின் பொருள்
( ரஹஸ்யார்த்த விவரணத்தில் பொருள் காண்க)

கைங்கர்ய விரோதிகளை निश्शेष[a]மாகக் கழிக்கும்படியைச் சொல்கிறது. 'சோகிக்க வேண்டாம்' என்கிற இரண்டு பதங்களாலே புகலற்றுத் தளும்பின पूर्वदशै[b]யை[c] விலக்கி 'नि:संशय: सुखमास्व'[1] என்று அருளிச்செய்த उत्तरद[d]சையை உபலக்ஷிக்கிறது[e]. த்வயத்தில் पूर्व-उत्तरखण्डங்களுக்கு இதில் पूर्व-उत्तरार्धங்கள் சேர்த்தியாகின்றன.

[2] *மூன்றிலொரு மூன்று மூவிரண்டு முந்நான்கும்*
*தோன்றத் தொலையுந் துயர்.* (4)

**a** - *மீதியில்லாமல்*; **b**- *கதியற்று*; **c** - *ப்ரபத்திக்கு முந்திய நிலைமை*;
**d** - *ப்ரபத்திக்கு பிற்திய நிலைமை*; **e** - *குறிப்பால் காட்டுகிறது.*

[1] *अतस्त्वं तव तत्त्वतो मद्ज्ञानदर्शनप्राप्तिषु नि:संशय: सुखमास्व ।*

*(சரணாகதி கத்யம் 23 ) : நான் கூறிய சொல் மிக நம்புதற்கு உரியதாதலின் ப்ராமாணிகனை நீ ஐயமும் விபரீத எண்ணமும் இன்றி என்னை அறிவதிலும் நேரில் காண்பதிலும் அநுபவிப்பதிலும் ஐயமும் பொறுப்புமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்வாயாக (ப்ரபந்நனுக்கு எம்பெருமான் சொல்)*

[2] *மூன்றில் - மூன்று ரஹஸ்யங்களில், ஒரு மூன்றும் - மூன்று பதங்களுள்ள திருமந்திரமும்; மூவிரண்டும் - ஆறு பதங்களுள்ள த்வயமும்; முந்நான்கும் - பன்னிரண்டு பதங்களுள்ள சரம சுலோகமும், தோன்ற - அவற்றின் அர்த்தத்துடன் மனதில் விளங்க; துயர் தொலையும் - ஸம்ஸார துக்கம் ஒழிந்துபோம்.*

1 इति तत्त्वत्रयस्यैषा रहस्यत्रितयस्य च ।
पदवी वेङ्कटेशेन प्रत्यक् प्राची प्रदर्शिता ॥

श्रीरङ्गद्विरदवृषाद्रिपूर्वकेषु स्थानेषु स्थिरविभवा भवत्सपर्या ।
आकल्पं वरद विधूतवैरिपक्षा भूयस्या भवदनुकम्पयैव भूयात् ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु **रहस्यपदवी** संपूर्णा

**ரஹஸ்ய பதவீ முற்றும்.**

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

*इति - இவ்வாறு; तत्त्वत्रयस्य - சேதநம், அசேதநம், ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களுடையவும்; रहस्य त्रितयस्य च - திருமந்திரம், த்வயம், சரம சுலோகம் என்ற மூன்று ரஹஸ்யங்களினுடையவும் ஞானத்தைப் பற்றிய வழி; वेङ्कटेशेन - வேங்கடேசன் என்ற திருநாமம் கொண்ட ஸ்ரீதேசிகனுல்; प्रत्यक् प्राची - ஆத்ம ஸ்வரூபத்தை அறிகிற; एषा पदवी - இந்த வழி; प्रदर्शिता - (இந்த இரண்டு ரஹஸ்யங்களின் வாயிலாகக்) காட்டப் பட்டது.*

*वरद - அடியார் வேண்டின வரங்களைத் தரும் பெருமானே!;*
*श्रीरङ्ग - திருவரங்கம்; द्विरद (अद्रि) - பெருமாள் கோயில்;*
*वृषादि - திருமலை; पूर्वकेषु - முதலான; स्थानेषु - திவ்ய தேசங்களில்;*
*भवत्सपर्या - உன்னுடைய திருவாராதனம்; भूयस्या - அதிகமான;*
*भवत् अनुकम्पयैव - உன் திருவருளாலேயே; आकल्पं - கல்பகாலம் வரையிலும் (சாச்வதமாய்); विधूत - போக்கடிக்கப்பட்ட;*
*वैरिपक्षा - எதிரிகளின் பக்ஷத்தையுடையதாயும் (எதிரிகளால் எவ்வித இடரும் இன்றி); स्थिर विभवा - நிலையான பெருமை யுடனும்; भूयात् - இருக்கவேண்டும்.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 4 तत्त्वनवनीतम्

(விளக்கம் – ரஹ. விவ. – 56–65)

# 4 தத்த்வ நவநீதம்

[முன்னுரை : சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்னும் மூன்று தத்வங்களைப்பற்றி அறிய வேண்டிய அம்சங்களை இந்த ரஹஸ்யம் வெண்ணெய் போல் திரட்டிக் கொடுப்பதால் இப்பெயர் பெற்றதெனலாம் .]

விஷயச்சுருக்கம் : வடமொழி வேதம், தமிழ் மறையாகிய நாலாயிர திவ்ய ப்ரபந்தம், மநுஸ்மிருதி முதலிய ஸ்மிருதிகள், பாரத இராமாயணங்களாகிய இதிஹாஸங்கள், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய புராணங்கள் முதலிய அனைத்தும் சேதந, அசேதந ஈச்வர தத்வங்களைப் பற்றித் தெளிவாக விளக்கிக் கூறுகின்றன. சேதநன் இத்தத்வங்களைப் பற்றி நன்கு அறிந்து கொண்டால்தான் மோக்ஷம் பெறுவதற்குச் சாதனத்தைச் செய்ய வாய்ப்பு ஏற்படும். ஆதலின் மோக்ஷம் பெற விரும்புபவன் இம்மூன்று தத்வங்களையும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்.

1 *உயிரு முடலு முடலாக வோங்கித்*
*தயிர்வெண்ணெய் தாரணியோ டுண்டான்–பயிரில்*
*களைபோ லசுரரைக் காய்ந்தான்றன் கையில்*
*வளைபோலெம் மாசிரியர் வாக்கு.* (5)

1 *உயிரும் - சேதநமும்; உடலும் - அசேதநமும்; உடலாக - (தனக்கு) சரீரமாக நிற்க; ஓங்கி - உயர்ந்து; தயிர் வெண்ணெய் - தயிரையும் வெண்ணையையும்; தாரணியோடு உண்டான் - பூமியோடு உண்டவரும்; பயிரில் களை போல் - (ஸாது ஜநங்களாகிய) பயிருக்குக் களை போன்ற; அசுரரை - அஸுரர்களை; காயந்தான் தன் - கொன்ற வருமான பகவானுடைய; கையில் வளைபோல் - கையில் (அணிந்திருக்கும்) வளைபோல் அல்லது (தரிக்கும்) சங்கம் போல்; எம் ஆசிரியர் வாக்கு - எம்முடைய ஆசார்யர்களின் ஸூக்திகள் (ப்ரகாசிக்கின்றன).*

[S1] संस्कृत-द्राविड-श्रुति-स्मृति-इतिहास-पुराणங்களில் சொல்லுகிற तत्त्वज्ञानपूर्वकமாக मोक्षोपाय-अनुष्ठानம் வேண்டுமாகையாலே முமுக்ஷுவுக்கு[a] விசேஷித்து[b] அறியவேண்டும் சித்[c]-அசித்[d]-ஈச்வர - தத்வங்களை भोक्ता[e]வென்றும் भोग्य[f]மென்றும் प्रेरिता[g]வென்றும் உபநிஷத்துச் சொல்லிற்று.

[S2] भोक्ताவாகையாவது - भोगத்தையுடையவனுகை. இது ஸர்வேச்வரனுக்கும் பொதுவாயிருக்க, அவனை प्रेरिताவென்று பிரியச் சொல்லுகையாலே सर्वप्रेरकत्व[h]மென்றிக்கே पराधीन भोग[i]னுன ஜீவனை இங்கு भोक्ताவென்கிறது. 'अधिष्ठानं तथा कर्ता[1]' என்கிறவிடத்திலே कर्तृशब्दமும் पराधीनकर्ता[j]வைச் சொல்லுகிறது. चित्-अचित्-ईश्वरர்களென்னும்போது चित् शब्दமும் பராதீநசேதந

---

a - மோக்ஷத்தை விரும்புமவன்; b - முக்கியமாக; c - சேதநன்; d - அசேதநம்; e - அநுபவிப்பவன்; f - அநுபவிக்கப்படுமது; g - ஏவுபவன்; h - எல்லோரையும் ஏவும் தன்மை; i - பகவானுல் வரும் போகத்தையுடையவன்; j - பகவானுல் செயலாற்றும் திறம் பெற்றவன்

[1] अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
विविधा च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥

(கீதை 18-15) : ஸகலகர்மங்களிலும் பின்வரும் ஐந்தும் காரணங்களாகும். அவையாவன – (1) பூதங்களின் சேர்க்கையாகிய சரீரம். (2) ஜீவாத்மா (3) மனமும், வெவ்வேறு செயலைச் செய்யவல்ல வாக்கு கை முதலிய ஐந்து கர்மேந்த்ரியங்களும். (4) சரீரத்தையும் இந்த்ரியங்களை தரிப்பதாய் ப்ராணன் – அபாநன் முதலிய ஐவகைப் பிரிவு பெற்றதான வாயுவின் வெவ்வேறு செயல்கள். (5) இவற்றுள் முக்கிய காரணமாய் ஸர்வாந்தர்யாமியாய் ஐந்தாமவனுன பரமாத்மா.

S1. - முமுக்ஷு அறிய வேண்டிய சேதநம், அசேதநம், ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களை முறையே போக்தா போக்யம் ப்ரேரிதா போக்யம் என்று உபநிஷத்து கூறுதல்

S2. - ஜீவனுடைய போக்த்ருத்வம் - கர்த்ருத்வம் - சேதநத்வம் பற்றிய விளக்கம். ( ரஹஸ்யார்த்த விவரணத்தில் பொருள் காண்க)

விஷயம். `इच्छात एव तव विश्वपदार्थसत्ता[1]' இத்யாதிகளிற்படியே ஜீவனுடைய ஜ்ஞாந - ஆநந்த - ஸ்வரூபாதிகளும் பராதீநங்களாயிறே இருப்பன.

[S1] இஜ்ஜீவவர்க்கத்தில் बीजाङ्कुर[a] ந்யாயத்தாலே அநாதியான अपराध ப்ரவாஹமடியாக முடிவில் பெரும்பாழான சிறைக் கூடத்திலே[b] முப்பிரியான ஸத்த்வாதி குணங்களாலே கட்டுண்டு கழல விரகற்றுக்[c] கிடக்கிறவர்கள் बद्धர்கள். இவர்களிலே மோக்ஷ சாஸ்த்ரங்களிற் சொல்லுகிறதொரு விரகாலே[d] `मोक्षयिष्यामि' என்னும்படி முனிவு[e] தீர்ந்து நித்ய ரோடொக்க முகப்பே[f] கூவிப் பணிகொள்ளப் பெற்றவர்கள் முக்தர்கள். நித்ய பகவதநுபவத்தாலே நித்ய கைங்கர்யபரரான சேஷ சேஷாசநாதிகள்[g] நித்யர்கள்.

भोग्यமென்பது அநுभाव्य[h]மென்கிறபடி. இது ஜீவ - ஈச்வரர்களுக்கும் பொதுவாகையாலே பூர்வ[i] - அபர -

**a** - முளை முதலா, விதை முதலா என்று அறியமுடியாத அநாதி நிலே; **b** - பெரிய பாழ்நிலம் போன்ற ஸம்ஸார மண்டலம்; **c** - வழியின்றி; **d** - உபாயத்தாலே; **e** - எம்பெருமானது சீற்றம்; **f** - எதிரில்; **g** - விஷ்வக்ஸேநர் முதலியவர்; **h** - அநுபவிக்கப்படுவது; **i** - முந்திய, பிந்திய

[1] इच्छात एव तव विश्वपदार्थसत्ता नित्यं प्रियास्तव तु केचन ते हि नित्याः।
नित्यं त्वदेकपरतन्त्रनिजस्वरूपा भावत्कमङ्गलगुणा हि निदर्शनं नः ॥

(வைகுண்டஸ்த 36) : எம்பெருமானே! உன் ஸங்கல்பத்தாலேயே எல்லா வஸ்துக்களுக்கும் இருப்பு இருக்கிறது. அவற்றுள் சில உனக்கு எப்போதும் பிரியமாயிருக்கின்றன. ஆதலால் அவை நித்யங்கள். எப்பொழுதும் உனக்கு உட்பட்டிருக்கும் ஸ்வபாவதத்தையுடைய உன் நற்குணங்கள் இவ்விஷயத்தில் எங்களுக்கு உதாரணமாய் ஆகின்றன.

[S1] - மூவகை சேதநர்
( ரஹஸ்யார்த்த விவரணத்தில் பொருள் காண்க)

பதங்களிற்சொன்ன भोक्तृत्व[a]மும் நியந்த்ருத்வமும்[b] இல்லாத விஷயத்தை இங்கு போக்கியமென்கிறது. இத்தை अचित्தென்றது ஜ்ஞாநரஹிதமென்றபடி[c]. अचेतनत्वம் கேவல குணங்களுக்கும் தர்மபூதஜ்ஞாநத்துக்கும் பொதுவாகிலும் இங்கு त्रिविध अचेतनமென்று பூர்வார்கள் நிரூபித்தவை[d] த்ரிகுணம் - காலம் - சுத்த ஸத்த்வம் என்கிற த்ரவ்ய விசேஷங்கள்.

த்ரிகுணமாவது[e] - परिमित[f] ஸுகத்துக்கும் துக்கத்துக்கும் மோஹத்துக்கும் விசேஷ காரணங்களான ஸத்த்வ - ரஜஸ் - தமஸ்ஸுக்களாகிற குணங்களுக்கு ஆச்ரயமான[g] த்ரவ்யம். இது கேவல ப்ரக்ருதியென்றும்[h], ப்ரக்ருதி விக்ருதியென்றும்[i], கேவல விக்ருதியென்றும்[j] மூன்று வகையாய் இருபத்திநாலு தத்த்வரூபமாயிருக்கும். இவற்றில் ஸ்வபாவத்தாலும், பஞ்சீகரணாதிகளாலும்[k] தேசகால பேதத்தாலேயுண்டாம் விக்ருதிகளுக்கு[l] எல்லையில்லை.

காலமாவது - जडत्व[m]-विभुत्व[n]ங்களையுடைத்தாய் बालवृद्धादि व्यवस्थैகளுக்கு விசேஷ காரணமான த்ரவ்யம். இது எப்போதும் அவ்வோ வஸ்துக்களுடைய भूत[o] - भविष्यत्[p] - वर्तमान[q] - व्यपदेश[r]ங்களுக்கும் தன் अवच्छेद[s]ங்களாலே நியாமகமாயிருக்கும்[t]. இதற்கு सत्वादिगुणत्रयமுமின்றிக்கே उपाधि[u] விசேஷங்களாலே சீதகாலம்

---

a - அநுபவிக்கும் தன்மை; b - நியமிக்கும் தன்மை; c - அறிவற்றது; d - குறிப்பிட்டவை; e - ப்ரக்ருதி; f - அற்பமான ஸுகம்; g - இருப்பிடம்; h - தான் வேறு ஒன்றின் மாறுபாடாகவன்றித் தான் பலவஸ்துவாக மாறுவது; i - தான் வேறொன்றின் மாறுபாடாகவும் தான் வேறு வஸ்துவாக மாறுபடுவதாகவும் உள்ளது ; j - தான் வேறொன்றின் மாறுபாடாக இருந்து தான் வேறொன்றாக மாறாதது; k - படைத்தலுக்காக ஐந்து பூதங்களுள் ஒன்றைப் பாதியாயும் மற்றநான்கை அரைக்கால், அரைக்காலாகவும் எடுத்து ஒன்றுகூட்டுதல்; l - மாறுபட்ட வஸ்து; m - அறிவற்றமை; n - எங்கும் படர்ந்து இருத்தல்; o - இறந்த காலம்; p - எதிர்காலம்; q - நிகழ்காலம்; r - வழங்குதல்; s - நாழிகை, நாள் முதலிய உட்பிரிவுகள்; t - வரையறுத்துத் தருவது; u - வஸ்துக்களின் குணத்தைப் பொறுத்ததால்

உஷ்ணகாலம் என்னுமாப்போலே ஸாத்விக-ராஜஸ-தாமஸாதி கால विभागம் உண்டாகிறது. ब्रह्मदिवसம் முதலாக மநுஷ்ய दिवस-पर्यन्तமாக எங்கும் இது கண்டுகொள்வது. शुद्धसत्त्वத்தில் இப்படிப்பட்ட கால विभागமின்றிக்கே पूर्व-अपरादि-विभागमात्र[a]மேயாயிருக்கும்.

शुद्धसत्त्वமாவது – ரஜஸ்-தமஸ்ஸுக்களின்றிக்கே ப்ராக்ருத-ஸத்த்வ-விலக்ஷண-ஸத்த்வத்துக்கு[b] ஆச்ரயமான த்ரவ்யம். இது सपरिकर[c]ஞன ச்ரிய:பதிக்கு भोग्य[d]-भोगोपकरण[e]-भोगस्थानरूप[f]மாய்க் கொண்டு अनन्ताश्चर्य[g]மாய் हिरण्यगर्भादि स्थानங்களெல்லாம் நரகமாய்த் தோற்றும்படியான ஆநுகூல்ய-ப்ரகர்ஷத்தாலே[h] பரமபத சப்த वाच्यமாயிருக்கும்.

இப்படி மூன்று வகையான சேதந-அசேதநங்களுடைய ஸ்வரூப-ஸ்த்திதி-ப்ரவ்ருத்திகள் மூன்றும் தானிட்ட வழக்காம்படி நிற்கிற ச்ரிய:பதியை प्रेरिताவென்கிறது. இவன் மூன்று ஸம்பந்த நியமத்தாலே[i] ஸர்வசரீரியாய்[j], மூன்று வ்யாபார-விசேஷங்களாலே[k] ஸர்வகார்யங்களுக்கும் ஸர்வகாரணமாய்[l], மூன்று காலத்திலும்[m] ஏகரூப-ஸ்வரூப- ரூபங்களையுடையனாய், மூன்று ஸ்தாநத்திலே[n] நித்யவாஸத்தை யுடையனாய், மூன்று வகையான அர்ச்சாவதாரத்தை யுடையனாய்[o], மூன்று

---

a - முன்-பின் முதலிய பிரிவு மட்டுமே; b - ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள; c - பரிவாரம் முதலியவற்றுடன் கூடிய; d - அநுபவிக்கப்படும் வஸ்து; e - அநுபவிக்கச் சாதனம் ; f - அநுபவிக்கப் பாங்கான இடம்; g - எல்லையற்ற ஆச்சரியம்; h - அநுகூலத் தன்மையின் மிகுதி; i - எப்பொழுதும் தாங்கி நிற்றல், ஸங்கல்பத்தால் நியமித்தல், அதன் பலனைப் பெறுதல்; j - எல்லாவற்றுக்கும் ஆத்மாவாய்; k - சேதந அசேதநங்களைச் சரீரமாகக் கொள்ளுதல், பல பொருள்களாக ஆவதாய் ஸங்கல்பித்தல், பல பொருள்களாக வடிவு கொள்ளல்; l - உபாதாந காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ; m - இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம்; n - ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், ஸூர்ய மண்டலம்; o - ஸ்வயம்வ்யக்தம், ஸைத்தம், மாநுஷம்

யுகத்திலே[a] விசேஷித்து ப்ரகாசிக்குமவனாய், மூன்று குணயுகத் தாலும்[b] त्रियुग[c]னாய், மூன்று வ்யூஹங்களாலே[d] மூவிரண்டு ப்ரகாரங்களைப்[e] பண்ணுமவனாய், மூன்று புருஷார்த்தங் களுக்கும்[f] மூலமாய், மூன்று ப்ரமாணங்களாலும்[g] प्रतिषेध[h]மில்லாதவனாய், மூன்று மாத்திரை யான ஒற்றை எழுத்துக்கு[i] मुख्यार्थमாய், மூன்று ரஹஸ்யங்களில் சிக்ஷையாலே[j] விசேஷித்து அறியப்படும். ப்ரஹ்மத்துக்கு உபநிஷத்துக்களிற் சொன்ன त्रैविध्य[k]ம், भोक्तृ-विशिष्ट-रूप[l]த்தாலும் भोग्य-विशिष्ट-रूप[m]த்தாலும் प्रेरकत्व-विशिष्ट-रूप[n]த்தாலும் उपपन्न[o]ம். தன்னையும்[p] प्रेरिता[q]வையும் பிரிய அறிந்து பற்றினவனுக்கு அவன் ப்ரஸா தத்தாலே[r] மோக்ஷமென்றிறே இங்கு ஓதுகிறது.

இப்படியே पञ्चदश-अध्यायादि[s]களிற்படியே பர - அவர - தத்த்வ-விவேகம் பிறந்தால்[t] 'ध्येयो नारायणः सदा[1]' என்றும் 'स्मर्तव्यः

a - கிருதயுகம், திரேதாயுகம், த்வாபரயுகம் ; b - மூவிரண்டு(6) குணங்கள். ஜ்ஞாநம் – பலம், ஐச்வர்யம் – வீர்யம், சக்தி – தேஜஸ்; c - மூன்று இரட் டைகளையுடையவன்; d - ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன்; e - உலகை அழித்தல் - சாஸ்த்ரங்களைப் படைத்தல், உலகைப் படைத்தல் - தர்மத்தை நடத்தல், காத்தல் - அறிவை உண்டாக்குதல் ; f - ஐச்வர்யம், கைவல்யம், மோக்ஷம்; g - ப்ரத்யக்ஷம், அநுமாநம், சப்தம் ; h - மறுப்பு இல்லாதவன்; i - ப்ரணவம்; j - திருமந்த்ரம், த்வயம், சரம சுலோகம்; k - மூவகைப்பட்டமை; l - அநுபவிப் பவர்களான ஜீவர்களுடன் கூடியிருத்தல்; m - அநுபவிக்கப்படுமதான அசேதநத்திலுட் புகுந்து நிற்றல்; n - ஏவுமவனாயிருத்தல்; o - பொருத்தமானது; p - ஜீவனை தன்னையும்; q - ஏவுகின்ற பரமாத்மாவையும்; r - அநுக்ர ஹத்தாலே; s - கீதையில் 15வது அத்யாயம்; t - மேம்பட்டதும் கீழ்பட் டவையுமான தத்வங்களைப் பற்றிய தெளிவு

[1] आलोड्य सर्व शास्त्राणि विचार्य च पुनः पुनः ।
इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणः सदा ॥

(பார ஆநு 178-11) : எல்லாச் சாஸ்த்ரங்களையும் பர்யாலோசனை செய்து யுக்திகளைக் கொண்டு அடிக்கடி ஆராய்ந்ததில் நாராயணனே எப்பொழுதும் தியானம் செய்யத் தக்கவன் என்பதாகிய இது ஒன்றுதான் நன்றாய் நிச்சயிக்கப்பட்ட விஷயம்.

सततं विष्णु:[1] என்றும் துஞ்சும்போதும் விடாது தொடர்[2] என்றும் சொல்லுகிற सदा-अनुसन्धानम் कृत्यशेष[a] முடையவனுக்கு उपाय-उपकार-विधै[b] யாலே வந்த भोगம். कृतकृत्य[c] னுக்கும் कैङ्कर्य-उपकार विधैயாலே வந்த भोगம். भोग्यனாய் நித்யஸ்ரீயான சேஷி समाधिक दरिद्र[d] னைற்போலே भोगமும் नि:समाभ्यधिक[e] மாம்.

---

**a** - இனி ப்ரபத்தியைச் செய்யப்போகிறவனுக்கு; **b** - ப்ரபத்திக்கு உதவி புரியும் முறையால்; **c** - ப்ரபத்தியைச் செய்து முடித்தவன்; **d** - ஒத்தவனும் மேம்பட்டவனும் இல்லாதவன்; **e** - ஒத்ததும் மேம்பட்டதும் இல்லாதது

[1] *स्मर्तव्य: सततं विष्णुर्विस्मर्तव्यो न जातुचित् ।*
सर्वे विधिनिषेधा: स्युरेतयोरेव किङ्करा: ॥

(ஹரி வம் 132-14) : விஷ்ணுவை எப்பொழுதும் தியானிக்கவேண்டும். ஒரு போதும் அவனை மறக்கக் கூடாது. சாஸ்த்திரங்களில் சொல்லிய விதி நிஷேதங்களெல்லாம் கீழே சொன்ன இரண்டையே விரிவாய்ச் சொல்லுகின்றன.

[2] *நெஞ்சமேநல்லை நல்லைஉன்னைப்பெற்றால்,*
*என் செய்வோம், இனியென்னகுறைவினம்,*
*மைந்தனைமலராள் மணவாளனைத்*
*துஞ்சும்போதும் விடாதுதொடர்கண்டாய்.*

(திருவாய் 1-10-4 ) : என் மனமே! நீ மிகவும் நல்லவன். உன்னைப் பெற்றிருக்கும் போது நான் எந்த காரியத்தைத்தான் ஸாதிக்க முடியாது? இனி எனக்கு என்ன குறை? பிராட்டியுடன் கூடிய எம்பெருமானை இறக்கும் போதும் விடாது அவசியம் நீ பற்றவேண்டும்.

*அலையற்ற வாரமுதக்கட லக்கடலுண்டமுகில்*
*விலையற்ற நன்மணிவெற்பு வெயில்நில வோங்குபகல்*
*துலையுற்றனவென்பர் தூமறைசூடுந் துழாய்முடியாற்கு*
*இலையொத்தன அவன் பாதம் பணிந்தவர்க் கெண்ணுதற்கே.*
*(6)*

2 सत्संप्रदायदध्नः समुद्धृतं वेङ्कटेशेन ।
तत्त्वनवनीतमेतत् तनुते नवनीतनर्तकप्रीतिम् ॥

---

*தூமறை சூடும் - பரிசுத்தமான வேதத்தால் துதிக்கப்படுகிறவனும்; துழாய் முடியார்க்கு - திருத்துழாயைத் திருமுடியில் அணிந்தவருமான பகவானுக்கு; அலை அற்ற ஆர் அமுதக் கடல் - அலையில்லாத நிறைந்த அமுதமயமான கடலும்; அக்கடலுண்ட முகில் - அந்தக் கடலை (முழுதும்) பருகிய மேகமும்; விலை அற்ற நல்மணி வெற்பு - விலை மதிக்க முடியாத சிறந்த நீல ரத்ன மலையும்; வெயில் நிலவு ஓங்கு பகல் - வெயிலும் நிலவும் சேர்ந்து ப்ரகாசிக்கும் பகலும்; துலையுற்றன என்பர் - உபமானமாயின என்று (கவிகள்) கூறுவர்; (ஆனால்) அவன் பாதம் பணிந்தவர்க்கு - அவ்வெம்பெருமானுடைய திருவடிகளைச் சரணமடைந்த தொண்டர்க்கு ; ஒத்தன - ஒத்த பொருள்கள்; எண்ணுதற்கே இ(ல்)லை - (மனத்தால்) நினைப்பதற்கும் இல்லை (பாகவதர்கள் எம்பெருமானிலும் சிறந்தவர்கள் என்னலாயிற்று).*

*सत् संप्रदाय दध्नः - சிறந்தஸம்ப்ரதாயமாகிற தயிரிலிருந்து; वेङ्कटेशेन - வேங்கடேசன் என்ற பெயருடைய ஸ்ரீ தேசிகனாலே; समुध्दृतं - கடைந்து எடுக்கப்பட்ட; एतत् - இந்த; तत्व नवनीतं - தத்வங்களைப்பற்றிய வெண்ணெய் போன்ற ஸாரமான அர்த்தங்களைக் கொண்ட தத்துவ நவநீதம் என்னும் ரஹஸ்யம்; नवनीत नर्तक प्रीतिं - வெண்ணெய்க்காகக் கூத்தாடுகின்ற கண்ணனுக்கு உகப்பை; तनुते - தருகிறது.*

1 वरद विरचय त्वं वारिताशेषदोषां
पुनरुपचितपुण्यां भूषितां पुण्योट्या ।
सितमुदितमनोभिस्तावकैर्नित्यसेव्यां
हतरिपुजनयोगां हस्तिधाम्नः समृद्धिम् ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु **तत्त्वनवनीतं** संपूर्णम् ।

**தத்த்வ நவநீதம் முற்றும்.**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

*वरद - பேரருளாளனே!; वारित अशेष दोषां - போக்கடிக்கப்பட்ட எல்லாக் குற்றங்களையும் உடையதாயும்; पुन: - மேலும்; उपचित पुण्यां - மேன்மேலும் புண்ணியம் வளர்வதாயும்; पुण्यकोट्या - புண்ணியகோடி என்ற விமானத்தால்; भूषितां - அலங்கரிக்கப்பட்டதாயும்; सित मुदित मनोभि: - ஸத்துவ குணமும், மகிழ்ச்சியும் நிறைந்த மனதையுடைய; तावकै: - உன்னடியார்களால்; नित्य सेव्यां - எப்பொழுதும் வணங்கி வழிபடத்தக்கதாயும்; हत रिपुजन योगां - போக்கடிக்கப் பட்ட எதிரிகளின் ஸம்பந்தத்தையுடைய தாயும் உள்ள; हस्ति धाम्न: समृद्धिं - திருவத்திகிரியின் செழுமையை; त्वं - நீயே; विरचय - செய்தருளவேண்டும்.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 5 रहस्यनवनीतम्

(விளக்கம் – ரஹ. விவ. – 66–73)

# 5 ரஹஸ்ய நவநீதம்

[முன்னுரை : திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய ரஹஸ்யங்கள் மூன்றின் ஸாரார்த்தங்களை வெண்ணெய் போல திரட்டித்தருவதால் இந்த ரஹஸ்யத்துக்கு இப்பெயர் வந்தது.]

1 *உத்தி திகழுமுரை மூன்றின் மும்மூன்றும்*
*சித்தமுணரத் தெளிவித்தார் – முத்திதரும்*
*மூல மறையின் முடிசேர் முகில்வண்ணன்*
*சீல மறிவார் சிலர்.* (7)

सकलवेद*ஸாரமான திருமந்திரத்தில் மூன்று* वाक्य*ங்களில்* * *அடைவே*[a] *ஸ்வரூபஸமர்ப்பணமும்*[b] भर *ஸமர்ப்பணமும்*[c] फल *ஸமர்ப்பணமும்*[d] अनुसंधेय*ம்.*

---

a - *வரிசையாக;* b - *ஜீவன் தன்னை ஸமர்ப்பித்தல்;* c - *காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தல்;* d - *அதனால் வரும் பலனை ஸமர்ப்பித்தல்*

* திருமந்திரத்தின் மூன்று அர்த்தங்கள் :- *1. எம்பெருமானிடம் நம் ஸ்வரூபத்தை ஸமர்ப்பித்தல் 2. காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தல் 3. பலனை ஸமர்ப்பித்தல்.*

த்வயத்தின் மூன்று அர்த்தங்கள் :- *1. உபாயம் 2. பலன் 3. பிரோதி ஒழிகை*

சரமசுலோகத்தின் மூன்று அர்த்தங்கள் :- *1. சரணமடைபவன் செய்யும் காரியம் 2. அவனுக்கு எம்பெருமான் செய்யும் காரியம் 3. சரணமடைந்தபின் சேதநன் இருக்கவேண்டிய முறை*

1 *முத்தி தரும் - மோக்ஷத்தைக் கொடுக்கவல்லவரும்; மூல மறையின் முடிசேர் - (ஜ்ஞானத்திற்குக்) காரணமான வேதத்தின் அந்தத்தில் புகழப்படுகிறவனும் ; முகில்வண்ணன் - மேகம் போன்ற நிறமுடையவனுமான பகவானுடைய; சீலம் - குணங்களை; அறிவார் சிலர் - அறிந்த சில ஆசார்யர்கள்; உத்தி திகழும் - உரைகளுள் சிறந்த; உரைமூன்றின் - ரஹஸ்யங்கள் மூன்றினுடைய; மும்மூன்றும் - ஒன்பது அர்த்தங்களையும்; சித்தம் உணர - (நம்) மனம் அறியும்படி ; தெளிவித்தார் - மயக்கமற உபதேசித்தனர்.*

இங்கு ஸ்வரூப ஸமர்ப்பணமாவது – `सर्वोपाधिविनिर्मुक्तं क्षेत्रज्ञं ब्रह्मणि न्यसेत्[1]' என்கிறபடியே वपुरादि[a] களில் வேறுபட்டு ஜ்ஞாந-ஆநந்த - ஸ்வரூபனாய் ஜ்ஞாந - ஆநந்த - गुणकனாய் ஸ்வயம்ப்ரகாசனாய் स्वस्मै பாஸமாநனாய்[b] அணுவான நான் सर्वजगदेककारणभूतனாய் ஸர்வரக்ஷகனாய் ஸர்வசேஷியான श्रियः पतिயைப் பற்ற `நானுமுனக்குப்பழவடியேன்[2]' `கண்ணபுர மொன்றுடையானுக்கு அடியேனொருவர்க் குரியேனோ[21*1]' என்கிறபடியே नित्य-निरुपाधिक-शेषभूत[c]னென்று அநுஸந்திக்கை. இஸ்ஸம்பந்த - அநுஸந்தாநம் अर्थपञ्चक-அநுஸந்தாநத்திற்கு அஞ்சுருவாணியாய்[d] நிற்கும்.

**a** - சரீரம் முதலியன; **b** - தன் பயனுக்காகவே தன்னைப் பற்றிய பேச்சு முதலியன செய்பவன்; **c** - ஒரு காரணமின்றி இயற்கையாகவே எப்போதும் அடியன்; **d** - அடிப்படையில் தாங்கி நிற்கும் ஆணி

1 सर्वोपाधिविनिर्मुक्तं क्षेत्रज्ञं ब्रह्मणि न्यसेत् ।
एतद्ध्यानं च योगश्च शेषोऽन्यो ग्रन्थविस्तरः ॥

(தக்ஷஸ்ம் 7-21) : அவித்யை முதலிய எல்லாத் தோஷங்களும் நீங்கிய ஆத்மஸ்வரூபத்தை ப்ரஹ்மத்தினிடம் ஸமர்ப்பிக்க வேண்டும். இதுவே பக்தியோகமும் அதற்கு அங்கமான கர்ம யோகமும் ஆகும். மற்றவை எல்லாம் கிரந்தத்தைப் பெரிதாக்குவனவே.

2 அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் *அபிமான துங்கன்
செல்வனைப்போலத் திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்*
நல்வகையால்நமோநாராயணவென்று நாமம்பல பரவி* பல்வகையாலும்
பவித்திரனே! உன்னைப் பல்லாண்டு கூறுவனே .

(பெரியாழ் திரு 1-1-11 ) : எம்பெருமானே! திருக்கோட்டியூருக்குத் தலைவராய் ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணியான செல்வ நம்பியைப் போலவே அடியேனும் உனக்குப் பழமையான தாஸன். நான் நலம் பெறுவதற்காகத் திருமந்திரத்தையும் உன் பல்வேறு திருநாமங்களையும் அநுஸந்தித்து உனக்கு மங்களாசாஸநம் செய்வேன்.

भर ஸமர்ப்பணமாவது- 'आत्मात्मीयभरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते'[1] என்கிறபடியே நித்யசேஷभूதனாய் நித்யபரதந்த்ரனுமாய் अभिमतसिद्धि[a]க்குப் புகலொன்றில்லாவடியேனை இனியொரு कर्तव्य[b]த்தில் மூட்டாதே அடைக்கலமாகக் கொண்டு ரக்ஷித் தருளவேண்டும்மென்கை.

फல ஸமர்ப்பணமாவது -'तेन संरक्ष्यमाणस्य फले स्वाम्य वियुक्तता[2]' இத்யாதிகளிற்படியே களையற்ற ஸூரிதுல்ய கைங் கர்யத்துக்கு ஸ்வரூப யோக்யனை[c] ஆராவன்பிலடியேனுக்கு[d] उपाधि[e]யடியாக வந்த அயோக்யதைகளை எல்லாம் கழித்து வழுவிலாவடிமை கொண்டு வாழ்வித்தருளவேண்டுமென்கை.

இப்படி சேஷசேஷி-भाவத்தாலே இருவரையும் உறவாக்கி, சேஷசேஷி–க்ருத்யத்தாலே இருவரையும் வணக்கி, சேஷ சேஷி-फலத்தாலே இருவரையும் ஏகரஸராக்குகிறது[f] திரு மந்திரம். இதிலே சாரீரக–க்ரமத்தாலே[g] தோற்றின

a - விரும்பிய பலன் கிடைப்பதற்கு; b - செய்யவேண்டிய ஒன்றில் ; c - இயற்கைத் தகுதியுடையனை; d - அடங்காத அன்புடையவன்; e - சரீரம், இந்திரியம், கர்மம் முதலியன காரணமாக ; f - ஸமமான ஆநந்தத்தையுடையவர்; g - ஸ்ரீபாஷ்யத்தில் உள்ள முறைப்படி ;

1 (லக்ஷ்மீ தந்த்ரம் 17-79) : ஆத்மா, அதைச் சேர்ந்தவை ஆகிய இவற்றைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பது தான் ஆத்மஸமர்ப்பணமெனப்படுகின்றது.

2 तेन संरक्ष्यमानस्य फले स्वाम्यवियुक्तता ।
केशवार्पणपर्यन्ता ह्यात्मनिक्षेप उच्यते ॥

(லக்ஷ்மீ தந்த்ரம் 17-73) : எம்பெருமானாலே ரக்ஷிக்கப்படும் ஆத்மாவைப் பலனிலும் தனக்கு உரிமையில்லை என்ற துணிவுடன் எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதே ஆத்ம நிக்ஷேபம் எனப்படும்.

பரதத்த்வத்தையும்[a] பரமஹிதத்தையும்[b] பரமபுருஷார்த்தத்தையும்[c] ஸ்ரூப–அநுரூப–விசேஷண–விசிஷ்டமாக வெளியிடுகிற சரணாகதிமந்த்ரத்தில்[d] மூன்று வாக்யங்களில் அடைவே உபாய–விசேஷமும் புருஷார்த்த விசேஷமும் விரோதி–நிவ்ருத்தி–விசேஷமும் सिद्ध–साध्य–रूपத்தாலே இருவகையாகச் சேர்ந்து நிற்கும்படி अनुसंधेयம்.

எங்ஙனேயென்னில், உபாய விசேஷமாவது – ஸ்ரீமானான நாராயணன் अभिमत सिद्धि[e]க்கு வ்யாஜ – மாத்ர – ஸாபேக்ஷமாய்[f] तत्प्रवर्तक[g]முமாய் व्यवधान[h]மற்று प्रधानமுமான सिद्धोपाय[i]ம். अनन्यसाध्ये[175*2] அகலகில்லேன்[23*1] இத்யாதிகளிற் சொல்லுகிற சரணாகதி அவனுடைய வசீகரமான साध्योपाय[j]ம்

புருஷார்த்த விசேஷமாவது – தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே என்கிறபடியே தன்னோடும் தான் பண்ணுகிற கைங்கர்யத்தோடும் துவக்கற்றுக் 'கண்டு கேட்டுற்று'[1]

a - பரம புருஷன்; b - சிறந்த உபாயம், ப்ரபத்தி; c - மோக்ஷத்தில் பெறும் கைங்கர்யம் ; d - த்வயம் ; e - விரும்பிய பலனைப் பெறுதல்; f - சிறிய உபாயத்தை மட்டும் எதிர்பார்ப்பதாய்; g - அதைச் செய்விப்பதுமாய்; h - இடையில் வேறொன்றின்றி; i - முன்பே உள்ள உபாயம்; j - சேதநன் செய்யவேண்டடிய உபாயம்;

[1] கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம் * தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம் *
ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்ப*
கண்டசதிர்கண்டொழிந்தேனடைந்தேனுன் திருவடியே.

(திருவாய் 4-9-10 ) : கண்ணாலே பார்த்து, காதாலே கேட்டு, த்வகிந்த்ரியத்தால் தொட்டு, மூக்காலே முகர்ந்து நாவினால் சுவைத்து, இப்படி உழலுகின்ற இந்த்ரியங்களால் வரும் சுகத்தையும், இந்த்ரியங்களால் அறியமுடியாத அவைகளால் உண்டாகும் சுகம் போல் அளவுள்ளதாய் இல்லாத ஆத்மானுபவத்தாலுண்டாகும் சிறிய சுகத்தையும், அழகிய முன்கைவளையல்களையுடைய பிராட்டியும் நாராயணனாகிய நீயுமாக வீற்றிருக்கும் கோலத்தை ஸேவித்தபின் விட்டொழிந்தேன். நேரில் உன் திருவடிகளை ஆச்ரயித்தேன்.

இத்யாதிகளிற்படியே நிரதிசய भोग्य[a] மான नित्यसिद्धप्राप्य[b] மும் அதனுடைய परिपूर्ण-अनुभव-परीवाह[c] மாய்க் கொண்டு साध्य[d] மான சேஷி உகந்த கைங்கர்யமும்.

விரோதி–நிவ்ருத்தி–விசேஷமாவது– 'தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே'[1] என்கிறபடியே தன்னோடும் தான் பண்ணுகிற கைங்கர்யத்தோடும் துவக்கற்று ஸர்வ-அவித்யா-நிவ்ருத்தி பிறக்கை. இப்படிப்பட்ட सिद्ध-साध्य ங்களான புருஷார்த்த ஹேதுக்களையும்[e] ஸித்த ஸாத்ய ங்களான புருஷார்த்த ங்களையும்[f] சேர்த்து साध्य-புருஷார்த்தத்தில்[g] இருவகையான[h] களையற்றபடியையும் காட்டுகிறது த்வயம். இதில் पूर्व-उत्तर-खण्ड[i] ங்களுக்கு 'स भ्रातुश्चरणौ गाढं'[2], 'भवांस्तु सह

---

a - இதற்கு மேல் இனியது இல்லையென்னும்படி இனிய; b - எப்பொழுதும் உள்ள பலன் (ப்ரஹ்மம்) ; c - போக்கு வீடாய்; d - சேதநன் செய்யவேண்டிய ; e - பலனுக்குக் காரணமான உபாயம்; f - பலன்; g - செய்யவேண்டிய பலனான கைங்கர்யம்; h - நான் செய்கிறேன், என் பயனுக்காகச் செய்கிறேன் என்ற இரு குற்றங்கள்; i - முதற்பகுதி பிற்பகுதி

1 *எனக்கேயாட்செய் யெக்காலத்துமென்று என்*
*மனக்கேவந்திடைவீடின்றிமன்னித்*
*தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே*
*எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே.*

(திருவாய் 2-9-4 ) : 'எல்லாக் காலத்திலும் பிற தெய்வங்களை விட்டு எனக்கே கைங்கர்யம் செய்' என்று எம்பெருமான் தன் திருவாயால் அருளிச்செய்து என் மனத்திலே கணப்பொழுதும் விடாமல் வந்து நிலையாய் நின்று தன் பயனுக்காகவே என்னை அடிமை கொள்வதுவே எனக்கு ஏற்ற கண்ணனை யான் விரும்பிக் கேட்கும் பயனாகும்.

2 *स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः ।*
*सीतामुवाचातियशा राघवं च महाव्रतम् ॥*

(ராமா 2-31-2) : மிக்க புகழுடைய அந்த லக்ஷ்மணன் தன் தமையனை இராமபிரானுடைய திருவடிகளை இறுகப்பிடித்து வணங்கி, சிறந்த ஸங்கல்பத்தையுடைய இராமனையும் ஸீதையையும் குறித்துச் சொன்னான்.

वैदेह्या[1]' என்கிற இரண்டு ச்லோகங்களும் சேர்த்தியாகின்றன.

இவற்றில் தோன்றின பரமஹிதத்தினுடைய[a] अधिकार[b]-नैरपेक्ष्य[c]- स्वरूप[d] -प्रभाव[e]ங்களையும் வெளியிட்டுக் கொண்டு உபப்ரும்ஹணமான[f] चरमश्लोकத்தில் மூன்று வாக்யங்களில் அடைவே अधिकारिकृत्य[g]மும் शरण्यकृत्य[h]மும் कृतकृत्य[i]னுடைய उत्तरकृत्य[j]மும் अनुसंधेयம்.

अधिकारिकृत्यமாவது– '*மேம்பொருள்*[2]' இத்யாதிகளிற்படியே

a - *சிறந்த உபாயம் – சரணாகதி* ; b - *தகுதி* ; c - வேறொன்றையும் எதிர்பாராமை; d - உருவம்; e - பெருமை; f - விளக்கி வெளியிடுவது; g - சேதநன் செயல்; h - எம்பெருமான் செயல்; i - ப்ரபத்தியைச் செய்து முடித்தவன் j - ப்ரபத்திக்குப் பின் சேதநன் செய்ய வேண்டிய செயல்

1 *भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।*
*अहं सर्वं करिष्यामि जाग्रत: स्वपतश्च ते ॥*

(*ராமா* 2-31-27) : தேவரீர் ஸீதையுடன் மலைத்தாழ்வரைகளில் விளையாடப் போகிறீர். தேவரீர் விழித்திருக்கும் போதும், உறங்கும் போதும் எல்லாக் கைங்கர்யங்களையும் நான் (லக்ஷ்மணன்) செய்யப்போகின்றேன்.

2 *மேம்பொருள்போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து **
*ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி **
*காம்பறத்தலை சிரைத்துன் கடைத்தலையிருந்து வாழும் **
*சோம்பரைஉகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே !*

(*திருமாலை* 38 ) : எம்பெருமானே! உலக போகங்களில் அடியோடு ஆசையை விட்டு ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து தம் ஸ்வரூபத்துக்கு ஏற்ற மற்ற விஷயங்களையும் அறிந்துகொண்டு ஐந்து இந்திரியங்களையும் வெளியே செல்லாமல் அடங்கி அஹங்கார – மமகாரங்களை விட்டு உன் திருவாசலில் காவலராக நின்று வாழும் சோம்பேறிகளிடம் உனக்கு எத்தகைய உகப்பு! (வெளிவிஷயங்களில் ஈடுபடாமல் எம்பெருமானிடமே ஈடுபட்டவர்கள் சோம்பர் எனப்பட்டனர்.)

विवेकादियुक्तனைக் கொண்டு 'விடைக்குலங்கள்'[1] என்கிற பாட்டின்படியே ஸநாதந धर्म[a]மான ஸர்வலோகசரண்யனுக்கு விண்ணப்பம் செய்கை.

शरण्यकृत्यமாவது 'தமர்கள் கூட்ட வல்வினையை நாசஞ் செய்யுஞ் சதிர்மூர்த்தி'[2] என்கிறபடியே சரணாகதி விரோதிகளை யெல்லாம் கழிக்கைக்கு ஸர்வசேஷியான தான் தட்டுமாற்றி[b]த் தாழ நின்று, ஏற்றின சுமையையெல்லாம் ஏறிட்டுக் கொண்டு இவனைத் தன்னளவாக[c] உயர எடுக்கை.

a - ஸித்தோபாயம்; b - தேரில் கண்ணன் தான் அமரவேண்டிய இடத்தில் அருச்சுனனையும் அவன் அமரவேண்டிய இடத்தில் தானுமாக இடத்தை மாற்றிக் கொண்டு தான் பாகனாய்த் தாழ்வாக நின்று ; c - தனக்குச் சமமாக

1 *விடைக்குலங்களேழடர்ந்து வென்றிவேற்கண் மாதரார் **
*கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய! வேலைநீர் **
*படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்து நின் தனக்கு **
*அடைக்கலம்புகுந்த என்னை யஞ்சலென்னவேண்டுமே.*

(திருச்சந்த 92 ) : கடலைப் படைத்தும் அதில் அணைகட்டியும் அதில் பள்ளிகொண்டும் அதைக் கடைந்தும் ஏழு காளைகளை அடக்கி நப்பின்னையை அணைந்தும் விளங்கும் கண்ணா! உன்னிடம் சரணமடைந்த எனக்கு 'அஞ்சாதே' என்று ஒரு சொல் மட்டும் அருளவேண்டும்.

2 *தமர்கள் கூட்டவல்வினையை நாசஞ்செய்யும் சதுர்மூர்த்தி,*
*அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன்,*
*குமரன்கோலவைங்கணைவேள்தாதை கோதிலடியார்தம்,*
*தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே.*

(திருவாய் 8-10-9 ) : அடியார்களின் கூட்டத்தின் வலிய கர்மங்களை அழிக்கும் சாதுரியமுடையவனாய் பஞ்சாயுதங்களை ஏந்தி நிறபவனான எம்பெருமானுடைய அடியார்களுக்கு அடியார் குழுவில் சேருதலாகிய சாதுரியமே புகலற்ற எனக்கு வாய்க்கவேண்டும்.

उत्तरकृत्यமாவது – '*அத்தனாகி அன்னையாகி*'[1] என்கிற பாட்டின்படியே மநஸ்ஸைத் தேற்றி '*சிற்றஞ்சிறுகாலே*'[2] என்கிற பாட்டின்படியே ஸர்வப்ரகாரத்தாலும் அநந்யனாய்[a] ஸ்வயம்ப்ரயோஜந – சாஸ்த்ரீய – கைங்கர்யपरனாகை. இப்படியால் ஓர் अधिकारियை शरण्यन் ஹிததமத்திலே[b] மூட்டும்படியையும் இவனுக்கு ப்ரியதமத்தைப்[c] பண்ணும்படியையும் शरणागतன் वीतशोक[d]னாய் ஸர்வசேஷிக்கு ப்ரியதமங்களான

a - வேறு தெய்வத்தையும் பலனையும் நாடாதவனாய்; b - ப்ரபத்தியில்;
c - ஸகல பாபங்களையும் போக்கி மோக்ஷம் தருதல்; d - துயரம் நீங்கியவனாய் ;

1 *அத்தனாகியன்னையாகி யாளுமெம்பிரானுமாய்,*
*ஒத்தொவ்வாதபல்பிறப் பொழிந்துநம்மையாட்கொள்வான்,*
*முத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார்,*
*எத்தினாலிடர்க்கடல் கிடந்தியேழைநெஞ்சமே.*

(திருச்சந்த 115 ) : ப்ரக்ருதிக்கு அகப்படாத எம்பெருமான் நமக்குப் பல பிறவிகளை ஒழித்து நம்மை அடிமை கொள்வதற்காக நமக்குத் தந்தையாய் தாயாய் நம்மையாண்டருளும் ஸ்வாமியாய் நமக்குள் புகுந்து நிலையாய் நின்று விட்டான். அறிவற்ற மனமே! எதற்காக நீ இன்னும் துன்பக்கடலுள் ஆழ்ந்து கிடக்கின்றாய்?

2 *சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்துஉன்*
*பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்*
*பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து நீ*
*குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது*
*இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா*
*எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு*
*உற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம்*
*மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.*

(திருப்பாவை 29 ) : கண்ணபிரானே! விடியற்பொழுதிலே இங்கு வந்து உன்னை ஸேவித்து உன் அழகிய திருவடிமலர்களை மங்களாசாஸநம் செய்வதன் பயனைக் கேட்டருள். பசுக்களை மேய்த்து ஜீவனம் நடத்தும் இடைக்குலத்தில் பிறந்த நீ நாங்கள் செய்யும் அந்தரங்க கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளாமல் மறுக்கமுடியாது. இன்று உன்னிடம் பறையை வாங்கிக் கொண்டு போவதற்கு மட்டும் நாங்கள் வரவில்லை. எப்பொழுதும் நீ எந்த அவதாரம் எடுத்தாலும் உன்னோடு பற்றுக் கொண்டவர்களாகவே இருப்போம். உனக்கு மட்டுமே கைங்கர்யம் செய்வோம். எங்களுக்கு வேறு பலனில் புத்தி செல்லாதபடியும் நீயே செய்தருளவேண்டும்.

ஸர்வ-சேஷ[a] வ்ருத்திகளையும் பண்ணும் ப்ரகாரத்தையும் கணிசிக்கிறது[b] சரமச்லோகம். இதில் சொன்ன சரண்யனுக்கும் சரணாகதிக்கும் ஃபலத்துக்குக்கும் தேசகாலாதி பரிச்சேத[c]மில்லை. ப்ரபத்தி-அத்யாயாதிகள் எல்லாம் இதன் விஸ்தரம்[d].

[1] *எனக்குரிய னெனதுபரமென் பேறென்னாது*
*இவையனைத்து மிறையில்லா விறைக்கடைத்தோம்*
*தனக்கிணை யொன்றில்லாத திருமால்பாதம்*
*சாதனமும் பயனுமெனச் சலங்கள் தீர்ந்தோம்*
*உனக்கிதமென் றொருபாக னுரைத்ததுற்றோம்*
*உத்தமனுமவ னுதவியெல்லாங் கண்டோம்*
*இனிக்க வருமவை கவர விகந்தோஞ் சோகம்*
*இமையவரோ டொன்றினிநா மிருக்குநாளே. (8)*

---

a - கைங்கர்யங்களையும்; b - குறிப்பிடுகின்றது; c - வரையறை; d - விரிவு

[1] *எனக்கு உரியன் - (நானே) எனக்கு ஸ்வாமி ; பரம் எனது - (என்னை) ரக்ஷிக்குங் கடமையும் என்னுடையதே; என் பேறு - (அதன்) பலனும் என்னுடையதே; என்னாது - என்று நினையாமல்; இவை அனைத்தும் - ஸ்வரூபம் பரம் பலன் எல்லாவற்றையும் ; இறை இல்லா இறைக்கு அடைத்தோம் - (தனக்கு ஒரு) நாயகன் இல்லாத பகவானிடம் ஸமர்ப்பித்தோம்; தனக்கு இணை ஒன்று இல்லாத - தனக்கு ஸமமான ஒரு வஸ்து இல்லாத ; திருமால் பாதம் - எம்பெருமானுடைய திருவடியே; சாதனமும் பயனும் என - உபாயமும் பலனும் என்று நினைத்து; சலங்கள் தீர்ந்தோம் - தீய செயலை ஒழிந்தோம்; உனக்கு இதம் என்று - உனக்கு (ப் பலன் பெறுவதற்கு) நன்மையான உபாயம் என்று; ஒரு பாகன் - நிகரற்ற (அர்ஜுனனது) தேர்ப்பாகனான கண்ணன்; உரைத்தது உற்றோம் - உபதேசித்ததை (சரணாகதியை) ஏற்று அநுஷ்டித்தோம் ; உத்தமனும் அவன் - உயர்ந்தவனாகிய பகவானுடைய ; உதவி எல்லாம் கண்டோம் - உபாயங்களையெல்லாம் பெற்றோம் ; இனிக்க - (நம்) மனம் மகிழும்படி ; வருமவைகவர - வரப் போகும் (அர்சிராதி மார்க்கம், பகவதநுபவம் முதலிய) விஷயங்கள் (நம் மனத்தைக்) கவர ; சோகம் இகந்தோம் - துன்பத்தை விட்டொழிந்தோம்; இனி நாம் இருக்கும் நாள் - இனிநாம் (இவ்வுலகில் ) இருக்கும் நாள்; இமையவரோடு ஒன்று - நித்ய ஸூரிகளின் காலத்திற்கு ஸமமானது (கருத்து :- ப்ரபத்தியை அநுஷ்டித்தவர்கள் இவ்வுலகில் இருப்பினும் நித்ய ஸூரிகளுக்கு ஒப்பாவர்.)*

1 गुरुभजननेत्रभाजा मथितरहस्येन वेङ्कटेशेन ।
नवनीतमिव गृहीतं नवकमिदं नित्यमास्वाद्यम् ॥

2 प्रशमितकलिदोषां प्राज्यभोगानुबन्धां
समुदितगुणजातां सम्यगाचारयुक्ताम् ।
श्रितजनबहुमान्यां श्रेयसीं वेङ्कटाद्रौ
श्रियमुपचिनु नित्यं श्रीनिवास त्वमेव ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु रहस्यनवनीतं संपूर्णम् ।

**ரஹஸ்ய நவநீதம் முற்றும்.**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

ஸ்ரீவேங்கடேசனென்னும் வேதாந்தாசார்யன் ஆசார்யனை வழிபடுதலென்னும் கடைகயிற்றை வைத்துக்கொண்டு மூன்று ரஹஸ்யங்களென்னும் தயிரைக் கடைந்து ரஹஸ்ய நவநீதமென்னும் இந்தப் புதிய வெண்ணெயை எடுத்தான். இதில் அடங்கிய ஒன்பது விஷயங்களும் எப்பொழுதும் அநுஸந்தித்துச் சுவைத்தற்கு உரியன.

திருவேங்கடமுடையானே! திருவேங்கட மலையில் அடியார்களின் கைங்கர்யச் செல்வம் மேன்மேலும் பொங்கியெழும்படி நீ எப்போதும் வளர்த்தருளவேண்டும். கலிகாலத்தால் வரும் குற்றங்கள் அணுகக்கூடாது. உன்னை அநுபவித்தலெனும் ஆநந்தம் நிறைந்திருக்க வேண்டும். உனக்குத் தொண்டு புரியும் அடியார்கள் நற்குணங்கள் நிரம்பப் பெற்றிருக்க வேண்டும். சிறந்த ஆசார சீலர்களாயிருக்க வேண்டும். பாகவதர்கள் அந்த கைங்கர்யச் செல்வத்தை மிகமிகப் போற்ற வேண்டும். இத்தகைய செழுமையை நீயே செய்தருள வேண்டும்.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 6 तत्त्वमातृका

(விளக்கம் – ரஹ. விவ. – 74–94)

# 6 தத்வ மாத்ருகை

[முன்னுரை : வடமொழியில் 'அ' முதல் 'க்ஷ' வரையில் உள்ள ஐம்பத்தொன்று எழுத்துக்களுக்கு 'மாத்ருகா' எனப் பெயர். தத்வங்களை விளக்கும் இந்த ரஹஸ்யம் ஐம்பத்தொன்று வாக்கியங்கள் கொண்டுள்ளமை பற்றித் தத்துவ மாத்ருகை எனப் பெயர் கொண்டதெனப் பெரியோர் கூறுவர்]

விஷயச்சுருக்கம் : இந்த ரஹஸ்யத்தில் ஸ்ரீதேசிகள் அருளிய ஐம்பத்தொன்று விஷயங்கட்கும் விளக்கம் தரப்படுகின்றது.

1 *தத்துவங்களெல்லாந் தகவாலறிவித்து*
*முத்திவழிதந்தார் மொய்கழலே – அத்திவத்தில்*
*ஆரமுதமாரு மிருநிலத்தி லென்றுரைத்தார்*
*தாரமுத லோதுவித்தார் தாம்.* (9)

S1 *1. ஸதாசார்ய-உபதேசித்தாலே சாரீரக[a]-மூல மந்த்ராதி-களைக் கொண்டு ஸாத்த்விகருக்கு[b] அறிய வேண்டும் தத்த்வம் पर[c]மென்றும் அவரமென்றும்[d] இரண்டு வகையாயிருக்கும்.*

---

a - வேதாந்த சாஸ்த்ரம்; b - ஸத்துவகுணம் நிரம்பிய நல்லோர்; c - சிறந்தது; d - தாழ்ந்தது;

1 *தாரம்முதல் - ப்ரணவத்தை முதலக்ஷரமாகக் கொண்ட (திருமந்திரம் முதலிய) ரஹஸ்யங்களை; ஓதுவித்தார் தாம் - உபதேசித்த ஆசார்யர்கள்; தத்துவங்களெல்லாம் - தத்துவங்களின் ஸ்வரூபத்தை முழுதும்; தகவால் அறிவத்து - (நம்மிடம் உள்ள) க்ருபையினால் உபதேசித்து; முத்தி வழி தந்தார் - மோக்ஷத்தின் உபாயத்தை உபதேசித்த ஆசார்யர்களுடைய; மொய் கழலே - வலிய திருவடிகளே; அத்திவத்தில் - அந்தப் பரமபதத்தில்; ஆர் அமுதம் (ஆம்) - நிறைந்த அமுதமாகும்; இரு நிலத்தில் - அகன்ற இப்பூமியில்; ஆறு ஆம் - உபாயமுமாகும் என்று உரைத்தார் – என்று உபதேசித்தனர்,*

2. परतत्त्वமாவது நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய்[a] ஸர்வவஸ்துக்களிலும் உடன்மிசை யுயிரெனக் கரந்து[b], 'நந்தாவிளக்கே யளத்தற்கரியாய்'[1] என்றும் 'உணர்முழு நல'[2] மென்றும் 'அளப்பரியவாரமுதை'[3] என்றும்

---

a - மூல காரணமாய்; b - மறைந்து

1 *நந்தாவிளக்கேயளத்தற்கரியாய் நரநாரணனே கருமாமுகில்போல்*
*எந்தாய் எமக்கேயருளாயெனநின்று இமையோர்பரவுமிடம்*
*எத்திசையும் கந்தாரமந்தேனிசைபாடமாடே களிவண்டுமிழற்ற*
*நிழல்துதைந்து மந்தாரநின்றுமணமல்குநாங்கூர் மணிமாடக்*
*கோயில்வணங்கென்மனனே.*

(பெரியதிருமொ 3-8-1) : 'நாசமில்லாததாயும் ஸ்வயம்ப்ரகாசமாயும் தேசம்-காலம்-வஸ்து இவற்றால் அளவிடமுடியாததுமான ஸ்வரூபத்தையுடைய எம்பெருமானே! எங்களுக்கு அருளவேண்டும்' என்று தேவர்கள் வந்து புகழுமிடமாகிய நாங்கூர் மணிமாடக் கோயிலை என் மனமே! வணங்குவாயாக.

2 *மனனகமலமற மலர்மிசையெழுதரும்,*
*மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்,*
*இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும்,*
*இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே.*

(திருவாய் 1-1-2) : என் மனமே! அசேதநத்தின் வேறுபட்டவனாய், ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற சேதநனிலும் விலக்ஷணனாய், முக்காலத்திலும் தன்னை ஒத்தவனும் மேம்பட்டவனும் இருக்கப் பெறாதவனாய், பரிபூர்ணமான ஞான ஆநந்த வடிவனாய், எனக்கு அந்தர்யாமியாயுள்ள எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுது உஜ்ஜீவிப்பாயாக.

3 *மூளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை மூவா*
*மூவுலகும்கடந்தப்பால்முதலாய்நின்ற,*
*அளப்பரியவாரமுதையரங்கமேய*
*அந்தணனை யந்தணர்தம்சிந்தையானை,*
*விளக்கொளியைமரகதத்தைத்திருத்தண்காவில்*
*வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு,*
*வளர்த்ததனால் பயன்பெற்றேன்வருகவென்று*
*மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே.*

(திருநெடுந் 14) : ஸ்வரூபம்-திருமேனி-குணம் இவற்றால் அளவிடமுடியாதவனும் பரிபூர்ணமான அமுதம் போன்றவனுமான எம்பெருமானைப் பற்றிக் கிளி பாடுவதைக் கேட்டு அக்கிளியை நோக்கி 'உன்னை வளர்த்ததனால் நற்பயன் பெற்றேன். இங்கே வா' என்று அழைத்துப் பரகாலநாயகி அக்கிளியைக் கைகூப்பி வணங்கினாள்.

'*அமல*'[1] னென்றும் சொல்லுகிறபடியே अत्यद्भुतமாய் गुणங்களுக்கும் அதிசயாவஹமாய்த்[a] திருவுக்கும் திரு வாம்படி निरुपाधिक[b] மங்களமான ஸ்வரூபத்தையுடை யவனுய் '*உயர்வறவுயர்நலமுடையவன் யவனவன்*'[2] என்னும்படி अनवधिक-अतिशय[c]-आनन्दம் முதலான अनन्त[d] கல்யாண குணங்களையுடையனுய் ஆச்ரிதர்[e] பல பிறப்பும் பிறவாதபடி தான் எந்நின்ற யோனியுமாய்ப்[f] பிறக்கக் கடவனுய், அவர்கள் நாட்டில் பிறந்து படுமவை படாமைக்காகத் தான் பிறந்து படாதன பட க் கடவனுய், தான் சொல்லிற்றுச் செய்யும் देवप्रकृति[g] களுக்குத் தானும் சொல்லிற்றுச் செய்யக் கடவனுய், विपरीत–आचरण[h]ம் பண்ணும் ஆஸுர[i] – ப்ரக்ருதி களுக்குத்தானும் विपरीत–आचरण[j]ம் பண்ணக் கடவனுய்,

---

**a** - பெருமையைத் தருவதாய்; **b** - இயற்கையான; **c** - எல்லையற்ற பெருமையையுடைய; **d** - எண்ணற்ற; **e** - தன்னைச் சரணமடைந்தவர்; **f** - பிறவிகளாய்; **g** - தெய்வத்தன்மையுடையார்க்கு; **h** - சாஸ்த்ரத்துக்கு விபரீதச் செயல்; **i** - அஸுரத்தன்மை யுடையார்க்கு; **j** - தீமைச் செயல்

1 *அமலனாதிபிரானடியார்க்கென்னையாட்படுத்த*
*விமலன், விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன்*
*நிமலன்நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான், திருக்*
*கமலப்பாதம்வந்தென் கண்ணினுள்ளனவொக்கின்றதே.*

(*அமலனாதி 1*) : எவ்வகைக் குற்றமும் அற்றவன் எம்பெருமான். அவனுடைய திருவடிக் கமலங்கள் தாமே வந்து என் ஊனக்கண்களுக்கு இலக்காய் நிற்கின்றனவே! என்ன பாக்யம்!

2 *உயர்வறவுயர்நல முடையவன்யவனவன்*
*மயர்வறமதிநல மருளினன்யவனவன்*
*அயர்வறுமமரர்க ளதிபதியவனவன்*
*துயரறுசுடரடி தொழுதெழென்மனனே.*

(*திருவாய் 1-1-1*) : இதற்கு மேலும் உயர்ந்தது ஒன்று இல்லாதபடி எல்லையற்ற ஆநந்தத்தையுடையவன் எம்பெருமான்.

தன்னை அந்தராத்மா[a] என்று நினைத்திருப்பாரைத் தானும் தனக்கு அந்தராத்மாவென்று நினைத்திருக்குமவனாய், தனக்கு ஆத்ம[b]–ஆத்மீய– ஸமர்ப்பணம் பண்ணினாருக்குத் தானும் ஆத்ம[c]-ஆத்மீய-ஸமர்ப்பணம் பண்ணக் கடவனான श्रिय:पति புருஷோத்தமன்.

3. இவன் 'பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்[1]' என்கிற படியே उभय-विभूति[d] நிர்வாஹகனாய்[e] 'தன்னொப்பாரில் லப்பன்[2]' என்றும் 'இனனில னெனனுயிர் மிகுநரை

a - அந்தர்யாமி; b - தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் ஸமர்ப்பித்தல்; c - தன்னையும் தன் விபூதிகளையும் அநுபவிக்க அளித்தல்; d - லீலாவிபூதி – நித்யவிபூதி இரண்டுக்கும்; e - நாதனாய் நடத்துமவன்

1 *பொங்கோதம்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும்,*
*அங்காதுஞ்சோராமே யாள்கின்றவெம்பெருமான்,*
*செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்,*
*எங்கோல்வளையா லிடர்தீர்வராகாதே.*

(நாச்சியார் திரு. 11–3) : கடல் சூழ்ந்த இந்த லீலாவிபூதியும் பரமபதமாகிய நித்யவிபூதியும் சிறிதும் விடாமல் செங்கோல் செலுத்தி ஆள்கின்ற திருவரங்கர் என் கைவளைகளைப் பெற்றுக் குறை தீருபவராயின் அப்படியே என் கைவளைகளைக் கவர்ந்து செல்லட்டும். (பிரிவாற்றாமையோடு ஆண்டாள் பேசுவது)

2 *என்னப்பனெனக்கா யிருளாயென்னைப்பெற்றவளாய் ★*
*பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பனென்னப்பனுமாய் ★*
*மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன் ★*
*தன்னொப்பாரில்லப்பன் தந்தனன்தனதாள்நிழலே.*

(திருவாய் 6–3–9) : திருவிண்ணகரப்பன் எனக்கு உபகாரகனாய் வளர்த்த தாயும் பெற்ற தாயும் செய்யும் ப்ரீதியை எல்லாம் என்னிடம் செய்பவனாய் உதவி புரிவதில் தன்னை ஒத்தவர் இல்லாத என் அப்பனாய் அவனைப் பிரிந்த என்னுடைய தாபமெல்லாம் தீரும்படி தன் குளிர்ந்த திருவடி நிழலைக் கொடுத்தருளினான்.

யிலனே'[48*2] என்றும் 'ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயா'[1] என்றும் சொல்லுகிறபடியே सम-अधिक-दरिद्र[a] ஞயிருக்கும்.

4. அப்ராக்ருதமாய்[b] पञ्चोपनिषत्-प्रतिपाद्य-शुद्धसत्त्व-पञ्चशक्तिमय மாய் अस्त्र-भूषण-रूप-विचित्र-तत्त्व-आश्रय[c] மான திவ்ய மங்கள-விக்ரஹ – விசேஷத்தாலே विशिष्ट[d] ஞய்க் கொண்டு परव्यूहादि-पञ्चप्रकार[e] ஞயிருக்கும்.

5. पररूपமாவது – நித்யமாய் ஏகரூபமாய் நித்யருக்கும் मुक्तருக்கும் ஸேவ்யமாய் 'குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோருரு'[2]

---

a - தன்னை ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன்; b - ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற ; c - திருவாயுதங்களாகவும் திருவாபரணங்களாகவும் உள்ள; d - பெருமை யுடையவஞய்; e - ஐவகையுடையன்

1 ஒத்தார்மிக்காரை யிலையாயமாமாயா,
ஒத்தாயெப்பொருட்கு முயிராய், என்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையா யறியாதனவறிவித்த
அத்தா, நீசெய்தன அடியேனறியேனே.

(திருவாய் 2-3-2) : தன்னை ஒத்தாரும் மேம்பட்டவரும் இல்லாத அற்புதனனவனே! உலகில் உள்ள மனிதர் முதலிய உருவத்தோடு அவதரித்து எனக்கு உயிராயுள்ளவனே! என்னைப் பெற்ற தாயுமாகவும் தந்தையாகவும் ஆசார்யனகவும் நின்று நீ எனக்குச் செய்த உதவிகள் எண்ணமுடியாதன-வாதலின் அவற்றை அறியவல்லேனல்லேன்.

2 கழியமிக்கதோர்காதலளிவளென் றன்னைகாணக்கொடாள்,
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்,
குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே,
எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழு மார்க்குமறிவரிதே.

(திருவாய் 5-5-10) : பராங்குசநாயகி கூறுகின்றாள்– என் தாய் தன் பெண்ணுகிய எனக்கு எம்பெருமானது பிரிவு வந்தால் நாள் ஆக ஆக அவனிடம் காதல் எனக்குக் குறையட்டுமென்று அவனை நான் நினைக்கக்கூட இடமில்லாமல் செய்கிறுள். என் தாய் எவ்வளவு தடுத்தால் என்ன? பெரும்புகழனை திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின் என் நிலையே வேறு. நித்யரும் முக்தரும் கூட்டம் கூட்டமாய் வந்து அனுபவிக்க, சோதி வெள்ளத்தின் உள்ளே மிகப் பிரகாசிக்கின்ற விலக்ஷணமான நம்பியின் திருமேனி என் உள்ளத்தினுள் எப்பொழுதும் பிரகாசிக்கின்றது. அதுவேறு ஒருவருக்கும் அறிய முடியாததாயுள்ளது.

என்றும் 'ஆதியஞ்சோதியுரு'[1] என்றும் சொல்லுகிற படியே வானுயரின்பம்[a] மன்னி வீற்றிருந்த ரூபம்.

6. வ்யூஹங்களாவன—இப் பரரூபமடியாகப் பூர்வபூர்வத்திற்கு[b] உத்தரோத்தரம்[c] கார்யமாய்க் கொண்டு பிரிந்து 'முன்னைவண்ணம் பாலின் வண்ணம்'[2] 'பாலின் நீர்மை

a - பரமபதத்தில் பரமாநந்தத்துடன்; b - முந்திய முந்தியதற்கு; c - பிற்திய பிந்திய உருவம்

1 *சாதுசனத்தைநலியும் கஞ்சனைச்சாதிப்பதற்கு,*
*ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த,*
*வேதமுதல்வனைப்பாடி வீதிகள்தோறும் துள்ளாதார்,*
*ஓதியுணர்ந்தவர்முன்னு என்சவிப்பார்மனிசரே.*

(திருவாய் 3-5-5) : எல்லா வேதாந்தங்களாலும் ஸர்வேச்வரனுகப் புகழப்பெற்ற எம்பெருமான் ஸாதுக்களை ஹிம்ஸிக்கும் கம்ஸன் முதலியவர்களை ஒழிப்பதற்காக அவதாரங்களுக்குக் காரணமாய் அழகியதாய்ப் பரமபதத்தில் உள்ள சோதியுருவைப் போலவே இங்கும் வந்து அவதரித்து நிற்கும் பெருமையைப் பாடி வீதிகள் தோறும் துள்ளாதார் நன்கு கற்று ஞானிகளாயுள்ளவர் முன்பு எதைச் சொல்லி ஜபிப்பார்? அவர்கள் மனிதரேயல்லர்.

2 *முன்னைவண்ணம்பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற,*
*பின்னைவண்ணம்கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால்,*
*பொன்னின்வண்ணம்மணியின்வண்ணம்புரையுந்திருமேனி,*
*இன்னவண்ணமென்றுகாட்டீ ரிந்தளூரீரே.*

(பெரிய திருமொழி 4-9-8) : எம்பெருமானனே! உன் திருமேனி நிறத்தை ஆராய்ந்து பார்த்தால் கிருதயுகத்தில் பால்போல் வெண்மை நிறம். கலியுகத்தில் நீ கொள்ளும் கருமுகில்போன்ற கருமை நிறந்தான் நிலை நிற்பதாய்த் தெரிகிறது. திரேதாயுகத்தில் பொன்னிறத்தையும் துவாபரயுகத்தில் பசுமைநிறத்தையும் கொள்கின்றாய். இந்த அர்ச்சைத் திருமேனி என்ன நிறம் கொண்டதென்பதைக் காட்டியருளவேண்டும்.

செம்பொன் நீர்மை[1] இத்யாதிகளிற்படியே कृतत्रेतादि-युगங்கள் தோறும் மாறிமாறி வரும் நிறங்களையுடைய னவான ரூபங்கள்.

7. अभिமாநவிசேஷத்தாலே[a] जीव–मन:–अहङ्कार–शब्द– वाच्यங்களான ஸங்கர்ஷண–ப்ரத்யும்ந–அநிருத்த ரூபங்களில் ஜ்ஞாநबलादिகளில் இவ்விரண்டு குணங்களும் ஸம்ஹார–சாஸ்த்ரப்ரவர்த்தநாதிகளில் இவ்விரண்டு தொழில்களும் உடையனவாயிருக்கும்.

8. வாஸுதேவாதிகளான நாலு வ்யூஹங்களிலும் ஒவ்வொரு வ்யூஹத்திலே மும்மூன்றாகப் பிரிந்து 'கேசவன் தமர்'இல் சொல்லுகிற திருநாமங்களையுடைய ரூபங்கள் பன்னிரண்டும் व्यूहान्तर[b]ங்கள்.

9. விभवங்களாவன – 'மீனாயாமையுமாய்'[2] इत्यादिகளிற்படியே

---

a - அபிமாநி தேவதையாயிருப்பதாலே; b - மற்றொரு வ்யூஹ வகுப்புக்கள்;

1 பாலினீர்மைசெம்பொனீர்மை பாசியின்பசும்புறம்,
போலுநீர்மைபொற்புடைத் தடத்துவண்டுவிண்டுலாம்,
நீலநீர்மையென்றிவை நிறைந்தகாலம்நான்குமாய்,
மாலினீர்மைவையகம் மறைத்ததென்னநீர்மையே.

(திருச்சந்த 44) : கிருதயுகத்தில் எம்பெருமானது நிறம் பால்போன்றது. திரேதாயுகத்தில் செம்மையானது. துவாபரயுகத்தில் பசுமை நிறம். கலியுகத்தில் கருமை நிறம். இந்த நிறங்களுடன் அந்த அந்த யுகங்களில் அவதரித்து அவற்றை நடத்திப் போகும் எம்பெருமானது ஸௌலப்யத்தை மக்கள் அறிந்து வாழாமல் புறக்கணித்தது என்ன தன்மையோ!

2 ஆனானுடையானென் றஃதேகொண்டுகந்துவந்து,
தானேயின்னருள்செய் தென்னைமுற்றவும்தானானான்
மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய்,
கானாரேனமுமாய்க் கற்கியாமின்னம்கார்வண்ணனே.

(திருவாய் 5–1–10) : மத்ஸ்யமாய்க், கூர்மமாய், நரசிங்கனாய், வாமநனாய், வராஹமாய், இனி வரப்போகும் கற்கியாய் மற்றும் அவதாரங்களையெல்லாம் எனக்காகவே செய்து என்னை அணைத்துக் கொண்டான் என்று நான் நினைத்ததையே கொண்டு தானே என்மீது இனிய அருளைச் செய்து என்னை உத்தேசித்தே மற்றும் எல்லா அவதாரங்களையும் எனக்குக் காட்டியருளினான் எம்பெருமான்.

விभूति[a] களோடு ஸஜாதீயங்களாய்த் தோன்றும் ரூபங்கள்.

10. அவைதம்மிலே தோன்றுவன சில ரூபங்கள் विभवान्तर[b]ங்கள்.

11. அந்தர்யாமி ரூபமாவது 'கண்கள் சிவந்து'[1] இத்யாதிகளிற்படியே உள்ளே योगिகளுக்குக் காணலாவதொரு ஸூக்ஷ்ம ரூபவிசேஷம்.

12. அர்ச்சாவதாரமாவது – 'தமருகந்து எவ்வுருவம் அவ்வுருவந்தானே – தமருகந்தது எப்பேர் மற்றப்பேர்'[2],

---

a - ஆளுகைக்கு உட்பட்ட பொருள்களோடு; b - விபவ ரூபங்களின் மற்றொரு வகுப்புக்கள்

1 *கண்கள்சிவந்துபெரியவாய்வாயும்சிவந்துகனிந்து, உள்ளே*
*வெண்பலிலகுசுடரிலகு விலகுமகரகுண்டலத்தன்,*
*கொண்டல்வண்ணன்சுடர்முடியன்நான்குதோளன் குனிசார்ங்கன்*
*ஒண்சங்கதைவாளாழியா னொருவனடியேனுள்ளானே.*

(திருவாய் 8–8–1) : எம்பெருமான் என்னை அணையப் பெற்ற மகிழ்ச்சியால் அவன் கண்கள் சிவந்து அகன்று விட்டன. திருவாயும் சிவந்து கனிந்த கனிபோல் ஆயிற்று. திருவாயினுள் வெண்மையான முத்துக்கள் போல் பல் வரிசை விளங்குகின்றது. இரண்டு திருச்செவிகளிலும் மகர குண்டலங்கள் அசைகின்றன. கருமுகில் போன்ற திருமேனி நிறம், திருமுடியில் கிரீடம் சுடர்விடுகின்றது. நான்கு தோள்களும் என்னை அணைத்தபின் மிகப் பிரகாசிக்கின்றன. வளைந்த சார்ங்கம் – திருவாழி – திருச்சங்கு – கதை – வாள் ஆகிய ஒப்பற்ற பஞ்சாயுதங்களுடன் அடியேனது மனத்தினுள் பிரகாசிக்கின்றான்.

2 *தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே*
*தமருகந்த தெப்பேர்மற் றப்பேர் – தமருகந்து*
*எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே*
*அவ்வண்ண மாழியா னாம்.*

(முதல் திருவ 44) : எம்பெருமான் அடியார்கள் விரும்பியவாறு உருவம் கொண்டு அவதரிப்பான். அவர் விரும்பிய திருநாமத்தையே கொள்வான். குணம் லீலை முதலியவற்றையும் அடியார்கள் அனுஸந்திக்க விரும்புகிறபடியெல்லாம் பிரகாசிக்கச் செய்வான்.

'நெஞ்சினால் நினைப்பான் யவனவனாகும் நீள்கடல் வண்ணனே'[1] என்னும்படி ஸ்வயம்வ்யக்த[a]–திவ்ய[b]–ஆர்ஷ[c]–மாநுஷ[d]–வைஷ்ணவ[e]– ஸ்த்தாநங்களிலே ஸர்வஸஹிஷ்ணுவாய்[f] अर्चक-पारतन्त्र्य[g]த்திற்கு எல்லை நிலமாய் சேஷசேஷிभाव-शबळ[h]மாய் 'भूमौ-गतं-पूजयतां-प्रमेयम्'[2] என்று தானே அருளிச்செய்த ரூபம்.

a - பகவான் தானே வந்து தோன்றிய தலம்; b - தேவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட தலம்; c - முனிவர்கள் ஸ்தாபித்த தலம்; d - ஸாதாரண மனிதர் அமைத்த தலம்; e - பரமைகாந்திகள் ஸ்தாபித்த தலம்; f - எல்லா அபசாரங்களையும் க்ஷமிப்பவன்; g - ஆராதிப்பவர்களுக்கு வசப்பட்ட தன்மை; h - சேஷத்வம் – சேஷித்வம் இரண்டும் கலந்ததாய்

1 *தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாயவையல்லனாய்,*
*எஞ்சலிலமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை,*
*அஞ்சிநீருலகத்துள்ளீர்க ளவனிவனென்றுகூழேன்மின்,*
*நெஞ்சினால்நினைப்பான்யவ னவனாகும்நீள்கடல்வண்ணனே.*

(திருவாய் 3–6–9) : உலகில் உள்ளீர்களே! ஸர்வவித பந்துவாய்ப் பிரமன் சிவன் இந்திரன் இவர்களால் தியானிக்கப்படும் காரண வஸ்துவான எம்பெருமானுடைய மேன்மையைக் கண்டு அஞ்சி அத்தகைய பரமபதநாதன் இந்த அர்ச்சை வடிவில் இருப்பானோ என்று ஐயப்படாதீர்கள். நீங்கள் உள்ளத்தால் எந்தத் திருமேனியை நினைக்கின்றீர்களோ, அந்தத் திருமேனியுடன் வந்து ஸேவை தருவான்.

2 भुजैश्चतुर्भिः समुपेतमेतद्रूपं विशिष्टं दिवि संस्थितं च ।
भूमौ गतं पूजयतांप्रमेयं सदा हि तस्मिन् निवसामीति देवाः ॥

(பார-மௌஸல 5–34) : தேவர்களே! பரமபதத்தில் இருக்கிற என் உருவமே நான்கு கைகளுடன் சிறப்புடையதாய் அளவற்ற பெருமையுடையதாய்ப் பூலோகத்தில் அர்ச்சாரூபத்தில் அவதரித்திருக்கிறது. அதில் எப்பொழுதும் நான் வஸிக்கிறேன் என்று உணர்ந்து நீங்கள் வழிபடுங்கள். (தேவர்களுக்குக் கண்ணன் கூறியது)

13. 'தன்னுளே திரைத்தெழுந்து'[1] இத்யாதிகளிற்படியே நிற்கிற இவ்வஞ்சு ரூபமும் 'அகலகில்லேன் இறையு' மென்று அலர்மேல்மங்கை உறையும்படியான शुभाश्रय[a] மாயிருக்கும்.

14. 'திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்'[2] என்கிற படியே ஸலக்ஷ்மீகமாக இப்பரதத்த்வத்தைக் கண்டவன் மற்றிங்கோர் திருவில்லாப் புதுத்தெய்வம் தேடான்.

15. இப்படி சுடர்மிகு சுருதியுள் உளனை श्रिय:பதிக்குச் சரீரமென்று ப்ரமாணसिद्धமான அவரதத்த்வம்[b] சேதநமென்றும் அசேதநமென்றும் இரண்டு வகையாயிருக்கும்.

16. சேதநமான அவரதத்வமாவது – ஜீவशब्दवाच्यமாய் ஸ்வரூபத்தாலும் शक्त्यादि गुणங்களாலும் परिच्छेद्य[c]மான अहमर्थ[d]ம்.

---

a - பாபத்தை நீக்குவதும் தியானத்திற்கு எளியதும்; b - தாழ்ந்த தத்துவம்; c - உருவத்தாலும் சக்தி முதலியவற்றாலும் குறைவுடையது; d - ஜீவன்

1 *தன்னுளேதிரைத்தெழும் தரங்கவெண்தடங்கடல்,*
*தன்னுளேதிரைத்தெழுந் தடங்குகின்றதன்மைபோல்,*
*நின்னுளேபிறந்திறந்து நிற்பவும்திரிபவும்,*
*நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கண் நின்றதே.*

(திருச்சந்த 10) : எம்பெருமானே! அலைகள் வீசப்பெறாது ஓய்ந்திருக்கும் கடல் காற்றினால் பேரலைகள் வீசப்பெற்றுக் காற்று நின்றதும் அலையின்றி அடங்கிவிடுவதுண்டு. அவ்வாறே தாவரஜங்கமப் பொருள்களெல்லாம் உன்னிடமே பிறந்து உன்னிடமே லயித்து உன் ஸ்வரூபத்துக்குள்ளேயே அடங்கிப் போகும் தன்மை உன்னிடமே உள்ளது.

2 *திருக்கண்டேன்பொன்மேனி கண்டேன் திகழும்*
*அருக்கனணிநிறமும் கண்டேன்–செருக்கிளரும்*
*பொன்னாழிகண்டேன் புரிசங்கம்கைக்கண்டேன்*
*என்னாழிவண்ணன்பாலின்று.*

(மூன்றாந்திருவந்தாதி 1) : எம்பெருமானிடம் முதலில் பெரிய பிராட்டியை ஸேவித்தேன். அழகிய திருமேனியை ஸேவித்தேன். அதன் நிறத்தை ஸேவித்தேன். திருவாழியாழ்வானை ஸேவித்தேன். திருச்சங்கை ஸேவித்தேன்.

17. இது ஸ்வம்ப்ரகாசதையாலும்[a] ஜ்ஞாநகுண–ஆஸ்ரயமாகையாலும் ஜ்ஞாநமென்று பேர்பெற்று இரண்டு[b] படியாலும் தனக்குத் தான் தோன்றுமதாய், அநுகூல–ஸ்வபாவமாய், அதிஸூக்ஷ்மமாய், திலத்தில்[c] தைலம் போலவும் दारु[d]வில் அக்நி போலவும் ஸர்வ–அசேதநங்களிலும் அநுப்ரவேசிக்கவற்ருய், நிர்விகாரமாய்[e], गुणत्रयरहित[f]மாய், கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவிகளுக்கும் விஷயமன்றிக்கே निष्कृष्ट[g] வேஷத்தில் देवत्व–मनुष्यत्वादि भेदங்கள் இல்லாமையாலே देव–मनुष्यादि–शब्द–गोचर[h]மன்றிக்கே ஸர்வ–ஆத்ம– साधारण[i]ங்களான अहंबुद्धिशब्दங்களாலே தந்தாமுக்கு அநுभाव्य[j]மாயிருக்கும்.

18. நானென்கிற अर्थம்தானே परबुद्धि[k] – விஷயமாம்போது அவன் –இவன்–உவன் என்றும் நீயென்றும் தோற்றும்.

19. இஜ்ஜீவ – தத்வம் बद्ध[l]ரென்றும் बन्धरहित[m]ரென்றும் இரண்டுபடியாயிருக்கும்.

20. बद्धராவர் – பல செய்வினை வன்கயிற்ருல்[n] திண்ணமழுந்தக் கட்டுண்டு, பெருந்துயரிடும்பையிலே[o] மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து, மண்ணுய் நீரெரி கால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணுராக்கையின் வழியுழன்று, நாணுவித நரகம் புகும்பாவம் செய்து,

---

a - வேறெரு ஞானத்தை எதிர்பாராது தானே தோன்றுதல்; b - ஞானத்தின் உதவியின்றியும் ஞானத்தின் உதவியாலும்; c - எள்ளுக்குள்; d - அரணிக்கட்டைக்குள்; e - மாறுபாடு இல்லாததாய்; f - ஸத்துவம்– ரஜஸ் – தமஸ் ஆகிய முக்குணங்களும் அற்றதாய்; g - சரீர ஸம்பந்தமின்றித் தனித்த நிலையில்; h - இலக்கு; i - பொதுவான; j - அநுபவிக்க உரியது; k - பிறர் அறியும்போது; l - ஸம்ஸாரத்தில் அகப்பட்டவர்; m - ஸம்ஸார பந்தம் இல்லாதவர்; n - கர்மமாகிய வலிய கயிற்ருல் ; o - பெரிய துக்கத்தை அநுபவிக்கும் இடமாகிய சரீரம்

சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும்பாழிலே[a] 'பொய்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை யென்னும்படி தன்னுருக் கொடுத்து வேற்றுருக் கொண்டு, 'ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாய்போற் பிறவிக் கடலுள் நின்று துளங்குகிள்ற[b] சேதனர்.

21. இவர்களுக்கு அநாதியான கர்ம-ப்ரவாஹ- வைஷம் யத்தாலே[c] அவ்வோ भोगங்களுக்குப்போலே अवसर-प्रतीक्ष-भगवत्-कृपामूल[d]மான மோக்ஷத்திற்கு முற்பாடு பிற்பாடுகள் உண்டாம்.

22. बन्धरहितர் मुक्तரென்றும் नित्यரென்றும் இரண்டு வகை.

23. मुक्तராவர் – 'எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங் கண்டீர்'[1] என்னும்படி நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன் திருவருளாலே கருவிலே திருவுடையராய், பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி

---

a - ப்ரக்ருதி மண்டலத்தில்; b - துன்புறுகின்ற; c - பக்குவ நிலையின் கால வேறுபாடு; d - ப்ரபத்தி செய்யும் ஸமயத்தை எதிர்பார்க்கின்ற

1 அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார் * எம் மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர் * கைம்மா துன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே * மெய்ம்மாலா யொழிந்தேனெம்பிரானுமென்மேலானே.

(திருவாய் 5-1-7) : ஸர்வேசுவரனை அவன் எத்தகைய பெருமையுடையன்! எல்லாவற்றுனும் மிகத் தாழ்ந்த நான் எத்தகையன்! 'கஜேந்த்ரனது துன்பத்தை ஒழித்தவனே!' என்று தலைமேல் கைகூப்பி மேலுக்குச் சொல்லிவைத்தேன். அவன் தன் கருணையால் என்னை உண்மையான பக்தியுடையனாக்கி அவனும் என்னிடம் மிக்க ஆர்வமுடையனாயுள்ளான். ஆதலின் எத்தகைய மஹாபாபி களுக்கும் எம்பெருமான் திருவருள் பலிக்கும் காலம் வரும்போது பலித்தேவிடும்.

வந்து பாதவிலச்சினை வைத்து ஞானக்கை தர, 'யானே என்றனதே'[1] என்கிற அஹங்கார–மமகாரங்களாகிற படுகுழியினின்றும் ஏறி, ஒண்டொடியாள் திருமகளும் திருமகள்சேர் மார்பனுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டு, ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்து, களைகண்மற்றின்றி நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கென்ற திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து, 'புகலொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்றம் 'அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென்னவேண்டும்' என்றும் 'தொன்மா வல்வினைத் தொடர்களை முதலரிந்து' 'மங்க ஒட்டு உன் மாமாயை' 'மாயஞ்செய்யேல் என்னை' என்றும் வளைத்து, ஆக்கை விடும் பொழுது எண்ணி, பாவமெல்லாம் 'சும்'எனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய, அமரரோடு உயர்வில் சென்று, மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் அன்னதோர் இல்லியனூடு

1 யானே என்னை அறியகிலாதே *
யானேயென்றனதே வென்றிருந்தேன் *
யானேநீயென்னுடைமையும்நீயே *
வானேயேத்து மெம்வானவரேறே!

(திருவாய் 2–9–9) : பரமபதம் முழுவதும் துதிக்கின்ற அந்த வானத்திலுள்ளார்க்கு ச்ரேஷ்டனானவனே! நானே (எனதுகர்மத்தாலே) உனக்கு உடலான என்னை தெரிந்துகொள்ளமாட்டாதபடி அறிவிலியாகி (அக்ஞாநியாகி) நான் நானே, ஸ்வதந்த்ரனே, எனது என்பது என்னுடையதே என்கிற ப்ராந்தி ஞானமுடையவனாகி நெடுநாள் இருந்தேன்.(ஆனால் உண்மையில்) நீ எனக்கு அந்தராத்மாவே எனது எனப்பட்டதற்கு ஆத்மாவும் நீ ஒருவனே.

போய், இமையோர் வாழ் தனிமுட்டிடக் கோட்டையினைக் கழித்து, வாட்டாற்றான் பணிவகையை வானேறப் பெற்று, ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமரென்று வாளொண்கண் மடந்தையர் வாழ்த்த, கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகி, வாசலில் வானவர் வைகுந்தன்தமர் எமர் எமதிடம் புகுதென்ன, விதிவகை புகுந்தனரென்று நல்வேதியர் பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவ, நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் மதிமுக மடந்தையர் ஏந்த, வந்து அவர் எதிர்கொள்ள, தன்மைபெறுத்தித்தன் தாளிணைக்கீழ் கொள்ளுமப்பன் கொழுஞ்சோதி யுயரத்துக் கூட்டரிய திருவடிக்கள் கூட்ட, அவன் தாளிணைக்கீழ் வாழ்ச்சி பெற்று, அடியார்கள் குழாங்களுடன் கூடி, மாமணிமண்டபத்தில் அந்தமில் பேரின்பத்து அடியரான நித்யஸூரிகளோடு நிரையொக்க[a] விருந்து, அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனனைத்[b] தினைத்தனையும் விடாதே அநுபவித்து, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்து வாழும்படி வீடு[c] திருத்துவான்பக்கல் வீடுபெற்றவர்கள்.

24. நித்யராவார் – நித்யமான பரிபூர்ண–பகவத்– அநுபவத்தையுடையராய் வடிவுடை வானவரென்றும் முடியுடை வானவரென்றும் வைகுந்தத்து அமரரென்றும் ஸூரி

---

a - கோஷ்டியில் சமமாக இருந்து; b - தாமரைக் கண்ணனை எம்பெருமானை
c - வரும் சேதநனுக்காகப் பரமபதத்தை அலங்கரிப்பவனாகிய பகவான்

கள் என்றும் साध्यदेवர்களென்றும் சொல்லப்பட்ட அநந்த–கருட–விஷ்வக்ஸேநாதிகளான அயர்வறும மரர்கள்.

25. बद्धருக்குக் கர்மப்ரவாஹம் அநாதியாய் अन्तवத்தா[a] யிருக்கும்.

26. मुक्तருக்குக் கைங்கர்யப்ரவாஹம் आदिमத்தாய் अन्तरहित[b] மாயிருக்கும்.

27. நித்யருக்கு भगवत्–अभिमत–विपरीत–रुचि[c] யில்லாமையாலே ஒருகாலத்திலும் कर्मबन्धமின்றிக்கே अधिकार[d] நியமத் தோடே கூடின கைங்கர்ய–ப்ரவாஹம் अनाद्यन्त[e] மாயி ருக்கும்.

28. இப்படி षड्विंशक[f] னென்றும் पञ्चविंशक[g] னென்றும் பிரிக் கப்பட்ட பரமாத்மாவுக்கு ஸர்வ–अवस्थैயிலும் स्वाश्रित[h] விஷயத்திலுள்ள पारतन्त्र्य–शेषत्वங்கள் स्वातन्त्र्य–निबन्धन[i] ங்களாயிருக்கும்.

29. ஜீவாத்மாக்களுக்கு ஸர்வ–अवस्थैயிலும் स्वव्यापारादिகளி லுள்ள स्वातन्त्र्य–शेषित्वங்கள் पारतन्त्र्य–निबन्धन[j] ங்களா யிருக்கும்.

30. இப்படி பரமசேஷியாயும்[k] द्वारசேஷி[l] யுமாயுள்ள பர– அவர–ஆத்மாக்கள் இருவரிலும் வேறுபட்ட அசேதந தத்வம் त्रिगुणமென்றும் अत्रिगुणமென்றும் இரண்டு

a - முடிவுடையது; b - முடிவற்றது; c - எம்பெருமான் திருவுள்ளத்துக்கு விபரீதமாயய் நடப்பதில் ருசி; d - நித்யஸூரிகளில் அவரவர் அதிகாரத்துக்கும் ஏற்பட்ட வரையறை; e - தொடக்கமும் முடிவும் இல்லாதது; f - இருபத்தாறுவது தத்த்வம்; g - இருபத்தைந்தாம் தத்த்வம்; h - தன் அடியார்கள்; i - தன் சுதந்திரத்தால் ஏற்பட்டவை; j - எம்பெருமானுக்கு வசப்பட்டமையால் வந்தவை; k - மேலான தலைவன்; l - நடுவில் உள்ள தலைவன்

வகையாயும், अत्रिगुणம் காலமென்றும் शुद्ध-ஸத்த்வ மென்றும் இரண்டு வகையாயும் இருக்கும்.

31. अचेतन-द्रव्यமான धर्मभूतஜ்ஞாநத்தோடே கூட நாலு வகையென்று எண்ணலாயிருக்க இத்தைச் சரீரமாகக் கொள்ளாமையாலும் ப்ரயோஜந-விசேஷத்தாலும் இவை மூன்றையும் வகுத்து अनुसंधित्தார்கள்.

32. त्रिगुणமாவது - ஸத்த்வ-ரஜஸ்-தமஸ்ஸுக்களுக்கு आश्रय[a]மான द्रव्यம்.

33. ஸத்த்வ-ரஜஸ்-தமஸ்ஸுக்களாவன-அடைவே[b] ஜ்ஞாந-सुखादिகளுக்கும் राग-दुःखादि[c]களுக்கும் प्रमाद-मोहादि[d]களுக்கும் ஹேதுக்களான गुणவிசேஷங்கள்.

34. இத் त्रिगुणத்தினுடைய காரண दशैயையும் கார்யदशैயையும் கூடப் 'ப்ரக்ருதி மாஹுங்கார மனங்கள்'[1] 'பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம்' என்று பிரித்துச் சாஸ்த்ரம் சொல்லாநிற்கும்.

35. இவற்றில் गुणஸாம்யத்தை[e]யுடைய மூலப்ரக்ருதியில் ஒரு ப்ரதேசத்திலே भगवत्-सङ्कल्प-नियत-काल[f]மான गुणவைஷம்யம[g]டியாக ஸாத்த்விக-ராஜஸ-தாமஸங்க

---

a - இருப்பிடமான; b - வரிசையாக; c - ஆசை, துன்பம்; d - கவனக்குறைவு மதிமயக்கம்; e - முக்குணங்களும் ஸம அளவில் இருத்தல்; f - ஸங்கல்பத்தைத் தழுவிய காலவரையறையுள்ள; g - முக்குணங்களின் ஏற்றக்குறைவு

1 *மங்கவொட்டுன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய,*
*நங்கள்கோனே யானேநீயாகியென்னையளித்தானே,*
*பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம்,*
*இங்கிவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே.*

(திருவாய் 10-7-10) : மனிதர்களின் உள்ளத்தைக் கெடுக்கவல்ல சப்தம் முதலிய ஐந்து விஷயங்களும் அவற்றில் இழுத்துச் செல்லும் ஐந்து ஜ்ஞாநேந்த்ரியங்களும் அவற்றில் ஈடுபடும் ஐந்து கர்மேந்த்ரியங்களும் சரீர வடிவு கொண்ட ஐந்து பூதங்களும் மூலப்ரக்ருதி - மஹான் - அஹங்காரம்-மனஸ் ஆகிய இவை அனைத்தும் ஒழியும்படி நீ அருள்புரியவேண்டும்.

ளென்று பிரிவுடைத்தான மஹான் பிறக்கும்.

36. இதனின்றும் இவ்வடைவே[a] ஸாத்த்விக-ராஜஸ-தாமஸ-அஹங்காரங்கள் உண்டாம்.

37. ராஜஸ-அஹங்காரம் துணையாக ஸாத்த்விக- அஹங் காரத்தினின்று एकादश इन्द्रियங்களும் தாமஸ- அஹங் காரத்தினின்று तन्मात्रै[b]களை இடையிட்டுக் கொண்டு पञ्चभूतங்களும் உத்பந்நங்களாம்.

38. भूतங்களுக்கு उपादान[c]ங்களான शब्दादि-तन्मात्रैகளும் भूतங்களுக்கு गुणங்களான शब्दादिகளும் வேறுபட்டவை.

39. இப்भूतங்கள் ஐந்திலும் குணங்கள் ஐந்தும் நிற்கும் அடைவைப்[d] 'பூநிலாயவைந்துமாய்[1]' என்கிற பாட்டின்படியே अनुसंधिப்பது.

40. இப்படி महादादिகளான தத்த்வங்களும் இவற்றின் கலசுதலடியாகப் பிறக்கும் अनन्तங்களான ब्रஹ்மாண்டங்கள் முதலான கார்யங்களுமெல்லாம் त्रिगुणद्रव्यமாகிற பெருங்கடலில் அலைகளும் நுரைகளும் குமிழிகளும் போலே ஆவது அழிவதாய் வருகிற ப்ரவாஹம் அநாதியாக विच्छेद[e]மறப்போருகைக்கு அடி[f]- பலபல

---

a - இம்முறையிலே; b - முந்திய நிலை முழுவதும் கழியாமலும் பிந்திய நிலை முழுவதும் வராமலுமுள்ள வஸ்து; c - பானைக்கு மண்போல் உபாதாந காரணமான ; d - முறையை; e - நடுவில் தடையின்றி; f - காரணம்

1
பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண்நின்ற நான்குமாய்த்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்தகா லிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்
நீநிலாய வண்ண நின்னை யார் நினைக்கவல்லரே.

(திருச்சந்த 1) : எம்பெருமானே! பூமியில் உள்ள ஐந்து குணங்களுக்கும், நீரில் உள்ள நான்குக்கும், தேஜஸ்ஸில் உள்ள மூன்றுக்கும், வாயுவில் உள்ள இரண்டுக்கும், ஆகாயத்தில் உள்ள ஒன்றுக்கும் நிர்வாஹம் செய்பவனாய் வெவ்வேறு வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாய் நீ நிற்கிற படியை யாரால் விளக்கமாக அறியமுடியும்?

மாயமயக்குக்களால் இன்பறுமிவ்விளையாட்டுடையானு டைய इच्छानुवर्ति[a] யான காலம். காலம் அநாதியாய் अनन्त மாய் நடக்குமென்னுமிடத்தை 'अनादिर्भगवान्–कालः'[1] इत्यादि களிலே கண்டுகொள்வது.

41. காலமாவது – எதிர்-நிகழ்-கழிவு, முன்பு-பின்பு, ஒருகாலம்-பலகாலம் என்றாற்போல சொல்லுகிற பாசுரங்களுக்கு இலக்காயிருப்பதொரு த்ரவ்யவிசேஷம்.

42. இதில் இறைப்பொழுது[b] முதலாக நாள்- திங்கள்[c] - ஆண்டு- ஊழி[d] - கல்பம்[e] - परार्ध[f]ம்- द्विपरार्ध[g]ம்- மஹாகல்பம்[h] என்றாற்போலே சொல்லுகிற எல்லைகளெல்லாம் ஸ்வதந்த்ர- ஸங்கல்பமாகிற சூறுவளிக்காற்றாலே சுழன்று வாராநின்றால் கழிந்த க்ஷணங்களும் கல்பங்களும், வரும் க்ஷணங்களும் கல்பங்களும் अनन्तங்களாய் இவற்றாலே லீலாविभूतिயிலுள்ள கார்யங் களுக்கு உத்பத்தி- ஸ்த்திதி- நாச- வ்யவஸ்த்தை உண்டா யிருக்கும்.

43. शुद्धஸத்த்வத்தில் இக்கால தத்த்வம் உண்டேயாகிலும் அங்குள்ள கார்யங்களினுடைய उत्पत्त्यादिகளுக்கு இங்கு அடைத்த[i] காலவிசேஷம் நியாமகமன்று[j].

---

a - ஸங்கல்பத்தைத் தழுவி நடக்கின்ற; b - க்ஷணகாலம்; c - மாதம்; d - யுகம்; e - பிரமனின் வாழ்வில் ஒரு நாள்; f - பிரமனது நூறாண்டு வாழ்வில் பாதி; g - பிரமனது முழு ஆயுள்; h - அதிலும் பெரிய காலம்; i - நியமிக்கப் பட்ட; j - காரணமன்று

1 अनादिर्भगवान् कालो नान्तोऽस्य द्विज विद्यते ।
अव्युच्छिन्नाः ततस्त्वेते सर्गस्थित्यन्त संयमाः ॥

(விஷ்ணு புரா 1-2-26) : மைத்ரேயரே! பெருமையுடைய காலத்துக்கு உற்பத்தியும் அழிவும் இல்லை. அதனால் படைப்பு, காத்தல், அழிவு எல்லாம் தொடர்ந்து வெள்ளம்போல் நடைபெறுகின்றன.

44. शुद्धஸத்த்வமாவது– गुणत्रयरहित[a]மாயும் गुणत्रय–आश्रय[b]மாயுமுள்ள த்ரவ்யங்களிற்காட்டில் வேறுபட்டு விலக்ஷணமான ஸத்த்வகுணத்திற்கு आश्रय[c]மான த்ரவ்யம்.

45. இதன் படியைப்[d] பார்த்தால் परमयोगि[e]–वाङ्मनस[f]–अपरिच्छेद्य[g]–स्वरूप–स्वभावமாய் 'சேணுயர்வான'மென்றும் 'தெளிவிசும்பு'[1] என்றும் 'பொன்னுலகு'[2] என்றும் 'கலங்காப் பெருநகரம்'[3] என்றும் 'மாகவைகுந்தம்'[199*2] என்றும்

---

a - முக்குணங்கள் இல்லாதது; b - முக்குணங்களுக்கும் இருப்பிடம்; c - இருப்பிடமான; d - போக்கை; e - பெரிய யோகிகளின்; f - வாக்காலும் மனத்தாலும்; g - அளவிடமுடியாத

1 *தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும்,*
*ஒளிமுகில்காள் திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்குத்*
*தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும்,*
*துளிவார்கட்குழலார்க் கென்தூதுரைத்தல்செப்புமினே.*

(திருவாய் 9–7–5) : (மேகங்களைத்தூது விடுகின்றாள் பராங்குச நாயகி) மின்கள் விளங்க வானில் திரியும் மேகங்களே! திருமூழிக்களத்தில் சோதிவடிவமாய் வாழ்பவராய், மஹாபாபியான என் உள்ளத்தை ஸ்வயம்ப்ரகாசமான பரமபதமாக நினைத்து உறைபவரான எம்பெருமானிடம் நான் விடுக்கும் தூதுச் செய்தியைச் சொல்லுங்கள்.

2 *பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ,*
*நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நானிரந்தேன்,*
*முன்னுலகங்களெல்லாம்படைத்தமுகில்வண்ணன் கண்ணன்,*
*என்னலங்கொண்டபிரான்றனக் கென்நிலைமையுரைத்தே.*

(திரவாய் 6–8–1) : பராங்குச நாயகி எம்பெருமானிடம் பறவைகளைத் தூது விடும்போது 'பாவியாகிய நான் உங்களை வேண்டுவது எம்பெருமானிடம் என் கஷ்ட நிலையைச் சொல்வது ஒன்றே. இவ்வுதவி செய்து இதற்குப் பரிசாக நான் உங்களுக்குக் கொடுக்கும் ஸ்ரீவைகுண்டமாகிய நித்ய விபூதியையும் ஸம்ஸார மண்டலமாகிய லீலா விபூதியையும் உங்களுடையனவாகக் கொண்டு ஆள்வீர்கள்.

3 *அவனேயருவரையாலாநிரைகள் காத்தான்,*
*அவனேயணிமருதம் சாய்த்தான்,– அவனே*
*கலங்காப்பெருநகரம் காட்டுவான்கண்டீர்,*
*இலங்கா புரமெரித்தானெய்து.*

(மூன்றுந் திருவ 51) : கோவர்த்தன மலையால் பசுக்களை ரக்ஷித்து மருதமரங்களை முறித்துத் தள்ளி இலங்கையை எரித்தவனான எம்பெருமானே எந்நாளும் கலங்காத பெருநகரமாகிய பரமபதத்தைக் காட்டித் தருவான்.

சொல்லப்பட்ட வேறுபாட்டையுடையதாய் ப்ரஹ்மாதி பதங்களுமெல்லாம் நரகதுல்யங்களாய்த் தோற்றும்படி अपरिमित[a]-आश्चर्यங்களான भोग्य[b]-भोगोपकरण[c]-भोगस्थान[d]ங் களையுடைத்தாய் ஸர்வேச்வரனுக்கும் நித்யருக்கும் முக்தருக்கும் विग्रहादिरूपेण[e]-विचित्र ப்ரவாஹமாயிருக்கும்.

46. இப்படி अनन्तங்களான जनपद[f]-नगर-विमान-मण्डप-गोपुरादि-विभागங்களையுடைத்தான திவ்யலோகத்தில் प्रधानतमமான திருமாமணிமண்டபத்திலே अनन्तदेवतात्मक[g]மான दिव्ययोग पर्यङ्क[h]விசேஷத்திலே त्रिविध-चेतनரையும் त्रिविध-अचेतनங் களையும் स्वाधीनங்களாக்கிக் கொண்டு 'वैकुण्ठे तु परे लोके'[1] इत्यादिகளிற்படியே ஸர்வசேஷியான श्रियःपति எழுந்தருளி யிருக்கும்படி முமுக்ஷு-दशै[i]யில் नित्य अनुसंधेयமாய் मुक्त दशै[j]யில் नित्य-अनुभाव्य[k]மாயிருக்கும்.

47. இப் पर अवर-தத்த்வங்கள் இரண்டுக்கும் ஒரோர் ஆகாரங்களாலே साधर्म्य[l]ம் உண்டேயாகிலும் விசேஷ-

---

a - அளவிடமுடியாத; b - அநுபவிக்கப்படும் வஸ்து; c - அநுபவத்துக்குச் சாதனம்; d - அநுபவிக்க ஏற்ற இடம்; e - சரீரம் முதலிய உருவில்; f - தேசம்; g - ஆதிசேஷனென்னும் தெய்வத்தின் வடிவமான; h - எம்பெருமான் உலகத்தின் நலத்தைச் சிந்திக்கும் இடமாகிய கட்டில்; i - மோக்ஷத்தை விரும்பிம் நிலே; j - மோக்ஷத்தை அடைந்து விட்ட நிலே; k - அநுபவிக்க ஏற்றது; l - ஒத்திருத்தல்

1 वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः ।
आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैः सह ॥

(லிங் புரா ) : உயர்ந்த ஸ்ரீவைகுண்டத்தில் லோகநாதனை எம்பெருமான் பிராட்டியுடன் பிறரால் சிந்திக்க முடியாத பெருமையுடையனாய் முக்தர் களுடனும் நித்யஸூரிகளுடனும் எழுந்தருளியுள்ளான்.

ஆகாரங்களாலே வேறுபட்டு शेषशेषिभाव[a] – नियन्तृनियाम्यभाव[b] – व्याप्यव्यापकभाव[c] – आधाराधेयभावादि[d] களாலே இவை ஒன்றி நிற்கும்[e] நிலை-ப்ரணவத்திலும் ஸத்யशब्दத்திலும் புருஷ शब्दத்திலும் நாராயணशब्दத்திலும் புருஷோத்தம शब्दத் திலும் 'கறந்த பாலுள் நெய்போல்'[1] 'அடியேனுள்ளான்'[2]

a - சேதந-அசேதநங்கள் சேஷமாயிருத்தல், எம்பெருமான் சேஷியாயிருத்தல்; b - நியமித்தல் - நியமிக்கப் படுதல்; c - அவன் கலந்திருப்பதற்கு இடமாயிருத்தல் - எல்லாவற்றிலும் கலந்திருத்தல்; d - எல்லாவற்றையும் தரித்தல் - தரிக்கபடுதல்; e - சேர்ந்திருத்தல்

1 *பிறந்தமாயாபாரதம் பொருதமாயாநீயின்னே,*
*சிறந்தகால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே,*
*கறந்தபாலுள்நெய்யேபோ லிவற்றுளெங்கும்கண்டுகொள்,*
*இறந்துநின்றபெருமாயா வுன்னையெங்கேகாண்கேனே.*

(திருவாய் 8–5–10) : பூவுலகில் பல்வேறு அவதாரங்களைச் செய்தருளும் எம்பெருமானே! பஞ்ச பூதங்களையும் அவற்றின் காரியப் பொருள்களையும் சரீரமாகக் கொண்ட பெருமானே! கறந்த பாலினுள் நெய் கண்ணுக்குப் பிலப்படாது இருப்பது போல் நீ எல்லா வஸ்துக்களிலும் இருந்தும் கண்ணால் காணமுடியாதவனுயுள்ளாய். இப்படி எதிரே இருந்தும் நீ உன்னைக் காட் டுவதில்லை. இனி உன்னை எங்கே காண்பேன்?

2 *அடியேனுள்ளானுடலுள்ளானண்டத்தகத்தான்புறத்துள்ளான்,*
*படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன்பரம்பரன்,*
*கடிசேர்நாற்றத்துள்ளாலை யின்பதுன்பதுன்பக்கழிநேர்மை,*
*ஒடியாவின்பப்பெருமையோ னுணர்விலும்பரொருவனே.*

(திருவாய் 8–8–2) : அண்டத்துக்கு உள்ளும் புறமும் உள்ள ஸகல வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாய் ஒப்பற்றவனாய் எல்லோரினும் மேம்பட் டவனாய் துன்பம் கலவாத எல்லையற்ற ஆநந்தத்தையுடையவனாய் இயற்கையாக ஸர்வஜ்ஞனுயுள்ள எம்பெருமான் என் உள்ளத்திலே புகுந்தது மட்டுமன்றி என் சரீரத்துக்குள்ளும் புகுந்து நிற்கின்றான். என்ன ஆச்சரியம்!!

'ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றை'[1] 'உலகுநின்னொடொன்றி நிற்கவேறுநிற்றி'[2] इत्यादि களிலும் சுருங்க अनुसंधिक्கலாம்.

48. ஒன்றை அறிகையும் அதன் அறிவடியாக व्यापरि[a]க்கையும் ஒரு फலத்தை भुजि[b]க்கையும் தனக்குத் தான் தோன்றுகையும் இல்லாத द्रव्यம் अचेतन தத்த்வம்.

49. இவற்றைப் पराधीन[c]மாகவுடையது ஜீவதத்த்வம்.

50. त्रिविध-चेतन-अचेतनங்களுடைய ஸ்வரூப[d] – ஸ்த்திதி[e] – ப்ரவ்ருத்திகள்[f] மூன்றும் தான் இட்ட வழக்காம்படி நிற்கிறது परதத்த்வம்.

---

a - செயல் புரிதல்; b - அநுபவித்தல்; c - எம்பெருமானால் வருவது; d - உருவம்; e - தொடர்ந்து நிற்றல்; f - செயல் புரிதல்

1
*யானும்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனைத்*
*தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலைத்*
*தேனும்பாலும்கன்னலு மமுதுமாகித்தித்தித்து, என்*
*ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே.*

(திருவாய் 8-8-4) : எம்பெருமான் என்னைச் சரீரமாகவுடையனாதலின் என்னைச் சொல்லும் சொல்லுக்குப் பொருளாய் நிற்கின்றான். அவன் ஸகல சேதந அசேதநங்களுக்கும் காரணமாயிருப்பவன். தான் விஷ்ணு உருக்கொண்டு பிரமனையும் சிவனையும் படைத்து அவர்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன். இப்படி உலகுக்கு ஒப்பற்ற காரணமாயிருக்கும் அவன் எனக்குத் தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகிப் பரமபோக்யனாயுள்ளான். என் சரீரத்திலும் ப்ராணனிலும் ஞானத்திலும் புகுந்து என் ஆத்மாவைச் சரீரமாகக்கொண்ட எம்பெருமானை அவனது அநுக்ரஹத்தாலேயே கண்டுகொண்டேன்.

2
*உலகுதன்னைநீபடைத்தி யுள்ளொடுக்கிவைத்தி, மீண்*
*டுலகுதன்னுளேபிறத்தி யோரிடத்தைஎல்லையால்,*
*உலகுநின்னொடொன்றிநிற்க வேறுநிற்றியாதலால்,*
*உலகில்நின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே.*

(திருச்சந்த 12) : எம்பெருமானே! உலகங்களை நீ படைக்கின்றாய். ப்ரளய காலத்தில் அவற்றை உன் வயிற்றில் வைத்துக் காக்கின்றாய். நீயும் பல அவதாரங்களைச் செய்கின்றாய். நீ இன்ன இடத்தில் மட்டும் இருப்பாயென்று சொல்ல முடியாது. உலகமுழுதும் உனக்குச் சரீரமாய் உன்னோடு ஒன்றி நிற்க, நீ மட்டும் அவற்றினும் விலக்ஷணனாய் விளங்குகின்றாய். உன் ஆச்சர்யமான நிலைகளை உலகில் அறிய வல்லர் யார் இருக்கின்றார்?

இத் தத்த்வ - விவேகத்திற்கு ப்ரயோஜநம் தன் விசேஷணங்களை[a] அறியாமையாலே வருகிற प्रकृति-आत्म-भ्रम[b]மும் தன் விசேஷ்யத்தை[c] அறியாமையாலே வருகிற स्वतन्त्र-आत्म-भ्रम[d]மும் கழிந்து தன் ஸ்வரூபத்திற்கு त्याज्य[e]-उपादेय[f]- புருஷார்த்தங்களைத்[g] தெளிந்து विपरीत-अभिसंधि-निवृत्ति[h]யும் प्राप्यरुचि[i]யும் பிறந்து प्रापक-सापेक्ष[j]தைகை.

*திருநாராயணனெனுந் தெய்வமும் சித்துமசித்துமென்று*
*பெருநான்மறைமுடி பேசிய தத்துவமூன்றிவை கேட்டு*
*ஒருநாளுணர்ந்தவ ருய்யும் வகையன்றி யொன்றுகவார்*
*இருநாலெழுத்தி னிதயங்க ளோதிய வெண்குணரே. (10)*

a - அசேதநத்துக்கு இல்லாத தன் தன்மைகளை; b - சரீரத்தையே ஆத்மாவாகக் கருதுதல்; c - தன்னையும் சரீரமாகக் கொண்டுள்ள ஈச்வரனை; d - ஆத்மாவை ஸ்வதந்த்ரமாக நினைத்தல் ; e - விலக்க உரியன; f - கைக்கொள்ள உரியன; g - பலன்களை ; h - விபரீத எண்ணங்கள் ஒழிதலும்; i - பலனில் ஆசை; j - உபாயத்தைச் செய்ய முற்படுமவன்

1 *திருநாராயணன் எ(ன்)னும் தெய்வமும்- ஸ்ரீமந்நாராயணன் எனப் படும் ஈசுவரனும் ; சித்தும் - சேதநமும்; அசித்தும் என்று அசேதநமும் என்று; பெருநான்மறை முடி பேசிய - பெரிய நான்கு வேதங் களின் அந்தத்தில் சொல்லப்பட்ட; இவை தத்துவம் மூன்று - இந்த மூன்று தத்துவங்களையும்; ஒரு நாள் கேட்டு உணர்ந்தவர் - (தம்முடைய பாக்யம் பக்வமான) ஒரு நாளில் (ஆசார்யர்களிடம்) கேட்டு அறிந்தவர்களும்; இருநாலு எழுத்தின் - அஷ்டாக்ஷரத்தின்; இதயங்கள் ஓதிய - தாத்பர்யத்தை அநுஸந்தித்தவர்களும்; எண்குணர் - எட்டு ஆத்ம குணங்களையுடையருமான பெரியோர்கள்; உய்யும் வகையின்றி - (தாம்) உஜ்ஜீவிப்பதற்கு உபாயத்தைத் தவிர; ஒன்று உகவார் - வேறொன்றையும் மனத்திற் கொள்ளமாட்டார்கள்*

*எட்டுக் குணங்கள் -*

| | | |
|---|---|---|
| *1. கருணை* | *2. பொறுமை* | *3. பொறாமை யின்மை* |
| *4. பரிசுத்தம்* | *5. வருந்தாமை* | *6. நன்மையை நினைத்தல்* |
| *7. லோபமின்மை* | *8. ஆசையின்மை - என்பன.* | |

1 காரணமா யுயிராகி யனைத்துங் காக்கும்
கருணைமுகில் கமலையுட னிலங்கு மாறும்
நாரணனார் வடிவான வுயிர்க ளெல்லாம்
நாமென்று நல்லடிமைக் கேற்கு மாறும்
தாரணிநீர் முதலான மாயை காலம்
தனிவானென் றிவையுருவாந் தன்மை தானும்
கூரணிசீர் மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடன் நாம் கண்டவகை கூறி னோமே. (11)

2 स्तनंधयैरपि सहसैव सुग्रहा
समुत्थिता निधिरिव वेङ्कटेश्वरात् ।
परावरस्थितिमिह तत्त्वमातृका
करोत्यसौ करतलमौक्तिकोपमाम् ॥

---

1 காரணமாய் – (எல்லாவற்றுக்கும்) காரணமாய்; உயிராகி – (எல்லாவற்றுக்கும்) அந்தர்யாமியாய்; அனைத்தும் காக்கும் – ஸகலத்தையும் ரக்ஷிக்கின்ற ; கருணைமுகில் – கருணையாகிய நீரைப்பொழியும் மேகம் போன்றவனான பகவான்; கமலையுடன் இலங்குமாறும் – பிராட்டியுடன் ப்ரகாசிக்கும் ப்ரகாரத்தையும்; நாரணனார் வடிவான– எம்பெருமானது சரீரமான; உயிர்கள் எல்லாம் – ஜீவாத்மாக்கள் எல்லாம்; நாம் என்று – 'நாம் முன் நாம் முன் என்று (போட்டியிட்டு) ; நல் அடிமைக்கு ஏற்குமாறும் – சிறந்த கைங்கர்யம் செய்வதற்குத் தகுந்தவர்களாயிருக்கும் ப்ரகாரத்தையும்; தாரணி நீர் முதலான மாயை – பூமி ஜலம் முதலிய பூதங்களாய் மாறுகிற மூலப்ரக்ருதி; காலம் தனிவான் – காலம் சுத்தஸத்துவம்; என்று இவை – என்ற அசேதந தத்வங்கள்; உருவாம் தன்மை தானும் – (ஸ்தூலமான) உருவமுள்ளனவாயிருக்கும் ஸ்வபாவத்தையும்; கூர் அணிசீர் மதியுடைய – ஸூக்ஷ்மமான அழகிய சிறந்த ஞானத்தையுடைய; குருக்கள் காட்ட – ஆசாரியர்கள் உபதேசிக்க; குறிப்புடன் – கவனத்துடன்; நாம் கண்ட வகை – நாம் அறிந்தபடியே; கூறினோம் – (இந்த ரஹஸ்யத்தில்) வெளியிட்டோம்

2 இந்த தத்த்வ மாத்ருகை என்னும் ரஹஸ்யம் ஸ்ரீவேங்கடேசனிடமிருந்து ஒரு சேமநிதிபோல் தோன்றிப்பாலர்களும் விரைவில் மிக எளிதில் உணருவதற்கு ஏற்றதாய் உள்ளது. இது உயர்ந்ததும் தாழ்ந்தவையுமான தத்வங்களின் உண்மைநிலையைக் கையிலங்கு முத்துப் போல் எளிதாய் காட்டுகின்றது.

अक्षय्यशान्तिमकरन्दरसप्रसक्तान्
अभ्यर्थये मुरभिदङ्घ्रिसरोजभृङ्गान् ।
कामं प्रसीदत यथाऽहमनन्यभावः
कर्णामृतानि भवतामतारयेयम् ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु तत्त्वमातृका संपूर्णा ।

**தத்த்வ மாத்ருகா முற்றும்.**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

*பரிபூர்ணமான அமைதியென்னும் தேன் சுவையை மிகுதியாகப் பெற்று எம்பெருமானுடைய திருவடித்தாமரையை வண்டுபோல் மொய்க்கின்ற பாகவதோத்தமர்களிடம் அடியேன் வேறொன்றிலும் கருத்தைச் செலுத்தாமல் அவர்கள் செவிக்கு அமுதூட்டும் விஷயங்களை விண்ணப்பிக்கும்படி அருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 7 रहस्यमातृका

(விளக்கம் – ரஹ. விவ. – 95–107)

# 7 ரஹஸ்ய மாத்ருகை

[முன்னுரை : வடமொழியில் 'அ' முதல் 'க்ஷ' வரையில் உள்ள ஐம்பத்தொன்று அக்ஷரங்கட்கு 'மாத்ருகை' என்று பெயர். இந்த ரஹஸ்யத்தில் திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களின் ஸாரார்த்தங்களைச் சுருக்கி ஐம்பத்தொன்று வாக்யங்களில் அருளிச்செய்வதால் ரஹஸ்ய மாத்ருகை எனப்பெயர் வந்தது]

1
*அப்படிநின்ற அமலன்படி யெல்லாம்*
*இப்படி எம்முள்ளத்தெழுதினார் – எப்படியும்*
*ஏரார் சுருதியொளியா லிருள்நீக்கும்*
*தாராபதி யனையார் தாம்.* (12)

திருமந்திரத்தில் மூலமாகிய[a] ஒற்றையெழுத்தான முதல் பத[b]த்தில் முதலெழுத்திலே[c]

1. श्रियःपतियினுடைய सर्व-जगत्-कारणत्वமும்
2. सर्व-रक्षकत्वமும்

---

a - வேதங்களுக்கு முதலில் உள்ள; b - ப்ரணவம் ; c - அகாரத்திலே

1 *ஏர் ஆர் – பெருமை பொருந்திய ; சுருதி ஒளியால் – வேதாந்தமாகிய நிலவினால்; எப்படியும் இருள் நீக்கும் – எவ்விதத்திலும் அஜ்ஞானமாகிய இருளைப் போக்குகின்ற; தாராபதி அனையார்தாம் – நக்ஷத்ரங்களுக்கு அரச(னான சந்த்ர)னைப் போன்ற ஆசார்யர்கள்; அப்படி நின்ற – அவ்வாறு (நம்மால் அறிய முடியாதபடி) நின்ற; அமலன் படி யெல்லாம் – குற்றமற்ற எம்பெருமானுடைய ப்ரகாரங்களையெல்லாம்; இப்படி – இந்த ரஹஸ்யத்தில் கூறியபடி; எம் உள்ளத்து எழுதினார் – நம் மனத்தில் பதியும்படி உபதேசித்தனர்.*

3. नित्य-निरुपाधिक[a]-सर्व-शेषित्वமும்

4. ஜீவனுடைய नित्य-निरुपाधिक-शेषत्वமும்

5. இதன் நடுவெழுத்திலே[b] श्रिय:पतिக்கு निरुपाधिक-शेष-भूतனான ஜீவன் மற்றொருவருக்கு உரியனல்லாதமையும்

6. மூன்றாமெழுத்திலே[c] ஜீவனுக்கு देह-इन्द्रियादिகளில் வேறுபாடும்

7. அறிவானமையும்

8. அறிவுடைமையும்

9. இரண்டு[d] आकारத்தாலும் ஆநந்த-ஸ்வரூபனாயிருக்கும் படியும்

10. ஸ்வயம்ப்ரகாசனாயிருக்கும்[e] படியும்

11. தனக்குத் தான் தோற்றும்[f] படியும்

12. அணுவானமையும்

13. नम: என்கிற இரண்டாம் पदத்திலே இஜ்ஜீவன் அநாதியாக விரோதி[g] கையிலே அகப்பட்டு நின்றமையும்

14. தான் ஒன்றையும் பற்ற निरुपाधिक[h] சேஷியல்லாமையும்[$1]

15. ஒரு கார்யத்திலும் निरपेक्षकर्तृत्व[i] மில்லாமையும்[$2]

16. ஸ்வதந்த்ர ஸ்வாமியாலே भागवतசேஷனாக விநியுக்த[j]னானபடியும்

17. अनन्योपायत्व[k]மும்

a - எப்பொழுதும் இயற்கையான; b - உகாரம்; c - மகாரம்; d - ஆநந்தவடிவு, ஆநந்தத்தையுடைமை; e - மற்றொரு ஞானம் வேண்டாமல் தானே ப்ரகாசிப்பவன்; f - தான் தோன்றுவதால் வரும் பயனைத் தானே பெறுதல்; g - அஜ்ஞானம், கர்மம், ப்ரக்ருதி ஸம்பந்தம் முதலியன; h - இயற்கையான தலைவன்; i - எம்பெருமானை எதிர்பாராது செயல் புரிதல்; j - பயன்படுத்தப்பட்டவன்; k - எம்பெருமானையன்றி வேறு உபாயமில்லாமை

$1 - नम: शेषित्वं $2 - नम: स्वातन्त्र्यं

18. உபாயவிசேஷ-परिग्रहமும்

19. நலந்தரும்[a] சொல்லான நாராயணशब्दத்தில் அசித்தி னுடைய ஸ்வரூப-अन्यथाभावமும்

20. ஜீவர்களுக்கு ஸ்வரூப-अन्यथाभाव[b]மில்லாமையும்

21. க்ஷேத்ரஜ்ஞனுடைய[c] ஸ்ருஷ்டி-ஸம்ஹார-விஷயத் வமும்[d]

22. चेतनवर्गத்தினுடைய आनन्त्य[e]மும்

23. ஸர்வநியन्ता[f]வினுடைய स्वरूप-स्वभाव-नित्यत्व-प्रकारமும்

24. नेतृत्व[g]மும்

25. ஸர்வ-व्यापकत्व மும்

26. ஸர்வ-आधारत्वமும்

27. सर्वविध-बन्धुत्वமும்

28. सर्वविध-पुरुषार्थ-उपायत्वமும்

29. मुक्त-प्राप्यत्व[i]மும்

30. இந் நாராயண शब्दத்தில் चतुर्थिயிலே ஒழிவில் காலமெல்லா முடனுய்மன்னி வழுவிலாவடிமை[j] 22 * 1 செய்ய வேண்டும்படியும் प्रधानமாக अनुसंधेयம்.

இப்படி திருமந்திரத்தில் ஸர்வवेदங்களுக்கும் விதையான முதற்[k] पदத்திலே முளைத்து[l] இரண்டாம்[m] पदத்திலே வளர்ந்து[n] மூன்றும்[o] पदத்திலே फलपर्यन्तமான ஸம்யக்-ஜ்ஞாநத்தை[p]

---

a - எல்லா நன்மைகளையும் விளைவிப்பது; b - உருவமே மாறுதல்; c - ஜீவாத்மா; d - படைப்புக்கும் அழிவுக்கும் அகப்பட்டமை; e - எண்ணற்ற தன்மை; f - எல்லாவற்றையும் நியமிக்கும் எம்பெருமான்; g - முன் நின்று நடத்தல்; h - எல்லாவற்றிலும் உட்புகுதல், எல்லாவற்றிலும் கலத்தல்; i - அடையப்படுதல்; j - குற்றமற்ற கைங்கர்யம்; k - ப்ரணவத்திலே; l - ஸ்வரூப அறிவு பிறந்து; m - நம: சப்தம்; n - அஹங்காரமமகாரங்கள் நீங்குதல், ப்ரபத்தியை அறிதல் பெற்று; o - நாராயணாய என்பது ; p - விசேஷ அறிவு

யுடையவனுக்கு अनुष्ठेय[a]மான साङ्गभरसमर्पणத்தை विशदமாக प्रकाशिப்பிக்கிற द्वयத்தில்

31. प्रथम – அக்ஷரமான श्रीशब्दத்திலே விஷ்ணுपत्निயாய் पुरुषकारभूत[b]யான வேரிமாருத[c] பூமேலிருப்பாள் வினை தீர்க்கும் ப்ரகாரங்களும்

32. அதன் मतु[d]ப்பிலே அலர்மேல்மங்கை अशरण्य-शरण्य[e]னவன் மார்பிலே 'அகலகில்லேன் இறையு[f] 23*1'மென்று உறையும்படியும்

33. நாராயண शब्दத்தில் 'நிகரில்புகழாய்'[23*1] इत्यादिகளில் அருளிச் செய்த शरण्य स्वभावமும்

34. चरणशब्दத்தில் उपाय–उपेयदசைகளை ஊடுருவிநிற்கிற[g] திவ்ய–மங்கள–விக்ரஹ–योगமும்

35. शரணம் என்கிற शब्दத்திலே 'உன் சரணல்லால் சரணில்லை'[1]யென்று கழல்களவையே சரணுகக் கொள்ளுகிற படியும்

36. प्रपद्ये என்கிற पदத்திலே गत्यर्थ[h]மான धातुவில் ப்ரமாண–அநுஸாரத்தாலே अध्यवसायादि–पूर्वक[i]மாக அடிக்கீழ்

---

a - செய்யவேண்டிய; b - பரிந்து பேசுபவள்; c - மணம் மாருத; d - பிரியாதிருத்தலைக் கூறும் வடமொழி விகுதி; e - கதியற்றவர்களுக்கும் புகலாயுள்ளவன்; f - கணப்பொழுதும் ; g - முழுதும் கொண்டுள்ள ; h - அடைதல் எனும் பொருள் கொண்ட; i - மஹாவிச்வாஸம் முதலியனவற்றை முன்னிட்டுக் கொண்டு

1 தருதுயரம்தடாயே லுன்சரணல்லால்சரணில்லை
விரைகுழுவு மலர்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே
அரிசினத்தாலீன்றதாயகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவியதுவேபோன் றிருந்தேனே.

(பெருமாள் திரு 5–1) : எம்பெருமானே! நீயே எனக்குக் கொடுத்த இத்துன்பத்தை நீ போக்காவிடினும் உன் திருவடிகளன்றி எனக்கு வேறு கதியில்லை. பெற்ற தாய் மிக்க கோபத்தால் தன் குழந்தையை வெறுத்துத் தள்ளினாலும் அக்குழந்தை தாயினது அருளையே நினைந்து அழுவதுபோல் உள்ளேன்.

அமர்ந்து அடைக்கலம்[a] புகுகிறபடியும்

37. இப் பதத்தில் உத்தமனிலே[b] 'களைகண்[c] மற்றிலே[1]'னென்னும்படி தானும் தமரும் பிறரும் தனக்குத் தஞ்சமன்றிக்கே 'புகலொன்றில்லா அடியே'னென்று[23*1] நிற்கிற நிலையும்

38. श्रीमते என்கிற பதத்திலே—பூவளருந் திருமகளால் பொன்னுலகில்[d] அருள்பெறுமவனுக்குக் 'கோலத் திருமாமகளோடுன்னை[2]'யென்னும்படி நின்ற प्राप्य-दम्पति[e]களுடைய பிரிவற்ற சேர்த்தியும்

39. நாராயணாய என்கிற பதத்திலே வழுவிலாவடிமைக்கு[f] வகுத்த[g] சேஷியினுடைய நிரதிசய-भोग्यत्व[h]மும்

---

a - சரணாகதி ; b - தன்மை விகுதி; c - உபாயம், கதி; d - பரமபதத்தில்; e - அடையப்படும் திவ்ய தம்பதிகள்; f - குற்றமற்ற கைங்கர்யத்தைப் பெற; g - உரிமைகொண்ட ; h - ஒப்பற்ற இனிமை

1 *களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்*
*வளைவாய்நேமிப்படையாய் குடந்தைக்கிடந்தமாமாயா*
*தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது*
*இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே.*

(திருவாய்மொழி 5–8–8) : ஆராவமுதே! என் துன்பத்தை நீ ஒழித்தாலும் ஒழிக்காவிட்டாலும் உன்னையன்றி வேறு கதியற்றவன் அடியேன். என் சரீரம் தளர்ந்து உயிர் சரிந்து போவதற்கு முன்பே மனம் ஒன்றி உன் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு போகும்படி நீ திருவுள்ளம் கொள்ள வேண்டும்.

2 *ஞாலத்தோடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்*
*சாலப்பலநா ளுகந்தோறுயிர்கள் காப்பானே*
*கோலத்திருமாமகளோ டுன்னைக்கூடாதே*
*சாலப்பலநா ளடியேனின்னும் தளர்வேனோ.*

(திருவாய் 9–3) : பல்வேறு அவதாரங்களைப் பண்ணியுகந்தோறும் ஆத்மாக்களை ரக்ஷிக்கும் எம்பெருமானே! நீ பிராட்டியோடு இருக்கும் இருப்பையும் உன் அழகையும் உன் லீலைகளையும் நான் ஒருவனும் எப்பொழுதும் அனுபவிக்கப் பெருமல் இன்னும் தளர்ந்தே நிற்கக் கடவேனோ?

40. நம: शब्दத்திலே सर्व-विरोधि-निवृत्तिदशैயில் வரும் कैङ्कर्यம் களையற்று[a] இருக்கும்படியும் प्रधानமாக अनुसंधेयம்.

இம் மந்த்ரங்கள் இரண்டிலும் தோற்றுகிற अनुष्ठानத்திற்கு विधायक[b]மான चरमश्लोकத்தில்

41. सर्वधर्मान् என்கிற पदத்திலே குறிக்கொள்[c] ஞானங்களாலே பண்ணும் அருந்தவங்களினுடைய நாநாविधत्वமும்

42. परित्यज्य என்கிற पदத்திலே போக்கற்றவன்[d] ब्रह्मास्त्रतुல்யையான ப்ரபத்தியைப் பண்ணும்போது अनपेक्षित[e]ங்களிலும் தனக்கு शक्यமல்லாதவற்றிலும் துவக்கற்று வெறுமையே[f] துணையாக முன்னிடும் படியும்

43. 'மாம்' என்கிற पदத்திலே மலர்மகள் விரும்பும் நமரும்பெறலடிகள் பத்துடையடியவர்க்கு எளியவனாய் அருள் புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்து அடைக் கலங்கொள்ள ஒருப்பட்டு[g] நிற்கிற நிலையும்

44. एकं என்கிற पदத்திலே தாமரையாள்கேள்வனொருவனே பற்றிலார் பற்ற நிற்கிறபடியும்

45. शரணம் என்கிற पदத்திலே अशरण्य-शरण्यன் விபரீத-अभिसन्धि[h]யற்ற देव-प्रकृति[i]களுக்கு வன்சரணாய்த்தன்சரண் நிழல்கீழ் வைக்க வகுத்தமையும்

a - குற்றமற்று ; b - விதிக்கின்ற ; c - மிக்க கவனத்துடன்; d - வேறு கதியற்றவன்; e - வேண்டாதவைகளிலும்;f - கைம்முதலில்லாமை; g - முன்வந்து ; h - தவறு செய்வதில் எண்ணம்; i - தெய்வத்தன்மையுடைய நல்லோர்

46. व्रज என்கிற पदத்திலே நெறியெல்லா[a] மெடுத்துரைத்த நிறைஞானத்தொரு[b] மூர்த்தி[c] தந்த ஞானக்கையாலே 'நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலே'னென்று நாம் அவனைப் பற்றலாம்படி தன் பாகமே சரணாகத் தந்தொழிந்தமையும்

47. அஹம் என்கிற पदத்திலே வல்லேகாணென்னும்[d] படியான ஸர்வசக்தி கொழுஞ்சோதியுயரத்துக்[e] கூட்டரிய[f] திருவடிக்கள் கூட்டி[g] அடிமைகொள்ள ஒருப்பட்டபடியும்[h]

48. त्वा என்கிற पदத்திலே 'நின்னருளே புரிந்திருந்தே'[1] னென்றிருக்கிற कृतकृत्य[i]னை 'ஆராற்குறையுடைய'[2]மென்னும்படி चातकवृत्ति[j]யாக்கினபடியும்

---

a - எல்லா உபாயங்களையும் ; b - ஸர்வஜ்ஞனை; c - எம்பெருமான்; d - நீ சக்தியுடையை; e - பரமபதத்தில்; f - பெறுதற்கு அரிய; g - நம் முடியில் வைத்து; h - முன்வந்தமை; i - ப்ரபத்தியைச் செய்து முடித்தவன்; j - சாதகப்பறவைபோல் பலனை எதிர்பார்ப்பவன்

1 *சென்னியோங்கு தண் திருவேங்கடமுடையாய், உலகு*
*தன்னைவாழநின்றநம்பி தாமோதராசதிரா, என்னையுமென்னு*
*டைமையையுமுன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு, நின்னருளே*
*புரிந்திருந்தேனினியென்திருக்குறிப்பே.*

(பெரியாழ்வார் திரு 5-4-1) : எம்பெருமானே! உலகத்தாரை வாழ்விப்பதற்காக எழுந்தருளியிருப்பவனே! என் சரீரத்திலும் என்னைச் சேர்ந்தவனாகக் கருதப்படும் மற்ற வஸ்துக்களிலும் உன் திருவாழி திருச்சங்கு சின்னத்தைப் பொறித்துக் கொண்டு உன் அருளையே விரும்பி உன் திருவடிகளிலே பிரபத்தி செய்கிறேன், இதற்கு மேற்பட்ட பயன் வேறு என்ன ?

2 *ஆள்கின்றானாழியானாரால்குறைவுடையம்*
*மீள்கின்றதில்லை பிறவித்துயர் கடிந்தோம்*
*வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன் கேள்வன்*
*தாள்கண்டுகொண்டென்றலைமேல்புனைந்தேனே.*

(திருவாய் 10-4-3) : எம்பெருமான் திருவாழியும் கையுமாய் நின்று நம்மை ஆள்கின்றான். நமக்கு வேறு ஒருவரால் ஆகவேண்டியது என்ன இருக்கிறது? இனி இந்த ஸம்ஸார மண்டலத்துக்குத் திரும்பாதவாறு பிறவித்துயர் ஒழியப் பெற்றோம். அவன் திருவடிகளைக் கண்ணாலே காணப் பெற்று அவற்றை என் முடிமேல் சூட்டிக் கொண்டேன்.

49. सर्वपापेभ्य: என்கிற पदத்திலே 'நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்[1]' என்றும், 'நமன்[a] போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம்[2]' என்றும் சொல்லுகிறபடியே எண்ணாராத் துயர்விளைக்கும் வல்வினையே மாளாதோ என்னும்படி எண்ணிறந்து கிடக்கிறபடியும்

50. மோக்ஷயிஷ்யாமி என்கிற पदத்திலே இருள்தரு மாஞாலத்துள் இனிப்பிறவி கழிந்து மருளொழிந்த மடநெஞ்சமுடையார்க்கு வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளல் மணிவண்ணன் விண்ணுலகம்தர விரைந்து சார்ந்த இருவல்வினைகளும்[b] சரிந்து[c] மாயப் பற்றறுத்துத்[d] தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி[e] வீடுதிருத்துகிறபடியும்[f]

---

a - யமன் போலே ; b - புண்யபாபங்கள்; c - ஒழித்து; d - ப்ரக்ருதிஸம்பந்தம்; e - ப்ரபத்தியில் மூட்டி; f - பரமபதத்தை அலங்கரித்தல்;

1 *மானேய்கண்மடவார் மயக்கிற்பட்டு, மாநிலத்து*
*நானேநானாவிதநரகம்புகும் பாவஞ்செய்தேன்,*
*தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை, என்*
*ஆனாய்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே.*

(பெரிய திரு 1–9–2) : மான்போன்ற கண்களையுடைய பெண்களின் அழகில் மயங்கிப் பலவகையான நரகம் புகும் பாவங்களைச் செய்தேன். இப்பொழுது திருவேங்கடமுடையானாகிய உன்னைச் சரணமடைந்தேன். என்னை ஆட்கொண்டருள வேண்டும்.

2 *எம்மனாஎன்குலதெய்வமே யென்னுடைய நாயகனே*
*நின்னுளேனாய்ப்பெற்றநன்மை இவ்வுலகினிலார்பெறுவார்*
*நமன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம்*
*சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே.*

(பெரியாழ் திரு 5–4–3) : எம்பெருமானே! அடியேன் உனக்குத் தாஸனான பின்பு பெற்ற நன்மையை இவ்வுலகில் யார் பெற முடியும்? பூதம் பிசாசம் முதலியன போல் வந்து தள்ளி என்னை அமுக்கும் உலகில் உள்ள என் பாபங்கள் எல்லாம் மூச்சுவிடாமல் ஓடிப்போய் ஒளிந்து கொண்டன.

51. मा शुच: என்கிற वाक्यத்திலே உழலையென்பின் பேய்ச்சி முலையூடு அவனையுயிருண்டான் கழல்களவையே சரணாகக் கொண்டு செய்த வேள்வியன் 'திருமால் தலைக்கொண்ட[a][1] நங்கட்கு எங்கே வரும் தீவினையே' 'கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை நான்கண்டேனே[2]' என்று தெளிவுற்ற சிந்தையாலே தேறி यावत्–शरीरपातம் आज्ञानुपालनத்தாலே अग्नि–इन्द्रादि–शब्दங்களை प्रयोगिக்கு மளவிலும் அந்ய–देवता–अभिसन्धिயற்ற ஸ்வயம்– ப்ரயோஜந–கைங்கர்ய–ரஸத்தாலே कृतार्थ[b]னாயிருக்கும் படியும் प्रधानமாக अनुसंधेयம்.

**a** - சரணமாகப் பற்றிய; **b** - இங்கேயே பலன்பெற்றவன்

1 *திருமாலுருவுக்கும்மேரு அம்மேருவில்செஞ்சுடரோன்*
*திருமால்திருக்கைத்திருச்சக்கரமொக்கும், அன்னகண்டும்*
*திருமாலுருவோடவன் சின்னமே பிதற்றுநிற்பதோர்*
*திருமால்தலைக்கொண்டநங்கட்கு. எங்கேவரும்தீவினையே.*

(திருவிருத் 88) : மேருமலை பிராட்டியின் நிறம் கலந்த எம்பெருமான் திருமேனியை ஒத்திருக்கும். அம்மலையில் சூரியன் இருப்பது அவன் திருக்கையில் உள்ள திருச்சக்கரத்தை ஒத்திருக்கும். இப்படி போலியான வஸ்துக்களைக் கண்டே அவனையும் அவன் சின்னத்தையும் கண்டதாகக் கருதிப் பிதற்றும்படியான பெரிய மோஹம் பெற்று அவனையே பற்றி நிற்கும் நமக்கு அவனைவிட்டுப் பிரிந்து நிற்கும்படியான பாபம் எப்படி வரும் ? என்கிறாள் பராங்குச நாயகி.

2 *கூட்டுதிநின்குரைகழல்களிமையோரும்தொழாவகை செய்து,*
*ஆட்டுதிநீயரவணையா யடியேனுமஃதறிவன்,*
*வேட்கையெல்லாம் விடுத்தென்னையுன்திருவடியேசுமந்துழல*
*கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே.*

(திருவாய் 4–9–9) : எம்பெருமானே! பிரமன் முதலிய தேவர்களும் உன்னைத் தொழ அகப்படாது நின்று உன்னைச் சரணமடைந்தவர் எத்தகைய தாழ்ந்தவராயினும் உன் திருவடிகளோடு கூட்டுவாய் என்ற அர்த்தத்தை அடியேனும் அறிவேன். உலக விஷயங்களில் ஆசையை விட்டு உன் திருவடிகளையே முடிவில் சுமந்து திரியும்படி அரிய திருவடிகளில் என்னைக் கூட்டிவைத்தாய், இதை நிச்சயமாய்க் கண்டேன்.

இப்படி திருமந்த்ராதிகளில் முற்பட ஶிக்ஷிக்கும் அர்த்தமே மோக்ஷசாஸ்த்ரங்களில் முதல்—நடுவு—இறுதியாக முகம்மாறிக்[a] கோக்கின்ற வர்ண-ஸரங்களுக் கெல்லாம்[b] मातृ[c]கை.

1 *செம்பொற் கழலிணைச் செய்யாளமருந் திருவரங்கர்*
*அன்பர்க்கடியவரா யடிசூடிய நாமுரைத்தோம்*
*இன்பத்தொகை யெனவெண்ணிய மூன்றிலெழுத்தடைவே*
*ஐம்பத்தொருபொரு ளாருயிர்காக்கு மமுதெனவே.* *(13)*

2 बहुश्रुतैरियमधुना मितप्रियैः अनुक्रमादनुदिनभोगलालसैः ।
रमापतौ निहितभरैरुदीरिता रसावहा भवति रहस्यमातृका ॥

---

a - மாறிமாறி; b - எழுத்துக்களின் மாலை ; c - மூலமாகும்

1 *செம்பொன் கழல் இணை – சிவந்த பொன்போன்ற இரண்டு திருவடிகளையுடைய ; செய்யாள் அமரும் திருவரங்கர் – பிராட்டி வீற்றிருக்கும் (திருமார்பையுடைய) ஸ்ரீரங்கநாதருடைய ; அன்பர்க்கு அடியவராய் – தொண்டர்களுக்கு தொண்டர்களாய் ; அடி சூடிய நாம் – (அவர்களுடைய) திருவடிகளை(த்தலையில்) சூடிய நாம் ; இன்பத்தொகை என – ஆநந்தத்தின் கூட்டம் என்று ; எண்ணிய மூன்றில் எண்ணப்பட்ட ரஹஸ்யங்கள் மூன்றில் ; எழுத்து அடைவே – அக்ஷரங்களின் வரிசையில் ; ஆர் உயிர்காக்கும் அமுது என – அருமையான ஜீவாத்மாவை உஜ்ஜீவிப்பிக்க செய்யும் அம்ருதம் என்று சொல்லும்படி; ஐம்பத்தொரு பொருள் – ஐம்பத்தோரு அர்த்தங்களை; உரைத்தோம் – (இந்த ரஹஸ்யத்தில்) கூறினோம்.*

2 வேதார்த்தங்களைப் பன்முறை கேட்டு நல்ல ஞானம் பெற்ற ஆஸ்திகர்கள் பலர் உள்ளனர். அவர்கள் திவ்யதம்பதிகளிடம் பரந்யாஸத்தைச் செய்துமுடித்தவர்கள். அவர்கள் தினந்தோறும் வரிசையாக ரஹஸ்யங்களின் அர்த்தத்தை அநுஸந்தித்து அநுபவிக்வேண்டுமென்ற ஆசையுடையவராயுள்ளனர். ஆனால் அவர்கள் இப்பொழுது அர்த்தங்களைச் சுருக்கமாக அநுஸந்திக்க வேண்டுமென்ற ருசியுடையராயுள்ளனர். அவர்கள் இந்தச் சுருக்கமான ரஹஸ்யத்தை அநுஸந்தித்தால் இது பேரின்பம் விளைவிப்பதாக இருக்கும்.

रहस्यमातृका सेयं वेङ्कटेशविपश्चिता ।
विशुद्धदेशिकवता रङ्गधाम्नि व्यलिख्यत ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु रहस्यमातृका संपूर्णा ।

**ரஹஸ்ய மாத்ருகா முற்றும்.**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

*இந்த ரஹஸ்ய மாத்ருகை பரிசுத்தரான ஆசார்யர்களின் கடாக்ஷம் பெற்ற ஸ்ரீவேங்கடேசன் என்னும் வித்வானால் ஸ்ரீரங்கத்தில் இருக்கும்போது எழுதப்பட்டதாகும்.*

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 8 तत्त्वसंदेशः

(விளக்கம் – ரஹ. விவ. – 108–118)

# 8 தத்த்வ ஸந்தேசம்

[முன்னுரை : மாதவன் என்ற அரசன் நல்ல ஆஸ்திகனாயிருந்தான். அவன் புதல்வன் ஸர்வக்ஞசிங்கப்ப நாயகன் என்பவன். அவன் ஸ்ரீதேசிகன் திருவடிகளை ஆச்ரயித்த நல்ல சிஷ்யன். அவன் சேதநம், அசேதநம், ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களின் ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவற்றை அறிந்து கொள்வதற்காகச் சுருக்கமாக ஒரு க்ரந்தத்தை அருளிச்செய்யும்படி ஸ்வாமியைப் ப்ரார்த்தித்தான். அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அருளிச் செய்தது இந்த ரஹஸ்யம். தத்வங்களைப் பற்றி சிஷ்யனுக்கு விடுத்த செய்தியாயுள்ளதால் இப்பெயர் வந்தது.]

1 *स्वाधीनत्रिविधेत्यादेरभिप्रायः प्रकाश्यते ।*
*कस्यचित् तत्त्वनिष्ठस्य काङ्क्षितप्रतिपत्तये ॥*

*ஸர்வ–மந்த்ர–*प्रधान*ங்களான* व्यापकमन्त्र[a]*ங்கள் மூன்றிலும் சேர ஸர்வ-*आधारभूत*னாய் ஸர்வசரீரியாய்*[b] *நிற்கிற நிலையிலே இவனை* स्वाधीन–त्रिविध–चेतन–अचेतन–स्वरूप–स्थितिप्रवृत्ति–भेद *னென்று ஸ்ரீஆளவந்தாரும்*[c] *ஸ்ரீபாஷ்யகாரரும்*[d] *அருளிச் செய்தார்கள்.*

a - திருமந்த்ரம்–ஷடக்ஷரம் – த்வாதசாக்ஷரம்; b - எல்லாவற்றுக்கும் ஆத்மாவாய்; c - ஆத்ம ஸித்தியில்; d - ஸ்ரீரங்ககத்யம் – ஸ்ரீவைகுண்ட கத்யம் இவற்றின் தொடக்கத்தில்

1 *தத்வங்களை நன்கு அறிய ஆர்வமுடையனான ஓர் ஆஸ்திகனுக்கு அவன் விருப்பம் ஈடேறுவதற்காக 'ஸ்வாதீந த்ரிவித' என்று தொடங்கும் வாக்யத்தின் கருத்து இந்த ரஹஸ்யத்தின் வாயிலாக விளக்கப் படுகின்றது. இந்த வாக்யம் ஸ்ரீஆளவந்தார் அருளிய ஆத்மஸித்தியின் தொடக்கத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிய ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் இவற்றின் தொடக்கத்திலும் உள்ளது.*

இதில் स्वाधीन என்கிற शब्दத்தாலே स्वरूप-अधीनत्व[a]மும் इच्छा-अधीनत्व[b]மும் संगृहीत[c]ம். இவையிரண்டும் சரீர-ஆத்ம भाव-श्रुत्यादि सिद्धம்.

இவற்றில் स्वरूप-अधीनत्वம் ईश्वर-स्वरूप-व्यतिरिक्त-सर्व-वस्तु[d]க்களுக்கும் यथासंभव[e]ம் व्यवहित[f]-अव्यवहित[g]-भेदवத்தாயிருக்கும். ईश्वर-इच्छा-अधीनत्वம் जीव-इच्छा-अधीनत्व[h]ங்களிலும் एकरूपம். இவற்றில் வைத்துக்கொண்டு நித்யங்கள் नित्य-इच्छा-सिद्ध[i]ங்களாயிருக்கும், அநித்யங்கள் काल-अवच्छिन्न[j]ங்களாகையாலே अनित्य-इच्छा-सिद्ध[k]ங்களாயிருக்கும். நித்யங்களுக்கு नित्य-इच्छा-सिद्धत्वமாவது- இவனுடைய इच्छै[l]யில்லாதபோது அநித்யம்போலே இல்லையாகப் ப்ரஸங்கிக்குமென்னும்படி நிற்கை. இவ் अर्थத்தை 'इच्छात एव तव विश्व पदार्थसत्ता[30*1]' என்கிற ஶ்லோகத்தாலே ஆழ்வான் அருளிச்செய்தார்.

[S1]இவற்றில் स्वरूप-आयत्त[m]மாகையாலே आधेयत्व[n]மும் इच्छा-ஆயத்தமாகையாலே[o] आधेयत्वத்தோடேகூட विधेयत्व[p]-शेषत्वங்

---

a - ஸ்வரூபத்துக்கு வசப்பட்ட தன்மை; b - ஸங்கல்பத்துக்கு வசப்பட்ட தன்மை; c - அடக்கிக் கூறப்பட்டன; d - ஈச்வரனுடைய ஸ்வரூபம் தவிர மற்ற; e - பொருத்தத்துக்கு ஏற்றவாறு; f - மற்றொன்றை இடையிட்டுக் கொண்டது; g - நேரிடையானது; h - ஜீவனுடைய விருப்பத்தால் நடப்பன; i - நித்யமான ஸங்கல்பத்தால் அமைந்தவை; j - காலத்தைக் கொண்டு அளவிடப்படுவன; k - அநித்யமான ஸங்கல்பத்தால் வருவன; l - ஸங்கல்பம்; m - ஸ்வரூபத்துக்கு வசப்பட்டன; n - தாங்கப்படுதல்; o - ஸங்கல்பத்துக்கு வசப்பட்டன; p - நியமிக்கப்படும் தன்மை

S1. சரீரலக்ஷணம் பொருத்தம்

களும் தோற்றுகின்றன. 'उपादत्ते सत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ-स्वमुद्दिश्य श्रीमान्[1] என்கிறபடியே ईश्वर–इच्छा–उपात्त[a]ங்களாயிறே இவை இவனுக்கு ஶேஷங்களாகின்றன.

[$1]त्रिविध–चेतनரென்றது– अनुवृत्त[b] ஸம்ஸாரராயும் निवृत्त[c] ஸம் ஸாரராயும் ஸம்ஸார–अत्यन्ताभाव[d]வான்களாயுமுள்ள परतन्त्र–चेतन[e]ரைச் சொல்கிறது. बद्ध–चेतनர் தங்களுக்கே मुक्तदशै–யாகையாலே धर्मिभेद[f]மில்லையாயிருக்க, नित्यருக்குப்போலே मुक्त–ருக்கும் बद्धரிற்காட்டில் अत्यन्त– வைஷம்யம்[g] தோற்றுகைக்காக ஜீவ–त्रैविध्यம் சொல்லப் படுகிறது.

[$2]त्रिविध–शब्दம் द्वान्द्वात् पूर्व[h]மாகையாலே अचेतन–शब्दத்தோடும்

---

a - ஈச்வரனுடைய ஸங்கல்பத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டன; b - ஸம்ஸார பந்தம் தொடரப் பெற்றவர் (பத்தர்) ; c - ஸம்ஸார பந்தம் நீங்கப் பெற்றவர்கள் (முக்தர்) ; d - எந்நாளும் ஸம்ஸார பந்தம் இல்லாதவர்கள் (நித்யர்கள்) ; e - எம்பெருமானுக்குக் கட்டுப்பட்ட ஜீவர்கள்; f - ஆத்மா வேறுபடாமையாலே; g - முழுதும் வேற்றுமை; h - சேதந அசேதந என்ற உம்மைத் தொகைக்கு முன் இருப்பதால்

1 उपादत्ते सत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ
स्वमुद्दिश्य श्रीमानिति वदति वागौपनिषदी ।
उपायोपेयत्वे तदिह तव तत्त्वं न तु गुणौ
अतस्त्वां श्रीरङ्गेशय! शरणमव्याजमभजम् ॥

(ஸ்ரீரங்கராஜஸ்தவம் 2-87) : ஒன்றை ஒரு வஸ்துவாக உண்டுபண்ணுவது, உண்டானது மேலே நீடித்திருக்கும்படி செய்வது, அதை நியமநம் செய்வது ஆகிய இந்தச் செயல் முதலியவற்றால் பிராட்டியுடன் எம்பெருமான் சேதநர்களையும் அசேதநர்களையும் தன் ப்ரயோஜனத்துக்காகவே ஸ்வீகரிக்கிறான் என்று உபநிஷத்து கூறுகின்றது. ஆதலால் (சேஷியாயிருப்பதால்) எம்பெருமானே! நீ இந்த ஜீவன் விஷயத்தில் உபாயமாகவும், பலனாகவும் இருப்பது உன் ஸ்வரூபத்தால் ஏற்பட்டது, வந்தேறியன்று. ஸ்ரீரங்கநாதனே! ஆதலால் என் ப்ரயோஜனத்தை நினையாமல் உன்னை உபாயமாக அடைந்தேன்.

$1 - த்ரிவித சேதந – விளக்கம் $2 - த்ரிவித – அசேதந – விளக்கம்–ரஹ. விவ.

அந்வயிக்கிறது. त्रिविध–अचेतनங்களென்பவை व्यक्त[a]–अव्यक्त[b]–காலங்களென்று சிலர் சொல்லுவர்கள். அவர்களும் த்ரிகுண–கால–விலக்ஷணமான शुद्ध–सत्वरूप–अचेतनத்தை ஈச்வர– निरूपण[c]த்திலே शुभाश्रय–विग्रहादिरूप[d]–விசேஷணமாகச் சேர்த்து अनुसंधिப்பர்கள். த்ரிகுண–கால–சுத்த ஸத்த்வங்களென்கிற மூன்றையும் त्रिविध–अचेतनங்களென்று சிலர் நிர்வஹிப்பர்கள்[e]. இவற்றை अचित्துக்களென்றும் अचेतनங்களென்றும் சொன்னது இவற்றுக்கு ஜ்ஞாந–आश्रयत्व[f]மில்லாமையடியாக. 'अप्राकृत–अचित्[g]தென்று ஒன்றைச் சொல்–லலாமோ? अप्राकृत[h]மான ஆத்மாவைப்போலே चित्தென்ன வேண்டாவோ?'வென்ற चोद्य[i]த்திற்கு प्राकृतங்களன்றிக்கே अचित्துக்களாயிருக்கிற कालादिகளை दृष्टान्तமாக்கிப் பரிஹாரம் சொல்லுவது. अचेतनत्वமுண்டாயிருக்க ज्ञान–रूपत्व–वचन–बलத்தாலே धर्मभूतஜ்ஞாநத்திற்குப்போலே शुद्ध–सत्त्वத்திற்கும் चित्[j]–शब्द–वाच्यत्वமும் உண்டென்று சிலர் சொல்லுவர்கள். இங்கு अचेतनत्वம் ஒரு ஜ்ஞாநத்திற்கு आश्रयமல்லாத धर्मभूतஜ்ஞாநத்திற்கும் समानம். இது त्रिविध–चेतन–उपपादन[k]த்திலே விசேஷணமாய்க்[l] கொண்டு प्रतिपादित[m]மாகையாலே பிரியச் சொல்லப்பட்டதில்லை. ஸர்வ வஸ்துக்களுக்கும் साधर्म्य[n]மும் वैधर्म्य[o]மும் प्रमाणनियत[p]மாகை யாலே यथाप्रमाणம் अङ्गीकार्यம்.

---

a - கண்ணுக்குப் புலப்படும் வஸ்து அல்லது பெயரும் உருவமும் தெரியும்படியுள்ள வஸ்து; b - கண்ணுக்குப் புலப்படாத வஸ்து அல்லது பெயரும் உருவமும் புலப்படாதவாறு உள்ள வஸ்து; c - ஈசுவரனைப் பற்றிய விளக்கத்தில் ; d - பாபத்தைப் போக்குவதாய் தியானிக்க எளிதாயுள்ள ; e - பொருத்தம் கூறி விளக்குவர்; f - அறிவுடைமை; g - ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற அசேதநம் ; h - ப்ரக்ருதி ஸம்பந்தபற்ற ; i - ஆக்ஷேபத்துக்கு; j - சித் என்று வழங்குதல்; k - விளக்கிக் கூறுதல்; l - ஜீவனுக்கே உரிய தன்மையாய்; m - கூறப்பட்டு விட்டபடியால் ; n - சில அம்சங்களில் ஒற்றுமையும்; o - சிலவற்றில் வேற்றுமையும்; p - சாஸ்த்ரங்களால் வரையறுக்கப்பட்டது

[$1] இச் चेतन–अचेतनங்களுக்கு ஸ்வரூபமாவது–स्व–असाधारण[a] மான धर्मத்தாலே निरूपणीय[b] மான धர்மி.

[$2] स्थितिயாவது– இதனுடைய कालान्तर–अनुवृत्ति[c].

[$3] प्रवृत्तिயாவது– व्यापारம். निवृत्तिरूप–व्यापार[d]மும் प्रवृत्ति விசேஷம்.

இச் चेतन–अचेतनங்களுடைய स्वरूप–स्थिति–प्रवृत्तिகள் மூன்றுக்கும் भेदமென்றது– அவ்வோ ப்ரமாணங்கள் சொன்ன பிரிவு.

[$4] இங்கே स्वाधीनेत्यादिயாலே नानाप्रकार[e] மான ईश[f] – ईशितव्य[g]– भेदத்தையும் ईशितव्यங்களில் चेतन–अचेतन–भेदத்தையும் அவைதம்மில் अवान्तर–भेद[h]த்தையும் धर्मि–धर्म–भेदத்தை யும் வேதாந்த–ஸித்தாந்தத்தில் प्रधान–प्रतितन्त्र[i]ங்களையும் भेद[j] – अभेद[k] –घटक[l]–श्रुत्यादिகளின்படியே अनुसंधिப்பது.

இந்த ईश्वर–तत्त्वத்தையும் ईशितव्य–तत्त्वங்களையும் இப்படிப் பிரிய अनुसंधिத்து एकतत्त्वமென்பார்க்கு स्वनिष्ठ[m] மான विशिष्ट– तत्त्व[n]ம் एकமென்கையிலே तात्पर्यம்.

இவ்வீச்வரதத்வம் இருக்கும்படியை 'एक: शास्ता न द्वितीयोऽस्ति शास्ता'[1]

---

a - தனக்கே உள்ள தன்மை; b - விளக்கிக் கூறவேண்டிய ; c - அடுத்த காலத்திலும் தொடர்ந்து நிற்றல்; d - ஒன்றைச் செய்யாது விடுதல்; e - பல்வகையான; f - ஆள்பவன்; g - ஆளப்படும் வஸ்துக்கள்; h - உட்பிரிவு; i - நம் ஸித்தாந்தத்துக்கே உரிய முக்கியமான அம்சங்கள்; j - மூன்று தத்துவங்களையும் ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்டனவாகக் கூறும் சுருதி; k - அவற்றை ஒன்றெனக் கூறும் சுருதி; l - இரண்டுசுருதியிலும் உள்ள முரண்பாட்டை நீக்கி ஸமரஸப் படுத்தும் சுருதி; m - தனக்குத் தானே ஆதாரமாய்; n - சேதந–அசேதநங்களைச் சரீரமாகக் கொண்ட ஈச்வர தத்த்வம்

1 एक: शास्ता न द्वितीयोऽस्ति शास्ता यो हृच्छयस्तमहमनुब्रवीमि ।
तेनैव युक्त: प्रवणादिवोधकं यथा नियुक्तोऽसि तथा वहामि ॥

(பாரதம் அச்வமேதிகம் 27–1) : எம்பெருமான் ஒருவனே எல்லோரையும் நியமிப்பவன். இரண்டாமவன் இல்லை.

$1. ஸ்வரூப விளக்கம்; $2. ஸ்திதி– விளக்கம்; $3. ப்ரவ்ருத்திபேதம்– விளக்கம்; $4. 'ஸ்வாதீன' என்று தொடங்கும் ஸூக்தியில் அனுசந்திக்க வேண்டிய அர்த்தங்கள்; ரஹ–விவரணத்தில் காண்க.

'शास्ता विष्णुरशेषस्य'[1] 'जगत् सर्वं शरीरं ते'[2] 'सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः'[3] इत्यादिகளில் கண்டுகொள்வது.

त्रिविध-चेतनருடைய प्रकारங்களை

[4] ब्रह्माद्याः सकला देवा मनुष्याः पशवस्तथा ।
विष्णुमाया महावर्त मोहान्धतमसावृताः ॥

---

1 शास्ता विष्णुरशेषस्य जगतो यो हृदि स्थितः ।
तमृते परमात्मानं तात! कः केन शास्यते?॥

(விஷ்ணு புராணம் 1-17-20): எல்லோருடைய ஹ்ருதயத்திலும் இருக்கும் பரமாத்மாவான விஷ்ணுவே எல்லாவற்றையும் நியமிப்பவன். அவனையன்றி வேறு யார் யாரை நியமிக்க முடியும் ?

2 जगत् सर्वं शरीरं ते स्थैर्यं ते वसुधातलम् ।
अग्निः कोपः प्रसादस्ते सोमः श्रीवत्सलक्षणः ॥

(ராமாயணம் யுத்த 120-26): ஸ்ரீவத்ஸம் என்ற திருமறுவை அணிந்த இராமபிரானே ! இவ்வுலகம் முழுதும் உனக்குச் சரீரமாய் உள்ளது. உன் உறுதி பூமியாகவும் சீற்றம் அக்நியாகவும் மகிழ்ச்சி சந்திரனாகவும் வடிவுகொள்கின்றன.

3 नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥

(கீதை 11-40): எல்லையற்ற வீர்யத்தையுடைய கிருஷ்ணபரமாத்மாவே! அளவற்ற பராக்கிரமத்தையுடைய நீ சேதந அசேதந வஸ்துக்கள் அனைத்திலும் வியாபித்து ஆத்மாவாக இருந்து நியமிக்கின்றாய். அவை அனைத்திலும் நீ சரீரமாகப் கொண்டு நீ ஆத்மாவாக இருப்பதால் அவற்றைச் சொல்லும் சப்தங்களெல்லாம் உன்னையே சொல்வனவாக வேதாந்தங்களும் ஸ்ம்ருதிகளும் விளக்குகின்றன.

4 (விஷ்ணு புராணம் 5-30-17): ப்ரஹ்மா முதலிய எல்லாத்தேவர்களும், மனிதர்களும், ம்ருகங்களும் விஷ்ணுவின் மாயையாகிய பெரிய சுழலிலிருக்கிற மோஹமாகிய இருட்டினால் சூழப்பட்டுள்ளனர். மாயை என்பது ப்ரக்ருதி.

1 इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागता: ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥
2 यद्वै पश्यन्ति सूरय: इत्यादिகளிலே அறிவது.

त्रिविध अचेतनத்தின்படியை
3 अचेतना परार्था च नित्या सततविक्रिया ।
त्रिगुणा कर्मिणां क्षेत्रं प्रकृते: रूपमुच्यते ॥
अनादिर्भगवान् कालो नान्तोऽस्य द्विज विद्यते ।
अव्युच्छिन्नास्ततस्त्वेते सर्गस्थित्यन्तसंयमा: ॥[64*1]
4 दिव्यं स्थानमजरं चाप्रमेयं दुर्विज्ञेयं चागमैर्गम्यमाद्यम्

इत्यादिகளிலே காண்பது.

1 (கீதை 14–2): அர்ஜுந! இப்பொழுது ஆத்மாவைப்பற்றிய ஞானத்தை உபதேசிக்கப் போகிறேன். இந்த ஞானத்தைப் பெற்றவர்கள் எனக்குச் சமமாக ஆகிப் பிறப்பு இறப்பு அற்றவர்களாவர்.

2 एकान्तिन: सदा ब्रह्म ध्यायिनो योगिनो हि ये ।
तेषं तत्परमं स्थानं यद्वै पश्यन्ति सूरय: ॥

(விஷ்ணு புராணம் 1–6–39) : ஏகாந்திகளாய் எப்பொழுதும் ப்ரஹ்மத்யாநம் செய்யும் யோகிகள் செல்லும் ஸ்தாநம் நித்யஸூரிகள் பார்த்துக்கொண்டிருக்கும் மிக உயர்ந்த இடமாகிய பரமபதம்.

3 (பரமஸம் –2–18) ப்ரக்ருதி அறிவற்றது. பிறருக்காகவே இருப்பது. ஸ்வரூபத்தில் நாசமில்லாதது. ஆனால் எப்போதும் மாறுபாட்டை அடைந்து கொண்டேயிருக்குமது. ஸத்துவம்–ரஜஸ்–தமஸ் என்ற முக்குணங்களையும் உடையது. கர்மங்களின் பயனை அநுபவிப்பதற்கு இருப்பிடமான சரீரமாயிருப்பது. இவ்விதம் ப்ரக்ருதியின் ஸ்வபாவம் சொல்லப்படுகிறது

4 दिव्यं स्थानमजरं चाप्रमेयं दुर्विज्ञेयं चागमैर्गम्यमाद्यम् ।
गच्छ प्रभो रक्ष चार्तिं प्रपन्नान् कल्पे कल्पे जायमान: स्वमूर्त्या ॥

(பார மௌஸல 5–32) : ப்ரபுவான கண்ணனே! கிழப்பருவத்துக்கு இடமில்லாததாய் அளவிடமுடியாததாய் அறிய முடியாததாய் சாஸ்த்ரங்களைக் கொண்டே அறிய ஏற்றதாயுள்ள பரமபதத்துக்கு நீ திரும்பி எழுந்தருள வேண்டும். கல்பந்தோறும் உன் திருமேனியோடு இங்கு அவதரித்துக் கொண்டு உன்னைச் சரணமடைந்த எங்களைக் காத்தருளவேண்டும்.

[$1] தமஸ்ஸுக்கு अनन्तरமாய் அக்ஷரமென்று[a] ஓதப்பட்ட த்ரிகுண–பரிணாம–விசேஷமே[b] பரமபதமென்றும், காலமும் இப்படியே ஒரு த்ரிகுண– பரிணாமமென்றும் சொல்லுகிற भेदाभेदवादि[c]களுக்கு प्रमाण–अभावமும் प्रमाण–विरोधமும் स्ववचन–विरोधமும் கண்டுகொள்வது.

[$2] இப்படி விவேகித்தவன் 'நானுன்னையன்றி யிலேன்'[1] என்கிறபடியே அவனுடைய ஸத்தையாலே தனக்கு ஸத்தையென்றும் 'அதுவுமவனதின்னருளே!'[2] என்கிறபடியே அவனுடைய வ்யாபாரத்தாலே தன்னுடைய उपायादि– வ்யாபாரம் என்றும் 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே எனக்கே

---

a - மூல ப்ரக்ருதி; b - ப்ரக்ருதியின் மாறுபாடு; c - வேற்றுமை ஒற்றுமைகளை ஒன்றுக்கே கூறுவர்கள்

1 *இன்றாகநாளையே யாக இனிச் சிறிது*
*நின்றாகநின்னருளென் பாலதே– நன்றாக*
*நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே*
*நீயென்னை யன்றி யிலை.*

(நான்முகன் திரு 7) : எம்பெருமானே! இன்றைக்கோ நாளைக்கோ இன்னும் சிறிது காலம் கழித்தோ எப்படியும் உன் திருவருள் என்பால் சுரந்தே தீரும். எனக்கும் உன்னையன்றி வேறு புகல் இல்லை. உனக்கும் ரக்ஷிக்கப்பட என்னைப் போன்ற–தாழ்ந்த– உரிய பாத்திரம் வேறு கிடையாது.

2 *உணர்விலும்பரொருவனை அவனதருளாலுறல்பொருட்டென்*
*உணர்விலுள்ளேயிருத்தினேன் அதுவும், அவனதின்னருளே,*
*உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும்பழுதேயாம்*
*உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானும்தானாயொழிந்தானே.*

(திருவாய் 8–8–3) : ஒப்பற்ற ஸர்வஜ்ஞனை எம்பெருமானை அவனது அருளாலே அணைத்து அநுபவிக்க வேண்டுமென்று என் உள்ளத்து ஆசை கொண்டேன் அந்த ஆசையும் அவனுடைய பரமபோக்யமான அருளாலே வந்ததேயாம். உலக விஷயங்களைப்பற்றிய அறிவும் ப்ராணனும் இச்சரீரமும் மற்றும் உள்ள அனைத்தும் நிலையான பயனைகமாட்டா என்ற உணர்வை அடியேன் பெறும்படி எம்பெருமான் அருள் புரிந்ததோடுமில்லாது என் ஆத்மாவும் அவனை விட்டுப்பிரியாத விசேஷணமாகும் என்ற அறிவையும் அடியேன் பெறும்படி செய்து அவனுக்குச் சரீரமான என்னைச் சொல்லும் சொல்லுக்கு அவனே பொருளாய் நின்றான்.

$1-பிறர்வாதங்களும் – விடைகளும் ; $2-'ஸ்வாதீந' ஸூக்தியால் வரும் தெளிவு

கண்ணனை யான்கொள் சிறப்பே[41*1] என்கிறபடியே அவன் ப்ரயோஜன- விசேஷத்தாலே தனக்கு ப்ரயோஜந விசேஷம் என்றும் தெளிந்து स्व-अधिकार-अनुगुण[a] மாக स्वरूप-भर-फल- समर्पणத்தாலே இவை மூன்றிலும் நிர்மமனாய்[b] वर्तिக்கும்.

1 त्रिविधचिदचिदेकतन्त्रलक्ष्ये यतिपतियामुनभाषितेऽनुयोक्तुः ।
इदमिति निगमान्तदेशिकेन प्रतिसमदिश्यत माधवात्मजस्य ॥

2 सत्त्वस्थान् निभृतं प्रसादय सतां वृत्तिं व्यवस्थापय
त्रस्य ब्रह्मविदागसस्तृणमिव त्रैवर्गिकान् भावय ।
नित्ये शेषिणि निक्षिपन् निजभरं सर्वसहे श्रीसखे
धर्मं धारय चातकस्य कुशलिन् धाराधरैकान्तिनः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु **तत्त्वसंदेशः** संपूर्णः ।

**தத்த்வ ஸந்தேசம் முற்றும்.**

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

**a** - தன் தகுதிக்கு ஏற்றவாறு; **b** - தன் தொடர்பு உள்ளதாய் நினையாதவனாய்

1 ஆளவந்தாரும் ஸ்ரீ பாஷ்யகாரரும் அருளிச்செய்த 'ஸ்வாதீநத்ரிவித' என்ற தொடங்கும் ஸ்ரீஸூக்தி மூவகைச் சேதநம் மூவகை அசேதநம் ஆகிய வற்றின் ஸ்வரூபம்- நீடித்து நிற்றல்- செயல் இவற்றின் வகைகள் அனைத்தும் எம்பெருமான் ஒருவனுக்கே வசப்பட்டனவென்னும் கருத்தையுடையது. இந்த ஸ்ரீஸூக்தியின் பொருளைத் தருமாறு கேட்டான் மாதவன் என்பவனின் புதல்வன். இதுதான் அந்த ஸ்ரீஸூக்தியின் கருத்து என்று இந்த ரஹஸ்யத்தின் வாயிலாக வேதாந்த தேசிகனால் விடையளிக்கப்பட்டது.

2 அவனுக்கே ஸ்வாமி செய்யும் உபதேசம் – ஸாத்விகர்களின் உள்ளம் மிக உகக்குமாறு நடந்துகொள். ஸாதுக்களின் கடமைகளை நன்றாய் நடத்திவை. ப்ரஹ்மவித்துக்களிடம் அபசாரப்படுவதற்கு அஞ்சி நில். இம்மைப் பயனிலேயே ஈடுபட்டவர்களைத் துரும்பாக நினை. நித்யனாய் ஸ்வாமியாய் அபராதங்களைக் கருணையால் பொறுப்பவனாய் பிராட்டியுடன் கூடிய எம்பெருமானிடம் உன் பொறுப்பை ஸமர்ப்பித்து விட்டு மேகம் ஒன்றையே எதிர்பார்த்து நிற்கும் சாதகப் பறவை போல் எம் பெருமான் அருள் ஒன்றையே எதிர்பார்த்திரு. நீ க்ஷேமத்தை அடைவாய்.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 9 रहस्यसंदेशः

(விளக்கம் – ரஹ. விவ. – 119–124)

# 9 ரஹஸ்ய ஸந்தேசம்

[முன்னுரை : மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தை விளக்கி உபதேசிப்பதால் இதற்கு இப்பெயர் வந்தது.]

**விஷயச்சுருக்கம் :** *இந்த ரஹஸ்யத்தில் திருமந்திரத்தின் அர்த்தங்களைச் சுருக்கமாக அஹமாத்மா நதேஹோஸ்மி என்று தொடங்கும் சுலோகத்திற்கு ஸ்வாமி தேசிகள் வ்யாக்யானம் செய்தருளியுள்ளார்.*

[1] *யானறியும் சுடராகிநின்றேன் மற்றும் யாதுமலேன்*
*வானமரும் திருமாலடியேன் மற்றோர் பற்றுமிலேன்*
*தானமுதாமவன்தன் சரணே சரணென்றடைந்தேன்*
*மானமிலா அடிமைப்பணி பூண்ட மனத்தினனே. (14)*

[2] अहमात्मा न देहोऽस्मि विष्णुशेषोऽपरिग्रहः ।
तमेव शरणं प्राप्तः तत्कैङ्कर्यचिकीर्षया ॥

---

1 *யான் – ஜீவாத்மாவாகிய நான்; அறியும் சுடராகி நின்றேன் – மற்றப் பொருள்களை அறிபவனாகவும் ஜ்ஞாநஸ்வரூபனாகவும் நிற்கின்றேன்; மற்றும் யாதும் அ(ல்)லேன் – மற்ற அசேதநத்திற்காட்டிலும் வேறுபட்டிருக்கின்றேன்; வான் அமரும் – பரமபதத்தில் எழுந்தருளியிருக்கின்ற; திருமால் அடியேன் – எம்பெருமானுக்குத் தாஸன்; மற்ற ஓர் பற்றும் இலேன் – வேறு ஒரு பொருளிலும் உரிமை இல்லாதிருக்கின்றேன்; மானம் இலா – அளவு இல்லாத; அடிமைப்பணி – கைங்கர்யமாகிற ஸாம்ராஜ்யத்தை; பூண்ட மனத்தினன் – இறுகப் பற்றிய மனத்தையுடைய யான்; தான் அமுதாம் அவன்தன் – தான் (அநுபவிக்க) அமுதம் போன்ற எம்பெருமானுடைய; சரணே – திருவடிகளையே; சரண் என்று அடைந்தேன் – உபாயமென்றடைந்தேன்*

(குறிப்பு – ஜீவாத்மா தன்னுடைய தர்மபூத ஜ்ஞாநத்தால் பிற பொருள்களை அறிபவனாகவும் தன்னை அறிய வேறு ஒரு ஞானம் வேண்டாதபடி தானே ஜ்ஞாநஸ்வரூபனாய் ப்ரகாசிப்பவனாகவும் இருக்கின்றான். அசேதநங்களைக் காட்டிலும் வேறுபட்டவனாகவும் ஸ்ரீமன் நாராயணனுக்கே எப்போதும் அடியனாகவும் உள்ளேன். ஒரு வஸ்துவிலும் எனக்கு உரிமையில்லை. ஸ்ரீ வைகுண்டத்துக்குச் சென்று எம்பெருமானுக்கு இடைவிடாது கைங்கர்யம் செய்ய வேண்டும் என்று அவா மிகப் பெற்று, தெவிட்டாத அமுதமாய் நிற்கும் எம்பெருமானுடைய திருவடிகளைச் சரணமடைகின்றேன். )

2 *119 பதவுரை ரஹ. விவ. காண்க.*

[$1] அயர்வறுமமரர்களான[a] अनन्त–गरुड–विष्वक्सेनादिகளோடு तुल्यமாக अपरिच्छिन्न–पुरुषार्थ[b]மான भगवत्–कैङ्कर्यத்திற்கு स्वरूप–योग्य[c]தை உண்டாயிருக்க अनादिமாயையாலே सुप्त[d]னாய் अनन्त–क्लेश–भाजन[e]மான ஸம்ஸார– सागरத்திலே அழுந்திக்கிடக்கிற क्षेत्रज्ञ[f]ன் अत्यन्त शोकार्त[g]னனவளவிலே

[$2] परिपूर्ण–प्रतिबुद्ध[h]னை आचार्यனாலே 'நீ अतिदुष्कर धर्म[i]ங்களில் ஒன்றிலும் அலையவேண்டாம். அப் பாபங்களை எல்லாவற்றையும் விடுவிக்கைக்கு समर्थனாய் அவஸார–प्रतीक्ष[j]னுமாய் நிற்கிற என்னையொருவனையே சரணமாகப் பற்று' என்று शरण्य[k]னை श्रिय:पति தானே चरमश्लोकத்தாலே அருளிச் செய்த सर्वाधिकार–शरणागति[l]யினுடைய विषय–स्वरूप–परिकर–फल– விசேஷங்களை विशद[m]மாக ப்ரகாசிப்பிக்கிற द्वयத்திற்கு अपेक्षित– अर्थसंग्रह–रूप[n]மான திருமந்த்ரத்திலே प्रकृति–आत्म–विवेक[o]மும் जीव– ईश्वर[p] விவேகமும் பிறந்து स्वाभाविक–भगवत्–संबन्ध[q]த்தை உணர்ந்து औपाधिक–देह[r] विभूत्यादि–संबन्ध[s]த்தை இகழ்ந்து स्वरूप–अनुरूप–परमपुरुषार्थ– सिद्धि[t]க்கு स्व–अधिकार–अनुगुणமான सुकर–उपाय[u] விசேஷத்தைப் பற்றி ஸ்வாமி– கைங்கர்ய– मनोरथ[v]னாய் நிற்கிற நிலையை 'अहमात्मा' என்கிற श्लोकம் प्रतिपादि[w]க்கிறது.

---

a - அஜ்ஞாநமற்ற நித்ய ஸூரிகள்; b - அளவிடமுடியாத; c - இயற்கையில் தகுதி; d - அறிவிழந்தவனாய்; e - பல்வகைத் துன்பங்களுக்கு இடமான; f - ஜீவன்; g - மிகவும் வருந்திய நிலையில்; h - பரிபூர்ண ஜ்ஞாநமுடையன்; i - செய்வதற்கு மிகக்கடினமான ; j - ஸமயத்தை எதிர்பார்ப்பவன்; k - ரக்ஷகன்; l - எல்லோரும் செய்ய உரிய ; m - தெளிவாக; n - தேவையான; o - அசேதநம் சேதநம் இவற்றில் தெளிவு; p - ஜீவன் – ஈசுவரன் இவர்களைப் பற்றிய தெளிவு; q - இயற்கையான; r - கர்மத்தால் வருவது; s - பசு, வீடு முதலியன; t - பெரும் பயன்–மோக்ஷம்; u - செய்ய எளிதான; v - பின் வரப்போவதில் ஆசை; w - விளக்குகின்றது

[$1]-பத்தனான ஜீவனது நிலை; [$2]-மூன்று ரஹஸ்யங்கள்

[1]'கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும்' इत्यादिகளிற்படியே இனி எனக்கு இங்கு ஒரு சரீர परिग्रह[a]ம் உண்டாகதபடி प्रारब्ध- கர்ம- விசேஷ[b]த்தையும் ஒரு விரகாலே[c] கழித்து ரக்ஷித்தருள்வான்- என்றபடி.

**நன்றே வருவதெல்லாம்** என்றது- இத் தேஹம் விடுமளவும் 'भोगैः पुण्यक्षयं तथा[d]' என்கிறபடியே அநுகூலங்கள் வருமவை प्रारब्ध-पुण्यरूप[e]- निगळ-निवृत्ति[f]யாகையாலும், ப்ரதிகூலங்கள் வருமவை

[2] *'हरिर्दुःखानि भक्तेभ्यो हितबुद्ध्या करोति हि ।*
*शस्त्रक्षाराग्निकर्माणि स्वपुत्राय यथा पिता ॥*

a - எடுத்துக் கொள்ளல்; b - பலன் கொடுக்கத் தொடங்கிய; c - வழியாலே; d - பலனை அநுபவிப்பதால் புண்யங்கள் ஒழிகின்றன; e - பலனை கொடுக்கத் தொடங்கிய; f - (பொன்) விலங்கினின்று விடுபடுதல்

1 *கொள்ளும்பயனில்லை குப்பைகிளர்த்தன்ன*
*செல்வத்தை வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள்*
*கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதிலென்*
*வள்ளல்மணிவண்ணன்றன்னைக் கவிசொல்லவம்மினோ.*

*திருவாய் (3-9-5) ÷ புலவர்களே! நீங்கள் எவ்வளவு பாடினாலும் குறைவின்றிப் பொருந்தும் திருக்கல்யாண குணங்களையுடையன் எம்பெருமான். நீங்கள் வேண்டிய எல்லாப் பலனையும் அளிக்கவல்லவன் அவன்.*

2 *எம்பெருமான் பக்தர்களுக்குத் துன்பங்களைத் தருவது அவர்கள் பாபங்களை நீக்கித் தூய்மை பெறவேண்டும் என்ற நல்லெண்ணத் தினாலேயே இது உலகில் தந்தை தன் புதல்வனுக்குச் சஸ்த்ர சிகிச்சை - காரம் வைத்தல் அக்நி இவற்றைக் கொண்டு அவன் நோய் தீர்ப்பது போலாகும்.*

[1] 'यस्यानुग्रहमिच्छामि तस्य वित्त हराम्यहम् ।

इत्यादिகளிற்படியே प्रारब्ध-दुष्कृत[a]த்தில் சிகை[b] தீருகிறபடியாலும்

[2] 'रत्नपर्वतमारुह्य यथा रत्नं नरो मुने ।
स्त्वानुरूपमादत्ते तथा कृष्णान्मनोरथान् ॥

[3] 'सङ्कल्पादेव भगवान् तत्त्वतो भावितात्मनाम् ।
वृत्तान्तमखिलं कालं सेचयत्यमृतेन तु ॥

इत्यादिகளிற்படியே कैङ्कर्य-मनोरथ[c]த்துக்கு भङ्ग[d]ம் வராமையாலும் यावत्-शरीर-पात[e]ம் நமக்கு வருமவை எல்லாம் प्रिय-हित-விசேஷங்க[f]ளென்று प्रीत[g]ராகிறபடி.

**a** - பலன் கொடுக்கத் தொடங்கிய பாபம்; **b** - முக்கியப் பகுதி; **c** - வரப் போவதை ஆசையோடு எதிர்பார்த்தல்; **d** - முறிவு; **e** - மரணம் வரை; **f** - பிரியமான விசேஷ நன்மைகள்; **g** - மகிழ்ந்தவர்

*1* यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम् ।
बान्धवैश्च वियोगेन सदा भवति दुःखितः ॥

(பாகவ வராஹ புரா)÷ நான் ஒருவனுக்கு அநுக்ரஹம் செய்ய விரும்பினால் அவன் செல்வத்தைக் கவர்ந்து விடுவேன். உறவினரின் பிரிவால் மிகத் துன்புறச் செய்வேன். அவ்வாறு வருந்திய பின்பும் விடாமல் என்னை வழிபட்டால் தேவர்களும் பெற முடியாத அநுக்ரஹத்தை அவனுக்குச் செய்வேன். (எம்பெருமான் பேச்சு)

*2* ஒருவன் இரத்தினத்தால் ஆகிய மலைமீது ஏறினால் எல்லா ரத்தினங்களையும் எடுத்துக்கொள்ள முடிவதில்லை. தன் சக்திக்குத் தக்கவாறு தான் எடுத்துக் கொள்வான். அப்படியே கண்ணன் எல்லாப் பலன்களையும் அருள்பவனாயினும் அவனவன் தனக்கு வேண்டியதையே பெறுகின்றான்.

*3* எம்பெருமான் தன்னை உண்மையாக வழிபடுமவர்களுக்கு அவர்கள் இவ்வுலகில் இருக்க வேண்டிப் பெற்ற காலம் முழுதும் அமுதமயமான அநுபவங்களைக் கொடுத்து அவர்களைக் குளிர்விக்கின்றான்.

[1]'प्रियमितरदथापि वा यत् यथा वितरसि वरद प्रभो त्वं हि मे ।
तदनुभवनमेव युक्तं हि मे त्वयि निहितभरोऽस्मि सोऽहं यतः ॥
என்கிறார்களிறே.

**நமக்குப் பரமொன்றிலதே** என்றது– ஸர்வஜ்ஞனாய், ஸர்வ–சக்தனாய், பரம–காருணிகனாய், பரம–சேஷியுமான பெருமாள் भरस्वीकार[a]ம் பண்ணி देहयात्रै[b]யை நம்முடைய கர்ம–அநுகுணமாக நடத்துகையாலும், आत्मयात्रै[c]யைத் தன்னுடைய प्रधानभूत–कृपानुगुण[d]மாக நிர்வஹிக்கையாலும்[e],

[2]'जनार्दनं प्रणिपतितो न सीदति ।
[3]'न वासुदेवभक्तानाम् अशुभं विद्यते क्वचित् ।
न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः ।
भवन्ति कृतपुण्यानां भक्तानां पुरुषोत्तमे ॥

इत्यादिகளிற்படியே बुद्धिपूर्वक[f]மாக அபாயங்களில்[g] இழியவொட்டாமையாலும், प्रवृत्त[h]ங்களாகில் ஏதேனுமொரு கண்ணழிவு[i] செய்துவிடுகையாலும் पर–अवर–तत्त्व–विवेक[j]த்தாலே परतन्त्र–कर्तृत्व–प्रतिपत्ति[k]யையுடையோமாய் सकिञ्चन–अकिञ्चन–अधिकारि[l]– விவேகத்

---

**a** - பொறுப்பை ஏற்றுக் கொள்ளல்; **b** - சரீர வாழ்க்கை; **c** - ஆன்மாவின் வாழ்க்கை; **d** - முக்கியமான கருணைக்கு ஏற்ப; **e** - நடத்துகை; **f** - செய்யவேண்டுமென்றே தெரிந்து; **g** - பாபங்களில்; **h** - தெரிந்தே செய்யப்பட்டனவாகில்; **i** - பரிஹாரம்; **j** - உயர்ந்ததும் தாழ்ந்ததுமான தத்துவங்களைப் பற்றிய தெளிவால்; **k** - தனக்குச் செயல்புரியும் தன்மை எம்பெருமானால் வந்ததென்ற எண்ணமுடையராய்; **l** - கைம்முதல் உள்ளவன், இல்லாதவன் என்ற தகுதியைப் பற்றிய தெளிவு

1 (வரதராஜஸ்தவம் – 91)÷ பேரருளாளனே! உன்னிடம் என் பொறுப்பு அனைத்தையும் ஸமர்ப்பித்து விட்டபடியால் நீ எனக்குப் பிரியமானதையோ, பிரியமல்லாததையோ எதைக் கொடுத்தாலும் அதை அநுபவிப்பதுதான் நியாயம்.

2 எம்பெருமானைச் சரணமடைந்தவன் கஷ்டமடை வதில்லை

3 (பாரதம் ஆநுசா – 254–133,135)÷ எம்பெருமானிடம் பக்தி கொண்டவனுக்கு எந்தத் தீமையும் வராது. புண்ணியம் செய்து அவனிடம் மிக்க பக்தியுடையருக்குக் கோபம்– பொறாமை– பேராசை– கெட்ட எண்ணம் இவை வருவதில்லை.

தாலே न्यस्तभर[a]ருமான நமக்கு आत्मरक्षार्थ[b]மாக இனி ஒரு कर्तव्यशेष[c]ம் இல்லை– என்றபடி.

'**இனிப் பிறவோம்**' என்றும், '**நமக்கு**' என்றும் बहुवचन–प्रयोग[d]த்தாலே

[1]'*पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः ।*
*तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥*

इत्यादिகளிற்படியே अनुबन्धि– ரக்ஷணமும்[e] இங்கே सूचितமாகிறது.

**வாக்யம் – 1**

*(1)*

'ஒரு ஜீவனுக்கு ஒரு ஜீவன் தஞ்சமல்லன்' என்றது–

[2] *'स्वयं मृत्पिण्डभूतस्य परतन्त्रस्य देहिनः ।*
*स्वरक्षणेऽप्यशक्तस्य को हेतुः परक्षणे ॥*

[3] *'ब्रह्माणं शितिकण्ठं च याश्चान्या देवताः स्मृताः ।*
*प्रतिबुद्धा न सेवन्ते यस्मात् परिमितं फलम् ॥*

---

**a** - பரஸமர்ப்பணம் செய்த; **b** - தம்மைக் காத்துக் கொள்வதற்காக; **c** - செய்யவேண்டிய மீதி; **d** - பன்மையில் சொல்லியதால்; **e** - தம்மைச் சேர்ந்தவர்களைக் காத்தலும்

1 (சாண்டில்ய– 1–15)÷ வைஷ்ணவர்களை அண்டி அவர்களால் ப்ரபத்தி செய்யப்பெற்ற பசு–மனிதன்–பறவை ஆகியவையும் அந்த ப்ரபத்தியின் வலிமையாலேயே பரமபதத்தை அடைகின்றன.

2 (பார. சாந்தி– 294–19)÷ (எம்பெருமானது ஏவுதல் இல்லாவிடில்) மண் கட்டி போல் சுதந்திரமற்றுப் பிறனுக்கு அடங்கிக் கிடக்கும் மனிதன் தன்னைக் காத்துக் கொள்ளக்கூட வல்லமையுடையனல்லன். அவன் மற்றவர்களைக் காப்பதற்கு இடம் ஏது?

3 (பார. சாந்தி– 350–36)÷ பிரமனையும் சிவனையும் மற்றைத் தேவதைகளையும் ஞானிகள் வழிபடுவதில்லை. அத்தெய்வங்கள் கொடுக்கும் பலன் அற்பமாதலின் அதை அவர்கள் பொருட்படுத்துவதில்லை.

1 'अनन्यज्ञानविरहात् अशुद्धा देवतागणा: ।
ब्रह्मेशानादय: सर्वे स्वस्वातन्त्र्येण गर्हिता: ॥
2 'अन्ये तु पुरुषव्याघ्र चेतसो ये व्यपाश्रया: ।
अशुद्धास्ते समस्ता: स्यु: देवाद्या: कर्मयोनय: ॥
3 'आब्रह्मस्तम्बपर्यन्ता जगदन्तर्व्यवस्थिता: ।
प्राणिन: कर्मजनितसंसारवशवर्तिन: ॥
यतस्ततो न ते ध्याने ज्ञानिनामुपकारका: ।
अविद्यान्तर्गता: सर्वे ते हि संसारगोचरा: ॥
पश्चादुद्भूतबोधाश्च ध्याने नैवोपकारका: ।
नैसर्गिको न वै बोध: तेषामप्यन्यतो यत: ॥
4 'पशव: पाशिता: पूर्वं परमेण स्वलीलया ।
तेनैव मोचनीयास्ते नान्यैर्मोचयितुं क्षमा: ॥

---

1 பிரமன், சிவன் முதலிய தேவர்கள் எம்பெருமானையன்றி வேறு பயனை நாடாத ஞானிகளல்லராதலின் தூய்மையற்றவர். அவர்கள் தங்களுக்கும் சுதந்திரம் உண்டென்று எண்ணுவதால் இழிவாகக் கருதப்பட்டவராவர்.

2 (விஷ்ணு புரா – 6–7–56)÷ எம்பெருமானையன்றி மற்ற தேவர்கள் மனத்தால் நினைக்கப்படவும் தகாதவர்கள். அவர்கள் அனைவரும் கர்மத்தால் அந்த ஸ்தாநம் பெற்றவர். ஆதலின் தூய்மையற்றவராவர்.

3 (விஷ்ணுதர்– 104–23)÷ பிரமன் முதல் துரும்பு அளவுள்ள சிறு பிராணி வரை உகில் உள்ள ஸகல ப்ராணிகளும் கர்மத்தால் ஏற்பட்ட ஸம்ஸாரத்துக்கு வசப்பட்டனவாகும். ஆதலின் தியானம் செய்பவர்களுக்கு அவர்கள் உதவிபுரிய முடியாது. அவர்களும் அஜ்ஞாநத்திற்கு உட்பட்டு ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டவர்களே. அவர்கள் பிறகு ஞானம் பெற்றவர்கள். அவர்களும் இயற்கையான ஞானமின்றி எம்பெருமானிடமிருந்தே ஞானம் பெற்றவர்கள். ஆதலின் அவர்களைத் தியானம் செய்தும் பயனில்லை.

4 பிராணிகள் எம்பெருமானால் தன் லீலையால் ஸம்ஸாரபந்தத்தில் பூட்டப்பட்டவை. அவனே அவற்றை அதினின்று விடுவிக்க வேண்டுமேயன்றிப் பிறர் விடுவிக்க முடியாது.

इत्यादिகளிற்படியே परतन्त्र–चेतनர்களில் ஆரேனும் ஒருவன் தனக்கும் பிறர்க்கும் நிரபேக்ஷ–ரக்ஷகனாகமாட்டான்[a]– என்றபடி.

**வாக்யம் – 2**

(2)

ஸ்ரீமானான நாராயணன் ஒருவனே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம் என்றது–

1 'श्रीमन् नारायण स्वामिन् अनन्यशरणस्तव ।
चरणौ शरणं यातः तवैवास्म्यहमच्युत ॥
2 'मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ।
3 'तमेव चाद्यं पुरुषं प्रपद्येत् यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥

---

a - எம்பெருமானை எதிர்பாராது காப்பவன்

1 (த்வய மந்த்ர)÷ பிராட்டியுடன் கூடிய நாராயணனே! நான் உன்னையன்றி வேறு கதியற்றவன். உன் திருவடிகளைச் சரணமடைந்தேன். உனக்கே ஆட்பட்டுள்ளேன். என்னைக் கைவிடக் கூடாது.

2 दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥

கீதை (7–14) ÷ அர்ஜுந! ஸத்துவம் – ரஜஸ் – தமஸ் என்னும் முக்குணங்களாகிய என் மாயையைக் கடப்பதற்கு ஸத்ய ஸங்கல்பனாய், பரமகாருணிகனாய், எல்லாவுலகுக்கும் அடைக்கலமாயுள்ள என்னிடமே ப்ரபத்தியைச் செய்யவேண்டும். அப்படிச் செய்பவர்கள் அந்த மாயையைக் கடந்து என்னைக் குறித்துப் பக்தியோகம் செய்கின்றனர்.

3 ततः पदं तत् परिमार्गितव्यं यस्मिन् गता न निवर्तन्ति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये(त्) यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥

கீதை (15–4) ÷ எல்லாவற்றுக்கும் காரணமான பரமபுருஷனையே சரணமடைய வேண்டும். அப்பொழுதுதான் நெடுங்காலமாய் ஸத்துவம் முதலிய குணங்களில் இருந்த பற்றும் அதற்குக் காரணமான விபரீத ஞானமும் தொலையும். அனைத்தையும் படைப்பவனாகிய அவனாலேயே அநாதியான இந்த உலகப் பற்று வந்தது. அது அவனாலேயே தொலையவேண்டும். மோக்ஷத்தை விரும்பிய பழங்காலப் பெரியோர் இந்தப் பற்று அஞ்ஞானம் முதலியவற்றை ஒழிப்பதற்காக என்னைச் சரணமடைந்து பற்று நீங்கப்பெறுவது நெடுங்காலமாய் நடந்து வருகின்றது.

1 'तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात् परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥
2 'संसारार्णवमग्नानां विषयाक्रान्तचेतसाम् ।
विष्णुपोतं विना नान्यत् किंचिदस्ति परायणम् ॥
3 'संसारसागरं घोरम् अनन्तक्लेशभाजनम् ।
त्वामेव शरणं प्राप्य निस्तरन्ति मनीषिण: ॥
4 'सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं ॥

इत्यादिகளிற்படியே पत्नी-संबन्ध-गुण-विग्रह-विशेष-विशिष्टனை

1 கீதை (18-62) ÷ அர்ஜுந! குணங்களாகிய மாயை நீங்க வழி கேள். இந்த மாயையை வேறொன்றாலும் போக்க முடியாது. எல்லாம் ஈச்வரனால் ஏற்படுவன. ஆதலின் எல்லாவற்றையும் ஆள்பவனாய் உன்மீது உள்ள அன்பினால் உனக்குத் தேரோட்ட அமர்ந்துள்ளவனாய் உன்னை இங்ஙனம் செய் என்று நியமிப்பவனான அவன் கூறுகிறபடியே எவ்வாற்றானும் நட. அவன் கூறுகிறபடி போர் செய். அங்ஙனம் செய்தால் அவனது அநுக்ரஹத்தால் எல்லாக் கர்ம பந்தமும் மறுபடி வராதபடி நீங்கப் பெற்றுச் சாச்வதமான பரமபதத்தை அடைய வழியுண்டு.

2 விஷ்ணு தர்(1-59) ÷ உலக விஷயங்களில் ஈடுபட்டு ஸம்ஸாரக் கடலுள் மூழ்கியவருக்குக் கரையேற எம்பெருமானாகிய ஓடமேயன்றி வேறு உயர்ந்த ஸாதநம் எதுவும் இல்லை.

3 ஜிதந்தே (1-4) ÷ அளவற்ற துன்பத்தைத் தருவதால் பயங்கரமான ஸம்ஸார ஸமுத்ரத்தை உன்னையே சரணமடைந்த புத்திமான்கள் கடக்கின்றனர்.

4 सर्वलोकशरण्याय राघवाय महात्मने ।
निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ॥
ராமா - யுத்த (17-17) ÷ எல்லா உலகங்கட்கும் ரக்ஷகனாய் மஹாத்மாவான ஸ்ரீராகவனிடத்தில் ஸமீபத்தில் வந்திருக்கும் விபீஷணனாகிய என்னைப் பற்றிச் சீக்கிரம் தெரிவியுங்கள்.

நாராயணன் ஒருவனே அகிஞ்சநராயும்[a] ஸகிஞ்சநராயு[b]முள்ள ஸர்வ ஜீவர்களுக்கும் स्व–बुद्धि–अधीन–सहकारि–अतिरिक्त–अपेक्षा–रहित[c]மாக அநிஷ்ட[d]– நிவ்ருத்தியையும் இஷ்ட–ப்ராப்தி[e]யையும் பண்ணுமவன்– என்றபடி.

இவனைப் பற்றினவர்களை ஒருவரும் बाधि[f]க்கமாட்டாத படியையும், स्वभावत:[g] ஸர்வ ஸமனாய் 'न मे द्वेष्योऽस्ति'[1] என்கிற இவனுக்கு द्वेष्य[h]ராம்படி सापराधरा[i]னவரை ஒருவரும் ரக்ஷிக்க

---

**a** - கைம்முதலற்று ப்ரபத்தி செய்பவர்கள்; **b** - பக்தி யோகம் செய்பவர்கள்; **c** - தன் ஸங்கல்பத்தால் அமைத்துக் கொள்ளும் துணைக் கருவியையன்றி வேறொன்றையும் துணைகூட்டிக் கொள்ளாமல்; **d** - தீயதை (கர்மங்களை) ஒழித்தல்; **e** - விரும்பிய பலனை (மோக்ஷத்தை) அளித்தல்; **f** - கெடுதல் செய்ய; **g** - இயற்கையாக; **h** - பகைத்தற்கு இடமாம்படி; **i** - குற்றம் செய்தவரை

1 *समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रिय: ।*
*ये भजन्ति तु मां भक्त्यामयि ते तेषु चाप्यहम् ॥*

*கீதை (9–29) ÷ அர்ஜுந! உலகில் காணமுடியாத என் உயர்ந்த ஸ்வபாவத்தைக் கேள்– உலகில் தேவன்– விலங்கு– மனிதன்– தாவரம் என்று நால்வகையாகப் பிரிந்த பிராணிகளுள் அந்தணர் – அரசர் என்று ஜாதியைக் கொண்டோ, ஆண்–பெண் என்ற பால் வேற்றுமையைக் கொண்டோ, அழகன்– குரூபி என்ற உருவ வேற்றுமையைக் கொண்டோ, ஸாத்விகன்– தமோகுணத்தவன் என்று தன்மை வேறுபாடு கொண்டோ மிக்க ஏற்றத் தாழ்வையுடைய எல்லாப் பிராணிகளும் என்னை அடைவதில் நான் ஒரே வகையான மனப்பாங்கை யுடையவன்; இழிவைக் கண்டு ஒருவனைப் பகைத்து நான் கைவிடுவதுமில்லை; உயர்வைக் கொண்டு ஒருவனுக்கு மிக்க மதிப்புக் கொடுத்து ஏற்றுக் கொள்வதுமில்லை. சேதநர்கள் என்னை ஆச்ரயிப்பது ஒன்றையே கவனிப்பேன். அவர்கள் என்மீது அளவற்ற அன்பு கொண்டு, என்னை வழிபடாவிடில் உயிர்தரிக்க மாட்டாமல் வேறு பயனை நாடாது என்னையே பஜிப்பவர்களா என்பதையே கவனிப்பேன். அவ்வாறு செய்பவர்கள் எவர்களாயினும் என்னைப் போன்ற குணமுடையர்போல் அச்சமின்றி ஸுகமாய் என்னிடமே ஈடுபட்டிருப்பர். நானோ என்னிலும் உயர்ந்தவராக அவர்களை நினைத்து நடந்து கொள்வேன்.*

மாட்டாதபடியையும் 'गजं वा वीक्ष्य सिंहं वा'[1] 'ब्रह्मास्वयंभूः'[2] என்கிற ச்லோகங்களின் தாத்பர்யத்திலும் ப்ரஹ்லாத– ஸுமுக– காக–ராவணாதி–வ்ருத்தாந்தங்களிலும் கண்டு கொள்வது.

**வாக்யம் – 3**

(3)

இஜ்ஜீவன் அநாதிகாலம் அநுபவிக்கப் பெருத ச்ரிய:பதியைப் பெறுகைக்கு ஹேதுவான உபாயத்தை ரஹஸ்யத்ரய முகத்தாலே உபதேசித்து அவ்வழியாலே ஆசார்யன் இவனுக்குத் தஞ்சமாகிறுன் என்றது–

[3] 'दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः ।

इत्यादिகளிற்படியே ஸூரிகளோடொக்க ஸ்வரூப[a]– யோக்யதை உண்டாயிருக்க ஸ்வ– அபராதத்தாலே स्वतः– प्राप्त[b]மான भगवदनुभवத்தை இழந்த ஸம்ஸாரி–சேதநன்,

---

a - இயற்கைத் தகுதி; b - உரிமையோடு தனக்குக் கிடைக்க வேண்டிய

1 गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वा वनमाश्रिता ।
नाहारयति संत्रासं बाहू रामस्य संश्रिता ॥
ராமா. அயோ. (60–20) ÷ மிக அழகிய முகமுள்ள ஸீதை இராமபிரானுடைய தோள்களைப் பற்றியுள்ள தைரியத்தால் யானையையோ, சிங்கத்தையோ, புலியையோ பார்த்தும் அஞ்சுவதில்லை.

2 ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा रुद्रस्त्रिणेत्रस्त्रिपुरान्तको वा ।
इन्द्रो महेन्द्रः सुरनायको वा त्रातुं न शक्ता युधि रामवध्यम् ॥
ராமா. ஸுந். (51–45) ÷ இராமன், ஒருவனைக் கொல்லவேண்டுமென்று நினைத்துவிட்டால் பிரமனே, சிவனே, இந்திரனே அவனைக் காப்பதென்பது முடியாது.

3 दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः ।
अतोऽहमपि ते दासः इति मत्वा नमाम्यहम् ॥
மந்த்ரராஜபத 12 ÷ எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவுக்கு இயற்கையிலேயே தாஸர்கள். ஆதலின் அவர்களுள் ஒருவனை 'நானும் உனக்குத் தாஸன்' என்ற கருத்துடன் உன்னை வணங்குகிறேன். (சிவன் கூறுவது).

இப்பேறு பெறுகைக்கு अविनाभाव[a]த்தாலே விச்வஸநீயமான[b] உபாய- விசேஷத்தை अध्यात्म[c]- சாஸ்த்ர- ஸாரமான மூலமந்த்ராதி களாலே உபதேசித்து

1 'आचार्यः प्लाविता तस्य ज्ञानं प्लव इहोच्यते ॥

2 'साक्षात् नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम् ।
मग्नानुद्धरते लोकान् कारुण्यात् शास्त्रपाणिना ॥

इत्यादिகளிற்படியே ஆசார்யன் இவனுக்குப் परंपरया-मोक्षसाधन[d]மாகிறுன்- என்றபடி.

3 'पापिष्ठः क्षत्रबन्धुश्च पुण्डरीकश्च पुण्यकृत् ।
आचार्यवत्तया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत् ॥

என்றதற்கும் இதுவே தாத்பர்யம்.

## வாக்யம் – 4

(4)

ஸர்வ–ஸவாமிநியாய், ஸர்வேச்வரனுக்குச் சேஷபூதையாய் सहधर्मचारिणिயான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்ய–அதிசயத்தாலும், அத்தலையில் वाल्लभ्य- அதிசயத்தாலும் புருஷாகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத்

---

a - ப்ரபத்தி செய்தால் மோக்ஷம் கிடைக்காமலிருக்காத தன்மை; b - நம்புதற்கு உரிய; c - வேதாந்த சாஸ்த்ரங்களுள் ஸாரமான; d - நேரிடையாயன்றி வரிசையாக

1 ஜீவாத்மா ஸம்ஸாரமெனும் கடலைக் கடப்பதற்கு ஓடமாயுள்ளது ஜ்ஞாநம். ஆசார்யன் அதை உபதேசிப்பதால் அந்த ஓடத்தைச் செலுத்துபவனுகின்றுன்.

2 ஜயாக்க்யஸம் (1–63) ÷ ஸம்ஸாரத்தில் மூழ்கிக் கிடக்கும் ஜீவர்களுக்கு நாராயணன் கருணையால் தானே மனித சரீரத்தை எடுத்துக் கொண்டு சாஸ்த்ரமாகிய கையைக் கொடுத்து அவர்களைக் கரையேற்றுகின்றுன்.

3 மிகுந்த பாபம் செய்த க்ஷத்ரபந்துவும் மிக்க புண்ணியம் செய்த புண்டரீகனும் ஆசார்யர்களை ஆச்ரயித்ததால் மோக்ஷம் பெற்றனர். ஆதலால் ஒவ்வொருவனும் ஆசார்யனை அடைந்தேயாகவேண்டும்.

தஞ்சமாகிருள் என்றது–

1 'सर्वेषामेव लोकानाम् ईश्वरी मम वल्लभा ।'

2 'अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका ॥

3 'देवतिर्यङ्मनुष्येषु पुन्नामा भगवान् हरिः ।

स्त्रीनाम्नी लक्ष्मीमैत्रेय नानयोर्विद्यते परम् ॥

4 'नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी ।

1 सर्वेषामेव लोकानां पिता माता च माधव ।

गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभ ॥

பார. ஆரண்ய. (192–56)÷ என் மனைவியான பெரிய பிராட்டி எல்லாவுலகங்களுக்கும் ஈச்வரியாயுள்ளாள்.

2 अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका ।

इति श्रुतिशिरस्सिद्धं मच्छास्त्रेष्वपि मानद ॥

விஷ்வ. ஸம்.÷ இந்த லீலாவிபூதியும், நித்ய விபூதியும் இந்தப் பிராட்டிக்கும் எனக்கும் சேஷமாயுள்ளனவென்று வேதாந்தங்களிலும், என் சாஸ்த்ரமான ஸ்ரீபாஞ்சராத்ரத்திலும் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

3 விஷ்ணு. புரா. (1–8–35) ÷ மைத்ரேய! தேவர்- மானிடர்- விலங்குகள் இவற்றில் ஆண்பாலான பிராணிகள் எம்பெருமானுக்கும் பெண்பாலானவை பிராட்டிக்கும் அங்கியனவாகும். இவ்விருவருடைய ஆளுகைக்கு உட்படாத வஸ்துவே கிடையாது.

4 नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी ।

यथा सर्वगतो विष्णुस्तथैवेयं द्विजोत्तम ॥

விஷ்ணு. புரா. (1–8–17)÷ உலகுக்குத் தந்தையான எம்பெருமானை எல்லா நிலைகளிலும் பிரியாது உலகுக்குத் தாயாய் அவனைப் போல் சாச்வதமாயிருப்பவள் பெரிய பிராட்டி. அந்தணருள் சிறந்த மைத்ரேய! எம்பெருமான் எப்படி எங்கும் பரந்து நிற்கின்றானே அவ்வாறே இவளும் எங்கும் வியாபித்து நிற்கின்றாள்.

1 'यज्ञविद्या महाविद्या गुह्यविद्या च शोभने ।
आत्मविद्या च देवी त्वं विमुक्तिफलदायिनी ॥
2 'इयं सीता मम सुता सहधर्मचारी तव ।
3 'सर्वैश्वर्यगुणोपेता नित्यं तद्धर्मधर्मिणी ।
4 'करुणास्त्रा नतमुखी कमलाक्षी शशिप्रभा ।
5 'कल्याणवाहिनी ज्योत्स्ना कलिकल्मषनाशिनी ।
6 'सर्वार्तिनाशिनी हृष्टा समुद्रपरिशोषिणी ।
7 'सर्वेच्छापरिपूरिका ।

---

1 விஷ்ணு. புரா. (1-9-120) ÷ அழகிய தேவியே! யாகத்தைப் பற்றிய சாஸ்த்ரமாகவும் இந்த்ரஜாலம் முதலியவற்றைக் கூறும் கலையாகவும், மந்த்ரங்களை விளக்கிக்கூறும் கல்வியாகவும் நீயே உள்ளாய். ஆத்மாவைப் பற்றிய கலையாகவும் நீயே உள்ளாய். அந்த வித்யையால் வரும் மோக்ஷத்தைத் தருபவளும் நீயே.

2 इयं सीता मम सुता सहधर्मचरी तव ।
प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना ॥

ராமா. பால. (73-27)÷ இந்த ஸீதை என் பெண். உன்னுடன் சேர்ந்து தர்மம் செய்யத் துணைபுரிவாள். இவளை நீ ஏற்றுக் கொள். உனக்கு மங்களம் உண்டாகும். இவளைப் பாணிக்ரஹணம் செய்து கொள். (இராமனுக்கு ஜநகன் கூறியது.)

3 லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் (முன்னுரை – 21) ÷ (பிராட்டி) ஸர்வேச்வரித் தன்மைக்கு உரிய குணங்களையும் நாயகனைப் போன்ற தன்மைகளையும் உடையவள்.

4 கருணையால் கண்ணீர் பெருக்குமவள்; திருவடிகளில் விழும் சேதநர்களைக் குனிந்து நோக்குமவள்; தாமரை போன்ற கண்களையுடையவள்; சந்திரனைப் போன்ற குளிர்ந்த ஒளியுடையவள்.

5 லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் ÷ மங்களங்களைப் பெருக்குமவள்; நிலவுபோல் குளிர்ந்திருக்குமவள்; கலியினால் வரும் குற்றங்களை ஒழிப்பவள்.

6 லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் ÷ எல்லோருடைய கஷ்டத்தையும் போக்குமவள்; மகிழ்வுடன் நிற்பவள்; கடலையும் வற்றச் செய்யும் வல்லமையுடையவள்.

- எல்லோருடைய எல்லா விருப்பத்தையும் நிறைவேற்றுமவள்.

1 'आर्या यशोदा सुमतिः धर्मकामार्थमोक्षदा ।

2 'अप्रमेया क्रिया सूक्ष्मा परनिर्वाणदायिनी ।

3 'वाचः परं प्रार्थयिता प्रपद्येत् नियतः श्रियम् ।

4 'प्रायश्चित्तप्रसङ्गे तु सर्वपापसमुद्भवे ।
मामेकां देवदेवस्य महिषीं शरणं व्रजेत् ॥

5 'सर्वकामप्रदां रम्यां संसारार्णवतारिणीम् ।
क्षिप्रप्रसादिनीं लक्ष्मीं शरण्यामनुचिन्तयेत् ॥

6 'प्रणिपातप्रसन्ना हि मैथिली जनकात्मजा ।
अलमेषा परित्रातुं राक्षस्यो महतो भयात् ॥

---

1 லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் ÷ பூஜிக்க உரியவள்; புகழைத் தருமவள் நல்லெண்ணமுடையவள்; அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றைக் கொடுப்பவள்.

2 லக்ஷ்மீ ஸஹஸ்ர (23)÷ அளவிட்டு அறியமுடியாதவள் பிராட்டி; செயலின் வடிவாயுள்ளவள்; ஸூக்ஷ்ம உருவத்தையும் எடுக்கவல்லவள்; உயர்ந்த மோக்ஷத்தைத் தருமவள்.

3 சௌநகஸம்÷ சொற்களின் தாத்பர்யமாய் நிற்கும் எம்பெருமானை அடைய வேண்டுமென்று பிரார்த்திப்பவன் நியமங்களுடன் அவசியமாய்ப் பிராட்டியிடமும் ப்ரபத்தி செய்ய வேண்டும்.

4 லகுதந் 17-10÷ எந்தப் பாபம் வரினும் பிராயச் சித்தம் செய்ய முற்பட்டால் எம்பெருமானுக்குத் தேவியான என்னைச் சரணமடைய வேண்டும்.

5 விரும்பிய அனைத்தையும் அளிப்பவளாய், அழகியவளாய், ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து கரையேற்றுமவளாய், விரைவில் அருள் புரிபவளாயுள்ள பிராடடியைச் சரணமடைய ஏற்றவளாய்த் தியானிக்க வேண்டும்.

6 ராமா ஸுந். 27-45 ÷ அரக்கியர்களே! ஜநகன் திருமகளான சீதைப் பிராட்டி நீங்கள் செய்யும் ப்ரபத்தியால் மகிழ்ந்து உங்களைப் பெரிய ஆபத்தினின்றும் காக்க வல்லவளாவாள். (த்ரிஜடையின் வாக்யம்)

[1] 'अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम् ।

इत्यादிகளிற் சொன்ன सर्वशेषि–व्यतिरिक्त–सर्वशेषित्व[a]ம் निग्रह–असमानाधिकरण–सर्वानुग्रहवत्त्व[b]ம் इत्यादि स्वभाव– விசேஷங்களை யுடையளான பிராட்டி, सापराध[c]ரானவர்கள் எல்லோருக்கும் शासिता[d]வான ஸர்வேச்வரனை अभिमुख[e]ம் கொள்ளமாட்டாதே தயங்காதபடி அவனுடைய पितृत्व–प्रयुक्त[f]மான ऊष्मलीभाव[g]த்தை 'उचितैरुपायैर्विस्मार्य[2]' என்னும்படியாக்கி இவர்களை அவன்

a - எல்லோருக்கும் சேஷியான எம்பெருமானைத் தவிர மற்ற அனைவர்க்கும் சேஷியாயிருக்கும் தன்மை; b - சிற்றம் சிறிதும் தீமையின்றி அனைவருக்கும் நன்மையைச் செய்யும் தன்மை ; c - அபராதம் செய்தவர்கள்; d - தண்டிப்பவன்; e - அநுகூலமாய் முகங்கொடுத்தல்; f - தந்தையென்பதால் ஏற்பட்ட; g - திருவுள்ளக் கொதிப்பு

[1] अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम् ।
अभियाचाम वैदेहीमेतद्धि मम रोचते ॥

ராமா. ஸுந். (58–87)÷ இந்தப் பிராட்டி அரக்கியர் கூட்டம் முழுவதையுமே ராமனால் ஆபத்து வராமல் காக்கவல்லவள். இவளை நாம் பிரார்த்திப்போம். இதுவே என் மனத்துக்கு உகந்தது. (த்ரிஜடையின் வாக்யம்)

[2] पितेव त्वत्प्रेयान् जननि परिपूर्णागसि जने
हितस्रोतो वृत्त्या भवति च कदाचित् कलुषधीः ।
किमेतत् निर्दोषः क इह जगतीति त्वमुचितैः
उपायैर्विस्मार्य स्वजनयसि माता तदसि नः ॥

ஸ்ரீகுணரத்ந(52)÷ தாயே! உன் நாயகன் மிக்க குற்றம் செய்த மனிதனிடம் சீற்றம் கொள்ளுகிறான். அது தந்தை புத்ரனிடத்துப் போல் நன்மை செய்வதற்காகவே உண்டாவது. அச்சமயத்தில் நீ பெருமாளிடம் 'இது என்ன செயல்? இவ்வுலகில் குற்றம் புரியாதவன் எவன்? ' என்றிவை முதலிய ஏற்ற சொற்களைக்கூறி அக்குற்றங்களை மறக்கச் செய்து அவனை எம்பெருமானுக்கு அந்தரங்க கோஷ்டியில் சேர்த்துவிடுகின்றாய். ஆதலின் நீ தாயல்லவோ?

திருவடிகளிலே சேர்ந்து 'தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியாரது செய்யார்'[1] என்னும்படி பண்ணிக் கொண்டு 'भवेयं शरण हि वः'[2] என்று அருளிச்செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேது[a] ஆகிருள்- என்றபடி.

(5) **வாக்யம் - 5**

இவளைப் புருஷாகாரமாக்கவேண்டுவது ஈச்வரன் दण्डधर ஞைகையாலே என்றது-

a - காத்தற்குக் காரணம்

1 *தன்னடியார் திறத்தகத்துத்தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்று செய்தாரென் பர்போலும் மன்னுடையவிபீடணற்கா மதிளிலங்கைத்திசைநோக்கிமலர்க்கண்வைத்த என்னுடைய திருவரங்கர்க் கன்றியும்மற்றொருவர்க்காளாவரே.*

பெரியாழ்வார் திரு (4-9-2) ÷ (சேதநரிடம் எம்பெருமானது உள்ளன்பைப் பரீக்ஷிப்பதற்காகப்) பிராட்டி அவனடியார்கள் மீது ஏதோ குற்றம் சொல்லுகிருள். எம்பெருமான் அப்பொழுது 'என் அடியார் இக்குற்றம் செய்திருக்க மாட்டார். செய்தாலும் நல்லதையே செய்தார்கள்' என்று கூடச் சொல்லுவான் போலும்.

2 *ततः सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता ।*
*अवोचद्यदि तत् तथ्यं भवेयं शरणं हि वः ॥*

ராமா. ஸு. (58-90)÷ நாயகனின் வெற்றிப் பேச்சைக் கேட்டு நாணமும் மகிழ்ச்சியுமுடையளாய் அரக்கியரைப் பார்த்து 'அது உண்மையானல் உங்களுக்குச் சரணமாயிருந்து காப்பேன்' என்று கூறினுள் பிராட்டி.

1 'अप्रमेयोऽनियोज्यश्च यत्र कामगमो वशी ।

2 'स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहु:।

इत्यादिகளிற்படியே निरङ्कुश–ஸ்வதந்த்ரனுன[a] ஸர்வேச்வரன்

3 'तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्यकार्यव्यवस्थितौ ।

---

a - தடையற்ற சுதந்திரமுடையன்

1 अप्रमेयोऽनियोज्यश्च यत्र कामगमो वशी ।
मोदते भगवान् भूतैर्बाल: क्रीडनकैरिव ॥

பார. ஸபா. 40–78÷ எம்பெருமான் அளவிட்டு அறிய முடியாதவன்; ஏவத்தகாதவன்; நினைத்த இடம் செல்லவல்லவன்; எல்லாவற்றையும் தன் வசத்தில் வைத்திருப்பவன். விளையாட்டுக் கருவிகளைக் கொண்டு குழந்தை விளையாடுவதுபோல் – பிராணிகளைக் கொண்டு லீலா ரஸத்தை அநுபவிக்கிருன்.

2 रूपप्रकारपरिणामकृतव्यवस्थं विश्वं विपर्यासितुमन्यदसच्च कर्तुम् ।
क्षाम्यन् स्वभावनियमं किमुदीक्षसे त्वं स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहु: ॥

வைகுண்டஸ்தவம் (55)÷ எம்பெருமானே! ப்ரபஞ்சத்தில் சில பொருள்களுக்கு உருவமே மாறுபடுதலும், சிலவற்றுக்குத் தன்மை மட்டும் மாறுபடுதலும் என்றவரையறை உள்ளது. இதை மாற்றவோ, இல்லையாக்கவோ, புதிதாய்ச் செய்யவோ உனக்குச் சக்தியுண்டு. ஸர்வேசுவரனை நீ எதைச் செய்தாலும் உன் சுதந்திரத்தை ஆக்ஷேபிக்க முடியாது. ஆயினும் உன் ஸங்கல்பத்தால் ஏற்பட்ட வ்யவஸ்தையைக் காத்துவருகின்ருய்.

3 तस्मात् शास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।
ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥

கீதை (16–24)÷ ஆதலால் அர்ஜுந! எதைக் கைகொள்வது, எதைக் கைவிடுவது என்ற வரையறைக்குச் சாஸ்த்ரம் தான் உனக்கு ஆதாரம். தர்மசாஸ்த்ரம் – இதிஹாஸம் – புராணம் முதலியவற்றைத் துணை கொண்ட வேதங்கள் கூறுகிறபடி புருஷோத்தமனென்னும் பரதத்துவத்தையும், அவனை மகிழ்விப்பதாய் அவனை அடைதற்கு உபாயமாய் உள்ள கர்மங்களையும் ஏற்றச் சுருக்கமின்றி அறிந்து இவ்வுலகில் கர்மத்துக்கு வசப்பட்ட நீ கர்மயோக – பக்தியோகங்களைச் செய்ய உரியனுகின்ருய்.

என்று க்ஷேத்ரஜ்ஞருக்கு[a] कृत्य–अकृत्य–व्यवस्थापक[b]மான சாஸ்த்ரத்தை अनादियாக ப்ரவர்த்திப்பிக்க प्रवाह–अनादि–कर्म–संयुक्त[c]ராய் आज्ञा–अतिलङ्घन[d]ம் பண்ணினவர்களை இவன் 'क्षिपाम्यजस्रमशुभान्'[1] என்கிறபடியே निग्र[e]ஹித்துப் போரும வளுக प्रमाण–सिद्ध[f]ஞைகயாலே स्व–अपराध–भूयस्त[g]யாலே भीत[h]ரானவர்களுக்கு अर्थस्वभावादि[i]களாலே अनतिलङ्घनीय वाक्य[j]யான விஷ்ணுபத்நியைப் புருஷாகாரமாக்க[k] வேண்டு கிறது– என்றபடி.

**வாக்யம் – 6**

(6)

இத் दण्ड– காரணம் अनादिயான आज्ञा–अतिलङ्घनம் என்றது–

136*1 'समोऽहं सर्वभूतेषु' என்று ஸர்வஸமனை[l] ஸர்வேச்வரன் தனக்கு வைஷம்ய[m]– नैर्घृण्यादि[n]கள் வராதபடி व्यवस्थित–निग्रह[o]ம் பண்ணுகைக்கு விசேஷ–காரணம்

a - சேதநர்களுக்கு; b - செய்யத் தக்கது–செய்யத்தகாதது என்னும் வரையறையைக் காட்டுவது; c - வெள்ளம் போல் தொடர்ந்து அநாதியாய் வரும் கர்மங்களுடன் கூடியவர்; d - சாஸ்த்ரத்தை மீறி நடத்தல்; e - சீற்றத்தால கெடுத்து; f - சாஸ்த்ரங்களால் ஏற்பட்டது; g - தன் பாபங்களின் மிகுதியாலே; h - அஞ்சியவர்; i - தாயாதலின் உள்ள அன்பு மிகுதி, இவளை முன்னிட்டால் எம்பெருமான் மறுக்க மாட்டாமை முதலியன; j - எம்பெருமான் மீறி நடக்க முடியாத சொல்லையுடையவள்; k - பரிந்து பேசுபவள் (சிபாரிசு) ; l - எல்லோரிடத்திலும் ஸமமான மனப்பாங்குடையவன்; m - பக்ஷபாதம்; n - கருணையில்லாமை; o - வரையறையோடு தண்டனை

1 तानहं द्विषत: क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रं अशुभान् आसुरीष्वेव योनिषु ॥

கீதை 16–19 ÷ அர்ஜுந! இவ்வாறு என்னிடம் பொருமைகொண்டு என்னைப் பகைப்பவர் மிகக் கொடியர்; மனிதருள் இழிவானவர் முட்டாள்கள். அவர்களை எப்பொழுதும் பிறவி– முதுமை– மரணம் முதலிய மாறி மாறி வரும் நிலையுள்ள ஸம்ஸார வரிசையில், அதிலும் எனக்கு எதிராக நடக்கும் பிறவிகளிலேயே தள்ளி அப்பிறவிக்கு ஏற்ற இழி செயல்களை மேன்மேலும் புரிவதற்கு வேண்டிய கொடிய எண்ணங்களையே அவர்களுக்குக் கொடுப்பேன்.

1 'निमित्तमात्रमेवासौ सृज्यानां सर्गकर्मणि ।
प्रधानकारणीभूता यतो वै सृज्यशक्तय: ॥
निमित्तमात्रं मुक्त्वैव नान्यत् किञ्चिदपेक्षते ।
नीयते तपतां श्रेष्ठ स्वशक्त्या वस्तु वस्तुताम् ॥
2 'कर्मभिर्भाविता: पूर्वै: कुशलाकुशलै: प्रजा: ' என்றும்,
3 'हन्यते तात क: केन यत: स्वकृतभुक् पुमान् ' என்றும்,
4 'शुभे त्वसौ तुष्यति दुष्कृते तु न तुष्यते वै परम: शरीरी '

---

1 விஷ்ணு புரா. 1–4–51, 52 ÷ தவத்தில் சிறந்த மைத்ரேயரே! பிரமனது உருவில் எம்பெருமான் செய்யும் படைப்பில் எம்பெருமான் பொதுவான காரணமாக மட்டும் உள்ளான். முக்கிய காரணம் ஜீவர்களின் முந்திய கர்மங்களின் வரிசைகள்தாம். படைப்புக்கு இலக்காகும் வஸ்து பொதுக்காரணமான எம்பெருமானையன்றி வேறு எதையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. தன் கர்மங்களாலேயே அவற்றுக்கு ஏற்றதான பிறவியை அடைகின்றன.

2 कर्मभिर्भाविता: पूर्वै: कुशलाकुशलै: प्रजा: ।
ख्यात्या तया ह्यनिर्मुक्ता: संहारेऽप्युपसंहृता: ॥
விஷ்ணு புரா 1–5–28 ÷ தேவர்–மனிதர் முதலிய பிறவிகளைக் கொள்ளும் ஜீவர்கள் தாங்கள் முன் செய்த நல்லனவோ, தீயனவோ உள்ள கர்மங்களுக்குக் கட்டுப்பட்டவராய் அந்தந்தப் பிறவிகளை ஏற்று அந்தக் கர்மவாஸனையினின்று விடுபடாமலே இருந்து அழிவுக் காலத்திலும் அக்கர்மங்களுக்குத் தக்கவாறு அழிக்கப்படுகின்றனர்.

3 தந்தையே! ஒருவனால் மற்றொருவன் எவ்வாறு கொல்லப் படுகின்றான்? அவனவன் தான் செய்த கர்மத்தின் பலனை அநுபவிப்பவனாகவன்றோ ஏற்பட்டுள்ளது.

4 मत्स्यो यथा स्त्रोत इवाभिपाती तथा कृतं पूर्वमुपैति कर्म ।
शुभे त्वसौ तुष्यति दुष्कृते तु न तुष्यते वै परम: शरीरी ॥
பாரதம் சாந்தி (199–25)÷ மீன் வெள்ளத்தில் பாய்ந்து ஓடுவதுபோல் முன்பு செய்த கர்மம் சேதநனை விடாமல் சுற்றிக் கொண்டு நிற்கும். எல்லாவற்றையும் சரீரமாகக் கொண்டு எல்லோரினும் மேம்பட்டு நிற்கும் எம்பெருமான், ஒருவன் செய்யும் நல்ல செயலுக்கு மகிழ்ந்தும், தீய செயலுக்குச் சீற்றம் கொண்டும் உள்ளான்.

என்றும்,

'நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்'[79*]

என்றும் प्रमाणसिद्ध[a]மாய் प्रवाह–अनादि[b]யான विरुद्ध–अनुष्ठान[c]ம் – என்றபடி.

**வாக்யம் – 7**

(7)

இப்படி अपराध–अनुरूपமாக दण्डधरனாய்ப் போருகின்ற சரண்யனுடைய வசீகரணங்களில் प्रधानம் सर्व–अकिञ्चन अधिकारமான ஆத்ம–ரக்ஷா–भर–ஸமர்ப்பணம் என்றது–

[1] 'अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ।' என்றும்,

[2] 'सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।' என்றும்,

a - சாஸ்த்ரங்களால் முடிவு செய்யப் பட்ட; b - வெள்ளம்போல் அநாதியாய்த் தொடர்ந்து வருகின்ற; c - சாஸ்த்ரத்திற்கு முரண்பட்ட செயலைச் செய்தல்

1 *किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।*
*अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥*

*கீதை (9–33)÷ அர்ஜுந! ஸ்த்ரீ – வைச்யர் – சூத்ரர் ஆகியோர் பரலோகத்துக்கு உரிய வழியைப் பேணுது பாபப் பிறவியுடையவராயினும் அவர்கள் என்னை அடைந்து உயர் கதியடைகின்றனர். இங்ஙன் இருக்க புண்ணியப் பிறவி பெற்ற அந்தணர்களும் அரசர்களும் என்னிடம் பக்தி கொண்டு நற்கதி பெறுவதைப் பற்றிக்கூறவும் வேண்டுமோ? ஆதலின் நிலையற்றதாய்த் துக்க மயமாயுள்ள இந்த உலகில் இருந்துள்ள அரசனுன நீ என்னிடம் பக்தி செய்.*

2 *கீதை (18–66)÷ அர்ஜுநு! உன்னுல் செய்யமுடியாத மற்ற உபாயங்கள் அனைத்தையும் விட்டு என்னிடமே ப்ரபத்தியைச் செய். உனக்கு எதிரியாயுள்ள ஸகல பாபங்களினின்றும் உன்னை விடுவித்து மோக்ஷத்தைத் தருவேன். நீ ஒன்றுக்கும் கலங்காதே.*

[1] 'पितरं मातरं दारान् पुत्रान् बन्धून् सखीन् गुरून् ।
रत्नानि धनधान्यानि क्षेत्राणि च गृहाणि च ॥
सर्वधर्मांश्च संत्यज्य सर्वकामांश्च साक्षरान् ।
लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो ॥' என்றும்,
[2] 'वृथैव भवतो याता भूयसी जन्मसन्ततिः ।
तस्यामन्यतरज्जन्म संचिन्त्य शरणं व्रज ॥' என்றும்,
[3] 'अहमस्म्यपराधानाम् आलयोऽकिञ्चनोऽगतिः ।
त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थनामतिः ॥
शरणागतिरित्युक्ता सा देवेऽस्मिन् प्रयुज्यताम् ।
तस्यानुबन्धाः पाप्मानः सर्वे नश्यन्ति तत्क्षणात् ॥' என்றும்,
[4] 'भक्त्या परमया वाऽपि प्रपत्त्या वा महामते ।
प्राप्योऽहं नान्यथा प्राप्यो मम कैङ्कर्यलिप्सुभिः ॥' என்றும்,

---

1 விஹகேச்வர - ஜிதந்தா ÷ எங்கும் பரந்துள்ள எம்பெருமானே! தகப்பன்- தாய்- மனைவி- புத்திரர்- உறவினர்- தோழர்- ஆசிரியர்- இரத்தினங்கள்- தனதாந்யங்கள்- நிலம்- வீடு- மற்ற உபாயங்கள்- பரமபதம் உள்பட எல்லாப் போகங்கள்- கைவல்யம் ஆகிய அனைத்தையும் அடியோடு விட்டு உலகமளந்த உன் திருவடிகளையே சரணமடைந்தேன்.

2 சாண்டில்ய ÷ நீ எடுத்த அநேக பிறவிகள் வீணாய்க் கழிந்து விட்டன. இந்தப் பிறப்பும் அவற்றுள் ஒன்றாக ஆகாமல் ப்ரபத்தியைச் செய்.

3 அஹிர்புத் (37-30,31)÷ 'அடியேன் அபராதங்களுக்கு உறைவிடமாகவும், என்னைக் காத்துக் கொள்ள வேறு உபாயமற்றவனாகவும், உன்னையன்றி வேறு பயனற்றவனாகவும் உள்ளேன். நீயே எனக்கு உபாயமாக இருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்துப் பரந்யாஸம் செய்வதுவே ப்ரபத்தியெனப் படுகிறது. அதை இவ்வெம்பெருமான் விஷயத்தில் செய். இவ்வாறு செய்பவனுக்கு அவனிடம் இருந்த ஸகல பாபங்களும் அந்த க்ஷணத்திலேயே அழிந்து விடுகின்றன.

4 அஹிர். ஸம். ÷ மோக்ஷத்தில் எனக்குச் சாச்வத கைங்கர்யம் செய்ய விரும்புமவர்கள் பக்தியோகத்தை அல்லது ப்ரபத்தியைச் செய்தால்தான் என்னை அடையமுடியும். வேறு எந்த வழியாலும் என்னிடம் மோக்ஷத்தைப் பெற முடியாது. (எம்பெருமான் வாக்யம்)

[1] 'शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिता: ।
तेऽपि मृत्युमतिक्रम्य यान्ति तद्वैष्णवं पदम् ॥' என்றும்,
मुमुक्षु[a]வுக்கு शरण्य-प्रसादन[b]ங்களாகச் சொல்லப்பட்ட उपाय[c]ங்களில் வைத்துக் கொண்டு
[2] 'निक्षेपापरपर्यायो न्यास: पञ्चाङ्गसंयुत: ।
संन्यासस्त्याग इत्युक्त: शरणागतिरित्यपि ॥' என்றும்,
'आत्मात्मीयभरन्यासो ह्यात्मनिक्षेप उच्यते ।'[39*1]
என்றும் சொல்லப்பட்ட स्व-रक्षा-भर-समर्पण[d]ம்
[3] 'इदं शरणमज्ञानाम् इदमेव विजानताम् ।
इदं तितीर्षतां पारम् इदमानन्त्यमिच्छताम् ॥'

**a** - மோக்ஷத்தை விரும்புமவனுக்கு; **b** - எம்பெருமான் திருவுள்ளத்தை உகப்பிக்குமவையாக; **c** - பக்தி ப்ரபத்திகளில்; **d** - தன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தல்

1 ப்ரஹ்மபு (50)÷ பக்தி யோகம் செய்யமுடியாமல் உன்னிடம் ப்ரபத்தியைச் செய்தவர்களும் ஸம்ஸார மண்டலத்தைக் கடந்து பரமபதத்தை அடைகின்றனர்

2 லக்ஷ்மீ தந் (17–76)÷ நிக்ஷேபம் என்ற வேறு பெயரையுடைய பரந்யாஸம் ஐந்து அங்கங்களுடன் கூடியது இதுவே 'ஸந்ந்யாஸம், த்யாகம், சரணாகதி' என்ற பெயர்களால் வழங்கும்.

3 லக்ஷ்மீ தந் (17–100)÷ பக்தியோகாதிகளில் தெளிவான ஞானமோ, ப்ரபத்தியிலும் ஸூக்ஷ்மமான விசேஷங்களில் அறிவோ இல்லாதவர்க்கும் இந்த ப்ரபத்தியே ஏற்ற உபாயம். பக்தி யோகாதிகளில் தெளிவான ஞானமோ, ப்ரபத்திக்கு வேண்டிய சரண்யனுடைய குண விசேஷங்களில் ஞானமோ உடையவர்க்கும் இந்த ப்ரபத்தியே உபாயமாகும். விரைவில் ஸம்ஸாரத்தைக் கடக்க விரும்புமவர்க்கும் இதுவே உபாயமாகும். ஸ்ரீவைகுண்டத்தில் விரைவில் பரிபூர்ண பகவதநுபவத்தைப் பெற விரும்புமவர்க்கும் இந்த ப்ரபத்தியே உபாயமாகும்.

[1] 'तावदार्तिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखम् ।
यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ॥

[2] 'प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा न विद्यते ।
सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ॥

[3] 'उपायभक्तिः प्रारब्धव्यतिरिक्ताघनाशिनी ।
साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी ॥

[4] 'सत्कर्मनिरताः शुद्धाः सांख्ययोगविदस्तथा ।
नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि ॥

इत्यादिகளிற் சொல்லுகிறபடியே वर्णविशेषादिरहित[a]மாய் अत्यन्त-अकिञ्चन[b]ருக்கும் अधिकरि[c]க்கலாகையாலும், उपायान्तर-पर्यन्त-

---

a - ஜாதியைப் பற்றிய வரையறையற்றதாய்; b - கைம்முதல் சிறிதும் இல்லாதவர்க்கும்; c - செய்ய ஏற்றது

1 விஷ்ணு புரா. (1-9-78)÷ எம்பெருமானே! ஸகல பாபங்களையும் ஒழிக்கவல்ல உன்னைச் சரணமடையாத வரையில் தான் மனிதனுக்குத் தான் இழந்த ஐச்வர்யத்தை மறுபடி பெற வேண்டுமென்ற கவலையும்,* புதிய ஐச்வர்யத்தைப் பெற ஆசையும், சரீரத்திலும் வேறுபட்ட ஆத்மாவை அநுபவியாமையும், ஸம்ஸார துக்கமும் இருக்கும்.

2 ஸநத்குமார ÷ பக்தியோகம் பற்பல அங்கங்களை எதிர் பார்ப்பது போல் ப்ரபத்தி (குறிப்பிட்ட ஐந்து அங்கங்களைத் தவிர) வேறொன்றையும் எதிர் பார்ப்பதில்லை. அது எல்லாவிடங்களிலும், எல்லோருக்கும், எல்லாப் பயனையும் அளிக்கவல்லது.

3 பக்தியோகம் பயன் கொடுக்கத் தொடங்கிய (ப்ராரப்த) பாபங்களைத் தவிர மற்ற பாபங்களையே ஒழிக்க வல்லது. ப்ரபத்தியோ பலன் கொடுக்கத் தொடங்கிய பாபங்களையும் போக்க வல்லது. ஆதலின் பக்தியோகத்திலும் ப்ரபத்தி மிகச் சிறந்ததாகும்.

4 லக்ஷ்மீ தந் (17-62)÷ நிவ்ருத்தி தர்மங்களான கர்ம யோகத்தைச் செய்பவர்களும் ஜ்ஞாநயோக பக்தியோகங்களைச் செய்கிறவர்களும் ப்ரபந்நனுடைய பெருமையில் கோடியில் ஒரு பாகத்தைக் கூடப் பெறத்தகுந்தவர்களல்லர்.

सकल–फल–साधन[a]மாகையாலும், आर्ति[b]யில் तारतम्य[c]த்துக்கு अनुगुण[d]மாக प्रारब्धकर्म[e]த் தையும் கழிக்கவற்றுகையாலும், सुकर[f]மாகையாலும், दुष्कर–परिकर– निरपेक्ष[g]மாய் सकृत्–कर्तव्य[h] மாகை யாலும் ஸர்வருக்கும் स्व–अभिमत–अविलम्बित–फल–सिद्धि[i]க்கு இதுவே प्रधानம்– என்றபடி.

இதில் சொன்ன प्रपत्तिरूपமான स्वरक्षा–भरसमर्पणமாவது– स्वरक्षणार्थ–स्वप्रवृत्ति–अभिमान–निवृत्ति[j]யோடும் प्रार्थனையோடும் கூடின शरण्य–एक–साध्य–स्वरक्षणत्व–अध्यवसाय–विशेष[k]ம்.

**வாக்யம் – 8**

(8)

இது सपरिकरமாக सकृत्–कर्तव्यம் என்றது–'सकृत् कृत: शास्त्रार्थ:'[1]– என்கிற सामान्यप्राप्ति[l]யாலும், 'आवृत्तिरसकृदुपदेशात्'[2] என்கிற விசேஷ – ஹேது[m] இதில் இல்லாமையாலும்,

---

a - பக்தியோகத்தை நிறைவேற்றித் தருதல் வரை உள்ள எல்லாப் பலன்களுக்கும் ஸாதநம்; b - மோக்ஷம் பெற ஆர்வத்தில்; c - மிகுதிக்குறைவுக்கு; d - தக்கவாறு; e - பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மத்தையும்; f - செய்வதற்கு எளிதாயிருப்பது; g - செய்வதற்கு கடினமான அங்கங்களை எதிர் பாராதது; h - ஒரே முறை செய்ய வேண்டியது; i - தான் விரும்பும் பலனை விளம்பமின்றிப் பெறுதற்கு; j - தன்னைக் காப்பதற்காகத் தானே சுதந்திரமாய் முயற்சி செய்தல் என்னும் தீய எண்ணத்தை விடுதலோடும்; k - தன்னைக் காத்தல் எம்பெருமான் ஒருவனாலேயே ஆகக்கூடியதென்ற உறுதியான ஞானம்; l - பொதுவான நீதியால் கிடைத்தல்; m - தனிப்பட்ட காரணம்

1 பூர்வமீ(11–1–22)÷ ஒரு பலனுக்காகச் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மத்தில் ஒரு முறைதான் செய்யவேண்டும்.

2 ப்ரஹ்மஸூ (4–1–1)÷ பக்தியோகம் தைலதாரை போல் இடைவிடாத த்யான வடிவாயுள்ளது. எதனால் ? அத்தகையதென்று உபநிடதம் கூறியுள்ளதால்.

1 'सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम ॥
2 'सकृदेव हि शास्त्रार्थः कृतोऽयं तारयेन्नरम् ।
3 'ननु प्रपन्नः सकृदेव नाथ तवाहमस्मीति च याचमानः ।
4 'सकृत्प्रार्थनामात्रेण अपेक्षितं दास्यति' इत्यादि ப்ரமாண-ஸம்ப்ரதாயங்களாலும், ப்ரபத்தி- மந்த்ரங்களில் वर्तमान-व्यपदेश[a]ம் अनुष्ठान-काल-अभिप्राय[b]மாகையாலும், द्रौपदी-विभीषण-

---

a - நிகழ்காலத்தில் குறிப்பிட்டிருத்தல்; b - ப்ரபத்தி நிகழ்கின்ற காலத்தைக் கருத்திற் கொண்டதாகும்

1 ராமா யுத்த (18-33)÷ ஒரே தடவை ப்ரபத்தி செய்தவனுக்கும் உனக்கு அடிமையாகின்றேன் என்பவனுக்கும் எல்லாப் பிராணிகளிடமிருந்தும் பயமில்லாமையைக் கொடுக்கின்றேன். இதுவே என்னுடைய வ்ரதம்.

2 லக்ஷ்மீ தந் (17-90)÷ சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட ப்ரபத்தி ஒரே முறை செய்யப்பட்டால் அது மனிதனை ஸம்ஸார பந்தத்தினின்று விடுவித்து மோக்ஷத்தைத் தரும்.

3 ननु प्रपन्नः सकृदेव नाथ तवाहमस्मीति च याचमानः ।
तवानुकम्प्यः स्मरतः प्रतिज्ञां मदेकवर्जं किमिदं व्रतं ते ॥

ஆளவந்தார் ஸ்தோ (64)÷ ஸ்வாமி உன்னை ஒரு முறை சரணமாக அடைந்து ப்ரபத்தி செய்துவிட்டேன். அதற்குப் பலனாக உனக்கு அடியேன் என்ற அநுஸந்தாநத்தோடு உன் கைங்கர்யத்தையும் பிரார்த்திக்கின்றேன். முன் இராமாயணத்தில் நீ செய்த பிரதிக்ஞையை நினைத்துக் கொண்டு நீ அருள்புரிதற்கு ஏற்றவனாயுள்ளேன். அப்பொழு என்னைத் தவிர மற்றவர்க்கே அபயம் தருவதாக விரதங் கொண்டாயா? அப்படி இல்லையே!

4 प्रपत्तिर्विश्वासः सकृत्प्रार्थनामात्रेणापेक्षितं दास्यतीति विश्वासपूर्वकं प्रार्थनमिति यावत् ॥

ஸ்ரீ பாஷ்யகாரர் வாக்யம் : ப்ரபத்தியென்பது நம்பிக்கை. அதாவது - ஒரு தடவை பிரார்த்திப்பதாலேயே வேண்டிய பலனைத் தருவான் என்ற நம்பிக்கையுடன் பிரார்த்திப்பது.

गजेन्द्र–सुमुख–काक–कपोतादि–वृत्तान्त– விசேஷங்களாலும் आनुकूल्य– सङ्कल्पादि–अङ्गपञ्चक–संयुक्त[a]மான भरसमर्पणத்துக்கு सकृत्–अनुष्ठान[b]மே शास्त्रीय[c]ம் – என்றபடி.

**வாக்யம் – 9**

(9)

இஸ்ஸமர்ப்பணத்தைத் தான் அநுஷ்டிக்கவுமாம், தனக்காக आचार्यादिகள் அநுஷ்டிக்கவுமாம் என்றது– 'शास्त्रफलं प्रयोक्तरि[1]' என்று व्यवस्थै[d] உண்டாயிருக்கச் செய்தே புத்த்ராதிகளைப் பற்றவும் पित्रादिகள் 'சில ஸுக்ருதங்களை[e] அநுஷ்டிக்கை சாஸ்த்ரீயமாகையாலும்[f],

[2] 'स दिशतु भगवानशेषपुंसां हरिरपजन्मजरादिकां समृद्धिम् ।

[3] 'मयाऽद्य भक्त्या परमेश्वरेशे स्मृते जगद्धातरि वासुदेवे ।

**a** - கூடியதான; **b** - ஒரு முறை செய்வதே; **c** - சாஸ்த்ரத்தைத் தழுவியது; **d** - வரையறை; **e** - நல்ல கர்மங்களை; **f** - சாஸ்த்ரம் ஏற்றது

1 பூர்வ மீ (3-7-1)÷ சாஸ்த்ரம் விதித்த கர்மத்தைச் செய்தால் அதன் பலன் செய்தவனையே சேரும்.

2 इति विविधमजस्य यस्य रूपं प्रकृतिपरात्ममयं सनातनस्य ।
स दिशतु भगवानशेषपुंसां हरिरपजन्मजरादिकां समृद्धिम् ॥
விஷ்ணு புரா (6-8-64)÷ எம்பெருமான் பிறவியற்றவன்; அநாதியானவன்; அசேதநம் - சேதநம் எல்லாம் அவனுக்குச் சரீரம். அவன் ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற சுத்தஸத்துவ மயமான பல திவ்யமங்கள விக்ரஹத்தை எடுத்துக் கொள்பவன் அவன் எல்லாச் சேதநர்க்கும் பிறவி, முதுமை முதலியவற்றுக்கு இடமில்லாத மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அருள வேண்டும்.

3 சௌநகஸம் ÷ தேவாதி தேவனாய் உலகைப் படைப்பவனை வாஸுதேவன் இப்பொழுது என்னால் பக்தியோடு தியானிக்கப் பட்டால்

என்கிற पराशर–शौनक– வாக்யங்களாலும், மற்றும் பல மஹர்ஷிகளுடைய वृत्तान्तप्रकार[a]த்தாலும், प्रह्लाद–विभीषण–दशरथ–द्रौपदी–प्रभृतिகள் स्वसंबन्धि[b]களிலே சிலரைப் பற்ற ப்ரபத்தி பண்ணக்காண்கையாலும், லோகத்திலும் இவ் अनुष्ठानம் உண்டாகையாலும், 'வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து இவள் நோயிது தீர்த்து'[1] என்று ஆழ்வார் அருளிச்செய்த ந்யாயத்தாலும், 'வில்லிபுதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை– வல்ல பரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே'[2] என்று நாச்சியார் அருளிச் செய்கையாலும், இப்படி पूर्वाचार्य अनुष्ठान–संप्रदायங்கள் இருப்பதாலும் இப் ப்ரபத்தியைத் தான் अनुष्ठित्தால் फलसिद्धियுண்டாமாபோலே தனக்காக आचार्यादिகள் अनुष्ठित्தாலும் फलसिद्धिக்குக் குறைவில்லை – என்றபடி.

---

**a** - வரலாறுகளின் போக்கு; **b**- தங்களைச் சேர்ந்தவர்களில்;

1 .வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
பாதம்பணிந்து, இவள்நோயிதுதீர்த்துக்கொள்ளாதுபோய்,
ஏதம்பறைந்தல்லசெய்து கள்ளூடுகலாய்த்தூய்,
கீதமுழவிட்டு நீரணங்காடுதல்கீழ்மையே.
திருவாய் (4–6–8) ÷ வேதாந்திகளான ஸ்ரீவைஷ்வணவர்கள் வாயிலாக நித்யஸூரிகளின் தலைவனான எம்பெருமான் திருவடிகளைச் சரணமடைந்து இவள் நோயைத் தீர்க்க வேண்டும்.

2 நல்லஎன்தோழி நாகணைமிசைநம்பரர்
செல்வர் பெரியர் சிறுமானிடவர்நாம்செய்வதென்
வில்லிபுதுவை விட்டு சித்தர்தங்கள்தேவரை
வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டுமே.
நாச்சியார் (10–10) ÷ ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வார் தம் பெருமானைத் தம்மால் முடிந்த முயற்சி செய்து இங்கு வருமாறு அழைப்பாராகில் அவனை ஸேவிக்கப் பெறுவோம்.

1 'त्वय्याचार्यैर्विनिहितभरास्तावका रङ्गनाथ'

1 त्वय्याचार्यैर्विनिहितभरास्तावका रङ्गनाथ
त्वत्कैङ्कर्यप्रवणमनसस्त्वद्गुणास्वादमत्ताः ।
त्वय्येकस्मिंश्चापि विजहतो मुक्तवत् साधनत्वं
त्वच्छेषत्वस्वरसरसिकाः सूरयो मे स्वदन्ताम् ॥

ந்யாஸ திலகம் – 1 : திருவரங்கப் பெருமானே! சில சேதநர்கள் ஆசார்யர்களால் நன்கு உபதேசிக்கப் பெற்றுப் பரிபூர்ணமான தகுதியையடைந்து தாங்களே எம்பெருமானிடம் தங்களுக்காக ஸ்வநிஷ்டையென்னும் ப்ரபத்தியைச் செய்து முக்தி பெறுகின்றனர். சில சேதநர்கள் அந்தத் தகுதியைப் பெருமையாலோ வேறு காரணத்தாலோ தாங்களே ப்ரபத்தியைச் செய்யாமல் அந்தப் பொறுப்பைத் தம் ஆசார்யர்களிடம் விட்டு விடுகின்றனர். அவர்கள் இவர்களைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்து ப்ரபத்தியைச் செய்கின்றனர். நீ இவர்களைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு விடுகின்றாய். இவர்களிடம் உனக்கு அன்பு சுரக்கின்றது. இவர்கள் இவ்வுலகில் இருக்கும்வரை உனக்குக் கைங்கர்யம் செய்வதிலேயே உள்ளத்தை ஈடுபடுத்துகின்றனர். எப்பொழுதும் உன் திருக்கல்யான குணங்களை அநுபவித்து இன்பம் கண்டு அதனால் பெருமிதம் கொள்கின்றனர். ஆசார்யர்களே இவர்களின் பொறுப்பை ஏற்று உன்னிடம் ஸமர்பித்து விட்டபடியால் முக்கியமான உபாயமாய் விளங்கும் உன்னைக் கூட இவர்கள் உபாயமென்று நினைக்கவேண்டிய அவசியமில்லாது போகின்றது. முக்தி பெற்றவர்கள் பலனைப் பெற்றபின் உன்னை உபாயமென்று கருதமாட்டார்களல்லரோ? அவ்வாறே இவர்களும் ஆகிவிடுகின்றனர். மேலும் இவர்கள் தங்களை உனக்கு அடியராக அநுஸந்தித்தலிலேயே இயற்கையின்பம் காண்கின்றனர். இத்தகைய மஹான்களான பாகவதர்கள் அடியேனுக்கு உள்ளத்தில் ருசிக்க வேண்டும்.

[1] 'अन्धोऽनन्धग्रहणवशग:'

என்கிற ந்யாஸ திலகத்தின் ச்லோகங்களையும் இங்கே அநுஸந்திப்பது.

**வாக்யம் – 10**

(10)

இதற்குக் கோரின ஃபலத்தைப் பற்ற புन:प्रपत्ति முதலான कर्तव्यशेषம் இல்லை என்றது–

[2] 'सकृदेव प्रपन्नाय कृत्यं नैवास्ति किञ्चन ।

इत्यादिகளிற்படியே செய்த வேள்வியனை[a] இவனுக்கு स्व-अभिमत–फल[b] விசேஷத்தைப் பற்ற ஸாங்கமாகப் பண்ணின

---

a - ப்ரபத்தி யென்னும் பெரிய யாகத்தைச் செய்த; b - தான் விரும்பிய குறிப்பிட்ட பயனை;

1 अन्धोऽनन्धग्रहणवशगो याति रङ्गेश यद्वत्
पङ्गुर्नौकाकुहरनिहितो नीयते नाविकेन ।
भुङ्क्ते भोगानविदितनृप: सेवकस्यार्भकादि:
त्वत्संप्राप्तौ प्रभवति तथा देशिको मे दयालु: ॥

ந்யாஸ திலகம் – 1 : திருவரங்கப்பெருமானே! உலகில் வழியைக் காணவியலாத குருடன் கண்ணையுடைய ஒருவன் கையைப் பிடித்துக் கொண்டு நடந்து செல்கின்றான். நடக்க இயலாத முடவன் ஆற்றைக் கடந்து செல்ல ஓடக்காரனது உதவியை நாட, அவனைப் படகில் ஓடக்காரன் ஏற்றி அழைத்துச் செல்கின்றான். அரசனது மாளிகையில் பணியாளனான ஒருவனுடைய குழந்தை மனைவி முதலியவர் அரசனை நேரில் கண்டதில்லை; அவர்களுக்குத் தங்களைக் காத்துக் கொள்ளச் சக்தியுமில்லை. ஆயினும் பணியாளனுக்கு அரசன் கொடுக்கும் போகங்களை அவனால் தாங்களும் பெறுகின்றனர். அவ்வாறே ப்ரபத்தியைப் பற்றிய விசேஷ அறிவு பெறுதலனும் வேறு உபாயத்தைச் செய்யச் சக்தியற்றவனுமான அடியேனை உன் திருவடியில் சேர்த்து மோக்ஷம் பெறச் செய்யக் கருணை நிறைந்த ஆசார்யன் வல்லமை யுடையவராயுள்ளார். அவர் அடியேனுக்காகச் செய்யும் ப்ரபத்தியால் உன் திருவடிகளைப் பெற்றுப் பரிபூர்ணமாய் அநுபவிப்பேன்.

ஒரு முறை ப்ரபத்தி செய்தவன் பின்னும் அதே பலனுக்காகச் செய்யவேண்டியது எதுவும் இல்லை.

ப்பத்திக்கு ஸ்வரூப-ஆவ்ருத்தி-ரூபமாகவாதல்[a], அங்கமாக ஆதல்- ஒரு கர்த்தவ்ய சேஷம்[b] இல்லாமையாலே स्व-अधिकार अनुगुण[c]மாக स्वामि–संतोष–अतिशय[d] ஹேதுவாய்க் கொண்டு ஸ்வயம் ப்ரயோஜநமான கைங்கர்ய–விசேஷங்களுக்கும் भक्ति-तत्त्वज्ञानादिகளைப் பற்றவாதல்– भगवत्-भागवत-समृद्ध्यादिகளைப் பற்றவாதல்– विलम्ब–अक्षम[e]தையாலேயாதல்–

[1] 'अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् ।

प्रायश्चित्तिरियं साऽत्र यत्पुनः शरणं व्रजेत् ॥

என்கிற நைமித்திக–வேஷத்தாலேயாதல்[f] पुनः ப்ரபத்தி பண்ணுமதுக்கும் பூர்வ– ப்பத்தியினுடைய நைரபேக்ஷ்ய[g]த்தோடு विरोधமில்லை– என்கிறபடி.

## வாக்யம் - 11

*(11)*

இப்படி कृतकृत्यனை ப்ரபந்நனுக்கு वर्ण–आश्रमादि–धर्मங்கள் स्वतन्त्र–आज्ञा–सिद्धங்களான कैङ्कर्यविशेषங்கள் என்றது– மற்றொரு फलவிசேஷத்தைக் பற்றவன்றிக்கே अकरण[h]த்தில் आज्ञा–अतिलघन–दोष[i]ம் வரும்படிகளாய், 'செய்யேல் தீவினை என்று

a - முன் செய்த ப்ரபத்தியையே மறுபடி செய்தல்; b - இனிச் செய்யவேண்டிய மீதி; c - தன் தகுதிக்கு ஏற்ப; d - எம்பெருமானுடைய பெருமகிழ்ச்சிக்காக; e - காலத் தாழ்வைப் பொறுக்காததாலாதல்; f - பாபம் என்கிற நிமித்தத்துக்காகச் செய்தல்; g - வேறொன்றையும் எதிர்பாராமை; h - செய்யாது விட்டால்; i - எம்பெருமானது சட்டளையை மீறிய குற்றம்

1 லக்ஷ்மீத (17-91)÷ பாபம் செய்ய நேர்ந்தால் உடனே பிராயச்சித்தம் செய்ய வேண்டும். மறுபடி அதற்காக ப்ரபத்தி செய்வது தான் பிராயச்சித்தமாகும்.

அருள் செய்யும்[1] என்று स्वतन्त्र–भगवदाज्ञारूप–शास्त्र–विहित[a]ங்களான वर्ण–आश्रमादि–धर्मங்கள் तत्त्व–हित– निष्कर्ष[b]முடையனாய்

[2] 'देवर्षिभूतात्मनृणां पितृणां न किङ्करो नायमृणी च राजन् ।
सर्वात्मना यः शरणं शरण्यं नारायणं लोकगुरुं प्रपन्नः ॥

इत्यादिகளிற்படியே अन्य–यजनादि–दोष–रहित[c]னான இவனுக்கு शक्तिवञ्चन[d]ம் பண்ணாதே அவர்ஜநீயமான[e] ஸ்வாமி உகந்த கைங்கர்யம்– என்றபடி.

भगवत्–कैङ्कर्य–रति[f]யான ப்ரபந்நனைப் பற்றவே

[3] 'उपायापायसंत्यागी मध्यमां वृत्तिमास्थितः ।
मामेव शरणं प्राप्य मामेवान्ते समश्नुते ॥ என்றும்

---

a - ஸ்வதந்த்ரனான எம்பெருமானுடைய கட்டளையாகிய சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட; b - தத்துவத்திலும் உபாயத்திலும் நிச்சயமான அறிவுடையனாய்; c - வேறு தெய்வம் தொழல் முதலிய குற்றமற்றவன்; d - உள்ள சக்தியை இல்லையென்றாக்கி வஞ்சித்தல்; e - கைவிடமுடியாத; f - ஆசையுடையவனான;

1 செய்யேல்தீவினையென்றருள்செய்யும், என்
கையார்சக்கரக் கண்ணபிரானே
ஐயார்கண்டமடைக்கிலும் நின்கழல்
எய்யாதேத்த அருள்செய்யெனக்கே.
திருவாய் (2–9–3) ÷ திருவாழி தரித்த உன் திருக்கையழகைக் காட்டி என்னைத் தகாதவற்றில் ஈடுபடாதிருக்கச் செய்த எம்பெருமானே!

2 பாகவதம் (11–5–41)÷ அடைக்கலம் அருள்பவனாய் லோக குருவான நாராயணனை எல்லா வகையாலும் சரணமாகப் பற்றியவன் தேவர்கள்- முனிவர்- மனிதர்- பித்ருக்கள் இவர்களுக்கு அடியனாக மாட்டான். முன்போல் இவர்களுக்குக் கடன்பட்டவனாகவும் ஆகமாட்டான்.

3 லக்ஷ்மீத (17–81)÷ தனக்குச் செய்யமுடியாத கர்மயோக ஜ்ஞாநயோக பக்தி யோகங்களை விட்டு, சாஸ்த்ரம் விலக்கிய பாபகர்மத்தையும் விட்டொழித்து நடுநிலையாகிய ப்ரபத்தியை என்பால் செய்பவன் கடைசியில் என்னையே அடைந்து சாச்வதமாய் அநுபவிப்பான்.

[1] 'अविप्लवाय धर्माणां पालनाय कुलस्य च ।
संग्रहाय च लोकानां मर्यादास्थापनाय च ॥
प्रियाय मम विष्णोश्च देवदेवस्य शार्ङ्गिण: ।
मनीषी वैदिकाचारं मनसाऽपि न लङ्घयेत् ॥

என்றும் சொல்கிற प्रमाण–वर्ग[a]த்தையும் श्रीभाष्यकारादिகள் அருளிச் செய்த नित्यங்களையும் இங்கே अनुसंधिப்பது.

**வாக்யம் – 12**

(12)

இவனுக்கு आज्ञा–अनुज्ञा–सिद्धங்களான கைங்கர்யங்களெல்லாம் ஸ்வயம்ப்ரயோஜநங்கள் என்றது– आहार–शुद्धि[b], आचार[c]நியமம், अपराध–परिहार[d]ம் முதலான முன்பு சொன்ன आज्ञा–सिद्ध[e]ங்களான वर्णाश्रमादि–धर्मங்களும், 'பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு நின் கோயில் சீய்த்து'[2] इत्यादिகளிற்படியே இச்சையுள்ளபோது

**a** - ப்ரமாணங்களின் குழுவையும்; **b** - தூய்மையான ஆஹாரத்தையே கொள்ளுதல்; **c** - ஆசாரங்களின் வரையறை; **d** - பாபச் செயல்களை விலக்கல்; **e** - எம்பெருமான் கட்டளையால் வந்த;

1 லக்ஷ்மீத (17–93, 94)÷ தர்மங்கள் கெடாதிருப்பதற்கும் குலத்தைக் காப்பதற்கும் உலகத்தை நல்வழியில் நிறுத்துவதற்கும் சாஸ்த்ர வரையறை நிலைப்பதற்கும் என்னுடையவும் எம்பெருமானுடையவும் மகிழ்ச்சிக் காகவும் அறிஞனை ப்ரபந்நன் வேதம் விதித்த ஆசாரத்தை மீற மனத்தாலும் நினைக்கக் கூடாது. (பிராட்டியின் சொல்).

2 பண்டைநாளாலேநின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்
கொண்டு நின்கோயில் சீய்த்துப்பல்படிகால் குடிகுடி வழிவந்
தாட்செய்யும்தொண்டரோர்க்கருளிச்சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால்நோக்காய் தெண்டிரைப் பொருநல்
தண்பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே.

திருவாய் (9–2–1) ÷ முதலில் பிராட்டியின் திருவருளைப் பெற்று, பின் உன் திருவருளையும் பெற்று உன் திருக் கோயிலை மெழுகுதல் முதலிய கைங்கர்யங்களைச் செய்து கொண்டு குடும்பத்தோடு அடிமைப் பட்டுள்ள எங்களை உன்சோதிவாய் திறந்து உன் திருக்கண்களால் நோக்கியருள வேண்டும் திருப்புளிக்குடியெம்மானே'

செய்யவுமாம், அது இல்லாதபோது தவிரவுமாம்படி ஏற்றமாக நிற்கிற अन्तरा-अन्तरा[a]-गुणानुसंधान[b]-स्तुति[c]-संकीर्तन[d]-संमार्जन[e]-उपलेपन[f]- मालाकरण[g]- दीप-आरोपणादि[h]- கைங்கர்யங்களெல்லாம் सर्वविधबन्धुவான ஸர்வ ஸ்வாமியினுடைய संप्रीतिहेतु[i]வாகை யாலே अनुरक्त-भार्यादि[j]களுடைய पति-शुश्रूषणादि[k]கள் போலவும், मुक्तருடைய व्यापारங்கள் போலவும் प्रहर्षयिष्यामि[l] என்னும் ப்ரயோஜநம் ஒழிய மற்றொரு ப்ரயோஜந- விசேஷத்தைக் கணிசிக்க வேண்டாதபடி.

[1]'दुर्गतावपि जातायां'

[2]'कामते वैष्णवत्वं तु '

---

a - அவகாசம் கிடைக்கும் போது நடுநடுவில் ; b - எம்பெருமானின் குணங்களை அநுஸந்தித்தல்; c - அவனைத் துதித்தல்; d - அவன் திருநாமங்களைக் கூறுதல்; e - திருவலகிஞல் பெருக்குதல்; f - மெழுகுதல்; g - திருமாலை கட்டுதல்; h - தீபம் ஸமர்ப்பித்தல்; i - திருவுள்ளம் உகக்கக் காரணம்; j - உள்ளன்புடைய மனைவி முதலியோர்; k - கணவனுக்குப் பணிவிடைகள்; l - அவன் திருவுள்ளம் உகக்கச் செய்தல்;

1 दुर्गतावपि जातायां त्वद्गतो मे मनोरथः ।
यदि नाशं न विन्देत तावताऽस्मि कृती सदा ॥

ஜிதந்தே (1-12) ÷ எம்பெருமானே! உன்னிடம் ஈடுபட்டுள்ள என் உள்ளம் எத்தகைய கஷ்ட நிலை வந்திடினும் மாறுதிருக்குமேயாகில் அதனாலேயே நான் தன்யனாகி விடுவேன்.

2 न कामकलुषं चित्तं मम ते पादयोः स्थितम् ।
कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम् ॥

ஜிதந்தே (1-13) ÷ உன் திருவடிகளில் ஈடுபட்டுள் என் மனம் இனி மற்றொரு விஷயத்தில் புகுந்து கலங்காது. எத்தனை பிறவி எடுத்தாலும் உனக்கு அடிமை செய்யப் பாங்கான வைணவப் பிறவியையே விரும்புகின்றேன்.

[1] 'सर्वेषु देशकालेषु '

इत्यादिகளிற்படியே இவை தம்மையே उद्देशित्து प्रவர்த்திக்கும் படி ஸ்வரூபேண स्वादुக்களாயிருக்கும்[a] – என்றபடி.

## வாக்யம் – 13

(13)

करण–अकरणरूपங்களான अपचारங்கள் புகுந்தாலும் प्रपन्नனுக்கு नरकादिகளில்லை என்றது– அங்கமாகவாதல்– ஸ்வதந்த்ரமாக வாதல்– भगवत्– ப்ரபத்தியைக் கைம்முதலாகப் பற்றின பரமைகாந்திகளுக்கு प्रबल–प्रारब्ध–दुष्कृत–विशेष[b]த்தாலே बुद्धिपूर्वक[c] மாக अकृत्यकरण–कृत्याकरण–रूप[d]மான आज्ञा–अतिलङ्घन[e]ம் பிறந்த தாகில்

[2] 'दृष्टो धर्मव्यतिक्रमः साहसं च महताम्'

[3] 'तेषां तेजोविशेषेण प्रत्यवायो न विद्यते'

---

**a** - இனியனவாய்; **b** - பலன் கொடுக்கத் தொடங்கிய பாபம் மிக்க வலிமையுடையதாயிருப்பதால்; **c** - தாம் தெரிந்து கொண்டே; **d** - தகாததைச் செய்தல் – செய்யவேண்டியதைச் செய்யாமை; **e** - எம்பெருமான் கட்டளையை மீறுதல்

1 सर्वेषु देशकालेषु सर्वावस्थासु चाच्युत ।
किंकरोऽस्मि हृषीकेश भूयो भूयोऽस्मि किंकरः ॥

ஜிதந்தே (1–15) ÷ அடியார்களைக் கைவிடாத எம்பெருமானே! எந்த இடத்திலும், எந்த காலத்திலும், எந்த நிலைமைகளிலும் உனக்குத் தொண்டு புரிபவனாயுள்ளேன். மறுபடியும் மறுபடியும் உனக்கு அடிமை செய்யவே பாரிப்பேன்.

2 கௌதம தர்ம ஸூ 1–1–3 ÷ சில பெரியோர்களும் தர்மத்தை மீறித் துணிவான செயலைச் செய்துள்ளனர். ஆனால் அதுவும் தர்மத்தை மீறிய குற்றமாகவே கொள்ளப்பட்டுள்ளது.

3 பெரியோர்கள் ஏதாவது காரணத்தை முன்னிட்டுத் தருமத்தை மீறி நடந்தால் அவர்களுக்கு அத்தோஷத்தை போக்க வழியும் தெரியும்.

என்றும் விஷயமன்றிக்கே நம்மளவில்

[1] 'तदन्वीक्ष्य प्रयुञ्जान: सीदत्यवरो नर:'

என்னும்படி நிற்கையாலும், धर्म–अतिक्रम[a]ம் பண்ணின மஹாத்மாக்களுக்கும் सुकृत–विनाशादि–प्रत्यवाय[b]ம் சொல்லுகையாலும் அவ் अकृत्यकरणादि[c]கள் प्रत्यवायहेतु[d]க்களாய் நின்றால்

[2] 'स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं वदति यम: किल तस्य कर्णमूले ।
परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम् ॥

[3] 'देवं शार्ङ्गधरं विष्णुं ये प्रपन्ना: परायणम् ।
न तेषां यमसालोक्यं न च ते नरकौकस: ॥

[4] 'ये नृशंसा दुरात्मान: पापाचाररतास्तथा ।
तेऽपि यान्ति परं धाम नरा नारायणाश्रया: ॥

इत्यादिகளிற்படியே नरकादि–महाक्लेश[e]ம் வாராதே यथासंभव[f]ம் अनुताप–शिक्षा–उपक्लेश[g]ங்களாலே अपराध–निस्तार[h]ம் உண்டாம்– என்றபடி.

---

a - தர்மத்தை மீறி நடத்தல்; b - புண்ணியம் அழிதல் முதலிய பாபத்தின் பயன்; c - அந்தப் பாபச் செயல்கள் ; d - பாபத்தின் பலனை விளைவிப்பவனவாய்; e - பெரிய கஷ்டம்; f - தகுதிக்கு ஏற்றவாறு; g - பச்சாத்தாபம் கொள்வது– தண்டனையாகிய கஷ்டங்களை அடைவது இவற்றால்; h - பாபத்திற்கு க் கழிவு;

1 அவர்களின் செயலைப் பார்த்துத் தாழ்ந்த மனிதன் தானும் அச் செயலைச் செய்தால் கஷ்டமடைவான்.

2 விஷ்ணு புரா (3–7–14)÷ யமன், கையில் பாசத்துடன் நிற்கும் தன் பணியாளனைப் பார்த்து அவன் செவியில் ரஹஸ்யமாய் 'நான் சாதாரண மக்களுக்குத் தான் தலைவனாவேன். விஷ்ணு பக்தர்களிடம் என் அதிகாரம் செல்லாது. ஆதலின் எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்தவனை அணுகாது விலகிவிடு' என்று கூறினான்.

3 வாமந பு(94–43)÷ சார்ங்கமென்னும் வில்லாண்ட எம்பெருமானையே உயர்ந்த பயனெனக் கருதி ப்ரபத்தி செய்பவர்கள் யமலோகத்துக்குச் செல்லமாட்டார்கள். நரகத்தில் இருக்கவும் மாட்டார்கள்.

4 இதிஹா– ஸமு– (31–119)÷ இரக்கமற்று, தீய மனத்துடன் எப்பொழுதும் கெட்ட ஆசாரங்களில் ஈடுபட்டவர்களும் நாராயணனைச்

[1] 'किङ्करा दण्डपाशौ वा न यमो न च यातना: ।
समर्थास्तस्य यस्यात्मा केशवालम्बन: सदा ॥

[2] 'நமன் கூறுசெய்துகொண்டிறந்த குற்றம் எண்ண
வல்லனே'

[3] 'நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்றும்
இல்லை '

इत्यादिகளையும் இங்கே अनुसंधिப்பது.

சரணமடைந்து விட்டால் தூயராகிப் பரமபதத்தை அடைவர்.

1 கேசவனிடம் மனத்தை ஈடுபடுத்தியவரை யமனோ, யம படர்களோ, யமனுடைய தண்டமோ, பாசமோ, நரக யாதனைகளோ ஒன்றும் செய்ய முடியாது.

2 *மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்ப, அன்றிலங்கை*
*நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்ட வீரனார்*
*வேறுசெய்துதம்முளென்னை வைத்திடாமையால், நமன்*
*கூறுசெய்துகொண்டிறந்த குற்றமெண்ணவல்லனே.*

திருச்சந்த (116) ÷ எம்பெருமான் அடியனான என்னைத் தன்னிலும் வேறுபடுத்தாமல் தனக்கு மிகவும் அந்தரங்கனாக்கிக் கொண்டு விட்டபடியால் இனி யமன் என்னை எம்பெருமானை விட்டுப் பிரித்து வைத்துக் கொண்டு கழிந்த என் பாபங்களை எல்லாம் நினைத்துக் கொண்டிருக்க முடியுமா?

3 *பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம்,*
*நலியும்நரகமும்நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை,*
*கலியும்கெடும்கண்டுகொள்மின்கடல்வண்ணன்பூதங்கள் மண்மேல்,*
*மலியப்புகுந்திசைபாடியாடியுழிதரக்கண்டோம்.*

திருவாய் (5–2–1)

திருவாய் (5–2–1)÷ உலக முழுவதும் ஒரே வைஷ்ணவமயம், வைஷ்ணவர்கள் கூட்டம் கூட்டமாக எம்பெருமான் குணங்களைப் பாடுகின்றனர். சேதநர்களின் பாபமெல்லாம் தொலைந்தன. நரகமும் அழிந்துபோயிற்று. யமனுக்கு இவ்வுலகில் ஒரு செயலும் இல்லை.

## வாக்யம் – 14

(14)

ராஜகுமாரனுக்கும் அவधாநம் பண்ணி நடக்க வேண்டு மாப்போலே लघु–प्रत्यवायமும் வாராமைக்காக अपचारங்கள் दूरपरिहरणीयங்கள் என்றது–

[1] 'पिताऽपि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।

इत्यादिகளிற் சொல்லப்பட்ட स्वभावங்களையுடைய भगवान् पुत्रादिகளைப் போலே पक्षपातिயாய் ரக்ஷிக்கும்படி நிற்கிற भागवतனுக்கு யமவிஷய गमनம்[a] இல்லை என்றும். अपचारங் கள் புகுந்தால் அவற்றுக்கு இங்கே சில उपक्लेश[b]ங்களளவே फलமாய் விடும் என்றும் சொல்லுகிற शास्त्रங்களின் படியே बुद्धिपूर्व– अपराध[c]ம் பிறந்தால் अनुताप[d]ம் பிறந்து पुन:प्रपत्ति பண்ணுதபோது शिक्षारूप–प्रत्यवाय विशेष[e]ங்கள் வரும்படியாய் இருக்கையாலே இப்படி ஈச்வர– निग्रह[f]ங்களுக்கு இலக்கா காமைக்காக

---

a - யமனுடைய லோகத்திற்குச் செல்லுதல்; b - கஷ்டங்கள்; c - தெரிந்து செய்யும் பாபம்; d - பச்சாதாபம்; e - பாபத்துக்குப் பலனைத் தண்டனைகள்; f - சீற்றங்களுக்கு;

1 पिताऽसि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिक: कुतोऽन्योलोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥

கீதை (11–43)÷ ஒப்பற்ற பெருமையுடையனே! நீ தாவர ஜங்கமமான இவ்வுலகம் முழுதுக்கும் தந்தையாயுள்ளாய். இவ்வுலகங்களுக்குப் பூஜிக்கத் தகுந்த குருவாகவும் உள்ளாய். ஆதலின் இவ்வுலகுக்கு நீ மிகப் பூஜிக்கத் தகுந்தவனுகின்றுய். கருணை முதலிய எந்தக் குணத்தையிட் டுப் பார்தாலும் உனக்குச் சமமான வேறொருவன் மூவுலகிலும் இல்லை. நீயேதான் உனக்குச் சமன். இப்படியிருக்க உன்னிலும் மேம்பட்டவன் இலன் என்பதைக் கூறவும் வேண்டுமோ?

[1] 'चत्वारि यस्य द्वाराणि सुगुप्तानि मनीषिण: ।
उपस्थमुदरं पाणि: वाक् चतुर्थी स वै पुमान् ॥
इत्यादिகளிற் சொன்ன अवधान[a]– விசேஷம் உடையனாய் अनागत[b]– அவேக்ஷணம் பண்ணின இவன்.

[2] 'நயவேன் பிறர் பொருளை நள்ளேன் கீழாரோடு'

[3] 'செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்'

---

a - மிக்க கவனம்; b - வரப் போவதில் கவனம் செலுத்துகிற;

1 உலகில் பாபம் நேருவதற்கு வழியாயுள்ளன நான்கே – அவை இன்ப இந்த்ரியம் – வயிறு – கை – நாக்கு இவையே. இவற்றை அடக்கவல்ல புத்திமானே உயர்ந்த மனிதனாவான்.

2 *நயவேன்பிறர்பொருளைநள்ளேன் கீழாரோடு*
*உயவே னுயர்ந்தவரோ டல்லால்– வியவேன்*
*திருமாலை யல்லது தெய்வமென் றேத்தேன்*
*வருமாறென் நம்மேல் வினை.*
முதல் திருவ (64) ÷ எம்பெருமானுக்கு உடமையான ஆத்மாவை என்னுடையதாகக் கருதமாட்டேன். அடியார்களையன்றி மற்றவரோடு நட்புக் கொள்ள மாட்டேன். அவர்களோடு பழகவும் மாட்டேன். இதனால் செருக்குக் கொள்ளவும் மாடடேன். திருமாலையன்றி வேறொருவனைத் தெய்வமாகப் போற்ற மாட்டேன். என்னிடம் பாபம் வருவதற்கு வழி ஏது?

3 *வையத்துவாழ்வீர்காள் நாமும் நம்பாவைக்குச்,*
*செய்யும்கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்,*
*பையத்துயின்ற பரமனடிபாடி,*
*நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி,*
*மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம்,*
*செய்யாதனசெய்யோம் தீக்குறளைச்சென்றோதோம்,*
*ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி,*
*உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய்.*
திருப்பாவை (2) ÷ பெரியோர்கள் விலக்கிய தகாத செயல்களைச் செய்யமாடடோம், தீங்கு தரும் கோட்சொற்களைச் சொல்லமாட்டோம்.

इत्यादिகளின்படி ஏற்கவே[a] अपराधங்கள் புகாதபடி वर्तिக்க- प्राप्तம்- என்றபடி.

[1] 'विहिते प्रतिषिद्धे च यथामति यथाबलम् ।
त्वय्याहितभरः श्रीमान् वर्ते राजकुमारवत् ॥

என்கிற वचनத்துக்கு अवश्य-कर्तव्य[b]ங்களில் ப்ரவ்ருத்திரூபமாகவும்[c], பரிஹரணீயங்களில்[d] நிவ்ருத்திரூபமாகவும்[e] பண்ணவேண்டும் वृत्ति[f]யில் எனக்கு உள்ள ज्ञान-बलங்களுக்கு अनुरूपமாக उपायत्व-बुद्धिயையும் अतिलङ्घन[g]த்தில் परमफल-प्रतिबन्धकत्व-बुद्धि[h]யையும் விட்டு प्रवर्तिயாநின்றேன் என்கையிலே तात्पर्यம்.

**வாக்யம் - 15**

(15)

प्रपत्तिக்குக் கோரின फलத்துக்கு ஒன்றாலும் प्रतिबन्धம் இல்லை என்றது-

[2] 'मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन ।
दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ॥

---

**a** - இந்த முறையைக் கைக்கொள்ளுதற்காகவே; **b** - செய்தே தீரவேண்டிய செயல்களில்; **c** - செயலாற்றும் வாயிலாகவும்; **d** - விலக்க வேண்டிய செயல்களில்; **e** - செயல்படாதிருத்தல் வாயிலாகவும்; **f** - கடமையில்; **g** - மீறி நடப்பதில்; **h** - மோக்ஷத்திற்குத் தடையாகும் என்ற எண்ணத்தையும்

1 எம்பெருமானே! உன்னிடம் பரந்யாஸம் செய்த பிறகு சாஸ்த்ரம் விதித்த செயலிலும், விலக்கிய செயலிலும் என் அறிவுக்கும் சக்திக்கும் தக்கவாறு சாஸ்த்ர முறைப்படி நடந்துகொண்டு ராஜகுமாரனைப் போல் கவலையற்றிருக்கிறேன்.

2 ராமா யுத்த (18-3)÷ (இராமன் கூறுவது) தோழன் என்று பாவனை செய்பவனாயினும் சரணமடைந்தவன் என்ற சொல்லை என் செவியில் போட்டு என்னை நம்பி வந்த விபீஷணனை எனக்கு எத்தகைய தீங்கு வருவதாயினும் கைவிடமாட்டேன். இவனிடம் எத்தகைய குற்றம் இருந்தாலும் இருக்கட்டும். இவனைக் கைகொள்ளுதல் மிகப் பெரியோர்களால் போற்றப்படும் செயலாகவே ஆகும்.

[1] 'कौन्तेय प्रतिजानीहि न मे भक्त: प्रणश्यति ।

[2] 'सर्व धर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुच: ॥

[3] 'मामेकमेव शरणम् आत्मानं सर्वदेहिनाम् ।
याहि सर्वात्मभावेन यास्यसि ह्यकुतोभयम् ॥

என்றபடியே शरण्य–अभिप्राय–विशेषத்தாலும்,

1 क्षिप्रं भवति धर्मात्मा शश्वत् शान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्त: प्रणश्यति ॥

கீதை (9–31) ÷ அர்ஜுந! என்னைப பற்றிய பக்தி யோகத்தைத் தொடங்கியவன் தீய ஆசாரத்தின் தொடர்புடையவனுயினும் அழிந்து போகமாட்டானென்றும் அந்த பக்தியின் பெருமையால் தடையாயுள்ள அனைத்தும் அழிந்து பின்பு எந்நாளும் தடை வராதபடி விரைவில் பரிபூர்ண பக்தி நிறைவேறியவனுவான் என்றும் உள்ள இவ்விஷயத்தில் எனக்காக நீயே பிரதிக்கினை செய். நான் உறுதி கூறுவதினும் என்னிடம் கேட்டு உணர்ந்த நீ பிரதிக்கினை செய்வது இன்னும் மிக்க வலிமையுடையதாகும்.

2 கீதை (18–66)÷ சேதநனே! அற்பமான ஞானமும் சக்தியும் அற்பகால வாழ்வும் மோக்ஷம் பெறுவதில் ஆர்வமும் உள்ள நீ நாமதித்துப் பலன் தரும் பக்தியோகம் முதலிய மற்ற உபாயங்களைக் கைவிட்டு ஸுலபனும் ரக்ஷகனுமக் கல்யாண குணங்களையுடையனை என்னையே ப்ரபத்தி செய். உன் கடமை தீர்ந்து விடும் பின் பொறுப்பு என்னுடையது. எனக்கு உன்பால் அன்பும் கருணையும் மிகச் சுரந்து விடும். என் சுதந்திரம் தடையற்றது. எனக்கு ஸங்கல்பமே துணை. உனக்கு உள்ள அளவற்ற விரோதி வர்க்கத்தையெல்லாம் வேரறுத்து மோக்ஷத்தை தந்து எனக்குச் சமமான போகத்தையும் பரிபூர்ண கைங்கர்த்தையும் உனக்குச் சாச்வதமாய்க் கொடுப்பேன். இனி நீ ஒன்றுக்கும் சோகிக்க வேண்டாம்.

3 பாகவதம் (11–12–15)÷ எல்லா உயிர்களுக்கும் அந்தர்யாமியான என்னை ஒருவனையே எல்லாவகையாலும் சரணமாகப் பற்று. அங்ஙனம் செய்தால் எவரிடமும் பயமற்ற இருப்பைத் தரும் மோக்ஷத்தை அடைவாய். (உத்தவருக்குக் கண்ணன் உபதேசம்).

[1] 'तेषां तु तपसां न्यासमतिरिक्तं तप: श्रुतम् ।'
என்கிற प्रपत्ति प्रभाव अतिशयத்தாலும்,
[2] 'नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥'
என்கிற निवृत्ति–धर्मान्तर–उपक्रम[a]த்தில் சொன்ன நிஷ்கர்ஷம்[b]
நிஷ்காமனுடைய[c] प्रपत्तियில் कैमुतिकन्यायसिद्ध[d]மாகையாலும்,
[3] 'याचनात् नश्यति ध्रुवम् ।' [227]

---

a - பற்றற்றுச் செய்யும் மற்ற தர்மங்களின் தொடக்க விஷயத்தில்; b - நிர்ணயம், தீர்வு; c - மோக்ஷத்தையன்றி மற்றவற்றில் ஆசையற்றவன்; d - 'இதனினும் தாழ்ந்த அதற்கே அந்தச் சக்தி இருக்கும் பொது இதற்கு அது இருப்பதைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?' என்று உலகில் வழங்கும் நீதியே கைமுதிக ந்யாயமென்பர் வடநூலார். அந்த நீதியால் தேறியது.

1 यानि नि:श्रेयसार्थानि चोदितानि तपांसि वै ।
तेषां तु तपसां न्यासमतिरिक्तं तप: श्रुतम् ॥
அஹிர். ஸம். (37–36) ÷ கீழ் அநுவாகத்தில் மோக்ஷத்துக்குச் சாதனமாகச் சொல்லப்பட்ட தவங்களுள் ப்ரபத்தியானது எல்லாவற்றிலும் உயர்ந்த தவமாகக் கூறப்பட்டது.

2 கீதை (2–40)÷ இக் கர்ம யோகத்தைத் தொடங்கி முடிக்காமல் நடுவில் விட்டு விட்டாலும் செய்த அளவுக்கு வீண்போகாது. நடுவில் நிறுத்திவிட்டதால் பாபமும் வராது. சிறிதளவே கர்மயோகத்தைச் செய்துவிட்டுக் காலம் தேசம் முதலிய சூழ்நிலே நேராக இல்லாமையாலோ, அறிவிழந்து தகாத செயல்களேச் செய்வது முதலியவற்ருலோ நடுவில் நிறுத்திவிட்டாலும் மறுபடியும் உரிய காலத்தில் தொடர்ந்து செய்ய வழிகொடுத்து ஸம்ஸார பயத்தினின்று இறுதியில் காப்பாற்றி விடும். மற்ற உலகியற் செயல்களோ வைதிக கர்மங்களோ நடுவில் நிறுத்திவிட்டால் பலனேத் தராதத்துடன் தீங்குகளேயும் விளேவிக்கும். இக் கர்ம யோகம் அத்தகையதன்று.

3 பாஞ்சரா ஸம் ÷ எம்பெருமான் திருவடிகளில் பக்தி - ஜ்ஞாநம் (பாகவத கடாக்ஷம்) இவற்றைத் தவிர வேறு பலனே அவனிடம் வேண்டக் கூடாது. வேண்டினல் நிச்சயமாய் அழிந்து போவான்.

[1] 'उपायापायसंयोगे निष्ठया हीयतेऽनया ।' என்றது

[2] 'एषा सा वैदिकी निष्ठा ह्युपायापायमध्यमा ।'

என்றகிபடியே उपाय-अपाय-त्याग-विशिष्ट-मध्यम-वृत्ति[a] யினுடைய विशेषण-वैकल्य-मात्रपर[b] மாகையாலும்,

[3] 'राक्षसानामविस्रम्भात् आञ्जनेयस्य बन्धने ।

यथा विगळिता सद्यस्त्वमोघा ह्यस्त्रबन्धना ॥

तथा पुंसामविस्रम्भात् प्रपत्तिः प्रच्युता भवेत् ।

तस्माद्विस्रम्भयुक्तानां मुक्तिं दास्यति साऽचिरात् ॥

---

a - காம்ய கர்மங்களையும் நிஷித்த கர்மங்களையும் விடுதலோடு கூடிய நடுநிலைமை; b - மேற்கூறிய இரண்டையும் விடுதல் என்ற அம்சம் குறைதலை மட்டும் கூறுவதில் நோக்குடையது

1 उपायापायसंयोगे निष्ठया हीयतेऽनया ।

अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् ।

प्रायश्चित्तिरियं साऽत्र यत् पुनः शरणं व्रजेत् ॥

லக்ஷ்மீ தந்த்ர(17–90,91)÷பிற பலனைத் தரும் காம்ய கர்மங்களையும் சாஸ்த்ரம் மறுத்த கர்மங்களையும் செய்பவனுக்கு நிஷ்டை ஒழிந்து விடும்.

2 क्रियमाणं न कस्मैचित् यदर्थाय प्रकल्पते ।

अक्रियावदनर्थाय कर्म तत्तु समाचरेत् ।

एषा सा वैदिकी निष्ठा ह्युपायापायमध्यमा ॥

லக்ஷ்மீ தந்த்ர(17–88)

லக்ஷ்மீ தந்த்ர(17–88) ÷ செய்யமுடியாத பக்தி யோகாதிகளையும் (காம்ய கர்மங்களையும்) பாபச் செயல்களையும் கைவிட்டு ப்ரபத்தியாகிய நடுநிலைமையில் இருப்பதுவே வேதாந்தம் கூறிய நிஷ்டையாகும்.

3 ஸநத்குமார ஸம் ÷ அனுமான் ப்ரஹ்மாஸ்த்ரத்தால் கட்டுப்பட்டிருந்த போது அரக்கர்களுக்கு அதில் நம்பிக்கை குறைவால் (வேறு கயிற்றையும் கட்டியவுடன்) வீணாகாத அந்த ப்ரஹ்மாஸ்த்ரமும் நழுவி விட்டதன்றோ! அவ்வாறே மனிதர்களுக்கும் ப்ரபத்தியில் நம்பிக்கை குறைந்தால் அது பயனற்றதாகிவிடுகின்றது. ஆதலின் ப்ரபத்தியில் நம்பிக்கையுடையருக்கே விரைவில் மோக்ஷத்தைத் தரும்.

என்றது प्रपत्ति–अनुष्ठान – காலத்தில் विश्वासरूप–अङ्ग–वैकल्य–परिहारपर[a] மாகையாலும்,

[1] 'यज्ञोऽनृतेन क्षरति तपः क्षरति विस्मयात् ।
आयुर्विप्रावमानेन दानं क्षरति कीर्तनात् ॥

इत्यादिகளிற்போலே மற்றும் ப்ரபத்திக்கு விசேஷித்து प्रतिबन्धकादिகளைச் சொல்லுவதொரு விசேஷ வசநம் இல்லாமையாலும், लोक वेदங்களில் ஓரிடத்திலும் ஸமர்த்த–காருணிக– விஷய–[b] சரணாகதிக்குப் ஃபலஹாநி[c] காணாமை யாலும், अपवाद–भीत[d]ரான ஸ்ரீபரதாழ்வான்

[2] 'शेष्ये पुरस्तात् शालायाः'
[3] 'शिरसा याचतो यस्य वचनं न कृतं मया ।'

a - மஹா விச்வாஸம் என்னும் அங்கம் குறைவுபடாமலிருப்பதைச் கூறுவதில் நோக்கமுடையது; b - சக்தியும் கருணையும் உடையவனிடம் செய்யும் சரணாகதிக்கு; c - பயனில்லாமல் போதல்; d - உலகப்பழிக்கு அஞ்சிய

1 மநுஸ்ம் (4–237)÷ யாகம் பொய் பேசுவதாலும், தவம் கர்வம் கொள்வதாலும், ஆயுஸ் அந்தணர்களைப் பழிப்பதாலும், தானம் தானே விளம்பரப் படுத்துவதாலும் கெடுகின்றன.

2 अनाहारो निरालोकः धनहीनो यथाद्विजः ।
शेष्ये पुरस्ताच्छलयाः यावन्नप्रतियास्यति ॥
ராமா அயோ (111–14 )÷ சாப்பிடாதவனும், மூடிய முகத்தை உடையவனும், வட்டிக்குக் கொடுத்த பணத்தைத் திருப்பப் பெறுதவனுமான அந்தணன் போல் இந்த பர்ணசாலையின் வாயிலிலேயே இராமன் நகருக்குத் திரும்பும் வரை படுகாடு கிடப்பேன்.(பரதன் சொல்)

3 तं तु मे भ्रातरं द्रष्टुं भरतं त्वरते मनः ।
मां निवर्तयितुं योऽसौ चित्रकूटमुपागतः ॥
शिरसा याचतो यस्य वचनं न कृतं मया ।
ராமா யுத் (124–19)÷ என்னை நகரத்துக்குத் திருப்புவதற்காகப் பரதன் சித்திரகூடத்திற்கு வந்து தலையால் வணங்கி வேண்டியும் அவன் சொற்படி நான் செய்யவில்லை. அவனைக் காண்பதற்கு என் மனம் விரைகிறது. (இராமன் விபீஷணனிடம் கூறியது).

इत्यादिमात्रத்தைக் கொண்டு இப் ப்ரபத்தி பண்ணினு ரென்று சொல்லுமதுக்கு यथाऽभिप्राय[a]ம் यथाकालம் अभिमतसिद्धि[b]- யுண்டாகையாலும்,

[1] 'तावदार्थिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखम् ।
यावन्न याति शरणं त्वामशेषाघनाशनम् ॥

என்று பகவத்- ப்ரபந்நனுக்கு अभिमतफलம் அப்போதே सिद्धिக்கும்படி நிற்கையாலும் ஸர்வசக்தியாய்ப் பரம காருணிகனை ஸர்வேச்வரனைப் பற்றி ப்ரபத்தி பண்ணு கிறவன் யாதொரு காலத்திலே யாதொரு फलம் வர வேண்டும் என்று கோரினனே அந்தக் காலத்திலே அந்தப்फलம் அவனுக்கு வருகை नियत[c]ம்- நடுப்புகுந்த निषिद्ध- काम्यங்களும் அதுக்கு प्रतिबन्धकங்களன்றிக்கே अधिकार- अनुगुण[d]-प्रायश्चित्तादिகளாலே நடுவே தீர்ந்து விடும்- என்றபடி.

**வாக்யம் – 16**

(16)

बुद्धिपूर्व-अपचारங்கள் புகுந்தாலும் प्रायश्चित्त-विशेषம் अधिकारि- विशेष-नियतம் என்றது-

[2] 'शरीरं बलमायं च वय: कालं च कर्म च ।
समीक्ष्य धर्मवित् बुद्ध्या प्रायश्चित्तानि निर्दिशेत् ॥

---

a - ப்ரபத்தி செய்பவன் விருப்பப்படி; b - பலன் பெறுதல்; c - நிச்சயமானது; d - தன் தகுதிக்கு ஏற்ற

1 விஷ்ணு புரா (1-9-73 )÷ எம்பெருமானே! ஸகல பாபங்களையும் ஒழிக்கவல்ல உன்னைச் சரணமடையாத வரையில் தான் மனிதனுக்குத் தான் இழந்த செல்வத்தை மறுபடி பெறவேண்டுமென்ற கவலையும் புதிய செல்வத்தைப் பெற ஆசையும் சரீரத்தின் தொடர்பற்ற ஆத்மாவின் அநுபவமின்மையும் ஸம்ஸார துக்கமும் இருக்கும்.

2 தர்மங்களை அறிந்தவன் ஒருவனுடைய சரீர நிலை - பலம் - வருவாய் -வயது - சூழ்நிலை - செய்த செயல் எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்து அவற்றுக்கு ஏற்றபடி தன் அறிவைப் பயன்படுத்திப் பிராயச்சித்தத்தை விதிக்க வேண்டும்.

[1] 'अपि चेत् पातकं किञ्चित् योगी कुर्यात् प्रमादतः ।
योगमेव हि कुर्वीत नान्यं यत्नं समाचरेत् ॥

[2] 'उपपातकयुक्तोऽपि महापातकवानपि ।
यामिन्याः पादमेकं तु ब्रह्मध्यानं समाचरेत् ॥

[3] 'अथ पातकभीतस्त्वं सर्वभावेन भारत ।
विमुक्तान्यसमारम्भो नारायणपरो भव ॥

[4] 'मेरुमन्दरमात्रोऽपि राशिः पापस्य कर्मणः ।
केशवं वैद्यमासाद्य दुर्व्याधिरिव नश्यति ॥

[5] 'नाम्नस्ते यावती शक्तिः पापनिर्हरणे हरे ।
श्वपचोऽपि नरः कर्तुं क्षमस्तावन्न किल्बिषम् ॥

---

1 யோகம் செய்பவன் கவனக் குறைவால் ஏதாவது சிறு பாபத்தைச் செய்து விட்டால் அதற்குப் பிராயச்சித்தமாக யோகத்தையே செய்ய வேண்டுமேயன்றி வேறொன்றைச் செய்ய முயலக் கூடாது.

2 சிறு பாபத்தைச் செய்தாலும் பெரிய பாபத்தைச் செய்தாலும் இரவின் கால் பகுதி காலம் எம்பெருமானையே தியானம் செய்வது அதற்குப் பிராயச்சித்தமாகும்.

3 விஷ்ணு தர் (66–72)÷ தர்மபுத்திரனே! நீ பாபங்களுக்கு அஞ்சினால் வேறு செயல்களைச் செய்யாமல் உன் முழுக்கருத்தையும் நாராயணனிடமே செல்ல விட்டு அவனையே நினைந்திரு. இதுவே அவற்றுக்குப் பரிஹாரமாகும்.

4 ஒருவன் செய்த பாபச் செயல் மேருமலை - மந்தரமலை இவைபோல் குவிந்திருந்தாலும் எம்பெருமானைச் சரணமடைந்து விட்டால் அழிந்துவிடும். நல்ல வைத்தியனிடம் சிகிச்சை பெற்றால் கெட்ட வியாதிகள் அழிவது போல.

5 எம்பெருமானே! பாபங்களைப் போக்க உன் திருநாமத்திற்கு உள்ள சக்தியின் அளவுக்குப் பாபத்தை நாய் மாம்ஸம் தின்பவனால் கூடச் செய்யமுடியாது.

[1] 'अवशेनापि यन्नाम्नि कीर्तिते सर्वपातकैः ।
पुमान् विमुच्यते सद्यः सिंहत्रस्तैर्मृगैरिव ॥

[2] 'अयं हि कृतनिर्वेशो जन्मकोट्यंहसामपि ।
यद्व्याजहार विवशो नाम स्वस्त्ययनं हरेः ॥

[3] 'प्रायश्चित्तान्यशेषाणि तपः कर्मात्मकानि वै ।
यानि तेषामशेषाणां कृष्णानुस्मरणं परम् ॥

[4] 'कृते पापेऽनुतापो वै यस्य पुंसः प्रजायते ।
प्रायश्चित्तं तु तस्यैकं हरिसंस्मरणं परम् ॥

[5] 'अतिपापप्रसक्तोऽपि ध्यायन् निमिषमच्युतम् ।
भूयस्तपस्वी भवति पङ्क्तिपावनपावनः ॥

---

1 விஷ்ணு புரா (6–8–19 )÷ தற்செயலாக ஒரு மனிதன் எம்பெருமான் திருநாமத்தைக் கூறினாலும் சிங்கத்தைக் கண்டு மான்கள் அஞ்சி ஓடுவது போல் அவனை விட்டு எல்லாப் பாபங்களும் அகன்று விடுகின்றன.

2 ஒருவன் மங்களத்தைத் தரக்கூடிய எம்பெருமான் திருநாமத்தைத் தற்செயலாய்ச் சொல்லிவிட்டாலும் அதுவே அவன் கோடி ஜந்மங்களில் செய்த பாபங்களுக்கும் பிராயச்சித்தமாகும்.

3&4 விஷ்ணு புரா (2–6–39,40 )÷ பல்வேறு பாபங்களுக்குப் பிராச்சித்தமாகத் தவம் யாகம் தானம் முதலியன சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன. அவை அனைத்தையும் காட்டிலும் சிறந்த பிராயச்சித்தம் ஒன்று உண்டு. அது தன்னை அடியனாக நினைத்துக் கொண்டு கண்ணனைத் தியானம் செய்வதேயாகும். செய்த பாபத்துக்கு எவனுக்குப் பச்சாத்தாபம் வருகின்றதோ, அவனுக்கு எம்பெருமானைத் தியானம் செய்வதே சிறந்த பிராயச்சித்தமாகும்.

5 மிகுதியான பாபத்தைச் செய்பவனாயினும் ஒரு நிமிஷமாவது எம்பெருமானைத் தியானம் செய்தால் பின்னும் புண்ணியம் செய்பவனாகவும் பங்க்தியைத் தூய்மைப் படுத்துமவர்களையும் தூய்மைப் படுத்துமவனாகவும் ஆகின்றான்.

[1] 'नारायणं जपेन्नित्यं प्रणम्य पुरुषोत्तमम् ।
स्वपन् नारायणं देवं गच्छन् नारायणं तथा ॥
भुञ्जन् नारायणं विप्रः तिष्ठन् जाग्रत् सनातनम् ।
उन्मिषन् निमिषन् वाऽपि नमो नारायणेति वै ॥
भोज्यं पेयं लेह्यं च नमो नारायणेति यः ।
अभिमन्त्र्य स्पृशन् भुङ्क्ते स याति परमां गतिम् ॥
सर्वपापविनिर्मुक्तः प्राप्नोति परमां गतिम् ।

इत्यादिகளிற்படியே एकनिमित्त[a]ம் தனக்கே विद्वत्–अविद्वत्–वर्ण–आश्रम–वयः–अवस्थादि[b] வைஷம்யத்தாலே प्रायश्चित्तம் नानाप्रकारமாய்ப் போருகிறபடியே ப்ரபந்நனைப் பற்ற

[2] 'अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् ।
प्रायश्चित्तिरियं साऽत्र यत्पुनः शरणं व्रजेत् ॥

என்று இப்படிக்கு विशेषवचन[c]முண்டாகையாலும்,

---

a - ஒரு காரணத்துக்கே; b - ப்ரபந்நன் – ப்ரபத்தி செய்யாதவன் – ஜாதி – ஆச்ரமம் – வயது – சூழ்நிலை இவற்றின் வேறுபாட்டாலே; c - இவ்வம்சத்தைக் குறிக்கும் விசேஷ வாக்யம்

1 அந்தணன் எம்பெருமானை வணங்கி எப்பொழுதும் அவன் திருநாமத்தை ஜபிக்க வேண்டும். உறங்கும் போதும் நடக்கும் போதும் உண்ணும் பொதும் நிற்கும் பொதும் விழித்திருக்கும் போதும் கண்ணை மூடியிருக்கும் போதும் திறந்திருக்கும் போதும் அவன் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். உணவையும் நீரையும் நாக்கொண்டு சுவைக்குமதையும் நாராயணன் திருநாமத்தைக் கூறி விட்டு உட்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்பவன் எல்லாப் பாபங்களிலும் விடுபட்டு நற்கதி பெறுகின்றான்.

2 லக்ஷ்மீ த (17–91 )÷ பாபம் செய்தால் உடனே ப்ராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். மறுபடி ப்ரபத்தி செய்வது தான் இவ்விஷயத்தில் ப்ராயச்சித்தமாகும்.

[1] *'यदि किञ्चिदतिक्रान्तं विश्वासात् प्रणयेन वा ।*
*प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चिन्नापराध्यति ॥*

इत्यादिகளிற் சொன்ன न्यायத்தாலும், இப்படிக்கு सत्संप्रदाय-अनुष्ठानம் உண்டாகையாலும், परमात्मनिष्ठ[a] னுக்கு अकृत्यकरण कृत्याकरण[b] ங்களால் பாபம் பிறவாதென்கிற வாக்யம் स्तुति-पर[c] மும் उत्तराघ-अश्लेष-वचन[d] ம் प्रामादिक-विषय[e] மமாக भाष्यादिகளிலே स्थापिக்கையாலும்.

[2] *'अनन्यसाध्ये स्वाभीष्टे महाविश्वासपूर्वकम् ।*
*तदेकोपायतायाच्ञा प्रपत्तिः शरणागतिः ॥*

इत्यादि प्रपत्ति–लक्षण–वाक्य–अनुगुण[f] மாக ப்ரபந்நனுக்கு बुद्धिपूर्वक अपचारங்கள் புகுந்தனவாகிலும் அவற்றுக்கு प्रतिपदोक्त–प्रायश्चित्त–योग्य[g] தையில்லாதபோது ப்ரபந்நனுக்கும்

a - எம்பெருமானிடம் ஊன்றியிருப்பவனுக்கு; b - தகாததைச் செய்தல் - விதித்ததைச் செய்யாதிருத்தல்; c - பெருமையைப் புகழ்வதில் நோக்கமுடையது; d - ப்ரபத்திக்குப் பின் செய்யும் பாபம் ஒட்டாதென்ற வாக்யம்; e - அறியாமல் நேர்ந்த பாபங்களைப் பற்றியது; f - ப்ரபத்திக்கு இலக்கணம் கூறிய வாக்யத்தின்படி; g - கடினமான பிராயச்சித்தம் செய்யத் தகுதி

1 ராமா கிஷ் (36–11)÷ நம்பிக்கையாலோ ப்ரீதியாலோ ஏதாவது நான் மீறி நடந்திருந்தால் ஏவலனை என் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனும் இல்லை. (லக்ஷ்மணனிடம் ஸுக்ரீவன் வார்த்தை).

2 பரத முனி இயற்றியது ÷ தனக்கு வேண்டிய பலன் வேறொருவனாலே முடித்துக் கொடுக்க முடியாத போது மஹா விச்வாஸத்தை முன்னிட்டுக் கொண்டு ஸமர்த்தனை ஒருவனை 'நீயே உபாயமாக இருக்க வேண்டும்' என்று வேண்டுவதே சரணாகதி.

[1] 'यद्येन कामकामेन न साध्यं साधनान्तरैः ।
मुमुक्षुणा यत् सांख्येन योगेन न च भक्तितः ॥
प्राप्यते परमं धाम यतो नावर्तते यतिः ।
तेन तेनाप्यते तत्तत् न्यासेनैव महामुने ॥
परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः ॥ என்றும்,
[2] 'सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ' என்றும்
प्रतिपादित[a]மான प्रभावத்தையுடைத்தான ப்ரபத்திதன்னையே மீண்டும் प्रयोगि[b]க்குமதுவே स्व–अधिकार–अनुगुण–प्रायश्चित्त[c]மாகக் கடவது– என்றபடி.

வாக்யம் – 17

(17)

இப்படி प्रायश्चित्तத்திலே மூட்டுகிறதும் कठिन–प्रकृतिகளுக்குக் கசை காட்டுவாரைப் போலே அவன் பண்ணுகிற சிக்ஷைகளுமெல்லாம் शरण्य–प्रसाद–फलம் என்றது–

---

a - விரித்து உரைக்கப் பட்ட; b - செய்வதுவே; c - தன் தகுதிக்கு ஏற்ற

1 அஹிர் புத் (37–25, 26, 27 )÷ மஹர்ஷியே! பலனில் ஆசையுடைய எவனெவனால் எந்த எந்தப் பலன்கள் வேறு ஸாதநங்களாலே அடைய முடியாதனவோ, முமுக்ஷுவாலே எந்த மோக்ஷமெனும் பலன் கர்மயோகம் – ஞான யோகம் – பக்தி யோகம் ஆகிய இவற்றால் அடைய முடியாததோ, அவனவனாலே ப்ரபத்தியைச் செய்து அந்த அந்தப் பலன்கள் அடையப்படுகின்றன. புருஷோத்தமனான எம்பெருமானும் ப்ரபத்தியாலேயே அடையப் படுகின்றான். எங்கே போய் திரும்பி வருவதில்லையோ அந்த உயர்ந்த இடமே முமுக்ஷு ஆசைப் படும் பரமபதமாகும்.

2 प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा न विद्यते ।
सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ॥
ஸநத்குமார ஸம் ÷ பக்தி யோகத்திற்குப் போல் ப்ரபத்திக்கு வேறொன்றின் அபேக்ஷை ஓரிடத்திலும் ஒரு காலத்திலும் இல்லை. அது எல்லாவிடத்திலும் எல்லாருக்கும் எல்லாப் பயனையும் கொடுக்கும்.

[1] 'यं हि रक्षितुमिच्छन्ति बुद्ध्या संयोजयन्ति तम् ।
என்கிற ஸாமாந்ய[a] ந்யாயத்தாலும்,
[2] 'रक्षते भगवान् विष्णुः भक्तान् आत्मशरीरवत् ।
என்கிற विशेषवचन[b]த்தாலும் ஆச்ரித விஷயத்தில் ஈச்வரன் செய்யுமவையெல்லாம் प्रसाद–फल[c]மாக வேண்டுகையாலே ஹிதைஷிகளான[d] பித்ராதிகளைப் போலே அநுதாபாதி[e]களை விளைவித்துச் சாஸ்த்ரமுகத்தாலே प्रायश्चित्त–விசேஷத்தையறிவித்து प्रायश्चित्तத்திலே மூட்டுகிறதும், விநீதரல்லாத[f] புத்ராதிகளுக்குக் कशादि[g]களாலே भयம் பிறப்பிக்குமா போலே உபக்லேசங்களை[h] விளைவித்து उपरति[i]யை உண்டாக்குமதுவும் सर्व–भूत–निसर्ग–सुहृ[j]த்தான ஸர்வலோக சரண்யனுடைய இரக்கமடியாக வருகிறதென்று कृतज्ञ[k]ராக प्राप्त[l]ம்– என்றபடி.

---

a - எல்லாத் தேவர்களையும் பற்றிய பொது நீதியாலும்; b - எம்பெருமானை மட்டும் பற்றிய சிறப்பு வாக்கியத்தாலும்; c - அநுக்ரஹத்தின் பயன்; d - நன்மையை விரும்புகின்ற; e - பச்சாதாபம் முதலியவற்றை; f - அடங்காதவர்களான; g - சாட்டை (கசை) முதலியவற்றால்; h - கஷ்டங்களை; i - (பாபச் செயல்களினின்று) நீக்குதலை; j - எல்லா பிராணிகளிடத்தும் இயற்கையில் நல்லெண்ணங் கொண்ட; k - நன்றியறிவுடையவராக; l - இருப்பது கடமை;

1 न देवा यष्टिमादाय रक्षन्ति पशुपालवत् ।
यं हि रक्षितुमिच्छन्ति बुद्ध्या संयोजयन्ति तम् ॥
பார உத் (33–84) : தேவர்கள் ஒருவனைக் காக்க விரும்பினால் அவனுக்கு நல்லறிவைக் கொடுத்து அதன் வாயிலாக உதவி புரிகின்றனர்.

2 सर्वेषामेव धर्माणामुत्तमो वैष्णवो विधिः ।
रक्षते भगवान् विष्णुर्भक्तानात्मशरीरवत् ॥
பார ஆநு (36–24) ÷ எல்லாத் தர்மங்களுக்குள்ளும் பகவதாராதநம் மிகச் சிறந்தது. எம்பெருமான் தன் அடியார்களைத் தன் சரீரத்தைப் போல் காக்கின்றான்.

## வாக்யம் – 18

(18)

இங்கு இருந்த காலம் धर्म-अनुबन्धियान भोगத்திலும் भोगबुद्धियாலே ப்ராவண்யம் பிறந்ததாகில் இது தன் अधिकार अनुरूपமான कैङ्कर्य-अमृत-रसத்துக்குத் தண்ணீர்த் துரும்பு என்றது–

[1] 'रागाद्यपेतं हृदयं वागदुष्टाऽनृतादिना ।
हिंसादिरहित: काय: केशवाराधनं त्रयम् ॥'
[2] 'असक्तिरनभिष्वङ्ग: पुत्रदारगृहादिषु ।

इत्यादिகளிற்படியே ஆத்மகுண-युक्तனாயிருந்தானே ருவனாகிலும் गृहस्थ-अवस्थैயிலே[a] धर्म-अविरुद्ध-भोगங்கள்[b] சாஸ்த்ர बलத்தால் வரவேண்டியனவாதலால் முமுக்ஷு[c] வான இவனுக்கு அவற்றில்

a - இல்லறத்தை நடத்தும் நிலைமையில்; b - தர்மத்துக்கு முரண்படாத போகங்கள்; c - மோக்ஷத்தையே விரும்புகின்ற ;

1 விஷ்ணு தர் ÷ அற்பப்பலனில் ஆசையற்ற உள்ளம் – பொய் பேசுதல் முதலியவற்றால் கெடாத வாக்கு – பிறருக்குத் துன்பம் செய்யாத உடல் ஆகிய முக்கருவிகளும் கேசவனுக்கு மகிழ்ச்சியைத் தருவன.

2 असक्तिरनभिष्वङ्ग: पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥.

கீதை (13-9) ÷ ஆத்மாவைத் தவிர மற்ற வஸ்துக்களில் பற்றில்லாமை – புத்திரன் மனைவி விடு முதலியவற்றில் சாஸ்த்ரம் விதித்த கர்மங்களுக்குப் பயன் படுமளவுக்கன்றி மிக ஈடுபடாதிருத்தல் – நன்மை வந்தால் மகிழ்ச்சியோ தீங்கு வந்தால் துன்பமோ கொள்ளாது ஒரே மனப்பான்மையுடைமை முதலியன ஆத்மாவைப் பற்றிய உண்மை யறிவு பெறச் சாதனமாகும்.

[1] 'शरीरं व्रणवत् पश्येत् अन्नं तु व्रणलेपनम् ।
व्रणसेचनवत् पानं वस्त्रं तु व्रणपट्टवत् ॥

इत्यादिகளிற்படியே वैराग्य–ज्ञान–भक्त्यादिகளுக்கு அநுகூலமான औषधादि– क्रम[a]த்தாலே वृद्धि பண்ண प्राप्तமாயிருக்க अनादि–दुर्वासना–परिपाक–विशेष[b]த்தாலே प्रयोजनान्तर–पर[c]னுடைய விலக்கடி[d] இவனுடைய वृद्धियிலே வருமதாகில், இத்தால் வருவதொரு प्रधान–फल–प्रतिबन्ध[e]ம் இல்லையேயாகிலும் இப்போது இங்கு இருந்து அநுभவிக்கிற கைங்கர்ய ரஸத்துக்கு सङ्कोचादि–हेतु[f]வாகையாலே

[2] 'यन्मुहूर्तं क्षणं वाऽपि वासुदेवो न चिन्त्यते ।
सा हानिस्तन्महच्छिद्रं सा भ्रान्तिः सा च विक्रिया ॥

**a** - மருந்து முதலிய முறையில்; **b** - அநாதியாகக் கெட்ட பழக்கம் முதிர்ந்திருப்பதால்; **c** - மற்ற பலனை நாடுபவன்; **d** - விபரீதப் போக்கு; **e** - முக்கிய பலனாகிய மோக்ஷத்துக்குத் தடை; **f** - குறைதல் முதலியவற்றுக்குக் காரணம்;

1 மனிதன் தன் உடலை ஒரு புண் போலவும் உண்ணும் அந்நத்தைப் புண்ணுக்குப் போடும் மருந்து போலவும் பருகும் நீரைப் புண்ணைக்கழுவும் நீர் போலவும் உடுக்கும் உடையைப் புண்ணுக்குக் கட்டும் கட்டுப் போலவும் (Plaster) கருதவேண்டும்.

2 கருட புரா (1–222–22) ÷ பக்தன் முகூர்த்த காலமோ க்ஷணகாலமோ எம்பெருமானை நினையாதிருக்க நேரிட்டால் அதைப் பெரிய நஷ்டமாகவும் கஷ்டம் நேருவதற்கு வழியாகவும் பெரும் பித்தாகவும் நல்ல நிலை மாறிவிட்டதாயும் கருதுவான்.

[1] 'ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும் சிற்றின்பம்–
பாவியேனைப்பல நீ காட்டிப்படுப்பாயோ '
என்று भीत[a]னாக प्राप्तம் – என்றபடி.
[2] 'पृथिवीं रत्नसंपूर्णां यः कृष्णाय प्रयच्छति ।
तस्याप्यन्यमनस्कस्य सुलभो न जनार्दनः ॥
[3] 'पराङ्मुखानां गोविन्दे विषयाक्रान्तचेतसाम् ।
तेषां तत् परमं ब्रह्म दूरात् दूरतरे स्थितम् ॥
इत्यादिகளில் அவர்ஜநீய[b] – भोगங்களன்றிக்கே மோக்ஷ–
रुचि[c]யை விலக்கும்படியான प्रयोजनान्तरங்களில் ப்ராவண்
யத்தை[d]யுடையார்க்கு ஸர்வேச்வரன் दुर्लभ[e]ன் என்கிறது.

---

a - அஞ்சியவனாயிருப்பது கடமை; b - விடமுடியாதவையாய்த் தாமாக வருகிற; c - மோக்ஷத்தில் ஆசையை; d - ஈடுபாட்டை; e - அடைய முடியாதவன்;

1 ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம்
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ ?
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே
கூவிக்கொள்ளும்கால மின்னம்குறுகாதோ.
திருவாய் (6–9–9) ÷ எம்பெருமானே! என் மனம் மயங்கும்படி ஐந்து இந்திரியங்களும் வாயைத் திறந்து கேட்கும் உணவான பல அற்ப ஸுகங்களைக் காட்டிப் பாவியேனான என்னை அழிக்கப் பார்க்கின்றாயோ! உன் திருவடி மலர்களிலே சாச்வத கைங்கர்யம் செய்யும்படி என்னை நீ அழைத்துக் கொள்ளும் காலம் இத்தனை நாள் கழித்தும் கிட்டி வராதோ!

2 வேறு பலனை நாடும் மனிதன் இரத்தினங்கள் நிறைந்த பூமியையே எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்தாலும் அவனால் எம்பெருமானை எளிதில் அடைய முடியாது.

3 விஷ்ணு தர் (99–13) ÷ கோவிந்தனைப் புறக்கணித்துச் சிற்றின்பத்தில் மனம்படிந்தவர்களுக்கு வெகுதூரத்தில் அப் பரம்பொருளான எம்பெருமான் நிற்பான்.

[1] 'अथोपायप्रसक्तोऽपि भुक्त्वा भोगाननामयान् ।
अन्ते विरक्तिमासाद्य विशते वैष्णवं पदम् ॥

என்றது – மோக்ஷ – रुचियும் स्वर्गादि–रुचि[a]யும் உடையராய் நடப்பார்க்கு விளம்பம் வரும் – என்கிறது.

[2] 'अप्राप्तितः परिहरन् स्वपरैः स्वरक्षां ।

என்கிற நிக்ஷேபரக்ஷையின் श्लोकத்தையும் இங்கே अनुसंधिப்பது.

## வாக்யம் – 19

(19)

இப்படி निषिद्ध–भोग–प्रावण्यம் கைங்கர்ய அம்ருத ரஸ विरुद्ध மாகையாலே விஷம்போலே दूरपरिहरणीयம் என்றது – ஸத்த்வநிஷ்[b]டனாய், ஸ்வாமிக்கு अनभिमत[c]த்தில் विमुख[d]னாக

---

a - ஸ்வர்க்கம் முதலியவற்றில் ஆசை; b - ஸத்வகுணத்தில் நிலை நிற்பவன்; c - இஷ்டமில்லாதவற்றில்; d - புறக்கணிப்பவனாக

வக்ஷ்யமீ த(17–103) ÷ மற்ற பலனை விரும்பிக் காம்ய கர்மங்களில் ஈடுபட்டவனும் இம்மைப் போகங்களைத் தடையின்றி அனுபவித்துக் கடைசியில் வைராக்யம் பெற்று உபாயத்தைச் செய்து பரமபதத்தை அடைவான்.

2 अप्राप्तितः परिहरन् स्वपरैः स्वरक्षां
तादर्थ्यधीपरिहृतस्वपरार्थभावः ।
अन्योपभोगविरहादनघः प्रपन्नः
भुङ्क्ते स्वभोगमखिलं पतिभोगशेषम् ॥

ப்ரபந்நன் தன்னைக் காப்பதற்குத் தனக்கும் பிறர்க்கும் உரிமையில்லாமையைத் தெரிந்துகொண்டுவிடுகிறான். தான் எம்பெருமானுக்கே அடியன் என்ற எண்ணம் வந்துவிட்டபடியால் தனக்கும் பிறர்க்கும் தான் சேஷன் என்ற எண்ணத்தைக் கைவிடுகின்றான். வேறொருவனையும் தான் ஸ்வதந்த்ரனாய் அனுபவிக்காமையால் அக்குற்றமும் இவனுக்கு இல்லை. தனக்கு வரும் எல்லாப் போகங்களையும் ஸ்வாமியான எம்பெருமானுடைய போகத்துக்குச் சேஷமாய் வருவதாக நினைத்து அநுபவிக்கின்றான்.

प्राप्त[a]ராயிருக்க, सर्वருக்கும் स्वप्नादि-अवस्थैகளிலே निषिद्ध-प्रवृत्ति[b]கள் வருமாப்போலேவும் अवहित[c]ரான ऋषिகளுங்கூட ஓரளவுகளிலே[d] देवादिகளினாலே मोहित[e]ராய் அகப்படுமா போலவும் मुमुक्षु[f]வுக்கு निषिद्ध-भोग-प्रावण्य[g]ம் வருமாகில்

[1] *'अपायाविरतः शश्वत् मां चैव शरणं गतः ।*
*तनूकृत्याखिलं पापं मां प्राप्नोति नरः शनैः ॥*

इत्यादिகளிற்படியே இங்கு प्रायश्चित्तம் दण्ड-விசேஷங்கள் வருமதுக்கு மேலே असत्कल्प[h]னான தனக்கு उज्जीवन[i]முமாய் भोगமுமாகையாலே अमृतकल्प[j]மான कैङ्कर्य-अनुभवத்துக்கு अनधिकारादि[k]களைப் பண்ணுகையாலே

[2] *'विषस्य विषयाणां च दूरमत्यन्तमन्तरम् ।*
*उपभुक्तं विषं हन्ति विषयाः स्मरणादपि ॥*

इत्यादिகளை அநுஸந்தித்து संनिधि-परित्याग[l]ம் பண்ணவொட்டாத चापल[m]த்தில் அகப்படாதபடி निपुण-निरूपण[n]ம் பண்ணி, सर्पादिகளில்லாத தேசங்களிலே वर्तिக்குமாபோலே निषिद्ध-भोग-संभावनै[o]யில்லாத தேசங்களிலே वर्तिக்கவும்.

---

**a** - கடமையுடையன்; **b** - பாபச்செயல்கள்; **c** - மிகக் கவனமுடையரான; **d** - ஒரொரு ஸமயங்களில்; **e** - மயக்கப்பட்டவராய்; **f** - மோக்ஷத்தை விரும்புமவனுக்கு; **g** - தகாத போகங்களில் ஈடுபாடு; **h** - இருந்தும் இல்லாதவன் போன்ற; **i** - உய்வதற்குக் காரணமாய்; **j** - அமுதம் போன்ற; **k** - தகுதியில்லாமை முதலியவற்றை; **l** - விட்டு விலகுதல்; **m** - போகங்களில் நப்பாசை; **n** - கூரிய மதியுடன் ஆராய்தல்; **o** - தகாத போகங்கள் வருவதற்கு இடம்

1 வக்ஷ்மீ த(17-102) ÷ என்னைச் சரணமடைந்தவன் பின் பாபங்களை இடைவிடாது செய்து (அவற்றுக்குப் பிரயச்சித்தமும் செய்யாதிருந்தால்) பாபங்களின் பலனையெல்லாம் அனுபவித்துப் பின் மெல்ல என்னை அடைவான்.

2 விஷத்துக்கும் விஷயத்துக்கும் (சிற்றின்பம்) வேறுபாடு மிக அதிகம். விஷம் உண்டவனைத்தான் கொல்லும். விஷயங்களோ மனத்தால் நினைத்தாலே கெடுத்துவிடும் தன்மையன.

[1] 'पापं प्रज्ञां नाशयति क्रियमाणं पुनः पुनः ।
नष्टप्रज्ञः पापमेव पुनरारभते नरः ॥

इत्यादிகளிற்சொன்ன पाप–आरम्भक–पाप[a]த்துக்கும் प्रायश्चित्तமாக ஏற்கவே[b] ப்ரபத்தி பண்ணவும் प्राप्तம் –என்றபடி.

இப்படி वर्तिக்குமவன்

[2] 'अहेरिव गणात् भीतः संमानात् मरणादिव ।
कुणपादिव यः स्त्रीभ्यः तं देवा ब्रामह्मणं विदुः ॥

इत्यादिகளிற்படியே देवர்களுக்கும் बहुमान–विषय[c]ஞாம்.

[3] 'पररन्ध्रेषु जात्यन्धाः परदारेष्वपुंसकाः ।
परिवादेषु ये मूकाः तेऽतीव दयिता मम ॥

[4] 'तन्मयत्वेन गोविन्दे ये नरा न्यस्तचेतसः ।
विषयत्यागिनस्तेषां विज्ञेयं च तदन्तिके ॥

**a** - பாபத்துக்குக் காரணமான பாபத்துக்கும்; **b** - முதலிலேயே; **c** - பெரு மதிப்புக்கு இலக்காவான்

1 பார உத் (34–74) ÷ அடிக்கடி செய்யப்பட்ட பாபம் அறிவை அழிக்கும். அறிவை இழந்த மனிதன் மறுபடியும் பாபத்தையே செய்ய ஆரம்பிக்கின்றான்.

2 பார – சாந்தி (251–13) ÷ வீணர்களின் கூட்டத்தைக் கண்டால் பாம்பினிடத்திற் போல் அஞ்சி, பிறர் ஸம்மானம் செய்யும் போது மரணத்திற்குப் போல் பயந்து, பிற பெண்களைக் கண்டால் பிணத்தைக் கண்டாற் போல் விலகுபவன் உயர்ந்த அந்தணனென்று தேவர்களும் கொண்டாடுகின்றனர்.

3 விஷ்ணு தர் (76–22) ÷ பிறரிடம் குற்றம் காண்பதில் பிறவிக்குருடராகவும் பிறர் மனைவியின் விஷயத்தில் அலிகளாகவும் பிறரைப் பழிப்பதில் ஊமைகளாகவும் இருப்பவர் எனக்கு மிகவும் பிரியமானவர்.

விஷ்ணு தர் (99–15) ÷ கோவிந்தனையே எப்போதும் நினைத்து அவனிடம் மனம் வைத்து விஷயங்களில் பற்றில்லாதவர்களின் ஸமீபத்தில் அந்தப் பகவான் இருக்கின்றான்.

[1] 'क्षणेऽपि ते यद्विरहोऽतिदुस्सहः ।

என்னும்படி ஸர்வேச்வரனுக்கும் निरतिशय-प्रीतिहेतु[a]வாம்.

**வாக்யம் – 20**

(20)

कैङ्कर्यமாவது– ஸ்வாமி உகந்த ஏவல் தொழில் செய்கை யாகையாலே இது यथाशास्त्रம் பண்ணினால் உகப்பாம் என்றது – नित्यரும் मुक्तரும் भगवत्-प्रीति-हेतुக்களைக் करण-निरपेक्ष[b] सर्व-विषय-ज्ञानத்தாலே ஸாக்ஷாத்கரித்துக்[c] கைங்கர்யம் பண்ணுமாப்போலே யன்றிக்கே बद्ध-दशैயில்[d] கரண–ஸாபேக்ஷதை[e] உண்டா கையாலும், प्रत्यक्षादिகளுக்கு நிலமல்லாத விஷயத்தில்

[2] 'पितृदेवमनुष्याणां वेदश्चक्षुः सनातनम् ।

[3] 'मानं प्रदीपमिव कारुणिको ददाति ।

---

a - எல்லையற்ற உகப்புக்குக் காரணம்; b - இந்திரியங்களை எதிர்பாராத; c - நேரில் அறிந்து; d - ஸம்ஸார நிலையில்; e - இந்திரியங்களை எதிர்பார்த்தல்;

1 सकृत् त्वदाकारविलोकनाशया तृणीकृतानुत्तमभुक्तिमुक्तिभिः ।
महात्मभिर्मामवलोक्यतां नय क्षणेऽपि ते यद्विरहोऽतिदुःसहः ॥

ஆள. ஸ்தோத்(56) ÷ எம்பெருமானே! ஒரு முறை உன் திருமேனியை ஸேவிக்கும் ஆசையால் ப்ரஹ்மாதிபதங்களையும் மோக்ஷத்தையும் கூடத் துரும்பாக நினைக்கும் மஹாத்மாக்கள் சிலர் உளர். அவர்களை விட்டு க்ஷணம் பிரிவது கூட உனக்குப் பொறுக்க முடியாதது. அவர்கள் கடாக்ஷத்துக்கு என்னை இலக்காகும்படி செய்தருள்.

2 பித்ருக்களுக்கும் தேவர்கட்கும் மனிதர்கட்கும் அநாதியான வேதமே கண்ணாகும்.

3 हर्तुं तमः सदसती च विवेक्तुमीशो
मानं प्रदीपमिव कारुणिको ददाति ।
तेनावलोक्य कृतिनः परिभुञ्जते तं
तत्रैव केऽपि चपलाः शलभीभवन्ति ॥

ஸ்ரீரங்கராஜஸ்(2-1) ÷ கருணைக்கடலான எம்பெருமான் அஜ்ஞானவிருளைப் போக்கவும் நல்லது தீயதைப் பிரித்தறிவதற்கும் கைவிளக்குப் போன்ற சாஸ்த்ரத்தைக் கொடுக்கிறான்.

इत्यादिகளிற்படியே சாஸ்த்ரமொழியப் கண்ணும் கை-விளக்கும் இல்லாமையாலும்,

[1] 'यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।
न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥ என்றும்

[2] 'अशास्त्रमासुरं कृत्स्नं'

என்றும் அருளிச் செய்தது இங்குற்ற ஸ்வயம்ப்ரயோஜந-கைங்கர்யத்திலும் ஸமாந ந்யாயமா[a]கையாலும்,

[3] 'அறிவிலேனுக்கருளாய்'

---

a - ஸமமான நீதி;

1 கீதை (16–23) ÷ வேதமென்பது என் கட்டளையேயாகும். அதைப் புறக்கணித்து நடப்பது நரகத்துக்கு முக்கிய காரணமாகும். அந்த வேதத்தைத் தழுவாது தன் இஷ்டத்துக்கு ஏற்ற வழியில் நடப்பவன் மறுமைப்பயனுக்கு வேண்டிய உபாயத்தைச் செய்தவனுகான். ஸ்வர்கம் முதலிய ஸுகத்தையும் பெற மாட்டான். இவ்வுலகத்திலும் ஸுகம் பெறமாட்டான். அதற்கு மேம்பட்ட உயர் கதியை அவன் பெறுவது ஏது?

2 अशास्त्रमासुरं कृत्स्नं शास्त्रीयं गुणतः पृथक् ।
लक्षणं शास्त्रसिद्धस्य त्रिधा सप्तदशोदितम् ॥
கீதார். ஸங்(21) ÷ சாஸ்த்ரம் விதிக்காத கர்மமெல்லாம் அஸுரத் தன்மையுடையன. அவற்றைச் செய்வதால் பயனில்லை.

3 உலகில்திரியும் கருமகதியா யுலகமாய்,
உலகுக்கேயோருயிருமானாய் புறவண்டத்து,
அலகில்பொலிந்த திசைபத்தாயவருவேயோ,
அலகில்பொலிந்த அறிவிலேனுக்கருளாயே.
அறிவிலேனுக்கருளா யறிவாருயிரானாய்,
வெறிகொள்சோதிமூர்த்தி யடியேன்நெடுமாலே,
கிறிசெய்தென்னைப்புறத்திட் டின்னம்கெடுப்பாயோ,
பிறிதொன்றறியாவடியே னாவிதிகைக்கவே.
திருவாய் (6–9–7,8) ÷ உன்னை அடைவதற்கு உபாயத்தைப் பற்றிய அறிவு அற்ற எனக்கு உனது எல்லையற்ற கருணையாலே உன் திருமேனியைக் காட்டியருள வேண்டும்.

[1] 'அறியாத பிற்ளைகளோம்'

என்று நிற்கப் प्राप्त[a]மான அவஸ்தை[b]யிலே स्व–अभिमति–मात्र[c]த் தாலே ஏதேனும் ஒன்றைக் கைங்கர்யமென்று செய்தால் அது ஸ்வாமிக்கு अभिमत[d]மாகைபிலே நியமமில்லாமை யாலும்,

[2] 'लोके प्रियतमानि आत्मनश्च इष्टानि शास्त्राविरुद्धानि '

என்று நித்யத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்கை– யாலும், ப்ரத்யக்ஷாதிகளுக்கு நிலமான விஷயத்திலும்

a - கடமையான; b - நிலைமையில்; c - தனக்கு இஷ்டம் என்பதை மட்டும் கொண்டு; d - திருவுள்ளத்துக்கு உகந்தது

1 கறவைகள்பின் சென்று கானஞ்சேர்ந்துண்போம்,
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து உன்றன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம்,
குறைவொன்றுமில்லாத கோவிந்தா, உன்றன்னோ–
டுறவேல்நமக்கிங் கொழிக்கவொழியாது,
அறியாதபிள்ளைகளோ மன்பினால் உன்றன்னைச்,
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே,
இறைவாநீதாராய் பறையேலோரெம்பாவாய்.
திருப்பாவை (28) ÷ ஆய்ப்பெண்களான நாங்கள் அறிவற்றவர்கள். உன்னிடம் அன்பினால் சிறுபேரைச் சொல்லி உன்னை அழைத்ததற்கும் நீ சீற்றம் கொள்ளக் கூடாது.

2 लोके प्रियतमानि आत्मनश्च इष्टानि शास्त्राविरुद्धानि संभृत्य शोषणादि कृत्वा अर्घ्यजलेन संप्रोक्ष्य अस्त्रमन्त्रेण रक्षां कृत्वा सुरभिमुद्रां प्रदर्श्य अर्हणपूर्वकं हविः निवेदयेत् ॥

ஸ்ரீபாஷ்யகாரர் நித்யம் ÷ எம்பெருமானுக்குத் தளிகை ஸமர்ப்பிக்கும் போது நெய் சேர்ந்த அந்நம் – தயிர், பால், தேன், பழம், கிழங்கு முதலிய வ்யஞ்ஜநங்கள், கொழுக்கட்டை இவற்றையும் மற்றும் உலகில் பலராலும் விரும்பப்படுவனவாய், ஆராதநம் செய்பவனுக்கும் விரும்பியனவாய், சாஸ்த்ரம் மறுக்காதனவாயுள்ள மற்றவற்றையும் எம்பெருமானுக்கு அமுது செய்விக்க வேண்டும்.

[1] 'स्वयं तु रुचिरे देशे क्रियतामिति मां वद ।'

என்கிற கட்டளையிலே

[a] 'किं करोमि?' என்று दासன் நிற்க

[b] 'इदं कुरु' என்று ஸ்வாமி சொல்லச் செய்யுமது கைங்கர்யமாகவேண்டுமாகையாலும் செய்த வேள்வியானவன்[c] ப்ரபந்நனுக்கும் यावत्-शरीर-पात[d]ம் यथाऽधिकारம் यथाशास्त्रம் நடந்தால் அது प्रहर्षयिष्यामि என்கிற प्रधान-फल-पर्यन्त[e]மாம்- என்றபடி.

## வாக்யம் - 21

(21)

भगवत्- கைங்கர்யமும், भागवत- கைங்கர்யமும் சேர அநுஷ்டிக்க அரிதானபோது परम-पुरुषार्थ-काष्ठैயான भागवत-कैङ्कर्यமே उपादेय-तमம் என்றது -

ப்ரணவத்தில் சிக்ஷித-ஸ்வரூபனுகையாலே[f] चतुर्थिயில் अभिप्रेतமான[g] भगवत्- கைங்கர்யம் स्वरूप-प्राप्त[h]மாய் நின்றது[i]. நமஸ்ஸிலே ஸுசிக்ஷித-ஸ்வரூபனுகையாலே भागवत-கைங்கர்யமும் இவனுக்கு प्राप्तமாயிருந்தது. இப்படியானுல்

---

a - அடியேன் என்ன கைங்கர்யம் செய்ய வேண்டும்?; b - இந்தத் தொண்டினைச் செய்; c - ப்ரபத்தியாகிய பெரிய வேள்வியைச் செய்தவன்; d - சரீரம் கழியும்வரை; e - அவன் உகப்பு என்ற முக்கிய பலன் வரையில் ஆகும்; f - ஸ்வரூபத்தைப் பற்றிய அறிவு விளக்கம் பெற்றவன்; g - கருத்துக்கு இலக்கான; h - தன் ஸ்வரூபத்துக்கு அவசியம் செய்யவேண்டியதாய்; i - கடமையாகி விட்டது

1 परवानस्मि काकुत्स्थ त्वयि वर्षशतं स्थिते ।
स्वयं तु रुचिरे देशे क्रियतामिति मां वद ॥

ராமா. ஆரண். (15-7) ÷ இராமபிரானே! தேவரீருக்கு நூறு ஆண்டுகளாயினும் அடங்கியே நிற்பேன். தேவரீர் திருவுள்ளத்துக்கு உகப்பான இடத்தில் பர்ண சாலையை அமைக்குமாறு அடியேனுக்குக் கட்டளையிட வேண்டும். (லக்ஷ்மணன் சொல்).

இரண்டும் சேர அனுஷ்டிக்க வரும்போது சேர அனுஷ்டிக்கவும். சேர வர அரிதாய் இரண்டத்து ஒன்றை விட வேண்டும் படியான आपत्–दशैயிலே

[1] 'तस्मात् विष्णुप्रसादाय वैष्णवान् परितोषयेत् ।
प्रसादसुमुखो विष्णुः तेनैव स्यात् न संशयः ॥

[2] 'मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत् ।
तस्मात् मद्भक्तभक्ताश्च पूजनीया विशेषतः ॥

[3] 'आराधनानां सर्वेषां विष्णोराराधनं परम् ।
तस्मात् परतरं प्रोक्तं तदीयाराधनं परम् ॥

[4] 'अनादृतसुतं गेही पुरुषं नाभिनन्दति ।
तथाऽनर्चितसद्भक्तं भगवान् नाभिनन्दति ॥

[5] 'स्वाराधनं विहायापि स्वभक्तानर्चयन्ति ये ।
तेभ्यः प्रसन्नो भगवान् सिद्धिमिष्टां प्रयच्छति ॥

इत्यादि ப்ரமாண விசேஷங்களாலும்

---

1 இதிஹாஸ ஸமு (25–2) ÷ ஆதலால் எம்பெருமானது அருளைப் பெறுவதற்காக அவனடியார்களை நன்கு மகிழ்விக்க வேண்டும். அதனாலேயே எம்பெருமான் அருள்புரிய முற்படுவான் என்பதில் ஐயமில்லை.

2 பார. ஆச்வ (116–23) ÷ என் அடியார்களிடம் பக்தியுள்ளவர்கள் மீது எனக்கு மிக அதிகமான அன்பு உள்ளது. ஆதலின் பாகவதர்களுக்கு அடியார்களையும் நன்றுய்ப் பூஜிக்கவேண்டும்.

3 பாத்மோத்த (29–81) ÷ எல்லாத் தெய்வங்களையும் ஆராதிப்பதினும் விஷ்ணுவை ஆராதிப்பதுவே சிறந்தது. அதைவிடச் சிறந்தது பாகவதர்களை ஆராதிப்பது. இது எல்லாவற்றிலுமே மிகச் சிறந்தது.

4 சாண்டி ஸ்ம் (4–86) ÷ குழந்தையைப் புறக்கணித்து விட்டு அதன் தந்தையிடம் ஒருவன் உதவியை நாடினுல் அவன் செய்வதில்லை. அங்ஙனமே எம்பெருமானும் தன் அடியார்களைப் பூஜிக்காதவனிடம் அன்பு கொள்வதில்லை.

5 எம்பெருமானுக்குச் செய்யும் ஆராதநத்தைக் கைவிட்டாவது அவனடியார்களைப் பூஜிப்பவர்களிடம் பகவான் மிக்க மதிப்புக் கொண்டு அவன் விரும்பிய பலனை அளிக்கிருன்.

[1] 'ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தியிருப்பார் தவம்'
என்கிற ந்யாயம் ஸ்வயம்ப்ரயோஜந கைங்கர்யத்திலும் ஸமாநமாகையாலும் भागवत –கைங்கர்யந்தன்னிலே भगवत्– கைங்கர்யத்தையும் கண்டு कृतार्थ[a]ரையிருக்கப் प्राप्त[b]ம் என்றபடி.

## வாக்யம் – 22

(22)

இவை இரண்டிலும் प्रधानம் आचार्य– கைங்கர்யம் என்றது– भगवान் பக்கலில் போலே ஆசார்யன் பக்கலிலும் अनुवर्ति[c]ப்பனென்று अतिदेशि[d]த்தவள வேயன்றிக்கே

[2] 'गुरोर्गुरुतरं नास्ति गुरोरन्यं न भावयेत् ।
गुरोर्वार्तां कथां चैव गुरोर्नाम सदा जपेत् ॥

[3] 'गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः ।
गुरुरेव परा विद्या गुरुरेव परायणम् ॥
गुरुरेव परः कामः गुरुरेव परं धनम् ।

a - இஷ்டம் நிறைவேறியவனாய்; b - அவசியமான கடமை; c - நடந்து கொள்வான்; d - ஒன்றுக்குச் சொல்லியதை மற்றொன்றுக்கும் காட்டுதல்;

1 *மாருயதானவனை வள்ளுகிரால்மார்விரண்டு*
*கூறாகக்கீறியகோளரியை – வேறாக*
*ஏத்தியிருப்பாரைவெல்லுமே, மற்றவரைச்*
*சாத்தியிருப்பார்தவம்.*
நான்முகன் திரு(18) ÷ நரசிங்கவுருக் கொண்ட எம்பெருமானை ஆச்ரயித்தவர்களின் பெருமையிலும் அவனடியார்களை வழிபடுபவர்களின் பெருமை மிகுதியாகும்.

2 *ஆசார்யனைக் காட்டிலும் பெரியது ஒன்றும் இல்லை. ஆசார்யனையன்றி மற்றவனைத் தியானிக்கக்கூடாது. ஆசார்யனைப் பற்றிய பேச்சையும் அவன் சரிதையையும் சிந்திக்க வேண்டும். அவன் பெயரையே எப்பொழுதும் ஜபிக்கவேண்டும்.*

3 *ஸாத்யகிதந் ÷ ஆசார்யனே பரம்பொருள். அவனே சிறந்த உபாயம்; அவனே சிறந்த வித்யை; அவனே சிறந்த ஸித்தோபாயம்; அவனே விரும்புதற்குரிய பொருள். சிறந்த செல்வமும் அவனே.*

इत्यादिகளிலே आचार्य-कैङ्कर्य-प्राधान्य[a]ம் प्रमित[b]மாகையாலும், भगवत्-भागवत-कैङ्कर्யங்களும் आचार्य- அநுஜ்ஞை[c]யால் நடக்க வேண்டுகையாலே आचार्य- கைங்கர்யத்தை நிரூபித்துப்[d] பார்த்தால் இது भगवत्-आज्ञा-सिद्ध[e]மாகையாலே भगवत्-கைங்கர்யமும், ஆசார்யனுடைய भागवतत्व-ஸாமாந்யத் தாலே இது தானே भागवत-கைங்கர்யமுமாய் நிற்கை யாலும்

[1] 'चक्षुर्गम्यं गुरुं त्यक्त्वा शास्त्रगम्यं तु यः स्मरेत् ।
करस्थमुदकं त्यक्त्वा घनस्थमभिवाञ्छति ॥

[2] 'सुलभं तु गुरुं त्यक्त्वा दुर्लभं य उपासते ।
बद्धं त्यक्त्वा धनं मूढः गुप्तमन्वेषते क्षितौ ॥

इत्यादिகளிற்படியே ஆசார்ய கைங்கர்யத்தை விட்டு பகவத் கைங்கர்யாதிகளிலே இழியக்கடவனல்லன்[g]. கண்ணி நுண் சிறுத்தாம்பின் படியே आचार्य-कैङ्कर्य-प्रधानனாய் நின்று

---

a - முக்கியத் தன்மை; b - அறியப்பட்டுவிட்டது; c - அநுமதியால்; d - நன்கு ஆராய்ந்து; e - கட்டளையால் ஏற்பட்டது; f - பாகவதத் தன்மை ஆசார்யனுக்கும் பொதுவானதால்; g - ஈடுபடக் கடமைப்பட்டவனல்லன்

1 விஹகேச்வர ஸம் ÷ கண்முன் புலப்படும் ஆசார்யனை விட்டுச் சாஸ்த்ரத்தாலேயே அறியவேண்டும் எம்பெருமானைத் தியானிப்பவன், கையில் உள்ள நீரை விட்டு மேகத்தில் உள்ள நீரை விரும்புமவனைப் போன்றவனாவான்.

2 ஸ்ரீஸாத்வதஸம் ÷ எளிதில் பெறக்கூடிய ஆசார்யனை விட்டு அரியனான எம்பெருமானை வழிபடுபவன் கையில் உள்ள பொருளைவிட்டுப் புதையலைத் தேடும் முட்டாள் போன்றவனாவான்.

1 'திரிதந்தாகிலுந் தேவபிரானுடை க்
கரியகோலத் திருவுருக்காண்பன் நான்
பெரியவண்குருகூர்நகர் நம்பிக்காள்
உரியனாய் அடியேன்பெற்ற நன்மையே

इत्यादिகளிற்படியே आचार्य–अभिमत[a]மென்று यथाकालம் भगवत्–भागवत– கைங்கர்யங்களையும் अनुष्ठिக்கப் प्राप्तம்– என்றபடி.

**வாக்யம் – 23**

(23)

இக் कैङ्कर्यपरனுக்குப் परमैकान्तिகள் உகந்த இடமே उचित–स्थानம் என்றது–

धर्मशील[b]ராயிருப்பாருக்கு वास–स्थानமாகச் சாஸ்த்ரங்கள் வகுத்த புண்ய देशங்கள் कलिकालादि–दोषங்களாலே म्लेच्छादि–परिगृहीत[c]ங்களாய்

[d] 'नाधर्मजनभूयिष्ठे'

इत्यादिகளிற்படியே परित्याज्य[e]ங்களாகையாலும், पुण्यदेशங்–களுக்குச் சொல்லும் லக்ஷணங்களுக்கு அவ்யாப்தி[f]–அதிவ்யாப்தி[g]களுண்டாகையாலே இவை ப்ராயிகங்களா–கையாலும்[h],

a - உகப்பானதென்று; b - தர்மச் செயல் புரியும் தன்மையர்; c - மிலேச்சர் முதலியவர்களால் ஆக்கிரமிக்கப்பட்டன; d - அதர்மம் செய்யும் மனிதர் நிறைந்த இடத்தில் வாழக் கூடாது; e - விலக்க உரியன; f - லக்ஷணங்கள் சிலவற்றுக்கு இல்லாமை; g - புண்ய தேசங்களல்லாதவற்றிலும் லக்ஷணங்கள் இருத்தல்; h - கூறிய லக்ஷணங்கள் பெரும்பாலும் இருப்பன

1 கண்ணிநுண் (3) ÷ இதுவரை வெளி விஷயத்தில் ஈடுபட்டுத் திரிந்தபோதிலும் ஆழ்வாருக்கு அடியனானபின் எம்பெருமானது அழகிய திருமேனியை ஸேவிக்கவும் முன் வந்துள்ளேன். என் தெய்வமாகிய ஆழ்வார் ஈடுபட்டிருப்பதாலும் அவருக்கு உகப்பாயிருக்கு மென்பதாலுமே எம்பெருமானது திருமேனியை ஸேவிக்கின்றேன்.

[1] 'आत्मनस्तुष्टिरेव च'

इत्यादिகளைப் பார்த்துத் தன் अभिमति-मात्र[a]த்தாலே ஒரு தேசத்தை அறுதியிட்டுக்கொள்ள[b]ப் பார்த்தால் அது தப்பவும் கூடுமாகையாலும்,

[2] 'एक: कार्यं न निर्णयेत्'

என்று அது[c] சாஸ்த்ர நிஷித்தமாகையாலும், ராஜஸ-தாமஸ- புருஷ बुद्धि[d]யோடே கூடி அறுதியிட்டுக் கொள்ளப்[e] பார்த்தால்

[3] 'यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।
अयथावत् प्रजानाति बुद्धि: सा पार्थ राजसी ॥

इत्यादिகளிற்படியே அவர்களுடைய கலக்கத்தையிட்டுத் தனக்குள்ள தெளிவையும் கலக்கும்படியாய் நிற்கை-

---

a - தனக்கு இஷ்டமிருப்பதை மட்டும் கொண்டு; b - முடிவு செய்து கொள்ள; c - ஒருவனாய் ஒன்றை முடிவு செய்தல்; d - ரஜோ குணம் தமோ குணம் நிறைந்த மனிதர்களின் கருத்தைத் துணைகொண்டு; e - முடிவு செய்ய;

1 वेदोऽखिलोधर्ममूलं स्मृतिशीले च तद्विदाम् ।
आचारश्चैव साधूनां आत्मनस्तुष्टिरेव च ॥
மநு ஸ்ம்ருதி (2-6)÷ ஒன்றை ஏற்றுக்கொள்ளத் தன் மனத் திருப்தியும் ஓர் ஆதாரமாகும்.

2 एक: स्वादु न भुञ्जीत ह्येक: कार्यं न निर्णयेत् ।
एको न गच्छेदध्वानं नैक: सुप्तेषु जागृयात् ॥
பார. உத்யோ(32-53) ÷ ஒருவனாக இருந்து ஒன்றை நிச்சயம் செய்து விடக் கூடாது.

3 கீதை (18-31) ÷ இவ்வுலக நலங்களைப் பெறக் காரணமாயுள்ளது ப்ரவ்ருத்தி தர்மம். மோக்ஷம் பெறச் சாதனமானது நிவ்ருத்தி தர்மம். இவ்விரு தர்மங்களையும் இவற்றுள் ஏதாவது ஒன்றைச் செய்யும் எல்லாச் சாதியினரும் தேசத்துக்கும் காலத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு செய்யத் தக்கது இன்னது செய்யத் தகாதது இன்னது என்பதையும் உள்ளவாறு கொள்ளாத புத்தி ரஜஸ புத்தி எனப்படும்.

யாலும், ஸம்யக்– ஜ்ஞாந– ஹேதுவான ஸத்த்வ– குணோ–ந்மேஷத்தாலே[a] அநந்யார்ஹ– சேஷத்வ– ஜ்ஞாந–வான்களும்[b], அநந்ய– உபாயரும்[c], அநந்ய– ப்ரயோஜ–நருமான[d] प्रतिबुद्ध–अधिकारि[e]கள் தங்களுக்கு ஸ்வரூப–ப்ராப்த[f]– ஸ்வாமி– கைங்கர்யத்துக்கு நிலம் இதுவென்று அவிஸம்வாத[g]மாய் நிர்ணயித்து[h] आदरத்துடனே वर्तिக்கும் க்ஷேத்ரம் आर्यावर्तादिகளன்றிக்கே யொழிந்தாலும் மற்றும்[i] வைத்த அடையாளங்கள் கண்டதில்லையேயாகிலும்

[1] 'निगृहीतेन्द्रियग्रामो यत्र यत्र वसेन्नरः ।
तत्र तत्र कुरुक्षेत्रं नैमिशं पुष्करं तथा ॥
[2] 'तुलसीकाननं यत्र यत्र पद्मवनानि च ।
वसन्ति वैष्णवा यत्र तत्र संनिहितो हरिः ॥
[3] 'यत्र भागवताः स्नानं कुर्वन्ति विमलाशयाः ।
तत् तीर्थमधिकं विद्धि सर्वपापप्रणाशनम् ॥

**a** - ஸத்த்வகுணம் தலையெடுப்பதால்; **b** - வேறு ஒருவனுக்கன்றி எம்பெருமானுக்கே அடியரென்ற அறிவுடையர்; **c** - அவனையன்றி வேறு உபாயமற்றவர்; **d** - அவனையன்றி வேறு பயனைக் கொள்ளாதவர்; **e** - மஹாவிவேகம் பெற்ற அதிகாரிகள்; **f** - தங்கள் ஸ்வரூபத்துக்குப் பொருந்திய கடமையான; **g** - ஆக்ஷேபத்துக்கு இடமின்றி; **h** - நிச்சயித்து; **i** - (புண்ய க்ஷேத்ரங்களுக்கு) மற்றும் சொல்லிய

*1* இதி – ஸமு. (25–18) ÷ ஒரு மனிதன் தன் இந்த்ரியத் தொகுதியைக் கட்டுப் படுத்திக் கொண்டு எந்த இடத்தில் வசித்தாலும் அதுவே குருக்ஷேத்ரம் – நைமிசம் – புஷ்கரம் ஆகிய எல்லாப் புண்ணிய க்ஷேத்திரங்களாகும்.

*2* துளஸி வனத்திலும் தாமரைக் காடுகள் உள்ள இடத்திலும் பாகவதர்கள் வஸிக்கும் இடத்திலும் எம்பெருமான் நெருங்கி வாழ்கின்றான்.

*3* தூய மனம் படைத்த பாகவதர்கள் நீராடும் நீர் நிலையே எல்லாப் பாபங்களையும் போக்கும் சிறந்த புண்ணிய தீர்த்தமென்று அறிக.

[1] 'निमिषं निमिषार्धं वा यत्र तिष्ठन्ति वैष्णवाः।
तत् क्षेत्रं मङ्गलं पुण्यं तत् तीर्थं तत् तपोवनम् ॥
[2] 'यत्राष्टाक्षरसंसिद्धो महाभागो महीयते ।
न तत्र संचरिष्यन्ति व्याधिदुर्भिक्षतस्कराः ॥

इत्यादिகளிற்படியே सर्व–अधिक[a]மான புண்ய க்ஷேத்ரமாகையாலே स्वयं–प्रयोजन–त्रिविध–कैङ्कर्य–पर[b]னுக்கு अशेष–शेष– वृत्ति[c]களுக்கும் இதுவே विघ्न–निवारणादि–हेतु[d]வான उचित–स्थानம்– என்றபடி.

இவர்களுக்குப் परमैकान्तित्वமாவது – परतत्व–परमहित–परमपुरुषार्थ[e]ங்களில் प्रमाण–अनुगुण[f]மான अनन्यत्व–अध्यवसाय–विशेष[g]ம். இதுவே भागवत–वैष्णव–शब्दங்களுக்கும் प्रधान–विषयம்.

**வாக்யம் – 24**

இப்படித் துல்யசீலரைக் கிடையாதபோது विपरीत–संसर्गம் एकान्त–वास–परिहार्यம் என்றது –

---

a - எல்லாவற்றிலும் மேம்பட்ட; b - பகவத் – பாகவத கைங்கர்யம் – ஆசார்ய கைங்கர்யம் ஆகிய மூன்று; c - எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வதற்கு; d - தடை நீங்கல் முதலியவற்றுக்குக் காரணமான; e - மேம்பட்ட தத்துவம் – மேம்பட்ட உபாயம் – மேம்பட்ட பயன் இவற்றில்; f - சாஸ்த்ரங்களைத் தழுவிய; g - எம்பெருமானையன்றி வேறொருவனைக் கருதாத ஒரு விசேஷ உறுதி;

1 எம்பெருமான் அடியார்கள் ஒரு நிமிஷமோ அரைநிமிஷமோ நிற்கப் பெற்ற இடம் மங்களத்தைத் தரும் புண்ய தீர்த்தமாகவும் தவம் புரிதற்கு ஏற்ற இடமாகவும் ஆகும் என்று அறிக.

2 நாரதீயகல் – அஷ்டாக்ஷரப்ரஹ்ம (1–20) ÷ திருமந்திரத்தின் உண்மைப் பொருளை அறிந்து அதன் நிஷ்டையையுமுடைய மஹாநுபாவரை ஆதரிக்கும் இடத்தில் நோய் – பஞ்சம் – திருடர் இவர்கள் நடமாட மாட்டார்கள்( இங்கு நோய் என்பது ஆசை முதலியன. பஞ்சம் என்பது ஞானச் செல்வமின்மை. திருடர்கள் – அஹங்காரம் முதலியன)

1 'दुर्जनः परिहर्तव्यो विद्ययाऽलङ्कृतोऽपि सन् ।
मणिना भूषितः सर्पः किमसौ न भयङ्करः ॥
2 'त्यज दुर्जनसंसर्गं भज साधुसमागमम् ।
कुरु पुण्यमहोरात्रं स्मर नित्यमनित्यताम् ॥
'नासद्भिः किञ्चिदाचरेत् । 196*2
3 'वरं हुतवहज्वालापञ्जरान्तर्व्यवस्थितिः ।
न शौरिचिन्ताविमुखजनसंवासवैशसम् ॥
4 'अद्यप्रभृति हे लोकाः यूयं यूयं वयं वयम् ।
अर्थकामपरा यूयं नारायणपरा वयम् ॥
नास्ति संगतिरस्माकं युष्माकं च परस्परम् ।
वयं तु किंकरा विष्णोः यूयमिन्द्रियकिङ्कराः ॥

1 கெட்ட மனிதன் கல்வியறிவு பெற்றவனாயினும் அவனை விலக்க வேண்டும். பாம்பு படத்தில் இரத்தினமிருப்பதால் பயங்கரமானதன்று என்று கருதி அதை அணுக முடியுமா?

2 பாரா ஆரண் ÷ கெட்டவர்களுடன் சேராதே. ஸாதுக்களை அணுகுவாயாக. பகலும் இரவும் புண்ணியத்தையே செய். உலக வாழ்வின் நிலையற்ற தன்மையை எப்போதும் சிந்தித்துப் பார்.

3 காத்யாயந ஸம். ÷ கொழுந்து விட்டு எரியும் தீப்பிழம்பினுள் வாழ்ந்தாலும் வாழலாம். அதனால் சரீரம் தான் கெடும். ஆனால் எம்பெருமானது சிந்தனையில் ஈடுபடாதவர்களுடன் வாழ்வது ஆத்மாவையும் கெடுத்துவிடும். ஆதலின் முந்தியதே சிறந்தது.

4 வராஹ புரா. ÷ உலகினரே! இன்று முதல் நீங்கள் வேறு. நாங்கள் வேறு. நீங்கள் செல்வத்திலும் இன்பத்திலும் ஈடுபட்டவர்கள். நாங்கள் நாராயணனிடம் ?டுபட்டவர்கள். உங்களுக்கும் எங்களுக்கும் எத்தகைய ஸம்பந்தமும் இல்லை. நாங்கள் பகவானுக்குத் தொண்டு புரியுமவர்கள். நீங்கள் இந்திரியங்களுக்கு அடிமைப்பட்டவர்கள்.

इत्यादिகளைப் பார்த்துப் 'பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற்போல்'[a] இருக்கிற दुर्जन-ஸம்ஸர்க[b]த்தினுடைய दूरपरिहरणार्थ[c]மாக

[1] 'सत्संनिकर्षे परिवर्तितव्यं विद्याधिकाश्चापि निषेवणीया: ।
सवर्णातां गच्छति संनिकर्षात् नील: खगो मेरुमिवाश्रयन् वै ॥

[2] 'सद्भिरेव सहासीत सद्भि: कुर्वीत संगमम् ।
सद्भिर्विवादं मैत्रीं च नासद्भि: किंचिदाचरेत् ॥

इत्यादिகளின்படியே ஸாத்விக–ஸஹவாஸம்[d] कर्तव्य[e]மானால் இது देश–विप्लवादि[f]களாலே கிடையாதிருக்குமாகில்

[3] 'एकान्तशीलस्य दृढव्रतस्य पञ्चेन्द्रियप्रीतिनिवर्तकस्य ।
अध्यात्मयोगे धृतमानसस्य मोक्षो ध्रुवो नित्यमहिंसकस्य ॥

---

a - பாம்போடு ஒரே வீட்டில் வாழ்வது போல்; b - கெட்டவர்களுடன் சேர்க்கை; c - தூரத்தில் விலக்குவதற்காக; d - நல்லோர்களுடன் பழகுதல்; e - அவசியம் செய்யவேண்டி வந்தால்; f - நாட்டில் வரும் குழப்பங்களால்

1 ஸாதுக்களின் அருகிலேயே வாழவேண்டும். கல்வியிற் பெரியோர்களை அண்டவேண்டும். கருமையான பறவை மேரு மலையிலேயே வாழ்ந்து வந்தால் பொன்னிறம் பெற்றுவிடுகின்றது. அவ்வாறே நல்லவர்களின் பழக்கத்தால் சாதாரண மனிதனும் திருந்திவிடுவான்.

2 ஸாதுக்கள் இருக்கும் இடத்திலேயே வாழ வேண்டும். அவர்களுடனேயே பழக வேண்டும். வழக்காடுவதாயினும் நட்பு கொள்வதாயினும் அவர்களுடனேயே செய்ய வேண்டும். துஷ்டர்களுடன் எதையுமே செய்யக் கூடாது.

3 ஏகாந்தமாய் வாழும் தன்மையுடையனாய் உறுதியான விரதம் கொண்டவனாய் ஐந்து இந்திரியங்களுக்கும் மேன்மேலும் உணவளிக்காதவனாய் எம்பெருமானையே சிந்திப்பவனாய் எப்பொழுதும் பிறரைத் துன்புறுத்தாதவனாயுள்ள மனிதன் மோக்ஷத்துக்கு வழி காண்பது உறுதி.

इत्यादिகளில் தாத்பர்யத்தை அறிந்து, [1]'யாவருந் துணை-யில்லை' யென்று यथाशक्ति ஒதுங்கி,

[2]'பணமாடவரணைப் பற்பல காலமும்
பள்ளிகொள் மணவாளர் நம்மை வைத்த பரிசிது'

என்று पर–संकल्प–पारवश्य[a]த்தை अनुसंधित्து

a - எம்பெருமான் ஸங்கல்பத்துக்கு வசப்பட்டுள்ள தன்மையை

1 *வீவன்நின்பசுநிரைமேய்க்கப்போக்கு வெவ்வுயிர் கொண்டென தாவிவேமால், யாவருந்துணையில்லையானிருந்துன்னஞ்சனமேனி யையாட்டம்காணேன், போவதன்றொருபகல்நீயகன்றால் பொரு கயற்கண்ணிணைநீரும்நில்லா. சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோ மாய்ப் பிறந்தவித்தொழுத்தையோம்தனிமைதானே.*

திருவாய் (10-3-3) ÷ கண்ணன் பிரிவைப் பொறுக்காத ஆய்ச்சியர் கூற்று :- பசுக்கூட்டங்களை மேய்ப்பதற்கு நீ செல்வதால் நான் அழிந்து போவேன். என் ஆத்மாவும் வெப்பமான பிராணவாயுவினால் எரிந்து போகும். இவ்வாயர்பாடியில் உன் பிரிவினால் எல்லோரும் வருந்துகின்றனர். ஆதலால் எனக்குத் துணையாவர் எவருமிலர். நீ வரும் போது மை போன்ற உன் திருமேனியைக் காண நான் பிழைத்திருக்கப் போவதில்லை. நீ எங்களை விட்டு விலகினால் ஒரு பகல் என்று நீ சொன்ன பகல் முடிவு பெறாது. மீனோடு பொருகின்ற இருகண்கள் நீர் பெருகின வண்ணமேயிருக்கும். நீ தோன்றின இவ்வாய்ப்பாடியில் நீசரான எங்கட்கு நின் பிரிவு – தனிமை – மரணமேயாகும்.

2 *கணமாமயில்காள் கண்ணபிரான்திருக்கோலம் போன்று,
அணிமாநடம்பயின்றாடுகின்றீர்க் கடிவீழ்கின்றேன்,
பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள்
மணவாளர் நம்மைவைத்த பரிசிதுகாண்மினே.*

நாச்சியார் திருமொழி (10-6) ÷ படமெடுத்து ஆடும் திருவநந்தாழ்வான் மீது எப்பொழுதும் பள்ளிகொண்டுள்ள பெரிய பெருமாள் எனக்குத் தந்த பரிசு (மரியாதை) இது.

[1] 'தாமரைக்கண்ணனோ தனியேன் தனியாளனோ
தாமரைக்கையனோ உன்னை என்றுகொல்
சேர்வதுவே'

என்று இன்னுயிர்த் துணைவனை[a] எம்பெருமானோடே இருக்கிறதை எண்ணிக் கொண்டிருக்கப் ப்ராப்தம்– என்றபடி.

## வாக்யம் – 25

இவனுக்கு गतिचिन्तनादिகள் चित्त–संतोष–हेतुவான काल–यापनம் என்றது–

ப்ரபத்திக்கு गति–चिन्तनादि[b]கள் परिकर–விசேஷமாக[c] வேண்டும் என்று ஒரு விசேஷ–வசனமன்றிக்கேயிருக்க विद्यान्तर–ஸாமாந்யத்தாலே[d] उत्तर–पूर्व–अघ–अश्लेष–विनाश[e]ங்கள், उत्क्रमण–விசேஷம்[f], हान–उपायन–प्रकार[g]ம், अर्चिरादिमार्ग[h]ம், अपवर्ग–दशा–விசேஷம்[i] என்ற இவற்றினுடைய चिन्तन[j]ம்

a - போக்யமான ஆத்மாவுக்கு உற்ற துணைவன். ; b - அர்ச்சிராதிகதியை நினைத்தல் முதலியன; c - விசேஷ அங்கங்கள்; d - மற்ற வித்யையான பக்தியோகம் போல் ப்ரபத்தியும் ஒரு வித்யை என்கிற பொது நீதியால்; e - ப்ரபத்திக்குப் பின் அறியாமல் செய்த பாபங்ள் ஒட்டாமையும் முன் செய்த பாபங்கள் நசிப்பதும்; f - சரீரத்தினின்று ஜீவன் கிளம்புவதில் உள்ள விசேஷம்; g - கர்மங்களை விடும் முறையும் அவற்றைப் பகைவர்களும் நண்பர்களும் வாங்கிக் கொள்ளும் முறையும்; h - அக்நி முதலியவர் ஜீவனை வழி நடத்திச் செல்லும் முறை; i - மோக்ஷத்தில் பெறும் சிறப்புக்கள்; j - நினைத்தல்

1 பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ,
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ,
தாமரைக்கண்ணனோ தனியேன்தனியாளனோ,
தாமரைக்கையனோ உன்னையென்றுகொல்சேர்வதுவே.

திருவாய்மொழி (7–6–1) ÷ மூவுலகையும் படைத்த உன் திருவுந்திக் கமலத்தையும் மூவுலகையும் அளந்த திருவடித் தாமரையையும் மலர்ந்த தாமரைத்திருக்கண்களையும் தாமரைத் திருக்கையையும் உன்னை யன்றி வேறு கதியற்ற அடியேன் நின்று கண்டுகளிக்கும்படி உன்னை நான் என்று சேருவது? என்கிறார் ஆழ்வார்.

ப்ரபத்திக்கு அங்கமாகக் கொள்ளவேண்டுமோவென்று ஊஹித்துப் பார்த்தால் कण्ठोक्त[a]மான अङ्गपञ्चकத்தையும், தத்த்வ வித்து[b]க்கு முமுக்ஷுत्व–प्राप्त[c]மான स्वतन्त्र–कर्तृत्वादि–बुद्धि–विशेष–त्याग[d]த்தையும் ஒழிந்தவற்றில்

'प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा न विद्यते ।'[150*2]

என்றதற்கு सङ्कोचक[e]ம் இல்லாமையாலும்

[1] 'மாகவைகுந்தம் காண்பதற்கு என்மனம்
ஏகமெண்ணு மிராப்பகலின்றியே'

इत्यादिகள் उपाय–उपकारक[f]ங்கள் அல்ல என்று உபேக்ஷிக்கப் பார்த்தாலும்[g] விலக்கவொண்ணாதபடி மநஸ்ஸுக்கு स्वतः–प्राप्त[h] விஷயத்தில் பிறந்த प्रावण्य–अतिशय[i]த்தைச் சொல்லுகின்றனவாகையாலும் இப்படியிருக்கிற गति– चिन्तनादिகள்

**a** - சாஸ்த்ரத்தில் வெளிப் படையாகக் கூறப்பட்ட; **b** - தத்துவங்களை நன்கு அறிந்தவன்; **c** - மோக்ஷத்தை விரும்புவதால் அவசியமாக ஏற்பட்ட ; **d** - 'நான் சுதந்திரமாகச் செய்கிறேன்' என்பது முதலிய எண்ணங்களைக் கைவிடுதல்; **e** - சுருக்கிப் பொதுநீதிக்கு விலக்கு அளிக்கும் ப்ரமாணம்; **f** - ப்ரபத்திக்குத் துணை செய்வனவல்ல; **g** - புறக்கணித்துவிட நினைத்தாலும்; **h** - இயற்கையில் நமக்கு எம்பெருமானிடம் ஏற்பட்ட; **i** - ஈடுபாட்டின் மிகுதியை

2 *ஆகம் சேர்நர சிங்கம தாக, ஓர்*
*ஆகம் வள்ளுகிரால் பிளந்தா னுறை*
*மாக வைகுந்தம் காண்பதற்கு, என் மனம்*
*ஏக மெண்ணும் இராப்பக லின்றியே.*

திருவாய்மொழி. – 9–3–7 ÷ (ஆழ்வார் பரமனையும்பரமனையே சிந்திப்பதையும் கேட்டதற்கிணங்க மனம் ஒத்துழைத்ததைக் கூறுகிறார்) நர உருவும் சிங்க உருவும் ஒன்று சேர்ந்த திருமேனியுடையனாய், பிளக்க மாட்டாத கடினமான அவுணனுடலைத் தன் கூரிய நகத்தால் பிளந்தவனாய் உறைகின்ற பரமாகாசமான வைகுந்தத்தைக் கண்டனுபவிப்பதற்கு இரவு பகல் என்ற பேதமின்றி எப்போதும் என் நெஞ்சு ஒரே விதமாக நினைத்து வருகிறது.

[1] 'द्वयमर्थनुसंधानेन सह सदैवं वक्ता ।
यावच्छरीरपातमत्रैव श्रीरङ्गे सुखमास्स्व ॥'

[2] 'आराधयन् हरिं भक्त्या गमयिष्यामि वासरान् ।

[3] 'சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல்
சூழ்வினையி னாழ்துயரை என்நினைந்து
போக்குவரிப்போது'

इत्यादिகளிற்படியே விரஹிணீ–வ்ருத்தாந்த–ந்யாயத்தாலே[a] चित्त–संतोष–हेतु[b]க்களுமாய் उचितமான போதுபோக்குமாயிருக்கும் – என்றபடி.

---

a - நாயகனைப்பிரிந்த நிலையில் மனைவி அவனைப்பற்றிய எண்ணங்களைக் கொண்டு மகிழ்வது போல்; b - மனமகிழ்ச்சிக்குக் காரணமாய்

1 சரணாகதி கத்யம் சூர். – 19 ÷ ப்ரபந்நனை நீ த்வயத்தின் அர்த்தங்களைக் கீழ்க்கூறியவாறு தெளிவாய் நினைத்துக் கொண்டு எப்பொழுதும் த்வயத்தையே சொல்லிக் கொண்டு இச் சரீரம் உள்ள வரை ஸமீபத்தில் என்னை ஸேவிப்பதற்கு ஏற்றவையாய் பாகவதர்களுக்கு உகந்தவையான திருவரங்கம் முதலிய க்ஷேத்ரங்களில் கவலையற்றவனாய் வரப் போகும் பலனில் உறுதிகொண்டவனாய் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து கொண்டிரு.

2 स्वार्जितैः गन्धपुष्पाद्यैः शुभैः शक्त्यनुरूपतः ।
आराधयन् हरिं भक्त्या गमयिष्यामि वासरान् ॥

வங்கீபுரத்து நம்பி காரிகை (36) ÷ என் சக்திக்குத் தக்கபடி என்னால் ஸம்பாதிக்கப்பட்ட நல்ல சந்தனம், புஷ்பம் முதலியவற்றால் எம்பெருமானைப் பக்தியுடன் ஆராதித்துக் கொண்டே நாட்களைப் போக்குவேன்.

3 கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான்
பார்கலந்தவல்வயிற்றான் பாம்பணையான் – சீர்கலந்த
சொல்நினைந்துபோக்காரேல் சூழ்வினையினாழ்துயரை
என்நினைந்து போக்குவரிப்போது.

பெரிய திருவ(86) ÷ எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லும் ஸ்ரீஸூக்திகளை நினைத்துக் கொண்டு ஆத்மாவைச் சூழ்ந்திருக்கும் கர்மத்தால் உண்டான துக்கத்தை ஜநங்கள் போக்கிக் கொள்ளவேண்டும். அப்படிச் செய்யாவிடின் இந்தஸம்ஸாரத்தில் எதை நினைத்துக் கொண்டு அந்தத் துக்கத்தைப் போக்கிக் கொள்ள முடியும்?

[1] 'समीपं राजसिंहस्य रामस्य विदितात्मनः ।
संकल्पहयसंयुक्तैः यान्तीमिव मनोरथैः ॥
[2] 'नैषा पश्यति राक्षस्यो नेमान् पुष्पफलद्रुमान् ।
एकस्थहृदया नूनं राममेवानुपश्यति ॥
इत्यादिकளை இங்கே अनुसंधिப்பது.

## வாக்யம் - 26

चातक-वृत्तियான இவனுக்கு अन्तिम-प्रत्ययம் स्व-यत्न-साध्यமன்று என்றது-

अन्तिम-प्रत्यय-विशेष-अनुगुण[a]மாகப் फल-विशेष-सिद्धियென்று [3]अष्टम-अध्यायத்தில் அருளிச்செய்த ப்ரகாரத்தை நினைத்து நமக்கு प्राप्य-விஷயத்தில்[b] अन्तिम-प्रत्ययத்தை நாமே साधिக்க வேண்டுமென்று நினைத்திருக்க வேண்டாம்.

a - கடைசிக் காலத்தில் வரும் நினைவுக்குத் தக்கவாறு; b - அடைய வேண்டிய பலன் விஷயத்தில்

1 ராமா. ஸு‍ந். - 19-7 ÷ தன் கடமையறிந்த இராமபிரானது ஸமீபத்தை இப்பொழுதே மனவுறுதியாகிய குதிரைபூட்டிய தன் மனோரதமாகிய (இராமனை அடைய ஆசை) தேரில் ஏறிக் கொண்டு செல்பவள் போலுள்ள பிராட்டி.

2 ராமா. ஸு‍ந். - 16-25 ÷ அசோகவனத்தில் இருக்கும் ஸீதை ராக்ஷஸிகளைக் காண்பதில்லை. பூக்களும் பழங்களும் நிறைந்த மரங்களையும் பார்ப்பதில்லை. இராமன் ஒருவனிடமே மனம் வைத்து அவனையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். இது உறுதி.

3 கீதை - 8-6 ÷ மரண காலத்தில் எந்த எந்தத் தன்மையை நினைத்துக்கொண்டு சரீரத்தை விடுகிறானோ, மரணத்துக்குப் பிறகு அந்த அந்தத் தன்மையையே அடைகிறான்.

1 'स्थिते मनसि सुस्वस्थे शरीरे सति यो नरः ।
धातुसाम्ये स्थिते स्मर्ता विश्वरूपं च मामजम् ॥
ततस्तं म्रियमाणं तु काष्ठपाषणसन्निभम् ।
अहं स्मरामि मद्भक्तं नयामि परमां गतिम् ॥
2 'ज्ञानसमकालमुक्त्वा कैवल्यं याति गतशोकः ।
तीर्थे श्वपचगृहे वा नष्टस्मृतिरपि परित्यजन् देहम् ॥
3 'शरीरपातसमये तु केवलं मदीययैव दयया अतिप्रबुद्धः
मामेव अवलोकयन् अप्रच्युतपूर्वसंस्कार मनोरथः ॥ '

1 வராஹ சரம சுலோகம் ÷ மனம் நல்ல நிலேயில் இருக்க, சரீரமும் சாஸ்த்ரார்த்தங்களை அறிந்து மோக்ஷத்தை விரும்புவதற்கு ஏற்றவாறு தளர்ச்சியடையாதிருக்க, சரீரத்தில் தாதுக்களும் ஸமமான நிலேயில் இருக்க, எந்த மனிதன் உலகத்தைச் சரீரமாகவுடையனும் கர்மத்தால் வரும்பிறப்பு இல்லாதவனுமான என்னேச் சரணமடைந்து நினைக்கிருனே, அவன் இறக்கும் போது கட்டையையும் கல்லேயும் போல் செயலற்றுக் கிடக்கின்ற என் பக்தனை அவனேப் பற்றி நானும் நித்யானுபவம் கொடுக்க நினேக்கின்றேன். அவன் மோக்ஷத்தை அடையும்படி செய்வேன்.

2 வராஹ புரா ÷ நல்ல ஜ்ஞாநம் உண்டாகும் காலத்தில் இம்மந்த்ரத்தை அநுஸந்திக்கும் ப்ரபந்நன் புண்யதீர்த்தத்திலோ நாய் மாம்ஸம் தின்பவன் வீட்டிலோ நினைவிழந்து மரணமடைந்தாலும் மோக்ஷத்தை அடைவான்.

3 சரணுகதி கத்யம். ÷ சரீரம் சரியும் காலத்தில் உன் முந்திய பழக்கத்தையோ தற்காலத்திய முயற்சியையோ எதிர்பார்க்காமல் எனக்கு இயற்கையாய் அமைந்த கருணையாலேயே முந்திய நிலேயில் போல் பரிபூர்ண ஜ்ஞாநமுடையவனுய்த் தினந்தோறும் சிந்திக்கப்–பட்ட திவ்யமங்கள விக்ரஹத்துடன் கூடிய என்னேயே தெளிவாய் நீ அநுஸந்தித்துக் கொண்டு 'பகவானே உயர்ந்த பலனுவான்' என்று முன்பு சாஸ்த்ர ஜ்ஞாநத்தால் ஏற்பட்ட அநுபவ வாஸனேயையும் அதன் மூலமாய் வந்த பகவதநுபவத்தில் பேரவாவையும் இழவாதவனுய் ப்ரக்ருதி மண்டலத்தை விட்டுப் பரமபதத்தை அடைந்து எனக்கு நித்ய கைங்கர்யம் செய்யப் போகின்றுய்.

[1] 'எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும்
நானுன்னை
நினைக்கமாட்டேன் அப்போதைக்கிப்போதே
சொல்லிவைத்தேன்'

इत्यादिகளிற்படியே பகவத் க்ருபையாலே அதுவும்[a] தானே வந்ததாகில் காண்கிறோம் என்று परम–फल[b]த்திற்போலே अन्तिम–प्रत्ययத்திலும் निर्भर[c]னாய்

[2] 'यं योगिन: प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति ।

என்கிற க்லேசத்தை விட்டுச் चातकवृत्ति[d]யாய் कृष्ण–मेघ[e]த்தினுடைய க்ருபா ரஸத்தைப் பார்த்திருக்கை उचितம் என்றபடி.

'सत्वस्थान् निभृतं प्रसादय ।'[91-2]

என்கிற श्लोकத்தின் தாத்பர்யத்தையும் இங்கே अनुसंधिப்பது.

a - மரணகாலத்தில் பக[illegible]னைப் பற்றிய நினைவும்; b - மோக்ஷத்தில் போலே; c - பொறுப்பு நீங்கியவனாய்; d - மழையை எதிர்பார்க்கும் சாதகம் போல் மோக்ஷத்தை எதிர் பார்ப்பவனாய்; e - கரிய முகில் வண்ணனை கண்ணனுடைய;

1 துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத் துணையாவரென்றேஒப்பிலேனாகிலும்நின்னடைந்தேன் ஆனைக்கு நீயருள்செய்தமையால் எய்ப்பென்னைவந்துநலியும்பொதங்கேதும் நானுன்னைநினைக்கமாட்டேன் அப்போதைக்கிப்போதேசொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே.

பெரியாழ்வார் திருமொழி (4–10–1) ÷ திருவரங்கப் பெருமானே' என் மரணகாலம் நெருங்கி இளைப்பு வரும் காலத்தில் உன்னைத் தியானிக்க முடியாதவனாவேன். அந்தக் காலத்துக்காக இப்போதே விண்ணப்பம் செய்து கொண்டேன்.

2 यं योगिन: प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति ।
स तं पुरस्ताद्धरिमीक्षमाण: प्राणान् जहौ प्राप्तफलो हि भीष्म: ॥

பார. சாந்தி. (46–139) ÷ யோகிகள் தாம் உயிரை விடும் காலத்தில் மிக முயன்று தம் மனத்தில் தியானித்துக்குக் கொண்டு வரும் எம்பெருமானைப் பீஷ்மர் தம் கண் முன்னே பார்த்துக் கொண்டே உயிர் துறந்தார். உபாஸநத்தின் பயனை அடைந்தவரல்லரோ அவர்!

**வாக்யம் – 27**

இப்படி க்ஷண–कृत्यமான ஆத்ம–ஸமர்ப்பண–யாகத்திற்கு भगवत्–संकल्य–साध्यமான देह–அவஸாநம் अवभृथம் என்றது–

ந்யாஸ विद्ये[a]யில் விதிக்கப்பட்ட ஆத்ம–ஸமர்ப்பண–யாகம்[b] ஸாங்கமாக सकृत्–कर्तव्य[c]ம் என்று ப்ரமாண ஸித்தமாகையாலும்

[1] 'एवं शरणमभ्येत्य भगवन्तं सुदर्शनम् ।
अनुष्ठितक्रतुशतो भवत्येव न संशयः ॥

इत्यादिகளிற்படியே उत्तर–अनुवाक[d]ம் पूर्वोक्त–प्रपत्ति–फलத்தைப் பற்றக் कर्तव्य–शेष[e]மில்லையென்று தோற்றுகைக்காக सर्व–कर्तव्य[f]ங்களும் இவனுக்குத் தாமே संपन्न[g]ங்களென்று प्रशंसि[h]க்கிறதாகையாலும் இவனுக்கு மரணத்தை अवभृथ[i]மென்று சொன்னதுக்கு இந்த यागத்துக்கு வேறோர் अवभृथமில்லை,

---

**a** - உபநிஷத்தில் ப்ரபத்தியை விளக்கும் இடத்தில்; **b** - ஆத்மாவை ஸமர்ப்பித்தலென்னும் யாகம்; **c** - ஒரு முறை செய்ய வேண்டியது; **d** - உபநிஷத்தில் ப்ரபத்தியை விதிக்கும் அநுவாகத்திற்கு அடுத்த அநுவாகம்; **e** - செய்ய வேண்டிய மீதிகாரியம்; **f** - செய்ய வேண்டிய அனைத்தும்; **g** - பூர்த்தியாகிவிட்டன; **h** - புகழ்கின்றது; **i** - யாகமுடிவில் செய்ய வேண்டிய ஸ்நாநம்;

அஹிர்பு– 37–49 ÷ இப்படிக் காண அழகியவனான எம்பெருமானைச் சரணமடைந்தவன் நூறுவேள்விகளைச் செய்தவனாவான் என்பதில் ஐயமில்லை.

[1] 'சரணமாகுந் தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்'
என்கிறபடியே देह–पात–अनन्तर[a]ம் दिव्य–लोक–प्राप्ति[b]யுண்டாம் என்கிறபடியே तात्पर्यமல்லது அது[c] இவனுக்கு स्वयं–अनुष्ठेय[d]மன்றிக்கே भगवत्–संकल्प–मात्रத்தாலே ஒரு காலத்திலே
[2] 'कृतकृत्याः प्रतीक्षन्ते मृत्युं प्रियमिवातिथिम् ।
என்று கண்டிருக்கக் கடவ[e] மரணத்தை இவனுக்கு ஒரு कर्तव्य[f]மாக विधिத்தல், தானே வருகிற மரணத்திலே अवभृथ–दृष्टि[g] பண்ண विधिத்தல் செய்கிறதன்று – என்றபடி.

## வாக்யம் – 28

सदाचार्य–परिग्रहத்திற்கு முன்புள்ள அநாதிகால மெல்லாம் ஒரு காளராத்ரி என்றது –

a - சரீரம் கழிந்தவுடன்; b - பரமபதத்தையடைதல்; c - மரணத்தை அவப்ருதமாகச் சொன்னது; d - செய்யக்கூடியது; e - எதிர் பார்த்திருக்க உரிய; f - செய்யவேண்டிய செயலாக; g - யாகத்தின் முடிவில் செய்யும் அவப்ருதஸ்நாநமாகக் கருதுதல்

1 சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்
அரணமைந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் தனதன்பர்க்கன்பாகுமே.
திருவாய் (9–10–5) ÷ தன் திருவடிகளில் சரணாகதி செய்பவர்கள் அனைவருக்கும் எல்லா வகையிலும் ரக்ஷகனை எம்பெருமான் அவர்கள் சரீரம் கழிந்தவுடன் தன் பரமபதத்தைக் கொடுத்து அநுபவிக்கச் செய்வான். இப்படித் தன்னிடம் அன்பு கொண்ட அடியார்கள் விஷயத்தில் தான் அன்பு உருக்கொண்டவனாகவேயுள்ளான்.

2 प्रायेणाकृतकृत्यवात् मृत्योरुद्विजते जनः ।
कृतकृत्याः प्रतीक्षन्ते मृत्युं प्रियमिवातिथिम् ॥
இதி - ஸமு. (6–37) ÷ கடமையான ப்ரபத்தியைச் செய்யாதவர்கள் நரகம் வருமோ வென்று நினைத்துச் சாவுக்குப் பெரும்பாலும் அஞ்சுகின்றனர். ப்ரபத்தியைச் செய்து முடித்தவர்களோ மரணத்தைப் பிரியனை விருந்தாளியைப் போல் நினைத்து வரவேற்கின்றனர்.

'अचेतना परार्था च नित्या सततविक्रिया ।
त्रिगुणा कर्मिणां क्षेत्रं प्रकृतेः रूपमुच्यते ॥[89*3]

1 'दारुण्यग्निर्यथा तैलं तिले तद्वत् पुमानपि ।
प्रधानेऽवस्थितो व्यापि चेतनात्माऽऽत्मवेदनः ॥

2 'देहयोगाद्वा सोऽपि

3 'तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् ॥

इत्यादिகளிற்படியே அநாதிகாலமாக ஆமோக்ஷாத் कर्ममूल-त्रिगुण-द्रव्य-रूप-तिरस्करिणी-संवृत[a]னாய் बीज-अङ्कुर-न्याय[b]த்தாலே சங்கிலித்துவக்காய்ப் போருகிற अपचार-प्रवाहத்தாலே இருள் தருமாஞாலத்துள்ளே[c] இருந்து எட்டும் இரண்டுமான[d] இக் கட்டளையறியாதே[e] ஸ்வயம் ப்ரகாசனான தன்னுடைய आकारங்களையும் காணமாட்டாதே எஞ்ஞான்றும் எங்கும்

---

**a** - கர்மத்தால் வந்த ப்ரக்ருதியென்னும் திரையால் மறைக்கப்பட்டவனாய்; **b** - முளை முதலா விதை முதலா என அறியமுடியாத அநாதி நிலையைக் காட்டும் நீதி; **c** - அஞானத்தைத் தரும் பெரிய ஸம்ஸாரமண்டலத்துள்; **d** - திருமந்திரமும் த்வயமும் (சரமசுலோகமும்) ஆகிய; **e** - இம்முறையை

1 விஷ்ணு புரா. (2-7-28) ÷ மரத்தினுள் தீப்போலவும் எள்ளினுள் எண்ணெய்போலவும் ஜீவாத்மா அசேதநமான சரீரத்தினுள் புகுந்து எங்கும் செல்ல வல்லவனாய்ஞானமுடையனாய்த் தானே தன்னை அறிபவனாயுள்ளான்.

2 ப்ரஹ்ம ஸூ. (3-2-5) ÷ ஜீவனது இயற்கையான ரூபம் ஸம்ஸாரதசையில் பரமாத்ம ஸங்கல்பத்தால் மறைந்துள்ளது. அந்த மறைவு ஸ்ருஷ்டி காலத்தில் சரீரமாக மாறுபட்ட அசேதநத்தின் ஸம்பந்தத்தாலும் ப்ரளயதசையில் ஸூக்ஷ்ம நிலையுள்ள அசேதநத்தின் ஸம்பந்தத்தாலும் வருகின்றது.

3 ப்ரஹ்ம ஸூ. (3-1-1) ÷ ப்ரஹ்மஜ்ஞாநமின்றி யாகம் தானம் முதலிய புண்ணிய கர்மங்களை மட்டும் செய்பவன் வேறு சரீரத்தைப் பெறும்போது பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மமான அம்சங்களின் தொடர்புடனேயே செல்கின்றான். ஏனெனில் - சுவேதகேதுவை ப்ரவாஹணன் இவ்விஷயங்களைப் பற்றிக் கேட்ட கேள்வியாலும் சுவேதகேது கூறும் விடையாலும் இவ்வம்சம் தெளிவுபடுவதால்.

ஒழிவற நிறைந்து நின்று நித்ய-ஆஸந்நமான[a] निरपाय-महानिधि[b]யையும் காணப்பெறுதே प्रकाश–प्रवृत्ति–शून्य[c]த்தை யாலே காளராத்ரி-கல்பமான[d] अनादिकालமெல்லாம் अनादि[e]மாயையாலே सुप्त[f]ஞய்க் கிடக்கிற ஆத்மாவுக்கு இவ் अवस्थै கழிந்து பகல் காண்கைக்காக आचार्य–परिग्रह[g]ம் अरुणोदय[h]ம் போலே தோன்றுகிறதாகையாலே

[1] 'गुशब्दस्त्वन्धकारः स्यात् रुशब्दस्तन्निरोधकः ।
अन्धकारनिरोधित्वात् गुरुरित्यभिधीयते ॥

[2] 'आचिनोति हि शास्त्रार्थान् आचारे स्थापयत्यपि ।
स्वयमाचरते यस्मात् तस्मादाचार्य उच्यते ॥

इत्यादिளிற்படியே இவ்விருளை நீக்கவல்ல ஞானச்சுடர் விளக்கைத் தந்து நல்வழி காட்டின परम–उपकारकன் திறத்திலே

[3] 'ब्रह्मविद्याप्रदानस्य देवैरपि न शक्यते ।
प्रतिप्रदानमथवा दद्यात् शक्तित आदरात् ॥

என்றபடியே नित्य–ऋणि[i]யாய்,

a - எப்பொழுதும் அருகிலுள்ள; b - அழியாத பெரும்புதையல்; c - ஞானமும் செயலும் இல்லாமையாலே; d - பயங்கரமான இராத்ரி போன்ற; e - அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்; f - உறங்கியவனாய் (அறிவிழந்தவனாய்); g - ஆசார்யன் ஏற்றுக் கொள்ளல்; h - ஸூர்யனுக்கு முந்தி அருணன் உதித்தல் (விடியற்காலம்); i - எந்நாளும் கடன்பட்டவனாய்;

1 கு எனுஞ்சொல் இருளைக் கூறும். ரு என்பது அதைத் தடுக்குமதைக் கூறும். அஞ்ஞானவிருளை ஒழிப்பதால் ஆசார்யன் குரு எனப்படுகிறான்

2 சாஸ்த்ரங்களின் கருத்துக்களை எடுத்துச் சிஷ்யன் உள்ளத்தில் வைத்து அவனை நல்ல ஆசாரத்தில் நிலைநிறுத்தித் தானும் அநுஷ்டித்து வருமவன் ஆசார்யன் எனப்படுவான்

3 சாண்டில்யஸ்ம்ருதி – 1–117 ÷ ப்ரஹ்மவித்யையை உபதேசித்த ஆசார்யனுக்குக் கைம்மாறு செய்வது தேவர்களாலும் முடியாது ஆயினும் சிஷ்யன் அன்போடு சக்திக்கு ஏற்றவாறு ஏதாவது ஸமர்ப்பிக்க வேண்டும்.

[1] 'என்னைத் தீமனங்கெடுத்தா யுனக்கென்செய்கேன்'
என்கிற நினைவு குலையாதே
[2] 'अत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयम् ।
என்றிருக்கப் प्राप्तம்– என்றபடி.

### வாக்யம் – 29

பின்பு देह– அவஸாநத்தளவும் நல்விடிவு என்றது– இப்படி फल–மூலமான[a] आचार्य–परिग्रहம் பிறந்ததாகில் அத்தால் अस्थि–स्थूणादि–लक्षण–शरीर–कारागृह[b]ம் விழுமளவும் प्रारब्ध–கர்ம–விசேஷங்களாலே[c] अज्ञान–अन्धकार–லேச–மிச்ரனாய்[d] நடந்தாலும் सदाचार्य–प्रसाद[e]த்தாலே ஜ்ஞாந–வைராக்ய–பக்திகள் பூப்போலே தாமே விகஸிச் ...

---

a - மோக்ஷத்துக்கு முதற்காரணமான; b - எலும்பென்னும் தூண் முதலியவை களையுடைய சரீரமென்னும் சிறை; c - பலன் கொடுக்கத் தொடங்கிய; d- அஞ்ஞானமென்னும் இருளின் சிறு பகுதியுடன் கலந்தவனாய்; e - அநுக்ரஹத்தாலே

1 வாமனனென்மரதகவண்ணன் தாமரைக் கண்ணினன்
காமனைப்பயந்தாய் என்றென்றுன்கழல்பாடியேபணிந்து
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க, என்னைத்
தீமனங்கெடுத்தாயுனக்கென்செய்கேன்என்சிரீதரனே.

திருவாய் (2–7–8) ÷ ஸ்ரீமானான எம்பெருமானே! என் மனத்தை உன் திருவடிகளையன்றி வேறொன்றையும் அறியாதவாறு செய்தாய். உனக்கு அடியேன் எத்தகைய கைம்மாறு செய்ய முடியும்!

2 तस्मै नमो मधुजिदङ्घ्रिसरोजतत्त्वज्ञानानुरागमहिमातिशयान्तसीम्ने ।
नाथाय नाथमुनयेऽत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयम् ॥

ஆள. ஸ்தோ. (2) ÷ ஜ்ஞாநம் பக்தி முதலியவற்றை எனக்கு உண்டாக்கியதால் மோக்ஷத்திற்கு முன்பும். மோக்ஷத்தில் அநுபவிக்க உரியவையாயும் பழய மஹோபகாரத்தைச் செய்தனவாயும் இருப்பதால் மோக்ஷம் பெற்றபின்பும் எவருடைய திருவடிகளே உபாயமாகவும் பலனாகவும் காப்பனவாகவும் உள்ளனவோ, அந்த நாதமுனிகளை வணங்குகின்றேன்.

மையும். இத்தாலே தனக்கு வருகிற ஆமோத[a]த்தையும் அநுபவித்துக் கொண்டு प्रबुद्ध[b]னைப் பல சிற்றின்பம் காட்டிப் படுகிற[c] படுக்கையினின்றும்[d] எழுந்திருந்து

'निःसंशयः सुखमास्व [26*1]

என்கிறபடியே प्रतिष्ठित–बुद्धि[e]யாயிருந்து

[1] 'अनयाऽहं वशीभूतः कालमेतं न बुद्धवान् ।
उच्चमध्यमनीचान्तां तामहं कथमाश्रये ॥
अपेत्याहमितो गत्वा संश्रयिष्ये निरामयम् ।
अनेन साम्यं यास्यामि नानयाऽहमचेतसा ॥
क्षमं मम सहानेन नैकत्वमनया सह ।

इत्यादिகளிற்படியே மேல் வருகிற ஸர்வ–அநிஷ்ட–நிவ்ருத்தியையும்[f], निरतिशय–महानन्द–रूप–इष्टप्राप्ति[g]யையும் பார்த்து இறையுள்ளில்[h] ஒடுங்கி இருக்கப் प्राप्तம் – என்றபடி.

a - மகிழ்ச்சியையும்; b - நல்லுணர்ச்சி பெற்றவனை; c - துன்புறுத்துகின்ற; d - ப்ரக்ருதியாகிய படுக்கை; e - நிலைபெற்ற எண்ண முடையனை; f - கர்மங்கள் முதலிய அநுஷ்டங்களெல்லாம் நீங்குதலையும்; g - மிக உயர்ந்த மோக்ஷாநந்தமென்னும் இஷ்டத்தை அடைதலையும்; h - மநஸ் வாக்கு காயம் எனும் முக்கருவிகளையும் எம்பெருமானிடமே ஈடுபடுத்தி

1 பார சாந்தி – 30–38,39 ÷ இந்த ப்ரக்ருதிக்கு நான் வசப்பட்டவனாய் வீணாய்க் கழிந்த காலம் எவ்வளவென்று அறிய முடியவில்லை. உயர்ந்த தேவ சரீரத்தையும் நடுத்தரமான மநுஷ்ய சரீரத்தையும் தாழ்ந்ததான விலங்கு தாவரம் முதலிய சரீரத்தையும் தரும் இந்த ப்ரக்ருதியில் நான் எவ்வாறு வஸிப்பேன்? இதை விட்டு விலகித் துன்பக் கலப்பற்ற எம்பெருமானை அடையப் போகின்றேன். போகத்தில் இந்த எம்பெருமானுக்கு ஸமமாக ஆவேன். அசேதநமான இந்த ப்ரக்ருதியுடன் சேரமாட்டேன். அவனோடு சேருவதே எனக்கு ஏற்றதாகும். இத்தோடு சேருவது நல்லதன்று.

**வாக்யம் - 30**

மேல் முமுக்ஷ ஸ்வச்ச்ந்த- கைங்கர்ய-மஹோத்ஸவ-திவஸம் என்றது -

முமுக்ஷுவாய்[a] कृतकृत्य[b]னை ஆத்மாவை ஓர் आकर[c]த்தினின்றும் எடுத்த மஹாரத்நத்தின் மண்பற்றையைக் கழற்றுமா போலே स्थूल-सूक्ष्म-प्रकृति-संबन्ध[d]த்தை கழித்து सर्वतोमुख[e]மான ப்ரகாசத்தை[f] உண்டாக்கி श्रीकौस्तुभத்தைப் போலே हृद्य[g]னுக்குவதற்காக அடியிலே மீளா அடைக்கலம்[h] கொண்டருளின श्रिय:-पति திருவடிகளிலே அவன் தன்னைப் போலே देश-कालादि-परिच्छेद[i]மின்றிக்கே इच्छा-विघात[j]முமின்றிக்கே இருப்பதாய்

[1] 'सायुज्यं प्रतिपन्ना ये तीव्रभक्तास्तपस्विन: ।
किङ्करा मम ते नित्यं भवन्ति निरुपद्रवा: ॥

a - மோக்ஷத்தை விரும்புமவன்; b - ப்ரபத்தியைச் செய்து முடித்தவன்; c - இரத்தினம் உண்டாகும் இடம்; d - சரீர வடிவு கொண்ட ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தை; e - எல்லாவற்றையும் உணருகின்ற; f - ஜ்ஞாந மலர்ச்சியை; g - மார்பில் அணிய உரியது (மனத்துக்கு உகப்பானவன்); h - திருப்பித் தரமுடியாத காக்கப்பட உரிய வஸ்து; i - தேசம் காலம் முதலியவற்றில் வரையறை; j - நினைத்ததைப் பெறுவதில் தடை

1 பரமஸம் - 30-94 ÷ மிக்க ஆவல்கொண்டு பக்தி யோகத்தைச் செய்பவர்களும் சிறந்த தவமாகிய ப்ரபத்தியைச் செய்பவர்களும் மோக்ஷத்தையடைந்து எனக்கு எப்போதும் கைங்கர்யம் செய்து கொண்டிருப்பார்கள். அவர்கள் கர்ம பூமிக்குத் திரும்புவதில்லை.

[1] 'भवन्तमेवानुचरन् ।

इत्यादि प्रमाण-संप्रदाय-सिद्धமான கைங்கர்ய-மஹோத்ஸவத்துக்கும

[2] 'मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ।

भवन्तमेवानुचरन् निरन्तरं प्रशान्तनिश्शेषमनोरथान्तरः ।
कदाऽहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः ॥

ஆள. ஸ்தோ. (46)÷ எம்பெருமானே! எனக்குப் பலனும் உபாயமாயும் ஆவதற்கு வேண்டிய ஸகல குணங்களுடனும் கூடிய உன்னையே அந்தந்த நிலைமைக்கு ஏற்றபடி இடைவிடாது எப்பொழுதும் ஸேவித்துக் கொண்டு மற்ற எந்த விஷயத்திலும் ஆசை உன்னால் ஒழியப் பெற்றவனாய் உனக்கே எப்பொழுதும் கைங்கர்யம் செய்து கொண்டு வாழ்க்கையில் சிறந்த நாதனைப் பெற்றவனாய் அடியேன் எப்பொழு உன்னை மகிழ்விப்பேன்?

கீதை (8-16) ÷ ப்ரஹ்மாண்டத்துக்குள் அடங்கிய ப்ரஹ்மலோகம் வரை உள்ள லோகங்கள் போகங்களுக்கும் செல்வத்துக்கும் உறைவிடமாயிருந்து அழிந்துகொண்டேயிருப்பன. ஆதலின் ப்ரஹ்மலோகம் வரை உள்ள ஐச்வர்ய நிலையை அடைந்தபோதிலும் அந்த ஸ்தாநங்கள் அழிவனவாதலால் அவர்களும் இக்கர்ம பூமியில் மறுபடி வந்து பிறக்க வேண்டியவர்களேயாவர். எல்லாம் அறிந்தவனாய் நினைத்ததை முடிக்கவல்லவனாய் எல்லா உலகங்களின் படைப்பு காத்தல், அழித்தல் இவற்றை லீலையாகக் கொண்டவனாய் பரமகாருணிகனாய் எப்பொழுதும் ஒரே தன்மையனாயுள்ள என்னை அடைந்தவர்க்கு அழிவு என்ற பேச்சே இல்லாமையால் இங்கு மறுபடி வந்து பிறப்பதற்கே இடமில்லை.

[1] 'मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥

इत्यादிகளிற்படியே अपर–सन्ध्यै[a] யில்லாதபடி ஒருகால் விடிந்த திவஸமாகிய[b] यथावस्थित–आत्म–स्वरूप–आविर्भाव[c] த்துக்கும் மூலம் उदय–अस्तमय[d] ங்களும் उपराग[e] முமின்றிக்கே अनपाय–प्रभा–अन्वित[f] ஞை अपरिच्छिन्न–आदित्य[g] னென்று अनुसंधित्து அவனுடைய नित्य–उदय[h] மே தனக்கு नित्य–अभ्युदय[i] மாக நிரூபித்துக் கொண்டிருக்கப் प्राप्तம்– என்றபடி.

'ஈச்வரனுக்கு आत्म–प्राप्ति[j] உண்டு, ஆத்மாவுக்கு ईश्वर–प्राप्ति[k] –யில்லை' என்றும் 'பேறும் இழவும் இரண்டும் அவனதே'[l] என்றும் இந்தப் ப்ரகாரத்தில் சொல்லும் வார்த்தைகளுக்கெல்லாம் पर–शेषैक–रस[m] ஞை தனக்கு अपवर्ग–दशै[n] யில் வரும் அதிசயமும்[o] ஸர்வசேஷிக்குப் पुरुष-अनुराग-परिलादिवत्-

---

a - பிற்பகல்; b - ஒரே பகற்பொழுது; c - ஆத்மாவின் இயற்கையான ஸ்வரூபம் தோன்றுவது; d - உதிப்பதும் அஸ்தமிப்பதும்; e - க்ரஹணம்; f - பிரியாத பிராட்டியுடன் கூடிய; g - அளவிடமுடியாத சூரியனாகிய எம்பெருமான்; h - எப்பொழுதும் ப்ரகாசிப்பதே; i - சாச்வதமான மங்களமாக; j - ஜீவனை அடைதல்; k-ஈச்வரனை அடைதல்; l- லாபமும் நஷ்டமும் எம்பெருமானுடையதே; m - எம்பெருமானுக்கு அடிமையாயிருத்தலிலேயே இன்பங்கண்ட; n - மோக்ஷம் பெற்ற நிலையில்; o - மேன்மையும்

1 கீதை (8–15) ÷ ஞானிகள் உண்மையான என் ஸ்வரூபத்தை அறிந்தவர்கள். அவர்கள் என்னிடம் அளவற்ற அன்பு கொண்டவர்களாதலின் என்னை நினையாவிடின் உயிர் தரிக்கமாட்டாதவர்கள். என்னிடமே மனத்தை ஈடுபடுத்தியவர்கள். என்னையே அண்டியவர்கள். இத்தகைய ஞானிகள் என்னைக் குறித்துப் பக்தியோகம் செய்து தலையாய இறுதிப்பயனை என்னைச் சேர்ந்துவிடுவர். அவ்வாறு முக்திபெற்ற பின் எல்லாத் துக்கத்துக்கும் இடமாய் நிலையற்ற போகங்களைப் பெறும் நிலையற்ற சரீரத்தைத் தரக்கூடிய மறுபிறவியை அடையமாட்டார்கள்.

भोग्य[a]மென்று அनुसंधिக்கப் प्राप्तம் என்று தாத்பர்யம்.

இது ஸாத்விக–ஹ்ருதயங்கமையான ரஹஸ்ய ரத்நாவளி என்றது- முதற்கலி தொடங்கி முப்பது வாக்யங்களிலே प्रतिपादि[b]த்த அர்த்தங்கள் எல்லாம் மோக்ஷ-சாஸ்த்ர– ஸாரभूत மூலமந்த்ராதிகளில் संगृहीत[c]ங்களான परतत्त्व–परमहित–परमपुरुषार्थ[d]ங்களைப் பற்றின ஸம்யगर्थ[e]ங்களாகையாலே மரகதத்தை काच[f]மென்று உபேக்ஷிக்கும்[g] मन्द–मति[h]களைப் போலன்றிக்கே இவற்றினுடைய प्राशस्त्य–भोग्यत्व–महत्त्व–मङ्गलत्व–सुग्रहत्वादि[i]களை அறியவல்ல सत्त्व–निष्ठ[j]ருக்கு ரஹஸ்ய ரத்நாவளி எப்போதும் ஹ்ருதயத்திலே[k] பூணுமது– என்றபடி.

[1] 'त्रैगुण्यविषया वेदा: निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥

a - புஷ்பம்–சந்தனம்–வாஸனை த்ரவ்யம் முதலியன போல்; b - விளக்கிக் கூறிய; c - சுருக்கிக் கூறப்பட்ட; d - எம்பெருமான் – ப்ரபத்தி – மோக்ஷம்; e - சிறந்த கருத்துக்கள்; f - கண்ணாடிக்கல்; g - புறக்கணிக்கின்ற; h - அறிவுக்குறைவுடையர்; i - சிறப்பு – இனிமை – பெருமை – மங்களத்தன்மை – அறிவதற்கு எளிமை; j - நற்குணமுடையர்; k - மார்பில், உள்ளத்தில்

2 கீதை (2–45) ÷ அர்ஜுந! முக்குணங்களில் பலருக்குத் தமோகுணமும் மற்றும் பலருக்கு ரஜோகுணமும் மிகக் குறைவான சிலருக்கு மட்டும் ஸத்த்வ குணமும் மிகுந்து நிற்கும். அவரவர் விரும்பும் பலனுக்கு ஏற்ற உபாயங்களை வேதங்கள் உணர்த்துகின்றன. அவ்வாறு வேதம் கூறுவிடில் உலகில் தமோகுணமும் ரஜோ குணமும் மிகுந்தவரே அதிகமாதலின் அவர்கள் ஸாத்விகர் விரும்பும் பலனாகிய மோக்ஷத்தைப் புறக்கணித்து விடுவர்; தாங்கள் விரும்பும் பலனுக்கு உபாயத்தை அறியாதிருந்து விடுவர். அற்ப பயன்களையே விரும்பி அவற்றில் ஈடுபட்டுத் தகாத செயலைச் செய்து அழிந்துபோவர். இப்பொழுது உனக்கு ஸத்துவ குணம் மிகுந்திருக்கிறது. இனியும் அதையே வளர்த்துப் பழக்கிக் கொள். மற்ற இரண்டு குணங்களையும் அதிகமாக்கிக் கொள்ளாதே. ஸம்ஸாரத்தில் வரும் குளிர்–சூடு. ஸுகம் – துக்கம் முதலியவற்றைப் பொறுத்துக் கொள். ரஜஸ்ஸும் தமஸ்ஸும்

[1] 'यावानर्थ उदपाने सर्वतः सम्प्लुतोदके ।
तावान् सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥

[2] 'बहुभ्यश्च महद्भ्यश्च शास्त्रेभ्यो मतिमान् नरः ।
सर्वतः सारमादद्यात् पुष्पेभ्य इव षट्पदः ॥

[3] 'अनन्तपारं बहु वेदितव्यं अल्पश्च कालो बहवश्च विघ्नाः ।
यत् सारभूतं तदुपाददीत हंसो यथा क्षीरमिवाम्बुमिश्रम् ॥

கலவாது எப்பொழுதும் ஸத்துவகுணமே வளரப் பெறுவாயாக. ஆத்மாவின் ஸ்வரூபம், அதை அடைவதற்கு உபாயம் இவையன்றி மற்ற விஷயங்களைப் பெறுவதையும், பெற்ற அவற்றைக் காத்தலையும் விட்டு ஆத்ம ஸ்வரூபத்தைத் தேடுவதிலேயே ஈடுபட்டிரு.

1 கீதை (2–46) ÷ வேதம் கூறும் அனைத்தும் அனைவருக்கும் ஏற்றுக் கொள்ள ஏற்றவையல்ல. உதாரணமாய் எல்லா மக்களும் குளிக்கவும் பருகவும் மற்றும் பல பயன்களுக்காகவும் அமைக்கப்பட்ட கிணறு குளம் முதலிய நீர்நிலைகளில் விடாயுற்றவன் தனக்கு வேண்டியவளவுக்கு மட்டும் நீரைப்பயன் படுத்திக் கொள்கின்றானே–யன்றி முழு நீரையும் எடுத்துக் கொள்வதில்லை. அங்ஙனமே கைக்கொள்ளவும் கைவிடவும் உரியனவற்றைப் பகுத்தறியவல்ல முமுக்ஷுவுக்கு வேதத்தில் மோக்ஷத்துக்கு ஸாதநமாகச் சொல்லப்பட்ட பகுதி மட்டுமே கைக்கொள்ள உரியது. மற்றவை ஏற்க உரியனவாகா.

2 பார சாந்தி (176–66) ÷ சாஸ்த்ரங்கள் பல. மிகப் பெரியவை. புத்திமான் அவற்றினின்று ஸாரமான வேதாந்தப் பொருள்களை மட்டுமே எடுத்துக் கொள்ளவேண்டும். வண்டுகள் மலர்களிலிருந்து தேன் மட்டுமே எடுத்துக் கொள்கின்றன. அவ்வாறே.

3 உத்தர கீதை (3–1) + வேதத்தில் அறியவேண்டிய அம்சங்கள் பல. அவை வரையறுக்க முடியாதன. வாழ்நாளோ அற்பம். தடைகளோ பல. ஆதலின் அன்னப்பறவை நீருடன் கலந்த பாலைப் பிரித்து எடுத்துக் கொள்வதுபோல் அஸாரமான அம்சங்களைத் தள்ளி மிகவும் ஸாரமான அம்சத்தையே எடுத்துக் கொள்ளவேண்டும்.

[1] 'त्रयो वेदा: षडङ्गानि छन्दांसि विविधा: स्वरा: ।
सर्वमष्टाक्षरान्त:स्थं यच्चान्यदपि वाङ्मयम् ॥

[2] 'किं तस्य बहुभिर्मन्त्रै: किं तस्य बहुभिर्व्रतै: ।
नमो नारायणायेति मन्त्र: सर्वार्थसाधक: ॥

[3] 'तत्त्वं जिज्ञासमानानां हेतुभि: सर्वतोमुखै: ।
तत्त्वमेको महायोगी हरिर्नारायण: पर: ॥

[4] 'तत् कर्म यन्न बन्धाय सा विद्या या विमुक्तये ।
आयासायापरं कर्म विद्याऽन्या शिल्पनैपुणम् ॥

1 ஸ்ரீமதஷ்டாக்ஷர ப்ரஹ்ம வித்யை (1–9) ÷ மூன்று வேதங்களும் அவற்றின் ஆறு அங்கங்களும் சந்தஸ்ஸுக்களும் பல ஸ்வரங்களும் மற்றும் உள்ள புனித மந்த்ரங்களும் ஆகிய அனைத்தும் திருமந்த்ரத்துக்குள் அடங்கியுள்ளன.

2 ஸ்ரீமதஷ்டாக்ஷர (1–41) ÷ மனிதன் தான் விரும்பும் பலன்களைப் பெறுவதற்குப் பலமந்த்ரங்களை ஆவ்ருத்தி செய்யவேண்டிய அவசியமும் பல கடின விரதங்களைச் செய்யவேண்டிய அவசியமும இல்லை. திருமந்திரம் ஒன்றே எளிதில் எல்லாப் பலன்களையும் கொடுக்கவல்லது.

3 பாரசாந்தி (357–89) ÷ மேம்பட்ட தத்துவத்தை அறிய வேண்டுமென்று விரும்புமவர்க்குப் பல்வகையான சாஸ்த்ரங்களையும் யுக்திகளையும் கொண்டு நிர்ணயித்துக் கூறுவது ஒன்றே. அநந்தகல்யாண குணங்கள் நிறைந்த ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே எல்லோருக்கும் மேம்பட்ட தெய்வம்.

4 ஸம்ஸாரபந்தத்தைக் கொடுக்க முன்வராத கர்மம்தான் சிறந்த கர்மமாகும். மோக்ஷத்தைத் தரக் காரணமாயுள்ள வித்யையே உயர்ந்த வித்யையாகும். இதற்கு மாறுன கர்மம் வீண் சரீரப் பிரயாசத்துக்குத்–தான் காரணமாகும். மற்ற கல்வி பெருமையாய்த் தேர்ச்சியைச் சொல்லிக் கொள்ளத்தான் பயன் படும்.

[1] 'संज्ञायते येन तदस्तदोषं शुद्धं परं निर्मलमेकरूपम् ।
संदृश्यते वाऽप्यधिगम्यते वा तत् ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तम् ॥
[2] 'सर्वेषामेव धर्माणाम् उत्तमो वैष्णवो विधिः ।'[177*2]
[3] 'न विष्ण्वाराधानात् पुण्यं विद्यते कर्म वैदिकम् ।
[4] 'इति संसारदुःखार्कतापतापितचेतसाम् ।
विमुक्तिपादपच्छायाम् ऋते कुत्र सुखं नृणाम् ॥
[5] 'तदस्य त्रिविधस्यापि दुःखजातस्य वै मम ।
गर्भजन्मजराद्येषु स्थानेषु प्रभविष्यतः ॥'
निरस्तातिशयाह्लादसुखभावैकलक्षणा ।
भेषजं भगवत्प्राप्तिः एकान्ताऽऽत्यन्तिकी मता ॥

---

1 விஷ்ணு புரா. (6–5–87) ÷ பரப்ரஹ்மம் குற்றமற்றது; கர்மத்துக்கு வசப்படாதது; எந்நாளும் கர்ம ஸம்பந்தமற்றது; ஒரே வகையாய் நிற்பது. இத்தகைய பிரஹ்மத்தைச் சாஸ்த்ர வழியாய்ப்பெற்ற அறிவி–னுல் அறியவேண்டும். பக்தி யோகத்தைச் செய்பவர்களால் நேரில் போல் காணப்படுகின்றது. பின் அநுபவித்தாலன்றித் தரிக்கமுடியாத வேட்கை நிலே வரும். அந்த நிலேயில் அநுபவிக்கபடுகின்றது. இந்த ஞானமே நேரிய அறிவாகும். ப்ரஹ்மத்தையன்றி மற்றவற்றைப் பற்றிய அறிவு மோக்ஷத்துக்குத் தடை புரிவதாகும்.

2 பார ஆநு (36–24) ÷ தர்மங்கள் அனைத்திலும் பகவதாராதநமே மிகச் சிறந்தது. அதைச் செய்யும் பக்தனே எம்பெருமான் தன் சரீரத்தைப் போல் காக்கின்றான்.

3 न विष्ण्वाराधनात् पुण्यं विद्यते कर्म वैदिकम् ।
तस्मादनादिमध्यान्तं नित्यमाराधयेद्धरिम् ॥
வ்யாஸ ஸ்ம்ருதி (2–42) ÷ பகவதாராதநத்திலும் சிறந்ததாய் வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மம் வேறில்லே. ஆதலின் பிறப்பு - நடுநிலே - அழிவு அற்றவனை எம்பெருமானே எப்பொழுதும் ஆராதிக்க வேண்டும்.

4 இங்ஙனம் ஸம்ஸாரதுக்கமாகிய வெயிலால் மனம் கொதித்து நிற்பவருக்கு மோக்ஷமாகிய மரத்தின் நிழலன்றி ஸுகம் தருவது வேறு என்ன இருக்கிறது ?

5 விஷ்ணு புரா (6–5–58,59) ÷ கர்ப்பவாஸம் - பிறவி - முதுமை ஆகியவற்றால் மிகுதியாக ஏற்படும் மூவகைத் துன்பங்களுக்கும் ஒரு மருந்து உண்டு. அதாவது வேறு ஸுகத்தை அநுபவிக்க விரும்பாதவாறு ஒப்பற்ற ஸுகமாய்த் துன்பம் கலவாததாய்ச் சாச்வதமாயுள்ள மோக்ஷமென்றும் பகவதநுபவமே அத்துன்பங்களுக்கு மருந்து என்று என் கருத்து.

'திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்' 165*2

1 'திருநாராயணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்மிநோ'

'கோலத் திருமாமகளோடுன்னை' 288*1

इत्यादिகளை இங்கே अनुसंधिப்பது.

மேல்கவி– இப்படி प्रतिष्ठित–बुद्धि[a]யான ப்ரபந்நனுக்கு ஸ்வயம்ப்ரயோஜநமான உத்தர–க்ருத்ய–விசேஷத்திலும்[b] உகப்பு[c] இருக்கும்படியை

2 'मुक्त्यै निर्विषयं मन: ।

इत्यादिகளின்படியே उपकारकतम[d]மாய் அந்தரங்க[e]முமான மநஸ்ஸைப் பற்ற உபதேசிக்கிருப்போலே ப்ரவ்ருத்[f]மான வாக்ய–விசேஷத்தாலே காட்டுகிறது.

a - நிலைபெற்ற அறிவுடையனை; b- ப்ரபத்திக்குப் பின் செய்யும் காரியங்களிலும்; c - மகிழ்ச்சி; d - மோக்ஷத்தைப் பெற மிக உதவி புரிவதாய்; e - மிக நெருங்கிய துணையான; f - வெளிவந்த

1 ஒருநாயகமாயோடவுலகுடனாண்டவர்
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர்
பெருநாடுகாண இம்மையிலேபிச்சைதாம்கொள்வர்
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ.

திருவாய் (4-1-1) ÷ எத்தனையோ வைபவங்களுடன் உலகையாண்டபேரரசர்களெல்லாரும் தங்கள் கர்ம வசத்தால் உணவும் கிடைக்காமல் பிச்சை வாங்கும் நிலைக்கு வந்து விட்டனர். நீங்கள் இவ்வுலகஸுகத்தைப் பொருட்படுத்தாது பிராட்டியைப் பிரியாத நாராயணன் திருவடிகளே உயர்ந்த அடையப்படும் பயனென்று தேர்ந்து விரைவில் அவன் திருவடிகளைப் பற்றி உய்வீர்களாக.

2 मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयो: ।
बन्धाय विषयासंगि मुक्त्यै निर्विषयं मन: ॥

விஷ்ணு புரா. (6-7-28) ÷ மனிதர்களுக்கு ஸம்ஸார பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் முதற் காரணம் மனமேயாகும். அம் மனம் உலக விஷயங்களில் பற்றுக் கொண்டால் ஸம்ஸார பந்தத்தைத் தரும். அதை விட்டுப் பரம்பொருளிடம் ஈடுபட்டால் மோக்ஷம் பெற வழிபெறும்.

**இதில் சிறு பயனில் படியாத என்றது–**

[1] 'गतागतं कामकामा लभन्ते ' என்றும்,

[2] 'अन्तवत् तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम्' என்றும்,

---

1 ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना: गतागतं कामकामा लभन्ते ॥

கீதை (9–21) ÷ வேதாந்தத்தில் மனம் வைக்காது மூன்று வேதங்களில் மட்டும் ஈடுபட்டவர்கள் வேதத்தில் கூறப்பட்ட இந்திரன் முதலிய தேவர்களை மட்டும் குறித்து வேள்வி செய்து அதில் எஞ்சிய ஸோம ரஸத்தைப் பருகுகின்றனர். அதனால் ஸ்வர்க்கம் முதலிய போகங்களுக்குத் தடையாயிருந்த பாபங்கள் நீங்குகின்றன. அவர்கள் இந்திரன் முதலியோரைக் குறித்தே வேள்வி செய்தபோதிலும் உண்மையில் அவர்களுக்கும் அந்தர்யாமியான என்னைத்தான் ஆராதித்ததாகின்றது. ஆனால் யாகம் செய்பவர்களுக்கு இவ்வுண்மை தெரியாது. அந்த யாகத்துக்குப் பலனாக அவர்கள் சொர்க்கத்தை வேண்டுகின்றனர். அவ்வாறே அவர்கள் துன்பக் கலப்பற்ற இந்திர போகத்தை அடைந்து ஆங்காங்கு உயர்ந்த தேவர்கள் அநுபவிக்கின்ற போகங்களை அநுபவித்து அதற்குக் காரணமான புண்யம் கழிந்தவுடன் மறுபடி மனிதவுலகுக்கு வந்துவிடுகின்றனர். இங்ஙனம் வேதாந்த அறிவு பெறாது வேதத்தில் மட்டும் கூறிய தர்மங்களைச் செய்பவர் அற்பமாய் நிலையற்ற ஸ்வர்க்க போகங்களை அநுபவித்து விட்டுப் பின்னும் கவலையேற்றம் போல் வருவதும் போவதுமாய் உள்ளனர்.

2 अन्तवत् तु फलं तेषां तेभवत्यल्पमेधसाम् ।
देवान् देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥

கீதை (7–23) ÷ அற்பர்களான இந்திரன் முதலிய தேவர்களை வழிபட்டு அவர்களிடமிருந்து அற்பமான அழிவுள்ள பலனைப் பெறும் மக்கள் அற்பபுத்தியுடையர். இந்திரன் முதலியவர்களின் போகங்களும் அளவுக்கு உட்பட்டனவே; குறிப்பிட்ட காலம் மட்டும் இருப்பனவே. ஆதலின் அவர்களைப் பூஜித்தவர்கள் பெறும் பலனுக்கும் அந்தக் கதியே. என்னை வழிபடுமவர்களோ அவர்கள் செய்யும் கர்மங்கள் அனைத்தும் எனக்கு ஆராதனமாகும் என்பதை உணர்ந்து அற்ப பலனில் பற்றற்று என்னை மகிழ்விப்பதையே பலனாகக் கொண்டு உபாஸித்து என்னையே அடைகின்றனர். மறுபடி அவர்கள் இக்கர்ம பூமியில் பிறப்பதில்லை.

[1] 'ये तु शिष्टास्त्रयो भक्ता: फलकामा हि ते मता: ।
सर्वे च्यवनधर्माण: '

என்றும் சொல்லுகிற க்ஷுத்ர-ப்ரயோஜநங்களை[a] ஆசைப்படாதே प्रारब्ध-கர்ம[b] வசத்தாலே வந்தவற்றிலும்,

[2] 'अनन्तं बत मे वित्तं यस्य मे नास्ति किंचन ।
[3] 'मिथिलायां प्रदीप्तायां न मे किंचित् प्रदह्यते ॥

என்னும்படி துவக்கற்று[c] [4] 'प्रतिबुद्धस्तु मोक्षभाक् ' – என்றும்,

[5] 'जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदन: ।
सात्विक: स तु विज्ञेय: स वै मोक्षार्थचिन्तक: ॥ என்றும்

**a** - அற்ப பயன்களை; **b** - பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மவசத்தால்;
**c** - பற்றை விட்டு

*1* பார சாந்தி. (350–35) ÷ இழந்த ஐச்வர்யத்தை விரும்புமவர் – புதிய ஐச்வர்யத்தை விரும்புமவர் – ஆத்மாநுபவத்தை விரும்புமவர் – என்னையே அடைய விரும்புமவர் என்று என் பக்தர்கள் நான்கு வகைப் படுவர். முதல் மூவரும் உலக போகங்களை விரும்பியே என்னை அடைபவர்களாதலின் ஸம்ஸாரபந்தத்திலே உழல்பவர்.

*2* என்னிடம் உள்ளது எம்பெருமானாகிய அளவற்ற பொருளே. உலகியற் செல்வம் எனக்கு வேறு ஒன்றும் கிடையாது.

*3* सुसुखं बत जीवामि यस्य मे नास्ति किंचन ।
मिथिलायां प्रदीप्तायां न मे किंचित् प्रदह्यते ॥

பார. சாந்தி. (282–4) ÷ மிதிலை என்னும் தலைநகர் தீயில் அகப்பட்டு எரிந்தாலும் எனக்கு என்ன? என் ஆத்மஸ்வரூபத்துக்கு ஒரு தீங்கும் இல்லை ( ஜனகன் பேச்சு)

*4* பார சாந்தி (350–35) ÷ என்னையே பயனாக நினைத்து உபாஸிப்பவன் மோக்ஷத்தைப் பெறுவான்.

*5* பார சாந்தி (358–73) ÷ எந்த மனிதனைப் பிறக்கும் போதே எம்பெருமான் கடாக்ஷிக்கின்றானோ, அவனே ஸத்துவ குணம் நிரம்பப் பெற்றவனாய் மோக்ஷம் பெறும் வழியைச் சிந்திப்பவனாவான் என்று உணர்க.

[1] 'கண்டு கேட்டுற்று'[40*1] என்ற பாட்டிலும்,

[2] 'ஊனேறு செல்வத்'திலும் சொல்லுகிறபடியே

த்வயத்தில் உத்தர-கண்டத்தில்[a] ஊற்றமுடையவர்கள்-

என்றபடி.

தகவோர்- என்றது

[3] 'परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत् ।

इत्यादिகளிற்படியே ஸுபரீக்ஷிதரான[b] ஸத்-சிஷ்யர்[c]களைப்

பெற்றால் ख्याति-लाभ-पूजादि-प्रयोजनान्तर-निरपेक्ष[d]மாகச் சொல்லி

---

a - பிற்பகுதியில்; b - நன்கு பரீக்ஷிக்கப் பட்டவர்களான; c - நல்லொழுக்கமும் நல்ல ஆசாரமும் பொருந்திய சிஷ்யர்களை; d - புகழ், பொருள் வருவாய், பிறர்மதிப்பு முதலிய மற்ற பயன்களை எதிர்பாராது

1 திருவாய் (4-9-10) + கண்ணால் கண்டும் செவியால் கேட்டும், உடலால் தொட்டும், மூக்கால் மோந்தும், வாயினால் உண்டும் இப்படி ஐந்து இந்த்ரியங்கள் கண்ட இன்பத்தையும், இந்த்ரியங்களால் அறிய முடியாததாய் இந்த லோகத்திலும் மிகப் பெரியதாய், மோக்ஷத்திலும் மிகச் சிறியதாயுள்ள ஆத்மாநுபவ ஸுகமாகிய கைவல்யத்தையும் ஒழித்தேன். ஏனெனில்? பிராட்டிமார்களுடன் நித்யஸூரிகள் முதலிய பரிவாரங்களுடனும் நீ இருக்கும் இருப்பைக் கண்டு ஈடுபட்டதால் இப்பொழுது உன் திருவடிகளை அடைந்தேன்.

2 ஊனேறுசெல்வத் துடற்பிறவியான்வேண்டேன்
ஆனேறேழ்வென்றா னடிமைத்திறமல்லால்
கூனேறுசங்கமிடத்தான் தன்வேங்கடத்துக்
கோனேரிவாழும் குருகாய்ப்பிறப்பேனே.

பெருமாள் திரு. (4-1) + இந்நாலாம் பதிகத்தில் குலசேகரப் பெருமாள் உலகபோகங்களை வெறுத்து எம்பெருமான் திருவடிகளை அடைவதையே விரும்பி விளக்கிப் பேசுகின்றார்.

3 संवत्सरं तदर्धं वा मासत्रयमथापि वा ।
परीक्ष्य विविधमेपायैः कृपया निःस्पृहो वदेत् ॥

சாண்டில்ய ஸ்ம்ரு (1-116) + சிஷ்யனாக வருமவனை ஆசார்யன் ஒரு வருஷமோ ஆறு மாதமோ மூன்று மாதமோ பற்பல வகைகளில் பரீக்ஷை செய்து பார்த்து, தான் ஒரு பலனையும் விரும்பாமல் கருணையாலேயே உபதேசிக்க வேண்டும்.

யல்லது தரிக்கமாட்டாதபடியான पर–दु:ख–निराकरण-इच्छै[a] யுடையவர்கள் – என்றபடி.

**எம்மைச்சேர்க்க – என்றது**

[1] 'न धर्मनिष्ठोऽस्मि ' என்கிற ஶ்லோகத்திலும்,

[2] 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்'

इत्यादिகளிலும் சொல்லுகிற आकिञ्चन्य–पूर्ति[b] யுடைய நம்மைக் கெடுமரக்கலத்தை[c] ஓர் அநுகூல–सदागति[d] கரை சேர்க்குமா போலே

a - பிறர் துன்பம் துடைக்க விரும்புதலாகிய கருணை; b - கைம்முதலில்லாமை யாகிய பூர்த்தியான தகுதியையுடைய; c - வழி தப்பி வேண்டாத இடத்துக்குச் சென்ற ஓடத்தை; d - அநுகூலமான காற்று

1 न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।
अकिञ्चनोऽनन्यगति: शरण्य! त्वत्पादमूलं शरणं प्रपद्ये ॥

ஆள. ஸ்தோ. (22) ÷ ரக்ஷகனான எம்பெருமானே! அடியேன் கர்மயோகத்தையும் அதன் அங்கங்களையும் செய்யமுடியாதவன்; ஞானயோகத்தைச் செய்யப் பூர்ணமான ஞானமின்மையால் அதைச் செய்யவும் இயலாதவன். அவ்விரண்டும் இல்லாமையால் உன் திருவடித் தாமரையைக் குறித்துச் செய்யும் பக்தி யோகமும் இல்லாதவன். இப்படி வேறொரு கைம்முதலற்றவனும் உன்னையன்றி வேறு உபாயமும் பலனும் இல்லாத அடியேன் உன் திருவடிகளையே சரணமாகப் பற்றுகின்றேன்.

2 நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேனாகிலுமினியுன்னைவிட்டொன்றும்
ஆற்றகிற்கின்றிலே னரவினணையம்மானே
சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர்சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்தவெந்தா யுனக்குமிகையல்லேனங்கே.

திருவாய். (5–7–1) ÷ எம்பெருமானே! நான் கர்மயோகமுடையனல்லேன்; ஞான யோகமுமுடையனல்லன். எனக்குப் பக்தியோகத்தைப் பற்றிச் சிந்திக்க இடமேது? ஆயினும் உன்னை விட்டுப் பிரிந்து கணப் பொழுதும் உயிர் தரிக்க வியலாதுள்ளேன். நீ எனக்கு ஸ்வாமியாதலால் உன் சொத்தான என்னை விடுவது உனக்குப் பெரிய நஷ்டமாகும். எல்லோரையும் காக்கவே சிரீவர மங்கலத்தில் வீறுதோன்ற எழுந்தருளியிருக்கும் பெருமானே! என்னையும் காத்தருள வேண்டும்.

[1] 'शोकमोहग्रहग्रस्तो विचरन् भवसागरे ।

इहाद्य विधिना प्राप्तः तव पादाब्जपत्तनम् ॥ என்றும்படி

[2] 'விண்ணோர் பிரானார் மாசின் மலரடிக்கீழ் சேர்க்க'– என்றபடி.

**அடைக்கலங்கொண்ட திருமால் – என்றது**

இப்படி தாமும் பிறரும் தமக்குத் தஞ்சமாகாதபடி நிற்கிற நம்மை अनन्य–रक्षत्वेन[a] ஸமர்ப்பிக்க अलङ्घनीय–पुरुषकार–संबन्ध–गुण–விசேஷங்களாலே[b] प्रेरित[c]னாய்க்கொண்டு भरस्वीकार[d]ம் பண்ணின ச்ரிய:பதி– என்றபடி.

**தானே மறுபிறவியறுத்து– என்றது** அடியிலே करण–कळेबर–प्रदानादि–पूर्वक[e]மாக இவ்வளவும் க்ருஷிபண்ணின[f] सर्वविध–बन्धुவான தானே देहान्तर–परिग्रह–हेतु[g]வான पुण्य–पाप–संज्ञित–पाप–वर्गத்தை எல்லாம் கழித்து – என்றது.

**அழியா வானில் வைக்கும் – என்றது**

'दिव्यं स्थानमजरं चाप्रमेयं दुर्विज्ञेयं चागमैर्गम्यमाद्यम् ।[89 * 4]

a - வேறொருவராலும் காக்க முடியாதவர்களென்று; b - தன்னாலும் மறுக்க முடியாத பிராட்டி, ஸம்பந்தம். கருணை முதலிய குணங்கள்; c - தூண்டப்பட்டவனாய்; d - நம் பொறுப்பை ஏற்றுக் கொண்ட; e - இந்த்ரியம் சரீரம் இவற்றைக் கொடுதல் முதலியவற்றின் வாயிலாக; f - முயற்சி; g - மறுபடி சரீரத்தை எடுத்துக் கொள்ளக் காரணமான

1 துன்பம் அறியாமை ஆகிய பேய்களால் பிடிக்கப்பட்டு இதுவரை ஸம்ஸார ஸமுத்ரத்தில் அலைந்து திரிந்த நான் பாக்யவசத்தால் இப்பொழுது உன் திருவடித் தாமரையாகிய நகரத்தை அடைந்து விட்டேன்.

2 நித்ய ஸூரி நாயகனான எம்பெருமானுடைய குற்றமற்ற திருவடி மலரின் கீழ்

[1] 'एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः

इत्यादिகளிற்சொன்ன கலங்காப் பெருநகரத்திலே நித்ய ஸூரிகளோடு நிர்விசேஷமாக[b] மேலுள்ள காலமெல்லாம் புணைகொடுக்கிலும்[c] போகவொட்டாதே வைக்கும் - என்றபடி.

**மனமே நீ மகிழாதே இருப்பது என்கொல் - என்றது** निःशेष–अनिष्ट–निवृत्ति[d] பிறந்து निरतिशय–पुरुषार्थ[e]த்தையும் பெறுகைக்கு निःसम–अभ्यधिक[f]ஞான ஸத்யஸங்கல்பன்

'मोक्षयिष्यामि मा शुचः ।[167*2]

என்று நினைப்பிட்டருளினபின்பு ஹர்ஷ–स्थान[g]த்திலே शोकिக்கைக்கு ஒருபடியாலும் ப்ராப்தி[h] இல்லை - என்றபடி.

**உறுவதுனக்குரைக்கேன் இங்கிருக்குங் காலம்-** என்றது.

a - ஸ்ரீவைகுண்டத்தில்; b - வேற்று மையின்றி; c - உத்தரவாதம் (நபர் ஜாமீன்) d - மீதியில்லாமல் ஸகல அநிஷ்டங்களும் கழிதல்; e - தனக்கு மேம்பட்டதில்லாத பயன், மோக்ஷம்; f - ஒத்தவனும் மிக்கவனும் இருக்கப் பெறுதவன்; g - மகிழ வேண்டிய இடத்தில்; h - இடம்

1 रुद्रादित्यवसूनां च तथाऽन्येषां दिवौकसाम् ।
एते वै निरयास्तात! स्थानस्य परमात्मनः ॥

பார. சாந்தி. (196–6) + அப்பனே! பரமாத்மாவின் இடமான பரமபதத்தைப் பார்க்கும் போது தேவர்கள் வாழும் ஸ்வர்க்கம் முதலிய லோகங்கள் நரகமென்று சொல்லலாம்படி யுள்ளன.

[1] 'अस्थिस्थूणं स्नायुबद्धं मांसशोणितलेपनम् ।
चर्मावनद्धं दुर्गन्धि पात्रं मूत्रपुरीषयोः ॥
जराशोकसमाविष्टं रोगायतनमातुरम् ।
रजस्वलमनित्यं च भूतावासमिमं त्यजेत् ॥
[2] 'इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ।
[3] 'असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ॥

---

1 இந்த சரீரம் எவ்வளவு ஆபாஸமானது! இதற்கு எலும்புகளே தூண்கள். நரம்புகளால் கட்டப்பட்டுள்ளது. மாம்ஸமும் இரத்தமும் சேர்ந்து சேருயிருப்பது; தோலால் மூடப்பட்டுள்ளது; துர்நாற்றமுடையது; மூத்திரமும் மலமும் தங்கும் இடமாயுள்ளது; முதுமை துன்பம் இவற்றுக்கு உறைவிடம்; எப்பொழுதும் எதாவது நோயுடையது; இன்னும் பலதுன்பங்கள். அழுக்கு நிரம்பியது; அழிவுள்ளது; உயிர்கள் தங்கும் இடமாயுள்ளது இத்தகைய சரீரத்தை விடுவதற்கே முயலவேண்டும்.

2 यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥

கீதை (2-60) ÷ அருச்சுன! உலக விஷயங்களைக் காட்டிலும் மிக்க இன்பம் தரும் ஆத்மாவைக் கண்ட பின்பே அவற்றில் ஆசை ஒழியும். அது ஒழியாத போது எவ்வளவு விவேகியாய் இந்த்ரியங்களை அடக்க முயன்றாலும் வலிய இந்தரியங்கள் இவன் மனத்தைப் பலாத்காரமாகப் பிடித்து இழுக்கின்றன. ஆகவே ஆத்மாவைக் கண்டால் தான் இந்த்ரியங்களை அடக்க முடியும். இந்த்ரியங்களை அடக்கினால் தான் ஆத்மாவைக் காணமுடியும். இரண்டும் பிணைந்திருப்பதால் ஜ்ஞாந யோகம் செய்வது எளிதன்று.

3 असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥

கீதை (6-35) ÷ அர்ஜுந! மனம் எப்பொழுதும் சஞ்சலமான தன்மையுடையதாதலின் அதை எளிதில் அடக்க முடியாதென்பதில் ஐயமில்லை. ஆனால் ஆத்மாவின் உயர்ந்த குணங்களைச் சிந்தித்துச் சிந்தித்துப் பழகி அதில் ஈடுபடுவதாலும் மற்ற பொருள்களில் உள்ள குற்றங்களை நினைத்து அவற்றில் வெறுப்புக் கொள்வதாலும் கஷ்டப் பட்டுத் தான் மனத்தை அடக்க முடியும்.

[1] ‘ஊனிடைச் சுவர்வைத்து என்புதூண் நாட்டி
யுரோமம்மேய்ந் தொன்பதுவாசல்
தானுடைக்குரம்பை’

[2] ‘பொல்லா வாக்கையின் புணர்வினையறுக்கலறு’

---

1 ஊனிடைச்சுவர்வைத்தென்புதூண்நாட்டி
உரோமம் வேய்ந்து ஒன்பதுவாசல்,
தானுடைக்குரம்பைபிரியும்போதுன்றன்
சரணமேசரணமென்றிருந்தேன்,
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே
திரைகொள்மாநெடுங்கடல்கிடந்தாய்,
நானுடைத்தவத்தால்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்.

பெரிய திருமொழி. (1–6–9) + இந்த சரீரம் ஆத்மா வஸிக்கும் ஒரு வீடாகும். இதற்கு மாம்ஸங்களே நடு நடுவில் உள்ள சுவர்கள். எலும்புகளே தூண்கள். உரோமங்களே மேலே வேயும் கூரைகள். ஒன்பது த்வாரங்களும் வாசல்கள். எம்பெருமானே! இந்தச் சரீரம் பிரியும் போது உன் திருவடிகளே சரணமென்று இருந்தேன்.

2 கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர்,
எல்லாச்சேனையு மிருநிலத்தவித்தவெந்தாய்,
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு,
சொல்லாய்யானுன்னைச்சார்வதோர்சூழ்ச்சியே.

திருவாய்மொழி. (3–2–3) ÷ எம்பெருமானே! நீ கண்ணனாய் மிக எளியனாய் வந்திருந்த போதும் உன்னைச் சேராதிருந்து விட்டேன். பல தீங்குகளைச் செய்வதாய் உன்னையன்றிப் பிறரால் அறுக்க முடியாததாயுள்ள இந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்து உன்னை வந்து அடைவதற்கு ஒப்பற்ற உபாயத்தை நீயே சொல்லியருள வேண்டும்.

[1] 'வன்பரங்களெடுத்து ஐவர்திசை திசைவலித்

தெற்றுகின்றனர்'

[2] 'நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன்'

इत्यादिகளிற் சொன்ன दुर्निवार–दुस्त्यज–दोष–बहुल–देह–इन्द्रिय[a]ங்களோடுகூட

[3] 'अतिमानं सदा हासं वाक्प्रलापं विकत्थनम् ।

अनात्मन्यात्ममननं आत्मनिन्दाप्रशंसने ॥

इत्यादिகளிற்சொன்ன ராஜஸ–தாமஸ–விகாரங்களுக்கு

---

a - தடுக்க முடியாதனவும் விடமுடியாதனவுமான – குற்றங்கள் மிகுந்த சரீரம் இந்திரியங்கள் இவற்றுடன்

1 *என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றியுன்னிணைத் தாமரைகட்கு,*
*அன்புருகிநிற்கு மதுநிற்கச்சுமடுதந்தாய்,*
*வன்பரங்களெடுத்து ஐவர்திசைதிசைவலித்தெற்றுகின்றனர்,*
*முன்பரவைகடைந் தமுதங்கொண்டமூர்த்தியோ.*

*திருவாய்மொழி. (7–1–10) ÷ எம்பெருமானே! உன் திருவடித்தாமரைகளில் அன்புமிகுதியால் நீராயுருகி நிற்க வேண்டியதே எனக்கு ஏற்றதாயிருக்க, இழிவான இந்தச் சரீரமாகிய சுமையைத் தந்தாய். ஐந்து இந்த்ரியங்களும் உலக விஷயங்களாகிய சுமையை என் தலையில் சுமத்திப் பல பக்கங்களிலும் இழுத்து என்னைத் துன்புறுத்துகின்றன.*

2 *வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கி வேற்கணார் கலவியேகருதி,*
*நின்றவாநில்லாநெஞ்சினையுடையே னென்செய்கேன் நெடுவிசும்*
*பணவும், பன்றியாயன்றுபாரகங்கீண்ட பாழியானாழியானருளே,*
*நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்*
*நாமம்.*

*பெரிய திருமொழி. (1–1–4) ÷ நான் வெற்றியையே விரும்பி செலவழித்த பொருளுக்காக உள்ளம் கரைந்து, பெண்களின் வலையிலிலேயே ஈடுபட்டு, ஒருநிலையில் நிற்காத சஞ்சலமான மனத்தையுடையேன், என்ன செய்வேன்!*

3 *அதிக கர்வம் கொள்ளக் கூடாது. சிரித்துக் கொண்டேயிருக்கக் கூடாது. பேச்சை வீணாய் வளர்க்கக் கூடாது. தற்பெருமை பேசக் கூடாது. சரீரத்தை ஆத்மாவாக நினைக்கக் கூடாது. தன்னைப் பழித்தலும் புகழ்தலும் கூடாது.*

விளைநிலமான கொடுவுலகத்திலே[a] ஒரு மருளாலே[b] இருக்கவேண்டிய காலத்தளவும் என்ன பிழை வருகிறதோ என்றும் இப்போது निरपराध-प्रधान-कैङ्कर्य[c]த்தை இழந்து நிற்கிறோமென்றும் பரிதபிக்கப் பார்த்தாயாகில், साध्योपाय-विशेष-वशीकृतமான सिद्धोपाय-विशेषத்தாலே साध्य-प्राप्य-विशेष-लक्ष्यभूत[d]மான सिद्ध-प्राप्य-विशेष-प्राप्ति[e]யில் ஸம்சயமற்ற உனக்கு மற்றும் வரும் परितापம் சமிக்கும்படி நின்ற நிலைக்கு உற்றது சொல்லுகிறோம் - என்றபடி.

**ஒருபிழையும் புகுதாத உணர்த்திவேண்டி** - என்றது भगवत्-अपचारादिகள் எல்லாவற்றுக்கும் निदान[f]ம் तत्त्वज्ञानादि-वैकल्य[g]மாகையாலே

'तत्पादभक्तिज्ञानाभ्यां फलमन्यत् कदाचन ।
न याचेत् पुरुषो विष्णुं याचनात् नश्यति ध्रुवम् ॥'[168*3]

इत्यादिகளிற்படியே அநந்ய ப்ரயோஜநனாய் तत्त्वज्ञानादि-वृद्धिயை அபேக்ஷித்து - என்றபடி.

**பெறுவதெல்லா மிங்கே நாம் பெற்றுவாழ** - என்றது பரமபதத்திலே சென்று சேஷ-சேஷாசநாதி-ஸமாந[h]மாகவே பெறக்கடவ शेषवृत्ति[i]களையெல்லாம் இந்தளத்திலே[j] தாமரைப் பூப்போலவும் மருபூமியிலே[k] மஹா தடாகத்தைப் போலவும்

a - கொடிய இந்த ஸம்ஸார மண்டலம்; b - அஜ்ஞாநத்தாலே; c - அபசாரம் கலவாத; d - சேதநன் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்கின்ற; e - முன்பேயுள்ள பலனாகிய எம்பெருமானை அடைவதில்; f - காரணம்; g - இல்லாமை; h - ஆதிசேஷனுக்கும் விஷ்வக் ஸேநருக்கும் ஸமமாகவே; i - கைங்கர்யங்களை; j - தீ நிறைந்த பாத்திரம்; k - பாலைநிலம்

[1] 'ईश्वरोऽहमहं भोगी ।

इत्यादिகளிற்படியே எதிரம்பு[a] தொடுத்து நிற்கும் देशத்திலே ஆத்மदास्यத்தை[b] உணர்ந்து அகிஞ்சநராய்[c] அநந்யப்ர-யோஜநராய்[d] न्यस्तभर[e]ராய் निर्भर[f]ரான நாம் நிரபாயமாகப்[g] பெற்று संतुष्टராக- என்றபடி.

**பேரடிமையாலே தென்றிகழேல்** – என்றது ஸர்வ சக்தியான பரமகாருணிகன் பக்கலிலே भरந்யாஸம்[h] பண்ணினோமேயாகில் பண்ணப்போகிற கைங்கர்யம் மோக்ஷ- உபாயமன்றாகில் 'இது என்ன ப்ரயாஸம்' என்று स्वरूप-अनुगुण-वृत्ति[i]யான கைங்கர்யத்தை உபேக்ஷி-யாதே[j] கொள் – என்றபடி.

நீயே- என்றது மேலும் மோக்ஷ- உபாயமல்லாத கைங்கர்யத்தையன்றோ நீ பரம-पुरुषार्थ[k]மாகக் கோரினது. ஆனால் இங்கும் அது ஸமாநமன்றோ என்று உணர்ந்து கொள்- என்றபடி.

---

a - விபரீதத்தைச் செய்ய ஏற்றவாறு நிற்கும்; b - நாம் எம்பெருமானுக்கு அடிமையாயிருத்தலே; c - வேறு உபாயத்தைச் செய்யாதவர்களாய்; d - வேறு பயனை நாடாதவராய்; e - பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்பபித்த வராய்; f - தம் பொறுப்பு நீங்கியவரான; g - அபராதம் கலவாதபடி; h - பொறுப்பை ஸமர்ப்பித்தல்; i - தன் ஸ்வரூபத்துக்கு ஏற்ற செயலான; j - புறக்கணிக்காது; k - மிகச் சிறந்த பயன்

1 असौ मया हत: शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥

கீதை (16–14) ÷ அசுரத் தன்மையை விளக்குமிடம் – 'நான் சுதந்திரன்; பிறருக்கும் நானே தலைவன்; நான் இயற்கையிலேயே நன்கு அநுபவிப்பவன்; இதற்கு என் அத்ருஷ்டம் முதலியன காரணமாக வேண்டியதில்லை. நானே ஞானம் முதலிய விசேஷங்களையுடையன்; நானே ஸித்திபெற்றவன்; இயற்கையிலேயே பலமும் ஸுகமும் உடையன்.' என்றெல்லாம் தன்னைப்பற்றி நினைத்துக் கொள்பவர் அசுரத்தன்மையுடையர்.

மேல் ஆர்யையில்[a]

1 'विद्याचोरो गुरुद्रोही वेदेश्वरविदूषकः ।

त एते बहुपाप्मानः सद्यो दण्ड्या इति श्रुतिः ॥

इत्यादिகளிற்சொன்ன விபரீதர் கையில் அகப்படாதபடி ரக்ஷிக்க विधिக்கிறது.

रक्षन्तु – என்றது இதனுடைய சீர்மையறிந்து

2 'यो गोपायत्ययोग्यानां योग्यानां संप्रयच्छति ।

इममर्थं स मान्यो मे स्वस्ति वोऽस्तु व्रजाम्यहम् ॥

3 'विद्ययैव समं कामं मर्तव्यं ब्रह्मवादिना ।

आपद्यपि हि घोरायां न त्वेनामीरिणे वपेत् ॥

इत्यादिகளிற்படியே சிந்தாமல் கொள்ளவேண்டும் – என்றபடி.

अनन्यरक्ष्यां – என்றது

4 'नापृष्टः कस्यचित् ब्रूयात् न चान्यायेन पृच्छतः । என்றும்

---

a - ஆர்யை என்னும் விருத்தத்தில் அமைந்த சுலோகத்தில்

1 ஆசார்யனது அநுமதியின்றி மறைந்திருந்து அவனது உபதேசத்தைக் கேட்டு வித்யையைத் திருடுமவன்– குருவுக்கு த்ரோஹம் செய்பவன்– வேதத்தையும் ஈச்வரனையும் தூஷிக்குமவன் ஆகிய இவர்கள் மஹாபாபிகளாவர். இவர்களைக் கண்டவுடனேயே தண்டிக்க வேண்டும் எனச் சாஸ்த்ரம் கூறுகின்றது.

2 ஸாத்வ ஸம் – 25–375 : இவ்வர்த்தத்தைத் தகுதியற்றவர்களுக்கு மறைத்துத் தகுந்தவர்களுக்கு உபதேசிப்பவன் என் மதிப்புக்கு உரியவனுவான். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. நான் செல்கின்றேன். ( பகவானது சொல்)

3 மநு ஸ்ம்ருதி – 2– 113 : ப்ரஹ்மத்தைப் பற்றி உபதேசிக்க வல்ல ஆசார்யன் தகுந்த பாத்ரம் கிடைக்காவிடில் தான் கற்ற வித்யையுடனேயே இறந்து போக வேண்டும். மிகக் கொடிய ஆபத்து வரினும் இந்த வித்யையாகிய விதையை அபாத்ரமாகிய உவர்நிலத்தில் விதைக்கக் கூடாது.

4 ஆசார்யன் தன்னை வந்து ப்ரார்த்திக்காதவனுக்கும் முறை தவறிக் கேட்கவனுக்கும் வேதாந்த விஷயத்தை உபதேசிக்கக் கூடாது.

[1] 'पृष्टोऽपि न वदेदर्थं गुह्यं सिद्धान्तमेव च ॥

என்றும் சொல்லுகிற நியமங்களைக் கடந்து அபாத்ர-வ்யயம்[a] பண்ண ருசி[b]யில்லாத அநந்ய- ப்ரயோஜநராலே[c] ரக்ஷிக்கப்படுமது- என்றபடி. அங்ஙனன்றிக்கே

[2] 'ऊषरे निवपेत् बीजं षण्डे कन्यां प्रयोजयेत् ।
सृजेद्वा वानरे मालां नापात्रे शास्त्रमुत्सृजेत् ॥

என்றபடியே அபாத்ரத்திலே ஸமர்ப்பித்தால் மாணிக்கங் கொண்டு குரங்கெறிவு[d] ஒத்து இதற்கு ரக்ஷை உண்டாகாது – என்றபடி.

लघीयसीमपि गरियसीं – என்றது பரிமாணாதிகளாலே[e] சிறிய ரத்நாவளி[f] प्रभादि[g]களாலே பெரியதாயிருப்பது போல अल्प-ग्रन्थமாயிருப்பதேயாகிலும் அசேஷ-ஸாரார்த்த ஸங்க்ரஹமாகையாலே[h] இது गौरव-अतिशय[i]த்தை உடைத்தானது- என்றபடி.

---

a - தகுதியற்றவனிடம் செலவு செய்ய; b - விருப்ப மில்லாத; c - வேறு பயனை நாடாதவர்; d - உயர்ந்த மாணிக்க ரத்தினத்தைக் கொண்டு குரங்குகள் மேல் வீசியெறிவது போல்; e - அளவு முதலியவற்றால்; f - இரத்தின மாலை; g - ஒளி முதலியவற்றால்; h - ஸகலமான ஸாரார்த்தங்களுக்கும் சுருக்க மாயிருப்பதால்; i - பெருமை மிகுதியை

1. गोपयन्नाचरेद्धर्मं नापृष्टः किञ्चिदुच्चरेत् ।
पृष्टोऽपि न वदेदर्थं गुह्यं सिद्धान्तमेव च ॥

சாண்டில்ய (4-255) ÷ ஆசார்யன் தர்மஸூக்ஷ்மத்தை மறைத்து வைத்துக் கொண்டு தன் தர்மத்தைச் செய்து வரவேண்டும். ஒருவன் வேண்டிக் கேட்காதபோது எதையும் சொல்லக் கூடாது. கேட்ட போதிலும் ரஹஸ்யார்த்தங்களையும் ஸித்தாந்த விஷயங்களையும் எளிதில் சொல்லிவிடக் கூடாது.

2. சாண்டில்ய (4-258) ÷ உவர் நிலத்தில் விதை விதைத்தல் - நபும்ஸனுக்குப் பெண் கொடுத்தல் - குரங்கு கையில் பூமாலை கொடுத்தல் இவை செய்யக் கூடாதனவே. இவற்றைச் செய்தாலும் ஏதாவது பிராயச் சித்தம் செய்துவிடலாம். ஆனால் தகுதியற்றவனுக்கு மட்டும் சாஸ்த்ரத்தை ஒருபோதும் உபதேசிக்கக் கூடாது இதற்குப் பரிஹாரமே கிடையாது.

सन्तः – என்றது

[1] 'सारासारविवेकज्ञाः गरीयांसो विमत्सराः ।
प्रमाणतन्त्राः सन्तीति कृतो वेदार्थसंग्रहः ॥

என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த குணவிசேஷங்களுடையவர்– என்றபடி.

लक्ष्मीसहायहृद्यां– என்றது திருமகள்சேர் மார்வனுக்குக் கோலமாமணியாரமும்[a] முத்துத்தாமமும்[b] போலே இதுவும் ஹ்ருதயத்துக்கு[c] ஏற்கும் திருவாபரணம்– என்றபடி.

रहस्यरत्नावलिं– என்றது ரத்நாவளி[d] போலே प्रकाशादि– बहुळ[e]மாய்ச் சேர்த்தி உண்டாம்படி கோப்புண்டது[f] – என்றபடி.

रम्यां – என்றது स्वभाव–सौभाग्य[g]த்தாலும், ப்ரமாணச் சேர்த்தியாலும் आबाल–पण्डित[h]ம் अनवरत–ஸேவ்யமா[i]யிருக்குமது – என்றபடி.

இப்படியால் ஒரு முமுக்ஷுவினுடைய प्रथम–मध्यम–उत्तम–दशै[j]களை ப்ரகாசிப்பிக்கிற ரஹஸ்ய ரத்நாவளிக்கு सूत्र–स्थानीय[k]மான முதற்கவியில்[l] ஆசார்ய முகத்தாலே समर्पित–भरனாய் ஸர்வேச்வரனால் स्वीकृत-भरனானவனுடைய निर्भर–त्व–अनुसंधान[m]ம் காட்டப்படுகிறது.

---

a - அழகிய பெரிய இரத்தின மாலை; b - முத்து வடம்; c - மார்புக்கு, உள்ளத்துக்கு; d - இரத்தின மாலை; e - ஒளி முதலியன மிகுத்ததாய் ; f - கோக்கப் பட்டுள்ளது; g - சொல் – பொருள் இவற்றின் அழகாலும்; h - சிறுவர் முதல் அறிஞர் வரை; i - எப்பொழுதும் அநுபவிக்க ஏற்றது; j - ப்ரபத்திக்கு முன் – ப்ரபத்தி செய்யும் காலம் – ப்ரபத்தி செய்த பின்பு ஆக இந்த மூன்று நிலைகள்; k - கோக்கும் நூல் போன்ற, சுருக்கிக் கூறும் ஸூத்ரம் போன்ற; l - 'ஒன்றே புகல்' என்ற பாசுரம்; m - தன் பொறுப்பு கழிந்தமையை நினைத்தல்

1 வேதார்த்த ஸங். கடைசி ச்லோகம் + ஸாரம் அஸாரம் இவற்றின் பாகுபாட்டை அறிபவர்களாய் மிகப் பெரியராய் பொறாமையற்றவர்களாய் ப்ரமாணங்களுக்குக் கட்டுப்பட்டவர்களாயுள்ள பலர் உலகில் இருக்கின்றார்களென்று கருதியே இந்த வேதார்த்த ஸங்க்ரஹம் என்னால் இயற்றப்பட்டது.

ஒரு ஜீவனுக்கொரு ஜீவன் தஞ்சமல்லன்– என்றது தொடங்கி இருபத்திறன்கு வாக்யங்களில் இவ்விரண்டு[a] வாக்யங்களாலே

சரண்ய–விசேஷ–निर्धारण[b]மும்(1–2)

घटक–विशेष–कृत्य[c]மும்(3–4)

घटक–अपेक्षा–निदान[d]மும்(5–6,

சரண்ய–விசேஷ–வசீகரண–விசேஷமும்[e](7–8)

அதனுடைய सौकार्यादि–विशेष[f]மும்(9–10)

க்ருதக்ருத்யனுடைய உத்தர–க்ருத்ய–விசேஷ[g]மும்(11–12)

अपराध–பரிஹார–ப்ரயோஜந–விசேஷமும்[h](13–14)

प्रपत्ति–प्रभाव–विशेष[i]மும்(15–16)

ப்ரபந்நனுக்கு ப்ரதிகூல–அநுகூல–அநுபய[j]ங்கள் வந்தால் பண்ணக்கடவ ப்ரதிபத்தி–विशेष[k]மும்(17–18)

शास्त्र–अतिलङ्घन–ப்ரஸக்தி–பரிஹார[l]மும்(19–20)

उचितங்களான கைங்கர்யங்களில் சரண்ய–अभिमति–தாரதம்ய[m]மும்(21–22)

कैङ्कर्य–स्थान–विशेषமும்(23–24) சொல்லுகிறது.

மேல் மூன்று வாக்யங்களாலே (25,26,27) அங்க–விசேஷ–शङ्का–பரிஹாரம் பண்ணுகிறது.

अनन्तरं மூன்று வாக்யங்களாலே(28,29,30) ஸம்ஸார–

---

a - இரண்டு இரண்டு; b - எம்பெருமானே ரக்ஷகன் என்ற நிச்சயம்; c - ஆசார்யனும் பிராட்டியும் புரியும் செயல்; d - பரிந்து பேசும் பிராட்டியை வேண்டும் காரணம்; e - எம்பெருமானை வசப்படுத்தும் உபாயமாகிய ப்ரபத்தி; f - ப்ரபத்தியை எளிதில் செய்ய இயலுதல் முதலியனவும்; g - ப்ரபத்திக்குப் பின் செய்ய வேண்டியவை; h - பின்வரும் பாபங்களைப் போக்கும் வழி, அதன் பயன்; i - ப்ரபத்தியின் பெருமை மிகுதி; j - நல்லது – தீயது – இவை இரண்டுமல்லாதது; k - எண்ண வேண்டிய முறை; l - சாஸ்த்ரத்தை மீறி நடப்பதற்கு இடமும் அதற்குப் பரிஹாரமும்; m - திருவுள்ளம் உகப்பதில் உள்ள வேற்றுமை

மோக்ஷ–अन्तराळ–स्थित[a]னுக்கு संतोष–अतिशयार्थமாகவும், முமுக்ஷுக்களல்லாதவர்களை முக்தி–मार्गத்திலே மூட்டுகைக்காகவும் காலத்ரய–வைஷம்ய–प्रदर्शन[b]ம் பண்ணுகிறது.

निगमन–வாக்யத்தாலே[c] சேர்த்து அநுபவிக்கலாம்படி சிறியதான ப்ரபந்தத்தினுடைய சீர்மையைச் சொல்லுகிறது.

மேல் கவியாலே ஆசார்ய–वैभवத்தையும், சரண்ய–குணங்களையும் பார்த்து மோக்ஷலாபத்தில் நிஸ்ஸம்சயனானவனுடைய[d] முக்த – கைங்கர்ய– துல்யமான உத்தர–க்ருத்யத்தில் உகப்புச் சொல்லுகிறது.

மேல் ஆர்யையாலே ப்ரபந்த–வைலக்ஷண்யத்தை அறிந்து பாத்ர–அபாத்ர–விவேகம் பண்ணி ப்ரவர்த்திப்பிக்கச் சொல்லுகிறது.

1 रमासखपरिष्क्रियामिति रहस्यरत्नावलिं
स्वयं विवृतवान् यथाप्रमिति वेङ्कटेशः कविः ।
कदध्वरुचिकर्बुरव्यसनकत्थनप्रक्रिया
निरर्गळविनिर्गळद्ग्रहिळघोषभीतार्थितः ॥

---

a - ஸம்ஸாரத்துக்கும் மோக்ஷத்துக்கும் நடுவில் இருப்பவன்; b - ப்ரபத்திக்கு முன், ப்ரபத்திக்குப் பின், மோக்ஷம் பெறும் நிலை இவற்றின் வேற்றுமை; c - முடிவுரை வாக்யம்; d - ஸந்தேஹமற்றவன்

1 பிறமதத்தினர் சாஸ்த்ரங்களுக்கு முரண்பட்ட வழியிலேயே ஆசை கொண்டு தங்கள் கொள்கைகளை ஸ்தாபிப்பதில் உள்ள சிரத்தையால் மிக்க வெறிகொண்டு தங்கள் மதத்தையே புகழ்ந்து கொண்டு கூச்சமின்றி உரக்கச் சத்தமிட்டுப் பேசுகின்றனர். அதைக் கண்டு ஸாத்துவிகர்களான பெரியோர்கள் ஸித்தாந்தத்துக்குக் குறைவு வருமோ என்று அஞ்சி விட்டனர். அப்பெரியோர் வேங்கடேசனாகிய என்னிடம் வந்து வேண்டினர். அதனால் எம்பெருமானுக்கு ஓர் அணிபோல் போக்யமாய் விளங்கும் ரஹஸ்ய ரத்நாவளி யென்னும் ரஹஸ்யத்தின் தாத்பர்யத்தை என் அறிவுக்கு ஏற்றவாறு அதன் ஹ்ருதயமென்ற பெயரால் இவ்வாறு நானே விளக்கி ஸித்தாந்தத்தை ஸ்தாபித்தேன்.

1 संक्षिप्तं विस्तृतं वा सरळसमुचितं सावधानप्रियं वा
प्राधान्येन प्रणीतं परफणितिपरिष्कारवृत्त्या स्थितं वा ।
शिक्षासौकर्यतुष्टिप्रचितगुरुजनानुग्रहेद्धं सुधीभिः
श्रद्धेयं नाथजुष्टश्रुतियुवतिशिरोभूषणं भाषणं नः ॥

2 சாக்கியர் சைனர்கள் சார்வாகர் சாங்கியர் சைவர் மற்றும்
தார்க்கியர் நூல்கள் சிதைய தனி மறையின் கருத்தை
வாக்கிய முப்பதினால் வகை செய்து வியாகரித்தோம்
தேக்கி மனத்துளிதனைத் திணியிருள் நீங்குமினே. (20)

---

நாம் சில க்ரந்தங்களை சுருக்கமாகவும் சிலவற்றை விரிவாகவும் சிலவற்றை சாதாரண புத்தியுள்ளவர்க்கு ஏற்றனவாகவும் சிலவற்றை மிகக்கவனத்துடன் ஊன்றி நோக்கும் அறிஞர்களுக்கு அனுபவிக்க ஏற்றனவாகவும் சிலவற்றை சுதந்திர நூல்களாகவும் சிலவற்றை பிறருடைய ஸூக்திகளுக்கு உரையாகவும் இப்படி பலவகை நூல்களை இயற்றியுள்ளோம். இந் நூல்கள் வாயிலாக வரும் நம் பேச்சு முழுதும் நாம் எளிய நடையில் விளக்கும் முறையைக் கண்டு மிக மகிழ்ந்த ஆசார்யர்களின் அநுக்ரஹத்தால் தோன்றியதாகும். எம்பெருமானை உணர்த்தும் வேதாந்தத்தின் முடிக்கு அலங்காரமாகும். இத்தகைய நம் பேச்சு அறிஞர்களால் நம்பிக்கையுடன் ஏற்றுக் கொள்ள உரியதாகும்.

சாக்கியர் - பௌத்தர்களும்; சைனர்கள் - ஜைனர்களும்; சார்வாகர்- சார்வாகர்களும்; சாங்கியர் - ஸாங்கியர்களும்; சைவர் - சைவ(பசுபத)ர்களும்; மற்றும் - இன்னும்; தாக்கியர் - தார்க்கிகர்களும் ஆகிய இவர்களுடைய; நூல்கள் சிதைய- - மதநூல்கள் அழிந்துபோம்படி; தனி மறையின் கருத்தை - நிகரற்ற வேதத்தின் தாத்பர்யத்தை; வாக்யம் முப்பதினால் - முப்பது வாக்யங்களமைந்த இந்த ரஹஸ்யத்தினால்; வகை செய்து - பிரித்துக் காட்டி; வியாகரித்தோம் - விளக்கினோம்; இதனை மனத்துள் தேக்கி - இந்த ரஹஸ்யத்தை (உங்கள்) மனத்துள் நிலை நிறுத்தி; திணி இருள் நீங்குமின் - வலிய அஜ்ஞானமாகிய இருளை ஒழித்துக் கொள்ளுங்கள்.

1 தள்ளத் துணியினும் தாய் போலிரங்குந் தனித்தகவால்
உள்ளத்துறைகின்ற உத்தமன் தன்மையுணர்ந்துரைத்தோம்
முன்னொத்தவாதியர் முன்னே வரினெங்கள் முக்கியர்பால்
வெள்ளத்திடையில் நரிபோல் விழிக்கின்ற வீணர்களே. (21)

---

1 தள்ளத் துணியினும் - நாம்( எம்பெருமானை வெறுத்துத் தள்ளி விடத் துணிந்தாலும்; தாய் போல் இரங்கும் - தாய்(தன்னுடைய குழந்தையிடம் கருணை வைப்பது) போல் நம்மிடம் கருணை வைக்கும் படியான; தனித்தகவால் - ஒப்பற்ற குணத்தால்; உள்ளத்து உறைகின்ற - (நம்) ஹ்ருதயத்தில் வஸிக்கின்ற; உத்தமன் தன்மை - எம்பெருமானுடைய ஸ்வபாவத்தை; உணர்ந்து உரைத்தோம் - அறிந்து (இந்த ரஹஸ்யத்தில்) வெளியிட்டோம்; முன் ஒத்த வாதியர் - (நம் ஸித்தாந்தத்திற்கு) முன்னைப் போன்ற வாதிகள்; எங்கள் முக்கியர் பால் - எங்களுடைய ஆசார்யர்களிடம்; முன்னேவரின் - எதிரே (வாதத்திற்கு) வந்தால்; வெள்ளத்து இடையில் - ஆற்று வெள்ளத்து நடுவில்; நரிபோல் விழிக்கின்ற வீணர்கள் - நரிபோல் அகப்பட்டுக் கொண்டு விழிக்கும் பயனற்றவர்களாக ஆகிவிடுவார்கள்.

செய்யேல் மறமென்ற தேசிகன் தாதையவனுரைத்த
மெய்யேயரும் பொருள் கூடிய வெண்மதி[31] காதலியாம்
பொய்யே பகைப் புலன் ஐயிரண்டொன்று[32] பொருங்கருவி
கையேறு சக்கரக் காவலன்[33] காவலடைந்தவர்க்கே. (22)

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु
रहस्यरत्नावलि हृदयम् समाप्तम् ।
ரஹஸ்ய ரத்நாவளி ஹ்ருதயம் முற்றும்.
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

1 கையேறு சக்கர காவலன் - திருக்கையில் ஏறி வீற்றிருக்கும் சக்கராயுதத்தை உடைய ரக்ஷகனான எம்பெருமானுடைய; காவல் அடைந்தவர்க்கே - ரக்ஷணத்தில் அடங்கிய பாகவதர்க்கு; (காதல் அடைந்தவர்க்கே - பக்திமான்களுக்கு); மறம் செய்யேல் என்ற - பாபத்தை செய்யாதே என்று; தேசிகன் தாதை- ஆசார்யனே தந்தையாவான்; அவன் உரைத்த - அவ்வாசார்யன் உபதேசித்த; மெய்யே - உண்மைப் பொருள்களே; அரும்பொருள் - அருமையான செல்வமாகும்; கூடிய எண்மதி - (அப்பொருளைக்) கைக் கொண்ட எட்டு குணங்களையுடைய புத்தியே; காதலியாம் - காதலுக்குரிய மனைவியாகும்; பொய்யே - விபரீத ஞானமே; பகை - பகைவனாகும்; ஐயிரண்டு ஒன்று புலன் - (வசப்படுத்திய) பதினொன்று இந்த்ரியங்களும்; பொருங்கருவி - போர் புரிவதற்கு உரிய கருவிகளாகும்.

31 புத்தியின் எட்டுக் குணங்கள் :— 1, மனத்தில் வாங்குகை, 2. மனத்தில் தரிக்கை, 3. மறுபடி நினைக்கை, 4. பிறருக்குக் கூறுகை, 5. பிறர் கூறுவதையும் அறிகை, 6. வேண்டாதவற்றைத் தள்ளுகை, 7. தெளிவுடன் அறிகை, 8. உண்மைப் பொருளை அறிகை என்பன.

32 இந்த்ரியம் பதினொன்று :— செவி, நாக்கு, கண், மூக்கு, உடல், வாய், கை, கால், மலத்துவாரம், ஜலத்துவாரம், மனம் என்பன.

33 பாடபேதம் – காதலடைந்தவர்க்கே.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 15 तत्त्वत्रयचुलकम्

(விளக்கம் – ரஹ. விவ. – 206 – 254)

# 15 தத்த்வ த்ரய சுளகம்

## அநாத்ம நிரூபணாதிகாரம்

[முன்னுரை : சுளகம் என்ற சொல்லுக்கு உள்ளங்கை என்று பொருள். அசேதனம் – சேதநன்– ஈச்வரன் என்னும் தத்துவங்களைப் பற்றிய விஷயங்களை உள்ளங்கையில் வைத்தாற் போல் எளிதில் காட்டுவதால் இந்த ரஹஸ்யத்திற்கு இப்பெயர் வந்தது.]

1 *அந்தமிலாதி தேவனழி செய்தடைத்த*
*அலைவேலை யோதமடையச்*
*செந்தமிழ் நூல்வகுத்த சிறுமாமனிச்சர்*
*சிறுகைச் சிறுங்கையதுபோல்*

---

*அந்தம் இல் - அழிவு இல்லாதவனும்; ஆதி தேவன் - ஸர்வகாரண-மாயுள்ள எம்பெருமான்; அழிசெய்து - (ப்ரளய காலத்தில்) அழித்து; அடைத்த - பிறகு படைத்த; அலை வேலை ஓதம் அடைய - அலையுள்ள கடல் நீர் முழுதும்; செந்தமிழ் நூல் வகுத்த - சிறந்த தமிழ் நூல்களை வகுத்தவரும்; சிறு மா மனிச்சர் - (உருவத்தால்) சிறியராய், (ப்ரபாவத்தில்) பெரியவருமான அகஸ்த்ய மஹா முனிவருடைய; சிறு கைச் சிறுங்கையது போல் - சிறிய கையின் சிறுங்கையில் அடங்கிவிட்டது போல்; சந்தம் எ(ல்)லாம் - வேதங்களெல்லாம்; உரைப்ப இவை என்று - சொல்லும் விஷயங்கள் இவையே என்று; தங்கள் இதயத்து அடக்கி - (ஆசார்யர்கள்) தங்கள் மனத்து அடக்கி வைத்து; அடியோம் - தாஸர்களான நம்முடைய; பந்தம் எ(ல்)லாம் அறுக்க - கர்மபாசங்களை எல்லாம் ஒழிக்க; அருள் தந்து உகந்து - நம்மீது கருணை கொண்டு மகிழ்ந்து; பரவும் பொருள்கள் இவையே - (நமக்குச்) சிறக்கப் பேசி உபதேசிக்கும் அர்த்தங்கள் இந்த ரஹஸ்யத்தில் நாம் கூறியவையே.*

*சந்தமெலா முரைப்ப இவையென்று தங்கள்*
*இதயத்தடக்கி, அடியோம்*
*பந்தமெலாமறுக்க அருள் தந்துகந்து*
*பரவும் பொருள்களிவையே. (23)*

[S1] *ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளையே உபாயமாகவும் உபேயமாகவும்– பற்றுமவனுக்கு முற்பட* प्रकृति-आत्म-भ्रमादि[a] *கள்* கழியும்படி தத்த்வத்ரயத்தை விவேகிக்க வேண்டும்.

[S2] तत्त्व-त्रयமென்றது *அசேதந த்ரவ்யத்தையும், ஜீவனையும், ஈச்வரனையும்.*

[S3] *அசேதநமாவது–* ஜ்ஞாத்ருத்வம்[b] இல்லாத வஸ்து. இதற்கு வ்யாபாரம் உண்டேயாகிலும் ஜ்ஞாத்ருத்வம் இல்லாமை யாலே स्व-बुद्धि-पूर्वक-प्रवृत्ति[c] லக்ஷணமான கர்த்ருத்வ–மும் भोक्तृत्व[d] மும் இல்லை.

[S4] *அசேதநத்ரவ்யத்வம் தான் த்ரிகுணமென்றும்,* காலமென்றும், शुद्ध–ஸத்த்வமென்றும் மூன்று வகையா யிருக்கும்.

[S5] धर्मभूत–ज्ञानத்துக்கும் இவற்றுக்குப் போலே अचेतन-द्रव्यत्वம் உண்டேயாகிலும் இது சேதந– நிரூபணத்திலே விசேஷண மாய்க் கொண்டு निरूपितமாய் விடுகையாலும் இவை மூன்றினு டைய நிரூபணத்துக்கு ப்ரயோஜந– அதிசயம் உண்டாகை யாலும் இவற்றைப் பிரித்து निरूपित்தார்கள்.

[S6] த்ரிகுண-நிரூபணம் पञ्चविंशक-विवेकादि[e] *களுக்கு உறுப்பாம்.*

a - *சரீரத்தையே ஆத்மாவாகக் கருதுதல்;* b - அறியும் தன்மை; c - அறிவோடு செயல் புரிதலாகிய; d - பயனை அநுபவிக்கும் தன்மையும்; e - இருபத்தைந்தாவது தத்த்வமாகிய ஜீவனைப் பற்றிய தெளிவு

[S1] - தத்த்வ ஞானத்தின் ஆவச்யகதை; [S2] - தத்த்வ ஞானங்கள் மூன்று; [S3] - அசேதன விளக்கம்; [S4] - அசேதநம் மூன்று; [S5] - தர்மபூத ஞானத்தின் நிலை;
[S6] - அசேதநங்களை விளக்குவதின் பயன்

கால– நிரூபணம் ஐச்வர்யாதிகளுடைய अनित्यता–अध्यवसाय[a]த்துக்கும், காலத்தால் கலங்காத விஷயத்தை[b] ஆசைப் படுகைக்கும், काल–उचित–कर्तव्य–विशेष[c]த்தைக் காலம் பெறச் சிந்திக்கைக்கும் உறுப்பாம்.

சுத்தஸத்த்வ– நிரூபணம் प्राप्य–प्रापक[d]னை ஈச்வரனுடைய विशिष्ट–आकार–वेदन[e]த்திலே விநியுக்த[f]மாம்.

[S1] த்ரிகுணமாவது– ஸத்த்வ– ரஜஸ்– தமஸ்ஸுக்களாகிற குண– த்ரயத்துக்கு ஆச்ரயமாயிருப்பதொரு த்ரவ்யம். இது கர்மவச்யருக்கு பகவத்– ஸ்வரூப–तिरोधानादि[g]களைப் பண்ணும்.

ஸத்த்வமாவது – ப்ரகாச– सुखादि– ஹேதுவான குண விசேஷம். இது சிலருக்கு अत्यन्त–अतिशयितமாய் மோக்ஷ–उपयुक्तமாம்.

ரஜஸ்ஸாவது– राग–दु:खादि–हेतुவான குண விசேஷம்.

தமஸ்ஸாவது- प्रमाद[h]- आलस्य[i] निद्रादि हेतुவான குண விசேஷம்.

[S2] நியத– காலமான ஸ்வதந்த்ர– ஸங்கல்ப– விசேஷத்தாலே இவை மூன்றும் ஸமங்களானபோது மஹாப்ரளயம். ஒரு சரீரத்தில் वात–पित्त–कफங்கள் போலே उद्भव–अभिभव[j]த்தாலே இவை விஷமங்களான போது महादादि–विकारங்கள் உண்டாம். இவற்றில் வைஷம்யம் अनन्त–प्रकारம்.

[S3] ஸமமான குணத்ரயத்துக்கு ஆச்ரயமான த்ரவ்யம் மூல ப்ரக்ருதி. இங்கு

a - அழியுந் தன்மையது என்கிற நிச்சயம் முதலியன; b - (இங்கு) பரமபதம்; c - அந்த அந்தக் காலத்துக்கு உரிய கடமைகள்; d - பலனும் உபாயமுமான; e - திருவாபரணம் திருவாயுதம் முதலியவற்றுடன் கூடிய அவன் திருமேனியை அறிவது; f - பயன்படுவது; g - மறைத்தல்; h - கவனக் குறைவு; i - சோம்பல்; j - ஏற்றக் குறைவு

S1 - த்ரிகுணம் (ப்ரக்ருதி) விளக்கம்; S2 - ஸ்ருஷ்டி ப்ரளயங்கள்; S3 - மூல ப்ரக்ருதி

[1] 'त्रिगुणं तज्जगद्योनि:
'अचेतना परार्था च ',[89*3]

[2] 'சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த '

[S1]इत्यादिகளை अनुसंधिப்பது. இது தன்னிலே அதிஸூக்ஷ்மமான பரிணாம- விசேஷங்களாலே தமஸ் முதலான பிரிவுகள் ஓதப் படுகின்றன. இந்த த்ரவ்யம் விஷம பரிணாமமான போது வ்யக்தமென்றும், ஸம பரிணாமமான போது அவ்யக்தமென்றும் பேர் பெற்றிருக்கும். வ்யக்தம் மஹாந் முதலாய் पृथिवी- पर्यन्तமாய் இருபத்து மூன்று தத்த்வமா யிருக்கும். த்ரிகுணத்தில் இப்படி பரிணமியாத ப்ரதேசமும், பரிணமித்த ப்ரதேசமும் கடலில் அலையாத ப்ரதேசமும், அலைந்த ப்ரதேசமும் போலே இருக்கும். महदादि- விவகாரம் இல்லாத ப்ரதேசத்திலும் ப்ரளய- தசையிற் போலே ஸ்ருஷ்டி- தசையிலும் அதிஸூக்ஷ்மமான ஸத்ருச-விகார- ஸந்தாநம்[a] நடக்கும்.

இப்படி பிறக்கும் விஷம- விகாரங்களில் प्रथम- விகாரம்

---

a - ஒரே வகையான மாறுபாடுகளின் வரிசை

1 மூன்று குணங்களையுடைய ப்ரக்ருதி ப்ரபஞ்சத்துக்குக் காரணமாய் அநாதியாய் உற்பத்தியும் அழிவுமற்றதாய் உள்ளது.

2 சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில் பெரும்பாழேயோ
சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ,
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ,
சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே.

திருவாய்மொழி. (10-10-10) ÷ எல்லாக் காரிய வஸ்துக்களிலும் வியாபித்து அகன்று கீழ் இடங்கள் முழுவதிலும் வியாபித்து, மேலே உள்ள இடங்களிலும் பரவியிருக்குமதாய், தன் ஸ்வரூபம் எந்நாளும் அழியப் பெறாத அளவிட முடியாத மூல ப்ரக்ருதியைச் சரீரமாகக் கொண்ட எம்பெருமானே!

S1 - வ்யக்தம், அவ்யக்தம்

மஹாந். இது தான் ஆத்மாவுக்கு மநஸ் अध्य[a]வஸாயத்தை உண்டாக்கும் போது துணையாகையாலே बुद्धि-லக்ஷண மென்றும் சொல்லப்படும். இம் மஹாந் गुण- வைஷம் யத்தாலே ஸாத்த்விகமென்றும், ராஜஸமென்றும், தாமஸ மென்றும் மூன்று வகையாயிருக்கும்.

[S1]இதனின்றும் பிறந்த விகார- விசேஷம் அஹங்காரம். இது அநாத்மாவான देஹத்திலே மநஸ் ஆத்மாவுக்கு அஹம் बुद्धिயைப் பண்ணும் போது துணையாகையாலே அஹங்கார மென்று பேர் பெற்றது. இவ் அஹங்காரமும் தனக்குக் காரணமான மஹாந் போலே அவ்வடைவே[b] மூன்று படியாயிருக்கும். அதில் ஸாத்த்விக- அஹங்காரம் वैकारिक மென்றும், ராஜஸ- அஹங்காரம் தைஜஸமென்றும், தாமஸ- அஹங்காரம் भूतादिயென்றும் பேர் பெற்றிருக்கும். இவற்றில் इन्द्रियादि[c]யாயும், भूतादि[d]யாயுமுள்ள அஹங்காரங்களுக்கு ராஜஸ- அஹங்காரம் प्रवर्तकமாய்க் கொண்டு ஸஹகாரியாம்.

[S2]ஸாத்த்விக- அஹங்காரத்தினின்றும் பிறந்த द्रव्यம் இந்த்ரியம். இது आन्त[e]ரம் என்றும், बाஹ்யம்[f] என்றும் இரண்டு படி.

आन्तरமாவது- மநஸ். இது ஸம்ஸாரிகளுடைய संकल्प- स्मृत्यादिகளுக்குத் தானே காரணமாய் बाஹ்ய- இந்த்ரியங் களுக்குத் துணையுமாயிருக்கும். இது தானே சில இடங்களிலே अध्यवसाय-अभिमान-चिन्तै[g]களாகிற पुरुष-बुद्धि- விசேஷங்களுக்குக்

a - நிச்சய வடிவான ஒரு ஞானம்; b - அந்த முறையிலேயே (ஸாத்த்விகம் ராஜஸம் தாமஸம் என்ற முறை); c - இந்த்ரியங்களுக்குக் காரணம்; d - பூதங் களுக்குக் காரணம்; e - உள்ளேயிருப்பது; f - வெளியே இருப்பது ; g - நிச்சயம், விபரீதஞானம், சிந்தித்தல்

S1 - தத்த்வங்கள் பிறக்கும் முறை; S2 - உள் இந்த்ரியம் - மனம்

காரணமான दशैयில் बुद्धि-अहंकार-चित्त-शब्दங்களாலும் சொல்லப் படும். இது शब्दादि- விஷய- ஸங்கியானபோது बन्ध- காரணம். बाஹ்ய- விஷயங்களை விட்டு வகுத்த விஷயத்திலே ப்ரவணமானால் மோக்ஷ- காரணம்.

[S1]बाஹ்ய- இந்த்ரியங்கள் பத்து. இவற்றில் वाक्-पाणि-पाद-पायु-उपस्थ[a]ங்களாகிற கர்மேந்த்ரியங்கள் ஐந்தும் वचन-आदानादि-कार्य[b]ங்-களுக்கு உறுப்பாம். श्रोत्र-त्वक्-चक्षु:-जिह्वा-घ्राण[c]ங்களாகிற ஜ்ஞா-நேந்த்ரியங்கள் ஐந்தும் शब्ददादि-விஷயங்களைக் காட்டும். இவற்றில் त्वगिन्द्रियமும், चक्षुरिन्द्रियமும் यथार्ह[d]ம் சில द्रव्यங்களையும் ग्रஹிக்கும். श्रोत्रादिகள் ஐந்துக்கும் அடைவே आकाशादि- भूतங்கள் ஐந்தும் आप्यायक[e]ங்கள். அப்படியே मन: - ப்ராண- வாக்குக் களுக்கும் அடைவே पृथिवी-अप्-तेजस्सुக்கள்-आप्यायकங்கள்.

[S2]தாமஸ- அஹங்காரத்தினின்றும் அடைவே शब्दादि-तन्मात्रैகளை இடையிட்டுக் கொண்டு पञ्च-भूतங்கள் பிறக்கும். தந்மாத்ரைகளாவன- க்ஷீரத்துக்கும் दधि[f]க்கும் நடுவில் [S3]பரிணமம் போலே வருகிற सूक्ष्म-भूत-விசேஷங்கள். गुण-வைஷம்யத்தாலே தந்மாத்ரைகளை அவிசேஷங்களென்றும், भूतங்களை விசேஷங்களென்றும் சொல்லும்.

आकाशादि-भूतங்கள் ஐந்துக்கும் शब्दादि-गुणங்கள் ஐந்தும் उत्तरोत्तरं-अधिकங்கள்.

அங்கே 'பூநிலாயவைந்துமாய்'[63*1]

[S4]என்கிற பாட்டை अनुसंधिப்பது. தந்மாத்ரைகளும் गुणங்களும்

---

a - வாய், கை-கால்-மலத்வாரம்- ஜலத்வாரம்; b - பேசுதல் எடுத்தல்; c - செவி-உடல் - கண்- நாக்கு- மூக்கு; d - அதததற்கு உரிய சக்தியின்படி; e - சக்தியை வளர்ப்பன; f - தயிர்

S1 - புற இந்த்தரியங்களின் விளக்கம்; S2 - பஞ்சதந்மாத்திரைகள் – விளக்கம்

S3 - பஞ்ச பூதங்கள் பிறக்கும் முறை; S4 - பஞ்ச பூதங்களின் குணங்கள்

வேறேயாயிருக்கச் சில இடங்களிலே குணங்களின் பேராலே தந்மாத்ரைகளை उपचरि[a]க்கும்.

இத் தத்த்வங்கள் பிறக்குமிடத்தில் द्रव्यान्तरங்கள் வருவதில்லை. ताल-पलाश-ताटङ्क[b]-ந்யாயத்தாலே अवस्थान्तरापत्ति[c]யே உள்ளது. पूर्व-अवस्था-विजातीय-अवस्थै[d]கள் வந்த இடங்களிலே तत्वान्तरமென்கிறது. पृथिवीत्वादिகளை விடாதே வருகிற अवस्थान्तरங்களில் तत्त्वान्तर-गणनை இல்லை.

[S1] पृथवी-पर्यन्तங்களான தத்த்வங்களை ஸமஷ்டியென்றும் இவற்றில் एकदेशங்களைக் கூட்டி ஸ்ருஷ்டிக்குமவற்றை வ்யஷ்டியென்றும் சொல்லக் கடவது.

[S2] அண்டங்களும் ஆவரணங்களும்[e] அண்டத்துக்குள்ளான [S3]चतुर्दश-भुवनादि-वैचित्र्यங்களும் पञ्चीकरणादि-प्रकार[f]ங்களும் இருக்கும்படி புராணங்களிலே பரக்கக் கண்டு கொள்வது.

'इत्येतद्भुवनं गतम्' [g]

என்கிற ச்லோகத்தை இங்கே अनुसंधिப்பது.

'பொங்கைம்புலனும்' [62-1]

इत्यादिகளிற் சொன்ன தத்த்வங்கள் இருபத்தினாலில் प्रकृति-महत्-अहङ्कार[h]ங்களும் भूतங்களும் சரீரத்திற்கு उपादान-द्रव्य[i]ங்கள். இந்த்ரியங்கள் பதினொன்றும் தனித் தனியே असंख्यात[j]ங்களாய்

---

a - உபசார வழக்கால் கூறும்; b - பனையோலையைச் சுருட்டிச் செவிக்குத் தோடு செய்வது போல்; c - வேறு நிலையை அடைதலே; d - முன் இருந்த நிலைமை மாறி வேறு நிலைமைகள்; e - மேலே மறைத்துக் கொண்டிருக்கும் தத்துவங்கள்; f - ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டு பாதிகளாக்கி ஒரு பாதியையும் மற்ற பூதங்களில் அரைக்கால் அரைக்கால் பாகங்களையும் சேர்த்துக் கொண்டு வஸ்துக்களைப் படைத்தல்; g - இவை பூமியை அடைந்துள்ளன; h - ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், ஐந்து பூதங்கள், ஐந்து தந்மாத்ரைகள், பதினொன்று இந்த்ரியங்கள் ஆக 24; i - முதற் காரணம்; j - எண்ணற்றவை

S1 - ஸமஷ்டி, வ்யஷ்டி ஸ்ருஷ்டிகள்; S2 - அண்டங்கள் எண்ணற்றவை;
S3 - வஸ்துக்களின் படைப்பு - பஞ்சீகரணம் - விளக்கம்

प्रतिपुरुषं भिந்நங்களாய் आभरणத்தில் ரத்நங்கள் போலே சரீரத்தை ஆச்ரயித்திருக்கின்றன.

[S1] சரீரமாவது – சேதநனைக் குறித்து आधेयत्व-विधेयत्व-शेषत्व-நியமத்தாலே अपृथक्सिद्ध[a]மான த்ரவ்ய விசேஷம். त्रिगुण-विकार- वर्गங்களுக்கெல்லாம் ஸ்ருஷ்டி- ப்ரளயாதி- கால நியமம் சாஸ்த்ரங்களிலே கண்டுகொள்வது.

[S2] காலமாவது- गुण-त्रय-रहितமாய் எதிர்- நிகழ்- கழிவு इत्यादि-வ்யவஹாரங்களுக்கு விசேஷ- ஹேதுவாய் नित्य-विभु[b]வாயிருப்பதொரு த்ரவ்யம். க்ஷணம் முதலாகப் परार्ध-पर्यन्तமாக

'कालचक्रं जगच्चक्रं ' [c]

इत्यादिகளிற்படியே चक्रம் போலே परिवर्ति[d]க்கிறவை எல்லாம் இதன் विभागங்கள்.

'रूपान्तरं तत् द्विज कालसंज्ञम्' [1]

इत्यादिகளாலே இக்காலத்திற்கு त्रिगुणादिகளிற் காட்டிலும் வேறுபாடு சொல்லப்படுகிறது. இதன் படியை அறிந்தால்

---

a - ஜீவனை விட்டுப் பிரிக்க முடியாத; b - எப்பொழுதும் எங்கும் பரந்துள்ள; c - காலமும் உலகமும் சக்கரம் போல் சுழல்வன; d - சுழல்கின்றவை

1 विष्णोः स्वरूपात् परतोदिते द्वे रूपे प्रधानं पुरुषश्च विप्र ।
तस्यैव येऽन्येन धृते वियुक्ते रूपान्तरं तत् द्विज कालसंज्ञम् ॥
விஷ்ணு. புரா. (1-2-24) : அந்தணனே! எம்பெருமானுடைய சரீரமாகச் சொல்லப்பட்ட ஜகத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய் அவனுக்குச் சரீரமாயுள்ளது காலமென்பது.

[S1] - சரீர லக்ஷணம்; [S2] - காலம்

[1] 'பழுதேபலபகலும் போயின' என்றபடி ஸ்வரூப–ப்ராப்த–வ்ருத்தி[a] யிலே த்வரி[b] க்க அடுக்கும். அப்போது

[2] 'காலஸ்ய ஹி ச ம்ருத்யோஶ்ச'

என்கிறபடியே ஸர்வ நிர்வாஹகனான பகவாந்

[3] 'கலௌ க்ருதயுகம் தஸ்ய'

என்கிறபடியே கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கு அருள் செய்யும்.

லீலா விபூதியிலுள்ள விகாரங்கள் எல்லாம் இக்கால–விசேஷ– நியமத்தோடே கூடியிருக்கும். ஶுத்த– ஸத்த்வமான பரமபதத்திலுள்ளவை

---

a - தன் ஸ்வரூபத்துக்கு ஏற்ற கைங்கர்யத்தில்; b - விரைவு கொள்ள

1 *பழுதே பலபகலும் போயினவென்று, அஞ்சி*
*அழுதே னரவணைமேல் கண்டு– தொழுதேன்,*
*கடலோதம் காலலைப்பக் கண்வளரும், செங்கண்*
*அடலோத வண்ண ரடி.*

முதற்றிருவ. (16) ÷ திருவனந்தாழ்வான் மீது பள்ளிகொண்டுள்ள எம்பெருமான் திருவடிகளை இன்று ஸேவிக்கப் பெற்ற அடியேன் இதுவரை பல காலங்களும் இவ்வநுபவம் கிட்டாமல் வீணாய் ஒழிந்தனவே என்று அஞ்சி வருந்தினேன்.

2 *कालस्य हि च मृत्योश्च जङ्गमस्थावरस्य च ।*
*ईशते भगवानेकः सत्यमेतत् ब्रवीमि ते ॥*

பார. உத். (62–23) : காலத்தையும் ம்ருத்யுவையும் ஜங்கம ஸ்தாவரங்களையும் எம்பெருமான் ஒருவனே நியமநம் செய்கிறான். உனக்கு இதை உண்மையாகச் சொல்லுகிறேன்.

3 *कलौ कृतयुगं तस्य कलिस्तस्य कृते युगे ।*
*यस्य चेतसि गोविन्दो हृदये यस्य नाच्युतः ॥*

விஷ்ணு. தா். (109–57) : எவன் மனத்தில் கோவிந்தன் இருக்கிறானோ, அவனுக்குக் கலியுகம் க்ருதயுகமாகிறது. எவன் மனத்தில் அச்யுதன் இல்லையோ அவனுக்குக் கிருதயுகமும் கலியுகமாகின்றது.

[1] 'कालं स पचते तत्र न कालस्तत्र वै प्रभुः'

इत्यादिகளிற்படியே கேவலம் ஈச்வர-இச்சையடியாக நடக்கும்.

S1 शुद्ध- ஸத்த்வமாவது- ரஜஸ்- தமஸ்ஸுக்களுக்கு ஆச்ரயமன்றிக்கே ப்ராக்ருத- ஸத்த்வ- விலக்ஷணமான ஸத்த்வ-குணத்திற்கு ஆச்ரயமாயிருப்பதொரு த்ரவ்யம். இத்தை

[2] 'स्वसत्ताभासकं सत्त्वं गुणसत्त्वात् विलक्षणम् '

என்று சொல்லிற்று. சிலர் இதை த்ரிகுண காலங்கள் போலே ஜட[a]மென்றும், சிலர் ஸ்வயம்ப்ரகாசமென்றும் சொல்லுவர்கள்.

S2 ஆத்மாவுக்கும் धर्मभूत- ஜ்ஞாநத்துக்கும் ஸ்வயம்ப்ரகாசத்வமாத்ரம் ஸமாநமாயிருக்க, प्रत्यक्त्व[b]- विषयित्वादि[c]- வைஷம்யங்கள் प्रमाण-बलத்தாலே இசையவேண்டினாற் போலே शुद्ध-ஸத்த்வமும் ஸ்வயம்ப்ரகாசமானாலும் இவை இரண்டிலுங்

S3 காட்டில் இதுக்குத் तुल्य-योगक्षेम-प्रमाण-सिद्ध[d]மான வைஷம்ய

---

a - தானே ப்ரகாசிக்காதது; b - தன் ப்ரகாசத்தால் வரும் பயனைத் தானே பெறுதல்; c - மற்றவற்றை உணர்த்தும் தன்மை; d - ஸமமான நிலையில் உள்ள

1 कालं स पचते तत्र न कालस्तत्र वै प्रभुः ।
सकलस्य प्रभू राजन्! सर्वस्यापि तथेश्वरः ॥

பார. சாந். (196-9) : எம்பெருமான் காலத்துக்கு விநாடி- நாழிகை முதலிய வேறுபாடுகளை உண்டு பண்ணுகிறான். ஆனால் இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் போலே காலமானது அங்கு வேறுபாட்டை உண்டாக்குவதில்லை.

2 सर्वेष्वपि भवान्तस्थं तत्राधारात्मना विभोः ।
स्वसत्ताभासकं सत्त्वं गुणसत्त्वाद्विलक्षणम् ॥

பௌஷ்கர. ஸம். (25-42) : ஸ்வயம்ப்ரகாசமான சுத்தஸத்வம் ரஜஸ்ஸுடனும் தமஸ்ஸுடனும் கலந்த ஸத்த்வத்தைக் காட்டிலும் வேறுபட்டது. (ஸத்த்வம் என்பது அதையுடைய த்ரவ்யம்).

S1 - சுத்த ஸத்வம்; S2 - ஆத்மா - தர்மபூத ஞானம் - சுத்த ஸத்த்வம் - ஒற்றுமை வேற்றுமைகள்; S3 - சுத்த ஸத்துவத்தின் வேறு பெயர்கள்

மெல்லாம் கொள்ளலாம். இதன் படியைக் கண்டால் चतुर्मुखादि पदங்களுமெல்லாம் நிரயமாய்த்[a] தோன்றும்படி अत्यन्त- भोग्यமா யிருக்கையாலே இத்தைப் பரமபத மென்றும், अनुकूल- स्वभावத்தை யாலே ஆநந்த மயமென்றும், षाड्गुण्य-प्रकाश-उपयोगादि- களாலே षाड्गुण्यमयமென்றும், पञ्चोपनिषन्मन्त्र-प्रतिपाद्यமாகையாலே पञ्चोपनिषन्मयமென்றும், अप्राकृत-पञ्च-भूत-आत्मकமாகையாலே पञ्चशक्ति-மயமென்றும் சொல்லுகிறது. நித்யங்களான भूतங்களும் विग्रह-भूषण-आयुध-विमान-मण्डप-गोपुरादिகளும் प्रचुर[b]ங்களான படியாலே இத்தை नित्यविभूतिயென்கிறது. ஈச்வரனுக்கு நித்யருக்கும் நித்ய–देहமும் இதன் அவதாரங்களும் உண்டா யிருக்கும். முக்தருக்கு இச்சையுள்ளபோது विग्रहादि–परिग्रहமும், माता-पित्रादि-सृष्टिகளும் உண்டாம். இவையெல்லாம் வஸந்த– உத்ஸவத்தில் வேஷ–परिग्रहादिகள் போலே சேஷி உகந்த கைங்கர்ய– விசேஷங்கள். இந் नित्यविभूतिயில்

[1] ‘மணியுருவில் பூதமைந்தாய்’

என்கிற आकाशादि-विभागத்தை நித்யமான शब्दादि-गुण- வைஷம்யத்தாலே கண்டுகொள்வது.

---

a - நரகமாய்; b - மிகுதியானவை

1 மின்னுருவாய்முன்னுருவில்வேதநான்காய்
விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய்,
பின்னுருவாய்முன்னுருவில்பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாயிறப்பதற்கேயெண்ணாது, எண்ணும்
பொன்னுருவாய்மணியுருவில்பூதமைந்தாய்ப்
புனலுருவாயனலுருவில்திகழுஞ்சோதி,
தன்னுருவாயென்னுருவில்நின்றவெந்தை
தளிர்புரையுந்திருவடியென்தலைமேலவே.

திருநெடுந். (1) ÷ எதிரில் கண்ணுக்குப் புலப்படும் அசேதனப் பொருளில் மின்னல் போல் நிலையற்ற தன்மைக்குக் காரணபூதனானவன். இவற்றிற்கு மேலான தத்துவத்தை அறிதற்கு ப்ரமாணமான நான்கு

त्रिगुणம் ஸம்ஸாரி– ஜீவர்களுக்கு बन्ध-स्थानமாய்க் கீழ் எங்கும் अनन्तமாயிருக்குமாப்போலே शुद्ध- ஸத்த்வமும் இவர்களுக்கு मुक्तिस्थानமாய் மேல் எங்கும் अनन्तமாயிருக்கும்.

---

a - அளவற்றுப் பரந்திருப்பது

வேதங்களானுன். அவற்றைக் காத்து மஹான்களுக்கு உபதேசிப்பவனுனுன். அம் மஹான்கள் விளக்காயிருந்து விளக்கு ஒளிவீசுமாப்போல ஞானத்தை உண்டு பண்ணினர். இவ்வாறு உபதேசம் பெற்ற சிரவண ஞானம் மனனமாய்த் தோன்றியது. அந்த மனனமே தியானமாக வளர்ச்சியுற்று ஆனந்த மயமான தோற்றம் உண்டாகிறது. இந்த ஆனந்த மயமான தோற்றத்திற்கு காரணமாகிருன். அசேதனத்திற்கு மேலாக பின்னே அறியப்படும் சேதன தத்துவமாய் முன் சொன்ன அசேதனத்திலுள்ள பிணி, மூப்பு, பிறவியுமில்லாத சேதனப் பொருளுக்குக் காரணமானுன். மரணமெனப்படும் கைவல்யத்தை ஜீவாத்மா விரும்பாதபடி எண்ணுகின்ற ஹித ரமணீய பரப்ருஹ்ம ஸ்வரூப மானுன். அதனினும் சிறந்த ரத்னம் போன்ற அழகிய திருமேனியில் சுத்த ஸத்துவமயமாய் பஞ்சோபநிஷந்மய வடிவமான அப்ராக்ருத பூதங்கள் ஐந்துமாய் எளிமை, இனிமை ஆகிய ஸௌலப்ய குணபரிபூரணனுய், அனுச்ரிதர்களுக்கு அணுக முடியாதவாறு பரத்வமுடையவனுய் உலகில் ஒளிரும் வெங்கதிரோனுக்கும் தண்மதிக்கும் மற்றும் ஒளிரும் நக்ஷத்திரங்களுக்கும் ஒளியையளிப்பவனுய் விளங்கி என் சரீரத்திலும், ஹ்ருதயத்திலும் நித்யவாஸம் செய்யும் என்னப்பனின் தளிர் போன்ற அழகிய திருவடிகள் என் தலைக்கு அலங்காரம். ■

[1] முக்குணமாயையின் மூவெட்டின் கீழ்வரு மூவகையும்
இக்குணமின்றி யிலங்கிய காலச்சுழியினமும்
நற்குண மொன்றுடை நாகமும் நாராயணனுடம்பாய்ச்
சிற்குணமற்றவை யென்றுரைத்தா ரெங்கள்தேசிகரே. (24)

## அநாத்ம நிரூபணாதிகாரம் முற்றும்

---

1 முக்குண மாயையின் - (ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்றும்) மூன்று குணங்களையுடைய மூல ப்ரக்ருதியின்; மூ எட்டின் கீழ் வரும் - இருபத்து நான்கு தத்துவங்களின் கீழ்ப் பிரிகின்ற; மூவகையும் - (ப்ரக்ருதி, விக்ருதி, ப்ரக்ருதி விக்ருதி என்ற) மூன்று வகையும்; இக்குணம் இன்றி இலங்கிய - இந்த மூவகைக் குணமும் இல்லாமல் ப்ரகாசிக்கின்ற; காலச் சுழி இனமும் - சுழலுகின்ற காலத்தின் வகுப்பும்; நற்குணம் ஒன்றுடை நாகமும் - ஸத்துவ குணம் ஒன்றையேயுடைய பரம பதமாய் மாறுகின்ற சுத்த ஸத்துவமும் (ஆக இந்த மூன்று அசேதநமும்); நாராயணன் உடம்பாய் - எம்பெருமானுக்குச் சரீரமாய்; சிற்குணம் அற்றவை என்று - அறிவென்னும் குணமில்லாதவை என்று; எங்கள் தேசிகர் உரைத்தார் - எங்களுடைய ஆசார்யர்கள் உபதேசித்தனர்.



ஸ்ரீ கோதண்டராமன்

# ஜீவ நிரூபணாதிகாரம்

[1] *எனதென்பது மியானென்பது மின்றித்*
*தனதென்று தன்னையுங்காணாது – உனதென்று*
*மாதவத்தால் மாதவற்கே வன்பரமாய் மாய்ப்பதனிற்*
*கைதவத்தான் கைவளரான் காண். (25)*

ஜீவனாவான் – अणुत्व–पारतन्त्र्यादि–विशिष्टனான சேதநன். இவனுக்குக் कर्तृत्व-भोक्तृत्वादिகளாலே त्रिविध-अचेतनங்களிற் காட்டிலும், आधेयत्व–विधेयत्व–शेषत्वादिகளாலே ஈச்வரனைக் காட்டிலும் வேறுபாடு உண்டாகிறது.

अचित्तுக்கு महदादि–रूपेण[a] ஸ்வரூப- பரிணாமமும், க்ஷேத்ரஜ்ஞருக்கு[b] धर्मभूत- ஜ்ஞாநத்திலே सङ्कोच–विकासादिகளும், ஈச்வரனுக்கும்– நித்யருக்கும்– முக்தருக்கும் धर्मभूत–ஜ்ஞாநத்திலே

---

a - மஹாந் அஹங்காரம் முதலிய உருவில்; b - ஜீவர்களுக்கு

1 *எனது என்பதும் - (இந்த வஸ்து) என்னுடையது என்று நினைப்பதாகிய மமகாரமும்; யான் என்பதும் - (அசேதநமான சரீரத்தையே ஆத்மாவாக நினைத்து) நான் என்று எண்ணுவதாகிய அஹங்காரமும்; இன்றி - நீங்கப் பெற்று; தன்னையும் - ஜீவாத்மாவாகிய தன்னையும்; தனது என்று காணாது - தன்னுடைய ஸ்வாமி என்று நினையாமல் (அதாவது ஸ்வதந்த்ராத்ம ப்ரமம் இல்லாமல்); மாதவத்தால் - உயர்ந்த தவம் எனப்படும் சரணாகதியாகிய உபாயத்தால்; உனது என்று - எல்லாம் உன்னுடையதே என்று; மாதவற்கே வன் பரமாய் - எம்பெருமானுக்கே திடமான பொறுப்பாக; மாய்ப்பதனில் - தன்னுடைய ஸம்பந்தத்தை அறுத்து அவனிடம் ஸமர்ப்பிப்பதில்; கைதவத்தான் - (மனம் சுத்தமாயில்லாத) வஞ்சகமுடையவன்; கைவளரான் - மேம்பாடடையமாட்டான் (உஜ்ஜீவிக்க மாட்டான்); காண் - அசை.*

सङ्कल्पादि–अवस्था–விசேஷங்களும் அவ்வோ ப்ரமாணங்களாலே வ்யவஸ்थितங்களாயிருக்கும்.[a]

அசித்தின்[b] வ்யாபாரமெல்லாம் நித்யமாகப் पर–बुद्धि–अधीनம். ஈச்வரனுடைய வ்யாபாரமெல்லாம் நித்யமாக स्व–बुद्धि–अधीनம். ஜீவனுடைய வ்யாபாரங்களிலே சில पर–बुद्धि–मात्र–अधीनங்கள், சில स्व–बुद्धि–अधीनங்கள்.

त्रिविध–अचेतन–द्रव्यமும் சரீரமாயேயிருக்கும். **ஈச்வரன்** சரீரியாயேயிருக்கும். ஜீவன் சரீரமாய் சரீரியுமாயிருக்கும். இவன் படியை

[1] *'देहेन्द्रियमन:प्राणधीभ्योऽन्योऽनन्यसाधन: ।*

*नित्यो व्यापी प्रतिक्षेत्रम् आत्मा भिन्न: स्वत: सुखी ॥*

என்று आत्मसिद्धिயிலே ஸ்ரீ ஆளவந்தார் அருளிச் செய்தார்.

देह–इन्द्रिय–मन:–प्राण–धीभ्य:–अन्य:–देहம்

[2] 'மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம்

புண்ணாராக்கை'

a - வரையறை யுடையன; b - அசேதநத்தின்

1 ஜீவாத்மா, சரீரம் - இந்த்ரியங்கள் - மனம் - ப்ராணவாயு - தர்மபூதஜ்ஞாநம் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன்; தானே பிரகாசிப்பவன்; அழிவற்றவன்; மிகவும் ஸூக்ஷ்மனாயிருப்பதால் எங்கும் ப்ரவேசிக்க வல்லவன்; சரீரம் தோறும் வேறுபட்டவன்; ஆநந்த வடிவன்; மோக்ஷாநந்தத்துக்கு இயற்கையான தகுதியுடையவன்.

2 *மண்ணாய்நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம்*
*புண்ணாராக்கைதன்னுள்புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன்,*
*விண்ணார்நீள்சிகர விரையார்திருவேங்கடவா,*
*அண்ணா வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே.*
பெரிய திருமொழி. (1–9–6) ÷ பூமி – ஜலம் – அக்நி – வாயு – ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களாலானதும் புண் நிறைந்ததுமான இந்தச் சரீரத்தில் இருந்து கதறித் தளர்ந்து துன்பமடைந்தேன்.

என்கிறபடியே ஐந்து भूतங்களுடைய திரளாய்[a] उपचय-अपचय[b]ங்களையுடையதாய் पाणि–पादादिகளாலும் பலவகையாயிருக்கையால் भूतங்களுக்கும் அவயவங்களுக்கும் தனித்தனியும் ஸமுदायத்திலும்[c] चैतन्य[d]ம் கொள்ளில் अनेक-चेतन-उपलम्भ-अकारण-कार्य-उत्पत्त्यादि-विरोध[e]ம் வருகையாலே சரீரத்திற் காட்டிலும் ஆத்மாவுக்குப் பிரிவு காணலாம்.

[1] 'पिण्डः पृथग्यतः पुंसः ',

'पुमान् न देवो न नरः',[118*2]

'नायं देवो न मर्त्यो वा ',[118*3]

[2] 'अच्छेद्योऽयमदाह्योऽयम्',

a - கூட்டமாய்; b - வளர்தல் – இளைத்தல்; c - ஒன்று சேர்ந்த கூட்டத்திலும்; d - ஜ்ஞாநம்; e - பல ஜீவர்கள் இருத்தல் – காரணமின்றியே காரியம் உண்டாதல் முதலிய முரண்பாடு

1 पिण्डः पृथग्यतः पुंसः शिरःपाण्यादिलक्षणः ।
ततोऽहमिति कुत्रैतां संज्ञां राजन् करोम्यहम् ॥

விஷ்ணு. புரா. (2—13–89) : அரசனே! தலை– கால் முதலிய அவயவங்களின் சேர்க்கையாகிய சரீர பிண்டம் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டது. ஆதலின் இச் சரீரத்தில் நான் என்ற எண்ணத்தை எவ்வாறு கொள்வேன்? (ஜட பரதர் அரசனுக்குச் செய்யும் உபதேசம்).

2 अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥

கீதை (2–24) : இந்த ஆத்மாவை வாளால் வெட்ட முடியாது. தீயினால் எரிக்க முடியாது. ஜலத்தால் நனைக்க முடியாது. காற்றினால் உலர்த்த முடியாது. ஆதலின் ஆத்மா அழிவற்றவன்; நிலையாயுள்ளவன்; மாறுபடாதவன்; எங்கும் புகும்படி மிக ஸூக்ஷ்மமாயுள்ளவன். ஆதியற்றவன்.

[1] 'अवयवितयेद कुर्वाणै:',

इत्यादिகளை இங்கே अनुसंधिப்பது.

கர்ம இந்த்ரியங்களுள் ஒன்றின் வ்யாபாரத்தை ஒன்று செய்யமாட்டாதிருக்க, அவை எல்லாவற்றையும் வ்யாபரிக்கிற[a] கர்த்தா ஒருவனாகத் தோன்றுகையாலே ஆத்மாவுக்கு वागादिகளைக்காட்டில் வேறுபாடு அறியலாம்.

ஜ்ஞாந– இந்த்ரியங்கள் தனித்தனியே விஷயங்களைக் காட்டா நிற்க, இவையெல்லாவற்றாலும் எல்லா விஷயத்தையும் ஒருவனே प्रतिसंधान[b]ம் பண்ணுகையால் இவனுக்கு श्रोत्रादिகளைக் காட்டில் பிரிவு தோற்றும்.

ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு स्मृत्यादि–कारण[c]மாயல்லது மநஸ் ஸித்தியில்லாமையால் மநஸ்ஸிலுங் காட்டில் இவனுக்கு வேறுபாடு காணலாம்.

---

a - செய்கின்ற; b - இந்த்ரியங்கள் காட்டிய விஷயங்களைப் பற்றிய உணர்ச்சி; c - நினைவு முதலியவற்றுக்குச் சாதனமாயல்லது

1 अवयवितयेदं कुर्वाणैर्बहिष्करणैर्वपु:
निरवयवकोऽहंकारार्ह: पुमान् करणातिग: ।
स्फुरति हि जना: प्रत्यासत्तेरिमौ न विविञ्चते
तदधिकुरुतां शास्त्रं रङ्गेश! ते परलोकिनि ॥

ஸ்ரீரங்கராஜ (2–4) : அரங்கனே! சரீரம் பல அவயவங்களோடு கூடியிருப்பதால் வெளியிந்த்ரியங்களுக்குப் புலப்படுகின்றது. அவயவமில்லாத ஜீவன் வெளி யிந்த்ரியங்களுக்குப் புலப்படாதவனாய் 'நான்' என்று தோற்றுகின்றான். இவ்விரண்டுக்கும் உள்ள தொடர்பினால் மூடன் 'சரீரம் வேறு. ஆத்மா வேறு' என்று உணர்வதில்லை. இவ்வுண்மையை அறிந்து பரலோகத்துக்கு உரியனான ஜீவனுக்கு உன் கட்டளையாகிற சாஸ்த்ரமே ப்ரமாணமாக வேண்டும்.

देहादिகளிற் சொன்ன யுக்திதன்னாலே இவனுக்கு ப்ராண வாயுவிற் காட்டிலும் பிரிவு सिद्धம்.

விஷயங்களை ப்ரகாசிப்பிக்கிற ஜ்ஞாநம் ஸ்வயம்ப்ரகாச மான நித்ய த்ரவ்யமேயாகிலும் ஜ்ஞாதாவுக்கு धर्मभूतமாய்க் கொண்டே प्रत्यक्षादिகளாலே தோற்றுகையால் அதிலுங்காட் டில் 'நான்' என்று தோற்றுகிற ஸ்வஸ்மை–भासமாந[a]னை ஜீவன் வேறுபட்டவன்.

க்ஷேத்ரஜ்ஞருடைய[b] धर्मभूत–ஜ்ஞாநத்துக்கு प्रत्यक्षादि–प्रमाण–भेदத்தாலும், ப்ரத்யக்ஷம் தன்னில் இந்த்ரிய भेदத்தாலும், इच्छा–द्वेष–सङ्कल्प–प्रयत्न–सुख–दुःख–संशयादि–भेद[c]த்தாலும் बहुविध–विकारங்கள் உண்டாயிருக்கும். ஆத்ம–ஸ்வரூபத்தில் இவையொன்றும் தட் டாதே அஹமென்று நித்யமாகத் தானே தன்னையே தனக்கே காட்டுகிற ஏகரூப–ப்ரகாசமேயாயிருக்கும்.

ஜடங்களான देहादिகளெல்லாம் परतः[d] பரஸ்மை[e] भासமாநங் களாயிருக்கும். धर्मभूत– ஜ்ஞாநம் परतः–स्वतश्च பரஸ்மை भासநமா யிருக்கும். ஆத்மா स्वतः-परतश्च ஸ்வஸ்மை भासமாநனுமாய் परतः- பரஸ்மை भासமாநனுமாய் இருக்கும்.

இப்படி ஒரு बाधकமுமில்லாத 'எனது' என்கிற व्यतिरेक–प्रत्यय[f]த்தாலும் नित्य–निर्दोष–शास्त्र[g]த்தாலும் ஆத்மா देहादि– விலக்ஷ- ணன் - என்று அறிந்து கொள்வது.

अनन्य–साधनः– என்றது धर्मभूत ஜ்ஞாநம் போலே ஸ்வயம் ப்ரகாசன்– என்றபடி. இத்தால் ஜ்ஞாநஸ்வரூபனென்கிற

---

a - தன் பயனுக்காகப் ப்ரகாசிப்பவன்; b - ஜீவர்களுடைய; c - ஆசை, பகைமை, ஸங்கல்பம், முயற்சி, ஸுகம், துக்கம், ஸந்தேஹம் முதலிய பிரிவு; d - மற்றொரு ப்ரமாணத்தால்; e - பிறருடைய பயனுக்காகவே ப்ரகாசிப்பன; f - தான் வேறு, தன்னுடையது வேறு என்று வேற்றுமையைக் காட்டும் அறிவு; g - நித்யமாய் எவ்வகைக் குற்றமுமில்லாத சுருதி

வாக்யங்களுக்கும் विरोधம் परिहृत[a]மாயிற்று. धर्मभूत ஜ்ஞாநம் விஷய–ग्रहण[b] காலத்திலே தன் ஆச்ரயத்திற்கு[c] ஸ்வயம் ப்ரகாசமாம். ஆத்மா நித்யமாகத் தனக்குத் தான் ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கும்.

नित्य: – என்றது மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்தாலும் धर्मभूत ஜ்ஞாநத்துக்கு सङ्कोच–विकासादिகள் வந்தாலும் ஸ்வரூபத்தில் நாமான்தரம் வரும்படியான அவஸ்थान्तरங்கள் ஒருகாலும் வாரா– என்றபடி. இவ் ஆத்மா पूर्व–अनुभूत–प्रतिसंधान[d]ம் பண்ணுகையாலே स्थिरனென்னுமிடம் ப்ரத்யக்ஷ-सिद्धம். பிறந்தவனுக்கு प्रथम[e]ம் स्तन्य-अभिलाषादिகள் பிறக்கையாலே शरीरान्तर–परिग्रहமும் உண்டென்று அநுமாந सिद्धம். नैमित्तिक[f]– प्राकृत[g]– आत्यन्तिक[h]–ப்ரளயாதிகளிலும் அழியான் என்னுமிடம் आगमसिद्ध[i]ம்.

அணுவான இவனை व्यापी– என்றது
'दारुण्यग्नि:'[206*1]

என்கிற श्लोकத்தின்படியே அதிஸூக்ஷ்மதையாலே ஸர்வ–அசேதநங்களிலும் ப்ரவேசிக்கவல்லன்– என்றபடி. मुक्त–दशैயி-லும் बद्ध–दशैதன்னிலும் ஸங்கல்பத்தாலும் धர்மத்தாலும் योग–प्रभावத்தாலும் अनेक–शरीर–परिग्रहம் பண்ணும் போது ஜீவனை ஈச்வரனைக் காட்டில் பிரிக்கிற श्रुतिயின்படியே இவன் ஸ்வரூபம் அணுவாயிருக்க

---

a - ஒழிக்கப்பட்டது; b - வஸ்துக்களை அறிவிக்கும் போது; c - இருப்பிடமான ஆத்மாவுக்கு; d - முன்பு அநுபவித்ததை மறுபடி நினைத்துக் கொள்ளல்; e - முதலில் தாய்ப் பால் பருக ஆசை; f - பிரம லோகம் தவிர மற்ற எல்லா லோகங்களும் அழிதல்; g - மூலப்ரக்ருதி தவிர மற்ற எல்லாம் அழிந்துவிடும் காலம்; h - ஸம்ஸாரபந்தம் நீங்கி மோக்ஷம் பெறும் நிலை; i - சுருதிகள் கண்ட முடிவு

[1] 'प्रदीपवत् आवेशः'

इत्यादि सूत्र–उक्तமான धर्मभूत– ஜ்ஞாந– வ்யாப்தியே உள்ளது.

प्रतिक्षेत्रम्–आत्मा–भिन्नः– என்றது ज्ञान–सुखादि–व्यवस्थै காணலான சரீரம் தோறும் பரஸ்பர–प्रतिसंधान[a]மின்றிக்கே विचित्र–फल–भोक्ता[b]க்களான ஆத்மாக்கள் வேறுபட்டவர்கள்– என்றபடி.

स्वतः सुखी – என்றது ஸ்வரூபத்தாலும் धर्मத்தாலும் தனக்கு நித்ய– அநுகூலனாய்ப் परिपूर्ण–भगवत्–अनुभव–आनन्दத்துக்கு ஸூரிகளைப் போலே स्वरूप-योग्य[c]தையாலே இட்டுப்பிறந்தவன்– என்றபடி. இவனுக்கு दुःखादिகள் कर्म–उपाधिक[d]ங்களாய் வருகின்றன.

இஜ்ஜீவர்கள் बद्धரென்றும், बन्ध–रहितரென்றும் இரண்டு படி. बन्ध–रहितர், முக்தரென்றும் நித்யரென்றும் இரண்டு வகை.

बद्धராவர்– बीज-अङ्कुर-न्याय[e]த்தாலே விஷம– ப்ரவாஹமாய்க் கொண்டு அநாதியாய்ப் போருகிற अविद्या–कर्म–वासनारुचि–प्रकृति–संबन्ध[f]ங்களாலே தன்னுரு[g]க் கெடுத்து வேற்றுருக்[h] கொண்டு

---

**a** - ஒருவன் அறிவதை மற்றொருவன் அறிவது இல்லாமலே; **b** - வெவ்வேறு பலன்களை அநுபவிப்பவர்களான; **c** - இயற்கையான தகுதி; **d** - கர்மமாகிய காரணத்தைக் கொண்டவைகளாய்; **e** - முளை முதலா, விதை முதலா என்று அறியமுடியாத அநாதி நிலையைக் காட்டும் நீதி; **f** - அஜ்ஞாநம்-கர்மம்-அதே பழக்கம்-ஆசை- சரீர ஸம்பந்தம்; **g** - தன் உண்மையான ஸ்வரூபத்தை மறந்து; **h** - சரீரத்தின் தன்மையை ஆத்மாவில் கொண்டு

1 ப்ரஹ்மஸூ. 4–4–15 : ஒரு தீபம் ஒரே இடத்தில் இருப்பினும் தன் ஒளியின் வாயிலாக வேறு இடத்திலும் பரவுவது போல் முக்தனை ஆத்மா சரீரத்தினுள் அணுவாய் ஒரே இடத்தில் இருந்த போதிலும் தன் தர்ம பூத ஜ்ஞாநத்தின் வாயிலாகப் பல சரீரங்களிலும் பரவுவது பொருத்தமே. இவ்வம்சத்தைச் சுருதியும் காட்டுகிறது.

गर्भ–जन्म–बाल्य–यौवन–जाग्रत्–स्वप्न–सुषुप्ति–मूर्छा–जरा–मरण–स्वर्ग–नरक–सृष्टि-प्रळ यादि–विचित्र–अवस्थै[a] களையுடையராய், अनादि–अनन्त–प्रकारமாய் अतिदु:सह[b] மான ताप-त्रय[c] த்தாலே तप्तராய், स्वत:-प्राप्त-भगवत्-अनुभवादि-वैभव[d] த்தையும் இழந்து போருகிற चेतनர், परतन्त्र-चेतनராய்க் करण-आयत्त–ज्ञान[e] ரான बद्धருக்கே शास्त्र–वश्यत्वादि[f] கள் உள்ளன.

முக்தராவர்– இவர்களில் ஒரளவிலே ஸர்வ–भूत–ஸமனான ஸர்வேச்வரனுடைய அவஸர–ப்ரதீக்ஷையான[g] ஸஹஜ-க்ருபையாலே புரிந்து[h] अद्वेष–आभिमुख्यादि[i] களையுடையராய் सदाचार्य– ஸமாச்ரயனம் பண்ணி भगवत्–शेषत्वமாகிற மஹா–निधि[j] யை भक्ति–सिद्धाञ्जन–रञ्जित[k] மான शास्त्र–चक्षु[l] ஸ்ஸாலே கண்டு स्व–अधिकार–अनुगुणமான उपाय– விசேஷத்தாலே ஸர்வேச்வரனை ப்ரஸந்நனாக்கி[m], அவன் ஸங்கல்ப விசேஷத்தாலே अत्यन्त-निवृत्त-ஸம்ஸாரராய்க் கடலினின்றும் எடுத்த ஸ்ரீகௌஸ்துபம் போலே असङ्कुचित– ப்ரகாசராய்ப் பரமபுருஷ ஹ்ருதயங்கமராய்[n] நித்யஸூரிகளோடு ஒக்க निरतिशय–भोग्य[o] – निरुपाधिक[p] – கைங்கர்யம் பெற்றவர்கள்.

a - கர்ப்ப வாஸம்-பிறப்பு- குழந்தைப் பருவம்—வாலிபப்பருவம்—விழித்தல் – கனவு – உறக்கம் – மயக்கம் – முதுமை – மரணம் – பின் ஸ்வர்க்கம் நரகம் சேர்தல்—பின் மறு பிறவி–ப்ரளயம்; b - மிகவும் பொறுக்க முடியாத; c - மூன்று தாபம் – (1) சரீரத்தையும் மனத்தையும் பற்றி வரும் நோய் (2) மிருகம் பட்சி மனிதர் முதலியவர்களால் வரும் கஷ்டங்கள் (3) தெய்வத்தால் வரும் குளிர் சூடு காற்று மழை முதலியன; d - தான் உரிமையுடன் பெற வேண்டிய; e - இந்த்ரியங்களாலேயே அறிவு பெறுமவர்; f - சாஸ்த்ரத்துக்கு கட்டுப் படுதல்; g - ஸமயத்தை எதிர்பார்த்த; h - இயற்கைக் கருணையாலே நல்வழிக்குத் திரும்பி; i - பகவானிடம் பகைமை கொள்ளாமை, ஈடுபட முற்படுதல் முதலியன; j - பெரிய புதையலே; k - பக்தியெனும் ஸித்தர்களின் மையால் பூசப்பட்ட (கலந்த); l - சாஸ்த்ரமென்னும் கண்ணாலே; m - மகிழ்ந்தவனாக்கி; n - திருவுள்ளத்துக்கு உகப்பைத் தருமவர்(மார்பிலே அணியப்படுவது); o - எல்லையற்ற இனிமையையுடைய; p - ஒரு காரணத்தை முன்னிடாத

[1] 'यथा न क्रियते ज्योत्स्ना'

इत्यादिகளை இங்கே अनुसंधिப்பது.

நித்யராவர்- ஒரு காலத்திலும் भगवत्-अभिमत-विरुद्ध-आचरण[a] மில்லாமையாலே ஜ்ஞாந-सङ्कोच-प्रसङ्गமற்று सदा-दर्சநம் பண்ணிக் கொண்டு புராண புருஷனை ஸ்ரீவைகுண்டநாதனை வானிளவரசாகப் பெற்று வழுவிலாவடிமை செய்து வாழ்கிறவடிவுடை[b] வானவர்கள்.

இவர்களில் अनन्त-गरुड-विष्वक्सेनादिகளுடைய अधिकार-விசேஷங்கள் ஈச்வர नित्य-इच्छै[c] யாலே அநாதியாக வ்யவस्थित[d]ங்கள். முக்தருக்கும் நித்யருக்கும் ஈச்வரனுக்கும் व्यापारादिகள்

---

a - எம்பெருமான் திருவுள்ளத்துக்கு மாறுபட்டதைச் செய்தல்; b - சுத்த ஸத்துவமான சரீரத்தையுடையரான; c - நித்ய ஸங்கல்பத்தாலே; d - வரையறுக்கப்பட்டவை

1 यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षालनान्मणेः ।
दोषप्रहाणान्न ज्ञानमात्मनः क्रियते तथा ॥
यथोदपानकरणात् क्रियते न जलाम्बरम् ।
सदेव नीयते व्यक्तिमसतः संभवः कुतः ॥
तथा हेयगुणध्वंसादवबोधादयो गुणाः ।
प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवात्मनो हि ते ॥

விஷ்ணு தர். (104–55, 56, 57) : அழுக்கடைந்த ஓர் இரத்தினத்தைக் கழுவினால் அழுக்கு நீங்கிப் பிரகாசம் உண்டாகின்றது. அந்தப் பிரகாசம் புதிதாய் உண்டாக்கப் பெறுவதில்லை. அதுபோல் ஆத்மாவிலுள்ள தோஷம் நீங்கினால் முன்பே உள்ள சுருங்கிய ஞானம் மலர்கின்றது. புதிதாய் ஞானம் உண்டாக்கப்படுவதில்லை. புதிதாய் ஒரு குளம் வெட்டினால் உள்ளே இருந்த ஜலமும் இடைவெளியும் வெளி வருகின்றனவேயன்றிப் புதிதாய் உண்டாக்கப் படுவதில்லை. முன்னால் இல்லாதது எப்படி உண்டாகும்? அவ்வாறே ஆத்மாவுக்குக் கெட்ட குணங்கள் நீங்கினால் சுருங்கியிருந்த ஞானம் முதலிய குணங்கள் பிரகாசிக்கின்றன. புதிதாய் உண்டாவதில்லை. அக்குணங்கள் எப்போதும் ஆத்மாவுக்கு உள்ளவையல்லவா?

வேறுபட்டாலும் ஸர்வ—விசிஷ்டனை ஒருவன் भोग்யனைபடி·யாலே भोगமாத்ரம் ஸமாநம்.

2 பல்வினை வன்கயிற்றாற் பந்துமுற் றுழல்கின்றனரும்
நல்வினை மூட்டிய நாரணனார் பதம்பெற்றவரும்
தொல்வினை யென்றுமில்லாச் சோதி வானவருஞ்சுருதி
செல்வினை யோர்ந்தவர் சீவரென்றோதச் சிறந்தனமே. (26)

## ஜீவ நிரூபணாதிகாரம் முற்றும்

2 - சேதந அசேதநங்களுடன் கூடியவனை

2 சுருதிசெல்வினை ஓர்ந்தவர் - வேதம் செல்லுகிற வழியை அறிந்த நம் ஆசார்யர்கள்; பல்வினைவன்கயிற்றால் - பலவகைப்பட்ட கர்மங்களாகிற வலிய பாசத்தால்; பந்தம் உற்று - பிணிக்கப்பட்டு; உழல்கின்றனரும் - ஸம்ஸாரத்தில் துன்பப்படுமவராகிய பத்தர்களும்; நல்வினைமூட்டிய நாரணனார் - நல்ல உபாயத்தை அநுஷ்டிக்கச் செய்த எம்பெருமானுடைய; பதம் பெற்றவரும் - திருவடிகளை(ப் பரமபதத்தில்) அடைந்தவர்களான முக்தர்களும்; தொல்வினை - அநாதியான கர்ம ஸம்பந்தம்; என்றும் இல்லா - ஒரு போதும் இல்லாதவர்களான; சோதிவானவரும் - ஒளியுள்ள நித்ய ஸூரிகளும்; சீவர் என்று ஓத - ஜீவர்கள் (ஆவார்கள்) என்று உபதேசிக்க (அவ்வறிவினால்); சிறந்தனம் - சிறப்படைந்தோம்.

# ஈச்வர நிரூபணாதிகாரம்

1 *ஆரணங்களெல்லாம் அடிசூட மேல்நின்ற*
*காரணமாயொன்றாற் கலங்காதான் – நாரணனே*
*நம்மேல் வினைகடியும் நல்வழியில் தான்நின்று*
*தன்மேனி தந்தருளும் தான்.* (27)

*ஈச்வரனாவான்* –

'स्वाधीन त्रिविध चेतन अचेतन'

इत्यादिகளின்படியே கீழ்ச்சொன்ன चेतन-अचेतनங்கள் எல்லாவற்றுக்கும் நித்யமாக धारक[a]னுமாய், नियन्ता[b]வுமாய், निरुपाधिक–शेषि[c]யுமாய், இப்படியால் ஸர்வ சரீரியாய், सर्व–कार्य–कारण–भूतனாய், समस्त–हेय–रहित[d]னாய், स्वत:–सर्वज्ञत्व–सर्व–शक्तित्वादि–समस्त–मङ्गळ–गुण-आश्रयனாய், स्वेतर-समस्त-வஸ்து- விலக்ஷணனாய்[e], निष्कर्षकेतर-सर्वशब्द–वाच्य[f]னாய், सर्व–शास्त्रीय - கர்மங்களாலும் आराध्यனாய், सकल–

---

**a** - ஸ்வரூபத்தால் தரிப்பவன்; **b** - ஸங்கல்பத்தால் நியமிப்பவன்; **c** - இயற்கையான தலைவன்; **d** - எவ்வகை இழிகுணமும் இல்லாதவன்; **e** - தன்னைத் தவிர மற்ற ஸகல வஸ்துக்களினும் வேறுபட்டவன்; **f** - ஒரு வஸ்துவையே குறிப்பிட்டுச் சொல்லும் சொல்லைத் தவிர மற்ற எல்லாச் சொல்லுக்கும் பொருளாயுள்ளவன்

1 *ஆரணங்கள் எல்லாம் - வேதங்கள் அனைத்தும்; அடிசூட - தன் திருவடிகளைப் போற்றி நிற்க; மேல் நின்ற - எவ்வோரினும் மேம்பட்டு நின்றவனும்; காரணமாய் - எல்லாவற்றுக்கும் காரணமாயிருந்து; ஒன்றால் கலங்காதான் - காரியப் பொருள்களில் உள்ள தோஷம் ஒன்றும் தட்டாதவனுமான, நாரணனே - ஸ்ரீமந் நாராயணனே; நம்மேல் வினைகடியும் - நம்மிடம் மேன்மேலும் வ்ருத்தியடைகின்ற கர்மங்களைப் போக்கக் கூடிய; நல் வழியில் - நல்ல உபாயத்தின் ஸ்தானத்தில்; தான் நின்று - தான் இருந்து; தன்மேனி - தன் திருமேனியை; தான் தந்தருளும் - (நாம் அனுபவிப்பதற்குத்) தானே கொடுத்தருள்வான்.*

फल–प्रदனாய், सर्व–आत्माக்களுக்கும் स्वभाव–सुहृ[a]த்தாய், முமுக்ஷுக்களுக்கு आश्रयणीयனாய், मुक्त–प्राप्यனாய், இப்படி सर्व–प्रकार–निरतिशय–भोग्यனாய் சுடர்மிகு சுருதியுள் உளனான श्रिय:-पति புருஷோத்தமன்.

இவன் सूक्ष्म–चित्–अचित्–विशिष्ट–शेषத்தாலே जगத்துக்கு उपादान-காரணம். स्व-सङ्कल्प-विशिष्ट-வேஷத்தாலே நிமித்த காரணம். இப்படியே महादादिகளான उपादानங்களுக்கும், हिरण्यगर्भादिகளான நிமித்தங்களுக்கும் अन्तरात्माவாய் நின்று அவற்றின் கார்யங்க ளுக்கு उपादानமும் நிமித்தமுமாம். இவன் தானே सहकारि-भूत-कालादिகளுக்கும் अन्तर्यामिயாய் நின்று सहकारिயுமாம். ஆகையாலே त्रिविध-कारणமும் ब्रह्मம் என்று வேதாந்தங்களில் நிர்ணயிக்கப்பட்டது.

विभुत्वे[b]–सति–चेतनत्वं–अनन्याधीनत्वं–निराधारत्वं–जगत्कारणत्वं-मोक्षप्रदत्वं-सर्वाधारत्वं–सर्वनियन्तृत्वं–सर्वशेषित्वं–सर्वशरीरित्वं–सर्वशब्दवाच्यत्वं–सर्ववेदान्तवेद्यत्वं–सर्वलोकशरण्यत्वं–सर्वमुमुक्षूपास्यत्वं–सर्वफलप्रदत्वं–सर्वव्याप्तज्ञानन्दस्वरूपत्वं[c]–लक्ष्मीसहायत्वं–इत्यादिகளும் இவனுக்கு லக்ஷணங்கள்.

सत्यत्व[d]-ज्ञानत्व[e]-अनन्तत्व[f]-आनन्दत्व[g]-अमलत्व[h]ங்கள் सर्व-विद्या-अनुवृत्त[i]ங்களான स्वरूप-निरूपक-धर्म[j]ங்கள். ज्ञान-बलादिகளும் இவற்றின் वितति[k]களான सौशील्यादिகளும் निरूपित-स्वरूप-विशेषण[l]ங்கள். இக்குணங்களினுடைய லக்ஷணங்களும் उपयोगादिகளும் சாஸ்த்ரங்களிலே அறிந்து கொள்வது.

---

a - இயற்கையில் எல்லாப் பிராணிகளிடமும் நல்லெண்ணமுடையவன்; b - எங்கும் பரந்து நிற்றல்; c - எங்கும் பரவியுள்ள ஞானம் ஆநந்தம் இவற்றின் வடிவமாயுள்ளமை; d - மாறுபடாது ஒரே நிலேயில் இருத்தல்; e - குறைவுபடாத ஞான வடிவனாயிருத்தல்; f - தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் வரையறுக்க முடியாமை; g - ஆநந்த வடிவனாயுள்ளமை; h - தோஷமில்லாத தன்மை; i - எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் தொடருவன; j - அவன் ஸ்வரூபத்தை அறிவதற்காக முன்புஅவசியம் அறிந்தேயாகவேண்டிய தன்மைகள்; k - உட் பிரிவுகள், விரிவுகள்; l - அவன் ஸ்வரூபத்தை அறிந்தபின் அவனைச் சிறப்பிக்கக் கூறும் தன்மைகள்

सर्व–जगत्–सृष्टि[a]– स्थिति[b]– संहार[c]– अन्त:प्रवेश–नियमन[d]– निग्रह[e]– अनुग्रह[f]ங்கள் இவனுக்குக் कृत्य[g]ங்கள்.

இவன் ज्ञान–शक्त्यादि–गुण–विशिष्ट–स्वरूपத்தாலே सर्व–अन्तर्यामि–யாயிருக்கும்.

अस्त्र–भूषण–अध्याय[1]த்தின் படியே सर्व–तत्त्व–आश्रय–दिव्य–मङ्गळ–विग्रह–विशिष्ट–वेषத்தாலே पर–व्यूहादि–पञ्च–प्रकारனாயிருக்கும்.

(1) पर स्वरूपமாவது –

'नित्यं नित्याकृतिधरम्' [h]

[2] 'नित्यसिद्धे तदाकारे'

इत्यादि प्रमाणங்களிலே प्रसिद्धமாய் ஸூரிகளுக்கும் முக்தருக்கும் ஸேவ்யமாய் வானுயரின்பம்[i] மன்னி வீற்றிருக்கிற நித்யமான दिव्य–मङ्गल–विग्रह[j]ம். இதில் शान्तोदितादि–विभाग[k]ம் கண்டு கொள்வது.

(2) व्यूहமாவது- பரரூபத்திலே वासुदेव-सङ्कर्षण-प्रद्युम्न-अनिरुद्ध-रूपेण வரும் வகுப்பு. இவர்கள் நால்வருக்கும் कृत–त्रेतादि–युग–परिवृत्ति–क्रम[l]த்தாலே सित–रक्त–पीत–कृष्ण[m]ங்களான வர்ணங்கள்

---

**a** - படைத்தல்; **b** - காத்தல்; **c** - அழித்தல்; **d** - உள்ளே புகுந்து நியமித்தல்; **e** - தண்டித்தல்; **f** - அருள் புரிதல்; **g** - செயல்கள்; **h** - நித்யனாய் நித்யமான திருமேனியுடையனை எம்பெருமானே; **i** - பரமபதத்தில் ஒப்பற்ற ஆநந்தமுடையனாய் வீற்றிருக்கிற; **j** - சுத்த ஸத்துவமயமாய் மங்களகரமான திருமேனி; **k** - சாந்தோதிதம் – நித்யோதிதம் என்ற பிரிவு. விளக்கம் ரஹ. விவரணத்தில் காண்க; **l** - மாறி மாறி வருகிற வரிசையால்; **m** - வெண்மை – செம்மை – மஞ்சள் – கருமை நிறங்கள்

1 ஸ்ரீவிஷ்ணு புரா. 1–22 : தத்துவங்கள் எல்லாம் எம்பெருமான் திருமேனியில் திருவாயுதங்களாகவும் திருவாபரணங்களாகவும் இருக்கும் நிலையைக் கூறும் பகுதி.

2 பௌஷ்கர ஸம் 38–38 : பௌஷ்கரனே! எம்பெருமானது நித்யமான திருமேனியும் அவனுடைய எல்லோரினும் மேம்பட்ட தன்மையும் உளவென்று நினைப்பவனுக்கு அருகில் எம்பெருமான் வருவான்.

மாறி மாறி வரும். पर–रूपத்திலும் व्यूह–वासुदेव–रूपத்திலும் ज्ञान–शक्त्यादि–षाड्गुण्य– प्रकाशनம் ஒத்தபடியாலே त्रिव्यूह–पक्षமும் நடக்கும். இதில் सङ्कर्षणादि–व्यूहங்கள் மூன்றில் ज्ञान–बलங்கள், ऐश्वर्य-वीर्यங்கள், शक्ति–तेजस्सुக்களான இவ்விரண்டு गुणங்களே प्रकाशितங்களா- யிருக்கும். இங்கு

[1] 'गुणै: षड्भिस्त्वेतै:'

[2] 'षाड्गुण्याद्वासुदेव:'

---

1 - வ்யூஹங்கள் மூன்றே என்ற கொள்கை;

1 गुणै: षड्भिस्त्वेतै: प्रथमतरमूर्तिस्तव बभौ
ततस्तिस्रस्तेषां त्रियुग युगळैर्हि त्रिभिरभु: ।
व्यवस्था या चैषा ननु वरद साऽऽविष्कृतिवशात्
भवान् सर्वत्रैव त्वगणितमहामङ्गळगुण: ॥

ஸ்ரீ வரதராஜஸ்தவம் (16) : தேவரீருடைய முதலாவதான பரவாஸுதேவ குணங்களான மூன்றையுடையவனே! அதற்குப் பின்னுண்டான ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்ற மூன்று வ்யூஹங்கள் அவைகளின் மூன்று இரட்டைகளாலே விளங்கின. (ஸங்கர்ஷணமூர்த்தியில் ஞானமும் பலமும், ப்ரத்யும்ந மூர்த்தியில் ஐச்வர்யமும் வீர்யமும், அநிருத்த மூர்த்தியில் சக்தியும் தேஜஸும்) ப்ரதமதரமூர்த்தி என்பதற்கு வ்யூஹவாஸுதேவன் என்று ஸாரதீபிகையிலும், ஸார விவரணியிலும் பொருள் கூறியிருக்கிறது.

2 षाड्गुण्यात् वासुदेव: पर इति स भवान् मुक्तभोग्यो बलाढ्यात्
बोधात् संकर्षणस्त्वं हरसि वितनुषे शास्त्रमैश्वर्यवीर्यात् ।
प्रद्युम्न: सर्गधर्मा नयसि च भगवन् शक्तितेजोऽनिरुद्ध:
बिभ्राण: पासि तत्त्वं गमयसि च तथा व्यूह्य रङ्गाधिराज ॥

ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் (2-39) : பகவானாகிய ரங்கராஜனே! ஆறுகுணங்களையுடையவராய்ப் பரவாஸுதேவன் என்று சொல்லப் படுகிற தேவரீர் முக்தர்களால் அனுபவிக்கப் படுகிறீர். அப்படியே மூன்றாகப் பிரிந்து பலம், ஞானம் இவற்றையுடைய ஸங்கர்ஷணராயிருந்து உலகை ஸம்ஹரிக்கிறீர். சாஸ்தரங்களை ப்ரவசனம் செய்கிறீர். ஐச்வர்யம், வீர்யம் என்ற குணங்களையுடைய ப்ரத்யும்நராயிருந்து உலகைப் படைத்துத் தர்மத்தை நடத்துகிறீர். சக்தி, தேஜஸ் என்ற குணங்களையுடைய அநிருத்தராயிருந்து ரக்ஷிக்கிறீர். தத்துவத்தை உபதேசிக்கிறீர்.

[1] 'जाग्रत्स्वप्न'

इत्यादि श्लोकங்களை अनुसंधिப்பது.

நாலு வ்யூஹங்களினின்றும் அடைவே ஒரொன்றிலே மும்மூன்றாக அவதரித்த கேசவாதிகளான பன்னிரண்டு ரூபங்களும்[a] व्यूहान्तरங்கள். இவர்கள் மார்கழி மாதம் முதலாகப் பன்னிரண்டு மாதங்களுக்கும் द्वादश-आदित्य[b]ர்களுக்-கும் निर्वाहक[c]ராயிருப்பார்கள். ऊर्ध्वपुण्ड्रादि[d]களில் இவர்கள் நிலை விசேஷத்திருக்கும்[e].

(3) विभवங்களாவன– வ்யூஹமடியாக வருகிற पद्मनाभன் முதலான முப்பத்தாறு प्रादुर्भाव[f]ங்கள். இவற்றில் ஸ்ரீவாமந ரூபத்தில் த்ரிவிக்ரம ரூபம் போலே தோற்றும் आकारान्तर[g]ங்-

---

a - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுஸூதநன், த்ரிவிக்ரமன், வாமநன், ஸ்ரீதரன், ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன; b - பன்னிரண்டு சூரியர்கள்; c - தலைவராய் நின்று நடத்துமவர்; d - பன்னிரண்டு திருமண் காப்பு; e - சிறப்புடைத்தாயிருக்கும்; f - தோற்றங்கள்; g - மற்ற வடிவங்கள்

1 जाग्रत्स्वप्न त्यलसतुरीयप्रायध्यातृक्रमवदुपास्य: ।
स्वामिन् तत्तत्सहपरिवर्ह: चातुर्व्यूहं वहसि चतुर्धा ॥

ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் (2–40) : ஸ்வாமிந்! தேவரீரை த்யானம் பண்ணுபவர்களில் சிலர் விழித்துக் கொண்டிருப்பவர்கள் போலவும், சிலர் கனவு காண்பவர்கள் போலவும், வேறு சிலர் மூர்ச்சையடைந்தவர்கள் போலவும் இருக்கிறார்கள். அதாவதுமுதல் வகுப்பார்களுக்கு இந்த்ரியங்கள் வேலை செய்கின்றன, இரண்டாவது வகுப்பார்க்கு அவை வேலை செய்யாமல் மனம் மாத்திரம் வேலை செய்கிறது. மூன்றும் வகுப்பார்க்கு அதுவும் வேலை செய்வதில்லை. கடைசி வகுப்பார்க்கு உயிரோடு இருப்பதற்கு அடையாளமில்லை. இவர்களைப் போல தேவரீர் நான்கு ரூபமாய் இருந்து கொண்டு ஒவ்வொரு ரூபத்திலும் வாஸுதேவர் முதலாக நாலாகப் பிரிந்து அந்தந்த ரூபங்களுக்குத் தகுந்த குணங்களையும் ஆயுதங்களுடையவராய் உபாஸிக்கப் படுகின்றீர்.

கள் विभवान्तरங்கள். कपिलादि-संज्ञकங்கள் साक्षात्-भगवत्-अवतारங்-களல்ல. ஜீவர்களான प्रसिद्ध–कपिलादिகளை அநுப்ரவேசித்து அவர்களுக்கு अतिशयங்களை உண்டாக்குமவை.

'कृष्णरूपाण्यसंख्यानि'[a]

इत्यादिகளிற்படியே ஒரொன்றில் अवान्तर–भेद[b]ங்கள் बहु–प्रकारங்கள்.

(4) अन्तर्यामि-रूपமாவது– योगिகளுக்கு காணலாம்படி हृदय–प्रदेशத்துக்குள்ளே संनिहित[c]மாயிருப்பதொரு ஸூக்ஷ்ம– ரூப–விசேஷம்.

(5) अर्चावतारமாவது– पर व्यूहादि–லக்ஷணங்களோடே கூட स्वयं–व्यक्तादि–प्रक्रियையாலே देश–कालादि–विप्रकर्ष[d] மற்று मांस–चक्षुस्[e]க்களுக்கும் अनुभविக்கும்படி தோற்றுநிற்கும் நிலை. இங்கே

[1] 'यथा युवानं राजानं'

[2] 'सर्वातिशायि षाड्गुण्यं'

---

a - கண்ணனுடைய உருவங்கள் எண்ணற்றவை; b - உட்பிரிவுகள்; c- அருகில் உள்ளதான; d - இடத்தாலும் காலத்தாலும் மிகத்தூரத்திலிருந்தமை; e - ஊனக் கண்ணுடையவர்;

1 यथा युवानं राजानं यथा च मदहस्तिनम् ।
यथा प्रियातिथिं योग्यं भगवन्तं तथाऽर्चयेत् ॥

சாண்டில்ய ஸ்ம். (4–31) : இளவரசனையும் மதயானையையும் பயந்து உபசரிப்பது போல் பகவானை உபசரிக்க வேண்டும். வீட்டுக்கு வந்த பிரியனை விருந்தாளியைப் போல் மகிழ்வுடன் பகவானை ஆராதிக்க வேண்டும்.

2 सर्वातिशायि षाड्गुण्यं संस्थितं मन्त्रबिम्बयोः ।
मन्त्रे वाच्यात्मना नित्यं बिम्बे तु कृपया स्थितम् ॥

விஷ்வக். ஸம் : மந்திரங்களிலும் அவற்றால் பிரதிஷ்டை செய்யப்பட் அர்ச்சைத் திருமேனிகளிலும் ஆறு குணங்கள் மற்ற ரூபங்களைக் காட் டிலும் அதிகமாய் வெளியாகின்றன. மந்த்ரங்களில் பொருள் வடிவமாகவும் அர்ச்சையில் கருணை வடிவமாகவும் குணங்களின் இருப்பு.

[1] 'अर्च्यः सर्वसहिष्णुः'

इत्यादि श्लोकங்களையும் अभिमान[a]–संस्कार[b]–परिमाण[c]–अनुप्रवेश[d]–आभिमुख्यादि[e]–विशेषங்களையும் கண்டுகொள்வது.

இப் पर-व्यूहादि-सर्व-अवस्थैயிலும் सर्व-शरण्यனை ஸர்வேச்வரன்

[2] 'नित्यश्रीः'

[3] 'शान्तानन्त'

a - எம்பெருமானுக்கு உகப்பு; b - திருப்பிரதிஷ்டையில் விசேஷம்; c - விக்ரஹத்தின் அளவுக்கு ஏற்றபடி தன் உருவத்தைக் கொள்ளல்; d - சுத்த ஸத்துவமயமான திருமேனியுடன் உள்புகுதல்; e - க்ஷணமும் அகலாது நித்யமாய் எழுந்தருளியிருத்தல்

1 आस्तां ते गुणराशिवत् गुणपरीवाहात्मनां जन्मनां
संख्या भौमनिकेतनेष्वपि कुटीकुञ्जेषु रङ्गेश्वर ।
अर्च्यः सर्वसहिष्णुरर्चकपराधीनाखिलात्मस्थितिः प्रीणीषे
हृदयालुभिस्तव ततः शीलात् जडीभूयते ॥

ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் (2–74) : அர்ச்சைத் திருமேனி நாம் ஆராதிக்க எளியது; நம் அபராதங்களையும் பொறுத்துக் கொள்ளும் தன்மையது. தன்னையே ஆராதிப்பவர்க்கு வசமாக்கியுள்ளது.

2 तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः ।
श्रीवत्सवक्षा नित्यश्रीरजय्यः शाश्वतो ध्रुवः ॥

ராமா. யு. (114–15) : ஸ்ரீவத்ஸம் என்ற மறுவைத் திருமார்பில் அணிந்தவன்; பிராட்டியை எப்பொழுதும் பிரியாதவன் இராமபிரான்.

3 शान्तानन्तमहाविभूति परमं यद् ब्रह्म रूपं हरेः
मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम् ।
यान्यन्यानि यथासुखं विहरतो रूपाणि सर्वाणि
तान्याहुः स्वैरनुरूपरूपविभवैर्गाढोपगूढानि ते ॥

சதுச்லோகீ (4) : தாயே! எம்பெருமானுடைய ஸ்வரூபம் திருமேனிகள் முதலிய அனைத்தும் உன் ஸ்வரூபம் திருமேனி முதலியவற்றுடன் எப்பொழுதும் பிரியாது இணைந்திருக்கின்றன.

[1] 'नित्यानपायिनी'

इत्यादिகளிற்படியே स्व-अभिमत-अनुरूप-सहधर्मचारिणी-संश्लिष्ट[a]னாயிருக்கும்.

परादि-स्थान-विशेष[b]ங்களும் भुज-वर्ण-भूषण-आयुध-देवी-परिजन-परिच्छदादि[c]-விசேஷங்களும் கண்டு கொள்வது.

இவ் विग्रह-विशेष-विशिष्ट- வேஷத்தாலே शुभाश्रयत्व[d]ம் सर्व-अवस्थैயிலும் अनुवृत्त[e]ம்.

हिरण्यगर्भ-रुद्रादिகளுக்குச் சில अवस्थैகளிலே விசேஷித்து भगवत्-आवेशம் உண்டேயாகிலும் இவர்கள் சில अधिकारம் பெற்ற कर्म-वश्यரானபடியாலே प्रतिबुद्ध[f]ருக்கு ஸேவ்யரல்லர் என்று महाभारत-पौष्करादि-प्रसिद्धம்.

प्रतर्दनादि-विद्यै[g]களிலும் वर्ण-आश्रमादि-नियतங்களான சில धर्मங்களிலும் इन्द्रादि-चेतनान्तर-विशिष्ट-अनुसंधान[h]ம் विधि-बल-प्राप्त[i]மானாலும் அந்தச் चेतनान्तर[j]ங்கள் प्राणादि- अचेतन[k]ங்களின் படியே कञ्चुक-तुल्य[l]ங்களாய் நிற்கையாலே शुद्धयाजि[m]களுக்குப் போலே விசேஷ்யனான[n] பரமாத்மாவே आराध्यனாய் நிற்கையாலே ऐकान्त्य-विरोध[o]ம் வராது.

---

a - எம்பெருமான் தனக்கு உகந்த ஏற்ற தர்மபத்நியான பிராட்டியுடன் ஒன்றியவன்; b - பரரூபம் முதலிய ஐந்துக்கும் இருப்பிடங்களும்; c - திருக்கை- நிறம்- திருவாபரணம்- திருவாயுதம்- பிராட்டிமார்- பரிவாரம்- பெருமைச் சின்னங்கள்; d - பாபத்தைப் போக்குதலும் தியானிக்க உரியதாயிருத்தலும்; e - தொடர்ந்து நிற்கும்; f - ஞானிகளுக்கு; g - ப்ரதர்த்தநன் என்பவனுக்கு இந்திரன் உபதேசிக்கும் ப்ரஹ்மவித்யை ப்ரதர்தந வித்யை எனப்படும்; h - இந்திரன் முதலிய சேதநர்களுடன் கூடிய பரமாத்மாவை உபாஸித்தல்; i - சாஸ்த்ரம் விதித்த வலிமையால் வருவது; j - இந்திரன் முதலிய மற்ற சேதநர்கள்; k - ப்ராணன் முதலிய; l - சட்டைகள் (சொக்காய்) போன்றவர்களாய்; m - ச்வேதத்வீபத்தில் வாழும் பரமைகாந்திகள்; n - ப்ரதாநனான; o - எம்பெருமானையே உபாயமாகவும் பலனாகவும் கொண்டுள்ளமைக்கு முரண்பாடு

1 சரணாகதிகத்யம் - 1 : எம்பெருமானை விட்டு க்ஷணமும் பிரியாதவளான பிராட்டியைச் சரணமடைகின்றேன்.

साक्षात्–भगवान्–अवतार[a]ங்களில் आसुर–मोहनार्थ[b]மாகக் कर्मवश्यत्व–अभिनय-मात्र[c]மேயுள்ளது. शुद्ध-सृष्टि-विशेष[d]மான அவதார–ரஹஸ்யத்தின்[e] உண்மையை அறிந்தவனுக்குக் கடுக उपाय–पूर्ति[f]யாலே पुनर्भव[g]மில்லையாம். शुद्ध–अशुद्ध–सृष्टि[h]யிலே ஏதேனும் ஒன்றுக்குக் केवल–नित्यமும் केवल–अनित्यமும் காரணமாகாது. ஸ்வரூப– நித்யங்களான த்ரவ்யங்களும் அநித்யங்களான ईश्वर–संकल्प–विशेषादिகளுங்கூட सामग्रिயாம். இவற்றில் अनन्याधीन–स्वातन्त्र्य[i]த்தாலே ईश्वरன் प्रधान–कारणம்.

இவன் स्व-व्यतिरिक्तமான चेतन-प्रवृत्तिகளிலும் अचेतन- प्रवृत्तिகளிலும் यथा-योग[j]ம் कर्ता[k]வுமாய், प्रेरक[l]னுமாய், अनुमन्ता[m]வுமாய், सहकारि[n]யுமாய், साक्षि[o]யுமாய், फलप्रद[p]னுமாய், फलि[q]யுமாய், उदासीन[r]னுமாய் நிற்கும் நிலை

[1] 'एकस्त्वमसि लोकस्य स्रष्टा'

---

a - நேராக; b - அசுரத்- தன்மையரை மயக்குவதற்காக; c - கர்மத்துக்கு வசப்பட்டதாய் பாவனை செய்வது மட்டுமே; d - சுத்த ஸத்த்வத்தால் ஆகிய படைப்பு; e - (1) அவதாரங்கள் உண்மையானவை (2) அவதாரங்களிலும் தன் ஸ்வ–பாவத்தை விடாமை (3) சுத்த ஸத்துவமயமான திருமேனியுடைமை (4) தன் ஸங்கல்பத்தாலேயே அவதரித்தல் (5) தர்மம் குறையும் போது அவதரித்தல் (6) ஸாதுக்களைக் காக்கவே அவதரித்தல்; f - மோக்ஷத்துக்கு உபாயம் பூர்த்தி–யாவதால்; g - மறுபிறப்பு; h - சுத்த ஸ்ருஷ்டி– சுத்த ஸத்துவப் படைப்பு. அசுத்த ஸ்ருஷ்டி – ஸத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணப் பொருள்களையும் கொண்டு செய்யும் படைப்பு; i - பிறருக்கு வசப்படாத சுதந்திரத் தன்மை; j - அததற்குத் தக்கவாறு;k - செயல் புரிபவன்; l - செய்யுமாறு ஏவுமவன்; m - செயலில் இறங்கியவனை ஊக்குமவன்; n - துணைபுரியுமவன்; o - நேரில் பார்த்துக் கொண்டிருப்பவன்; p - பலனை அளிப்பவன்; q - பலனை முக்கியமாய்ப் பெறுமவன்; r - விசேஷ தொடர்பற்றுப் பொதுக் காரணமாக நிற்பவன்

[1] एकस्त्वमसि लोकस्य स्रष्टा संहारकस्तथा ।
अध्यक्षश्चानुमन्ता च गुणमायासमावृत: ॥

ஜிதந்தே (1–3) : எம்பெருமானே! நீ ஒருவனே உலகங்களைப் படைப்பவனாயுள்ளாய்.

इत्यादिகளிற்படியே उचित-व्यवस्थैயாலே கண்டுகொள்வது. संकल्प-मात्रத்தாலே ஸர்வேச்வரன் பண்ணும் प्रेरण[a]ம் शरीर भूतங்களான चेतन-अचेतनங்கள் இரண்டிலும் ஒத்திருக்கும். कृपा-मूल[b]மான उपदेश-मुखத்தாலே பண்ணும் प्रेरणம் शास्त्र-वश्यரான क्षेत्रज्ञ[c]ர் பக்கல் अधिकம்.

(1) இப்படி सर्व-प्रकार-विशिष्टனாய்க் கொண்டு निरतिशय-भोग्यனான श्रियः-पतिயே प्रधान-तत्त्वம்.

(2) இவனோடு நமக்கு உண்டான शरीर-आत्म-भावம் प्रधान-संबन्धம்.

(3) இவனுடைய उपायत्व-उपेयत्व-रूपமான अर्थ-द्वयம் प्रधान-ज्ञातव्य[d]ம்.

(4) இவை இரண்டுக்கும் உட்கருவான[e] नारायण-शब्दம் प्रधान-नामधेयம்.

(5) இவன் பக்கல் प्रार्थना-पूर्वक-भरन्यासம் प्रधान-हित[f]ம்.

(6) இவனுக்கு अभिमतத்தை நடத்துகை प्रधान-पुरुषार्थம்.

(7) இத் तत्त्व-हित-पुरुषार्थங்களில் தெளிவும் துணிவும் त्वரையும் உண்டாம்படி मूल-मन्त्रादिகளாலே ஸம்யக்காக उपदेशिத்தவன் प्रधान-आचार्यன்.

(8) இவன் उपदेशத்தாலே सम्यक्-ज्ञानம் பிறந்தால் निषिद्ध-निवृत्ति[g]யும் विषय-विरक्ति[h]யும் पतिव्रता-अनुराग-तुल्यமான भगवत्-प्रेम[i]முடையவனாய்ச் चोदित[j]-कैङ्कर्यத்தில் நிற்கு-

a - ஏவுதல்; b - கருணையால் வருகின்ற; c - ஜீவர்கள்; d - அறிய வேண்டியவற்றுள் முக்கியமானது; e - தனக்குள் அடக்கிக் கொண்டிருக்குமது; f - உபாயம்; g - தகாதவற்றைச் செய்யாமை; h - உலகவின்பங்களில் ஆசையறுதல்; i - எம்பெருமானிடம் பக்தி; j - சாஸ்த்ரம் விதித்த

மவன் ப்ரதான-ஶிஷ்யன். இவனுக்கு முக்திக்கு மூலகாரண-மான தத்த்வ-த்ரய-விவேகம் பிறந்தபடியை கோ-க்ஷீர-க்ருத-த்ருஷ்டாந்த[a]த்தாலே உபநிஷத்துக் காட்டிற்று. இதைக்

1 'கறந்த பாலுள் நெய்யேபோல்'[67*1]

என்கிற த்ரமிட-உபநிஷத்-வாக்யத்திலும் காணலாம்.

இங்கே சித் அசித் என்கிற சரீர வகுப்பையும் அநுஸந்திப்பது. இத் தெளிவோடே பரஸமர்ப்பணாதிகள் பண்ணினால் அநுஶயி[b]க்க வேண்டா. இத் தெளிவன்றிக்கே பண்ணினாலும் இத்தனை-யடியரானார்க்கு இரங்கு நம் அரங்கனாய பரமகாருணிகன் காலக்-கழிவற[c] ஞானக்கை[d] தர, இத் தெளிவோடே தலைக்கட்டும்.

1 *குடன்மிசையொன்றியும் கூடியும்நின்ற கொடுந்துயரும்*
*உடன்மிசைத் தோன்றுமுயிரும் உயிர்க்குயிராமிறையும்*
*கடன்மிசைக்கண்ட தரளத்திரளவை கோத்தபொன்னூல்*
*மடன்மிசை வார்த்தையதன் பொருளென்ன வகுத்தனமே.* (28)

**a** - பசு-பால்- நெய்- இந்த உவமானம், விளக்கம் ரஹ. விவரணத்தில் காண்க; **b** - பச்சாத்தாபமடைய வேண்டாம்; **c** - கால விளம்பமின்றி; **d** - ஞானமாகிய கையைக் கொடுக்க

1 *பிறந்தமாயா! பாரதம்பொருதமாயா! நீயின்னே*
*சிறந்த கால் தீ நீர் வான்மண் பிறவுமாய பெருமானே!*
*கறந்தபாலுள் நெய்யேபோல் இவற்றுளெங்கும் கண்டுகொள்*
*இறந்துநின்ற பெருமாயா! உன்னை எங்கே காண்கேனே!*

திருவாய் 8–5–10 : கறந்து வைத்த பாலினுள் நெய் கண்ணுக்குப் புலப்படாதிருப்பது போல் ஸகல வஸ்துக்களிலும் இருந்தும் காணமுடியாதவனை உன்னை எந்த இடத்தில் காண்பேன்?

2 *குடல் மிசை - சரீரத்தில்; ஒன்றியும் கூடியும் நின்ற - ஒன்றுபட்டும் சேர்ந்தும் இருப்பதும்; கொடுந்துயரும் - கொடிய துன்பத்தைத் தருகின்றதுமான ப்ரக்ருதியென்னும் அசேதநமும்; உடல் மிசைத் தோன்றும் உயிரும் - சரீரத்தில் இருந்து நடத்தும் ஜீவாத்மாவென்னும் சேதநமும்; உயிருக்கு உயிர் ஆம் இறையும் - ஜீவாத்மாவுக்கும் அந்தர்யாமியாயுள்ள ஸர்வேசுவரனும் (முறையே); கடல் - கடலாகவும்; (கடல்) மிசைக் கண்ட - கடலிலுள்ள; தரளத்திரள் -*

1 தத்துவந்தன்னில் விரித்திடத்தோன்று மிரண்டுதனில்
பத்திவிலக்கிய பாசண்டர்வீசுறும் பாசமுறார்
எத்திசையுந் தொழுதேத்திய கீர்த்தியரெண்டிசையார்
சுத்தருரைத்த சுளகமருந்திய தூயவரே. (29)

2 வினைத்திரள்மாற்றிய வேதியர்தந்த நல்வாசகத்தால்
அனைத்துமறிந்தபின் ஆரும்பயனுமென வடைந்தோம்
மனத்திலிருந்து மருத்தமுதாகிய மாதவனார்
நினைத்தல் மறத்தலரிதாய நன்னிழல்நீள்கழலே. (30)

---

முத்துக்களின் குவியலாகவும்; அவை கோத்த பொன்நூல் - அந்த முத்துக்களைக் கோத்த தங்க நூலாகவும் (இருக்கின்ற வென்னும் விஷயம்); மடல் மிசை - காதுகளில் (ரஹஸ்யமாய் ஆசார்யர்கள் உபதேசித்து); வார்த்தையதன் பொருள் என்ன - வாக்யங்களின் அர்த்தம் என்று; வகுத்தனம் - (இந்த ரஹஸ்யத்தில் நாம்) விளக்கிக் காட்டினோம்.

எத்திசையும் தொழுது ஏத்திய கீர்த்தியர் - எத்திசையிலுள்ளோரும் வணங்கிப் புகழ்கின்ற கீர்த்தியுடையவர்களும்; எண் திசை ஆர் சுத்தர் - எல்லா ப்ரகாரத்தாலும் நிறைந்த பரிசுத்தியுடையவருமான நம் ஆசார்யர்கள்; உரைத்த சுளகம் - உபதேசித்த (விஷயங்கள் அடங்கிய) இந்த தத்த்வ த்ரய சுளகமென்னும் ரஹஸ்யத்தை; அருந்திய - உட்கொண்டு அநுபவித்த; தூயவர் - பரிசுத்தர்கள்; தத்துவம்தன்னில் - மூன்று தத்துவங்களுக்குள்; விரித்திடத் தோன்றும் - விளக்கிக் கூறும் போது (முக்கியமாய்த்) தோன்றுகிற; இரண்டுதனில் - (சேதநம் ஈசுவரன் என்னும்) இரண்டு தத்துவங்களில்; பத்தி விலக்கிய - (அவற்றின் ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் உள்ளபடி அறியாது வெறுப்பவர்களான) அன்பற்ற; பாசண்டர் வீசுறும் - நாஸ்திகர்கள் வீசுகின்ற; பாசம் உறார் - பாசத்தில் அகப்பட மாட்டார்கள்.

வினைத்திரள் மாற்றிய - (நம்மிடம் உள்ள) பாபக் கூட்டங்களை ஒழித்த; வேதியர் தந்த நல்வாசகத்தால் - ஆசார்யர்கள் அருளிய நல்ல உபதேசத்தால்; அனைத்தும் அறிந்த பின் - (தத்துவம் ரஹஸ்யம் முதலிய) எல்லாவற்றையும் அறிந்த பிறகு; மனத்தில் இருந்து - (நம்முடைய) ஹ்ருதயத்தில் நித்யவாஸம் செய்து; மருந்து அமுதாகிய - (கர்ம பந்தத்தை ஒழிக்கும்) மருந்தாகவும் (அநுபவிப்பதற்கு நல்ல) அம்ருதமாகவும் ஆகியவனான; மாதவனார் - ஸ்ரீமந் நாராயணனுடையதும்; நினைத்தல் மறத்தல் அரிதாய -

1 'इतीरितो देशिकदत्तचक्षुषा यथाश्रुतं वेङ्कटनाथसूरिणा ।
अपक्षपातैर्निपुणैः समीक्ष्यताम् अनात्मजीवेश्वरचिन्तनक्रमः ॥

2 'तरळ दुरवगाहात् तत्त्वदुग्धाम्बुराशेः
यदमृतमुदहार्षीत् वेङ्कटेशो यथावत् ।
तदिह चुळकमात्रं साधुभिः सावधानैः
अपुनरुपनिषेव्यस्तन्यमास्वादनीयम् ॥

ஈச்வர நிரூபணாதிகாரம் முற்றும்

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य
वेदान्ताचार्यस्य कृतिषु
**तत्त्वत्रयचुळकं** संपूर्णम् ।
**தத்த்வத்ரய சுளகம் முற்றும்.**
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

(பெருமையைப் பார்த்தால்) நினைக்கவும் (இனிமையைப் பார்த்தால்) மறக்கவும் முடியாததும்; நிழல் - (சரணமடைந்தவனுடைய தாபத்தைப் போக்கவல்ல குளிர்ந்த) நிழலுடையதுமான; நல் நீள் கழலே - சிறந்த நீண்ட திருவடியையே; ஆறும் பயனும் என அடைந்தோம் - உபாயமும் பலனும் என்று அநுஸந்தித்து அடைந்தோம். ■

ஆசார்ய அநுக்ரஹத்தால் ஞானக் கண்ணைப் பெற்றவரான ஸ்ரீவேங்கடநாதஸூரி என்னும் வேதாந்த தேசிகனாலே ஆசார்யர்களிடம் கேட்டபடியே இயற்றப்பட்ட இந்தத் தத்துவத்ரய சுளக நூல் பக்ஷபாதமற்ற அறிஞர்களால் அநுஸந்திக்கப்பட உரியதாகும்.

தத்துவங்களின் தொகுதி ஒரு பெரும் பாற்கடல். நிலையற்ற உள்ளமுடையருக்கு அக் கடலில் இறங்கிச் சிந்திக்க முடியாது. அந்தக் கடலினின்று வேங்கடேச கவி அமுதம் போன்ற அம்சங்களை உள்ளவாறு எடுத்துத் தத்துவத்ரய சுளக மென்னும் இந்த நூலை இயற்றினார். இந்தக் கிரந்தம் உள்ளங்கை அளவு என்னும்படி சிறிய நூலாயினும் இதை நன்கு உணர்ந்தால் தாய்ப்பால் பருக வேண்டிய மறுபிறவியின்றி மோக்ஷத்தைப் பெற வழிகாணலாம். இந்த ரஹஸ்யம் மிக்க கவனமுடையரான நல்லோர்கள் அமுதம் போல் சுவைத்து அநுபவிக்க உரியதாகும்.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# 16 रहस्यत्रयचुलकम्

(விளக்கம் – ரஹ. விவ. – 255 – 295)

# 16 ரஹஸ்ய த்ரய சுளகம்

[முன்னுரை : மிகச் சிறந்துயர்ந்த ஆசார்யனை அடைந்து அவன் கடாக்ஷத்தால் ஞானம் பெற்று ப்ரபத்தியைச் செய்தவனுக்கு அந்த ப்ரபத்திக்குப் பின் திருமந்திரம் – த்யவம் – சரமச்லோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களை அநுஸந்தித்துக் கொண்டும் அவற்றின் அர்த்தங்களைச் சிந்தித்துக் கொண்டும் இருப்பது எப்பொழுதும் இன்பத்தைத் தரும். அவற்றின் பொருளை திருமந்த்ராதிகாரம், த்வயாதிகாரம், சரம சுலோகாதிகாரம் என்று விபாகப் படுத்தி விளக்கியுள்ளார். இந்த ரஹஸ்ய த்ரய சுளகத்திற்கு 'ஸார ஸங்க்ஷேபம்' என்னும் பெயர் வழங்குகிறது.]

## திருமந்த்ராதிகாரம்

[1] *ஓதுமறை நான்கதனில் ஓங்குமொரு மூன்றினுள்ளே*
*நீதிநெறி வழுவா நிற்கின்றோம் – போதமரும்*
*பேரா யிரமும் திருவும் பிரியாத*
*நாராயணனருளால் நாம்.* (31)

---

1 *போதம் அரும் - (அர்த்தம்) அறிவதற்கு அரிதான, (அல்லது) போது அமரும் - நாவாகிய புஷ்பத்தில் பொருந்திய; பேராயிரமும் - ஸஹஸ்ர நாமமும்; போது அமரும் திருவும் - (தாமரைப்) பூவில் அமர்ந்திருப்பவளான பிராட்டியும்; பிரியாத - எப்பொழுதும் சேர்ந்திருக்கின்ற; நாராயணன் அருளால் - நாராயணனுடைய க்ருபையால்; ஓதும் மறை நான்கதனில் - அத்யயநம் செய்யப் படுகின்ற வேதங்கள் நான்கினில்; ஓங்கும் ஒரு மூன்றினுள்ளே - உயர்ந்து நிற்கும் மூன்று ரஹஸ்யங்களில் (சொல்லப்பட்ட); நீதி நெறி - ஸந்மார்க்கத்து நிஷ்டையில்; நாம் வழுவா நிற்கின்றோம் - நாம் தவறுமல் நிலைபெற்றிருக்கின்றோம்.*
*'போதமரும்' என்ற தொடரை பேராயிரத்திலும் திருவிலும் அந்வயிக்க, ஸஹஸ்ரநாமம் பகவானுடைய புகழையே வெளியிடுவதால் 'பிரியாத' என்னப்பட்டது.*

सदाचार्य–कटाक्षமுடையனான शरणागतனுக்கு रहस्य–त्रय–अर्थ[a]ம் नित्य–भोग्य[b]ம். இவற்றில் திருமந்திரம் ஸர்வ–ஸங்க்ரஹம். இது எட்டுத் திருவக்ஷரமாய், மூன்று पदமாய், ஒரு வாக்யமாயிருக்கும். இதில் மூலமாகிய[c] ஒற்றையெழுத்தான प्रथम–पद[d]த்தை श्रुति–स्मृतिகள் சொல்லுகிறபடியே பிரித்துப் பார்க்குமளவில் மூன்று[e] அக்ஷரமாய், அவை தாமும் மூன்று पदமாய், ஒரு வாக்யமாயிருக்கும்.

இதில் प्रथम-அக்ஷரம்[f] सर्व–कारण–भूतனாய், ஸர்வ-ரக்ஷகனாய், ஸர்வ–சேஷியுமான श्रियःपतिயைச் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்– वाच्य[g]ங்களுக்கெல்லாம் மூலமானவனை वाचक[h]ங்களுக்கெல்லாம் மூலமான இது[i] காட்டும் என்று புராணம் சொல்லிற்று. இது[i] अव–रक्षणे[j]– என்கிற धातु[k]விலே நிஷ்பந்நமாய்[l] ஸர்வ–ரக்ஷகனைக் காட்டுகிறது. இதில் ஏறி லோபித்த[m] चतुर्थी[n] ரக்ஷணீயனான ஜீவனுடைய तादर्थ्य[o]த்தைச் சொல்லுகையாலே ஸர்வ–ரக்ஷகனுடைய ஸர்வ சேஷித்வமும் सिद्धिக்கிறது. இச் शेष–शेषि–भावம் ஒழிக்க ஒழியாத உறவானபடியாலே शरीर–आत्म–भावம் வரும்படி கண்டுகொள்வது. ஸர்வ–காரண–भूतனாய் ஸர்வரக்ஷகனாய், ஸர்வசேஷியுமான ஸர்வேச்வரனைச் சொல்லுகிற இவ் வக்ஷரத்தில் द्वयத்திற்போலே यथाप्रमाणம் उपयुक्त-सहधर्मचारिणी–संबन्ध[p]மும் விவக்ஷிதம்[q].

---

a - திருமந்திரம் – த்வயம் – சரம ச்லோகம் இவற்றின் அர்த்தம்; b - எப்பொழுதும் அநுபவிக்க இனியது; c - எல்லா வேதங்களுக்கும் முதலான; d - ப்ரணவத்தை; e - அ, உ, ம்; f - அ என்பது; g - சொல்லால் கூறப்படும் வஸ்துக்கள்; h - பொருளைக் குறிக்கும் சொற்கள்; i - அகாரம்; j - அவ் என்னும் வினைப்பகுதி காத்தல் என்பதைக் காட்டும்; k - வினைப் பகுதி; l - தேறிதாய்; m - மறைந்த; n - ஆய என்னும் 4ம் வேற்றுமை உருபு; o - சேஷத்வத்தை, அடியனாந் தன்மையை; p - அவசியம் வேண்டிய பிராட்டியின் ஸம்பந்தமும்; q - கூறியதாகக் கொள்ள வேண்டும்

मध्यम-அக்ஷரம்[a] अवधारणार्थ[b]மாய் अकार-वाच्यனுக்கே என்று இஸ்संबन्धத்தை நியமித்துக்கொண்டு[c] மற்றுள்ளாரோடு निरुपाधिक[d]மாகத் துவக்கு இல்லையென்கிறது.

[1] 'மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோ
டுற்றிலேன்'

என்கிறபடியே तदीय-पर्यन्त[e]மாக देवान्तर-वर्जन[f]ம் सिद्धिக்கும்.

तृतीय-அக்ஷரம்[g]

'मन ज्ञाने[h]'

इत्यादिகளிலே நிஷ்பந்நமாயாதல், अस्मत्-शब्दத்தில் छान्दस-प्रक्रि[i]யையாலே लुप्त-शेष[j]மாயாதல் एक-व्यञ्जन-मात्र[k]மான पदமாய் ज्ञान-आनन्द-स्वरूपமான முன் சொன்ன शेषत्व-आश्रयமான ஆத்மாவைக் காட்டுகிறது.

a - உகாரம்; b - அவனுக்கே என்ற பொருளுடையதாய்; c - எப்பொழுதும் உள்ளதாய் உறுதிப் படுத்திக் கொண்டு; d - இயற்கையாக; e - மற்ற தெய்வங்களின் அடியார்கள் வரையில்; f - பிற தெய்வங்களை விலக்கல்; g - ம் என்பது; h - மந் என்னும் வினைப்பகுதி அறிதல் எனும் பொருளைக் காட்டும்; i - வேதத்துக்கு உரிய இலக்கண முறை; j - மறைந்தது போக எஞ்சிய பகுதியாய்; k - ஒரு மெய்யெழுத்து மட்டும் உள்ள வடிவமான

1 மற்றுமோர்தெய்வமுளதென்றிருப்பரோ
டுற்றிலேன், உற்றதுமுன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்று நான்கண்ணபுரத்துறையம்மானே.

பெரிய திருமொழி. (8–10–3) ÷ எம்பெருமானே! உன்னைத் தவிர வேறு உபாஸிக்கத் தக்க தெய்வம் இருக்கிறது என்று எண்ணுமவர்களுடன் நான் சேரேன். அடியேன் விரும்பி ஏற்றுக் கொண்டதும் உன் பக்தர்களுக்கு அடிமையாயிருப்பதுவே.

உன் திருவஷ்டாக்ஷர மந்திரம் அறியவேண்டிய எத்தனையோ விஷயங்களை வெளியிடுகின்றது. ஆனால் அந்த மந்திரத்தை நான் கற்று அதனால் உணர்ந்த ஸாரமான பொருள் பாகவதர்களுக்கு அடியனாயிருந்து கைங்கர்யம் செய்வதே.

இவ் अक्षर–त्रय[a]த்தால் स्वयं–प्रकाश[b]ஞய் अनुकूल–स्वभाव[c]ஞய் ज्ञाता[d]வாய் स्वस्मै-भासमान[e]ஞய் चतुर्विंशति–तत्त्व–विलक्षण[f]ஞன ஜீவாத்மா (நான்) सर्व–कारण–भूतஞய், ஸர்வ–ரக்ஷகஞய், ஸர்வ–சேஷியு–மான श्रिय:पतिக்கே अनन्यार्ह–निरुपाधिक–शेषभूत[g]னென்று अनुसंधिத்தாஞயிற்று. இப்படி தன்னைச் சொல்லவே தன்னுடைமையும் அவனுக்கே சேஷமென்றதாம்.

'दासभूता: स्वत: सर्वे '[137*3]

[1] 'मम नाथ '

'अकारार्थो विष्णु:'[11*1]

[2] 'கண்ணபுரமொன்றுடையனுக்கடியேன்
ஒருவர்க்குரியேனே'[21*1]

इत्यादिகளை இங்கே अनुसंधिப்பது. पतिக்கு शेषமென்னவே பத்நிக்கும்

a - அ-உ-ம் என்ற மூன்றால்; b - வேறொரு ஞானம் வேண்டாதபடி தானே நான் என்று பிரகாசிப்பவன்; c - தன் ஸ்வரூபம் தனக்கு எப்பொழுதும் அநுகூலமாகவே யிருக்கப் பெற்றவன்; d - அறிவுடையன்; e - தன் பயனுக்காகவே பிரகாசிப்பவன்; f - 24 அசேதந தத்துவங்களிலும் வேறுபட்டவன்; g - வேறொருவனுக்கன்றி அவனுக்கே இயற்கையாக அடியன்

1 मम नाथ यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव ।
नियतस्वमिति प्रबुद्धधी: अथवा किं नु समर्पयामि ते ॥

ஆளவந்தார் ஸ்தோத்ரம் (53) : நாதனே! மாதவனே! நானென்றும் என்னுடையவை என்றும் சொல்லப்படும் வஸ்துக்கள் அனைத்தும் வெறொருவனுக்கன்றி உனக்கே எப்பொழுதும் சேஷமாயுள்ளன வென்று உன் அநுக்ரஹத்தால் ஏற்பட்ட சாஸ்த்ரங்களைக் கொண்டு நன்கு உணர்ந்த நான் புதிதாய் உனக்கு ஸமர்ப்பிக்க வேண்டியது என்ன உள்ளது? என்னுடையதை உன்னுடையதாகச் செய்வதற்கு ஒன்றும் இல்லை. எல்லாம் உனக்குச் சேஷமானவை என்று உணருவது மட்டுமே எனக்கு.

2 பெ. திருமொழி (8–9–3) : கண்ணபுரமுடையானாகிய எம்பெருமானுக்கே அடியனான நான் வேறொருவருக்கு உரியனாவேனோ!

சேஷமென்றதாம். மத்யம-அக்ஷரம்[a] லக்ஷ்மீ-வாசகமாய் மகார-வாச்யனான ஜீவன் அவ்விருவருக்கும்[b] தாஸ-பூதன் என்கிற யோஜனையில்[c] அவதாரண[d]ம் ஆர்த[e]ம்.

மத்யம-பத[f]ம் ஸூக்ஷ்ம-யோஜனையில்[g] இரண்டு அக்ஷரமாய், இரண்டு பதமாய், ஒரு வாக்யமாகிறது. ம: - என்றது எனக்கு என்றபடி . இது விரோத-வர்கத்தை எல்லாவற்றையும் கணிசிக்கிறது[h] இத்தால்[i] ஆகிஞ்சன்யாதிகளும் பலிக்கும். ந- என்று இவ் விரோதியை நிஷேதி[j]க்கிறது. 'நான் எனக்கு உரியேனல்லேன், வேறொன்றுக்-கும் உரியேனுமல்லேன்' என்றதாயிற்று. 'என்னுடைய க்ரியை[k]-யும் என்னதன்று- நானும் என்னதல்லேன்-பகவானுக்கே நான் ஆகாநின்றேன்' என்று நிருக்தத்தில்[l] சொல்லுகிறபடியே தானும் தன் உடைமையும் தனக்கும், பிறர்க்கும் உரியனவல்-லாதபடி பகவத்-அனன்யார்ஹ-சேஷத்வ[m]ம் ப்ரணவ- நமஸ்ஸுக்களிலே அனுஸந்திக்கப்பட்டது.

இதுதன்னாலே[n] தன்னையும் தன் உடைமையையும் சேரத் தன்னோடு துவக்கு அறுக்கிறதாகவுமாம். இத்தாலே அஹங்கார-மமகாரங்களாகிற ஸம்ஸார- மூலங்கள் சேதி[o]க்கப் பட்டன. அசித்-விலக்ஷணனான[p] நான் ச்ரிய:பதிக்கே சேஷ-பூதன். 'அவன் என்னுடையஸ்வாமி' என்கிற யதாவஸ்தித[q]- அஹங்கார-மமகாரங்கள் அனுகுண[r]ம்.

---

a - உ என்பது; b - பெருமாளுக்கும் பிராட்டிக்கும்; c - அர்த்தம் கூறும் முறையில்; d - இருவருக்கு மட்டுமே என்பது; e - கருத்தால் கிடைப்பதாகும்; f - நம: என்பது; g - நிருக்தத்தில் உள்ள அக்ஷரங்களைப் போல் நம: என்பதிலும் அக்ஷரங்களைப் பிரித்துப் பொருள் கூறும் முறை; h - குறிப்பிடுகின்றது; i - நம: என்பதால்; j - மறுக்கின்றது; k - செயலும்; l - மந்திரத்தின் பொருளை விளக்கும் நூல்; m - வேறொருவருக்கு- மன்றி எம்பெருமானுக்கே அடியனாந்தன்மை; n - நம: என்பதாலே; o - அறுக்கப்பட்டன; p - அசேதநத்திலும் வேறுபட்ட; q - உண்மையென ஏற்கக் கூடிய; r - ஸ்வரூபத்துக்கு ஏற்றது

[1] 'யானே என்தனதே'[59*1]

इत्यादिகளில் சொல்லுகிற விபரீத–அஹங்கார–மமகாரங்கள் दोष[a]ம்; அவைகளாயின இங்கே[b] கழிக்கப்படுகின்றன.

கீழே[c] अन्य–शेषत्व[d]ம் கழிகையாலே தனக்குத் தானும் வேறொன்றும் निरुपाधिक–शेष[e]மன்று என்று फलिக்கையாலே நமஸ் स्व–स्वातन्त्र्य–निवृत्ति[f]யைச் சொல்லுகிறதாகவுமாம். அதாவது लौकिक–दासादि[g]கள் படியன்றிக்கே स्व–व्यापार[h]த்தில் नित्य–पर–सापेक्ष[i]னாகை. இப்படி ஸ்வதந்த்ர– ஸ்வாமி இட்ட வழக்கான தனக்கு

[2] 'அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்'[49*1]

என்கிறபடியே

'திருவேட்டெழுத்துங்கற்றுநான் .........

உற்றதுமுன்னடியார்க்கடிமை'[275*1]

என்கிற भागवत-शेषत्व[j]மும் இங்கே[k] सिद्धिக்கிறது. இங்கு भागवतரென்கிறது– கீழ்ச் சொன்ன पर–शेषत्व–ज्ञान–रसिक[l]ரை. ஸ்வாமியான தனக்கு अभिमत[m]மானதொரு வழியாலே[n] ஸ்வதந்த்ரனானவன் தானே प्रवर्तिப்பிக்க அம்முகத்தாலே அவனை வசீகரிக்க

---

a - ஸ்வரூபத்துக்குப் பொருந்தாதவை; b - நம: என்பதில்; c - ப்ரணவத்தில்; d - பிறருக்கு அடியனாந்தன்மை; e - இயற்கையில் சேஷமன்று; f - தனக்குச் சுதந்திரம் நீங்குதல்; g - உலகிலுள்ள பணியாளர்கள்; h - தன் செயலில்; i - எப்பொழுதும் எம்பெருமானையே எதிர்பார்ப்பவன்; j - பாகவதர்களுக்கும் அடியனாயுள்ளமை; k - நம: என்பதில்; l - எம்பெருமானுக்கு அடியார் என்ற உணர்ச்சியில் ருசி கண்டவர்கள்; m - உகப்பான; n - இங்கு ப்ரபத்தி

1 திருவாய்மொழி (2–9–9) : நானே சேஷி; இந்த வஸ்துக்கள் என்னுடையனவே.

2 அமலனாதி (1) : பாகவதர்களுக்கே என்னை அடியனாக்கி எப்போதும் எவ்வகைக் குற்றமுமின்றிப் பிரகாசிப்பவன்.

வேண்டுமாகையால் अकिञ्चन[a]னுக்கு அவன் பக்கல் स्व–रक्षण–भर[b]த்தை ஸமர்ப்பிக்கையாகிற உபாய விசேஷமும் இங்கே ஃபலிக்கும்.

नमः – என்கிற शब्दம் தானே प्रयोग–விசேஷங்களாலும்[c], பல சாஸ்த்ரங்களாலும், अधिकारादिகளுடனே கூடின ப்ரபத்தி தன்னையே சொல்லுகிறதாகவுமாம்.

இப் ப்ரபத்திக்கு இலக்காய் शरण्य–गुण–पूर्णனாய் நின்ற ரக்ஷகனை சேஷியின் படியையும் ப்ரபத்தி–கர்த்தாவாய் आत्म–गुण-युक्तனாய் ரக்ஷணீயனை शेष-भूतன் படியையும், आकारान्तरங்-களாலே வெளியிடுகிறது நாராயண–शब्दம். இது நாரங்களை அயநமாகவுடையவன் என்றுதல்– நாரங்களுக்கு அயநமென்–றுதல் சொல்லும். ர என்று அழியும் வஸ்துக்களைச் சொல்லி, நர சப்தத்தாலே அழியாத சேதநரைச் சொல்லி, நார என்று சேதருடைய ஸமூஹத்தைச் சொல்லி, இஸ்ஸமூஹம் தான் பல என்னமிடத்தை बहु–वचनத்தாலே சொல்லுகிறது. நர– என்று ஒருபடியாலும் அழிவில்லாத नेता[d]வான ஸர்வேச்வரனைச் சொல்லி அவனோடே यथा–प्रमाणம் संबन्धமுடைய ஸர்வத்தையும் நார–शब्दத்தாலே சொல்லுகிறதாகவுமாம். இத்தை அயநமாகவு–டையனாகை யாவது– இருப்பிடமாகவாதல் व्याप्य[e]மாகவாதலு–டையவன் என்றபடி. இத்தால் அவ்வோ வஸ்துக்களில் உள்ளும் புறம்பும் ஒழிவற நிறைந்து நிற்கிற நிலை தோற்றுகி–றது. चेतन द्रव्यங்களை நித்யமாக நியமித்துக் கொண்டு வ்யாபித்து நிற்கையாலே शरीर–आत्म–भावம் ஃபலிக்கும். இவற்றிற்குத் தான் அயநமென்றால் उपायமாயும் उपेय[f]மாயும் आधारமாயும் நிற்கிற

---

a - பக்தி யோகமாகிய கைம்முதலற்றவன்; b - தன்னைக் காக்கும் பொறுப்பை; c - ப்ரபத்தியைச் சொல்ல வேண்டிய இடத்தில் நம: என்பதைக் கூறும் வழக்கு; d - எல்லாவற்றையும் நடத்துமவன்; e - வ்யாபிக்கப்படும் பொருள்; f - பயனும்

நிலை தோற்றுகிறது. நீயே உன்னைத் தரவேண்டும் என்றவர்களுக்கு

[1] 'எனக்கே தன்னைத் தந்த கற்பகம்'

என்கிறபடியே उपायமும் उपेयமுமாகிறான். चेतन–अचेतनங்கள் இரண்டுக்கும் உடன்மிசை உயிரென நின்று आधारமுமாகிறான். இப்படிப் परम–चेतन[a]னைக் குறித்து अपृथक्सिद्ध–आधेय[b]ங்களான चेतन–अचेतनங்கள் இரண்டுக்கும் शरीरत्वமும் सिद्धिக்கும். कारणत्व–उपायत्वादिகளைச் சொல்லுகிற இத் திருநாமத்தில் उभय–विभूति–योग[c]மும், उभय–लिङ्गत्व[d]மும், सर्वविध–बन्धुत्वமும் अनुसंधेयம்.

[2] 'நாரணன் தம்மன்னை நரகம்புகாள்'

---

a - எல்லோரினும் மேம்பட்ட சேதநனை எம்பெருமான்; b - எம்பெருமானை விட்டுப் பிரிக்க முடியாத – அவனால் தரிக்கப்படுமவையான; c - லீலாவிபூதி – (ஸம்ஸார மண்டலம்) நித்யவிபூதி – (பரமபதம்) இரண்டு விபூதிகளையும் உடைமை; d - இழிவான குணங்கள் அற்றமையும் கல்யாண குணங்களையுடைமையும்

1 *பற்பநாபனுயர்வற வுயரும்பெருந்திறலோன்*
*எற்பரனென்னையாக்கிக் கொண்டெனக்கேதன்னைத்தந்த*
*கற்பகம், என்னமுதம்கார்முகில்போலும் வேங்கடநல்*
*வெற்பன், விசும்போர்பிரானெந்தைதாமோதரனே.*
திருவாய்மொழி. (2–7–11) ÷ எம்பெருமான் என்னைத் தன்னையன்றி மற்றவற்றில் ஆசையற்றுத் தன்னிடமே ஈடுபடும்படி செய்து கொண்டு எனக்கே தன்னை அநுபவிக்கத் தன்னையே கொடுத்த கற்பக வ்ருக்ஷமாய் நிற்பவன்.

2 *காசும்கறையுடைக்கூறைக்குமங்கோர் கற்றைக்கு*
*மாசையினால், அங்கவத்தப்பேரிடுமாதர்காள்*
*கேசவன்பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ*
*நாயகன்நாரணன் தம்மன்னைநரகம்புகாள்.*
பெரியாழ். திருமொழி. (4–6–1) ÷ நாரணன் பெயரைக் குழந்தைக்கு இட்டால் அக்குழந்தையின் தாய் நரகம் செல்லமாட்டாள்.

[1] 'குலந்தரும் செல்வந் தந்திடும்'

इत्यादिகளிறே இதன் प्रभावம் கண்டுகொள்வது.

அதில் चतुर्थी तादर्थ्य[a]த்தை முன்னிட்டு அதன் फलமாய் प्रार्थनीयமான கைங்கர்யத்தைக் கணிசிக்கிறது[b].

இத் திருமந்திரத்தில் वाक्य–अर्थத்தைப் பலபடி अनुसंधिப்–பார்கள்.

(1) अकार–वाच्यனாய் நாராயணனான श्रिय:पतिக்கு நான் अनन्यार्ह–शेषभूतன், எனக்குரியேனல்லேன் என்று திருமந்திரம் முழுக்க स्वरूप–परமானால், தன்னுடைய स्वरूप-स्थिति-प्रवृत्ति[c]கள் पर–शेषतैक–रस[d]ங்களுமாய்ப் पर - अधीन[e]ங்களுமாய் இருக்கும்படி यथास्थान[f]ம் अनुसंधेयம்.

(2) प्रणव–नमस्सுக்கள் स्वरूप–परமாய் மேல் நாராயணன் பொருட்டு ஆவேன் என்று फल–प्रार्थनैயாகவுமாம். இப் प्रार्थनैயால் शेषत्व–फलமான स्वरूप–अनुरूप–कैङ्कर्य–विशिष्टனாவேன் என்றதாயிற்று.

---

a - அவனுக்கு அடிமையாயிருத்தல்; b - குறிப்பிடுகின்றது; c - ஜீவனுடைய ஸ்வரூபம் – நீடித்து நிற்றல் – செயல்; d - எம்பெருமானுக்குச் சேஷமாயிருப்பதிலேயே நோக்கமுடையனவாய்; e - அவனுக்கு வசப்பட்டவை; f - இடத்துக்குத்தக்கவாறு அந்வயித்து

1 *குலந்தருஞ்செல்வந்தந்திடுமடியார்படு துயராயினவெல்லாம் நிலந்தரஞ்செய்யும்நீள்விசும்பருளுமருளொடுபெருநிலமளிக்கும், வலந்தரும்மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும், நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.*
பெரிய திருமொழி. (1–1–9) ÷ நாராயணன் என்னும் நாமம் ஸ்ரீவைஷ்ணவ குலத்தைத் தரும். செல்வம்தரும். துயரத்தைப் போக்கும். பரமபதத்தை அடையவழி செய்யும். எம்பெருமான் அருளையும் பெரிய பதவியையும் அளிக்கும் வலிமையைத் தரும்; மற்றும் நலங்களைத் தரும் பெற்ற தாயைக் காட்டிலும் பரிந்து நன்மை செய்யும். இத்தகைய நலங்களைத் தரும் நாராயணன் என்ற சொல்லை நான் கண்டு கொண்டேன்.

(3) प्रणवம் स्वरूप–परமாய் மேல் இரண்டு पद[a]ங்களும் अध्याहरि[b]த்த क्रिया-पद[c]ங்களோடே கூடி अनिष्ट-निवृत्ति[d]யை-யும் इष्ट-प्राप्ति[e]யையும் அபேக்ஷிக்கின்றனவாகவு–மாம.

(4) अकार-वाच्यனான நாராயணனுக்கு நான் अनन्यार्ह-शेषभूतன், அவனையே शरणமாகப் பற்றினேன், அவன் திருவடிகளிலே 'ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும்'[22*1 f] என்று இரு பதங்கள் அடைவே[g] स्वरूप–उपाय–पुरुषार्थங்களைப் प्रकाशिப்பிக்கின்றவாகவு-மாம். இவ்வடைவே अनन्यार्ह–शेषत्वமும், अनन्य–उपायत्वமும், अनन्य–प्रयोजनत्वமும் பெற்ற अधिकाரி बद्ध–दशैயிலே मुक्तரோடு ஒக்கும்.

இப்படி प्रणवादिகளிலே शोधित–स्वरूप[h]னாய் स्वरूप–अनुरूप[i]மான पुरुषार्थ[j]த்திலும் இதற்கு स्व–अधिकार–अनुगुण[k]மான उपाय[l]த்திலும் व्यवस्थित[m]னானவனுக்கு

[1] 'उत्तर पूर्वाघयोरश्लेषविनाशौ '

---

a - நம: நாராயணாய என்பன; b - வருவித்துக் கொண்ட; c - ஸ்யாத்; ஸ்யாம் என்பன; d - விரும்பாதன கழிதல்; e - விரும்பியன பெறுதல்; f - ஸர்வ தேசங்களிலும் ஸர்வ காலங்களிலும் ஸர்வாவஸ்தைகளிலும் குற்றமற்ற ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்து அவனை நான் அனுபவிக்க வேண்டும்; g - வரிசையாக; h - ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய தெளிவு பெற்றவனாய்; i - தன் ஸ்வரூபத்துக்கு ஏற்ற; j - பயனான மோக்ஷம்; k - தன் தகுதிக்கு ஏற்ற; l - ப்ரபத்தியிலும்; m - அநுஷ்டித்து உறுதியாய் நின்றவனுக்கு

1 तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात् ।
ப்ரஹ்ம ஸூ. (4–1–13) : மோக்ஷத்துக்கு உபாயம் நிறைவேறியதும் அதன் பெருமையால் அதற்குப் பின்பு அறியாமல் செய்யும் பாபங்கள் ஒட்டுவதில்லை. முன்பு செய்த பாபங்கள் அழிந்து போகின்றன. ஏன்? அவ்வாறே உபநிஷத்துக் கூறுவதால்.

என்கிறபடியே, போயபிழையும்[a] புகுதருவான்நின்றனவும்[b] தீயினில்[c] தூசாகும்.

[1] *ஊன்தந்து நிலைநின்ற வுயிருந்தந்து ஓ-*
*ருயிராகி யுள்ளொளியோடு உறைந்தநாதன்*
*தான்தந்த இன்னுயிரை எனதென்னாமல்*
*நல்லறிவுந்தந்து அகலாநலமும் தந்து*
*தான்தந்த நல்வழியால் தாழ்ந்த என்னைத்*
*தன்தனக்கே பரமாகத் தானே எண்ணி*
*வான்தந்து மலரடியும் தந்து வானோர்*
*வாழ்ச்சிதர மன்னருளால் வரித்திட்டானே. (32)*

## திருமந்த்ராதிகாரம் முற்றும்

a - முன் செய்த பாபங்களும்; b - பின் (அறியாமல்) செய்கின்ற பாபங்களும்
c - தீயினில் இட்ட பஞ்சு போல் ஆகும்

1 *ஊன் தந்து - சரீரத்தைக் கொடுத்து; நிலை நின்ற உயிரும் தந்து - அழியாத ஜீவாத்மாவையும் கொடுத்து; ஓர் உயிராகி - ஒரே அந்தர்யாமியாகி; உள் ஒளியோடு உறைந்த நாதன் - சேதநாசேதநங்களுக்குள் தன் ப்ரகாசம் போன்ற பிராட்டியுடன் வஸிக்கும் ஸ்வாமியான எம்பெருமான்; தான் தந்த இன் உயிரை - தான் கொடுத்த இனிய ஜீவாத்மாவை; எனது என்னாமல்- எனக்கே சேஷமென்று நினைக்காமல் இருக்கும்படி; நல் அறிவும் தந்து - உயர்ந்த ஞானத்தையும் கொடுத்து; அகலா நலமும் தந்து - (எப்போதும்) நீங்காத ஆனந்தத்தையும் கொடுத்து; தான் தந்த நல் வழியால் - தான் (உலகிற்குக் காட்டிக்) கொடுத்த சிறந்த உபாயமாகிய சரணாகதியினால்; தாழ்ந்த என்னை - திருவடிகளில் வணங்கிய என்னை; தன் தனக்கே பரமாக - தானே காக்க வேண்டிய வஸ்துவாக; தானே எண்ணி - தானே நினைத்து; வான் தந்து - (வருங்காலத்தில்) பரமபதத்தைக் கொடுத்து; மலரடியும் தந்து - மலர் போன்ற திருவடிகளையும் கொடுத்து; மன்னருளால் - திடமான தன் க்ருபையால்; வானோர் வாழ்ச்சிதர - நித்யஸூரிகளுடைய வாழ்வையும் கொடுப்பதற்கு; வரித்திட்டான் - ஸங்கல்பித்து விட்டான்.*

# த்வயாதிகாரம்

*[1]திருமாலடியிணையே திண்சரணாக்கொண்டு*
*திருமாலடியிணையே சேர்வார்- ஒருமால்*
*அருளால் அருளாத வானோர்கள் வாழ்ச்சி*
*அருளால் நமக்களித்தாராய்ந்து. (33)*

'திருமந்திரத்திலே பிறந்து द्वयத்திலே வளர்ந்து द्वयैक-निष्ठராவீர்'

என்கிற பூர்வர்கள் பாசுரத்தின்படியே प्रथमரஹஸ்யத்தில்[a] ஸ்வ-ஸ்வரூப-[b] பர-ஸ்வரூபாதிகளை[c] அறிந்தவனுக்குப் பரதத்துமான சரண்யனையும் பரம-ஹிதமான சரணாகதியையும் பரம-புருஷார்த்தமான தத்-கைங்கர்யத்தையும் विशद[d]மாக்கிக் கொண்டு प्रपत्ति–अनुष्टान–प्रकार[e]த்தைப் प्रधानமாகப் ப்ரகாசிப்பிக்-கிறது द्वयம்.

a - திருமந்திரத்தில்; b - ஜீவனை தன்னுடைய ஸ்வரூபம்; c - எம்பெருமா-னுடைய ஸ்வரூபம்; d - தெளிவாக; e - செய்யவேண்டிய முறை

1 *திருமால் அடியிணையே - ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகள் இரண்டையுமே; திண் சரணாகக் கொண்டு - திடமான உபாயமாகக் கொண்டு; திருமால் அடி இணையே சேர்வார் - ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகள் இரண்டையுமே பலனாக அடைபவரான ஆசார்யர்கள்; ஒருமால் - நிகரற்ற எம்பெருமான்; அருளால் அருளாத - தன் க்ருபையினால் (இது வரை நமக்கு) அருளாத; வானோர்கள் வாழ்ச்சி - நித்யஸூரிகளின் வாழ்வை; அருளால் - (நம்மீது உள்ள) கருணையால்; ஆய்ந்து - ஆராய்ந்து பார்த்து; நமக்கு அளித்தார் - நமக்கு அநுக்ரஹம் செய்தனர்.*

पूर्व-उत्तर-खण्ड[a]ங்களாலே उपाय-उपेय[b]ங்களைத் தெளிவிப்பிக்-கையால் இதற்கு द्वयமென்று பேராயிற்று.

पूर्व-खण्डத்தில் श्री-शब्दம் ப்ரஜைகள் பக்கல் வாத்ஸல்ய-அதிசயத்தாலும்[c], पति[d]யின் பக்கல் वाल्लभ्य-अतिशय[e]த்தாலும் पुरुषाकार[f]மாய்க் கொண்டு शरण्य-सहधर्म-चारिणिயான பிராட்டியைச் சொல்லுகிறது. எல்லோராலும் ஆச்ரயிக்கப்படுமென்றும், ஸர்வேச்வரனை ஆச்ரயித்திருக்குமென்றும், ஆச்ரிதர் விண்ணப்பம் செய்யும் பாசுரங்களைக் கேட்டு ஸர்வேச்-வரனைக் கேட்பிக்குமென்றும் இவர்களுடைய दोषங்களை-யெல்லாம் போக்குமென்றும் தன் அருளாலே இவர்களுக்கு ज्ञानादि-गुण-पाकத்தை உண்டாக்குமென்றும் श्री-शब्द-अर्थத்தைச் சாஸ்த்ரம் சொல்லிற்று.

मतु[g]ப் नित्य-योग[h]த்தைக் காட்டுகிறது. இது सापराध[i]ருக்கும் நினைத்தபோதே नि:शङ्क[j]மாக ஸர்வேச்வரனைப் பற்றுகைக்கு உறுப்பாம்.

[1] 'உன் திரு'

---

a - முற்பகுதி - பிறபகுதி; b - ப்ரபத்தியையும் பரமபதத்தில் செய்யும் கைங்கர்யத்தையும்; c - குற்றத்தைப் புறக்கணிக்கும் அன்பின் மிகுதி; d - நாயக-னை எம்பெருமானிடம்; e - சலுகை - செல்வாக்கின் மிகுதி; f - பரிந்து பேசுபவள் (சிபாரிசு); g - 'ஸ்ரீ' என்பதுக்கு மேல் உள்ள மதுப் என்னும் விகுதி; h - எப்பொழுதும் இணைந்திருத்தலே; i - குற்றம் புரிந்தவர்க்கும்; j - கூச்ச-மின்றி

1 *மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலை*
*நங்கை, வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய்*
*நேசம்செய்துன்னோடென்னையுயிர்வேறன்றியொன்றாகவே, கூசம்*
*செய்யாதுகொண்டாய்என்னைக் கூவிக்கொள்ளாய்வந்தந்தோ.*
திருவாய்மொழி. (10-10-2) ÷ எம்பெருமானே! உனக்கும் பெருஞ்செல்வமாய் உன்னை விட்டுப் பிரியாதவளான பிராட்டி.

[1] 'அகலகில்லேன்' [23*1]

इत्यादिகளையும் இங்கே अनुसंधिப்பது.

**நாராயண शब्दம்**

'நிகரில் புகழாய்' [23*1]

'நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்' [116*3]

'நின்னிலங்கு பாதமின்றி மற்றோர் பற்றிலேன்' [25*1]

என்று தொடங்கி அருளிச் செய்த गुण–விசேஷங்களையும், संबन्ध–விசேஷங்களையும் காட்டிக் கொண்டு सर्वविध–बन्धुவான சரண்யனைப் ப்ரகாசிப்பிக்கிறது.

चरणौ-என்கிறபதம் रुचि[a] பிறந்தபோது दैव- ப்ரக்ருதிகளோடு[b] ஆஸுர–ப்ரக்ருதிகளோடு[c] வாசியறப் பற்றலாம்படியான பொது நின்ற[d] பொன்னங்கழல்களை துன்னிட்டுக் கொண்டு शुभ–आश्रय–दिव्य–मङ्गल–विग्रह–योग[e]த்தைக் காட்டுகிறது.

शரணம் – என்றது

[2] 'கழல்க ளவையே சரணாக'

'நாகணைமிசை நம்பிரான்சரணே சரண்' [82*]

'நின்னிலங்கு பாதமின்றி மற்றோர்பற்றிலேன்' [17*1]

என்கிறபடியே आकिञ्चन[f]னை शेष–भूतனுக்கு अवलम्भநமான[g] திருவடிகள் उपाय–स्थानத்திலே நிற்கிற நிலையைக் காட்டுகிறது.

---

a - ஆசை; b - தெய்வத்தன்மையுடைய நல்லோர்; c - அசுரத் தன்மையுடைய தீயோர்; d - எல்லோருக்கும் பொதுவுடைமையாய் நின்ற; e - பாபத்தை ஒழிக்கவல்ல – தியானிப்பதற்கு எளிய – சுத்த ஸத்துவமயமான – மங்களத்தை தரவல்ல திருமேனியுடைமையை; f - பக்தி யோகம் முதலிய கைம்முதலற்ற; g - பற்றுக்கோடு

1 திருவாய் (6–10–10) : பெரிய பிராட்டி 'க்ஷண காலமும் விட்டுப் பிரியவல்லேனல்லேன்' என்று நித்யமாய் வாழுமிடமாகிய திருமார்பையுடைய திருவேங்கடத்தானே;

2 உழலையென்பின்பேய்ச்சிமுலையூடவளையுயிருண்டான்
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன்
குழலின்மலியச்சொன்னவோராயிரத்துளிப்பத்தும்
மழலைதீரவல்லார்காமர் மானேய்நோக்கியர்க்கே.
திருவாய் (5–8–11) : எம்பெருமான் திருவடிமலர்களையே உபாயமாகவும் பலனாகவும் கொண்ட ஆழ்வார்.

துயரறு சுடரடி[a]களாகையாலே अनिष्ट–निवृत्ति[b]க்கும் इष्ट–प्राप्ति[c]க்கும் அவன் திருவடிகளே உபாயம் என்றபடி.

प्रपद्ये என்கிற இடத்தில் धातु[d]– अध्यवसाय[e]த்தைக் காட்டுகிறது.

प्र என்கிற उपसर्ग[f]த்தாலே இதன் महत्[g]தை சொல்லப்படுகிறது.

[1] 'அடைக்கலம் புகுந்த'

[2] 'அடிக்கீழமர்ந்து புகுந்தேன்' [23*1]

என்கிறபடியே महा–विश्वासादिகளுடனே கூடின भर–समर्पणம் பண்ணுகிறேன் என்றதாயிற்று.

'सकृदेव' [152*1]

'स्थिते मनसि' [202*1]

इत्यादिகளிற்படியே साङ्ग–भर–समर्पण[h]ம் सकृत्–कर्तव्य[i]ம்.

உத்தம–புருஷன்[j]

[3] 'புகலொன்றில்லாவடி யேன்' [23*1]

---

a - அடைந்தவர்களின் ஸகல துக்கங்களையும் போக்கவல்ல ப்ரகாசமான; b - தீங்குகள் ஒழிதல்; c - விரும்பியது பெறல்; d - 'பத்' என்னும் வினைப்பகுதி; e - அறிவு, இங்கு நம்பிக்கை; f - உரிச் சொல்; g - மிகுதி; h - அங்கங்களுடன் கூடிய ப்ரபத்தி; i - ஒரே முறை செய்ய வேண்டியது; j - தன்மையுருபு;

1 விடைக்குலங்களேழடர்ந்து வென்றிவேற்கண்மாதரார்,
கடிக்கலந்ததோன்புணர்ந்த காலியாய வேலைநீர்,
படைத்தடைத்ததிற் கிடந்து முன்கடைந்து நின்றனக்கு
அடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்ன வேண்டுமே.
திருச்சந்த (92) : எம்பெருமானே! உன்னால் காக்கப் படவேண்டியவனைச் சரணமடைந்த எனக்கு அஞ்சாதே என்று அபயம் அளித்தருளவேண்டும்.

2 திருவாய் (6–10–10) : எம்பெருமானே! அடியேன் வேறு உபாயமும் பலனும் அற்றவனாய் பெரிய பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு அவளுடன் கூடிய உன் திருவடிகளைச் சரணமடைந்தேன். எல்லாத் தடைகளும் நீங்கப் பெற்று இப்பொழுதே உன் திருவடிகளில் எப்பொழுதும் ஸர்வ கைங்கர்யங்களும் செய்யப் பெறும் படி அருள் புரிய வேண்டும்.

3 திருவாய் (6–10–10) : வேறு உபாயமும் பயனும் அற்ற அடியேன்.

என்கிறபடியே अधिकारமும் स्वरूपமும் தெளிந்த अनुष्ठाता[a]வைக் காட்டுகிறது.

இப் पूर्व-खण्ड[b]த்தில் சொல்லுகிற उपायத்தைப் पुरुषार्थान्तर[c]ங்-களிலே மடைமாறுதபடி[d]

'கண்டு கேட்டு'[40*1]

इत्यादिகளில் சொல்லுகிற परम–पुरुषार्थ[e]த்தைச் சொல்லுகிறது उत्तर–खण्ड[f]ம்.

श्रीमते– என்கிறது

[1] 'கோலத்திருமாமகளோடுன்னை'

इत्यादिகளிற்படியே ஸர்வ– சேஷி सर्व–अवस्थैயிலும் स्वपत्नीकனாய்க் கொண்டு कैङ्कर्य–प्रतिसंबन्धि[g]யாயிருக்கிற நிலையைக் காட்டுகிறது.

இங்குற்ற நாராயண शब्दத்தாலே प्राप्य[h]னான श्रिय:पतिயினு–டைய स्वामित्वமும் सर्व–प्रकार–निरतिशय–भोग्यत्व[i]மும் प्रधानமாக अनुसंधेयம்.

இதில் चतुर्थी[j] नित्यसिद्ध[k]மான तादर्थ्य[l]ம் प्रार्थनीय[m]மன்றுகையால்

---

a - ப்ரபத்தி செய்பவன்; b - த்வயத்தின் முற்பகுதி; c - மோக்ஷத்தையன்றி மற்ற பயன்களில்; d - ஒரு வழியில் செல்லும் நீரைத் திருப்பி வேறு வழியில் விடுவது போல் மோக்ஷத்துக்காக ஏற்பட்ட ப்ரபத்தியை மற்ற பயன்களுக்குப் பயன்படுத்தாதபடி; e - மோக்ஷத்தில் பகவத் கைங்கர்யம்; f - த்வயத்தில் பிற்பகுதி; g - ஏற்றுக் கொள்பவன்; h - அடையப்படுமவன், பலன்; i - எல்லா வகையாலும் ஒப்பற்ற இனியனாயிருத்தல்; j - ஆய என்னும் நான்காம் வேற்றுமையுருபு; k - எப்பொழுதும் உள்ள; l - அவனுக்கு அடியனாயிருத்தல்; m - வேண்டிப் பெறவேண்டியது;

1 ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்
சாலப் பலநா ளுகந்தோறுயிர்கள் காப்பானே
கோலத் திருமாமகளோ டுன்னைக் கூடாதே
சாலப் பல நாள்அடியே னின்றும் தளர்வேனோ.

திருவாய் (6–9–3) : பல்வேறு அவதாரங்களைப் பண்ணி யுகந்தோறும் ஆத்மாக்களை ரக்ஷிக்கும் எம்பெருமானே! நீ பிராட்டியோடு இருக்கும் இருப்பையும் உன் அழகையும் உன் லீலைகளையும் நான் ஒருவனும் எப்பொழுதும் அனுபவிக்கப் பெறுமல் இன்னும் தளர்ந்தே நிற்கக் கடவேனோ?

'வழுவிலாவடிமை செய்யவேண்டும்' [22*1]

என்ற तादर्थ्य–फल[a]மாய் प्रार्थनीय[b]மான கைங்கர்யத்தைக் காட்டு-கிறது.

இங்குற்ற நமஸ்ஸு திருமந்திரத்திற்போலே இரண்டு அக்ஷரமும் இரண்டு पदமாய் ஒரு வாக்யமுமாய் 'எனக்காவே னல்லேன்' என்றதாயிற்று. இத்தாலே अविद्या–कर्मादिகளான अनिष्ट-वर्ग[c]த்தை எல்லாம் கழியாநிற்கச் செய்தே இக் கைங்கர்யமும் மற்றுமுள்ள पुरुषार्थ[d]ங்களில் வரும் स्वाधीन–स्वार्थ–कर्तृत्व–भोक्तृत्व–भ्रम-रूप[e]மான களையற்று நின்ற நிலை प्रधानமாக अनुसंधेयம்.

இவ் अवान्तर–वाक्य[f]ங்கள் மூன்றும் கூடி एक–वाक्यமாம் போது अनन्यार्ह–शेषभूतனாய் अकिञ्चनனான நான் ஸர்வ–அநிஷ்டங்-களும் கழிந்து निरतिशय–अनुकूलதையாலே प्रधान–प्राप्य[g]னாய் निरुपाधिक-शेषि[h]யாகையாலே नित्य–कैङ्कर्य–प्रतिसंबन्धि[i]யாய் நிற்கிற ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளில் सर्वदेश–सर्वकाल–सर्वावस्था–उचित[j]மான सर्वविध–कैङ्कर्यங்களைப் பெறுகைக்கு ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளையே உபாயமாக अध्यवसि[k]த்து प्रार्थना-पूर्वक-अत्मरक्षा-भर-समर्पण[l]ம் பண்ணுகிறேன் என்று ஒரு वाक्यार्थமாகிறது.

---

a - அடியனாந்தன்மைக்குப் பலனாய்; b - வேண்டிப் பெறவேண்டியது; c - விரோதி வகுப்பு; d - பலன்களில்; e - நானே செய்கிறேன்; எனக்காகவே செய்கிறேன்; நானே அநுபவிக்கிறேன், எனக்காகவே அநுபவிக்கிறேன் என்ற விபரீத எண்ணங்கள்; f - வாக்யங்களின் உட்பிரிவுகள்; g - முக்கிய பலன்; h - இயற்கையான தலைவன்; i - ஏற்றுக் கொள்பவன்; j - எல்லா இடங்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் எல்லா நிலைகளுக்கும் ஏற்ற; k - உறுதி கொண்டு; l - பக்தி யோகத்தின் ஸ்தாநத்தில் நின்று பலன் தரும்படி பிரார்த்தித்து என்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தலாகிய ப்ரபத்தியை

1 *சேர்க்கும் திருமகள் சேர்த்தியின் மன்னுதல் சீர்ப் பெரியோற்கு*
*ஏற்குங் குணங்களிலக்காம் வடிவிலிணை யடிகள்*
*பார்க்கும் சரணத்திற் பற்றுதல் நம்நிலைநாம் பெறும்பேறு*
*ஏற்கின்ற எல்லைகள் எல்லாக் களையறவு எண்ணினமே. (34)*

2 *திருமாலடியிணை சேர்ந்து திகழ்ந்தவடிமை பெறத்*
*திருநாரணன் சரண்திண் சரணாகத் துணிந்தடைவோர்*
*ஒருநாளுரைக்கவுயிர் தருமந்திர மோதியநாம்*
*வருநாள் பழுதற்று வாழும் வகையதின் மன்னுவமே. (35)*

## த்வயாதிகாரம் முற்றும்

---

1 எம்பெருமானுடைய திருவடிகளில் நமமைச் சேர்க்கின்ற பிராட்டியும் (1), அவனோடு சேர்ந்திருப்பதில் ஸ்திரமான தன்மையும் (2), சீர்மையால் பெரியனை எம்பருமானுக்குத் தக்கனவாகிய குணங்களும் (3), ஆச்ரிதர்கள் த்யானிக்க இலக்கான திருமேனியின் பகுதியாகிய இரண்டு திருவடிகளும் (4), சேதநர்களால் ப்ரதாநமாய்க் கருதப்படுகின்ற உபாயமான ஸ்ரீமந் நாராயணனும் (5), உபாயமாகிய எம்பெருமானிடம் மஹாவிச்வாஸத்துடன் கூடிய பரந்யாஸமும் (6), வேறு உபாயத்தில் அதிகாரமற்ற நம்முடைய நிலைமையும் (7), நாம் அடைகின்ற ப்ரதாந பலனாகிய ஸ்ரீமந் நாராயணனும் (8), சேதநன் கைக் கொள்கின்ற எல்லைகளாகிய பகவத் பாகவத கைங்கர்யம் முதலியவையும் (9), அஹங்காரமமகாரங்கள் முதலிய எல்லாக் களைகளும் நீங்கப் பெறுதலும் (10) ஆகிய பத்து அர்த்தங்களையும் த்வயத்தில் அநுஸந்தித்தோம்.

2 *திருமால் அடி இணை சேர்ந்து - ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகள் இரண்டையும் அடைந்து; திகழ்ந்த அடிமை பெற - சிறப்புற்ற கைங்கர்யத்தைப் பெறுவதற்கு; திரு நாரணன் சரண் - ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளையே; திண் சரணாக - வலிய உபாயமாக; துணிந்து அடைவோர் - தெளிந்து அடைந்த ஆசார்யர்கள்; உயிர் தரும் மந்திரம் - உஜ்ஜீவிக்கச் செய்யும் த்வயமென்னும் மந்த்ரத்தை; ஒரு நாள் உரைக்க - (நம்முடைய பாக்யம் பரிபக்வமான) ஒரு நாளில் உபதேசிக்க; ஓதிய நாம் - அதை அநுஸந்தித்த நாம்; வரும் நாள் பழுது அற்று - இனிவரப் போகும் நாளில் (அஹங்கார மமகாரங்களாகிற) குற்ற மற்று; வாழும் வகையதில் மன்னுவம் - ஜீவிக்கும் ப்ரகாரத்தில் ஊற்றமுடையவராய் நிலைத்திருப்போம்.*

# சரமசுலோகாதிகாரம்

*[1]மற்றொரு பற்றின்றி வந்தடைந்தார்க்கெல்லாம்*
*குற்றமறியாத கோவலனார் – முற்றும்*
*வினைவிடுத்து விண்ணவரோடொன்ற விரைகின்றார்*
*நினைவுடைத்தாய் நீமனமே நில்லு. (36)*

திருமந்திரத்திலும் த்வயத்திலும் ப்ரகாசித்த उपाय–விசேஷத்தை[a] अधिकारादिகளுடனே கூட विधिमुख[b]த்தாலே வெளியிடுகிறது चरम–ஶ்லோகம். இத்தால் ஸபரிகரமாக[c] सुदुष्कर[d]–மாய் चिरकाल–साध्य[e]மான उपायान्तर[f]ம், அல்பஜ்ஞனாய் அல்ப சக்தியாய் அல்ப காலவர்த்தியான தனக்குத் தலைக்கட்ட அரிதென்று शोकித்தவனுக்கு ஸாங்கமாக ஸுகரமாய்[g] सकृत्–कर्तव्य[h]மான उपाय–விசேஷத்தை[i] उपदेशித்து நீ शोकிக்க வேண்டாம் என்கிறான்.

**a** - ப்ரபத்தியை; **b** - செய் என்று கட்டளையின் வாயிலாக; **c** - அங்கங்களுடன் கூட; **d** - செய்வதற்கு மிக் கடினமாய்; **e** - நெடுங்காலம் செய்ய வேண்டிய; **f** - வேறு உபாயம் (பக்தி யோகம்); **g** - செய்வதற்கு எளிதாய்; **h** - ஒரு முறையே செய்ய வேண்டிய; **i** - ப்ரபத்தியை

1 *மனமே! - மனமே!; மற்று ஒருபற்று இன்றி - வேறு ஒரு கதியும் இல்லாமல்; வந்து அடைந்தார்க்கு எல்லாம் - தம்மை வந்தடைந்த எல்லோருடைய விஷயத்திலும்; குற்றம் அறியாத - (அவர்கள் செய்த) குற்றத்தைப் பொருட்படுத்தாதவரும்; கோவலனார் - கோபாலனாக அவதரித்தவருமான எம்பெருமான்; முற்றும் வினை விடுத்து - (நம்முடைய) ஸகல கர்மங்களையும் ஒழித்து; விண்ணவரோடு ஒன்ற விரைகின்றார் - நித்ய ஸூரிகளோடு (நாம்) ஒன்று சேர விரைகின்றார்; நீ நினைவு உடைத்தாய் - நீ (இந்த விஷயத்தை) நினைத்துக் கொண்டு; நில் - கவலையற்று இருப்பாயாக.*

ஸர்வ–धर्मान् – என்றது எல்லா धर्मங்களையும் என்றபடி. धर्मமாவது– சாஸ்த்ரமே கொண்டு அறியவேண்டும் अभिमत–साधन[a]ம். இங்கு धர்மம் என்றது கீழ்ச் சொன்ன भक्ति–योगத்தை. இது பலவகையான படியை बहु–वचनம் காட்டுகிறது. இவற்றில் ஒன்றும் ஒழியாமைக்காக ஸர்வ–शब्दம். परिकर[b]ங்களைக் காட்டுகைக்காகவுமாம்.

परित्यज्य – என்றது துவக்கற[c] விடுகையைச் சொல்லுகிறது. धर्मங்களை விடுகையாவது– அவற்றின் அருமையைக் கண்டு निराश[d]ஞகை. परि என்கிற उपसर्ग[e]ம் ஸர்வ– காலத்திலும் ஸர்வ–ப்ரகாரத்திலும் योग्यதையில்லையென்று नैराश्य–अतिशय[f]த்தைக் காட்டுகிறது. अभिमत–साधन[g]ங்களில் சக்தனுக்கும் அசக்தனுக்கும் இங்கு त्यागம் विधिக்கக்கூடாமையால் இது அநுवाद[h]ம். ஸர்வ–धर्मங்களினுடைய स्वरूप–त्याग[i]த்தை विधिக்கிறதென்கை बहु–प्रमाण–विरुद्धம். सात्विक–त्याग–मात्र[j]ம் விவக்ஷிதமாஞல்[k] இங்கு त्याग–विशिष्ट धर्मங்கள் அங்கங்களாக प्रसङ्ग[l]க்கும். ஆகையால் त्याग–विधिகொள்ளப் பார்க்கில் सात्विक–त्याग–विशिष्ट–सर्व–धर्म–नैरपेक्ष्यादि[m]–களிலே தாத்பர்யம்[n] கொள்ள उचितம். ப்ரபத்திக்கு नैरपेक्ष्य[o]ம் சொன்ஞலும் स्वतन्त्र–विधि[p]யாலே वर्ण–आश्रम–धर्मங்களிலும் நிலை குலையாது.

'द्वयमर्थानुसंधानेन सह सदैवं वक्ता'[200 * 1]

---

a - விரும்பும் பலனுக்குச் சாதனம்; b - அங்கங்கங்கள்; c - ஸம்பந்தம் இன்றி; d - ஆசையற்றவன்; e - உரிச் சொல்; f - ஆசையற்றமையின் மிகுதி; g - விரும்பும் பலனுக்குச் சாதனம்; h - முன்பே உள்ளதை மறுபடி சொல்வது; i - எல்லாத் தருமங்களையும் செய்யாது விட்டு விடுதல்; j - தன் பயனுக்காகத் தான் செய்வதாகிய எண்ணத்தை விட்டு எம்பெருமான் தன் பயனுக்காகத் தானே செய்விப்பதாக எண்ணுதல்; k - பொருளாகக் கூறவேண்டுமாஞல்; l - சொல்ல வேண்டிவரும்; m - ஸாத்துவிக த்யாகத்துடன் கூடிய ஸகல தர்மங்களையும் அங்கமாக எதிர் பாராமை; n - உட்கருத்து; o - மற்றொன்றை எதிர் பாராமை; p - தனிப்பட்ட விதி

என்றதை स्वभाव-अर्थ-शास्त्र-प्राप्त[a]ங்களோடே பொருந்தக் கொள்ள வேண்டும்.

இப்படி अभिमत[b]த்துக்கு வேறு கைம்முதலற்றுப் பற்றிலார் பற்ற நின்ற தன்னை माम्-एकं என்கிறான்.

माम्-एकं - என்கிறது என்னை ஒருவனையே - என்றபடி. विहित[c]த்தினுடைய अनुष्ठान-प्रकार[d]த்தை ப்ரகாசிப்பிக்கிற द्वयத்தில் कण्ठोक्त[e]மான विशिष्ट्य[f]த்தை

[1] 'एष नारायणः श्रीमान्'

इत्यादिகளை அடியொற்றி இங்கும் अनुसंधिப்பது. இங்கு आश्रयणीयதைக்கு உறுப்பான सौलभ्यादि-गुण-पूर्तिயையும் அதில் एक-वचनம் உண்டாயிருக்க மிகுதியான एकं என்ற पदத்தாலே

(1) இனிச் சுமையுமெடுக்காமைக்கு[g] நிற்கிற नैरपेक्ष्यத்தையும் அருளிச் செய்கிறான்.

(2) एक-शब्दம் उपाय-उपेय[h]மாகத் தான் நிற்கிற நிலையைக் காட்டுகிறதாகவுமாம்.

---

a - (1) ஸ்வபாவ-ப்ராப்தம் – தும்மல், இருமல், உறக்கம் முதலியன (2) அர்த்த ப்ராப்தம் – உணவு கொள்ளல் முதலியன (3) சாஸ்த்ர ப்ராப்தம் – ஸந்த்யாவந்தநம், தர்ப்பணம் முதலியன; b - விரும்பிய பலனுக்கு; c - விதிக்கப்பட்ட ப்ரபத்தி; d - செய்ய வேண்டிய முறை; e - ஸ்ரீமத் – ஸ்ரீமதே என்ற பதங்களால் வெளிப்படையாகக் கூறப்பட்ட; f - பிராட்டியுடன் கூடியிருத்தல்; g - ப்ரபத்திக்குப் பின் வேறொன்றை உபாயமாகச் செய்ய வேண்டிய சுமையைச் சுமக்காதபடி; h - உபாயமும் பயனுமாக

1 एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः ।
नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मधुरां पुरीम् ॥

ஹரிவம். விஷ்ணுபர். (55-59) : திருப்பாற் கடலில் உறைபவனாய் ஸ்ரீய:பதியான இந்த நாராயணன் திருவநந்தாழ்வானாகிய திருப்பள்ளியை விட்டன்றோ இம்மதுராபுரியில் கண்ணனாய் வந்து அவதரித்துள்ளான்.

(3) ப்ரபத்தியின் கர்த்தா[a]வான தன் பக்கலிலும், தன் க்ரியை[b]யான ப்ரபத்தியிலும் பிறக்கும் प्रधान्य-बुद्धि[c]யைப் पर अधीनत्वादि[d]களாலே கழிக்கிறதாகவுமாம்.

(4) नानाविध–धर्मங்களுக்கெல்லாம் सनातन–धर्म[e]மான தான் ஒருவனே எதிர்த் தட்டாக நிற்கிற நிலையைக் காட்டுகிறதாகவுமாம்.

शरणम् – என்றது उपायமாக – என்றபடி.

व्रज – என்றது அடை – என்றபடி.

என்னை ஒருவனையே शरणமாக அடை – என்கிற இத்தாலே அசரண்ய– சரண்யனான[f] என் பக்கலிலே अध्यवसायादि–युक्त[g]மான आत्म–रक्षा–भर-समर्पण[h]ம் பண்ணு – என்றதாயிற்று. மற்றும் கழிக்கிற உபாயங்களுடைய स्थाநத்திலே अकिञ्चनனான शेष–भूतனுக்கு அவலம்பநமான[i] திருவடிகள் நிற்கிற நிலையைக் காட்டுகிறது.

இப்படி आकिञ्चन्यादि–विशिष्टனான अधिकारिக்கு அநுரூபமான कृत्य[j]த்தைப் पूर्व-अर्ध[k]த்திலே विधिத்துத் தன் कृत्य[j]த்தை अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்று அருளிச் செய்கிறான்.

இதில் मोक्षयिष्यामि என்கிற पदத்திலே நான் என்று தோற்றநிற்க अहं–शब्दத்தால் தன்னையொழிந்தாரில் தான் விலங்கிட்டு வைத்தவனுக்கு மோக்ஷம் கொடுக்க வல்லாரில்லை யென்றும், ஸ்வதந்த்ரனாய் விலங்கிட்ட தான் விலங்கை வெட்டி விடும்

---

a - செய்பவன்; b - செயல்; c - முக்கியமான உபாயம் என்ற எண்ணத்தை; d - எம்பெருமானால் வருதல் முதலியவற்றால்; e - முன்பே உள்ள ஸித்தோபாயமான; f - கதியற்றவர்களுக்கு ரக்ஷகனான; g - மஹாவிச்வாஸம் முதலியவற்றுடன் கூடிய; h - தன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தலாகிய பரந்யாஸம்; i - பற்றுக் கோடு; j - செய்ய வேண்டிய செயல்; k - முற்பாதி

போது விலக்கவல்லார் இல்லையென்றும் தனக்கு உள்ள ராசி[a] காட்டுகிறான்.

त्वा – என்றது உன்னாலும் பிறராலும் உன்னை मुक्तனாக்க வொண்ணாதபடியைத் தெளிந்து ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தி-யாய்ப் பரம காருணிகனான என் பக்கலிலே भरந்யாஸம் பண்ணின உன்னை – என்றபடி.

सर्व पापेभ्यः – என்றது எல்லாப் பாபங்களினின்றும் – என்றபடி. பாபமாவது – சாஸ்த்ரமே கொண்டு அறிய வேண்டும் अनिष्ट–साधन[b]ம். இத்தால் पापवर्गம் अनादि–काल–संचित[c]மாய் अनेक–प्रकारமாய் நிற்கிற நிலையைக் காட்டுகிறான். பாபங்களில் ஒன்றும் ஒழியாமைக்காக ஸர்வ–शब्दம்.

இங்குப் பாப–शब्दத்தாலே முமுக்ஷுவுக்கு[d] अनिष्ट–फल–हेतु[e]வான புண்யமும் संगृहीत[f]ம். अविद्यादिகளும் இங்கே संगृहीत[f]ங்கள். இத்தால் प्रारब्ध-व्यतिरिक्त[g]மான पूर्व-अघ[h]த்தில் बुद्धि-पूर्व[i] अबुद्धि-पूर्व[j]ங்-கள் இரண்டுவகையும், प्रारब्ध[k]த்திலும் இவனுக்கு அநிஷ்டமாய் शोक–हेतुவான அம்சமும் उत्तर–अघ[l]த்தில் प्रामादिक–अंश[m]மும் संग्रहिக்–கப்படுகின்றன.

बुद्धि–पूर्व[i]மான उत्तर-अघ[l]த்திற்குப் पुनः–प्रपत्तिயைப் प्रायश्चित्तமாக शास्त्रம் சொல்லிற்று. இதுவும்கூட[n] இங்கு सर्व-शब्दத்தாலே விவக்ஷிதமானால்[o] प्रायश्चित्तத்திலே மூட்டியாதல் சிக்ஷாவிசேஷங்-களாலேயாதல் அவற்றையும் கழிக்கும்.

**a** - ஏற்றம் ; **b** - தீங்கைத் தரவல்லது; **c** - நெடுங்காலமாகச் செய்து குவிக்கப்பட்ட; **d** - மோக்ஷத்தை விரும்புமவன்; **e** - தீய பலனைத் தரவல்ல; **f** - அடக்கிக் கூறப்பட்டது; **g** - பயன் கொடுக்கத் தொடங்காத; **h** - ப்ரபத்திக்கு முன் செய்யப் பட்ட பாபம்; **i** - தெரிந்து செய்த; **j** - அறியாமல் செய்த; **k** - பலன் கொடுக்கத் தொடங்கிய; **l** - ப்ரபத்திக்குப் பின் செய்த பாபம்; **m** - அறியாமல் செய்ய நேரிட்ட பாபத்தின் பகுதியும்; **n** - அறிந்து செய்யும் பாபமும்; **o** - கூறப் படவேண்டுமெனக் கருதப்பட்டால்

भक्ति–तत्त्वज्ञान–अभिवृद्धिகளுக்காவாதல், भगवद्भागवतार्थமாக–வாதல் வரும் காம்யங்களொழிய[a] மற்றும் வரும் காம்யங்களும்[b] पाप-कोटियிலே அந்வயிக்கும்[c]. இதுக்கு पुन:–ப்ரபத்தி பண்ணு தொழியில் भगवत्–अनुभव–विच्छेदादि[d]–प्रत्यवायம் வரும்.

ப்ரபத்திக்கு अनन्तरமே मुक्तராவார்க்கும், இங்கு இருந்த காலம் ப்ரபத்தி–बलத்தாலேயாதல் प्रारब्ध–सुकृत–விசேஷங்க[e]ளாலேயாதல் निरपराध[f]ராயிருப்பார்க்கும், अपराधம் புகுந்தார்க்கும் अनुतापादि[g]களாலே பிரிவு வருமாகையாலும் அல்லாத போது हितैषि[h]யான சிக்ஷகன் पुत्र–शिष्यादिகளைப் போலே அல்ப–தண்டத்தாலே பிரிக்கப் பிரிவு வருமாகையாலும் சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் மரணமானல் வைகுந்தம் கொடுக்கும்.

பரம– காருணிகனுய் அவஸர–प्रतीक्ष[i]னை श्रिय:पति–अज्ञात–सुकृतादि[j]களை முன்னிட்டுக் கொண்டு सत्त्वादि–विरोधि[k]களையும், ஆசார்யனை முன்னிட்டுக் கொண்டு तत्त्वज्ञानादि–विरोधिகளையும், புருஷகாரத்தை[l] முன்னிட்டுக்கொண்டு उपाय–विरोधि[m]களையும், பக்தி ப்ரபத்திகளை முன்னிட்டுக் கொண்டு प्राप्ति–विरोधि[n]களையும் கழிக்கும்.

இவ்விடத்தில் अत्यन्त–अकिञ्चन[o]னுய் शोकिத்தவனுக்கு भर न्यासத்தை विधिத்து सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்கையால் இது[p] प्राप्ति–विरोधि[q]– விஷயம்.

---

a - மற்ற பலனுக்காகச் செய்யும் கர்மங்கள்; b - மற்ற பலனுக்காகச் செய்யும் கர்மங்கள்; c - சேரும்; d - தடை முதலிய தீங்கு; e - பலன் கொடுக்கத் தொடங்கிய விசேஷ புண்யம்; f - பாபம் செய்யாதவர்; g - பச்சாதாபம், பிராயச் சித்தம் முதலியன; h - நன்மை புரிய விரும்புகிற; i - காப்பதற்கு ஸமயத்தை எதிர்பார்ப்–பவன்; j - அறியாமலே செய்ய நேர்ந்த புண்யம்; k - ஸத்துவ குணத்துக்குத் தடையாயிருந்த கர்மங்கள்; l - பரிந்து பேசும் பிராட்டி; m - ப்ரபத்திக்குத் தடைகள்; n - மோக்ஷத்துக்குத் தடை; o - கைம்முதல் சிறிதும் இல்லாதவன்; p - ஸர்வ பாபங்கள் என்பது; q - மோக்ஷம் பெறத் தடையான பாபங்களைக் கூறுவது

இப்படி प्रसादநங்களாலே[a] निग्रह–நிவ்ருத்தி[b]; निवृत्त–निग्रह[c]னான ஈச்வரனாலே ஜ்ஞாந–संकोच–நிவ்ருத்தி[d]; இது தானே ஜ்ஞாந–விகாஸ–ரூபையான[e] ப்ராப்தி[f].

मोक्षयिष्यामि – என்றது விடுவிக்கக் கடவேன் – என்றபடி. இத்தால் ஸம்ஸரிக்கப் பண்ணிவைத்த ஸங்கல்பத்தை விடக் கடவன் – என்றதாயிற்று.

மோக்ஷத்திற்கு भविष्यत्–காலத்துக்கு[g] ப்ரபந்நன் கோரினது எல்லை. ஆர்த்தி-அதிசயமுடையவனுக்கு[h] அப்போதே फल-सिद्धि. ஆறுதலுடையவனுக்குத்[i] தன் குறைவால் வந்தநாளிழவொழியப் பொருளிழவில்லை. ஆகையால் मा शुच: என்கிற வாக்யத்தாலே இனி உனக்கு शोकिக்க ப்ராப்தியில்லை[j] என்கிறான். முன்பு शोकित्तविடம் अधिकारத்தோடே கூடி गुणமாயிற்று. மேல் ஹர்ஷ–स्थान[k]த்திலே शोकिக்கில் अनभिज्ञ–कृत्य[l]மாம்.

உன் अधिकार[m]த்துக்குப் பொருந்தாத உபாயாந்தரத்தில்[n] அலையாதே अनालोचित[o]–விசேஷ–அசேஷ–லோக–சரண்யனான என்னையே உபாயமாக अध्यवसि[p]த்து அடைக்கலம் புகுந்த உன்னை अर्थि–कल्पक[q]னாய் अप्रतिहत-संकल्प[r]னான நான் सत्ता–अनुबन्धि[s]க–ளாய்ப் போந்த सर्व–विरोधि–वर्गத்தினின்றும் விடுவித்து स्व–स्वरूप–आविर्भाव[t]த்தை உண்டாக்கி மேலாத் தேவருடனே[u] கூட்டிப்

---

a - பகவானை உகக்கச் செய்யும் பக்தி ப்ரபத்திகள்; b - சீற்றம் நீங்குதல்; c - சீற்றம் நீங்கப் பெற்ற; d - ஞானச் சுருக்கம் நீங்குதல்; e - ஞானத்தின் முழுமலர்ச்சி; f - அவனை அடைதலாகிய மோக்ஷம்; g - வருங்காலத்துக்கு; h - உடனே பெற மிக்க துடிப்பு; i - விளம்பித்துப் பெறப்பொறுமை; j - இடமில்லை; k - மகிழ வேண்டிய விஷயத்தில்; l - அறிவற்றவன் செயல்; m - தகுதி; n - பக்தியோகம்; o - ஜாதி- குணம் முதலிய சிறப்புக்களைக் கவனிக்காமல் எல்லோருக்கும் ரக்ஷகன்; p - உறுதியான எண்ணம் கொண்டு; q - விரும்பியவனுக்கு இஷ்டத்தைத் தரும் கற்பக மரம்; r - தடையற்ற ஸங்கல்பமுடையன்; s - ஸ்வரூபத்துடனேயே தொடர்ந்துள்ள; t - மறைந்திருந்த தன் இயற்கையுரு மறுபடி வெளியாதல்; u - நித்ய ஸூரிகள்

[1] 'பிரியாது ஆட்செய்'

என்று மீளா அடிமைகொள்ளக் கடவேன். நீ இனி ஒன்றுக்கும் சோகியாதே

[2] 'நாவலிட்டுழி தருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே'

'நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை' 163 * 3

'நமன்கூறுசெய்துகொண்டிறந்த குற்றமெண்ண வல்லனே' 163 * 2

என்று अनुसंधित्तु யம-वश्यत्वादि[a]கள் இல்லாமையாலும் கைங்கர்ய- ஸாம்ராஜ்யம்[b] கைபுகுகிறபடியாலும் संतुष्टனாய், வருகிற நல்விருந்தைப் பார்த்திருப்பாரைப் போலே 'மாகவைகுந்தம் காண்பதற்கு என் மனமேகமெண்ணும்' 199*1 என்று இரு என்று சரண்யனுக்கு अभिप्रायம்.

இப்படி ஸத்யமான ஸத்ய–ஸங்கல்பன் வாக்யத்தில் ஊன்றுதவன் விலக்கவொண்ணாத கால–ப்ரவாஹம் கழியக் கழிய மேல் எந்த நிலை நிற்கப் போகிறேனோ என்று தளும்பும்.

---

a - யமனிடம் அடங்கிக் கஷ்டப்படுதல்; b - அரசாட்சி

1 *பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்தாளறக்கொண்டான்,*
*அரியாகியிரணியனை யாகங்கீண்டானன்று,*
*பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன்பெறுமாறு,*
*வரிவாள்வாயரவணை மேல்வாட்டாற்றான்காட்டினனே.*
*திருவாய் (10–6–10) : இனி ஒருகாலும் என்னைப் பிரியாது நின்று ஸர்வ கைங்கர்யங்களையும் செய்.*

2 *காவலிற்புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து,*
*நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர்தலைகள்மீதே,*
*மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வநின்நாமம்கற்ற,*
*ஆவலிப்புடைமைகண்டா யரங்கமாநகருளானே.*
*திருமாலை (1) : எம்பெருமானே! உன் திருநாமத்தைக் கற்ற செருக்கினால் இந்த்ரியங்களை அடக்கிப் பாபங்களை ஒழித்து வெற்றிப் பறை சாற்றி யம தூதர்களின் தலைமேல் அடிவைத்து நடக்கின்றோம்.*

இதில் விச்வாஸமுடையவன் स्व-यत्न-निरपेक्ष[a] மாகக் கைங்கர்யத்திலே கடுக அந்வயிக்கப் போகிறேனென்று மேன்மேலும் अतिप्रीत[b] னும்.

गद्यத்தில்

[1] *'नित्य किङ्करो भवानि'*

என்றது இறுதியாக இதில்[c] पूर्वार्ध[d]த்தில் विहित[e]த்தினுடைய अनुष्ठान–प्रकार[f]ம்; மேல் उत्तर–अर्ध[g]த்தின் तात्पर्य–प्रकाशन[h]ம்.

[2] *எல்லாத் தருமமும் என்னையிகழ்ந்திடத் தானிகழாது*
*எல்லாம் தனதென எல்லாமுகந்தருள் தந்தபிரான்*
*மல்லார் மதக்களிறொத்த வினைத்திரள் மாய்ப்பனென்ற*
*சொல்லா லினியொருகால் சோகியாத் துணிவுற்றனமே. (37)*

---

**a** - தன் முயற்சியின்றி; **b** - மிக மகிழ்வானும்; **c** - சரம சுலோகத்தில்; **d** - முற்பாதியில்; **e** - விதிக்கப்பட்ட ப்ரபத்தி; **f** - செய்ய வேண்டிய முறை; **g** - பிற்பாதியின்; **h** - கருத்தை விளக்கிக் கூறல்;

1 சரணாகதி கத்யம் : எப்பொழுதும் கைங்கர்யம் செய்பவனாக ஆவேன்.

2 *எல்லாத்தருமமும் - (பக்தியோகம் முதலிய) எல்லா உபாயங்களும்; என்னை இகழ்ந்திட - (அவ்வுபாயங்களை அநுஷ்டிக்கச் சக்தியில்லாது) என்னை வெறுத்துக்கை விட்டுவிடவும்; தான் இகழாது - (ஈசுவரனை) தான் (என்னை) வெறுத்துத் தள்ளி விடாமல்; எல்லாம் தனது என - (அவ்வுபாயங்களின் ஸ்தாநத்தில் நின்று அவைகொடுக்க வேண்டிய கடமை) முழுதும் தன்னுடையதென்று (நினைத்து); உகந்து - மகிழ்ந்து; எல்லாம் - ஸகல பலன்களையும்; அருள்தந்த பிரான் - (எனக்குக்) கிருபை செய்த எம்பெருமானுடைய; மல் ஆர் மதக் களிறு ஒத்த - பலம் நிறைந்த மதயானை போன்ற; வினைத் திரள் - பாபக்கூட்டங்களை; மாய்ப்பன் - ஒழித்து விடுவேன்; என்ற சொல்லால் - என்ற (சரம சுலோக) வாக்யத்தால்; இனி ஒரு கால் - இனி ஒரு நாளும்; சோகியாத் துணிவுற்றனமே - துக்கிக்க வேண்டாதபடி தைர்யத்தை அடைந்தோம்.*

[1] விளைத்திரள் மாற்றிய வேதியர்தந் தருள்வாசகத்தால் 2"1*2
அனைத்துமறிந்தபின் ஆறும் பயனுமெனவடைந்தோம்
மனத்திலிருந்து மருத்தமுதாகிய மாதவனார்
நினைத்தன் மனத்திலரிதாகி நின்றன நீள்கழலே. (38)

[2] எட்டிலா றிரண்டிலொன்றில் எங்குமா றியம்புவார்
விட்டவாறு பற்றுமாறு வீடுகண்டு மேவுவார்
சிட்டரான தேசுயர்ந்த தேசிகர்க் குயர்ந்துமேல்
எட்டுமூன்று மூடறுத்தது எந்தைமா லிரக்கமே. (39)

ஆசார்யர்கள் கருணையால் செய்த உபதேசம். அரிதாகி நின்றவாகிய திருவடிகளை என்று அந்வயம்.

எந்தைமால் இரக்கம் - எம்முடைய ஸ்வாமியான பகவானுடைய கருணையானது; எட்டில் - எட்டு அக்ஷரம் அமைந்த திருமந்திரத்திலும்; ஆறு இரண்டில் - பன்னிரண்டு பதங்கள் அமைந்த த்வயத்திலும்; ஒன்றில் - ஒரு ஸ்லோகமாய் அமைந்த சரம சுலோகத்திலும்; எங்கும் ஆறு இயம்புவார் - (இவற்றில்) எங்கும் உபாயமே (சொல்லப் பட்டிருப்பதாய்) உபதேசிப்பவர்களும்; விட்ட ஆறு - (நம்மால் முடியாதென்று) விடப்பட்ட (பக்தியோகம் முதலிய) உபாயத்தையும்; பற்றும் ஆறு - கைக் கொள்ளும் உபாயமான ப்ரபத்தியையும்; வீடு கண்டு - (அதன் பலமான) மோக்ஷத்தையும் நன்கு அறிந்து; மேவுவார் - அதில் ஊற்றமுடையவர்களும்; சிட்டரான - ஜ்ஞாநம், வைராக்யம், அநுஷ்டாநம் ஆகிய இவை பொருந்தியவர்களும்; தேசு உயர்ந்த - தேஜஸ் நிறைந்தவர்களுமான; தேசிகர்க்கு - ஆசார்யர்களுக்காக; உயர்ந்து - ஓங்கி உயர்ந்து; மேல் எட்டு மூன்றும் - மேல் உள்ள இருபத்து நான்கு வஸ்துக்களாய் மாறுகிற ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தையும்; வேரறுத்தது - (நமக்கு) ஒழித்து விட்டது.

'त्रिभिरनवधिकार्थं संगृहीतं रहस्यैः
विपुलतरमतीनां व्यासतः ख्यापयिष्यन् ।
व्यतनुत रमणीयं वेङ्कटेशो वदान्यः
समुचितरसिकानां सारसंक्षेपमेतम् ॥

**சரமசுலோகாதிகாரம் முற்றும்**

**इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु**

**रहस्यत्रयचुलकं संपूर्णम् ।**

**ரஹஸ்யத்ரய சுளகம் முற்றும்.**

**श्रीमते निगमान्तमहादेशिकाय नमः**

எல்லோருக்கும் விசேஷ ஞானத்தை அளிக்கும் பரந்த நோக்கமுள்ள ஸ்ரீவேங்கடேசன் திருமந்த்ரம் - த்வயம் - சரமசுலோகம் என்ற மூன்று ரஹஸ்யங்களில் சுருக்கமாய்ப் பொதிந்துள்ள அளவற்ற அர்த்தங்களை-யெல்லாம் மஹா மேதாவிகளான ஆஸ்திகர்களுக்குப் பயன்படும்படி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரமென்னும் ரஹஸ்யத்தில் விரிவாக விளக்கப் போகும் நோக்கமுடையராய் அவசியமான அளவுக்கு அறிந்து கொள்வதில் மட்டும் ஆசையுடையர்க்குப் பயன்பட்டு உகப்பிக்கவல்ல இந்த ஸார ஸங்க்ஷேபமென்னும் ரஹஸ்யத்தை இயற்றினார்.



ஸ்ரீ:

**மேற்கோள் பாசுரங்கள், மூலக்ரந்தங்களில் ஸ்வாமி தேசிகன் அருளிய பாசுரங்கள் இவற்றின் அகராதி**

*கீழ்க்காணும் ப்ரமாணங்களுக்கு முழுப் பகுதி கிடைக்கவில்லை. பெரியவர்கள் கண்டு அறிவித்தால் அடுத்த பதிப்பில் வெளியிடப்படும் - பரிசோதகர்.*

श्री:॥

श्रीमते निगमान्त महादेशिकाय नम: ॥

***சில்லரை ரஹஸ்யங்களில் எடுத்துள்ள ப்ரமாணங்களின் அகராதி***

अ

ह

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# ரஹஸ்யார்த்த விவரணம்

(வங்கீபுரம் நவநீதம், ஸ்ரீராமதேசிகாசார்யன் ஒப்பிலியப்பன் ஸந்நிதி)

## 1. ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி

(எம்பெருமானிடம் தொடங்கி இன்று வரை வருகின்ற நம் ஸம்ப்ரதாயம் மிகப் பரிசுத்தமாய் எவ்வகைக் குற்றமும் அற்றது என்பதை இந்த ரஹஸ்யம் விளக்குவதால் இப்பெயர் பெற்றது.

### 1. ஆசார்யனைப் பெறுதலின் ஆவச்யகதை

சேதநன் தான் நல்வாழ்வைப் பெறுவதற்கும் நற்கதி பெறுவதற்கும் வேண்டிய வழியைத் தேடவேண்டும். அதற்கு வேதாந்த சாஸ்த்ரம் கூறும் சிறந்த விஷயங்களை நிச்சயமான முறையில் அறியவேண்டும். அதற்காகச் சிறந்த ஆசார்யனை வழிபட்டு அவனது உபதேசத்தைப் பெறவேண்டும். இல்லாவிடில் ஸம்ப்ரதாயமாய் வந்த நேரிய அர்த்தத்தை அறிய முடியாது. இவ்விஷயத்தை உபநிடதமும் அதன் பொருளை விளக்க வந்த ஸ்ம்ருதி - இதிஹாஸ - புராணங்களும் தெளிவாய்க் கூறுகின்றன.

### 2. ஸம்ப்ரதாயமுறையில் கேட்டுத்தெளிதல்

இப்படி வேதாந்த ஜ்ஞாநத்தை விரிவாக ஸம்பாதிப்பதற்கு வேண்டிய நல்ல ஜ்ஞாநம் இல்லாதவர்கள் சாஸ்த்ரங்களை நன்கு அறிந்த ஆசார்யனிடமிருந்து முக்கியமான ஸம்ப்ரதாய விஷயங்களையாவது உபதேசிக்கப் பெறவேண்டும். இதனாலேயே உஜ்ஜீவிப்பதற்கு வேண்டிய முக்கியமான விஷயங்களில் நிச்சயமான அறிவு ஏற்பட்டுவிடும். இந்த முக்கியமான விஷயங்களையும் ஆசார்ய பரம்பரையில் வந்த உபதேசத்தாலேயே அறிய வேண்டுமேயல்லது சாஸ்த்ரத்தைக் கொண்டு மட்டும் அறிந்துவிட முடியாது. ஒருகால் ஒருவன் மேதாவியாயிருந்து மற்ற சாஸ்த்ரங்களில் உள்ள அறிவின் உதவியால் வேதாந்த சாஸ்த்ரத்தைத் தானே பார்த்து அர்த்தங்களை எளிதில் அறிய முயலக்கூடும். ஆனால் அதில் பயனில்லை. சிறந்த ஸம்ப்ரதாய முறையால் பெறாத அந்த அறிவில் தெளிவும் ஏற்படாது உஜ்ஜீவிப்பதற்குச் சாதனமாகவும் ஆகாது.

## 3. ஸத்ஸம்ப்ரதாயம் எது? - விளக்கம்

நம் இந்த்ரியங்களுக்குச் சிறிதும் புலப்படாமல் சாஸ்த்ரங்களைத் தழுவி வந்த ஸம்ப்ரதாயத்தைக் கொண்டே அறிய வேண்டிய விஷயங்கள் பல உள. அவையாவன - பகவான் - மோக்ஷம் - அதற்குச் செய்யும் உபாயம் முதலியன. இவற்றை நாம் இங்குக் கண்ணால் காண முடியுமா? இவற்றை ஸம்ப்ரதாய முறையால்தான் அறியவேண்டும். இந்த ஸம்ப்ரதாயமும் சாஸ்த்ரங்களை ஆதாரமாகக் கொண்டு தோன்றியதாயிருக்க வேண்டும். சிலர் ஒன்றுகூடிக் கட்டுப்பாடாகச் சாஸ்த்ரத்துக்கு முரண்பட்ட ஒரு ஸம்ப்ரதாயத்தை உருவாக்கி அதையே பரம்பரையாய்க் கேட்டுவந்தால் அதை நம்பக்கூடாது. மேலும் பெரியோர்கள் ப்ரமாணம் என்று ஒருமனமாய் அங்கீகரித்த சாஸ்த்ரத்துக்கு முரண்பட்டுவரும் ஸம்ப்ரதாயத்தையும் நம்பக்கூடாது. ஏனெனில், இவ்விரண்டு ஸம்ப்ரதாயங்களையும் கல்பித்தவர்கள் நேரிய அறிவின்றி விஷயங்களை விபரீதமாய்த் தெரிந்து கொண்டிருக்கலாம். அல்லது பிறரை வஞ்சித்துத் தம் ஸம்ப்ரதாயத்தில் சேர்க்கவும் எண்ணம் கொண்டிருக்கலாம். ஆதலின் இவ்வாறு வரும் ஸம்ப்ரதாயமும் வேதத்தை ஏற்காத சார்வாகம் முதலிய புறமதங்கள் போல நாம் நம்பாமல் விலக்க உரியதேயாகும்.

## 4. ஸதஸ்யம் - ரஹஸ்யம் - விளக்கம்

இங்கு ஒர் ஆக்ஷேபம் - உலகில் 'ஸதஸ்யம்' 'ரஹஸ்யம்' என்று இரண்டு வழக்குகள் உண்டு. ஸதஸ்யம் என்பது எல்லோரும் அறியும்படி வெளிப்படையாய்க் கூட்டத்தில் சொல்லக்கூடியது. ரஹஸ்யம் என்பது கூட்டத்தில் சொல்லாமல் ஏகாந்தத்திலே உபதேசிக்க ஏற்றதாயுள்ளது. சிலர் பாரதத்தின் பகுதியான கீதையில் அடங்கி சரம சோலுகத்தை ஸதஸ்யமெனவும் சிலர் ரஹஸ்யமெனவும் கூறுகின்றார்கள். இதில் முரண்பாடு நன்றாய்த் தோன்றவில்லையா? நான்கு வருணத்தாரும் பாரதம் - ராமாயணம் முதலியவற்றைக் கேட்கலாமென்று சாஸ்த்ரம் கூறுகின்றது. இப்படி அனைவரும் கேட்க உரியதாதலின் ஸதஸ்யமாய் உள்ள சரம சுலோகத்தை ரஹஸ்யமென்று எவ்வாறு கூறலாகும்? இது ஒரு முரண்பாடுதானே? - என்று. இவ்வாறு மேலெழுந்த வாரியாக இரண்டு முரண்பட்ட தன்மைகளைச் சொல்லும் கூற்றுக்கு நாம் முயன்று விடை கூற வேண்டியதில்லை. அவ்வாறு கூறுமவர்களின் சொற்களாலேயே அந்தக் கொள்கை மறுக்கப்பட்டு விடுகின்றது. சரமசுலோகத்தை ஸதஸ்யம் என்று கூறினால் ரஹஸ்யம் என்ற

கொள்கை அடிபட்டுவிடுகின்றது. ரஹஸ்யம் என்று கூறினால் ஸதஸ்யம் என்ற கொள்கை விலக்கப்பட்டதாய் ஒழிகின்றது. ஆதலின் அதைக் கண்டிக்க நமக்குத் தனி முயற்சி வேண்டியதில்லை.

5. ஸதஸ்யம் - ரஹஸ்யம் - முரண்பாடு இன்மை

ஆனால் இந்த ஆக்ஷேபம் நம்மைப்பற்றியும் வரும், பாரதத்தை வெளிப்படையாய்க் கூற உரியதாகச் சாஸ்த்ரம் கூறுவதை நாமும் ஏற்றுக்கொண்டுள்ளதால் சரமசுலோகம் ஸதஸ்யமாகின்றது. ரஹஸ்யங்கள் மூன்றினுள் இது மூன்றாவதாதலின் ரஹஸ்யமென்பதையும் ஸம்ப்ரதாயமாகக் கொண்டுள்ளோம். ஆகவே இந்த முரண்பாடு நமக்கும் உண்டே! என்று நம்மைக் குறித்தும் கேட்கலாம்.

இதற்கு உண்மையான விடை வருமாறு - கூட்டங்களில் சொல்ல உரியனவான பல சொற்களின் அர்த்தத்தை மட்டும் ஏகாந்தத்தில் உபதேசிக்கும்படி சாஸ்த்ரம் விதிக்கின்றது. ஆகவே சரமசுலோகம் அர்த்தத்தைச் சிந்திக்காமல் சப்தத்தை மட்டும் கூறும்போது ஸதஸ்யமாகின்றது. அதன் பொருளை ரஹஸ்யமாகவே உபதேசிக்கவேண்டுமாதலின் பொருளால் ரஹஸ்யமாகவும் ஆகின்றது. இப்படி சொற்றொடர் - அதன் பொருள் என்று இரண்டு கூறாகப் பிரித்து ஸதஸ்யம் - ரஹஸ்யம் என்று இரு தன்மைகளைக் கூறுவதால் இதில் முரண்பாடு ஏதும் இல்லையென்று உணர்க. சரமசுலோகம் சொல்லைக் கொண்டு ஸதஸ்யம், அர்த்தத்தைக் கொண்டு ரஹஸ்யம் என்ற முடிவு ஏற்பட்டது. இதனால் சரமசுலோகம் ஸதஸ்யம் என்ற ப்ரமாணத்துக்கும் ரஹஸ்யம் என்ற ஸம்ப்ரதாயத்துக்கும் முரண்பாடு ஏதும் இல்லையாயிற்று.

6. ப்ரமாணங்களுள் முரண்பாடு இன்மை

பின்னும் ஓர் ஆக்ஷேபம் - கீழே ப்ரமாணத்துக்கும் ஸம்ப்ரதாயத்துக்கும் சரமசுலோகத்தைப் பற்றிய முரண்பாடு இல்லையென்பதை இசைகின்றோம். ஆனால் ப்ரமாணங்களே ஒன்றுக்கொன்று முரண்படுகின்றனவே! உபநிடதங்களிலும் சிறந்த ப்ரமாணம் எது? ப்ரஜாபதியென்னும் பிரமன் இந்திரனுக்கும் விரோசநனுக்கும் ஸம்ஸாரபந்தமற்ற ஆத்மாவின் ஸ்வரூபத்தை உபதேசிக்கும்போது முதலில் சரீரத்தையே ஆத்மாவாகக் கூறி, பின் வேறு சிலவற்றை ஆத்மாவாகக் கூறியதாய் உபநிடதம் கூறுகின்றது. இது பெரிய முரண்பாடு இல்லையா? என்று.

இதற்கு ஸ்மாதாநம் - பிரமனிடம் தேவர்களின் தலைவனான இந்திரனும் அசுரர் தலைவனான விரோசநனும் ஆத்மாவைப் பற்றிய உபதேசத்தைப் பெறச் சேர்ந்து வந்தனர். அப்பொழுது எதிரியான விரோசநனைத் தவறான வழியில் செல்விக்க அவசியம் ஏற்பட்டது. அதற்காகக் கண்முன்னே நிற்கும் சரீரத்தையே ஆத்மாவென்று பிரமன் உபதேசித்து அவனை மயக்கினான். அவனும் அதிலேயே திருப்தியடைந்து சென்றுவிட்டான். இதைக் கூறும் பகுதியே 'அஸுர உபநிஷத்' எனப்படுகின்றது. பின் இந்திரன் ஆராய்ந்து பார்த்ததில் சரீரமே ஆத்மாவாக இருப்பதில் உள்ள இடரைக் கண்டு மறுபடியும் ஓடிவந்தான். பிரமன் அவனுக்குக் கனவில் தோன்றும் சரீரத்தையும் அதிலும் திருப்தி காணாத அவனுக்கு உறக்கத்தில் உள்ள சரீரத்தையும் அதிலும் அமைதி பெறாத போது உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தையும் உபதேசித்தான். இவ்வாறு அவரவர்களின் தகுதிக்கும் வந்து வழிபடும் முறைக்கும் ஏற்பப் படிப்படியாய் வெவ்வேறான ஒன்றைக் காட்டிக் கடைசியில் உண்மையான ஆத்மாவைப் பிரமன் உபதேசித்து அவன் மனத்தை நிலை நிறுத்தியதாய்க் கூறுவதால் உபநிடத வாக்யங்களுள் முரண்பாடு ஏதும் இல்லை.

7. உபநிடதத்தில் முரண்பாடின்மை - விளக்கம்

பின்னும் ஓர் ஆக்ஷேபம் - முக்கிய ப்ரமாணமாய்த் திகழும் உபநிஷத்தில் வேறு இரண்டிடங்களில் முன்னுக்குப்பின் முரண்பாடு உள்ளது. அதாவது - மோக்ஷத்துக்குச் சாதனமான ப்ரஹ்மவித்யைகளுள் உபகோஸல வித்யை - வைச்வாநர வித்யை என்ற இரண்டு உள. இவற்றை உபநிடதம் விளக்குகின்றது உபகோஸல வித்யையில் உபகோஸலன் என்பவனுக்கு அக்நிகள் மூன்றும் ப்ரஹ்மவித்யையின் மூன்று பகுதிகளை உபதேசித்து ஒவ்வொரு பகுதிக்கும் வெவ்வேறு பலனைச் சொல்லி முடித்துவிட் டன. பின் ஆசார்யரான ஜாபாலர் வந்து ப்ரஹ்ம வித்யையின் முழு வடிவத்தையும் அதன் பலனையும் உபதேசித்ததாக உபநிஷத்துக் கூறுகின்றது இங்குச் சில பகுதிகளை மட்டும் உபதேசித்துப் பலன் கூறியதும் முழுவதையும் உபதேசித்துப் பலன் கூறியதும் முரண்படவில்லையா? இவ்வாறே மற்றொன்றாகிய வைச்வாநர வித்யையிலும் முதலில் வைச்வாநரன் என்ற ஆத்மாவைத் தனித்தனியாக உபாஸநம் செய்வதையும் கடைசியில் முழுவதையும் உபாஸநம் செய்ய வேண்டுமென்பதையும் உபநிடதம் கூறியதில் முரண்பாடு தெரிகின்றதே! என்று

இதற்கு ஸமாதாநம் - இரண்டு வித்யைகளிலும் முதலில் சிற்சில பகுதிகளை மட்டும் உபதேசித்திருந்தபோதிலும் அவற்றை மட்டும் அறிந்து செய்தால் போதாதென்பதுவும் எஞ்சியதையும் அறிந்து வரிசையாய் உபாஸித்துவந்து முழுவதையும் பூர்த்தி செய்தேயாகவேண்டுமென்பதுவுமே உபநிடதத்தின் உட் கருத்தாகும். உபகோஸல வித்யையில் சில பகுதிகளை மட்டும் உபதேசித்த அக்நிகள் எஞ்சிய பகுதியை ஆசார்யன் உபதேசிப்பானென்று கூறியதால் பின் அவ்வறிவையும் பெற்று உபாஸநத்தைத் தலைக்கட்டவேண்டுமென்று தெரிகின்றது. வைச்வாநரவித்யையிலும் முதலில் பரமாத்மாவின் ஏகதேசங்களைப் பற்றிய உபஸநத்தையும் அததற்குப் பலனையும் சொல்லியிருந்தபோதிலும் பூர்ணமான உபாஸநத்துக்கு உள்ள பலனையே சிறிது சிறிதாய்ப் பிரித்துக் கூறியுள்ளதேயொழியத் தனித்தனிப் பகுதிகளை உபாஸித்தலோடு நின்று விடலாமென்று கூறவில்லையென்பதே உண்மைநிலை. இவ்வுண்மையை மேலே தனித்தனியாக மட்டும் உபாஸித்தால் வரும் பெருந்தீங்குகளைக் கூறும் உபநிடத வாக்கியத்தாலும் உணரலாம் ஆகவே உபநிடதம் முரண்பட்ட அம்சத்தைக் கூறாதென்று அறிக.

கீழ் கூறிய வரலாறுகளிலிருந்து பல அம்சங்களை ஒருவன் மற்றவர்களிடமிருந்து உபதேசிக்கப் பெற்றாலும் முக்கியமான முழு அம்சங்களையும் ஆசார்யனிடமிருந்தே உபதேசிக்கப் பெற்றாகவேண்டுமென்று தேறியது.

8. பல ஜ்ஞாநிகளிடம் கேட்டுணர்தல்

இவ்வாறே சிறந்த ஆசார்யனிடமிருந்து பரிபூர்ணமாய் உபதேசிக்கப் பெற்றபின்பும் அந்த அர்த்தங்கள் நெஞ்சில் நிலைபெறுவதற்காக மற்றும் பல ஜ்ஞானிகளிடமிருந்து உபதேசத்தைப் பெறுவதும் அவசியமாகும்.

ஸர்வேச்வரன் கண்ணனாகிக் கீதையில் அர்ஜுநனுக்குப் பரிபூர்ணமாய் உபதேசித்தான்; ஆயினும் ஒருமுறை உபதேசம் செய்தது போதாதென்று கருதினான்; ஏனெனில், மனிதனுக்குப் பாபங்களால் ரஜோ குணமும் தமோ குணமும் தலையெடுக்கின்றன. அவை நிறைந்துள்ள மனத்தில் ஒருமுறை உபதேசித்த அர்த்தம் நிலைபெறாது. ஆதலின் தான் உபதேசித்த அர்த்தங்களையே மற்றும் பல ஞானிகளை வணங்கி வழிபட்டுக் கேட்டு உணரும்படி விதித்துள்ளான். இவ்வாறு கேட்டு உணர்ந்து உள்ளத்தில் நிலைநிற்கின்ற அர்த்தங்களைக் கொண்டு வரும் ஸம்ப்ரதாயமே

சிறந்ததாகும். ஆகவே சேதநன் கைக்கொள்ளவேண்டிய ஸம்ப்ரதாயம் எல்லோரும் ப்ரமாணமாக ஏற்றுக்கொண்ட சாஸ்த்ரங்களுக்கு முரண்படாததாகவும் இருக்கவேண்டும். சாஸ்த்ரத்தை ஆதாரமாகக் கொண்டு வந்ததென்று பெரியோர்கள் ஏற்றுக் கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

## 9. தத்துவ விஷயத்தில் முரண்பாடின்மை - விளக்கம்

இவ்வாறு சிறந்த முறையில் வரும் ஸம்ப்ரதாயத்திலும் தத்துவங்கள் விஷயத்தில் மேற்பார்வைக்குச் சில முரண்பாடுகள் தோன்றக்கூடும். உண்மையை ஆராய்ந்து பார்த்தால் விரோதமில்லாமை புலப்படும். எதாவது ஒரு கருத்தைக்கொண்டு அந்த முரண்பாடு தோன்றியிருக்கும். உதாஹரணமாய் - எம்பெருமானுடைய வ்யூஹாவதாரம் நான்கு என்று சில இடத்திலும் மூன்று என்று சில இடத்திலும் கூறப்பட்டுள்ளது. இது முரண்பாடாகத் தோன்றும். உண்மையில் வாஸுதேவன் - ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் என்ற நான்கு ரூபத்தைக் கொண்டு வ்யூஹ ரூபங்கள் நான்கு என்று சொல்லுகிறது. இந்த வ்யூஹத்தில் முதலாவதான வாஸுதேவ ரூபத்திலும் பரமபதத்திலுள்ள பரவாஸுதேவ ரூபத்திலும் சேதநன் அநுஸந்திக்க வேண்டிய குணங்கள் வேறுபடாமையால் வ்யூஹ வாஸுதேவ ரூபத்தைப் பரரூபத்தோடு சேர்த்துக் கொண்டு வ்யூஹங்கள் மூன்று என்றும் சில இடத்தில் கூறப்பட்டுள்ளது. இது ஒரு முரண்பாடாகுமா?

## 10. அநுஷ்டாந விஷயத்தில் முரண்பாடின்மை - விளக்கம்.

இவ்வாறே அநுஷ்டாந விஷயத்திலும் எதாவது முரண்பாடு மேற்பார்வைக்குத் தோன்றலாம். செதநன் தன் ஆத்மாவைக் காண்பதற்குக் கர்மயோகத்தால் மனத்தூய்மை பெற்றுப் பிறகு ஜ்ஞாநயோகம் செய்யாமல் கர்மயோகத்தைக் கொண்டே ஆத்மாவைக் காணமுடியுமென்றும் கூறுகின்றது. இது மேற்பார்வைக்கு முரண்பாடாகத் தோன்றவில்லையா? உண்மையில் முரண்பாடு இல்லை. இந்த வேற்றுமை, செய்யும் மனிதர்களின் தகுதியைப் பற்றியதாகும். கர்மயோகத்திற்குப் பிறகு ஜ்ஞாநயோகத்தைச் செய்யத் தகுதியுடையவன் இருக்கலாம். அவன் அதைச் செய்து ஆத்மாவைக் கண்டுவிடலாம். மற்றொருவன் ஜ்ஞாநயோகத்தைச் செய்யத் தகுதியற்றிருக்கலாம். தகுதி இருப்பினும் செய்வதற்கு எளிதாய் முன்பு செய்து பழகிய கர்மயோகத்தையே செய்ய ஆசையுடயனும் இருக்கலாம். இத்தகையன் ஆத்மாவைக் காணும் வரையில் கர்மயோகத்தையே

செய்து ஜ்ஞாநயோகம் இல்லாமலே ஆத்மாவைக் காண்கின்றான். இவ்வாறு தகுதியைப் பற்றிய வரையறை இருப்பதால் முரண்பாடு ஏதும் இல்லையென்று உணர்க.

கர்மயோகத்தின் உட்பிரிவுகளில் ஒன்றைச் செய்யுமிடத்தில் இந்த வரையறையே இல்லாமல் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்கிற முறையும் உண்டு அதாவது - கர்மயோகத்தில் தேவதாராதநம் - தவம் புரிதல் - தீர்த்தயாத்ரை - தாநம் செய்தல் - வேள்வி செய்தல் முதலிய பல்வகைகள் உண்டு. இவற்றுள் ஒன்றைச் செய்வதில் வரையறை ஏதும் இல்லை. இவற்றுள் இஷ்டமான எதாவது ஒன்றைச் செய்யலாம். ஆகவே அநுஷ்டாந விஷயத்திலும் முரண்பாடு எதுவும் இல்லையென்று உணர்க.

மோக்ஷத்திற்கு ஸாதநமான பக்தி - ப்ரபத்தி என்னும் இரண்டே உபயங்களைப் பற்றிச் சிந்திப்போம். இவற்றுள் ஒன்றைச் செய்வதற்கு வரையறை எதாவது உண்டா? இல்லையா? தகுதியில் வரையறை உண்டு. பக்தியோகத்தைச் செய்யத் தகுதியுடையவர் அதையே செய்யவேண்டும். தகுதியற்றவர் ப்ரபத்தியையே செய்ய வேண்டும். ஆகவே தகுதியைப்பற்றிய இந்த வரையறை உண்டு. ஆனால் பக்தியையாவது ப்ரபத்தியையாவது செய்யலாம் என்று வரையறையில்லாதுபோல் வைத்துப் பேசுகின்றார்களே என்றால் இதன் கருத்து வேறு. அததில் தகுதியுடையர் இரண்டினுள் எதைச் செய்தாலும் பெறும் பலனாகிய மோக்ஷத்தில் வித்தியாஸமில்லையே ; ஆகவே பலனைப் பற்றிய வரையறை இல்லையென்பதுதான் அவர்கள் கருத்து, ஆதலின் இதுவும் முரண்பாடாகாது.

## 11. நம் ஸம்ப்ரதாயம் வரும் வழி

கருணாமூர்த்தியான ஸர்வேச்வரன் எல்லாச் சேதநர்களும் உஜ்ஜீவிக்க வேண்டுமென்ற குளிர்ந்த எண்ணத்தால் வேதாந்த சாஸ்த்ரத்தின் ஸம்ப்ரதாயத்தை முதன்முதலாக வெளியிட்டான். பெருமான், பிராட்டிக்கு நேராக உபதேசிக்கின்றான். பிராட்டி விஷ்வக்ஸேநருக்கு உபதேசிக்கின்றாள். விஷ்வக்ஸேநர் நம்மாழ்வாருக்கு உபதேசிக்கின்றார். இவ்வாறே வருகிற ஆசார்ய பரம்பரையில் பிராட்டிக்கு எம்பெருமான் நேராகவும், மற்றுள்ளாருக்குப் பிராட்டி - விஷ்வக்ஸேநர் முதலிய ஆசார்யகளைக் கொண்டும் ஞானோபதேசம் செய்விக்கின்றானென்பது முடிவு. மற்ற ஆசார்யர்கள் தத்தம் ஆசார்யகளால் உபதேசிக்கப்பெற்று ஸம்ப்ரதாயத்தை ப்ரசாரம் செய்பவர்கள்.

### 12. முந்திய யுகத்தில் வேதாந்த ஸம்ப்ரதாயம் வந்த வகை

ஆதியில் வேதாந்த ஸம்ப்ரதாயத்தை உலகில் ப்ரசாரம் செய்தவர்கள் வ்யாஸபகவான் போதாயநர் முதலியவர்கள். அவர்கள் தத்துவங்களைப் பிற மதத்தினர் போலன்றி உண்மையான முறையில் அறிந்தவர்கள். தாங்கள் அறிந்தபடியே சாஸ்த்ரார்த்தங்களைச் சிஷ்யர்களுக்கும் உபதேசிப்பவர்கள். அவர்களால் உபதேசிக்கப்பெற்ற சிஷ்யர்களும் பிறரிடம் பொறாமை கொள்ளுதல் முதலிய துர்க்குணங்களற்றவர்களா யிருந்தவர்கள் ; அவர்கள் தங்கள் ஆசார்யர்களை வணங்கிப் பணிவிடை செய்து நன்கு வழிபட்டே உபதேசத்தைப் பெற்றவர்கள். அத்தகைய சிஷ்யர்களுக்கு வ்யாஸர் போதாயநர் முதலிய மஹர்ஷிகள் தங்கள் தகுதிக்கும் சீடர்களின் தகுதிக்கும் ஏற்றவாறு வேதாந்த சாஸ்த்ரத்தை உபதேசித்து வந்தனர். அவர்களுக்குப் பிறகு ப்ரஹ்மநந்தி என்கிற டங்கர் - த்ரமிடர் - குஹதேவர் முதலியவர்கள் வேதாந்த சாஸ்த்ரத்தை உபதேசித்து வந்தனர். இவர்கள் அனைவரும் முந்திய யுகத்தில் ஸித்தாந்தத்தை ப்ரவசநம் செய்தவர்கள்.

### 13. கலியுகத்தில் நம்மாழ்வாரே ப்ரவர்த்தகர்

அவர்கள் காலத்திற்குப் பிறகு கலியுகம் தொடங்கியது அதில் முதன்முதலாக நம்மாழ்வாரே வேதாந்த சாஸ்த்ரத்தை இவ்வுலகில் வெளியிட்ட ஆசார்யராகின்றார். இவரிடத்தில் முதலில் ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவர் ஸ்ரீ மதுரகவிகள். இவர் காலம் துவாபரயுகத்தின் கடைசிப் பகுதி. இவர் வாழ்ந்த காலத்தில் கண்ணபிரான் தன் அவதார காரியத்தைப் பூர்த்தி செய்யாமல் இந் நிலவுலகிலேயே எழுந்தருளியிருந்தான். அவன் ஸர்வேச்வரவனுடைய அவதாரமே என்பதும் ஸ்ரீ மதுர கவிகளுக்குத் தெரியும். அவனையே நேரில் ஆச்ரயித்திருக்கலாமே! அவ்வாறு செய்யவில்லை ஸ்ரீ மதுரகவிகள். ஆசார்யன் வழியாக எம்பெருமானை அடைவதே சிறக்குமென்ற கொள்கையுடையர் மதுரகவிகள் ; தம் மனத்துக்கு உகந்த சிறந்த ஓர் ஆசார்யனை எதிர்பார்த்திருந்தார். கலியுகத்தின் தொடக்கத்தில் நம்மாழ்வார் அவதரித்தார். இவர்தாம் இந்த யுகத்தில் வேதாந்த ஸம்ப்ரதாயத்தை உலகில் நடையாடச் செய்தார். இவ்வாழ்வார் திருவடிகளிலே ஸ்ரீ மதுரகவிகள் ஆச்ரயித்தார். இவரினும் மிக்க தெய்வம் இல்லையென்ற உறுதியைக் கொண்டவர் ஸ்ரீ மதுரகவிகள்.

### 14. நம்மாழ்வாரது ஆசார்யகத்தின் பொருத்தம்

அந்தணர் குலத்து உதித்த ஸ்ரீ மதுரகவிகள் வேளாளர்

குலத்தில் அவதரித்த ஆழ்வாரிடம் உபதேசம் பெற்று அவரை ஆசார்யராகக் கொள்வது எங்ஙனம்? என்ற கேள்வி எழும். இதற்கு விடை - அந்தணர் - க்ஷத்திரியர் - வைசியர் - வேளாளர் இவர்களுள் முந்திய வகுப்பினர் கிடைக்காத பொழுது பிந்தியவரிடத்தில் எம்பெருமானைப் பற்றிய ஞானத்தைப் பெற வேண்டுமென்று வலிமையான ப்ரமாணம் கூறுகின்றது. ஆதலின் வைதிகர்கள் போற்றும் வேதாந்தார்த்தங்களைத் தம் நெஞ்சில் நிலைநிற்குமாறு ஆழ்வார் அருளிச் செயல் வழியாய் உபதேசித்ததாய் ஸ்ரீ மதுரகவிகள் தாமே அருளிச் செய்தது நன்றாய்ப் பொருந்துகின்றது.

### 15. வேதாந்தார்த்தங்களை விளக்குவதில் தமிழ்மொழியின் சிறப்பு

ஒரு கேள்வி - வடமொழி தவிர மற்ற மொழிகளை அந்தணர் ஏற்றுக் கொள்ளக் கூடாதே ; அந்தணரான ஸ்ரீ மதுரகவிகள் தமிழ்மொழியில் உள்ள அருளிச்செயலை எவ்வாறு ஏற்றுக் கொண்டார்? என்று ஸமாதானம் - எந்த மொழியானாலும் எம்பெருமானைப் பற்றிப் பேசுவதாயின் கைக்கொள்ள ஏற்றதேயாகும். வடமொழியும் இழிவான விஷயங்களைப் பேசுமாயின் அதை ஏற்றுக் கொள்ளலாமா? கூடாது. ஆழ்வாரது அருளிச் செயலோ வேதாந்த சாஸ்த்ரத்தின் பரம ரஹஸ்யமான அர்த்தங்களை மிகத் தெளிவாய் அறிவதற்கு உடலாயிருப்பதால் அதையும் எவ்வகுப்பினரும் ஏற்றுப் போற்றத் தடையில்லை.

### 16. விதுரர் வார்த்தை - கருத்து விளக்கம்.

மேலும் இங்ஙனமே நான்காம் வருணத்திற் பிறந்த தரும வியாதர் - துலாதாரர் முதலியவர்களும் தங்களை வந்து அண்டிய அந்தணர்க்குப் பல ஸாரார்த்தங்களை உபதேசித்திருப்பதை இதிஹாஸ வரலாறுகளால் அறியலாம்.

ஒரு விஷயம் - விதுரர் தர்மபுத்திரனுக்குப் பல சிறந்த தர்மங்களை உபதேசித்துக் கொண்டே வரும்போது ஓரிடத்தில் நிறுத்தி 'யான் வேளாளர் குலத்தில் உதித்தவனாதலின் இதற்கு மேல் கூறத் துணியமாட்டேன்' என்று கூறியுள்ளாரே! இங்ஙன் இருக்க தர்மவ்யாதர் துலாதாரர் முதலியவர்கள் எவ்வாறு உபதேசித்தார்கள்? விதுரர்தாம் முதலில் எவ்வாறு உபதேசித்தார்? என்ற கேள்வி வரும். இதற்கு ஸமாதானம் - அங்கு தர்மவ்யாதர் துலாதாரர் முதலியோர் உபதேசித்ததும் விதுரர் முதலில் உபதேசித்ததுமான விஷயம் வேறு. இங்கு விதுரர் இனி

உபதேசிக்கத் தகுதி இல்லை என்று கூறிய விஷயம் வேறு. அங்கு தர்மவ்யாதர் முதலியோரும் முதலில் விதுரரும் உபதேசித்தது ப்ரஹ்மவித்யையுமன்று, மந்த்ரமும் அன்று. எம்பெருமானைப் பற்றிய பொது விஷயங்களை மட்டுமே உபதேசித்தனர். இங்கு விதுரரும் பொதுவாய் அறியவேண்டிய சிறந்த தர்மங்களை மட்டும் உபதேசித்துவிட்டு இதற்கு மேல் அறிய வேண்டிய ப்ரஹ்மவித்யை, மந்த்ரம் முதலியவற்றை உபதேசிக்க வேளாளரான தமக்குத் தகுதியில்லையென்று கூறியதாகக் கொண்டு முரண்பாடு நீங்குதலை உணர்க.

**17.** நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு இருவகையில் ஆசார்யன்.

ஸ்ரீமந்நாத முனிகளுக்கு நம்மாழ்வார் வரிசை முறையிலும் நேர்முறையிலும் ஆசார்யனாகின்றார். எவ்வாறெனில் - நாத முனிகளுக்குப் பராங்குச தாஸரென்பவர் கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்தை உபதேசித்தார். பராங்குசதாஸர் மதுரகவிகளின் திருவம்சத்தில் அவதரித்தவர். ஆகவே அவருக்கு ஆசார்ய பரம்பரையில் முந்தி நிற்பவர் ஸ்ரீ மதுரகவிகள். அவருக்கு ஆசார்யர் ஆழ்வார். இப்படி நாதமுனிகளுக்கு வரிசையாக ஆழ்வார் ஆசார்யராகின்றார். மேலும் திருக்குருகூரில் திருப்புளியாழ்வரடியில் நாதமுனிகள் யோகத்திலிருந்த பொழுது பரவாஸுதேவன் நியமத்தால் நம்மாழ்வார் மறுபடியும் நாதமுனிகளுக்காகவே இவ்வுலகில் அவதரித்து நேரில் அவருக்கு ஸகலமான வேதாந்தார்த்தங்களையும் அருளிச் செயல் முழுவதையும் உபதேசித்தருளினார். இந்த முறையில் ஆழ்வார் நாதமுனிகளுக்கு நேராகவே ஆசார்யனாகின்றார்.

**18.** ப்ரபந்நஸந்தான கூடஸ்த்தர் நம்மாழ்வார் ஒருவரே.

ப்ரபத்தியென்னும் உபாயமும் பக்தியோகம்போல் மோக்ஷத்திற்குச் சாதனமென்று உபநிடதமும் மற்ற சாஸ்த்ரங்களும் கூறுகின்றன. நம்மாழ்வாருக்கு முன்பும் பலர் ப்ரபத்தியை அநுஷ்டித்துள்ளனர். ஆனால் நம்மாழ்வார் காலத்துக்குப் பின்புதான் சேதநர்கள் ப்ரபத்தியை மிகுதியாகக் கைக் கொள்ளத் தொடங்கினர். ஆழ்வார்தாம் தம் ஸூக்திகளின் வாயிலாகவும் தம் அநுஷ்டாநத்தைக் கொண்டும் ப்ரபத்திக்கு மிக்க செல்வாக்கை உண்டாக்கிப் புத்துயிர் அளித்தார். தம் பிற்காலத்தவர்க்கும் எளிதான இந்த வழியைக் காட்டி உயர் கதி பெறச் செய்தார். ஆதலின் ப்ரபத்தியைச் செய்பவர்களின் பரம்பரையாகிய ப்ரபந்நஸந்ததிக்கு ஆழ்வார் மூலபுருஷராகின்றார். ப்ரபந்ந ஸந்தாந கூடஸ்தர் என்று ஆழ்வார் வழங்கப் பெறுவதற்கும்

காரணம் இதுவேயாகும். இவ்வாறு நம்மாழ்வாருடைய கடாக்ஷமும் பெற்ற நாதமுனிகள் இந்த ஸம்ப்ரதாயத்தை முதலில் ப்ரவசநம் செய்தார். பின் இவர் பேரனாரான ஆளவந்தார் தம் ஸூக்திகளைக் கொண்டு இந்த ஸம்ப்ரதாயத்தை வளர்த்தருளினார்.

**19.** நாதமுனிகள் தம் பேரனாருக்குத் தாம் உபதேசிக்காத - தன் காரணங்கள் :

ஸ்ரீ நாதமுனிகளுக்குத் திருப்பேரனார் ஆளவந்தார். பாட்டனாரும் பேரனாரும் ஸம காலத்தில் எழுந்தருளியிருக்கும் வாய்ப்பு இருந்தது. தம் பேரனாருக்கு ஸ்ரீ நாதமுனிகள் தாமே நேரில் உபதேசித்துத் தாமே நேரான ஆசார்யனாக ஆகியிருக்கலாம். அவ்வாறு செய்யவில்லை. அவர் தம் சிஷ்யரான உய்யக்கொண்டாரை அழைத்தார். அவரிடம், தம் பேரனாரான ஆளவந்தாருக்கு வேதாந்த ஜ்ஞாநத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்ற ஆர்வம் எப்பொழுது உண்டாகின்றதோ அப்பொழுது உபதேசித்து அவரைச் சிஷ்யராகக் கொள்ளும்படி நியமித்தார்.

இவ்வாறு நாதமுனிகள் ஆளவந்தாருக்கு நேரில் உபதேசிக்காததற்கு மூன்று காரணங்கள் உண்டு. (1) ஓர் ஆசார்யனிடம் ஒரு சிஷ்யன் வேதாந்த வித்யையை உபதேசிக்கப் பெற்றால் அந்த ஆசார்யனுடைய புத்திரன் பேரன் முதலிய ஸந்ததியாருக்கு அந்த சிஷ்யன் உபதேசிக்க வேண்டும். அவர்களும் அச் சிஷ்யனிடம் உபதேசிக்கப் பெறுதற்குச் சிறந்த பாத்திரமாவார். இவ்வுண்மையை உலகுக்கு அறிவிக்க விரும்பினார் நாதமுனிகள். (2) ஓர் ஆசார்யனை ஆச்ரயித்துச் சில சிஷ்யர்கள் விசேஷஜ்ஞாநத்தை ஸம்பாதித்துப் பிறருக்கும் உபதேசிக்க வல்ல எல்லாத் தகுதியையும் பெற்றுள்ளனர் அந்த ஆசார்யனுடைய ஸந்ததியில் பிறந்தவர்கள் தங்களுக்கு முன்பே தங்கள் முன்னோரிடம் உபதேசிக்கப் பெற்ற இந்த சிஷ்யர்கள் விஷயத்தில் எத்தகைய மனப்பாங்கைக் கொள்வர்? இவர்கள் நம் முன்னோரின் சிஷ்யர்கள் தாமே என்று கருதி மதியாமலிருப்பர். அவர்களைத் தாங்கள் ஆச்ரயிக்கக் கூடாதென்றும் நினைப்பர். இது தகாது. ஆசார்யன் ஸந்ததியில் தோன்றியவர்கள் தங்களுக்கு முன்பே தம் முன்னோர்களிடம் ஆச்ரயித்த சிஷ்யர்கள் ஜ்ஞாந ஸந்ததியில் தங்களுக்கு முற்பட்டவர்களென்பதை நினைத்து அவர்களைத் தாங்கள் ஆசார்யர்களாகக் கொண்டு ஆதரிக்க வேண்டும். அவர்களால் தாங்கள் உபதேசிக்கப் பெறலாம். இவ்வுண்மையையும் உலகுக்குத் தெளிவிக்க விரும்பினார்

நாதமுனிகள். (3) ஆசார்யன் சிஷ்யர்களுக்குக் காலக்ஷேபம் செய்ய வேட்கை இருக்கின்றதா என்று பார்த்தறிந்தே உபதேசிக்க வேண்டும். சிஷ்யர்களுக்குச் சிரத்தை இல்லாதபோது வலிய இழுத்து வைத்து உபதேசித்தால் சிரத்தையற்ற அவர்கள் உள்ளத்தில் ஆசார்யன் உபதேசித்த அர்த்தங்கள் நிலைபெற்று நிற்கமாட்டா. அப்பொழுது அந்த ஆர்வத்தை ஆளவந்தார் பெறாததால் உபதேசிக்கப் பெறத் தகுதியற்றவாராகின்றார். இவ்வாறு ஆர்வம் பெறாத சீடர்க்கு உபதேசிக்கக் கூடாது என்பதையும் உலகுக்குப் போதிக்க வேண்டும். இந்த மூன்று அம்சங்களையும் திருவுள்ளத்திற் கொண்டே நாதமுனிகள் தம் பேரனான ஆளவந்தாருக்குத் தாம் நேர் ஆசார்யனாகவில்லை.

**20. மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு ஆசார்யனாதல் :**

நாதமுனிகளின் சிஷ்யரான உய்யக்கொண்டாரும் தம் ஆசார்யன் நியமநப்படி ஆளவந்தாருக்குத் தாம் நேரில் உபதேசிக்க முடியவில்லை. தம் சிஷ்யரான மணக்கால் நம்பியைக் கொண்டே உபதேசிக்கச்செய்ய வேண்டியிருந்தது, ஏன்? ஆளவந்தார் தர்க்கம் - மீமாம்ஸை முதலிய ஸாமாந்ய சாஸ்த்ரங்களை நன்கு கற்று மஹாமேதாவியாய்ப் பிரதிவாதிகளை வாதப் போரில் வெற்றிகொண்டு அரசனுடைய மதிப்புக்கு உரியராகிப் பெரிய போகத்தில் இருந்தார். உய்யக்கொண்டார் வயது முதிர்ந்து திருநாட்டுக்கு எழுந்தருளும் காலம் நெருங்கிய நிலையில் இருந்தார். ஆளவந்தாருக்கோ ராஜபோகத்தில் இருக்கும் நிலையாதலின் வேதாந்தத்தை அறிய விருப்பமே உண்டாகவில்லை. அதனால் உய்யக்கொண்டார் தமக்கு முக்கிய சிஷ்யரான மணக்கால் நம்பிக்கு நியமித்து உரிய காலத்தில் ஆளவந்தாருக்கு உபதேசித்து ஆட்கொள்ளும்படி நியமித்தார். உய்யக்கொண்டார் ஆசார்யனது நியமநத்தைத்தாம் தலைக்கட்ட முடியாத சூழ்நிலையில் தம் சிஷ்யராய் நாதமுனிகளுக்கு ப்ரசிஷ்யரான மணக்கால் நம்பியைக் கொண்டு நிறைவேற்றினார்.

**21. ஆளவந்தாரைத் திருத்த மணக்கால் நம்பி செய்த யுக்தி**

காலம் சென்று கொண்டிருக்கிறது. ஆளவந்தாரோ மிகுந்த செல்வாக்குடன் ராஜபோகத்தில் ஆழ்ந்திருக்கிறார். அவராக வந்து ஆச்ரயிப்பதென்பது நடவாத செயலாகத் தோன்றியது. ஆசார்யனது நியமநத்தைச் செய்தாகவேண்டுமே! ஆதலின் ஆளவந்தாரைத் திருத்த மணக்கால்நம்பி தாமே முயலவேண்டியதாயிற்று. எளிதில் அணுகி நேரில் நின்று

பேசமுடியுமா? அதற்காக ஒரு யுக்தி செய்தார் மணக்கால் நம்பி. ஆளவந்தாருக்குப் பச்சைத் தூதுவளை மிகப் போக்யம் என்பதை அந்தரங்கர் வாயிலாகக் கேள்விப்பட்டார். மிக்க முயற்சி கொண்டு தினந்தோறும் பசுமையான கீரையைப் பறித்து மடைப்பள்ளியில் கொண்டுபோய்க் கொடுத்துவந்தார். இவ்வாறே தடையின்றி நெடுநாள் நடந்து வந்தது. ஒருநாள் கொடுக்காமல் நிறுத்திவிட்டார். ஆளவந்தார் அமுது செய்யும்போது "இன்று ஏன் கீரை இல்லையென்று கேட்டார். தினந்தோறும் கொண்டுவருபவர் இன்று வராததை மடைப்பள்ளியரர் கூறினர். இவ்வளவு சிரத்தையுடன் தினந்தோறும் கீரை கொண்டு வருபவரைப் பார்க்க எண்ணினார் ஆளவந்தார். மணக்கால் நம்பியை அழைத்து விசாரித்தார். அவர் "இந்தக் கீரையையே இவ்வளவு போக்யமாகக் கருதுகின்றீரே! இதனினும் போக்யமான ஒரு வஸ்து என்னிடம் உள்ளது. அது உம்முடைய ஸந்ததிக்குப் பரம்பரையாய் வருவது. உம் பாட்டனாரும் உம்மிடம் அதை அளிக்கும்படி என்னிடம் அனுப்பியிருக்கிறார்" என்றார். இதைக் கேட்டதும் அதைப் பெற வேண்டுமென்ற வேட்கை ஆளவந்தாருக்கு உண்டாயிற்று பிறகு அவருக்கு உபதேசத்தைச் செய்து அவருக்கு ஆசார்யரானார் மணக்கால் நம்பி.

22. மணக்கால் நம்பி தம் முயற்சியாலே ஆளவந்தாரை ஏற்றது முறையா? - விடை

இங்குச் சில கேள்விகள் - ஆசார்யனுக்கன்றோ சிஷ்யன் உபஹாரம் ஸமர்ப்பிக்க வேண்டுமென்று சாஸ்த்ரம் கூறுகின்றது! இங்கு ஆசார்யனான மணக்கால்நம்பி சிஷ்யராகப் போகிற ஆளவந்தாருக்குத் தூதுவளைக் கீரையை உபஹாரமாகக் கொடுத்தது எப்படிப் பொருந்தும்? மேலும் சிஷ்யன் உபதேசம் பெற ஆவலோடு வந்து பிரார்த்திக்க வேண்டுமே! இங்கு மணக்கால் நம்பி ஆளவந்தாருக்குத் தாமே கீரையின் வாயிலாக முயன்று ஆசையை உண்டாக்கியது தகுமா? மேலும் நெடுநாள் பரீக்ஷை செய்து தகுதியைக் கண்ட ஒருவனைச் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றன்றோ சாஸ்த்ர விதி! மணக்கால் நம்பி ஒரு பரீட்சையும் செய்யாமலே ஆளவந்தாரைச் சிஷ்யராக ஏற்று உபதேசித்தது நியாயமா? என்று.

இவற்றுக்கு ஸமாதானம் வருமாறு - தமக்கு ப்ராசார்யரான நாதமுனிகள் ஸந்ததிக்குத் தாம் எதாவது சிறு தொண்டை விரைவில் செய்யவேண்டுமென்று ஆவல் கொண்டார் மணக்கால்நம்பி. மேலும் தம் ஆசார்யரான உய்யக்கொண்டாருக்கு அவருடைய

ஆசார்யரான நாதமுனிகளின் நியமநத்தை ஆளவந்தார் விஷயத்தில் செய்யமுடியாது திருநாட்டுக்கு எழுந்தருள நேர்ந்ததே! வயது முதிர்ந்துள்ள தமக்கும் உய்யக்கொண்டாருடைய நியமனத்தைத் தலைக்கட்ட முடியாமற்போய் விடுமோ என்ற அச்சம் வந்து விட்டது மணக்கால் நம்பிக்கு. இந்தச் சூழ்நிலையில் ராஜபோகத்தில் உள்ள ஆளவந்தார் உபஹாரத்துடன் தம்மிடம் வர வேண்டுமென்றோ, உபதேசத்தைப் பெற ஆவலுடன் அவரே முதலில் தம்மிடம் வரவேண்டுமென்றோ எதிர்பார்ப்பது பயனற்றதாகத் தோன்றியது. ஆதலின் அரசர் போன்ற ஆளவந்தாரை அணுகுவதற்குக் கீரையைச் சாதனமாக்கித் தாமே அவரிடம் சென்று ஆவலை உண்டாக்கினார் மணக்கால் நம்பி. மேலும் நல்வழி நடப்பவர் அரிதான இக் கலியுகத்திலே சாஸ்த்ரப்படி நெடுங்காலம் பரீக்ஷை செய்தால் உபதேசத்தைப் பெறச் சிஷ்யர்களே அகப்படமாட்டார்கள். மேலும் இந்த யுகத்தில் ஆசார்யன் சிஷ்யனுக்கு நல்லுரை அடிக்கடி கூறி உபதேசத்தைப் பெற அவனுக்கு ஆசையை உண்டாக்க வேண்டும். இவ் வம்சங்களெல்லாம் இந்த யுகத்தின் தர்மம் என்று சாஸ்த்ரமே கூறுகின்றது. இவை அனைத்தையும் உள்ளத்துக் கொண்டே மணக்கால் நம்பி ஆளவந்தாரை நன்கு பரீக்ஷை செய்யாமல் விரைவிலேயே உபதேசித்து ஆட்கொண்டது பொருத்தமானதே!

23. ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் தம் ஆசார்யனை முன்னிடாதது முறையா? - விடை

ஆளவந்தார் தாம் அருளிச் செய்த ஸ்தோத்ர ரத்நத்தில் முதல் மூன்று சுலோகங்களால் நாத முனிகளைப் புகழ்ந்து திருவடி தொழுது மேலே ஸ்தோத்ர சுலோகங்களை அருளிச் செய்கின்றார். ஸ்தோத்ரத்தின் முடிவிலும் நாத முனிகளின் ஸம்பந்தத்தைக் கூறிக்கொண்டு அதனால் தம் பொறுப்பு நீங்கிய தன்மையைக் கூறுகின்றார். மேலும் நடுவில் அவரை முன்னிட்டே எம்பெருமானைச் சரணமடைகின்றார். இங்கு ஆளவந்தார் தமக்கு நேர் ஆசார்யனான மணக்கால் நம்பியையோ அவருக்கு ஆசார்யரான உய்யக்கொண்டாரையோ புகழவுமில்லை. முன்னிடவுமில்லை இதற்குக் காரணம் யாது? என்ற கேள்வி எழுகின்றது. இதற்கும் மூன்று வகை ஸமாதாநம் உண்டு. (1) நாதமுனிகளைப் போற்றினால் அது தம்முடைய நேர் ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கர்யமே ஆகும். ஆசார்ய கைங்கர்யம் என்றால் என்ன? ஆசார்யன் திருவுள்ளத்துக்கு உகப்பானவற்றைச் செய்வதுதானே! தம் நேர் ஆசார்யனான

மணக்கால் நம்பிக்கும் அவருக்கு ஆசார்யனான உய்யக்கொண்டாருக்கும் திருவுள்ளம் மிகவும் உகக்கச் செய்வது நாதமுனிகளைப் போற்றுவதைக் காட்டிலும் யாது உள? ஆதலின் நாதமுனிகளைப் போற்றி அவரை முன்னிட்டுச் சரணம் புகுவதும் நேர் ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கர்யமேயாகும். (2) பேரனாரான ஆளவந்தார் ராஜபோகத்தில் இருந்தபோது அவருக்கு உபதேசிக்க விரும்பாத நாதமுனிகள் அவருக்கு சிரத்தை உண்டாக்கி, விரும்பும்போது உபதேசிக்கும்படி உய்யக் கொண்டாருக்கு நியமிக்கவில்லையா? அவ்வாறு அவர் நியமித்ததாலன்றோ உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிக்கு நியமித்து அவரைக் கொண்டு ஆளவந்தாரை ஆட்கொண்டது? இத்தகைய ஆசார்யனைப் பெற்றதே ஒரு செல்வமன்றோ! இதனால் ஞானம் கைங்கர்யம் மோக்ஷ ஸாம்ராஜ்யம் ஆகிய பல செல்வங்கள் வரவிருக்கின்றனவே! இந்த எல்லாச் செல்வங்களையும் பெறுதற்குக் காரணம் நாதமுனிகள் வம்சத்தில் பெற்ற பிறவியன்றோ! அவர் திருமேனி ஸம்பந்தத்தாலேயன்றோ பேரனார் விஷயத்தில் நாதமுனிகளுக்கு அவ்வளவு சிரத்தை தோன்றியது. ஆகவே அவரைப் புகழ்வது ஆளவந்தாருக்கு கடமைதானே? (3) நேர் ஆசார்யனை எப்படி வழிபட வேண்டுமோ எத்தகைய நன்றியறிவைக் கொள்ள வேண்டுமோ, அத்தகைய வழிபாட்டையும் நன்றியுணர்ச்சியையும் அவருக்கு ஆசார்யனிடமும், அந்த ஆசார்யனுக்கு ஆசார்யனிடமும் கொள்ளவேண்டுமென்பது சாஸ்த்ரம் கூறும் உண்மை. இக்கருத்தைக் கொண்டே ஆளவந்தார் நன்றியுணர்ச்சியோடு முதலில் நாதமுனிகளைப் புகழ்ந்து இவ்வுண்மைகளை உலகுக்குக் காட்டியருளினார்.

## 24. கிரந்தம் இயற்றுமவர்கள் சில ஆசார்யர்களை மட்டும் குறிப்பிடுதல் மரபு

சில பெரியோர்கள் தாம் க்ரந்தங்களை இயற்றும்போது ஆளவந்தார் செய்ததுபோல் சில ஆசார்யர்களை மட்டும் குறிப்பிட்டுப் புகழ்ந்து பேசித் தம் நேர் ஆசார்யனைக் கூடக் கிரந்தத்தில் ப்ரஸ்தாவிக்காமல் விட்டுவிடுவதுண்டு. இதைக் கொண்டு அவர்களுக்கு மற்ற ஆசார்யர்களிடம் பக்தி இல்லையென்றோ நன்றியுணர்ச்சி இல்லையென்றோ எண்ணிவிடக்கூடாது. ஆசார்ய பரம்பரையில் சில ஆசார்யர்கள் தாங்கள் கிரந்தங்களை இயற்றியதன் வாயிலாகவும் உலகுக்கு விசேஷ உபகாரம் செய்திருப்பதால் அவர்களை மட்டும் கிரந்தங்களில் கூறிப் புகழ்வதுண்டு. இத்துடன் மட்டும் அவர்கள் நின்று விடுவதில்லை. மற்றுள்ள ஆசார்யர்களுக்குத் தனியன்களைக் கூறும் வாயிலாகவும்

வேறு வகையிலும் ஒருவரைக்கூட விடாமல் ஆசார்ய பரம்பரை முழுவதையும் அநஸந்தித்தே தீருவார்கள்.

### 25. ஸ்ரீபாஷ்யகாரருக்கும் பெரியநம்பிகளே ப்ரதான ஆசார்யன்

ஸ்ரீபாஷ்யகாரர் சாஸ்த்ரங்களை நன்கு கற்று மேதாவியாய்க் காஞ்சீ புரத்தில் வஸித்துக் கொண்டிருந்தார். அவருடைய தகுதியைக் கேள்விப்பட்டிருந்த ஆளவந்தார் அவருக்குத் தாமே வேதாந்தார்த்தங்களை உபதேசிக்கத் திருவுள்ளம் கொண்டிருந்தார். திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்த ஆள வந்தார் தம்முடைய முக்கிய சிஷ்யராகிய பெரியநம்பிகளைக் காஞ்சிக்குச் சென்று ஸ்ரீபாஷ்யகாரரை அழைத்து வருமாறு நியமித்தார். அவரும் காஞ்சிக்குப் புறப்பட்டு எழுந்தருளினார். அவர் காஞ்சியினின்று ஸ்ரீபாஷ்யகாரரை அழைத்து வருவதற்குள் ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளும் ஸமயம் நெருங்கி விட்டது. அப்பொழுது தம்முடைய சிஷ்யர்களுள் ஒருவரை அழைத்துப் பெரியநம்பிகள் ஸ்ரீபாஷ்யகாரருடன் திருவரங்கத்துக்குத் திரும்பி வந்தபின் பெரியநம்பிகளையே அவருக்கு வேதாந்தார்த்தங்களை உபதேசித்துப் பிரதாந ஆசார்யராய் நிற்குமாறு தாம் நியமித்ததாகக் கூறும்படி சொல்லிவிட்டு, திருநாட்டுக்கு எழுந்தருளினார். பெரிய நம்பிகள் ஸ்ரீபாஷ்யகாரருடன் திரும்பி வந்ததும் தம் ஆசார்யனுடைய நியமநத்தைத் தம்முடன் காலக்ஷேபம் செய்த ஒரு ஸ்வாமியின் வாயிலாக அறிந்து ஸ்ரீபாஷ்யகாரருக்கு ஸகலார்த்தங்களையும் தாமே உபதேசித்து அவருக்கு ப்ரதாந ஆசார்யனாய் விளங்கினார்.

### 26. ஸ்ரீபாஷ்யகாரருக்கு மற்றும் சில ஆசார்யர்கள்

பெரியநம்பிகள் அத்துடன் நிற்கவில்லை. தம்முடன் சேர்ந்து ஆளவந்தாரிடம் காலக்ஷேபம் செய்தவர்களான மற்றும் சில பெரியோர்களிடமும் உபதேசம் பெறுமாறு நியமித்தார். அந்த நியமனத்தின்படியே ஸ்ரீபாஷ்யகாரர் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் பின்னும் ரஹஸ்யார்த்தங்களின் உபதேசத்தைப் பெற்றார். திருமாலையாண்டானிடம் திருவாய் மொழியின் அர்த்தத்தைக் காலக்ஷேபம் செய்தார். ஆழ்வார் திருவரங்கப் பெருமானரையரிடம் (ஆளவந்தாராழ்வாரிடம்) திருவாய்மொழி மூலத்தை அத்யயநம் செய்து ஆளவந்தார். ஸ்தோத்ரத்தைக் கற்றுச் சில நல்லுபதேசங்களையும் பெற்றார்.

## 27. மற்றும் சில உபதேசகர்களை நாடும் காரணம்

பெரியநம்பிகள் ஸ்ரீபாஷ்யகாரருக்கு ஸகலார்த்தங்களையும் உபதேசித்து முக்கிய ஆசார்யராயிருக்கும்போது தம்முடன் சேர்ந்து காலக்ஷேபம் செய்த மற்ற பெரியோர்களிடமும் ஸ்ரீபாஷ்யகாரரை உபதேசம் பெறும்படி நியமித்தது எதற்காக? என்ற கேள்வி எழலாம். இதற்கு ஸமாதாநம் - "ஒருவரிடம் நன்கு உபதேசிக்கப் பெற்ற அர்த்தங்களைப் பல பெரியோர்களிடம் பலவகையாய்க் கேட்டறிய வேண்டும்" என்ற சாஸ்த்ரத்தைத் தழுவித் தம் சிஷ்யர் பல வகையிலும் திருந்த வேண்டுமென்ற திருவுள்ளத்தாலேயே அவ்வாறு ஸ்ரீபாஷ்யகாரருக்குப் பெரியநம்பிகள் நியமித்தார். இப்படியே பெரியோர்களின் அநுஷ்டாநமும் உள்ளது. வ்யாஸபகவான் தம் புத்திரரான சுகருக்குத் தாமே எல்லா அர்த்தங்களையும் உபதேசித்த பின்பு அவ்வறிவு நிலைபெறுவதற்காக மிதிலையில் மஹா ப்ரஹ்மவித்தான ஜநகரிடம் போய்ப் பின்னும் உபதேசத்தைப் பெறும்படி கட்டளையிட்டார். ஆதலின் பெரியநம்பிகள் ஸ்ரீபாஷ்யகாரருக்கு நியமித்தது மிகப் பொருத்தமானதே.

## 28. பல உபதேசகர்களை நாடுவது சாஸ்த்ர ஸம்மதம்

இவ்வாறு ஒரு சிஷ்யன் தன்னுடைய முக்கிய ஆசார்யனிடத்தில் ஸகலார்த்தங்களையும் காலக்ஷேபம் செய்து உணர்ந்த பின்பும் அவருக்குத் திருவுள்ளம் உகந்த பெரியோர்களிடத்தில் அவருடைய நியமநம் பெற்று அவசியம் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களில் உபதேசத்தைப் பெறலாமென்பது சாஸ்த்ரத்துக்கும் ஸம்மதமென்பதைக் கீழே கூறியவாறு ஸ்ரீ பாஷ்யகாரர் நடந்து கொண்ட முறையினின்று உறுதியாக அறியலாம். ஸ்ரீ பாஷ்யகாரரது அநுஷ்டாநம் சாஸ்த்ரத்தைத் தழுவியதுதானா? என்று யாரேனும் சிறிதளவாவது ஐயம் கொள்ள முடியுமா? அவர்தாம் திருநாட்டுக்கு எழுந்தருளும் அந்திம நிலை வரையில் மிக்க கவனத்துடன் சிறந்த ஆசார அநுஷ்டாநங்களைச் சிறிதும் வழுவாது காத்து வந்தவரல்லரோ? மிக்க அசக்தி பெற்ற அந்திம காலத்தில்கூட மிகக் கஷ்டப்பட்டு எழுந்து நின்று கொண்டன்றோ அர்க்யம் கொடுத்தருளினார்! இத்தகைய மஹாநுபாவர் முக்கிய ஆசார்யனையும் மற்றும் உபதேசித்த ஆசார்யர்களையும் வழிபட்டுப் போற்றி வந்தார்.

## 29. பல உபதேசகர்கள் உண்டென்பதில் உபநிடதம் காட்டும் வரலாறு

இவ்வாறு ஒருவனுக்குப் பலர் உபதேசிக்கும் வழக்கத்தை உபநிடதங்களிலும் பல இடங்களில் காண்கின்றோம். உதாஹரணாய் - ஜீவாத்மா, பரமாத்மா இவர்களைப் பற்றி அறிய வேண்டிய சாஸ்த்ர விஷயங்களில் உபகோஸலன் என்பவனுக்கு முக்கியமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப் பற்றியும் அங்கமான அக்நிவித்யையையும் அக்நிகள் உபதேசித்தன. ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப் பற்றி எஞ்சிய முக்கியமான பகுதிகளையும் அங்கமான அர்ச்சிராதிகதி முதலியவற்றையும் உபகோஸலனுக்கு ஆசார்யன் உபதேசித்தார். இவ்வரலாற்றைச் சாந்தோக்ய உபநிடதம் கூறுவதால் ஒருவனுக்குப் பலர் உபதேசிப்பது பழங்காலத்திலும் உண்டென்று தெரிகின்றது.

## 30. ஓர் ஆசார்யனையே நாடுவதும் பலருக்கு வாய்த்தல்.

சிலருக்கு மற்றோர் ஆசார்யனை நாட வேண்டாதபடி ஓர் ஆசார்யனிடத்திலேயே ஸகலார்த்தங்களையும் உபதேசிக்கப் பெறும் பாக்யமும் உண்டு. ஸ்ரீ பராசர பகவானிடத்தில் மைத்ரேயர் அறியவேண்டிய ஸகலார்த்தங்களையும் உபதேசிக்கப் பெற்றதால் வேறோர் ஆசார்யனை நாட வேண்டாதவரானார். வ்யாஸபகவானும் ஓர் ஆசார்யனையே வரித்து எல்லா அர்த்தங்களையும் அறிந்ததாய்த் தெரிகின்றது. நம் ஆசார்ய பரம்பரையிலும் நாதமுனிகள் முதலிய சில ஆசார்யர்கள் ஓர் ஆசார்யனையே பற்றியதாய் அறிகின்றோம். இவற்றினின்று ஓர் ஆசார்யனிடமே எல்லாவற்றையும் கற்கவேண்டுமென்றே பல ஆசார்யங்களையும் நாடிக் கற்க வேண்டுமென்றே நிர்ப்பந்தமில்லையென்று தேறுகின்றது. ஞானத்தைப் பெறுவது மிக அவசியம். அதற்கு ஏற்ப ஓர் ஆசார்யனையோ பல ஆசார்யர்களையோ சூழ்நிலைக்குத் தக்கவாறு நாடி ஞானத்தைப் பெற வேண்டியதே கடமை.

## 31. மற்ற உபதேசகர்களையும் ஆசார்யர்களாகக் கருதுதல்

ஓர் ஆசார்யனை முக்கியமாகக் கொண்டு அவரால் தத்துவம் - ஹிதம் - புருஷார்த்தம் முதலிய முக்கியமான அம்சங்களை உபதேசிக்கப் பெறுகின்றான் ஒருவன். அந்த விஷயங்கள் தன் நெஞ்சில் நிலைபெற்று நிற்பதற்காக மற்றும் சில பெரியோர்களை நாடி அவர்களால் மேலும் தெளிவு பெறுகின்றான். அவர்களையும் ஆசார்யர்களாகக் கருத வேண்டியது அவன் கடமை. சாஸ்த்ரமும் "ஓர் ஆசார்யனிடம் கேட்டு அறிந்த அர்த்தம் நிலைத்திருப்பதற்காக

மற்றொரு பெரியவர் அவனுக்குச் சிறிதளவோ மிகுதியாகவோ உபதேசித்தால் அந்த உதவியை நினைந்து அவரையும் அவன் குருவாகக் கருத வேண்டும்" என்று கூறுகின்றது.

### 32. பல ஆசார்யர்களுள் பரதாந ஆசார்யன் யார்? விளக்கம்.

இவ்வாறு ஒருவனுக்குப் பல ஆசார்யர்கள் வாய்த்தால் அவர்கள் அனைவரிடமும் அவன் ஸமமான பக்திகொள்வதா? அல்லது பக்தியில் வேற்றுமை உண்டா? என்ற சங்கை எழலாம். ஸமாதாநம் வருமாறு - மோக்ஷம் பெறுதற்குப் பக்தியோகம் - ப்ரபத்தி என்ற இரண்டே நேர்ச்சாதனங்கள். சேதநன் இவற்றுள் தன் தகுதிக்கு ஏற்ற ஒன்றைச் செய்யாவிடில் மோக்ஷம் பெறவே முடியாது. இவற்றுள் ஒன்றைச் செய்து விட்டால் பிறகு மோக்ஷத்துக்குச் சாதனமாக எதையும் செய்ய வேண்டியதில்லை. ஆதலால் இவ்விரண்டும் மோக்ஷத்துக்கு நேர்ச் சாதனமாகின்றன. இவற்றைப்பற்றி விரிவாக உபதேசிப்பவனே முக்கிய ஆசார்யன். அதாவது - திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய ரஹஸ்யங்களின் அர்த்தங்களை விளக்கும் வாயிலாக எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் இதற்கு ஏற்ற பலனாகிய மோக்ஷத்தையும் பற்றி விரிவாக உபதேசித்து மோக்ஷத்தில் ஆசையை உண்டாக்கி அதைப் பெறச் சாதனமான பக்தி - ப்ரபத்திகளுள் சிஷ்யனுடைய தகுதிக்கு ஏற்ற ஓர் உபாயத்தில் உறுதியான தெளிவு ஏற்படும்படி விரிவாக உபதேசிப்பதுவே முக்கிய ஆசார்யனது கடமையாகும். இத்தகைய முறையில் உபதேசிப்பவனே முக்கிய ஆசார்யன். இவனிடம் சிஷ்யன் கொள்ளும் பக்தியே அளவற்றதாகும்.

### 33. துணை ஆசார்யர்களின் கடமை

இப்படி உபதேசத்தால் முக்கிய ஆசார்யனிடமிருந்து உபாயங்களைப் பற்றிய தெளிவு பெற்றிருந்தாலும் சிலருக்கு விதிவசத்தால் அவ்வுறுதி குலையவும் கூடும் அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. மேலும் அவ்வுபாயங்களை மட்டும் செய்தால் போதாது. இவ்வுபாயங்களுக்கு அங்கங்கள் உண்டே? அவையும் நன்றாய் நிறைவேறியாக வேண்டும். அதற்கு வேண்டிய தெளிவான அறிவும் வேண்டும். இந்த அம்சங்களையெல்லாம் முக்கிய ஆசார்யனிடமிருந்தே பெறுதற்குச் சிலருக்கு ஸௌகர்ய மில்லாதிருக்கலாம். அந்நிலையில் ப்ரதாந ஆசார்யனது திருவுள்ளத்துக்கு உகந்தவர்களான வேறு பெரியோர்களை

நாடலாம். அவர்கள் இவர்களுக்கு உபாயங்களைப் பற்றிய மனவுறுதி குலையாதவாறும் அவற்றின் அங்கங்கள் நிறைவேறுவதற்கு ஏற்ற தெளிவு பெறுமாறும் விரிவாய் உபதேசித்துத் திருத்துவது அவர்கள் கடமை. அவர்கள் உதவி புரியும் ஆசார்யர்கள் எனப்படுவர். ஆனால் அவர்கள் ப்ரதாந ஆசார்ய பரம்பரையில் சேரமாட்டார்கள்.

### 34. ஆசார்யனைப் பெறக் காரணமானவர்களையும் ஆதரித்தல்

இவ்வாறு சேதநன் உஜ்ஜீவிப்பதற்கு முக்கியமாய் வேண்டிய ஆசார்ய ஸம்பந்தத்தைப் பெறுவதற்குச் சில காரணங்கள் உண்டு. தான் உஜ்ஜீவிப்பதற்கு வழி தேடாதே இம்மைப் பொருள்களிலேயே உழன்று திரியும் சேதநனுக்கு நல்வினைப் பயனாகச் சில ஸாத்துவிகர்களான பெரியோர்களுடன் பேசும் வாய்ப்புக் கிட்டக்கூடும். அவர்கள் இவனுக்குச் சில நல்லுரைகளைக் கூறக்கூடும். அதனால் இவன் திருந்தி ஒர் ஆசார்யனை நாடி நல்வழியைப் பெறுவதுண்டு. இவ்வாறு ஆசார்ய ஸம்பந்தம் பெறும்படி நல்வழி வகுத்துக் கொடுத்த அந்த ஸாத்துவிகப் பெரியோர்களிடமும் திருந்திய சேதநன் மதிப்புக் கொண்டு ஆதரிக்க வேண்டும்.

### 35. கிரந்தங்களை இயற்றியவர்களையும் ஆதரித்தல்

மேலும் சில பெரியோர்கள் ஆசார்ய கோஷ்டியில் சேராவிடினும் ஸித்தாந்த விஷயங்களைப் பற்றித் தாமே புதியனவாய்ச் சில கிரந்தங்களை இயற்றியோ பூர்வாசார்ய க்ரந்தங்களுக்கு விரிவான உரைநூல்களை எழுதியோ உதவி புரிந்திருக்கக்கூடும். இவர்கள் நேராக உபதேசித்து உதவி புரிந்திராவிடினும் கிரந்தங்களின் வாயிலாகப் பரம்பரையாக உபகரித்தவர்கள். உதாஹரணமாய் ஸ்ரீ பாஷ்யத்திற்கு அற்புதமான விரிவுரையாகிய சுருதப்ரகாசிகையை அருளிய ஸ்ரீ ஸுதர்சந ஸூரியும் ஸ்ரீ சததூஷணிக்கு அத்தகைய உரையான சண்டமாருதத்தை அருளிய ஸ்ரீ தொட்டயாசார்யர் முதலியோரும் இவ்வகுப்பில் சேருவர். இத்தகைய பெரியோர்களையும் இவர்கள் புரிந்த மஹோபகாரத்தை நினைத்து மதிப்புக் கொண்டு ஆதரிக்க வேண்டும்.

### 36. ஸர்வேச்வரனே எல்லோரினும் ப்ரதாந ஆசார்யன்?

கீழ்க்கூறிய முக்கிய ஆசார்யர்கள் - உபகாரர்களான ஆசார்யர்கள் - பரம்பரையாய் உதவியவர்கள் முதலிய

அனைவரையும் காட்டிலும் மிக முக்கியனான ஆசார்யன் ஒருவன் உண்டு. அவன்தான் பெரிய பிராட்டியைப் பிரியாத எம்பெருமான். இவனே ஆசார்யர்கள் முதலிய பெரியோர்களின் உட்புகுந்து அந்தர்யாமியாய் நின்று அவர்களைச் சிஷ்யர்களுக்கு அத்தகைய உதவிகளைச் செய்யுமாறு ஏவுகின்றான் ஸர்வ ப்ராணிகளையும் அவ்வவற்றின் செயல்களைச் செய்யுமாறு ஏவுமவன் இவன்தானே! இவன் ஒருவனே ஆசார்ய வரிசையில் எல்லா ஆசார்யர்களுக்கும் மேம்பட்ட பரமாசார்யன். இவனுக்கு ஓர் ஆசார்யன் இல்லை. இவனுடன் ஆசார்ய பரம்பரை முடிந்து போகின்றது.

## 37. ஸ்ரீ பாஷ்யகாரர் சிஷ்யர்களுள் ஸித்தாந்த விஷயத்தில் வேறுபாடு இல்லாமை

இப்படி எம்பெருமான் தொடங்கி ஸ்ரீ பாஷ்யகாரர் வரையில் வருகிற ஸம்ப்ரதாய வரிசை வருமாறு - எம்பெருமான் - பிராட்டி - விஷ்வக்ஸேநர் - நம்மாழ்வார் - நாதமுனிகள் - உய்யக் கொண்டார் - மணக்கால் நம்பி - ஆளவந்தார் - பெரியநம்பி - ஸ்ரீ பாஷ்யகாரர் என்று ஆசார்ய பரம்பரை வருகின்றது. ஸ்ரீ பாஷ்யகாரருக்குப் பின் அவருடைய வெவ்வேறு சிஷ்யர்களின் வழியாக ஸம்ப்ரதாயம் கிளை கிளையாகப் பிரிகின்றது. அவ்வாறு பிரிந்தாலும் ஸித்தாந்தத்தின் முக்கிய விஷயங்களில் அந்தக் கிளைகளுக்குள் ஒன்றுக்கொன்று முரண்பாடு இல்லை. ஆனால் திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் இவற்றுக்குப் பொருள் கூறுகையில் பதங்களின் அந்வயத்திலோ வாக்கியங்களை அமைப்பதிலோ சிற்சில மாறுபாடுகள் உள்ளன. இவற்றைக் கொண்டு ஸம்ப்ரதாயத்தின் முக்கிய விஷயங்களில் முரண்பாடு உள்ளதாகக் கூறமுடியாது.

## 38. இந்த ஸம்ப்ரதாயத்தில் அநுஷ்டான வேற்றுமை சாஸ்த்ர ஸம்மதம்

இப்படி ஸ்ரீ பாஷ்யகாரர் ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்களான ஆஸ்திகர்களின் அநுஷ்டாநங்களில் சிற்சில வேற்றுமைகள் காணப்படலாம். தேசத்தின் நிலைமைக்கு ஏற்றவாறோ, காலத்துக்குத் தக்கவாறோ, அவ்வப்போது உள்ள சூழ்நிலைக்கு ஏற்றவாறோ அநுஷ்டாநங்களில் காணப்படும் சிற்சில வேறுபாடுகள் சாஸ்த்ரங்களில் அநுமதிக்கப்பட்டவையேயாகும்.

### 39. பின்னுள்ளார் புதிய கொள்கைகளைக் கல்பிப்பது நேர்மையன்று

ஸ்ரீ பாஷ்யகாரருக்குப் பின் வந்த சிலர் தம் இஷ்டப்படி சாஸ்த்ரங்களுக்கு முரண்பட்ட சில கொள்கைகளைக் கடைப்பிடித்து அவற்றை "ஸ்ரீபாஷ்யகாரரின் திருவுள்ளத்துக்கு உகந்தவை" என்றும் "அவரே இவற்றை ப்ரசாரம் செய்தார்" என்றும் கூறுகின்றனர். அவர்கள் ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸூக்திகளையும் அநுஷ்டாநத்தையும் நன்கு அறியாதவராவார். அவர்கள் தாங்களாகக் கற்பித்த கொள்கைகளையும் அநுஷ்டாநங்களையும் ஸ்ரீ பாஷ்யகாரர்மீது ஏற்றுவதால் அவருக்கு ஒன்றும் குறைவு வந்துவிடாது. ஏற்றிக் கூறுமவர்க்கே மஹாபாபத்தை விளைவிக்கும். மாண்டவ்ய முனிவரிடம் இல்லாத குற்றத்தை சுமத்தியது திருடர்களுக்கே தீங்கை விளைவித்தது போலாகும். (வரலாறு - கடைசியில் காண்க).

### 40. திருமத்திரத்தின் பொருள்களில் முரண்பாடின்மை

இனித் திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களைப் பற்றிய சில ஸந்தேஹங்களும் அதற்குப் பரிஹாரங்களும் விளக்கப்படுகின்றன -

திருமந்திரத்தில் ஒவ்வொரு பதத்தின் அர்த்தமும் பதங்களைக் கூட்டி வாக்யமாகச் செய்து கூறும் அர்த்தமும் பல்வேறு வகையாய்க் கூறப்படுகின்றன. இதனால் அவ்வர்த்தங்களுள் முரண்பாடு இருப்பதாகக் கருதக்கூடாது. அந்தப் பல்வகை அர்த்தங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளனவாகவே இருக்குமாதலின் முரண்பாடே கிடையாது. அவ்வாறு பல்வகை அர்த்தங்களும் கூறுவதற்கு ஆதாரமாய் நிருக்தமெனப்படும் நிகண்டுவும் இருக்கின்றது. அதைக்கொண்டும் இன்னும் வேதம் - ஸ்ம்ருதிகள் - ஸ்ரீபாஞ்சராத்ரம் - இதிஹாஸம் - புராணம் - அருளிச்செயல் முதலியவற்றுள் உள்ள விசேஷ வாக்யங்களைக் கொண்டுமே அவ்வாறு பல அர்த்தங்கள் கூறப்படுகின்றன.

### 41. திருமந்திரத்தில் மூன்று வகையில் அர்த்த பஞ்சகம்

இத்திருமந்திரம் மூன்று பதங்கள் கொண்டது. இந்த மூன்று பதங்களிலும் சேர்த்து அர்த்த பஞ்சகம் கூறப்படுவதாகக் கூறுவதுண்டு. இவ்வாறே முதற்பதமாகிய ப்ரணவத்திலேயே அர்த்த பஞ்சகம் கூறப்படுவதாகக் கூறுவதும் உண்டு. இதுமட்டுமன்றி முதல் எழுத்தாகிய அகாரத்திலேயே அர்த்த பஞ்சகம்

தோற்றுவதாகக் கூறப்படுவதுகூட உண்டு. இவ்வாறு மூவகையாக அர்த்த பஞ்சகம் கூறப்பட்டாலும் ஒவ்வொரு வகைக்கும் ஒன்றுக்கொன்று முரண்பாடு கிடையாது. ஏனெனில் - சில அர்த்தங்களை அந்த அந்தப் பதமே இயற்கையில் காட்டும். சில அர்த்தங்கள் பதத்தினின்று தேறிய கருத்தாகவும் வெளியாகும். சில அர்த்தங்கள் மிகச் சுருக்கமாய் வெளியாகின்றன. சில அர்த்தங்கள் விரிவாய் வெளியாகின்றன. ஆக இவ்வளவால் அர்த்தங்களில் முரண்பாடு இருக்குமோவென்று கருதக்கூடாது. சிறிதும் முரண்பாடு கிடையாது. அர்த்த பஞ்சகம் - (1) அடையப்படும் ப்ரஹ்மம் (2) அடையும் ஜீவன் (3) அடைதற்கு உபாயம் (4) அடையப்படும் பலன் (5) அடைதற்குத் தடையாயிருப்பது ஆகியவை.

## 42. ப்ரணவத்தில் பிராட்டி

திருமந்திரத்தில் ப்ரணவத்தில் பகவானை வெளிப் படையாகச் சொல்லும் முதல் எழுத்தாகிய அகாரமே பிராட் டியையும் குறிப்பால் உணர்த்துகின்றது. அவ்வாறே இரண்டாவது எழுத்தாகிய உகாரமும் பிராட்டியை வெளிப்படையாய்ச் சொல்லுகின்றது. இதிலும் முரண்பாடோ ஒரே அர்த்தத்தை இருமுறை கூறுதலோ இல்லை. அகாரம் எல்லோரையும் காப்பவனான எம்பெருமானைத்தான் கூறுகின்றது. ஆனால் அவன் பிராட்டியுடன் சேர்ந்தே காப்பவனாகப் பிரமாணங்கள் சொல்லுகின்றன. ஸ்ரீ பாஷ்யகாரரும் எம்பெருமானை மட்டும் சொல்லுவதாகக் கருதும் சொற்களெல்லாம் பிராட்டியையும் சேர்த்தே சொல்வதாக அருளிச் செய்துள்ளார். மேலும் பிராட்டி எம்பெருமானுடன் ஒன்றியேயிருப்பதால் அவளைத் தனித்துச் சுருதியும் சொல்லவில்லையென்கிறார் பட்டர். இந்தப் பொருள் தாத்பர்யமாக தேறும் பொருளாகும். இப்படிக் கொள்ளும் போது ப்ரணவத்தின் இரண்டாவது எழுத்தாகிய 'உ' என்பதற்கு 'அவதாரணம்' பொருளாகும். 'அவதாரணம்' என்றால் என்ன? ஒருவனுக்கே உரிமை. அதாவது - மற்றவருடன் ஸம்பந்தத்தை அறுத்தல் பொருளாகும். எம்பெருமான் பிராட்டி ஆகிய திவ்ய தம்பதிகளையன்றி வேறொருவருக்கும் சேதநன் அடிமையாகமாட் டானென்ற பொருள் கிடைக்கும். இந்த முறையில் பிராட்டி சப்தத்தாலன்றி அர்த்தத்தால் அதாவது தாற்பரிய வகையால் கூறப்படுகின்றாள். இங்ஙனன்றிப் பிராட்டியைச் சொல்லாலேயே வெளிப்படையாய்ச் சொல்லுகின்ற மற்றொரு முறையும் உண்டு. அது வருமாறு - ப்ரணவத்தில் இரண்டாம் எழுத்தாகிய "உ"

என்பதற்கே பிராட்டி என்ற பொருள் உண்டு. சுருதியே உகாரத்திற்குப் பிராட்டியைப் பொருளாகக் கூறியுள்ளது. இம்முறையில் எம்பெருமான் பிராட்டி இருவருக்கும் ஜீவன் அடிமையாவானென்ற அர்த்தம் வெளிப்படையாகவே கிடைக்கின்றது.

### 43. திவ்ய தம்பதிகளுக்கே ஜீவன் அடியன்

இம்முறயில் அவ்விருவரையன்றி வேறொருவருக்கும் ஜீவன் அடியனல்லன் என்ற அர்த்தம் வெளிப்படையாகவன் றித்தாற்பரியவகையால் கிடைக்கின்றது. அதாவது - எந்த வாக்கியமும் வேறு ஒருவரையும் குறிப்பிடாமல் ஒருவரை மட்டும் குறிப்பிட்டுக் கூறினால் அவருக்கே உரிமையும் மற்றொருவருக்குத் தொடர்பு இல்லாமையும் தானாகவே புலப்படும் என்று ஒரு பொதுநீதி உண்டு. அந்த முறையினால் இங்குத் திவ்ய தம்பதிகள் இருவரை மட்டும் குறிப்பிட்டு அவர்களுக்கு ஜீவன் அடியன் என்று கூறும்போது முற்கூறிய பொதுநீதியால் அவ்விருவரையன்றிப் பிறருக்கு ஜீவன் அடியனாகானென்ற பொருள் தானே கிடைத்துவிடுகின்றது. ஆக இந்த இரண்டு வழிகளிலும் ரக்ஷகனான எம்பெருமானுடன் கூடி நின்று காப்பவளான பிராட்டி பொருளாகக் கிடைப்பதில் முரண்பாடோ கூறியது கூறலோ இல்லை.

### 44. இருவருக்கும் ஜீவன் அடியனாகவேயுள்ளவன்

மேலும் அவர்கள் இருவருக்கு மட்டுமே ஜீவாத்மா சேஷம் என்று வரையறை ஏற்படுவதுபோல் அவ்விருவருக்கும் ஜீவாத்மா சேஷமாகவே எப்பொழுதும் இருக்கும் என்ற வரையறையும் ஏற்படுவது உண்டு. இந்த இரண்டாவது வரையறையால் எம்பெருமானுக்கு ஜீவன் சரீரமாய் அவன் ஜீவனுக்கு ஆத்மாவாய் நிற்கும் நிலையாகிய சரீராத்ம பாவமும் கூறப்பட்டதாகின்றது. எப்பொழுதும் ஒன்றுக்குச் சேஷமாயிருத்தலும் சரீரத்தின் லக்ஷணமன்றோ! ஜீவனுக்கு அவனது உடல் எப்பொழுதும் சேஷமாயுள்ளது. அதை அவனுக்குச் சரீரமென்று கொள்ளவில்லையா?

### 45. ஜீவர்களைக் கூறும் பொதுச்சொல் குறிப்பிட்ட ஜீவனையும் கூறும் முறைகள்.

ப்ரணவத்தில் மூன்றாவது எழுத்தாகிய மகாரம் ஜீவ வகுப்பையே குறிக்குமாதலின் எல்லாச் ஜீவர்களையும் பொதுவாகவே கூறும். இப்படியாயின் பொதுவாக ஜீவர்களைக்

கூறும் இந்தச் சொல்லைக் கொண்டு 'நான் இருவருக்கும் சேஷன்' என்று தன்னைப் பிரித்து எப்படி அநுஸந்திக்கமுடியும்? என்று கேட்கலாம். இதற்கு விடை - சேதநன் திருமந்திரத்தில் தன் ஸ்வரூபத்தை அறிந்து அதற்கு ஏற்ற பலனை விரும்பி அதற்கு வேண்டிய உபாயத்தைச் செய்ய வேண்டியவனாய் உள்ளான் இவன் குறிப்பிட்டுத் தன் ஸ்வரூபத்தை அவசியம் அநுஸந்திக்க வேண்டியவனாயிருக்கின்றான். ஆகவே மகாரத்தைக் கொண்டு பொதுவாக எல்லா ஜீவர்களையும் எம்பெருமானுக்குச் சேஷமாக அநுஸந்தித்தாலும் அவர்களுள் தானும் ஒருவன் என்ற உணர்ச்சியோடு தன்னைக் குறிப்பிட்டு நான் அவ்விருவருக்கும் அடியன் என்று தனித்த முறையிலும் அநுஸந்திக்கிறானென்று உணர்க. ஆகவே தன்னைக் குறிப்பிட்டு அநுஸந்தித்தல் தாற்பரியமாகக் கிடைக்கின்றது.

இங்கு மற்றொரு முறையும் உண்டு. ப்ரணவத்தில் மூன்றாவது எழுத்தாகிய 'ம்' என்ற அக்ஷரமே நேராக 'நான்' என்ற பொருளைக் கூறுகின்றது. 'நான்' என்ற பொருள் கொண்ட 'அஸ்மத்' என்ற சொல்லினின்று முதலில் உள்ள 'அஸ்' என்பதையும் கடைசியில் உள்ள 'அத்' என்பதையும் விலக்கிப் பார்க்கும்போது 'ம்' என்று நடுவில் உள்ள மகாரமே 'நான்' என்ற பொருளைத் தருவதாகக் கூறுவது உண்டு ஆகவே 'நான் அவ்விருவருக்குமே அடியேன்' என்று தனிப்பட்ட முறையில் அநுஸந்திக்கவும் இடம் கிடைத்து விட்டது. உலகில் உள்ள ஒவ்வொரு ஜீவனும் இவ்வாறு தனித்தனி முறையில் அநுஸந்திக்கலாமாதலின் அனைவரும் திவ்ய தம்பதிகளுக்கு அடியர் என்று தாற்பரியமாய்க் கிடைத்து விடுகின்றது. ஆகவே இவ்விரண்டு வகையிலும் மகாரம் நான் என்ற பொருளைக் கூறுவதில் எவ்வகை முரண்பாடும் இல்லை.

### 46. பாகவதர்களுக்கும் அடியனாதலே எல்லை நிலம்

'ஜீவன் எம்பெருமானுக்கு அடியன்' என்று கூறும் இடங்களில் எல்லாம் 'பாகவதர்களுக்கும் அடியன் ஜீவன்' என்ற வரையில் சேதநன் அநுஸந்திக்கவேண்டியதே கடமையாகும் சேதநன் எம்பெருமானுக்கு அடிமையாயிருத்தல் வரை சென்றால்தான் அடிமை பூர்த்தி பெறுகின்றது. பாகவதர்களுக்கும் அடியனான் தன்மைதான் எல்லை நிலமாகும்.

### 47. ப்ரணவத்தில் பாகவத சேஷத்வம் கிடைத்தல்

இந்தப் பாகவத சேஷத்வத்தைத் திருமந்திரத்தில் மற்ற பதங்களில் அநுஸந்திப்பதைக் காட்டிலும் நடுப்பதமாகிய நம:

என்னுமிடத்தில் அநுஸந்திப்பதுவே மிக்க பொருத்தமுடையதாகும். ப்ரணவத்தால் 'ஜீவன் எம்பெருமானுக்கு அடியன், எம்பெருமான் ஜீவனுக்கு ஸ்வாமி ' என்பது மட்டும் ஏற்படும். ஸ்வாமியா யிருப்பவன் அடியனாயுள்ளவனைத் தன் விருப்பத்தின்படி பயன்படுத்திக்கொள்ள உரிமையுடையன். ஸ்வாமியான பகவானுக்கு இஷ்டம் எது என்று ஆராய்ந்தால் அவனது எல்லையற்ற அன்புக்குப் பாத்திரமான பாகவதர்களுக்கும் அடியனாதலே மிக இஷ்ட மென்பது விளங்கும். இவ்வாறு ப்ரணவத்தாலே பாகவதர்களுக்கும் அடிமையாதல் தாற்பரியவகையால் அறியக் கிடக்கின்றது.

## 48. நம : சப்தத்தில் பாகவத சேஷத்வம்

இப்படி 'ஜீவன் பாகவதர்களுக்கும் அடியனாயிருப்பவன்' என்ற அம்சத்தை 'நம : என்ற நடுப்பதத்தில் இன்னும் தெளிவாய்க் காணலாம். எவ்வாறெனில் - நம : என்பதை ந, ம: என்று இரண்டு பதமாகப் பிரித்து 'ஸ்வாதந்த்ர்யம்' என்ற ஒரு சொல்லை வருவித்துப் பொருள் கூறவேண்டும். இதனால் ஜீவனாகிய எனக்குச் சிறிதும் சுதந்திரமில்லை என்ற பொருள் கிடைக்கும் ஆக, ஜீவன் தனக்குச் சிறிதும் சுதந்திரம் இன்றியே எம்பெருமானுக்கு வசப்பட் டவன் என்று தேறியது. இதனால் எம்பெருமானே சுதந்திரன் என்று முடிவு காண்கின்றான் சேதநன். இவ்வாறு ப்ரணவத்தால் எம்பெருமானே ஸ்வாமி என்றும் நம : என்றதால் அவனே சுதந்திரன் என்றும் நன்கு புலப்படுவதால் இத்தகையன் அடியனான ஜீவனைத் தன் மதிப்புக்கு உரியரான பாகவதர்களுக்கும் அடிமையாக்குவதில் தடை என்ன? ஆகவே ஜீவன் சிறிதும் சுதந்திரமற்றுப் பரதந்த்ரனாய் நிற்கும் நிலையைக் காட்டும் 'நம: என்ற பதத்திலேயே பாகவதர்களுக்கும் அடிமையாதலை அநுஸந்திப்பது மிக மிகப் பொருத்தமாகும்.

## 49. நான்காம் வேற்றுமையுருபு - பொருள் விளக்கம்

வடமொழியில் நான்காம் வேற்றுமையின் உருபு 'ஆய' என்பது. இந்த உருபுக்குப் பொருள் 'பொருட்டு' 'ஆக' என்பன. 'ராமாய' என்றால் 'ராமன் பொருட்டு' 'ராமனுக்காக' என்று பொருள் கூறவேண்டும். ப்ரணவத்தின் முதலெழுத்தாகிய அகாரத்தின்மேல் இந்த 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபு ஏறியமர்ந்து பின் மறைந்துள்ளது. ஆயினும் பொருள் கூறும்போது அவ்வுருபு இருப்பதாகவே வைத்துத்தான் பொருள்கூறவேண்டும். ஆகவே அ + ஆய = ஆய என்பதற்கு அகாரத்தால் சொல்லப்படும்

எம்பெருமான் பொருட்டு - எம்பெருமானுக்காக (ஜீவனாகிய நான்) என்று அர்த்தம் கிடைக்கும் அதைவது அவனுக்குச் சேஷன் என்ற பொருள் தேறும். இவ்வாறே நாராயணாய என்னும்போது 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபு வெளிப்படையாகவே உள்ளது. அதற்கும் 'பொருட்டு' 'ஆக' என்பதே பொருளாகும். ஆகவே இந்த இரண்டு உருபுகளும் ஒரே பொருளைத் தருகின்றன. திருமந்திரத்தை ஒரு வாக்யமாகவும் இரண்டு வாக்யமாகவும் மூன்று வாக்கியமாகவும் வைத்துப் பொருள் கூறுவதுண்டு. திருமந்திரத்தை ஒரே வாக்யமாகக் கொள்ளும்போது அகாரத்தை நாராயண சப்தத்துக்கு அடை மொழியாக்கி அகாரத்தாலே சொல்லப்படுமவனான நாரயணனுக்கு நான் அடியன் என்று பொருள் கூறவேண்டும். அப்போது அகாரத்தின் மேலுள்ள நான்காம் வேற்றுமையுருபுக்குத் தனித்து அர்த்தமில்லையென்று கூற வேண்டும். திருமந்திரத்தை மூன்று வாக்கியமாகக்கொண்டு முதல் வாக்யமான ப்ரணவம் ஜீவனுடைய ஸ்வரூபத்தைக் கூறுவதாகவும், நம ; என்பது உபாயமான ப்ரபத்தியைச் சொல்வதாகவும் மூன்றாவது வாக்யமாகிய நாராயணாய என்பது பலனைக் கூறுவதாகவும் பொருள் கூறும்போது அகாரத்தின் மீதும் நாராயண சப்தத்தின் மீதும் உள்ள வேற்றுமையுருபுகள் ஒரே அர்த்தத்தை முன்போல் கூறுவதாகக் கொள்ளக்கூடும். ஏனெனில் - ப்ரணவத்தில் அகாரத்தின் மீது மறைந்துள்ள ஆய என்னும் உருபு ஜீவனுக்கு அடிமைத் தன்மையைக் கூறிவிட்டபடியால் நாராயணாய என்னும்போது உள்ள 'ஆய' உருபும் அடிமைத் தன்மையையே சொல்வதாய்க் கூறுவதில் பயன் எதுவுமில்லை. மேலும் ப்ரணவம் ஸ்வரூபத்தையும் நம : என்பது உபாயமாகிய ப்ரபத்தியையும் கூறிவிட்டபடியால் பயனைக் கூற வேண்டியதே எஞ்சியுள்ளது. ஆதலின் நாராயணாய - என்னும் இடத்தில் ஆய என்னும் உருபு அடிமைத் தன்மையால் வரும் கைங்கர்யத்தைச் சொல்வதாகக் கொள்ளவேண்டும். இப்படி முதலில் இரண்டு இடத்திலுள்ள உருபுகளும் ஒரே அர்த்தத்தைக் கூறுவதாய்ச் சொல்லிப் பின் வெவ்வேறு அர்த்தங்களைக் கூறியதால் இவற்றில் முரண்பாடு இருப்பதாகக் கருதக்கூடாது. ப்ரமாணங்களைத் தழுவி வாக்யத்தை ஒன்றாகவும் இரண்டாகவும் மூன்றாகவும் பிரித்துப் பொருள் கூறும்போது அந்த அந்த முறைக்கு ஏற்றவாறு வேற்றுமையுருபுகளுக்கும் வேறுபட்ட பொருள்களைக் கூறுவதில் முரண்பாடு ஏதும். இல்லையென்று உணர்க.

**50. த்வயம் - பொருள் விளக்கம்**

இரண்டாவது ரஹஸ்யமான த்வயம் முதல் ரஹஸ்யமான திருமந்திரத்தின் அர்த்தத்தை விளக்கிக் கூறுவதாகும். இந்த த்வயம் இரண்டு பகுதிகள் கொண்டது. எம்பெருமானும் பிராட்டியும் மோக்ஷத்திற்கு உபாயமாகின்றார்கள். அவர்கள் இருவரும் உபாயமாய் நிற்கும் நிலையை த்வயத்தின் முற்பகுதி கூறுகின்றது. அவர்கள் இருவரும் மோக்ஷத்தில் அநுபவிக்கப்படும் பயனாகவும் ஆகின்றார்கள். அவர்கள் இவ்வாறு பலனாய் நிற்கும் நிலையைக் கூறுகின்றது த்வயத்தின் பிற்பகுதி.

### 51. 'ஸ்ரீ' 'நாராயண' சொற்களின் பொருள்களில் விரோதமின்மை

இந்த இரண்டு பகுதிகளிலும் ஸ்ரீ என்கிற சொல்லும் நாராயண என்ற சொல்லும் உள்ளன. முற்பகுதிக்கு அர்த்தம் சொல்லும்போது அந்த இரண்டு சொல்லுக்குப் பொருளாகச் சில குமங்களையும் பிற்பகுதியில் அந்த இரண்டு சொல்லுக்கும் பொருளாக வேறு சில குணங்களையும் கூறவேண்டியுள்ளது. இப்படி ஒரே சொல்லுக்கு இரண்டு பகுதிகளில் வெவ்வேறான குணங்களைப் பொருளாகக் கூறுவதால் முரண்பாடு இருப்பதாகக் கருதக்கூடாது. மேலும் ஒரு பகுதியில் உள்ள சொல்லில் மற்றொரு பகுதியில் அந்தச் சொல் கூறும் அர்த்தங்கள் அடங்க வில்லையென்றும் எண்ணக்கூடாது. ஸ்ரீ என்ற சொல்லும் நாராயண என்ற சொல்லும் அவர்களுடைய எல்லாக் குணங்களையும் கூறுவனவே. ஆனால் பகுதியின் வேறுபாட்டைக் கொண்டு ஒரே சொல்லுக்குப் பொருள் வேற்றுமையை ஏன் கொள்ள வேண்டும் : என்று கேட்கலாம். இதற்கு ஸமாதாநம் - எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் உள்ள குணங்களுக்கு எண்ணில்லை. எல்லாக் குணங்களையும் அநுஸந்திப்பதென்பது எவராலும் இயலாது. அந்த அந்தச் சூழ்நிலைக்கு அவசியமாய் வேண்டிய குணங்களை மட்டும் அநுஸந்திப்பதுவே முறையாகும். இங்கு முதற்பகுதி திவ்ய தம்பதிகள் சேதநன் விஷயத்தில் மோக்ஷத்துக்கு உபாயமாய் நிற்பதைக் கூறுவதால் அதில் உள்ள 'ஸ்ரீ' 'நாராயண' சப்தங்கள் அவர்கள் உபாயமாவதற்குப் பயன்படவேண்டிய குணங்களை மட்டும் கூறும். சேதநன் சரணமடைந்து அவர்களை உபாயமாகக் கொள்ளும்போது அந்தக் குணங்களை மட்டும் அவசியம் அநுஸந்தித்தால் போதுமானது. இவ்வாறே இரண்டாம் பகுதி மோக்ஷத்தில் சேதநனால் அவ்விருவரும் அநுபவிக்கப்படும் பயனாய் நிற்பதைக் கூறுவதால் அதில் உள்ள 'ஸ்ரீ' 'நாராயண' சப்தங்கள் அவர்கள் பயனாய்

நிற்பதற்கு வேண்டிய குணங்களை மட்டும் கூறும். சேதநன் அவ்விருவரையும் மோக்ஷத்தில் அநுபவிக்கப்படும் பயனாகக் கொள்ள விரும்பும்போது அந்தக் குணங்களை மட்டும் முக்கியமாய் அநுஸந்தித்தால் போதுமானது. இப்படி சூழ்நிலைகளுக்கு அவசியம் வேண்டிய குணங்களை நிச்சயித்துத் தருவதற்காகத்தான் அவ்விரண்டு சொற்களுக்கும் பகுதியின் வேறுபாட்டுக்கு ஏற்பப் பொருள்களையும் வேறுபடுத்திக் கூறியதென்று அறிக. மேலும் பிராட்டி சேதநருக்காக எம்பெருமானிடம் பரிந்து பேசும் புருஷகாரமாகவும் இருப்பதால் முற்பகுதியில் உள்ள 'ஸ்ரீ' என்னும் சொல்லில் புருஷகாரமாவதற்கு வேண்டிய குணங்களையும் அநுஸந்திக்க வேண்டுமென்பதை உணருக. (இந்த இரண்டு நிலைகளிலும் அநுஸந்திக்கவேண்டிய குணங்களைப் பற்றிய விளக்கமெல்லாம் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தின் த்வயாதிகாரத்தில் காணலாம்.)

52. பயனுக்கு ஸித்த - ஸாத்ய உபாயங்கள் இரண்டும் அவசியமே

'சரணௌ சரணம் ப்ரபத்யே' என்றால் திருவடிகளை உபாயமாக அடைகின்றேன் என்று பொருள். இதனின்று திருவடிகள் உபாயம் என்று ஏற்படுகிறது. சரம சுலோகத்தில் என்னையே உபாயமாகப் பற்று என்கிறான் கண்ணன். இப்பொழுது திருவடிகள் உபாயமா? எம்பெருமான் உபாயமா? என்று கேள்வி. இரண்டு வாக்யங்களும் ப்ரமாணமாதலால் திருவடிகளும் எம்பெருமானும் உபாயம் என்று கூறவேண்டும். ஆகவே ஸித்தோபாயம் ஒன்றே என்ற கொள்கையை மாற்றி இரண்டு ஸித்தோபாயம் என்று சொல்லவேண்டி வரும். மேலும் த்வயம் திருவடிகளையே உபாயமாகக் கூறுவதால் பக்தி - ப்ரபத்தி ஆகியவை உபாயங்களல்லவென்று தேறிவிடும். இந்த ஆக்ஷேபங்களுக்கு ஸமாதாநம் வருமாறு - திருவடிகள் என்ற சொல் அந்தத் திருவடிகளை உறுப்பாகவுடைய திருமேனியைக் குறிக்கின்றது. இத்துடனும் நிற்கவில்லை. அந்தத் திருமேனியையுடைய எம்பெருமானையும் குறிக்கின்றது. இதை உபசாரவழக்கென்பர் தமிழர். சேதநன் செய்யும் உபாயத்தால் வசப்படுகிறவன் எம்பெருமான்தானே! ஆகவே எம்பெருமான் ஒருவனே ஸித்தோபாயம் என்ற கொள்கைக்கு மாறுபாடு ஏதும் இல்லை. மேலும் பக்தி ப்ரபத்திகள் உபாயமாவதற்கு இடரும் இல்லை. எவ்வாறெனில் - உபாயம், ஸித்தோபாயம் ஸாத்யோபாயம் என இருவகைப்படும். சேதநனால் செய்யப் படவேண்டாதபடி முன்பேயுள்ள எம்பெருமான்

ஸித்தோபாயமாகின்றான். சேதநனால் செய்யப்பட வேண்டியனவான பக்தி ப்ரபத்திகள் ஸாத்யோபாயங்க ளாகின்றன. இந்த பக்தி ப்ரபத்திகளால், எம்பெருமானுக்குச் சேதநன் செய்துள்ள பாபங்களால் அவனிடம் உள்ள சீற்றம் தணிந்து வசமாகிப் பலனைத் தருகின்றான். ஆதலின் ஸாத்யோபாயமும் மிக அவசியமாவதால் இதை வேண்டாமென்று மறுப்பதற்கு முடியாதென்று அறிக.

## 53. நம: சப்தத்துக்குப் பலபொருள் கொள்வதில் இடரின்மை

'நம :' என்ற சொல் திருமந்திரம் என்ற முதல் ரஹஸ்யத்தில் நடுப்பதமாக உள்ளது. இதுவே த்வயம் என்ற இரண்டாவது ரஹஸ்யத்தில் கடைசிப் பதமாக உள்ளது. ஆனால் திருமந்திரத்தில் உள்ள 'நம :' என்ற சொல்லுக்கும் த்வயத்தில் உள்ள அதே சொல்லுக்கும் அர்த்தங்கள் வேறுபடுகின்றன. திருமந்திரத்தில் 'நம:' என்பதற்கு ஜீவனுக்குச் சுதந்திரம் நீங்குதல் - அநிஷ்டம் நீங்குதல் - ப்ரபத்தி முதலிய அர்த்தங்கள் கூறப்படுகின்றன. த்வயத்தில் உள்ள நம: என்பதற்கு அஹங்கார மமகாரங்கள் நீங்குதல் - நானே செய்கிறேன் ; எனக்காகவே செய்கிறேன் ; நானே அநுபவிக்கிறேன், எனக்காகவே அநுபவிக்கிறேன் என்ற எண்ணங்களெல்லாம் கழிதல் முதலிய பொருள்கள் கூறப்படுகின்றன. இப்படி ஒரே சொல்லுக்கு ஓரிடத்தில் ஓர் அர்த்தமும் மற்றோரிடத்தில் வேறு அர்த்தமும் கூறுவது எவ்வாறு பொருந்தும்? என்று கேள்வி எழலாம். ஸமாதாநம் வருமாறு - அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை முதலிய கிரந்தங்களில் நம: என்ற சொல்லுக்கு பல அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன. திருமந்திரத்திலும் த்வயத்திலும் வாக்கியங்களை வெவ்வேறு வகையால் அமைத்துப் பொருள் கூறப்படுகின்றது. அந்த அந்த வகையில் வாக்யங்களுக்குப் பொருள் கூறுமிடத்து அதற்கு ஏற்றவாறு நம : என்பதற்கு அந்த அந்தப் பொருள்களைச் சொல்வதில் என்ன தடை? ஆகவே நம. என்ற சொல்லுக்கு இடத்துக்குத் தக்கவாறு வெவ்வேறு பொருள் கொள்வதில் குற்றமில்லையென்று முடிந்தது.

## 54. எம்பெருமானே உபாயமென்றாலும் ப்ரபத்தியை இல்லையாக்க முடியாது - விளக்கம்.

'சரணம்' என்னும் சொல் இரண்டாவது ரஹஸ்யமான த்வயத்திலும் மூன்றாவது ரஹஸ்யமான சரம சுலோகத்திலும் உள்ளது. சரணம் எனும் சொல் பொதுவாக வீடு - ரக்ஷகன் - உபாயம் என்ற பல அர்த்தங்களைக் கூறுவதாயினும் இங்கு வேண்டிய அர்த்தம் உபாயம் என்பதுவேயாதலின் இதையே

பொருளாகக் கொள்ள வேண்டும். இதை வைத்துக் கொண்டு ஒரு வாதத்தை எழுப்பினர் சிலர். த்வயத்திலும் சரமச்லோகத்திலும் இந்த சரணசப்தம் எம்பெருமானையே உபாயமாகக் கூறுவதால் அவனைத் தவிர ப்ரபத்தியென்ற ஒன்றை அவனை வசப்படுத்தற்காக உபாயமாகச் செய்ய வேண்டியதே இல்லை என்ற முடிவை ஸ்ரீபாஷ்யகாரஸித்தாந்தத்தைச் சேர்ந்த சிலரே கூறினர். இதற்கு ஸமாதாநம் வருமாறு - அவர்களின் கூற்று ஓர் அதிவாதம் ஆகும். அதாவது உள்ள ஒன்றை மிகைப் படுத்திக் கூறலேயாகும். அதையும் சிறிது பொருத்தமாகவே எடுத்துக்கொள்வோம். அவர்களுக்கும் ப்ரபத்தியைச் செய்யவே வேண்டாமென்பது கருத்தன்று. ப்ரபத்தியைச் செய்பவனுக்குப் பலனைத் தரவேண்டுமென்று ஸங்கல்பித்துப் பலனைக் கொடுப்பவன் எம்பெருமானேயாதலின் ஸித்தோபாயமான அவனே மிக முக்கியமான உபாயமாவானென்ற கருத்தைக் கொண்டு ப்ரபத்தியை உபாயமேயன்று என்று கூறுகின்றனர். அவன் ஸித்தோபாயமாதலால் அவனே முக்கிய உபாயமென்பதை நாமும் மறுக்கவில்லையே! அவனது சீற்றத்தைத் தணித்துப் பலன் தருமாறு செய்யும் ஸாத்யோபாயமான ப்ரபத்தி அவனுக்கு அடுத்தபடியான உபாயமென்றுதானே கூறுகின்றோம்! உலகில் இருமனிதர் சேர்ந்தே செய்த ஒரு செயலில் ஒருவன் அதிகப் பங்கு கொண்டிருந்தால் "அவனே முழுதும் செய்தவன், மற்றவன் பெயரளவுக்குத்தான்" என்று சொல்வது உண்டே! அந்த முறையில் அவர்கள் 'எம்பெருமானே உபாயம், ப்ரபத்தி உபாயமன்று' என்று கூறுவதாக ஏற்றுக்கொள்வோம். அவ்வாறின்றி உண்மையில் ப்ரபத்தியைச் செய்யவே வேண்டாம் என்ற கருத்துடன் கூறுவதாயின் அதை மறுத்தே தீருவோம். ஸாத்யோபாயமான ப்ரபத்தியைச் செய்யாவிடில் எம்பெருமான் ஸித்தோபாயமாயுள்ள தன்மையே சிறிதும் பயன்படாது போய்விடும். மோக்ஷத்தை அவனாலும் கொடுக்க முடியாது. ஆகவே ப்ரபத்தியை அழித்தல் எவ்வாற்றானும் இயலாது என்பதை முன்னோர்களே நிலைநாட்டியுள்ளனர்.

**55. நிகழ்கால வினைமுற்று ப்ரபத்தி செய்யும் காலத்தைக் குறித்தல்**

த்வயத்தில் ப்ரபத்யே என்பது வினைமுற்று. இது நிகழ்காலத்தைக் காட்டும். (சரணமாக) அடைகின்றேன் என்பது இதன் பொருள். நிகழ்காலமாக இந்த வினைமுற்று ஏன் இருக்க வேண்டும் என்றால் சேதநன் த்வயத்தைச் சாதநமாகக்கொண்டு ப்ரபத்தியைச் செய்யும்போது இவ்வாறு அநுஸந்திக்க

வேண்டியதாதலாலும் ப்ரபத்தியைச் செய்கின்ற காலம் நிகழ்காலமாதலாலும் வினைமுற்றும் நிகழ்காலமாய் அமைந்துள்ளது என்று அறிக.

### 56. ப்ரபத்தியை ஒரு முறை செய்தலே விதி

மேலும் ஒரு கேள்வி - அடைகின்றேன் என்று நிகழ்கால மாயிருப்பதால் ப்ரபத்தியைத் தொடர்ச்சியாகச் செய்து கொண்டே இருக்க வேண்டுமோ? என்று. விடை - அப்படியன்று. அடைகின்றேன் என்னும் பொருளுடைய 'ப்ரபத்யே' என்னும் வினைமுற்று ப்ரபத்தி செய்பவன் தான் அநுஸந்திக்க வேண்டிய முறையைக் குறிக்கின்றது. இந்தச் சொல்லில் ப்ரபத்தியைத் தொடர்ந்து செய்யவேண்டுமென்று காட்டும் ஒரு சின்னமும் இல்லை. சரம சுலோகத்தில் "ப்ரபத்தியைச் செய்" என்று விதிக்கின்றானே! அந்த விதியைக் காட்டும் வரஜ (அடைவாயாக) என்ற முன்னிலை வினை முற்றிலாவது ப்ரபத்தியைத் தொடர்ந்து செய்யுமாறு விதிக்கும் குறிப்பு எதாவது உளதா? அதுவும் இல்லை. இதற்கு மாறாக "ப்ரபத்தியை ஒரு முறைதான் செய்ய வேண்டும். மறுமுறை செய்யக் கூடாது" என்பதற்குத்தான் ப்ரமாணங்கள் நிறைய உள்ளன. ஆதலின் அடைகின்றேன் (ப்ரபத்யே) என்ற நிகழ்கால வினைமுற்று ப்ரபத்தியைச் செய்யும் காலத்தை மட்டும் குறிப்பதாகும்.

### 57. உயிருள்ளவரை ப்ரபத்தி செய்தலைக் கூறுபவரின் கூற்றைப் பொருந்தவைத்தல்

சிலர் ப்ரபத்தியை உயிருள்ளவரையில் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கவேண்டும் என்று சொல்கிறார்கள். இது பொருந்தாதுதான். ஆயினும் அவர்களின் உள்ளக் கருத்தை அநுகூலமான வகையில் ஊஹித்து அவர்கள் கூறுவதையும் பொருந்தச் செய்து விடலாம். எவ்வாறெனில் - மோக்ஷத்திற்கு உபாயமாகச் செய்யும் ப்ரபத்தியைத்தான் ஒரே முறை செய்ய வேண்டும். ப்ரபத்தியைச் செய்த பின்பு சரீரம் கழியுமளவும் இங்கு இருக்கும் நாளில் இன்பமாய்ப் பொழுதுபோக்க வேண்டுமே ; அதற்காக த்வயத்தை அநுஸந்தித்துக் கொண்டு அவன் திருவடிகளைச் சரணமடைந்ததை நினைத்துக் கொண்டு ஆநந்தமாய்க் காலத்தைக் கழிப்பதைக் கருத்தில் கொண்டுதான் அந்தச் சிலர் உயிருள்ளவரையில் ப்ரபத்தியைச் செய்ய வேண்டுமென்கிறார்கள். இது நமக்கும் இஷ்டம் தானே! கத்யத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் முதலில் த்வயத்தைக் கொண்டு ப்ரபத்தியைச் செய்யச் சொல்லி பின் சரீர முடிவில் வரப்போகும் மோக்ஷத்தைப்

பற்றி ஸந்தேஹமற்று ஸுகமாய் இருக்கும்படி நியமித்தார். பின் சரீரம் உள்ளவரையில் கர்மாநுஷ்டாநம் செய்யும் காலம் தவிர மற்ற காலங்களிலெல்லாம் த்வயத்தையும் அதன் அர்த்தத்தையும் அநுஸந்தித்துக் கொண்டு இன்பமாய்ப் பொழுது போக்கும்படி நியமித்தருளியுள்ளாரே : த்வயத்தின் அர்த்தம்தானே ப்ரபத்தியென்பது. ஆதலின் சிலர் கூற்றுக்கும் நல்ல கருத்தை நாம் கூறி முரண்படாதவாறு செய்துவிடலாம். ப்ரபத்தியைச் செய்தபிறகு செய்யும் த்வயத்தின் அநுஸந்தாநமோ ப்ரபத்தியோ மோக்ஷத்துக்கு உபாயவகுப்பில் சேராது : இன்பப் பொழுது போக்கிலே தான் சேரும்.

**58. ப்ரபத்தியின் அங்கங்களுள் சில வேண்டாதவை என்று சொல்வதன் கருத்து**

ப்ரபத்திக்கு (1) ஆநுகூல்ய ஸங்கல்பம் (2) ப்ராதிகூல்ய வர்ஜநம் (3) கார்ப்பண்யம் (4) மஹாவிச்வாஸம் (5) கோப்த்ருத்வவரணம் - என்ற ஐந்தும் அங்கங்களாகச் சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன ப்ரபத்தியை உபாயமாக ஏற்றுக் கொண்டவர்களிலேயே சிலர் இந்த ஐந்து அங்கங்களில் சிலவற்றைப் புறக்கணிக்கின்றார்கள். உதாஹரணமாய்ச் சிலர் "ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலியன இருந்தால் இருக்கட்டும் : இல்லாவிடினும் குறையில்லை, அவசியம் இருந்தேயாக வேண்டும் என்ற அங்கங்களல்ல" என்கிறார்கள். சில வசநங்கள் ப்ரபத்திக்கு முக்கியமான அங்கமாகிய மஹாவிச்வாஸம் குறைவாயிருந்தாலும் ப்ரபத்தியைச் செய்யலாமென்கின்றன. இதனால் இந்த அங்கங்கள் வேண்டாமென்று கருதக்கூடாது. அங்கியாகிய ப்ரபத்தியின் பெருமையைக் காட்டுவதற்காக அந்த அங்கங்களைக் குறைவுபடுத்திப் பேசுவதாகக் கொள்ளவேண்டும். இதனின்று, செய்யும் ப்ரபத்தியானது அங்கங்களில் குறைவு ஏற்படினும் எம்பெருமான் கருணையாலே நாளடைவில் அங்கங்களைப் பூர்த்தியாக்கித் தானும் பூர்த்திபெற்றுப் பலனைக் கொடுத்துவிடும் என்ற ப்ரபத்தியின் பெருமையைப் பலனைக் கொடுத்துவிடும் என்ற ப்ரபத்தியின் பெருமையைக் கருத்திற்கொண்டுதான் அதை வெளியிட இவ்வாறு சில வசநங்கள் கூறுகின்றனவென்று தெரிகின்றது.

**59. சில அங்கங்களையே ப்ரபத்தியென்று சொல்வதன் உட் கருத்து**

இப்படி ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலிய ஐந்துமே ப்ரபத்திக்கு அவசியமான அங்கங்களாயின் சில ப்ரமாணங்கள்

குறிப்பிட்ட ஒன்றிரண்டு அங்கங்களை மட்டும் சிறப்பாய் எடுத்து அவற்றையே அங்கியான ப்ரபத்தியாகக்கூடக் கூறியதற்குக் காரணம் யாது? உதாஹரணமாய் - ஒரு ப்ரமாணம் மஹாவிச்வாஸத்தை எடுத்து அதுவே த்வயத்தின் அர்த்தமான ப்ரபத்தியாகும் என்கிறது. மற்றொரு ப்ரமாணம் "மஹாவிச்வாஸமே ப்ரபத்தியென்பது. அல்லது மஹாவிச்வாஸத்துடன் பலத்தைத் தரும்படி ப்ரார்த்தித்தலாகிய கோப்த்ருத்வ வரணமே ப்ரபத்தியென்பது" என்று கூறுகின்றது. ஆகவே இவ்விரண்டு அங்கங்களை மட்டும் சிறப்பாக எடுத்து அவற்றையே ப்ரபத்தி என்னும் அங்கியாகக்கூடக் கூறியதன் கருத்து என்ன? என்ற கேள்வி எழுகின்றது. இதற்கு ஸமாதாநம் - ப்ரபத்தியின் ஐந்து அங்கங்களுக்குள் மஹாவிச்வாஸம் மிக முக்கியமான அங்கம். மிகுந்த நம்பிக்கை இல்லாவிடில் ப்ரபத்தியே நிறைவேறாதன்றோ! இவ்வாறே கோப்த்ருத்வவரணம் என்னும் அங்கமும் மிக முக்கியமாகும். எம்பெருமான் எல்லாம் அறிந்தவனாய்க் கருணைமிகுந்தவனாயிருப்பினும் சேதநன் தன்னைக் காக்கவேண்டுமென்று பிரார்த்தித்தலை எதிர்பார்க்கிறானென்று ப்ரமாணம் கூறுகின்றது. இவ்வாறு பிரார்த்திப்பதுதான் கோப்த்ருத்வவரணம் என்னும் அங்கம் இதுவும் முக்கியமான அங்கமாகும். ஆகவே இந்த இரண்டு அங்கங்களும் மற்றவற்றிற் காட்டிலும் மிக முக்கியமாயிருத்தலைப்பற்றி இவற்றைப் புகழ்வதற்காகச் சிறப்பித்து எடுத்ததென்று காண்க.

### 60. ப்ரபத்திக்கு இரண்டு உருவம் - அங்கம் - ஸ்வதந்த்ரம்

கண்ணன் கீதையில் சரமசுலோகத்தால் 'என்னையே சரணமாக அடை' என்று ப்ரபத்தியைச் செய்யுமாறு விதிக்கின்றான். இந்த ப்ரபத்திக்கு இரண்டு தன்மைகள் உண்டு. (1) அங்கமாயிருத்தல் (2) ஸ்வதந்த்ரமாயிருத்தல் பக்தி யோகத்துக்கு அங்கமாய்ச் செய்யுமது அங்கப்ரபத்தியெனப் படும் மோக்ஷத்திற்கு நேர்ச் சாதனமாகச் செய்யும் ப்ரபத்தி ஸ்வதந்த்ர ப்ரபத்தியெனப்படும்.

### 61. ஸ்ரீகீதாபாஷ்ய - கத்யங்களுள் விரோதமின்மை

ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்ரீ கீதா பாஷ்யத்தில் சரம சுலோகத்திற்கு உரையிட்டருளும்போது பக்தியோகத்திற்கு அங்கமான ப்ரபத்தியை விளக்குவதாகக் கூறியுள்ளார். சரணாகதிகத்யத்தில் இச் சுலோகத்தின் பொருளைக் கூறும்போது மோக்ஷத்துக்கு

நேருபாயமான ஸ்வதந்த்ர ப்ரபத்தியைக் கூறுவதாகக் கூறியுள்ளார். இப்படி ஒரே ஆசார்யன் இயற்றிய இரண்டு நூல்களில் ஒரே சுலோகத்தின் அர்த்தத்தில் முரண்பாடு உள்ளதே? என்று கேட்கலாம். உண்மையில் முரண்பாடு கிடையாது. பக்தியோகம் எல்லாப் பலன்களையும் அளிக்க வல்லதாயுள்ளதுபோல் ப்ரபத்தியும் எல்லாப் பலன்களையும் தர வல்லது. பக்தியோகத்தைச் செய்யும்போது அதை முழுதும் தலைக்கட்டமுடியாதபடி சில பாபங்கள் தடைசெய்யும். அந்தப் பாபங்கள் மற்ற பிராயச்சித்தங்களால் போக்க முடியாதனவாயிருக்கும். அவற்றைப் போக்க ப்ரபத்தியைச் செய்தால் அந்தப் பாபங்கள் ஒழிந்து பக்தியோகம் தலைக்கட்டப்பெறும். அந்த ப்ரபத்தியை பக்தியோகம் நிறைவேறுவதற்காக அதற்கு அங்கமாகச் செய்வதால் அது அங்கப்ரபத்தி எனப்படும். அர்ஜுநன் பக்தியோகம் செய்யத் தகுதியுடையனாதலின் அதற்கு அங்கமான ப்ரபத்தி கூறப்பட்டதாகக் கீதாபாஷ்யத்தில் விளக்கப்பட்டுள்ளது. கத்யத்திலோ ப்ரபத்தி மோக்ஷம் உள்பட எல்லாப் பலன்களையும் அளிக்கவல்ல சுதந்திரம் பெற்று நிற்கும் பெருமை விளக்கப்பட்டிருக்கிறது. ஆதலின் ப்ரபத்தியை அங்கமாகக் கூறிய இடத்தில் அங்கமான நிலை இல்லையென்றாவது கொள்ள இடமில்லை. ஆகவே எத்தகைய முரண்பாடும் இல்லையென்று உணர்க.

## 62. ஸர்வதர்ம சப்தத்துக்கு இருவகைப் பொருள்

சரமசுலோகத்தில் முதற்பாதி ஸகலதர்மங்களையும் விட்டு என்னையே சரணமடை என்ற அர்த்தத்தைக் கூறுகின்றது. இங்கு 'ஸர்வ தர்மாந்' என்னும் சொல் எல்லாத் தர்மங்களையும் கூறவல்லதே. ஆயினும் இந்த இடத்திற்கு ஏற்ப ஸர்வ சப்தத்தின் பொருளைச் சுருக்கித் தர்மங்களையும் வரையறுத்துப் பொருள் கூறுகின்றனர் சிலர். அதாவது - மோக்ஷத்துக்கு நேர்க்காரணமான பக்தியோகம் அதன் அங்கங்களான கர்மயோகம் ஜ்ஞாநயோகம் ஆகிய இவற்றை மட்டும் ஸர்வதர்மாந் என்பதற்குப் பொருளாக எடுத்துக்கொண்டு இவற்றை விட்டிருக்கிற நீ என்னைச் சரணமடை என்று விதிப்பதாக அவர்களின் கருத்து. இது 'ஸர்வ' பதத்துக்குப் பொருளைச் சுருக்கிக் கூறும் முறையாகும். இந்த அர்த்தம் நம் ஸித்தாந்தத்தில் ஏற்றுக் கொள்ள உரியதே. இன்னும் சிலர் ஸர்வ சப்தத்தின் பொருளை வரையறுக்காமல் முன் கூறிய பக்தியோகம், அதன் அங்கங்களான கர்மயோக ஜ்ஞாநயோகங்கள், இவற்றுடன் வர்ணாச்சிரமதர்மங்களான நித்யம் நைமித்திகம் முதலிய ஸகல தர்மங்களையும் விட்டு என்னைச் சரணமடை என்று பொருள்

கூறுகின்றனர். இது ஸர்வ சப்தத்திற்குப் பொருளைச் சுருக்காமல் கூறிய முறையாகும். மேற்பார்வைக்கு இவ்விரண்டு முறைகளிலும் கூறிய பொருள்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டனபோல் தோன்றும். உண்மையில் ஒரு முரண்பாடும் இல்லை. எவ்வாறு? முதற்பொருளில் தன் தகுதிக்கு ஏற்றதல்லாத பக்தியோகத்தையும் அதன் அங்கங்களையும் விட்டிருக்கின்றவனைப் பார்த்துச் சரணமடை என்று விதிப்பதாகக் கொள்ளவேண்டும். இதில் இடர் ஏதும் இல்லையே! இரண்டாவது பொருளில் வர்ணாச்சிரம தர்மங்களையும் சேர்த்துக் கொண்டு அவற்றையும் விட்டுவிட்டுச் சரணமடைதலை விதிப்பதாகக் கூறவேண்டும். இதிலும் இடர் இல்லை. ஏனெனில் - இந்தத் தர்மங்களை எல்லாம் ப்ரபத்திக்கு அங்கம் என்ற கொள்கையுடன் செய்வதை விட்டு விடுதலே இங்குத் தேறிய பொருள். இதில் என்ன இடர்? ப்ரபத்தி தனக்கு ஏற்பட்ட ஐந்து அங்கங்களையன்றி வேறொன்றையும் அங்கமாக எதிர்பாராததென்பது நாம் ஏற்றுக்கொண்டது தானே? ஆகவே இந்த இருவகைப் பொருளிலும் முரண்பாடு எதுவும் இல்லை இவ்விரண்டாம் வகைப் பொருள் கூறுமவர்களும் வர்ணாச்சிரம தர்மங்களையே செய்யாமல் விட்டுவிட வேண்டுமென்று சொல்லவில்லையே! ப்ரபத்திக்கு அவற்றை அங்கமாக வைத்துச் செய்யக்கூடாதென்றுதானே அவர்களின் கருத்து இது முற்றும் நியாயமானதே பிற மதத்தினர்தாம் வர்ணாச்சிரமதர்மங்களைச் செய்யாமல் விட்டுவிட்டு ப்ரபத்திசெய்வதை விதிப்பதாகக் கூறுகின்றனர். அவர்கள் கூற்றில்தான் ஸ்வதந்த்ரனான எம்பெருமான் கட்டளையாக சாஸ்த்ரத்தின்படி நடக்காத தோஷம் வரும். ப்ரபத்திக்கு அங்கம் என்ற நினைவை மட்டும் விட்டு வர்ணாச்சிரம தர்மத்தைச் செய்தேயாக வேண்டுமென்ற கொள்கையில் சாஸ்த்ரத்தை மீறி நடத்தல் என்ற பேச்சுக்கே இடமில்லை.

**63. 'பரித்யஜ' 'ஏகம்' இவற்றுக்குக் கூறும் பல அர்த்தங்களும் ப்ராமணிகங்களே.**

சரம சுலோகத்தில் 'பரித்யஜ்ய' 'ஏகம்' என்ற இரண்டு சொற்களுக்கும் ஒவ்வொன்றுக்கும் ஆறு அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளன (விளக்கம் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற் காண்க) இந்த ஆறு அர்த்தங்களும் மூல ப்ரமாணங்களால் ஏற்பட்டவைகளாதலின் எதற்காக இவ்வளவு அர்த்தங்கள்? என்று கேட்கக்கூடாது. மேற்பார்வைக்கு அவ்வர்த்தங்களில் எதாவது ஒன்றுக்கொன்று விரோதம் தோன்றக்கூடும். ப்ராமணங்களைக் கொண்டு ஒரு சொல்லுக்குக் கூறும் பல அர்த்தங்களில் ஒன்றுக்கொன்று

விரோதம் கூற முடியாது.

**64. 'பரித்யஜ்ய' 'ஏகம்' பொருள்களில் கூறியது கூறல் இல்லாமை.**

ஆனால் 'பரித்யஜ்ய' என்பதற்குச் சொல்லும் ஆறு அர்த்தங்களுள் ஒன்றிரண்டு 'ஏக' சப்தத்தின் ஆறு அர்த்தங்களுள் அடங்கியிருக்கின்றன. இதைக் கொண்டு கூறியதையே மறுபடியும் கூறுவதாகிய தோஷத்தைக் கருதக்கூடாது. 'பரித்யஜ்ய' என்பதற்கு ஓர் அர்த்தத்தை அநுஸந்திக்கும் போது அதே அர்த்தம் 'ஏக' சப்தத்திற்கு இருப்பதை விட்டுவிட்டு மற்ற அர்த்தத்தை அநுஸந்திக்க வேண்டும். இங்ஙனமே 'ஏக' சப்தத்திற்கு ஒரு பொருளை அநுஸந்திக்கும்போது 'பரித்யஜ்ய' என்பதற்கு அதே அர்த்தம் இருப்பதை விட்டுவிட்டு அதன் மற்ற அர்த்தத்தை அநுஸந்திக்க வேண்டும். இவ்வாறு மாற்றி மாற்றி அநுஸந்தித்தால் கூறியதையே மறுபடி கூறுதல் என்ற குற்றம் வர இடமில்லை.

**65. 'மாம்' 'அஹம்' சொற்களில் ஸௌலப்யமும் பரத்வமும்**

சரம சுலோகத்தில் உள்ள 'மாம்' என்ற சொல்லும் 'அஹம்' என்ற சொல்லும் ரக்ஷகனான எம்பெருமானைக் குறிப்பன. (மாம் - என்னை 2ம் வேற்றுமை. அஹம் - நான் முதல் வேற்றுமை) 'மாம்' என்பது ரக்ஷகனான எம்பெருமான் ப்ரபத்திக்கு இலக்காயிருக்கும் நிலையைக் காட்டுகின்றது. 'அஹம்' என்பது அவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கும் நிலையைக் காட்டுகின்றது. இங்கு 'மாம்' என்பதில் எம்பெருமானது எளிமை (ஸௌலப்யம்) புலப்படும். சேதநன் பரந்யாஸம் செய்யும்போது அவன் ஸமர்ப்பிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு அவன் எளியனாயிருக்கும் தன்மை தானே பயன்படும்? அவ்வாறே 'அஹம்' என்பதில் எம்பெருமானது மேன்மை (பரத்வம்) தோன்றும் அவன் சேதநனுக்கு எத்தகைய உதவியையும் செய்வதற்கு அவனது மேன்மைதானே பயன்படும்? இவ்வாறு இந்த இரண்டு தன்மைகளையும் 'மாம்' 'அஹம்' என்ற இரண்டு சொற்களில் பிரித்து அநுஸந்திப்பது ஏன்? அந்த அந்தச் செயலுக்கு அவசியமான தன்மையை அந்த அந்தச் சொல்லில் அநுஸந்திப்பதுவே பொருத்தமென்ற முறையினால்தான். இதைக் கொண்டு 'மாம்' என்பதில் ஸௌலப்யத்தை நினைக்கும்போது பரத்வம் இல்லையென்றோ, 'அஹம்' என்பதில் பரத்வத்தை

நினைக்கும்போது ஸௌலப்யம் இல்லையென்றோ கருதக்கூடாது.

### 66. 'வ்ரஜ' 'த்வா' ஒருமைச் சொற்கள் பொதுப் பொருளைக் குறிப்பிடல்

சரம சுலோகத்தில் அர்ஜுநன் ஒருவனையே முன்னிலையாக்கி 'வ்ரஜ' (அடை) என்றும் 'த்வா' (உன்னை) என்றும் ஒருமையில் (ஏக வசனத்தில்) கண்ணபிரான் உபதேசித்தான். ஆதலின் இங்கு விதிக்கும் ப்ரபத்தி அர்ஜுநன் ஒருவனுக்கு மட்டுமே செய்ய உரியதேயன்றிப் பிறர்க்குச் செய்ய உரியதாகாதே என்ற கேள்வி எழும். இதற்கு விடை - அர்ஜுநன் ஒருவனே கலங்கி நின்று கண்ணனைச் சரணமடைந்து தனக்கு உரிய உபாயத்தை உபதேசிக்குமாறு வேண்டினான். ஆதலின் அவனையே குறித்துக் கீதாசார்யன் உபதேசிக்க வேண்டியதாயிற்று. எம்பெருமான் ஸகல ப்ராணிகளும் சரணமடைதற்கு உரியன் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அவ்வாறே ஸர்வ ஜீவராசிகளும் ப்ரபத்தியைச் செய்யலாம் என்றும் ப்ரமாணங்கள் கூறுகின்றன. உலகில் கன்றை ஊட்டச்செய்து பசுவினிடம் கறக்கும் பால் மற்றவர்க்கும் பயன்படுவது உண்டே? அவ்வாறே அர்ஜுநனைக் குறிப்பிட்டு விதித்த ப்ரபத்தி அதைச் செய்யத் தகுதியுடைய அனைவருக்கும் பொதுவென்றே கொள்ள வேண்டும்.

### 67. ஸர்வபாபசப்தத்துக்குச் சாஸ்த்ர விரோதமில்லாத பொருள் - விளக்கம்.

சரமசுலோகத்தில் பிற்பாதியில் "ப்ரபத்தி செய்தவனை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பேன்" என்கிறான் கண்ணபிரான். இங்குச் சிலர் இந்த எல்லாப் பாபங்களுள் ப்ரபத்திக்குப் பின் வேண்டுமென்றே அறிந்து செய்யும் பாபங்களும் அடங்குமென்றும் அவற்றினின்றும் விடுவிப்பதாகவே கண்ணன் கூறியதாகவும் கூறுவர். இவர்களின் கொள்கை சாஸ்த்ரங்களுக்கு முரண்படுமே! இவர்கள் கூறுகிறபடி ப்ரபத்திக்குப் பின் அறிந்து செய்யப்போகும் பாபங்களும் முன்செய்த ப்ரபத்தியாலேயே போய்விடுவது சாத்தியமா? இந்தக் கொள்கை ப்ரபத்திக்குப் பின் அறிந்து செய்யும் பாபங்களுக்குப் பிராயச்சித்தம் செய்யுமாறு விதிக்கும் சாஸ்த்ரங்களுக்கு முரண்படுகின்றதே! முன் ப்ரபத்தியாலேயே பாபங்கள் கழிவதாயின் பின் பிராயச்சித்தத்தை ஏன் விதிக்க வேண்டும்? என்றெல்லாம் ஐயம் எழுகின்றது. இதற்கு விடை - அவர்களின்

கொள்கையையும் சாஸ்த்ரங்களுக்கு முரண்படாத வகையில் திருத்தலாம். அறிந்து செய்யும் பாபங்களை அவற்றுக்குப் பிராயச்சித்தத்தைச் செய்வதால் கழிக்கின்றேனென்பதே எம்பெருமான் திருவுள்ளம். ஆகவே அவ்வாறு ப்ரபத்திக்குப் பிறகு புத்திபூர்வமாய்ச் செய்யும் பாபங்களுக்குப் பிராயச்சித்தமாக ஒரு ப்ரபத்தி செய்வதாலோ, அது செய்யாவிடில் லகுவான தண்டனைகளை இவ்வுலகிலேயே பெறுவதாலோ அப்பாபங்கள் தொலைந்துவிடுகின்றன என்ற கருத்தைக் கொண்டே புத்திபூர்வமாய்ப் பிறகு செய்யும் பாபங்களையும் ஸர்வபாபங்களில் கூட்டிச் சொன்னார்கள் என்று உணர்க. ஆதலின் ஒரு சாஸ்த்ரத்துக்கும் முரண்பாடு இல்லை.

## 68. மோக்ஷமாகிய பலனைப் பெறும் காலம்

சரமசுலோகத்தில் எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பேன் என்று மட்டும் கண்ணபிரான் கூறினானேயன்றி அவன் ஸங்கல்பித்த பலன் எப்பொழுது கிடைக்கும் என்பதைக் கூறவில்லை. சிலர் 'ப்ரபத்தி செய்தவனுக்கு முன் செய்த பல கர்மங்கள் உண்டே! அவற்றுள் பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்கள் எல்லாம் எப்பொழுது தொலைகின்றனவோ அப்பொழுதே மோக்ஷம் கிடைக்கும். அது இந்தச் சரீரத்தின் முடிவிலோ பிந்திய சரீரத்தின் முடிவிலோ என்று கூற முடியாது'. என்று கூறுகின்றனர். சிலர் சேதநன் ப்ரபத்தி செய்யும்பொழுது மோக்ஷத்தை எப்பொழுது தரும்படி கேட்கின்றானோ அப்பொழுது மோக்ஷம் கிடைக்கும் என்று கூறுகின்றார்கள். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று முரண்படுவனபோல் தோன்றுகின்றன. உண்மையில் முரண்பாடு இல்லை. விளக்கம் - ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபட்டு மோக்ஷம் பெறவேண்டுமென்று விரும்பித்தானே சேதநர்கள் ப்ரபத்தி செய்கின்றார்கள்! இவர்களுள் பலர் இந்தச் சரீரம் உள்ளவரையில் கிடைக்கும் கர்மபலன்களை அநுபவித்துவிட்டு இச்சரீர முடிவில் மோக்ஷம் பெறவேண்டுமென்று விரும்புவர். ஆனால் இவர்கல் மறுபடி ஒரு சரீரத்தைப் பெற்று அதிலும் கர்ம பலன்களை அநுபவிக்கவேண்டுமென்று விரும்புவதில்லை ஆதலின் பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்களைமட்டும் வைத்துக்கொண்டு அடுத்த சரீரத்திற்கு வேண்டிய கர்மங்களை ஒழிப்பதே இவர்களின் குறிக்கோள். பலன் கொடுக்கத் தொடங்காமல் மூட்டையாய்க் குவிந்திருந்த ஸஞ்சிதமெனப்படும் முந்திய கர்மங்கள் எல்லாம்தாம் ப்ரபத்தி செய்யும்போதே அதன் பெருமையால் தொலைந்து

போய்விடுகின்றனவே! ஆகவே இவர்கள் இச்சரீரம் உள்ளவரையில் கர்ம பலன்களை எல்லாம் அநுபவித்துவிட்டுச் சரீரம் விடும்போது கர்மங்கள் அழியப்பெற்று மோக்ஷம் பெறுவர். இவர்களுக்குப் பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்களின் ஒரு பகுதி ப்ரபத்தியின் பெருமையாலும், மறுபகுதி இச்சரீரம் விடும் வரையில் அதன் பலன்களை அநுபவித்துவிட்டதாலும் கழியுமென்று உணர்க.

இன்னும் சிலர் இச்சரீரம் உள்ளவரையில் கூட இவ்வுலக வாழ்வை விரும்பாது இந்த க்ஷணமே ஸ்ரீ வைகுண்டம் சென்று பரிபூர்ண அநுபவம் பெற மிக்க வேட்கையுற்று ப்ரபத்தி செய்வர். இது ஆர்த்த ப்ரபத்தி எனப்படும். இவர்களுக்குப் பலன் கொடுக்கத் தொடங்கியிருந்த கர்மங்கள் அந்த க்ஷணத்திலேயே ஒழிந்து உடனே இவர்கள் மோக்ஷம் பெறுவர். இவர்களுக்கு அந்த க்ஷணத்திலேயே ப்ராரப்த கர்மங்கள் ஒழிந்து விடுவதற்குக் காரணம் இவர்கள் செய்த ஆர்த்த ப்ரபத்தியின் பெருமையேயாகும்.

ஆகவே இவர்கள் அனைவரும் ப்ராரப்த கர்மத்தின் முடிவிலே தான் மோக்ஷம் பெறுகின்றனர் ; தாம் விரும்பிய காலத்திலே மோக்ஷம் பெருமவர்களாகவும் ஆகின்றனர். அவரவர்களிந் ஸம்ஸாரபந்தம் ஒழிவதற்குக் காலத்தில் வரும் முற்பாடு பிற்பாடுகளுக்கு அவரவர்களின் ஆர்த்தியில் மிகுதி குறைவுகளே காரணமாகும். ஆகவே முதலில் கூறிய முரண்பாடு ஏதும் இல்லையென்று உணர்க.

**69. 'மா சுச :' அருச்சுனன் சோகம் யாது? - விளக்கம்.**

சரமசுலோகத்தில் கடையில் 'மா சுச :' - வருந்தவேண்டா மென்று கண்ணன் அர்ஜுநனுக்கு உபதேசிக்கின்றான். இதற்கு - செய்வதற்கு மிகக் கடினமாய் நெடுங்காலம் செய்ய வேண்டியதாய்ப் பலனையும் பல காலம் கழித்துத் தருவதாயுள்ள பக்தியோகம் செய்யத் தனக்கு இயலாமையைக் குறித்து அருச்சுனன் வருந்தியதாயும் அந்த வருத்தத்தைப் போக்க, செய்வதற்கு மிக எளிதாய் ஒரு முறை செய்யவேண்டியதாய் விரைவில் பலன் தருவதாயுள்ள ப்ரபத்தியைக் காட்டி 'இனி வருந்தாதே' என்று தேற்றுவதாக விளக்கம் தரப்படுகின்றதே! கீதையின் தொடக்கத்தில் போர்க்களத்தில் எதிரிகள் அனைவரும் தன்னாலும் தன் உறவினர்களாலும் கொல்லப்படவேண்டி வந்ததைக் கூறி அருச்சுனன் வருந்தியதாகவன்றோ உள்ளது! அந்த வருத்தத்தைப் போக்குவதாகக் கூறுவதன்றோ பொருந்தும்? அதை விட்டு இவ்வாறு கூறியது எவ்வாறு பொருந்தும்? என்ற கேள்வி எழலாம்.

இதற்கு ஸமாதாநம் வருமாறு - தொடக்கத்தில் போரில் உறவினர்களைக் கொல்ல நேரிடுவதைப் பற்றி உண்டான துக்கம், பிறகு கண்ணன் அழியும் தன்மையதான சரீரத்தைப் பற்றியும் அழியாத ஆத்மாவைப் பற்றியும் விளக்கமாய் உபதேசித்ததாலேயே கழிந்துவிட்டது. அதற்குப் பின் வேறொரு சோகம் அருச்சுனனைப் பற்றிக் கொண்டது. அதாவது - கண்ணன், அசுரத்தன்மையெனும் செல்வத்தால் வரும் தீமைகளையும் தேவத்தன்மையால் வரும் நன்மைகளையும் விளக்கிக் கூறிவரும்போது அருச்சுனனுக்குத் தான் அசுரத்தன்மையுடையனாகில் என்ன செய்வது? என்ற அச்சம் தோன்றிச் சோகமும் பற்றிக் கொண்டது. அப்பொழுது கண்ணன் ('மா சுச :') வருந்தாதே என்று கூறி அவனைத் தெய்வத் தன்மையனாகக் கூறி அந்தச் சோகத்தையும் தீர்த்தான். அதுபோலவே பின்பு கண்ணன் பக்தியோகத்தை உபதேசித்தபின் அதைச் செய்யமுடியாத காரணத்தால் சோகம் பற்றிக்கொள்ள, அப்பொழுது எளிய உபாயமாகிய ப்ரபத்தியைக் காட்டி 'இனி வருந்தாதே' என்று கூறி அவன் துயரத்தைப் போக்குவதாகக் கூறுவதே இந்த ஸந்தர்ப்பத்துக்கு ஏற்றதாகுமெனக் கொள்க.

### 70. முடிவுரை கூறல்

இதுவரை நம் ஸம்ப்ரதாய விஷயங்களிலோ பூர்வாசார்ய வாக்யங்களிலோ கொள்கைகளிலோ ஒன்றுக்கொன்று முரண்பாடோ, முன்னுக்குப்பின் விரோதமோ சிறிதும் இல்லையென்பதை விளக்கினோம். இவ்வாறே வேதாந்த சாஸ்த்ரங்களில் நிர்ணயிக்கப்பட்டுள்ள தத்துவம் - உபாயம் - பலன் இவற்றைப் பற்றியும் நம் ஸம்ப்ரதாயத்தில் ஒன்றுக்கொன்று முரண்பாடு கிடையாது. முன்னுக்குப் பின் விரோதமும் கிடையாது. இத்தகைய தூய்மையான தொன்றுதொட்டு வந்த ஸம்ப்ரதாயத்தை இந்நூலில் சுருக்கியுரைத்தோம். வயலில் சிந்திய தானியங்களைக்கொண்டு வாழுமவன் அவற்றைப் பொறுக்கி ஒன்று திரட்டி வைத்துக்கொள்வதுபோல் பெரியோர்களின் உபதேசங்களையும் அவர்களின் அநுஷ்டாநமுறையையும் பார்த்து அவற்றில் தனக்கு ஏற்றவற்றை எடுத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும்.

## ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தி முற்றும்

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாயநம :

(ஸ்ரீ ஸம்ப்ரதாய பரிசுத்தியில் மூலத்தில் பக்கம் 4லும் 7லும் ஸ்ரீதேசிகன் குறித்தருளிய தர்மவ்யாதர் - துலாதரன் - மாண்டவ்யர் இவர்களின் வரலாற்று விளக்கம் கீழே தரப்படுகின்றது)

தர்ம வ்யாதர் வரலாறு - கௌசிகன் என்னும் அந்தணன் வேதங்களைப் பயின்று ஆசார சீலனாயிருந்தான். ஆனால் பெற்றோருக்குப் பணிவிடை செய்வதில் மட்டும் சிரத்தையின்றியிருந்தான். அவன் யாத்திரையாய்ப் புறப்பட்டுச் சென்று ஒரு மரத்தடியில் அமர்ந்தான். அப்பொழுது மரத்தின்மீது இருந்த ஒரு கொக்கு விட்ட மலம் அந்தணன் மீது விழுந்தது. சினங்கொண்டு அந்தணன் அதை நோக்கினான். அது கீழே விழுந்து உயிரை விட்டது. தன் தவற்றுக்கு வருந்தி அந்தணன் புறப்பட்டுப் பழகிய ஒரு கிராமத்துக்குச் சென்று முன்பு பிக்ஷை வாங்கிய ஒரு வீட்டிற்குச் சென்று பிக்ஷை கேட்டான். பாத்திரங்கலைச் சுத்தி செய்துகொண்டிருந்த அவ்வீட்டுப் பெண் அந்தணனைச் சற்றும் இருக்கும்படி கூறினாள். அவ்வமயத்தில் அவள் கணவன் மிக்க பசியோடு களைத்து வீட்டினுள் புகுந்தான் அந்தப் பெண் உடனே கணவனுக்கு ஸகல உபசாரங்களையும் செய்து அவன் பசியாற்றுவதில் ஈடுபட்டிருந்ததில் அந்தணனை மறந்துவிட்டாள். நினைவு வந்ததும் அவள் ஓடிவந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டி உபசரிக்கத் தொடங்கினாள். அந்தணன் கொடிய சொற்களைக் கூறி அப்பெண்ணை மிக்க கோபத்தோடு பார்த்தான். அவள் 'அந்தணரே! என்னையும் கொக்கு என்று நினையாதீர்' என்று கூறிக் கணவனுக்குப் பணிவிடை செய்ததால் காலத் தாழ்வு ஏற்பட்டதென்று சொல்லி அவள் அறிந்த பல தர்மங்களைக் கூறினாள். மேலும் தர்மத்தின் நுணுக்கம் தெரிய வேண்டுமானால் மிதிலையில் மஹாதர்மிஷ்டராய் மாம்ஸ விற்பனை செய்யும் தர்மவ்யாதரை அணுகினால் எல்லா ஐயமும் நீங்குமென்றாள்.

அந்தணன் காட்டில் நடந்த கொக்கின் செய்தியை அவள் அறிந்ததற்கு வியந்து அவளைப் புகழ்ந்துவிட்டு மிதிலா நகரம் சேர்ந்து தர்மவ்யாதரைப் பற்றி விசாரித்தறிந்து அவர் இருக்குமிடம் சென்று பார்க்கும் போது தர்மவ்யாதர் பல்வகை மாம்ஸங்களின் நடுவில் அமர்ந்து விற்பனை செய்துகொண்டிருப்பதைக் கண்டான். அந்தணனைப் பார்த்ததும் தர்மவ்யாதர் ஓடிவந்து வணங்கி நல்வரவு கூறிப் 'பதிவ்ரதையான பெண் சொற்படி தர்மம் கேட்பதற்கு என்னிடம் நீர் வந்திருப்பதை அறிவேன்' என்று கூறி அந்தணனை வீட்டுக்கு அழைத்துச் சென்றார். பெண் அனுப்பியதை அறிந்ததாகிய இரண்டாவது

ஆச்சரியத்துக்குப் பிரமித்து நின்றான் அந்தணன். தர்மவ்யாதர் அந்தணனுக்கு உபசாரங்கள் செய்து அமரச்செய்து தம் பெற்றோருக்குப் பணிவிடை செய்து விட்டு வந்து அந்தணனுக்குப் பல உபதேசங்களைச் செய்தார் அவையாவன - சிஷ்டர்களின் ஆசாரம், அஹிம்ஸா தர்மம், பரகதிக்கு உரிய தர்மங்கள், இந்த்ரியங்களை அடக்குதல், மோக்ஷத்துக்கு உரிய தர்மம், பெற்றோர்களின் பெருமை, தம் முற்பிறவி வரலாறு முதலியன. அந்தணன் தர்மவ்யாதரிடம் நன்றியறிவுடன் விடைபெற்று ஊருக்கு வந்து பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்து தர்மிஷ்டனாய் வாழ்ந்தான்.

(பாரதம் - ஆரண்ய பர்வம் அத்யாயம் 170 - 178)

துலாதாரன் வரலாறு - ஜாஜலி என்னும் முனிவர் பிறரால் செய்ய முடியாத கடுந்தவம் புரிந்தார். அசையாமல் நெடுங்காலம் அமர்ந்தே இருந்தபடியால் சடைகள் வளர்ந்து அவற்றில் சிட்டுக் குருவிகள் கூடுகட்டி வாழ ஆரம்பித்தன. முட்டையிடல், குஞ்சு பொரித்தல் எல்லாம் சடைகளிலேயே நடந்தன. குருவிகளின் குடும்பம் பெருகி எல்லாம் அங்கேயே வாழ்ந்தன. அடிக்கடி குருவிகள் வெளியே போவதும் இரவில் வந்து தங்குவதும் பல நாள் வெளியே சுற்றிவந்து மறுபடி அங்கே தங்குவதும் வழக்கமாயின எதற்கும் முனிவர் அசைவதில்லை. அப்பொழுது அவருக்குக் கர்வம் ஏற்பட்டது. 'பற்பல குருவிகளுக்குத் தலையிலேயே இடம் கொடுத்து வாழச் செய்யும் இந்தத் தர்மம் வேறு யாரால் செய்ய முடியும்? என்று நினைத்தார். தர்மத்தின் உச்ச நிலையைத் தாம் பெற்றுவிட்டதாய் வெளிப்படையாகப் புகழ்ந்து கொண்டார். அப்பொழுது ஆகாயத்தில் ஓர் அசரீரி வாக்கு முனிவரே! தர்மத்தில் வாரணாஸியில் வாழும் துலாதாரனுக்கு ஈடாகமாட்டீர். அவன் உம்மைப் போல் தன்னைப் புகழ்ந்து கொள்பவனல்லன்' என்று எழுந்தது. அதைக் கேட்டுப் பொறாமை கொண்ட ஜாஜலி முனிவர் புறப்பட்டு நெடுநாள் கழித்துக் காசியை அடைந்து வைசிய குலத்தில் பிறந்த துலாதாரன் இருக்குமிடம் தேடிக் கண்டுபிடித்தார். அவன் பலசரக்குக் கடையில் அமர்ந்து பண்டங்களை எடை போட்டு விற்றுக் கொண்டிருந்தான். முனிவரைக் கண்டவுடன் அவன் மகிழ்ச்சியுடன் வந்து வரவேற்று உபசரித்தான். முனிவரிடம் அவர் தவம் புரிந்தது தொடங்கி ஆகாயவாணியைக் கேட்டுப் பொறாமையோடு தன்னைப் பார்க்க வந்தது வரை உள்ள செய்திகளைத் துலாதாரன் தானே கூறி இப்பொழுது அவர் வேண்டுவதைச் செய்யப் பாரிப்பதாய்க் கூறினான். ஆச்சரியம் கொண்ட

முனிவர் வாணிபம் செய்யும் அவனுக்கு இத்தகைய பெருமை வந்த காரணத்தை முதலில் கேட்டுப் பின் தர்மங்களைக் கேட்கிறார். துலாதாரன் பிராணிகளுக்கு நன்மை புரிதல் - தீங்கு கருதாமை - எளிய வாழ்க்கை - பிறரைப் பழியாமை - ஆசையின்மை - ஆசாரத்தின் அவசியம் - அபயமளித்தல் முதலிய தர்மங்களை அந்தணரான முனிவருக்கு உபதேசித்துத் தெளிவித்தான்.

(பாரதம் - சாந்திபர்வம் அத்யாயம் 267 - 270)

மாண்டவ்யர் வரலாறு - மாண்டவ்யர் என்னும் முனிவர் ஏகாந்தமான ஓர் இடத்தில் ஆச்சிரமத்தை அமைத்துக்கொண்டு அருகில் உள்ள ஒரு மரத்தடியில் தவம் புரிந்து கொண்டிருந்தார். ஊரிலிருந்து பொருள்களைக் களவாடிக் கொண்டு சில திருடர்கள் அங்கு ஓடிவந்தார்கள். அவர்களைத் துரத்திக்கொண்டு காவலரும் வந்தார்கள். கள்வர்கள் அச்சத்தால் திருடிய பொருள்களை ஆச்சிரமத்தில் போட்டுவிட்டு அங்கேயே ஒளிந்து கொண்டார்கள். அரசன் ஏவலர்கள் முனிவரிடம் வந்து கள்வர்கள் சென்ற வழியை விசாரித்தனர். முனிவர் மௌன விரதத்தால் ஒன்றும் கூறவில்லை. காவலர்கள் தேடியதில் பொருள்களும் ஒளிந்திருந்த திருடர்களும் அகப்பட்டனர். முனிவரைக் களவுக்குத் துணையாக நினைத்து அவரையும் கள்வர்களையும் கட்டி அரசனிடம் இழுத்துச் சென்றனர். சினங்கொண்ட அரசன் முனிவருள்பட அனைவரையும் கழுவில் ஏற்றுமாறு கட்டளையிட்டான். ஏவலர்கள் அவ்வாறே செய்தனர் முனிவருக்கு மட்டும் உயிர் போகவில்லை. தவ வலிமையால் சூலத்தின் முனையில் இருந்துகொண்டே கடுந் தவம் புரிந்தார். இந்த ஆச்சரியத்தைக் கண்ட ஏவலர் அரசனிடம் தெரிவித்தனர் அரசன் மந்திரிகளுடன் வந்து பார்த்து முனிவரைக் கழுவினின்று இறங்கச் செய்து அவரை வணங்கித் தன் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினான். அரசனை முனிவர் மன்னித்தார். இப்படி திருடர்கள் முனிவரைக் கள்வராக்க முயன்றது அவர்களுக்கே தீங்காய் முடிந்தது.

(பாரதம் - ஆதிபர்வம் - அத்யாயம் 109)

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 2. தத்த்வ பதவீ

## 1. முன்னுரை

இந்த ரஹஸ்யம் சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களை அறிவதற்கு வழிகாட்டுவதால் இப்பெயர் பெற்றது.

சேதநன் தான் நற்கதி பெற விரும்பினால் சிறந்த ஓர் ஆசார்யனை அடைய வேண்டும். அவன் அருளோடு செய்யும் உபதேசத்தால் மேம்பட்ட தத்துவம் - தாழ்ந்த த்துவம் இவற்றைப் பற்றிய விளக்கமான அறிவைப் பெற வேண்டும். பின் ஸர்வேச்வரன் திருவடிகளே சாதனமாகவும் பலனாகவும் ஆவதை உணர்ந்து அவன் திருவடிகளில் சரணாகதி செய்ய வேண்டும். இதுவே சேதநன் நல்வாழ்வு பெறுவதற்கு ஏற்ற வழியாகும்.

## 2. பர - அவர தத்தவங்கள்

### 2.1. பர தத்த்வம்

மேம்பட்ட தத்துவம் - பெரிய பிராட்டிக்கு நாயகனான ஸ்ரீமந் நாராயணனே பரத்துவமாவான். இவன் தன்னைத் தவிர மற்ற ஸகல வஸ்துக்களையும் தாங்குமவனாய் அடக்கியாள்பவனாய் அவற்றால் சிறப்பைப் பெறுமவனுமாயுள்ளான். இவன் இயற்கையாகவே எல்லாவற்றையும் அறிபவன் ; எதையும் செய்யச் சக்தியுடயன்; எல்லையற்ற கருணை நிறைந்தவன் ; எல்லோரையும் காப்பவன்; பெருங்கொடையாளன் ; மோக்ஷத்தை அளிப்பவன் ; ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டு மோக்ஷத்துக்குச் சென்றவர்களால் அநுபவிக்கப்படுமவன் ; பரம் - வ்யூஹம் - விபவம் - அந்தர்யாமி - அர்ச்சை என்னும் ஐவகைத் திருமேனிகளைக் கொண்டவன். இவன் திருமேனியைத் திவ்யமங்கள விக்ரஹமென வழங்குவர். இவன் திருமேனியை ஸேவித்தால் பாபங்களெல்லாம் ஒழியும். திருமேனி நெஞ்சிற் கொள்ள ஏற்றதாயுள்ளது. இத்தகைய பரமாத்மாவே பரதத்துவமெனப்படுகின்றான்.

### 2.2 அவர தத்த்வம்

தாழ்ந்த தத்துவம் - எம்பெருமானையன்றி மற்ற எல்லாப் பொருள்களும் தாழ்ந்த தத்துவமாகும் (அவரதத்துவம் = தாழ்ந்த

தத்துவம்) இந்த அவரதத்துவம் சேதநம் அசேதநம் என இருவகைப்படும்.

### 3. மூவகை சேதநம்

சேதநம் என்பது அறிவுடையனான ஜீவாத்மாவேயாகும். ஜீவனுடைய உருவம் மிகமிகச் சிறியதாதலின் அணுவெனப்படும். "நான்" என்று தோற்றும்போது அந்த "நான்" என்னும் சொல் ஜீவனையே காட்டுகின்றது. ஜீவனுக்கு ஒன்றை அறியும் தன்மை உண்டு. ஒரு செயலைச் செய்யும் தன்மை உண்டு. அதன் பயனை அநுபவிக்கும் தன்மை உண்டு. ஆனால் இந்த தன்மைகள் எல்லாம் அந்த ஜீவனுடைய முந்திய வினைகளுக்கு ஏற்றவாறு எம்பெருமான் அளித்தனவேயாகும்.

இந்த ஜீவாத்மா பத்தர் - முக்தர் - நித்யர் என்று மூவகைப்படுவான். i. பத்தர் - ஸம்ஸாரத்தில் கிடந்து உழலுமவர். ii. முக்தர் - ஸம்ஸாரபந்தம் நீங்கி மோக்ஷத்தை அடைந்தவர். iii. நித்யர் - எக்காலத்திலும் ஸம்ஸாரபந்தம் சிறிதும் இல்லாத நித்யஸூரிகள்

### 4. நால்வகை அசேதநம்

அசேதநம் - அறிவற்ற வஸ்து. இது i. த்ரிகுணம் ii. காலம் iii. சுத்தஸத்துவம் iv. தர்மபூதஜ்ஞாநம் என நால்வகைப்படும்.

**4.1** த்ரிகுணம் - மூன்று குணங்களுக்கு உறைவிடமானது இது ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களுக்கும் இருப்பிடமாகும். இது ப்ரக்ருதி - விக்ருதி என்ற இரு பிரிவுகளை அடையும். ப்ரக்ருதி - மற்றொன்றாக மாறும் வஸ்து. விக்ருதி - மற்றொன்றின் மாறுபாடாகப் பிறந்த வஸ்து. இந்தத் த்ரிகுணமே மூலப்பிரகிருதி எனப்படுகின்றது. பற்பல வஸ்துக்களாக மாறுபாட்டை அடையும் மூலப்பொருள் என்று அர்த்தம். இதுவும் உள்பட இருபத்து நான்கு தத்துவங்கள். இதுவே ஜீவர்களுக்குச் சரீரங்களாகவும் இந்த்ரியங்களாகவும் மாறுகின்றது. த்ரிகுணமென்னும் ப்ரக்ருதி இந்த மாறுபட்ட வடிவங்களில் நின்று ஜீவர்கள் எம்பெருமானுடைய ஸ்வரூபம் தன்மை முதலியவற்றை உள்ளவாறு அறிய முடியாமல் மறைத்து விடுகின்றது. இந்த ப்ரக்ருதி இவ்வாறு செய்வதெல்லாம் எம்பெருமானுக்கு லீலையாக ஆகி இன்பத்தை விளைவிக்கும்.

**4.2.** காலம் - இந்த வஸ்து, விநாடி - நாழிகை - முஹூர்த்தம் யாமம் - பகல் - இரவு - நாள் - பக்ஷம் - மாஸம் - ருது - அயநம் - வர்ஷம் என்றெல்லாம் பிரிவை அடைகின்றது. ஸகல கார்யங்களையும் செய்பவனான ஸர்வேச்வரன் ஸம்ஸார மண்டலத்தில் தான் செய்யும் கார்யங்களுக்கு இந்தக் காலமென்னும் வஸ்துவைத் துணையாகக் கொள்கின்றான்.

**4.3.** சுத்த ஸத்துவம் - முழுவதும் ஸத்துவ குணத்திற்கே உறைவிடமான வஸ்து. இதில் ரஜஸ் என்னும் குணமோ தமஸ் என்னும் குணமோ சிறிதும் இல்லை. இந்தச் சுத்த ஸத்துவமே எம்பெருமானுக்குத் திருமேனிகளாயுள்ளது. நித்ய ஸூரிகளுடையவும் முக்தர்களுடையவும் சரீரங்களும் இந்தச் சுத்த ஸத்துவத்தாலாகியவையே. ஸ்ரீவைகுண்டலோகத்திலுள்ள மண்டபங்கள் - கோபுரங்கள் - புஷ்கரிணி முதலிய ஸகல வஸ்துக்களும் இந்தச் சுத்த ஸத்துவத்தாலாகியவையே. இவ்வாறு சுத்த ஸத்துவம் பல்வகை உருக்களை எடுத்துக் கொண்டு விசித்திரமாயும் அநுபவிக்க இனியதாயுமுள்ளது.

**4.4.** தர்மபூதஜ்ஞாநம் - இது பரமாத்மாவிடமும் எல்லா ஜீவாத்மாக்களிடமும் உள்ள வஸ்து. இதுவே பரமாத்மாவுக்கும் ஜீவர்களுக்கும் தங்கள் ஆத்ம ஸ்வரூபத்தையும் மற்ற ஸகல வஸ்துக்களையும் காட்டக்கூடிய ஒரு த்ரவ்யமாகும். இந்த ஞானத்தாலேயே நாம் உலகில் உள்ள குடம் தூண் முதலிய ஸகல வஸ்துக்களையும் அறிகின்றோம்.

இந்தத் தர்மபூதஜ்ஞாநத்தின் வழியாகவே ஆத்மாக்களுக்கு ஒன்றை அறியும் தன்மையும் செயலைச் செய்யும் தன்மையும் பலனை அநுபவிக்கும் தன்மையும் வருகின்றன. அதாவது - இந்த ஜ்ஞாநத்தைக் கொண்டு ஒன்றை அறிகின்றான்; பின் செயலைச் செய்கின்றான்; பின் அதன் பலனை அநுபவிக்கின்றான்.

## 5. ஸம்ஸாரம் - மோக்ஷம் இவற்றிற்குக் காரணங்கள்

ஸம்ஸார மண்டலத்தில் உழலும் ஜீவாத்மா சாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட கர்மங்களைச் செய்தாலும், இம்மைப் பயன்களை விரும்பிக் காம்யங்களான கர்மங்களைச் செய்தாலும் அவை பின்னும் ஸம்ஸார பந்தத்தையே தரும். சேதநம் - அசேதநம் - ஈச்வரன் ஆகிய தத்துவங்களைப் பற்றி நன்கு அறிந்து மோக்ஷத்துக்கு வேண்டிய கர்மங்களைச் செய்தால் மோக்ஷம்

பெறலாம்.

### 6. மோக்ஷ - உபாயங்கள்

ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டுள்ள சேதநன் தனக்கு ஸம்ஸாரபந்தம் வந்ததற்குக் காரணமான முன்பு செய்த கர்மங்களைத் தொலைத்தால்தான் மோக்ஷம் பெறலாம். அதற்கு இரண்டே வழிகள் உண்டு. அவை பக்தியோகமும் ப்ரபத்தியும். அவ்விரண்டும் அந்தக் கர்மங்களுக்கெல்லாம் பிராயச்சித்தங்களாகும். சேதநன் அவ்விரண்டனுள் தன் தகுதிக்கு ஏற்ற ஒன்றைச் செய்தே தீர வேண்டும். பக்தியோகம் செய்பவன் அதைச் செய்யத் தொடங்கிய பின்பும், ப்ரபத்தி செய்பவன் அதைச் செய்து முடித்த பின்பும் தெரிந்து பாபங்களைச் செய்யக் கூடாது.

### 6.1 முக்கிய விஷயம்

இங்குக் கவனிக்க வேண்டிய விஷயம் - பக்தியோகம் செய்பவன் பலன் கொடுக்கத் தொடங்கிய தன் முந்திய கர்மங்களைப் பக்தியோகம் பூர்த்தியாகும் வரை அவற்றின் பலன்களை அநுபவித்தே கழிக்க வேண்டும். பக்தியோகம் பூர்த்தியானவுடன் அவனுக்கு மோக்ஷம் தானாகவே வந்துவிடும். ப்ரபத்தி செய்பவனோ பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்களில் சிலவற்றை ஏற்றுக் கொள்கின்றான். சிலவற்றை ப்ரபத்தியாலேயே கழித்து விடுகின்றான். அதாவது - ப்ரபத்திக்குப் பின் இந்தச் சரீரம் உள்ளவரையில் பலனைத் தரவல்ல கர்மங்களை மட்டும் ஏற்றுக் கொள்கின்றான். இவை அப்யுபகத ப்ராரப்தம் எனப்படும். அவற்றுக்குப் பலனை இந்தச் சரீரம் உள்ளவரை அநுபவித்தே தீர வேண்டும். இவன் அடுத்த பிறவி முதலியவற்றைக் கொடுக்கும் கர்மங்களை மட்டும் ஏற்றுக் கொள்வதில்லை. இவை அநப்யுபகத ப்ராரப்தம் எனப்படும். இவற்றைத் தான் செய்யும் ப்ரபத்தியாலேயே ஒழித்து விடுகின்றான். ஆகவே ப்ரபந்நன் பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்களுள் ஒரு பகுதியை அதன் பலனை அநுபவிப்பதாலும் மற்றொரு பகுதியை ப்ரபத்தியாலும் கழித்து விட்டுச் சரீர முடிவில் மோக்ஷம் பெறுகின்றான்.

தத்துவ பதவீ முற்றும்.

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 3. ரஹஸ்ய பதவீ

## 1. முன்னுரை

திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களின் உட்பொருளைக் கூறி வழிகாட்டுவதால் இப்பெயர் வந்தது.

வேதாந்த சாஸ்த்ரங்கள் தத்துவம் - ஹிதம் - புருஷார்த்தம் ஆகியவற்றை விளக்கிக் கூறுகின்றன. எதற்காக? நெடுங்காலமாக ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு உழலும் ஜீவாத்மாக்கள் அவற்றை அறிந்து நற்கதி பெறுவதற்காகத்தான். திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களும் அவற்றைச் சுருக்கமாய்க் காட்டும்.

## 2. திருமந்திரத்தின் பொருள்

### 2.1 திருமந்திரத்தின் அமைப்பு :

அவற்றுள் முதலாவதான திருமந்திரம் அறிய வேண்டிய அனைத்தையும் மிகச் சுருக்கமாய்க் காட்டும். இத் திருமந்திரம் எட்டு எழுத்துக்கள் கொண்டது; மூன்று சொற்களையுடையது.

### 2.2 ப்ரணவத்தின் பொருள் :

இவற்றுள் முதற்பதம் ப்ரணவம். இது மிகவும் ஸாரமான விஷயங்களைச் சுருக்கிக் காட்டும். ப்ரணவம் அ-உ-ம் என்ற மூன்று எழுத்துக்களையுடையது. இந்த மூன்று எழுத்துக்களும் மூன்று பதங்களாகவே உள்ளன. முதல் எழுத்தான 'அ' என்பது பிராட்டியைப் பிரியாத எம்பெருமானைக் கூறும். அவனைக் கூறும்போது அவனை எல்லா வஸ்துக்களுக்கும் காரணமாகவும் எல்லோரையும் காப்பவனாகவும் எப்பொழுதும் இயற்கையிலேயே அடியானாயிருக்கும் ஜீவனால் சிறப்புப் பெறுமவனாகவும் இந்த அகாரமே காட்டும்.

இந்த அகாரத்தின் மேல் நான்காம் வேற்றுமையுருபான 'ஆய' என்பது ஏறிப் பின் மறைந்துள்ளது. இந்த உருபு எம்பெருமானோடு ஜீவனுக்கு உள்ள ஸம்பந்தத்தைக் கூறுகின்றது. அந்த ஸம்பந்தம் யாது? எம்பெருமானுக்கு ஜீவன் அடியனாயிருத்தலேயாகும். நடு எழுத்தான உகாரம் அந்த

ஸம்பந்தம் வேறு ஒருவனைப் பற்றியதாகாத வரையறையைக் கூறுகின்றது. அதாவது - ஜீவன் எம்பெருமானையன்றி வேறொருவருக்கும் அடியனல்லன் என்று தேறுகின்றது. மூன்றாம் எழுத்தான மகாரம் (ம் என்பது) அந்த அடிமைத் தன்மைக்கு உறைவிடமான ஜீவாத்மாவைக் கூறும். அவ்வாறு கூறும்போது ஜீவன் எம்பெருமானால் காக்கப்படுமவன் என்றும், ஞானம் ஆனந்தம் இவற்றின் வடிவமாகவுள்ளவன் என்றும், அவ்விரண்டையும் குணமாகவும் கொண்டவனென்றும், அணுவாயிருப்பவனென்றும், சரீரம் இந்த்ரியம் முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனென்றும் கூறும். ஆகவே ப்ரணவத்தால் தேறும் கருத்து வருமாறு - ஜீவன் ஸ்ரீகாந்தனுக்கே அடியன்: வேறெருவர்க்கும் அடிமையாயிருக்கத் தகுதியுடையனல்லன் என்றதாயிற்று.

## 2.3 'நம' என்பதின் பொருள்

நம: என்பது திருமந்திரத்தின் நடுப்பதம். இது ந,ம: என்ற இரண்டு எழுத்தக்கள் கொண்டதாகும். ஒவ்வொர் எழுத்தும் பொருள் கொண்ட சொல்லாகவும் இருக்கும். இதனால் தேறும் பொருளாவது - 'எனக்கு நான் சேஷியாக மாட்டேன். யான் ஒரு செயலைச் செய்ய எம்பெருமானை எதிர்பாராத சுதந்திரமும் எனக்கு இல்லை' - என்பது. இப்படி எம் பெருமானுக்கு அடியேன் என்று கூறவே அவன் இவனைத் தன் இஷ்டப்படி பயன்படுத்தலாமாதலின் தன் அடியார்களுக்கும் அடியனாக்குகின்றான் என்று கூறியதாயிற்று. இவ்வாறு சேதநன் எப்பெருமானுடைய அடியார்களுக்கும் அடியனென்ற பொருள் வெளிப்படைச் சொல்லாலன்றிக் கருத்தால் கிடைக்கின்றது. 'நம' என்பதை ஒரே சொல்லாகக் கொள்வதும் உண்டு. அப்படியாயின் இச்சொல்லுக்குச் சரணாகதி பொருளாகும். ஆகவே அவன் திருவடிகளில் சரணாகதி செய்கிறேனென்று பொருள் கிடைக்கும். மேலும் ந,ம: என்று இரண்டு சொல்லாகக் கொண்டே 'எனக்கு நன்மையல்லாதது வரவேண்டா' மென்று பிரார்த்திப்பதாகவும் ஒரு பொருள் உண்டு. இவ்வாறு நம: என்பதற்கு மூன்று பொருள்களைக் கூறுவதில் அவனையன்றி வேறொருவர்க்கும் அடியனல்லன் என்பதால் தத்துவமும், சரணாகதியைக் கூறியதால் ஹிதமென்னும் உபாயமும், நன்மையல்லாததை மறுத்து வேண்டுவதால் புருஷார்த்தமென்னும் பயனும் கூறப்பட்டனவாயின.

## 2.4 'நாராயணாய' என்பதின் பொருள்

'நாராயணாய' என்பது திருமந்திரத்தின் மூன்றாவது

சொல்லாகும். இதில் உள்ள நாராயண என்ற சொல் பெரிய பிராட்டியோடு கூடிய எம்பெருமானைக் கூறும். இந்தச் சொல்லை இரண்டு வகையாகப் பிரித்துப் பொருள் கூறலாம். (1) நாரங்களுக்கு அயநமாயிருப்பவன், (2) நாரங்களைத் தனக்கு அயநமாகவுடையன். முதற்பொருளில் நாரம் = சேதநமும் அசேதநமும். அயநம் = அவற்றுக்கு இருப்பிடமானவன். ஆகவே ஸகல வஸ்துக்களுக்கும் ஆதாரமாயிருப்பவன் எம்பெருமான் என்று தேறும். இரண்டாம் பொருளில் நாரம் = சேதநமும் அசேதநமும். அயநம் = அவற்றை வாஸஸ்த்தாநமாகக் கொண்டவன். ஸகல வஸ்துக்களும் எம்பெருமான் உறைவதற்கு இடமாயுள்ளன. ஆகவே சேதந அசேதநங்கள் உள்ள இடத்தில் அவன் இல்லையென்று சொல்லவொண்ணாதபடி கலந்து நிற்பவன் எம்பெருமான் என்று தேறும்.

இந்த நாராயண சப்தத்திற்கு மேல் உள்ள 'ஆய' என்பது நான்காம் வேற்றுமையுருபு. இது சேஷத்வமென்னும் அடிமைத் தன்மையைக் கூறும். எம்பெருமானைப் பற்றிச் சேதநனுக்கு உள்ள இத்தன்மை ப்ரணவத்தாலேயே கூறப்பட்டு விட்டது. மறுபடியும் அதையே இங்குக் கூறுவதில் பயனில்லை. ஆதலின் அடிமைத் தன்மையின் விளைவான கைங்கர்யத்தைக் கூறுவதாகக் கொள்ள வேண்டும். அடிமையாயிருப்பவன் சேஷிக்குத் தொண்டு செய்து அவனுக்குச் சிறப்பை விளைவிப்பது இயற்கைதானே!

## 2.5 திருமந்திரத்தின் திரண்ட பொருள்

இந்தத் திருமந்திரத்தினின்று தேறும் முழுப்பொருள் வருமாறு - ஸ்ரீமந்நாராயணன் பிராட்டியை எப்பொழுதும் பிரியாதவன்: எல்லா வஸ்துக்களுக்கும் காரணமாயிருப்பவன்; எல்லோரையும் காப்பவன். இவனுக்கு ஜீவாத்மா இயற்கையாய் எப்பொழுதும் அடியனாயிருப்பவன். எம்பெருமானையன்றி வேறு எவனுக்கும் ஜீவன் அடிமையாக மாட்டான். ஆனால் பாகவதர்களுக்கு அடியனாயிருப்பவன். எம்பெருமானால் ஜீவன் காக்கப்படுமவன்; ஞானம் ஆநந்தம் இவற்றின் வடிவாய் நிற்பவன். இவ்விரண்டும் ஜீவனிடம் தனிப்பட்ட குணங்களாகவும் உள்ளன. ஜீவன் அணுவாக இருப்பவன். சரீரத்திலும் இந்த்ரியங்களினும் வேறுபட்டவன். ஜீவன் தனக்குத் தான் சேஷியாக மாட்டான். தன் காரியங்களைச் செய்யக்கூடச் சிறிதும் சுதந்திரமற்றவன். எம்பெருமானையே எதிர்பார்க்க வேண்டியவன். அவன் திருவடிகளில் சரணாகதியைச் செய்து மோக்ஷமாகிய பலனைப்

பிரார்த்திப்பவன். இத்தகை ஜீவன் ஸகல வஸ்துக்களுக்கும் ஆதாரமாய் எல்லாவற்றையும் நியமிப்பவனான ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளில் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் எல்லாக் கைங்கர்யங்களையும் தான் செய்ய வேண்டுமென்று பிரார்த்திப்பான்.

### 3. த்வயத்தின் பொருள்

### 3.1 த்வயத்தின் அமைப்பு

கீழே திருமந்திரம், தத்துவம் - ஹிதம் - புருஷார்த்தம் ஆகியவற்றைச் சுருக்கமாய்க் காட்டுவதாகக் கூறப்பட்டது. இம்மூன்றையும் த்வயமென்னும் ரஹஸ்யம் விளக்கமாய்க் கூறுகின்றது. இந்த த்வயம் இரண்டு பகுதிகளாய் நிற்கின்றது. முற்பகுதி தனி வாக்கியமாய் நின்று ப்ரபத்தியென்னும் உபாயத்தைக் கூறுகின்றது. பிற்பகுதி இரண்டு வாக்கியமாய் நின்று மோக்ஷமென்னும் பயனைக் கூறுகின்றது. ஒவ்வொரு பகுதியிலும் மூன்று மூன்று பதங்கள் உள்ளன.

### 3.2 முற்பகுதியின் பொருள்

முற்பகுதியில் முதற்பதம் ஸ்ரீமத் - நாராயண - சரணௌ என்று மூன்று சொற்கள் கொண்ட ஒரே தொடராயிருக்கும். ஸ்ரீ என்னும் சொல் எல்லாச் சேதநராலும் ஆச்ரயிக்கப்படுமவளாய் எம்பெருமானை அடைபவளாயுள்ள பெரிய பிராட்டியைக் கூறும். அதன்மேல் உள்ள 'மத்' என்னும் விகுதி அந்தப் பிராட்டி எம்பெருமானைக் கணப்பொழுதும் பிரியாது இருக்கும் நிலையைக் கூறுகின்றது. மேல் உள்ள நாராயண எனும் சொல் அடியார்களின் குற்றங்களைப் புறக்கணிக்கும் அன்பு - ஸ்வாமியாயிருத்தல் - தாழ்ந்தவனுடன் கலந்து பரிமாறுதல் - அடைதற்கு மிக எளியனாயிருத்தல் முதலிய குணங்களையுடையனான ஸர்வேச்வரனைக் கூறும். சரணௌ என்னும் சொல் அடியனாயிருப்பவன் ஈடுபடும் துறையான திருவடிகளைக் காட்டும். சரணமடைபவன் தலைவனுடைய திருவடிகளைப் பிடித்துக் கொண்டால்தானே அவனுக்கு இவனிடம் கருணை மேன்மேலும் வளரும்! சரணம் எனும் சொல் உபாயமாக என்று பொருள்படும். ப்ரபத்யே = அடைகின்றேன். பக்தியோகம் முதலிய கைம்முதல் இல்லாத சேதநனாந அடியேன் பிராட்டியைப் பிரியாத ரக்ஷகனான எம்பெருமான் திருவடிகளையே உபாயமாகப் பற்றி

மஹாவிச்வாஸம் முதலிய அங்கங்களுடன் கூடிய பரந்யாஸத்தைச் செய்கின்றேன் என்று முற்பகுதியின் பொருள் தேறியது.

### 3.3 பிற்பகுதியின் பொருள்

பிற்பகுதியில் 'ஸ்ரீமதே' என்னும் முதற்சொல் பிராட்டியைப் பிரியாதவனான என்ற பொருளைத் தரும். முற்பகுதியில் சரணமடையும்போது உபாயமாய் நின்ற நாராயணனே பிற்பகுதியில் சேதநன் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்பவனாயப் பலனாகவும் ஆகின்றான். எப்பொழுதும் பெரிய பிராட்டியைப் பிரியாதிருக்கின்றான்.

இப்பகுதியில் உள்ள நாராயண என்னும் சொல் குணம் - திருமேனி முதலிய ஸகல அம்சங்களுடன் கூடியவனாய் எல்லையற்ற இனிமையையுடையனாய் எல்லோருக்கும் சேஷியான எம்பெருமானைக் கூறுகின்றது.

நாராயண என்னும் சொல்லுக்கு மேல் உள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபுக்குக் கைங்கர்யம் என்ற அர்த்தத்தைக் கொள்ள வேண்டும். திருமந்திரத்தில் உள்ள இதே உருபுக்கு இவ்வர்த்தத்தைத்தானே கொண்டுள்ளோம்! அவ்வாறே இங்கும் அவனுடைய கைங்கர்யத்தைப் பிரார்த்திப்பதாகக் கருத்தைக் கொள்ள வேண்டும்.

மேல் உள்ள 'நம:' என்னும் சொல் ந,ம: என்று இரண்டு சொற்களாகப் பிரிந்து இந்தக் கைங்கர்யத்துக்குத் தடையாயிருந்த எல்லாக் கருமங்களும் கழிவதைக் கூறும்.

### 3.4 த்வயத்தின் திரண்ட பொருள் :

பெரிய பிராட்டியைக் கணமும் பிரியாத நாராயணன் திருவடிகளில் குற்றம் கலவாத நித்ய கைங்கர்யம் செய்வதற்காகப் பெரிய பிராட்டியுடன் கூடிய நாராயணன் திருவடிகள் இரண்டையும் சரணமாக அடைகின்றேன் - என்றதுவேயாகும்.

## 4. சரம சுலோகத்தின் பொருள்

### 4.1 சரம சுலோகத்தின் அமைப்பு :

கீழே திருமந்திரமும் த்வயமும் சரணாகதி என்னும் உபாயத்தை நன்கு வெளியிடுவதாய்க் கூறப்பட்டது. அந்த ப்ரபத்தியையே இந்தச் சரமசுலோகம் 'நீ செய்' என்று விதிப்பதாயுள்ளது. இது பக்தியோகம் முதலிய

கைம்முதலில்லாமையே ப்ரபத்தி செய்வதற்குத் தகுதியாகு மென்பதைக் காட்டுகின்றது. மேலும் ப்ரபத்தி, தான் பலனைக் கொடுப்பதற்கு வேறொன்றையும் எதிர்பாராது ஸ்வதந்த்ரமாய் நிற்கும் தன்மை முதலியவற்றைத் தெளிவிப்பதோடு இச் சரமசுலோகம் வேதம் கூறிய சரணாகதியையும் நன்கு விளக்குகின்றது. திருமந்திரம் மூன்று பதங்கள் கொண்டிருப்பது போலவும், த்வயம் அவற்றின் இருமடங்கான ஆறு பதங்கள் கொண்டிருப்பது போலவும் சரம சுலோகம் அவற்றினும் இரு மடங்கான பன்னிரண்டு பதங்கள் கொண்டதாய் மூன்று வாக்யங்கள் கொண்டதாயுள்ளது. இப்படி மூன்று ரஹஸ்யங்களும் அடுத்தடுத்து இரட்டித்த பதங்கள் கொண்டனவாய் முந்திய ரஹஸ்யத்துக்குப் பிந்திய ரஹஸ்யம் விளக்கம் தருவதாயிருக்கும்.

### 4.2 முற்பாதியின் பொருள்

இந்தச் சரம சுலோகத்தில் முற்பாதி முழுதும் ஒரு வாக்யமாயுள்ளது. இந்த முதல் வாக்கியம் 'ப்ரபத்தியைச் செய்' என்று சேதநனை நோக்கி விதிக்கின்றது. 'அஹம்' தொடங்கி 'மோக்ஷயிஷ்யாமி' வரை உள்ள நடுவாக்கியம் அந்த ப்ரபத்தியின் பலனை விளக்குகின்றது. அடுத்ததும் கடைசியுமான 'மாசுச:' என்னும் வாக்கியம் சேதநன் செய்ய வேண்டிய கார்யத்தைச் செய்து முடித்ததையும் இனித் தனக்குப் பொறுப்பு இல்லாமையயும் மற்றும் சில அம்சங்களையும் காட்டுகின்றது.

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய = எல்லாத் தருமங்களையும் விட்டு, இந்த இரண்டு சொற்களுக்கும் எல்லாத் தருமங்களையும் விட்டு (இருக்கின்ற நீ) என்ற வரையில் பொருள் தேறும். இதனால் சேதநன் தான் விரும்பும் பலனுக்கு அவன் திருவடிகளில் ப்ரபத்தியையன்றி வேறு உபாயம் எதையும் செய்ய முடியாதிருக்கும் நிலையைக் காட்டும். இவ்வாறு இருப்பது தானே ப்ரபத்தியைச் செய்யத் தகுதியாகின்றது! இந்த இரண்டு சொற்களுக்கும் வேறொரு பொருளும் உண்டு. 'எல்லாத் தருமங்களையும் விட்டு (ப்ரபத்தியைச் செய்) என்று விதிப்பதால் ப்ரபத்தி (தனக்கு ஏற்பட்ட ஐந்து அங்கங்களைத் தவிர) வேறென்றையும் எதிர்பாராதது என்பதைக் காட்டுவதாகவும் கூறலாம்.

மாம் ஏகம் = என்னை ஒருவனையே இந்த இரண்டு சொற்களும் எளிமை - கருணை முதலிய திருக்கல்யாண குணங்களுடன் கூடியவனாய், முக்கியமான உபாயமாய், பலன்

தருதற்கு இந்த ப்ரபத்தி தவிர வேறொன்றையும் எதிர்பாராதவனாய், எல்லாப் பலனையும் அளிப்பவனாயுள்ள எம்பெருமானாகிய ஸித்தோபாயத்தைக் காட்டும்.

சரணம் வ்ரஜ = உபாயமாக அடைவாயாக. இந்த இரண்டு சொற்களும் மஹாவிச்வாஸம் முதலிய அங்கங்களுடன் கூடிய பரந்யாஸத்தைச் செய்யுமாறு விதிக்கின்றது.

### 4.3 பிற்பாதியின் பொருள்

அஹம் = நான். இச்சொல் சேதநன் செய்த ப்ரபத்தியால் அவனைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவனாய் எதையும் தடையின்றிச் செய்யும் சக்தியையுடையனான எம்பெருமானைக் கூறுகின்றது.

த்வா - உன்னை. இச்சொல் எம்பெருமானிடம் தன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்து மழையையே எதிர்பார்க்கும் சாதகப் பறவைபோல் தான் விரும்பிய பலனுக்கு அவன் கையையே எதிர்பார்த்து நிற்கும் சேதநனைக் கூறுகின்றது.

ஸர்வபாபேப்ய : மோக்ஷயிஷ்யாமி = எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பேன். இந்த இரண்டு சொற்களும் சேதநன் பரமபதத்தில் நித்ய கைங்கர்யங்களைச் செய்ய இதுவரை தடையாய் நின்ற எல்லாப் பாபங்களினின்றும் சிறிதும் மீதி வைக்காமல் விடுவிப்பேன் என்ற கருத்தைக் கூறுவனவாகும்.

மா சுச : = வருந்தாதிரு. இந்த இரண்டு பதங்களும் சேதநன் ப்ரபத்தி செய்வதற்குமுன் புகலற்று மனம் தடும்பி நின்ற நிலையைக் கழித்து இப்பொழுது ப்ரபத்தி செய்து விட்டபடியால் இனிப் பலனில் ஸந்தேஹம் - பொறுப்பு - அச்சம் இவை நீங்கிக் கவலையற்று நிற்க வேண்டிய நிலையைக் கூறும்.

### 5. த்வயம் சரமச்லோகம் இவற்றின் பொருள் பொருத்தம்

ஆகவே இவ்வாறு அர்த்தங்களை நோக்கும் போது த்வயத்தின் முற்பகுதிக்குச் சரமச்லோகத்தின் முற்பாதியும், பிற்பகுதிக்குப் பிற்பாதியும் பொருள் பொருத்த முடையனவாயிருப்பதையும் கண்டறியலாம்.

ஸ்ரீ ரஹஸ்யபதவீ முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 4. தத்த்வ நவநீதம்

சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களைப் பற்றி அறிய வேண்டிய அம்சங்களை இந்த ரஹஸ்யம் வெண்ணெய்போல் திரட்டிக் கொடுப்பதால் இப்பெயர் வந்திருக்கலாம்.

முமுக்ஷு அறிய வேண்டிய சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்று மூன்று தத்துவங்களையும் முறையே போக்தா - போக்யம் - ப்ரேரிதா என்று உபநிஷத்துக் கூறுதல்.

வடமொழி வேதம் அருளிச் செயலெனப்படும் தமிழ்மறை - மநுஸ்ம்ருதி முதலிய ஸ்ம்ருதிகள் பாரதம் ராமாயணம் என்னும் இதிஹாஸங்கள் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய புராணங்கள் ஆகிய இவ்வனைத்தும் சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களை விளக்கிக் கூறுகின்றன. சேதநன் இத் தத்துவங்களைப் பற்றித் தெளிவான அறிவைப் பெற்றால்தான் மோக்ஷம் பெறுதற்குச் சாதனத்தைச் செய்ய வாய்ப்பு ஏற்படும். ஆதலின் மோக்ஷம் பெற விரும்புமவன் இந்த மூன்று தத்துவங்களையும் தெளிவாய் அவசியம் அறிந்தேயாக வேண்டும்.

உபநிஷத்து ஜீவாத்மாவைப் போக்தா (அநுபவிப்பவன்) என்றும், அசேதநத்தைப் போக்யம் (அநுபவிக்கப்படும் வஸ்து) என்றும், ஈச்வரனை ப்ரேரிதா (ஏவுமவன்) என்றும் கூறியுள்ளது. ஜீவாத்மா பலன்களை அநுபவிப்பவனாதலின் போக்தாவாக ஆகின்றான். அறிவற்ற அசேதநப்பொருள் பிறருடைய அநுபவத்திற்காகவே இருப்பதாலின் போக்யமெனப்படுகின்றது. எம்பெருமான், சேதநம் - அசேதநம் இவற்றில் கலந்து அவற்றைத் தான் இட்ட வழக்கமாகக் கொண்டு அவற்றை ஏவுமவனாக உள்ளமையால் ப்ரேரிதா எனப்படுகின்றான்.

## 2. போக்தா

### 2.1 ஜீவனுடைய போக்த்ருத்வம் - கர்த்ருத்வம் - சேதநத்வம் பற்றிய விளக்கம்

ஒரு கேள்வி - எம்பெருமானும் போகங்களை அநுபவிப்ப வனாக உள்ளானே! ஜீவனை மட்டும் பிரித்து அநுபவிப்பவன் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? இவ்வாறே ஏவும் தன்மை பிறரை ஒரு செயலில் ஏவும் ஜீவனுக்கும் உண்டே! ஈச்வரனை மட்டும் ஏவுமவன் என்று கூறியது எவ்வாறு பொருந்தும்? என்று

விடை - இங்கு அநுபவம் என்பது எம்பெருமானது ஸங்கல்பத்தாலே வரும் அநுபவமாகும். இதுவே பராதீநமான அநுபவம் எனப்படும். இது எம்பெருமானுக்கு இல்லை. ஆகவே போகம் என்னும் சொல் பிறரால் வரும் போகத்தையே கூறுவதால் இது எம்பெருமானுக்கு வருவதற்கில்லை. ஜீவனுக்கே உண்டு. இவ்வாறே ஏவுமவன் என்று எம்பெருமானுக்குப் பிரித்துக் கூறியுள்ளது. இந்த ஏவுதல் ஸகல வஸ்துக்களையும் நியமித்தலேயாகும். இத்தன்மை ஈசுவரனுக்கே உண்டு. ஜீவனுக்கு இல்லை. ஆதலின் ஜீவனை மட்டும் போக்தா என்றும், ஈச்வரனை மட்டும் ப்ரேரிதா என்றும் கூறியது மிகப் பொருந்தும்.

இங்ஙனமே ஜீவனைப் பற்றிக் கர்த்தா (செயல் புரிபவன்) என்று வரும் இடங்களிலெல்லாம் எம்பெருமானால் வரும் செயலைப் புரியும் ஜீவனையே கூறுவதாகக் கொள்ள வேண்டும்.

இவ்வாறே சேதநன் (அறிவுடையன்) என்று பொருள்படும் சித் என்னும் சொல்லால் ஜீவனைச் சொல்லுமிடங்களிலெல்லாம் ஈசுவரன் கொடுத்த அறிவையுடையவன் என்ற பொருளைக் கொள்ள வேண்டும். ஜீவனுடைய ஸ்வரூபம் - ஜ்ஞாநம் - ஆநந்தம் முதலிய அனைத்தும் எம்பெருமானால் வருபவை தாமே!

**2.2 மூவகைச் சேதநர்?**

சேதந வகுப்பினர் பத்தர், முக்தர், நித்யர் என மூவகைப்படுவர்.

**2.2.1** பத்தர் - ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு உழல்பவர். ஜீவர்கள் அநாதிகாலமாகக் கணக்கற்ற பாபங்களைச் செய்கின்றனர். இக்கர்மங்களால் பிறவியெடுக்கின்றனர். பிறந்ததால் பின்னும் கர்மங்களைச் செய்கின்றனர். ஆகவே கர்மங்களால் பிறவிகள் - பிறவிகளால் கர்மங்கள் என்று மாறி மாறி வருவதால் எது முதலில் உள்ளது என்று கூறமுடியாது.

விதையால் முளை உண்டாகின்றது. முளை பழமாகி அதினின்று விதை வருகின்றது. எது முதலில் உள்ளது என்று கூற முடியுமா? முடியாது. அங்ஙனமேதான் இங்கும். இப்படி அநாதியான கர்ம வெள்ளத்தால் அழியாத பெரிய பாழ்நிலம் போன்ற ப்ரக்ருதியென்னும் சிறைக்கூடத்தில் ஜீவர்கள் அகப்பட்டுக் கிடக்கின்றனர். ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களும் ஒன்று கூடி முப்பிரியான பாசம் போல் நின்று இவர்களைப் பிணித்து நிற்கின்றன. இப்படி ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு அதனின்று மீள வழியறியாமல் கிடப்பவர்களே பத்தரெனப்படுவர்.

**2.2.2** முக்தர் - ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டு முக்தி பெற்றவர்கள். முற்கூறிய பத்தர்களில் சிலர் ஆசார்யர்களின் உபதேசத்தால் விவேகத்தைப் பெற்று மோக்ஷத்தைப் பற்றி விளக்கும் சாஸ்த்ரங்களில் விதித்த பக்தி - ப்ரபத்தி என்னும் இரண்டனுள் ஒன்றைச் செய்வார்கள். அதனால் இவர்களிடம் எம்பெருமானுக்கு இருந்த சீற்றம் நீங்கிவிடும். பின் இவர்களுக்கு மோக்ஷம் கொடுக்க ஸங்கல்பித்து விடுவான். இவர்களின் சரீரம் நீங்கியதும் அவன் இவர்களைத் தன் முன்னே அழைத்து நித்யஸூரிகளைப் போல் கைங்கர்யங்களைச் செய்யும்படி செய்து அவற்றை ஏற்றுக் கொள்வான். இந்தப் பாக்யம் பெற்றவர்களே முக்தரெனப்படுவர்.

**2.2.3** நித்யர்கள் = நித்ய ஸூரிகள். இவர்கள் ஸம்ஸார பந்தத்தின் வாஸனையே எந்நாளும் இன்றி எம்பெருமானை நித்யமாய் அநுபவித்துக் கொண்டு இடைவிடாது எப்பொழுதும் கைங்கர்யம் செய்பவர்கள். திருவனந்தாழ்வான், பெரிய திருவடி, ஸேனை முதலியார் முதலியவர்கள் இவ்வகுப்பில் முதன்மையானவர்கள்.

### 3. போக்யம்

அசேதநம் = அறிவற்ற வஸ்து. இதைத்தான் போக்யம் என்று உபநிடதம் கூறுகின்றது. போக்யம் = அநுபவிக்கப்படும் வஸ்து. இது பிறருடைய பயனுக்காகவே இருந்து பிறரால் அநுபவிக்கப் படுவாதல் போக்யம் என வழங்குவது பொருத்தமே.

i. ஒரு கேள்வி - ஜீவனும் ஈச்வரனும் கூட அநுபவிக்கப்படும்

வஸ்துவாகத் தானே உள்ளனர். ஜீவாத்மா தன்னையும் எம்பெருமானையும் அநுபவிப்பதில்லையா? எம்பெருமானும் ஜீவர்களுடன் சேர்த்துத் தன்னையும் அநுபவிப்பது உண்டே? இங்ஙன் இருக்க அசேதநத்தை மட்டும் குறிப்பிட்டு அநுபவிக்கப்படும். வஸ்துவாகக் கூறுவதன் கருத்து என்ன?

விடை - உபநிஷத்து இதற்கு முந்திய பதமாகிய போக்தா என்பதால் அநுபவிப்பவனாகிய ஜீவனையும் பிந்திய பதமாகிய ப்ரேரிதா என்பதால் எல்லோரையும் ஏவுபவனாகிய ஈசுவரனையும் சொல்லிற்று. நடுப்பதமாகிய போக்யம் என்ற இச்சொல்லால் முன்னும் பின்னும் கூறிய அநுபவித்தல் - ஏவுதல் ஆகிய இரண்டு தன்மைகளும் இல்லாத அநுபவிக்கப்படும் தன்மையை மட்டும் உடைய அசேதநத்தையே இங்குக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

ii. மற்றொரு கேள்வி - ஜீவனிடம் உள்ள குணங்களும் தர்ம பூதஜ்ஞாநமும் அறிவற்றவை தாமே? இவற்றை ஏன் அசேதநப் பொருளில் சேர்க்கவில்லை? மூன்றுதாமே அசேதநமாகக் குறிக்கப்பட்டுள்ளன.

விடை - பூர்வாசார்யர்கள் ப்ரக்ருதி - காலம் - சுத்த ஸத்த்வம் ஆகிய மூன்று த்ரவ்யங்களையே மூன்று அசேதநங்களாகப் பிரித்துக் கூறியுள்ளனர். ஆதலால் அம்முறையே தழுவப்படுகின்றது.

### 3.1 மூவகை அசேதநம்

அசேதநம் த்ரிகுணம் - காலம் - சுத்த ஸத்த்வம் என மூன்று வகைப்படும்.

**3.1.1** த்ரிகுணம் - மூலப்ரக்ருதியே த்ரிகுணமெனப்படும். இது ஸத்த்வம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களுக்கும் உறைவிடமாயுள்ளது பற்றி த்ரிகுணமெனப்படுகின்றது. இதில் உள்ள ஸத்த்வகுணம் சேதநர்க்கு அற்பமான ஸுகத்தைத் தரும். ரஜோ குணம் துன்பத்தைத் தரும். தமோ குணம் அஜ்ஞானத்தை விளைவிக்கும். இந்த ப்ரக்ருதி கேவல ப்ரக்ருதி - ப்ரக்ருதி விக்ருதி - கேவல விக்ருதி என்று மூன்று வகைப்படும்.

i. கேவல ப்ரக்ருதி - தான் பிற பொருளினின்று தோன்றாமல் தான் பிற பொருள்களாக மாறுபடும் தன்மையது. மூலப்ரக்ருதி ஒன்றே இத்தகையதாகும். ii. ப்ரக்ருதி விக்ருதி - தான் பிற பொருளினின்று தோன்றியும் தான் பிற பொருளாக மாறுவதாகவும் உள்ள வஸ்துக்கள். மஹாந் - அஹங்காரம் - ஐந்து தந்மாத்ரங்கள் ஆகியவை வகுப்பில் சேருவன. iii. கேவல விக்ருதி - தான் வேறு பொருளினின்று தோன்றி வேறு பொருளாகத் தான் மாறாத வஸ்து. பஞ்ச பூதங்களும் பதினோரிந்திரியங்களும் இவ்வகுப்பில் சேருவன. இவ்வாறு மூன்று வகையாக உள்ள தத்துவங்கள் இருபத்து நான்காகும்.

இந்த ப்ரக்ருதி எப்பொழுதும் மற்றொரு வஸ்துவாக மாறிக் கொண்டேயிருக்கும் தன்மையுடையது. ஆதலின் இதனால் பல மாறுபாடுகள் உண்டாகின்றன. பஞ்ச பூதங்களையும் ஒன்று சேர்த்துப் பஞ்சீகரணம் செய்வதால் பல பொருள்கள் தோன்றுகின்றன. பஞ்சீகரணமாவது - பூமி - ஜலம் - தேஜஸ் - வாயு - ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டு பாதிகளாக்கி ஒரு பாதியையும் மற்ற பூதங்களில் அரைக்கால் அரைக்கால் பாகங்களையும் சேர்த்துக் கொண்டு வஸ்துக்களைப் படைத்தல். இவ்வாறு பல்வேறு இடங்களிலும் பல்வேறு ஸமயங்களிலும் உண்டாகும் மாறுபாட்டுக்கு எல்லையே இல்லை.

***3.1.2.*** காலம் - இது ஜடமான வஸ்து. இது தானே புலப்படாது. ஞானத்தால் தான் இதை அறிய வேணண்டும். இது பரவாத இடமே இல்லை. ஆதலால் இது விபு என்று கூறப்படும். மனிதனைச் சிறுவன் - முதியன் என்றெல்லாம் சொல்லும் வரையறைகளுக்கு இந்தக் காலமே முக்கிய காரணமாகும். இது எங்கும் பரவிய ஒரே வஸ்துவாயிருப்பினும் விநாடி - நாழிகை - முகூர்த்தம் - யாமம் - நாள் - மாதம் - ஆண்டு - பகல் - இரவு முதலிய பல உட்பிரிவுகள் இதற்கு உண்டு. இவற்றைக் கொண்டு தான் வஸ்துக்களை இறந்த காலத்தியவை - வருங்காலத்தியவை - நிகழ்காலத்தியவை என்றெல்லாம் வழங்குகின்றோம். இதற்கு ஸத்த்வம் - ரஜஸ் - தமஸ் ஆகிய மூக்குணங்களும் கிடையா. ஆயினும் உலகில் நல்லபொழுதை ஸாத்துவிக காலமென்றும், சற்று இழிவான காலத்தை ராஜஸ காலமென்றும், மிகத் தாழ்ந்த வேளையைத் தாமஸ காலமென்றும் வழங்குவதுண்டு. இதற்கு அக்குணங்கள்

இல்லாவிடினும் அவ்வாறு வழங்குவதற்குக் காரணம் அவ்வப்போது உள்ள வஸ்துக்களில் அந்த அந்தக் குணம் இருப்பதால் அதைக் கொண்டு காலத்தில் அக்குணங்களை ஏற்றி அவ்வாறு வழக்கு வந்துள்ளது. காலத்தில் குளிர்ச்சி - வெப்பம் முதலிய தன்மைகள் இல்லாவிடினும் வஸ்துக்களுக்கு ஏற்படும் தன்மைகளைக் கொண்டு குளிர்காலம் உஷ்ணகாலம் என்றெல்லாம் வழங்கவில்லையா? இங்கும் அவ்வாறுதான். பிரமனது வாழ்வில் ஒரு நாள் தொடங்கி மனிதனது வாழ்வில் ஒரு நாள் வரை காலத்துக்கு முற்கூறிய பிரிவுகளெல்லாம் உண்டு. ஆனால் சுத்த ஸத்துவமயமேயான ஸ்ரீ வைகுண்ட லோகத்தில் மட்டும் காலத்துக்கு இவ்வாறு நாள் - மாதம் - ஆண்டு முதலிய பிரிவுகள் கிடையா. அங்கு முன்பு - பின்பு என்ற பிரிவுகள் மட்டுமே உண்டு.

*3.1.3.* சுத்த ஸத்துவம் - இது உலகிலுள்ள ஸத்துவம் போன்றதன்றி மிகவும் வேறுபட்ட அற்புதமான ஸத்துவ குணத்துக்கு உறைவிடமான வஸ்து. உலகிலுள்ள ஸத்துவ குணம் மற்ற ரஜோகுணம் - தமோகுணம் இவற்றுடன் கலந்தேயிருக்கும். இந்த ஸத்துவகுணம் மற்ற குணத்தின் கலப்பின்றித் தூய்மையான ஸத்துவமாகவே இருக்கும். இக்குணத்துக்கு இருப்பிடமான வஸ்துவும் சுத்த ஸத்துவம் என்றே வழங்கும். இந்த வஸ்து ஸ்ரீவைகுண்டத்தில் திருமேனி - தேவியர் - பரிவாரம் முதலியனவற்றோடு கூடிநிற்கும் ச்ரிய : பதியான எம்பெருமானுக்குப் பயன்படும் ஸகல வஸ்துக்களாகவும் மாறுபாட்டை அடைகின்றது. அதாவது - அநுபவிக்கப்படும் வஸ்துக்களான சந்தனம் புஷ்பம் முதலியனவாகவும், அனுபவிப்பதற்குக் கருவிகளான குடை, சாமரம் முதலியனவாகவும், அநுபவிப்பதற்கு இடமான மண்டபம் கோபுரம் முதலிய வஸ்துக்களாகவும் இந்தச் சுத்த ஸத்துவமே மாறுபாட்டை அடைகின்றது. ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள ஸகல வஸ்துக்களும் இதன் மாறுபாடுகளேயாகும். இப்படி சுத்த ஸத்துவமயமான ஸ்ரீவைகுண்டலோகம் எல்லையற்ற வியப்பை விளைவிக்கும். அவ்வுலகம் அளவிட்டுக் கூற முடியாத அனுகூலத்தன்மை உடையது. அதன் உயர்வை ஆராயும் போது பிரமன், இந்திரன் முதலியவர்களின் ஸதாநங்களெல்லாம் நரகமென்றே தோன்றும். இப்படி ஒப்பற்ற அநுகூலத் தன்மையுடைய தாயிருப்பதால் பரமபதம் என்ற சொல்லாலே வழங்கப் பெறுகின்றது. (பரம = தன்னைக் காட்டிலும் உயர்ந்ததை இருக்கப்பெறாத. பதம் = ஸ்தாநம்)

4. ப்ரேரிதா

ப்ரேரிதா = ஏவுமவன், ஸர்வேச்வரனே. மூன்று வகைப் பட்ட ஜீவர்கள், மூன்று வகைப்பட்ட அசேதநங்கள் ஆகிய அனைத்தினுடையவும் ஸ்வரூபம் - நிலைத்து நிற்றல் - செயல் ஆகிய அனைத்தும் இந்த ஸர்வேச்வரன் இட்ட வழக்காக நடப்பன. அதனாலேயே அவனை ஏவுமவன் என்று உபநிடதம் கூறியது.

எம்பெருமான் இந்தச் சேதந - அசேதநங்களின் விஷயத்தில் மூன்று வகையான ஸம்பந்தமுடையன். அதாவது - இவற்றையெல்லாம் எப்பொழுதும் தாங்கி நிற்பவன் அவனே. அவற்றிலே கலந்து தன் ஸங்கல்பத்தால் எப்பொழுதும் நியமித்துக் கொண்டிருப்பவனும் அவனே. அவற்றால் வரும் பயனை எப்பொழுதும் நுகருமவனும் அவனே. இவ்வாறு என்றும் மூன்று வகை ஸம்பந்தமுடையனாதலின் எம்பெருமான் அவற்றைத் தனக்குச் சரீரமாகக் கொண்டு தான் ஆத்மாவாயுள்ளான்.

இவ்வெம்பெருமான் மூன்று விசேஷ காரியங்களைச் செய்கின்றான். அவையாவன - i. ஸூக்ஷ்மமாயுள்ள சேதந - அசேதநங்களைச் சரீரமாகக் கொண்டு நிற்கின்றான். ii. பல பொருள்களாக ஆகக்கடவேன் என்று ஸங்கல்பிக்கின்றான் iii. அவ்வாறே பல காரியப் பொருள்களாக ஆகின்றான். இந்த மூவகைச் செயல்களால் எல்லாக் காரியப் பொருள்களுக்கும் எல்லாக் காரணமாகவும் ஆகின்றான். அதாவது - காரணம் உபாதாநகாரணம் - நிமித்த காரணம் என இருவகைப்படும். குடத்துக்கு மண்கட்டி (பிண்டம்) உபாதாந காரணம். மண்கட்டி தானே குடமாக மாறுகின்றது! குயவன், சக்கரம் முதலியன நிமித்த காரணமாகும். குயவன் சக்கரத்தில் சுற்ற வைத்துக் குடத்தைச் செய்கின்றான். ஆதலால் அவ்விரண்டும் நிமித்த காரணமாகும். இங்குச் சேதநம் அசேதநம் ஆகிய ப்ரபஞ்சம் முழுதும் எம்பெருமானுக்குச் சரீரமாயுள்ளது. ஓர் அசேதநம் மற்றொன்றாக மாறுகின்றது. நித்யனான சேதநனது ஸ்வரூபம் மாறாவிடினும் அவன் தன்மைகள் மாறுவன. ஆகவே இவற்றின் மாறுதலால் இவற்றைச் சரீரமாகவுடையனான எம்பெருமானே மாறுபாடு அடைவதாக ஆகின்றது. ஆகவே எம்பெருமான் எல்லாக்காரியப் பொருள்களுக்கும் சரீரத்தின் வாயிலாக உபதாந காரணமாகின்றான். அவ்வாறு பல்வேறு பொருள்களாக மாறக்

கடவேன் என்று ஸங்கல்பிப்பதால் எம்பெருமான் நிமித்த காரணமாகவும் ஆகின்றான்.

மேலும் எதிர்காலம், நிகழ்காலம், இறந்தகாலம் ஆகிய மூன்று காலங்களிலும் சிறிதும் மாறாத - ஒரே வகையான பரவாஸுதேவத் திருமேனி, ஆத்மஸ்வரூபம் இவற்றையுடையனாயுள்ளான் ஸர்வேசுவரன்.

ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், ஸூர்யமண்டலம் ஆகிய மூன்று இடங்களிலும் எப்பொழுதும் உறைகின்றான்.

ஸ்வயம் வ்யக்தம் - ஸைத்தம் - மாநுஷம் என்ற மூன்று வகை அர்ச்சைத் திருமேனிகளுடன் அவதாரம் செய்பவன். (ஸ்வயம் வ்யக்தம் = எம்பெருமான் தானாகவே ஸ்ரீரங்கம் முதலிய தலங்களில் கொண்டுள்ள திருமேனி, ஸைத்தம் = தேவர்கள் ஸித்தர்கள் முதலியோரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட திருமேனி. மாநுஷம் = மனிதர்களால் தாங்கள் வழிபடுவதற்காகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட திருமேனி)

இவன் கிருதயுகம் - த்ரேதாயுகம் - த்வாபரயுகம் ஆகிய மூன்று யுகங்களில் மட்டுமே தன் பெருமை முதலியவற்றை வெளிக்குக் காட்டிச் சிறப்பாய் விளங்குவான். பாவிகள் மலிந்த கலியுகத்தில் தன் தன்மைகளை வெளிக்கு விரிவாய்க் காட்டமாட்டான்.

இவன் இரண்டு இரண்டாக மூன்று இரட்டைக் குணங்களாக மூன்று வடிவில் ஆறு குணங்களையுடையன். அதாவது - ஜ்ஞாநம், ஐச்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் ஆகிய மூன்று இரட்டைக் குணங்கலும் அவனுடைய ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் என்ற மூன்று வடிவங்களிலும் வெளிப்படுகின்றன. இவனுக்கு மூன்று வ்யூஹ வடிவங்களிலும் அதற்கேற்ற மூன்று இரட்டைத் தொழில்களும் உண்டு. அவையாவன - ஸங்கர்ஷணனாய் நின்று சாஸ்த்ரங்களைப் படைத்து உலகை அழிக்கன்றான்; ப்ரத்யும்நனாய் நின்று உலகத்தைப் படைத்து மக்களுக்குத் தர்மத்தை நடத்துகின்றான்; அநிருத்தனாய் நின்று உலகத்தைக் காத்துத் தத்துவ அறிவை மக்களுக்கு உண்டாக்குகின்றான். இங்ஙனம் மூன்று இரட்டைச் செயல்கள் நடைபெறுகின்றன.

ஐச்வர்யம், கைவல்யம், மோக்ஷம் என்று மூன்று பலன்கள் உண்டு. இம்மூன்றையும் அவரவர் விருப்பத்துக்கேற்றவாறு அளிப்பவன் எம்பெருமானே.

உலகில் வஸ்துவை அறிவதற்கு மூன்று ப்ரமாணங்கள் உண்டு. அவை ப்ரத்யக்ஷம், அநுமாநம், சப்தம் என்பன. ப்ரத்யக்ஷம் = இந்திரியங்கள். அநுமாநம் = தீ இருப்பதாக ஊஹித்தறிதற்கு ப்ரமாணமான புகை முதலியன. சப்தம் = வேதம் முதலியன. இந்த மூவகை ப்ரமாணங்களாலும் எப்பெருமானை இல்லை என்று மறுக்க முடியாது.

ப்ரணவத்துக்கு ஸ்வரம் உண்டு. அதற்கு மாத்திரை மூன்று. இத்தகைய ப்ரணவம் எம்பெருமானையே முக்கியமாய் வைத்துப் பொருள் கூறுகின்றது. இவ்வாறு ப்ரணவத்திற்கு முக்கியப் பொருளாய் விளங்குமவன் எம்பெருமான்.

இத்தகைய எம்பெருமானை அறிவதானால் திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களையும் அர்த்தத்துடன் கற்று, அவ்வர்த்தத்தை அநுஸந்தித்துப் பழக வேண்டும். அவ்வாறு பழகினால் எம்பெருமானைச் சற்று விசேஷமாய் அறிய முடியும்.

உபநிஷத்தில் ப்ரஹ்மத்தை மூன்று வகைப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் கருத்து யாது? பலனை அநுபவிப்பவன் ஜீவாத்மா. ப்ரஹ்மம் அந்த ஜீவனைச் சரீரமாகக் கொண்டு அதில் கலந்து நியமிப்பதால் ஜீவர்களுடன் கூடியிருத்தல் என்பது ஒரு வகை. அநுபவிக்கப்படும் அசேதநத்தையும் எம்பெருமான் சரீரமாகக் கொண்டு அதனுள்ளும் புகுந்து நிற்பதால் அசேதநத்துடன் கூடியிருத்தல் என்பது ஒரு வகை. அவனே எல்லாவற்றையும் ஏவுமவனாய் எல்லையற்ற குணங்களுக்கு உறைவிடமாய் நிற்றல் என்பது மற்றொரு வகை. ஆக இந்த மூன்று தன்மைகளுடன் பரப்ரஹ்மம் கூடியிருத்தலைக் கொண்டே அதை மூன்று விதமாக உபநிஷத்துக் கூறுகின்றது. அதுவே பின்னும் சேதநன் தன் ஸ்வரூபத்தையும் ஏவுமவனான பரமாத்மாவையும் வெவ்வேறென்று அறிந்து அவனைப் பற்றினால் அவன் கடாக்ஷத்தால் மோக்ஷத்தைப் பெறுவானென்றும் கூறுகின்றது. ஆகவே சேதநமும் அசேதநமும் அவனுக்குச் சரீரமாயிருப்பினும் ஸ்வரூபத்தில் அவனிலும் வேறுபட்டவை இவை என்று உணர வேண்டும்.

மேலும் ஸ்ரீ பகவத்கீதையில் பதினைந்தாவது அத்யாயத்தில் கண்ணபிரான் அருச்சுனனுக்குத் தத்துவங்களை விளக்கப் புகுந்து மேம்பட்ட தத்துவம் - கீழ்ப்பட்ட தத்துவங்கள் என்ற பிரிவைக் கூறினான்; சேதந - அசேதநங்களைத் தாழ்ந்த தத்துவமாகவும் பரமாத்மாவாகிய தன்னை உயர்ந்த தத்துவமாகவும் கூறினான்; தான் ஸம்ருதியிலும் வேதத்திலும் புருஷோத்தமனாகப் புகழப்பட்டதையும் சொன்னான்; இவ்வாறு தத்துவங்களைப் பிரித்து அறிய வேண்டியதன் அவசியத்தையும் கூறி முடித்துள்ளான். இப்படி தத்துவங்கள் ஸ்வரூபத்தில் வேறுபட்டவையே என்பதை நன்கு உணர வேண்டும்.

5. தத்துவ விவேகம் உபாயாநுஷ்டானத்திற்கு முன்னும் பின்னும் பயன்படும் வகை

இந்த விவேகத்தைப் பெற்றவன் எப்பொழுதும் எம்பெருமானைத் தியானம் செய்ய வேண்டுமென்று சாஸ்த்ரம் கூறுகின்றது. இந்த விவேகி மோக்ஷத்திற்காகப் பக்தியோகத்தையோ ப்ரபத்தியையோ செய்யாதவனாயின் இந்த பகவத் தியானம் இன்பமான ஓர் அநுபவமாயிருப்பதுடன் இவன் செய்யப்போகும் பக்தி அல்லது ப்ரபத்தி நன்கு நிறைவேறுவதற்கு இந்தத் தியானம் உதவி புரியும். அவன் ப்ரபத்தியை முன்பே செய்து முடித்தவனாயின் அவனுக்கும் இந்தத் தியானம் இவ்வுலகில் அவன் இருக்கும்வரை செய்ய வேண்டிய கைங்கர்யங்களை மேன்மேலும் பெருகச் செய்து உதவி புரியும். இந்தத் தியானம் தானும் இன்ப வடிவமாயிருக்கும்.

முடிவுரை :

அநுபவிக்கத் தெவிட்டாத இனிமையுடையனாய், பிராட்டியைப் பிரியாத தலைவனாயுள்ள எம்பெருமானை ஒத்தவனும் இல்லை. அவனுக்கு மேம்பட்டவனும் இல்லை. அவ்வாறே அவ்வெம்பெருமானை அநுபவித்தலாகிய இன்பத்துக்குச் சமமான இன்பமும் இல்லை. அதற்கு மேம்பட்ட இன்பமும் இல்லை.

தத்த்வ நவநீதம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 5. ரஹஸ்ய நவநீதம்

## 1. முன்னுரை

(திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய ரஹஸ்யங்கள் மூன்றின் ஸாரார்த்தங்களை வெண்ணெய் போல் திரட்டி வெளியிடுவதால் இந்த ரஹஸ்யத்துக்கு இத்திருநாமம் வந்தது)

### 1. திருமந்திரத்தின் மூன்று வாக்கியங்களில் அநுஸந்திக்க வேண்டிய அம்சங்கள் :

எல்லா வேதங்களின் ஸாரார்த்தங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பது திருமந்திரம். இது மூன்று வாக்கியம் கொண்டது. ப்ரணவம் முதல்வாக்கியம். நம: இரண்டாவது வாக்கியம். நாராயணாய என்பது மூன்றாவது வாக்கியம். இந்த மூன்று வாக்கியங்களிலும் ப்ரபத்தியே முக்கியமான கருத்தாயுள்ளது.

ப்ரபத்தி என்பது மூன்று பகுதிகளாய் உள்ளது. அப்பகுதிகள் (1) ஜீவன் தன் ஸ்வரூபத்தை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தல் (2) தன்னைக்காக்கும் பொறுப்பை அவனிடம் ஸமர்ப்பித்தல் (3) காப்பதால் வரும் பயனையும் அவனிடமே ஸமர்ப்பித்தல் என்பன. இந்த மூன்றினுள் ஸ்வரூபத்தை ஸமர்ப்பித்தலை ப்ரணவத்திலும் பொறுப்பை ஸமர்ப்பித்தலை நம: என்பதிலும் பலனை ஸமர்ப்பித்தலை நாராயணாய என்பதிலும் கருத்தாகக் கொண்டதாக அநுஸந்திக்க வேண்டும். இந்த மூன்றின் விளக்கம் வருமாறு :

### 1.1 ப்ரணவத்தில் அநுஸந்திக்க வேண்டிய ஸ்வரூப சமர்ப்பணம்

ஸ்வரூபத்தை ஸமர்ப்பித்தல் - ஜீவாத்மா, சரீரம் - இந்த்ரியம் முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன்: ஞானம் ஆநந்தம் இவற்றின் வடிவமாயிருப்பவன்; ஜ்ஞாநமும் ஆநந்தமும் இவனிடம் குணங்களாகவும் உள்ளன. ஜீவன் தானே ப்ரகாசிப்பவன். அதாவது, தன்னை அறிவதற்கு வேறொரு ஜ்ஞாநம் வேண்டாது நான் என்று தோன்றுமவன். தான் ப்ரகாசிப்பதால் வரும்

பயனாகிய தன்னைப் பற்றிய பேச்சு முதலியவற்றைத் தானே செய்பவனாகின்றான். மிகவும் அணுவான உருவத்தையுடையும். இத்தகைய ஜீவாத்மாவாகிய அடியேன் பிராட்டியுடன் கூடிய எம்பெருமானுக்கே எம்பொழுதும் இயற்கையில் அடியனாயிருப்பவன். இந்த எம்பெருமான் எத்தகையன்? எல்லா உலகங்கட்கும் தான் ஒருவனே காரணமாய் விளங்குமவன்; எல்லோரையும் காப்பவன்; எல்லோருக்கும் ஸ்வாமியாய் நிற்பவன். இத்தகைய எம்பெருமானுக்கு அடியனாகத் தன்னை அநுஸந்திப்பதுவே ஆத்மாவை ஸமர்ப்பித்தலாகும். எம் பெருமானுக்கும் ஜீவனுக்கும் உள்ள 'ஸ்வாமி - அடியன்' என்கிற ஸம்பந்தத்தை நன்கு உணர்ந்தால்தான் அர்த்த பஞ்சகம் எனப்படும். ஐந்து பொருள்களை நன்கு அறிய முடியும் (அர்த்தபஞ்சகம் - (1) அடையப்படும் பரமாத்மா (2) அடைகின்ற ஜீவன் (3) அடைதற்கு உபாயமான ப்ரபத்தி (4) அதனால் வரும் பலன் (5) அதற்குத் தடையாயுள்ளவை) இந்த ஐந்து அம்சங்களையும் அறிவதற்கு மேற்கூறிய ஸம்பந்தத்தை அநுஸந்திப்பது கடையாணிபோல் முக்கியமாயுள்ளது.

### 1.2 நமஸ்ஸில் அநுஸந்திக்க வேண்டிய பரஸமர்ப்பணம்

பொறுப்பை ஸமர்ப்பித்தல் - எப்பொழுதும் உனக்கு அடியனாய் எப்பொழுதும் உனக்கு வசப்பட்டவனான நான் விரும்பிய பலனைப் பெறுதற்குக் கைம்முதல் ஏதும் அற்றவனாயுள்ளேன். அந்தப் பலனுக்குச் சாதனமாகப் பின்னும் நான் செய்ய வேண்டியதாக ஒன்றும் வைக்காதபடி என்னைக் காக்கும் பொறுப்பை ஏற்று என்னைக் காக்க வேண்டிய பொருளாகக் கொண்டு காத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்து அந்தப் பொறுப்பை ஸமர்ப்பித்தல்.

### 1.3 'நாராயணாய' அநுஸந்திக்க வேண்டிய பரஸமர்ப்பணம்

பலனை ஸமர்ப்பத்தல் - நித்யஸூரிகள் பரமபதத்தில் உனக்குச் சாச்வதமாகக் கைங்கர்யங்களைச் செய்கின்றனர். அவர்கள் அக்கைங்கர்யங்களைத் தாங்கள் சுதந்திரமாகச் செய்கின்றோமென்றோ தம் பலனுக்காகச் செய்கின்றோமென்றோ கருதாமல் செய்வதால் அவை குற்றமற்றவையாகும். அடியேனும் அத்தகைய கைங்கர்யங்களைப் பரமபதத்தில் செய்வதற்கு

உரிமையுடையனே. உன்னிடம் அடக்க முடியாத அன்பு எனக்கு உள்ளது. ஆயினும் சரீரம் இந்திரியம் முதலியவற்றின் ஸம்பந்தத்தால் வரும் கர்மங்கள் தடையாய் நின்று என்னைத் தகுதியற்றவனாக்கின. இந்தப் பிரபத்தியால் அவற்றை எல்லாம் கழித்து அடியேன் புரியும் குற்றமற்ற கைங்கர்யங்களை ஏற்றுக் கொண்டு அடியேனை வாழ்வித்தருள வேண்டும் என்று அநுஸந்திக்கை.

### 1.4 திருமந்திரம் செய்யும் உதவி

இப்படி திருமந்திரம் ப்ரணவத்தாலே எம்பெருமானைச் சேஷியென்றும் ஜீவனை அவனுக்குச் சேஷனென்றும் காட்டி இருவரையும் ஒருவருக்கொருவர் ஸம்பந்த முடையராக்குகின்றது. இவ்வாறே நம: என்ற சொல்லால் சேஷனாகிய ஜீவன் ப்ரபத்தியைச் செய்து எம்பெருமானை வணங்கும்படியையும் எம்பெருமானும் அதற்கு வளைந்து கொடுத்துச் சேதநன் பொறுப்பைத் தான் ஏற்றுக் கொள்ளும்படியையும் காட்டி இருவர் செயலாலும் இருவரையும் வணங்கச் செய்கின்றது. (சேதநன் வணங்குதல் = அடிதொழுதல். எம்பெருமான் வணங்குதல் = உடன்பட்டு வளைந்து கொடுத்தல்) மேல் நாராயணாய என்ற சொல்லால் சேஷனான ஜீவன் தான் செய்யும் கைங்கர்யத்தால் மோக்ஷத்தில் ஆநந்தமாகிய பலனைப் பெறுவதையும் இவன் செய்யும் கைங்கர்யத்தை ஏற்பதால் சேஷியான எம்பெருமான் பலனைப் பெறுவதையும் காட்டி இருவரையும் ஸமமான ஆநந்தமுடையராகக் காட்டுகின்றது.

### 1.5 ப்ரஹ்மஸூத்ரங்களும் திருமந்திரமும் ஒரே கருத்தை வெளியிடல்

ஸ்ரீ பாஷ்யத்துக்கு மூலமான ப்ரஹ்மஸூத்ரங்களில் முதல் இரண்டு அத்யாயங்கள் பரதத்துவத்தையும், மூன்றாவது அத்யாயம் சிறந்த மோக்ஷோபாயத்தையும், நான்காவது அத்யாயம் சிறந்த பலனாகிய மோக்ஷத்தையும் கூறுகின்றன. இம்முறையிலேயே திருமந்திரமும் ப்ரணவத்தால் பரதத்துவமான ஸ்ரீமந் நாராயணனையும், நம: என்பதால் ப்ரபத்தியாகிய உபாயத்தையும், 'நாராயணாய' என்பதால் மோக்ஷமாகிய பலனையும் கூறுகின்றது.

2. த்வயத்தின் மூன்று வாக்கியங்களில் அநுஸந்திக்க வேண்டியவை

இவ்வாறே த்வயமும் கீழ்க்கூறிய த்துவம் - ஹிதம் - புருஷார்த்தம் ஆகிய மூன்றையும் வரிசையாக அததற்கு ஏற்ற அவசியமான அம்சங்களுடன் சற்று விரிவாய் வெளியிடுகின்றது. இது ப்ரபத்தியைச் செய்யச் சாதனமான மந்த்ரமாதலின் கரணமந்த்ரம் என வழங்கும்.

இது மூன்று வாக்யம் கொண்டது. ப்ரபத்யே வரையில் ஒரு வாக்யம். 'நாராயணாய' வரையில் ஒரு வாக்யம். நம: என்பது ஒரு வாக்யம். முதல் வாக்யம் சிறந்த உபாயத்தைக் காட்டும். (உபாயம், ஸித்தம் - ஸாத்யம் என இருவகைப்படும்) இரண்டாவது வாக்யம் சிறந்த பலனைக் காட்டும். (பலனும் ஸித்தம்ஸாத்யம் என இருவகைப்படும்) மூன்றாவது வாக்யம் விரோதிகள் ஒழிவதைக் காட்டும். (விரோதியும் ஸித்தம் ஸாத்யம் என இருவகைப்படும். இவற்றின் விளக்கம் வருமாறு :

2.1 முதல் வாக்யத்தில் அநுஸந்திக்க வேண்டிய அம்சம் - உபாய விசேஷம்

(1) . சிறந்த உபயம் - பெரிய பிராட்டியுடன் கூடிய நாராயணன் சேதநனுக்கு ஸித்தோபாயமாகின்றான். அதாவது - சேதநனால் புதிதாய்ச் செய்யப்படாது முன்பே உள்ள உபாயமாகின்றான். சேதநன் விரும்பும் பலனைத் தருமவன் எம்பெருமானே. அவன் பலனைத் தருவதற்குச் சேதநனிடம் ஒரு சிறு செயலை (ப்ரபத்தியை) மட்டுமே எதிர்பார்க்கின்றான். அச் சிறு செயலைச் செய்வதற்கும் அவனே துணை செய்து நடத்துகின்றான். நடுவில் வேறு இடையீடின்றித் தானே நேராக நின்று பலன் தருவதால் அவனே முக்கியமான ஸித்தோபாயமாகின்றான். சரணாகதியென்பது எம்பெருமானை வசப்படுத்துவதற்காகச் சேதநன் செய்ய வேண்டிய உபாயம். சேதநன் செய்தாக வேண்டியதால் ஸாத்யோபாயமாக ப்ரபத்தி ஆகின்றது.

2.2 இரண்டாம் வாக்யத்தில் அநுஸந்திருக்க வேண்டிய அம்சம் - புருஷார்த்த விசேஷம்

சிறந்த பலன் - ஸ்ரீ வைகுண்டத்தில் சேதநன் எம்பெருமானுக்கு

உகப்பான கைங்கர்யங்களைச் செய்தல். அந்தக் கைங்கர்யங்களைச் செய்யும்போது அவற்றைத் தான் ஸ்வதந்த்ரனாகச் செய்வதாகவாவது, தன் பயனுக்காகச் செய்வதாகவாவது கருதாமல் அவற்றில் சிறிதும் தன் ஸம்பந்த உணர்ச்சியின்றிச் செய்வான். எல்லையற்ற இனிமையுடையவனான எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவிப்பதால் அவ்வநுபவத்துக்குப் போக்குவீடாகக் கைங்கர்யங்களைச் செய்கின்றான். இக்கைங்கர்யம் சேதநனால் செய்யப்பட வேண்டியிருப்பது பற்றி ஸாத்யமான பயன் எனப்படும். எம்பெருமான் பிறரால் செய்யப்படாது நித்யனாயிருப்பதால் ஸித்தமான பலன் எனப்படுகின்றான். இப்படி எம்பெருமான் ஸித்தோபேயமாகவும் அவனுக்குச் செய்யும் கைங்கர்யம் ஸாத்ய உபேயமெனவும் வழங்கும். (உபேயம் - பலன்)

### 2.3 மூன்றாம் வாக்கியத்தில் அநுஸந்திக்க வேண்டிய அம்சம் - விரோதி நிவ்ருத்தி விசேஷம்

விரோதி ஒழிதல் - எல்லாவகையான அஞ்ஞானமும் ஒழிதல். அதாவது - ஸ்ரீவைகுண்டத்தில் கைங்கர்யங்களைச் செய்யும்போது 'நான் சுதந்திரனாய்ச் செய்கின்றேன். என் பயனுக்காகச் செய்கின்றேன்' என்றிவை முதலிய அஞ்ஞானமெல்லாம் ஒழிந்திருத்தல். ஆகவே த்வயத்தில் முற்பகுதி ஸித்தம் - ஸாத்யம் என்ற இருவகையான உபாயங்களையும், பிற்பகுதி ஸித்தம் - ஸாத்யம் என்ற இருவகையான பலன்களையும் 'நம:' என்னுமது கீழ்க்கூறிய இருவகை அஞ்ஞானமும் அற்றபடியையும் காட்டுமென்று உணர்க.

ஸ்ரீமத் ராமாயணத்தில் பிராட்டியுடன் கூடிய இராமபிரான் திருவடிகளை இளையபெருமாள் பிடித்துக் கொண்டதைக் கூறும் சுலோகம் "ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளைச் சரணமடைகின்றேன்" என்று பொருள் கொண்ட த்வயத்தின் முற்பகுதிக்குப் பொருத்தமாயுள்ளது. பின், "நீர் பிராட்டியுடன் மலைத் தாழ்வரைகளில் மகிழ்ந்து வாழும் போது அடியேன் எல்லா நிலைகளிலும் எல்லாத் தொண்டுகளையும் புரிவேன்" என்று இளைய பெருமாள் இராமபிரானிடம் விண்ணப்பம் செய்த சுலோகம் "ஸ்ரீமந்நாராயணனுக்கு வழுவறக் கைங்கர்யங்களைச் செய்வேன்" என்று பொருள் கொண்ட த்வயத்தின் பிற்பகுதிக்குப் பொருத்தமாயுள்ளது.

**3. சரம சுலோகத்தின் மூன்று வாக்கியங்களில் அநுஸந்திக்க வேண்டியவை**

த்வயத்தில் சிறந்த உபாயமான சரணாகதி வெளிப்படையாய்த் தோற்றுகிறதன்றோ! இவ்வாறு தோற்றின சரணாகதியைச் செய்வதற்கு வேண்டிய தகுதியையும், வேறொன்றையும் எதிர்பாரத அதன் தன்மையையும், ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையும் அதன் பெருமையையும் சரம சுலோகம் வெளியிடுவதுடன் வேதத்திற் கூறப்பட்ட ப்ரபத்தியை நன்கு விளக்குவதாயும் உள்ளது.

இந்தச் சரம சுலோகத்தில் முதற்பாதி ப்ரபத்திக்குத் தகுதியைப் பெற்ற சேநதன் செய்ய வேண்டிய செயலைச் சொல்லுகின்றது. பிற்பாதியில் 'மோக்ஷயிஷ்யாமி' வரையில் உள்ள பகுதி ரக்ஷகனான எம்பெருமான் செய்யும் செயலைக் கூறுகின்றது. 'மா சுச:'என்னும் தொடர் ப்ரபத்தியைச் செய்து முடித்தவன் பிறகு கைக்கொள்ள வேண்டிய நிலையைச் சொல்லுகின்றது. இவ்வாறு சரமசுலோகம் மூன்று வாக்கியம் கொண்டதென்று உணர்க.

**3.1 முதல் வாக்கியத்தில் அநுஸந்திக்க வேண்டிய அம்சம் - அதிகாரி கருத்யம்**

சேதநன் செய்ய வேண்டிய செயலாவது - அசேதநப் பொருள்களால் பெறும் அநுபவம் நிலையற்றதென்று உணர்ந்து அவற்றில் பற்றை விட வேண்டும். ஜீவாத்மாவின் உண்மை நிலையை அறிந்து அவனுக்கு ஏற்ற சிறந்த பலன் மோக்ஷமே என்று உணர வேண்டும். இந்த்ரியங்களை உலக விஷயங்களில் தோன்றியபடி திரியாதவாறு அடக்க வேண்டும். இந்த விவேகத்தைப் பெற்று மோக்ஷம் பெற விருப்பத்துடன் வேறோர் உபாயத்தைக் கைக்கொள்ள முயற்சி கொள்ளாது ப்ரபத்தியைச் செய்ய வேண்டும். அதாவது - ஸர்வ லோகங்களையும் காப்பவனாய் ஸித்தோபாயமாய் விளங்கும் எம்பெருமான் திருவடிகளில் தன் பொறுப்பை ஏற்றுக் காக்கும் படி விண்ணப்பம் செய்ய வேண்டும்.

**3.2 இரண்டாம் வாக்கியத்தில் அநுஸந்திக்க வேண்டிய அம்சம் - சரண்ய க்ருத்யம்**

ரக்ஷகனான எம்பெருமான் செயலாவது - இப்பொழுது

சரணமடைபவனை இதுவரை தன்னை அடையாதிருக்குமாறு தடை செய்து கொண்டிருந்த அவனுடைய பாபங்களை எல்லாம் கழிக்கின்றனான் எம்பெருமான். அதற்காக எல்லோருக்கும் ஸ்வாமியாய் நிற்கும் தான் அமர வேண்டிய தலைமையிடத்தை விட்டுத் தேர்ப்பாகன் அமர வேண்டிய தாழ்ந்த இடத்தில் அமர்கின்றான் சேதநன் தன்மீது சுமத்தும் சுமைகளை எல்லாம் ஏற்றுச் சுமக்கின்றான். அதாவது - சேதநன் பக்தியோகத்தைச் செய்ய முடியாதவனாய் ப்ரபத்தியைச் செய்யும்போது அந்தப் பக்தியோகத்தின் ஸ்தாநத்தில் எம்பெருமான் தானே நிற்கின்றான். சேதநன் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் பலன் தரவேண்டுமென்று பிரார்த்தித்தால் அந்தச் சுமையையும் தாங்குகின்றான். மேலும் சேதநன் மோக்ஷம் பெறுதற்கு ஒரு காலத்தைக் குறிப்பிட்டுக் கேட்டால் அந்தச் சுமையையும் ஏற்று அங்ஙனமே செய்கின்றான். இவ்வாறு சேதநன் விரும்பியபடி எல்லாம் சுமைகளைச் சுமந்து மோக்ஷத்தில் தனக்கு மிகவும் ஸமமான போகத்தைக் கொடுத்துத் தன்னோடு ஒக்க மேன்மைப்படுத்துகின்றான்.

### 3.3 மூன்றாம் வாக்கியத்தில் அநுஸந்திக்க வேண்டிய அம்சம் - உத்தர க்ருத்யம்

ப்ரபத்திக்குப் பின் சேதநன் கைக்கொள்ள வேண்டிய நிலையாவது - மோக்ஷம் பெறுவது நிச்சயமாதலின் தன்மனத்தை எதற்கும் கவலை கொள்ள விடாது தேற்ற வேண்டும். எவ்வகையிலும் மோக்ஷம் தவிர வேறு பலனையோ, எம்பெருமானையன்றி வேறு தெய்வத்தையோ சிந்திக்கக் கூடாது. இங்கு உள்ள நாள்வரை செய்ய வேண்டியனவாகச் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கைங்கர்யங்களைப் பலனை நாடாது எம்பெருமானது உகப்பையே பலனாகக் கொண்டு செய்வதில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

### 3.4 பின்னும் சரமசுலோகம் விளக்கும் மூன்று விஷயங்கள்

பின்னும் இந்தச் சரமசுலோகம் முக்கியமாய் மூன்று அம்சங்களை விளக்குகின்றது. அவையாவன - (1) பக்தியோகமாகிய கைம்முதல் இல்லாத சேதநனை ரக்ஷகனான எம்பெருமான் மிகமிக நன்மையைச் செய்யும் உபாயமாகிய ப்ரபத்தியிலே மூட்டுகின்றான். (2) ப்ரபத்தியைச் செய்த சேதநனை எம்பெருமான் ஸகலபாபங்களினின்று விடுவித்தலாகிய மிகவும் பிரியமான செயலைச் செய்கின்றான். (3) ப்ரபத்தியைச்

செய்தவன் மனத்துன்பம் நீங்கியவனாய் இங்கு இருக்கும் காலம் வரை எல்லோருக்கும் ஸ்வாமியான எம்பெருமான் திருவுள்ளத்துக்கு மிக்க உவப்பைத் தரும் ஸகல கைங்கர்யங்களையும் செய்து கொண்டிருப்பான் - என்பன.

### 3.5 எம்பெருமான் - ப்ரபத்தி - பலன் மூன்றுக்கும் வரையறையின்மை

இந்தச் சரம சுலோகத்தில் சொல்லிய எம்பெருமான் - ப்ரபத்தி - பலன் ஆகிய மூன்றுக்கும் இடத்தாலோ காலத்தாலோ வஸ்துவாலோ வரையறையே கிடையாது.

அதாவது - எம்பெருமானை இன்ன இடத்தில்தான் இருக்கின்றான் என்று இடத்தாலோ, இன்ன காலத்தில்தான் இருக்கிறானென்று காலத்தாலோ, இன்ன வஸ்துவாகத்தான் உள்ளானென்று வஸ்துவாலோ வரையறுக்க முடியாது. எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துக்களாகவும் உள்ளான்.

இவ்வாறே ப்ரபத்தியையும் இன்ன இடத்தில்தான் செய்ய வேண்டுமென்று இடத்தாலோ, இன்ன ஸமயத்தில்தான் செய்ய வேண்டுமென்று காலத்தாலோ, இதற்கு ஸமமாயுள்ளது என்று வஸ்துவாலோ வரையறுக்க முடியாது. எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாவற்றுக்கும் மேம்பட்டதென்ற வகையில் செய்யக் கூடியதாகும்.

பலனாகிய மோக்ஷத்தில் பகவதநுபவத்தால் வரும் கைங்கர்யமாகிய பலனையும் இன்ன இடத்தில்தான் செய்ய வேண்டுமென்று இடத்தாலோ, இன்ன ஸமயத்தில்தான் செய்ய வேண்டுமென்று காலத்தாலோ, இன்ன கைங்கர்யத்தைத்தான் செய்ய வேண்டுமென்று வஸ்துவாலோ வரையறுக்க முடியாது. மோக்ஷத்தில் எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்யலாம்.

ப்ரபத்தியின் எல்லா அம்சங்களையும் விளக்கும் ப்ரபத்தி - அத்யாயம் கூறும் அனைத்தும் இச் சரம சுலோகத்தின் அர்த்தத்தின் விரிவேயாகும்.

ரஹஸ்யநவநீதம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 6. தத்த்வ மாத்ருகை.

(வடமொழியில் 'அ' முதல் 'க்ஷ' வரையில் உள்ள ஐம்பத்தொன்று எழுத்துக்களுக்கு 'மாத்ருகா' எனப் பெயர். தத்துவங்களை விளக்கும் இந்த ரஹஸ்யம் ஐம்பத்தொன்று வாக்யங்கள் கொண்டுள்ளமை பற்றித் தத்த்வமாத்ருகை எனப் பெயர் கொண்டதெனப் பெரியோர் கூறுவர்.)

இந்த ரஹஸ்யத்தில் ஸ்ரீதேசிகன் அருளிய ஐம்பத்தொன்று விஷயங்களுக்கும் விளக்கம் தரப்படுகின்றது. -

(1) ஸத்த்வகுணம் பெற்ற ஆஸ்திகர்கள் தாங்கள் உஜ்ஜீவிப்பதற்குத் தத்துவங்களை முதலில் அறிந்தாகவேண்டும். அதற்காகச் சிறந்த ஒர் ஆசார்யனை அடைய வேண்டும். அந்த ஆசார்யன் வேதாந்த சாஸ்த்ரம் திருமந்த்ரம் முதலியவற்றைக் கொண்டு தத்துவங்களைப்பற்றி உபதேசிப்பான். அவ்வுபதேசத்தாலே அறியவேண்டிய தத்துவம் இருவகைப்படும். (1) பரதத்த்வம் = மேம்பட்ட தத்த்வம். (2) அவரதத்த்வம் = தாழ்ந்த தத்த்வம்.

(2) மேம்பட்ட தத்த்வம் - பெரிய பிராட்டிக்கு நாயகனாய்ப் புருஷோத்தமனான ஸ்ரீமந் நாராயணனே பரதத்த்வமாவான். இவன் தன் ஸங்கல்பத்தால் எல்லா வஸ்துக்களையும் படைப்பவனாதலின் அவற்றுக்கு முதற் காரணமாயுள்ளவன். உடலினுள் உயிர் புகுந்திருப்பது போல் ஸகல வஸ்துக்களிலும் உட்புகுந்து நியமிப்பதால் அந்தர்யாமியெனப்படுமவன். ஆனால் அவ்வஸ்துக்களால் இவனை அறிய முடியாது. இவனுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் எப்பொழுதும் மாறுபடாதது; ஞான வடிவமானது. எவ்வாற்றாலும் அளவிட முடியாதது. ஆனந்த வடிவமானது; எவ்வகைக் குற்றமுமற்றது. அதியற்புதமானது. இதில் திருக்கல்யாண குணங்கள் நிறைந்துள்ளன. இதனால் இந்த ஸ்வரூபம் அக்குணங்களுக்கும் பெருமையைத் தருகின்றது. மங்களமே வடிவாகவுடைய பிராட்டிக்கும் மங்களத்தைத் தரும் இயற்கை மங்கள வடிவாயுள்ளது. இத்தகைய ஸ்வரூபத்தையுடையன் எம்பெருமான். இதற்கு மேம் பட்ட ஆநந்தம் இல்லையென்னும்படி மிக உயர்ந்த ஆநந்தம் முதலிய எல்லையற்ற கல்யாண குணங்களையுடயவன். இவன் மீன் - ஆமை - பன்றி - மனிதன் - முதலிய என்ன என்னவோ பல்வேறு

பிறவிகளை எடுத்துக் கொள்கின்றான். எதற்காக? தன் அடியார்கள் இக்கர்ம பூமியில் பற்பல பிறவிகளை எடுத்து அல்லல் படாதிருப்பதற்காகத்தான் பல அவதாரங்கள் செய்து தன் குணங்களைக் காட்டிச் சேதநர்கள் தன்னை வழிபடும்படி செய்வதால் அவர்கள் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடுவார்களல்லரோ? இவன் இக் கர்ம பூமியில் வந்து பிறந்து தன் பெருமைக்குப் பொருந்தாத இழிசெயல்களையெல்லாம் செய்து படாத பாடு படுகின்றான். எதற்காக? அடியார்களான சேதநர்கள் இங்கு வந்து பிறந்து பல்வேறு துன்பங்களை அநுபவிக்காமல் செய்வதற்கே. அவர்கள் தங்களுக்காக இவன் படும் பாடுகளை எல்லாம் கண்டு இவனது ஸௌலப்யம் முதலிய குணங்களை உணர்ந்து முக்திக்கு வழிதேடித் துயர்தீருவார்களல்லரோ! மேலும் இவ்வெம்பெருமான் தன் நியமநத்திற்கு ஏற்றவாறே நடந்தொழுகும் தெய்வத்தன்மையுடைய சேதநர்களுக்குத் தானும் அவர்கள் சொல்வதையெல்லாம் செய்பவனாயுள்ளான். இவன் தன் கட்டளைக்கு எதிராகப் பாபச் செயலைச் செய்யும் அசுரத்தன்மையுடைய சேதநர் விஷயத்தில் தானும் விபரீதச் செயல்களைச் செய்து அவர்கள் கெட்டழியச் செய்கின்றான். இவன் தன்னைத் தங்களுக்கு உயிராக எவர்கள் நினைக்கின்றார்களோ, அவர்களை இவனும் தனக்கு உயிரெனக் கருதுகின்றான். இவன் தன்னிடம் தங்கள் ஆத்மாவையும் தங்களைச் சேர்ந்தவற்றையும் ஸமர்ப்பித்துப் பரந்யாஸம் செய்பவர்களுக்குத் தானும் தன்னையும் தன்னைச் சேர்ந்த ப்ரபஞ்சம் முழுவதையும் அவர்கள் மோக்ஷத்தில் அநுபவிக்குமாறு அளிக்கின்றான். இத்தகைய ச்ரிய: பதியான ஸர்வேச்வரனே மேம்பட்ட தத்துவமாவான்.

(3) இவன் லீலாவபூதியெனப்படும் இந்த ப்ரபஞ்சத்தையும் நித்ய விபூதியெனப்படும் ஸ்ரீவைகுண்ட லோகத்தையும் தன் ஸங்கல்பத்தாலேயே நடத்துகின்றான். இவனுக்குச் சமமானவன் ஒருவனும் இல்லை. மேம்பட்டவனும் இல்லை.

(4) இவன் திருமேனி தெய்வத்தன்மையுடையதாய் ஸேவிப்பவர்களுக்கு மங்களத்தைத் தரும் மங்கள வடிவாயிருப்பதால் திவ்யமங்கள விக்ரஹமென வழங்கும். இவன் திருமேனி நம் சரீரத்தைப்போல் ஐந்து பூதங்களால் ஆகியதன்று. ப்ரக்ருதி ஸம்பந்தம் அடியோடு அற்றதாகும். சுத்த ஸத்துவமயமானது. இவன் திருமேனியிலும் பூமி - ஜலம் - தேஜஸ் - வாயு - ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களும் உண்டு அவை ஐந்து

சக்திகள் என வழங்கும். ஆனால் அவை உலகில் உள்ள ஐந்து பூதங்கள் போன்றவையல்ல. சுத்த ஸத்துவமயமானவை. அந்த ஐந்து சக்திகளும் பஞ்சோபநிஷந் மந்திரங்கள் எனப்படும் மந்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன. உலகிலுள்ள விசித்திரமான தத்துவங்களெல்லாம் இவன் திருமேனியில் திருவாபரணங்களாகவும் திருவாயுதங்களாகவும் வடிவு கொண்டு நிற்கின்றன.

இத்தகைய திருமேனியுடையனான எம்பெருமான் ஐந்து வகையான திருமேனிகளைக் கொண்டுள்ளான். அவையாவன (1) பரம் (2) வ்யூஹம் (3) விபவம் (4) அந்தர்யாமி (5) அர்ச்சை என்பன.

(5) (1) பரரூபம் - ஸ்ரீவைகுண்டத்தில் பரவாஸுதேவனாய் எழுந்தருளியுள்ள வடிவம். இது என்றும் அழியாதது. வளர்தல் குறைதல் முதலிய மாறுபாடு இல்லாமல் ஒரே நிலையில் இருப்பது. நித்யஸூரிகளும் முக்தி பெற்றவர்களுமே இதை ஸேவித்து அநுபவிக்க முடியும். இது உலகுக்குக் காரணமாய்த் தேஜோரூபமாய்க் கண்களைக் கவரும் அழகுடையதாய்ப் பரமபதத்தில் பரமாநந்தத்துடன் விளங்கும்.

(6) (2) வ்யூஹம் - வாஸுதேவன் - ஸங்கர்ஷணன் - பரத்யும்நன் - அநிருத்தன் என்கிற திருநாமங்களால் வழங்கும் உருவங்கள். இந்த உருவங்களுக்கும் முதற் காரணம் பரவாஸுதேவனே. இந்த நான்கினுள் முந்திய முந்திய உருவினின்று பிந்திய பிந்திய உருவங்கள் தோன்றுகின்றன. அதாவது - பரவாஸுதேவனிடமிருந்து வ்யூஹவாஸுதேவன், இவனிடமிருந்து ஸங்கர்ஷணன், இவனினின்று பரத்யும்நன், பரத்யும்நனிடமிருந்து அநிருத்தன் என்ற முறையில் இந் நான்கு உருவங்களும் உண்டாகின்றன இத் திருமேனிகளின் நிறம் க்ருதயுகத்தில் வெண்மையும், திரேதாயுகத்தில் பொன்னிறமும், துவாபர யுகத்தில் பசுமை நிறமும், கலியுகத்தில் கருமையுமாக இவ்வாறு யுகந்தோறும் நிறம் மாறி மாறி வரும்.

(7) இந்த நால்வரில் ஸங்கர்ஷணன் ஜீவனுக்கு அபிமாநி தேவதையாயிருப்பதால் ஜீவனென வழங்கப்பெருவான். ப்ரத்யும்நன் மனம் என்னும் தத்துவத்துக்கு அபிமாநி தேவதையாதலின் மநஸ் என்ற பெயர் பெற்றுள்ளான். அநிருத்தன் அஹங்காரமென்னும் தத்துவத்திற்கு அபிமாநி தேவதையாதலின் அஹங்காரமென்று அழைக்கப்படுகின்றான். இவர்களில் வாஸுதேவனுக்கு ஆறு குணங்களும் மற்றவர்களில்

ஒவ்வொருவருக்கு இரண்டிரண்டு குணங்களும் உண்டு. அதாவது - வாஸுதேவனிடம் ஜ்ஞாநம் - பலம் - ஐச்வர்யம் - வீர்யம் - தேஜஸ் - சக்தி என்னும் ஆறு குணங்களும் உள்ளன. ஸங்கர்ஷணனிடம் ஜ்ஞாநமும் பலமும், ப்ரத்யும்நனிடம் ஐச்வர்யமும் வீர்யமும், அநிருத்தனிடம் சக்தியும் தேஜஸ்ஸும் உள்ளன. இங்ஙனமே ஒவ்வொருவருக்கும் இரண்டிரண்டு செயல்கள் உண்டு. ஸங்கர்ஷணனுக்கு உலகத்தை அழித்தலும் சாஸ்த்ரங்களை வெளியிடுதலும் செயல்களாகும். உலகைப் படைத்தலும் தர்மத்தைப் பரப்புதலும் ப்ரத்யும்நன் செயல்கள். அநிருத்தன் செயல்கள் உலகத்தைக் காத்தலும் தத்துவக்ஞாநத்தை உண்டாக்குதலும்.

*(8)* இந்த நான்கு வ்யூஹ வடிவங்களில் ஒவ்வொன்றிலிருந்தும் மும்மூன்று உருவங்கள் தோன்றுகின்றன. இவை பன்னிரண்டும் வ்யூஹ ரூபங்களின் வேறு பிரிவுகளாகும். வாஸுதேவனிடமிருந்து கேசவன் - நாராயணன் - மாதவன் என்ற மூன்று வடிவங்களும், ஸங்கர்ஷணனிடமிருந்து கோவிந்தன் - விஷ்ணு - மதுஸூதநன் என்ற மூன்றும், ப்ரத்யும்நனிடமிருந்து த்ரிவிக்ரமன் - வாமநன் - ஸ்ரீதரன் என்ற மூன்றும், அநிருத்தனிடமிருந்து ஹ்ருஷீகேசன் - பத்மநாபன் - தாமோதரன் என்ற உருவங்களும் தோன்றுகின்றன. இந்தப் பன்னிரண்டும் வ்யூஹங்களின் மற்றொரு வகுப்பாகும்.

*(9)* *(3)* விபவ ரூபம் - எம்பெருமான் தன் ஆளுகைக்கு உட்பட்ட வஸ்துக்களின் உருவத்தைப்போல் எடுத்துக் கொள்ளும் உருவம். அதாவது - மீன் - ஆமை - பன்றி முதலிய ஜந்துக்களைப் போன்ற உருவத்தையும் ராமன் கிருஷ்ணன் என்ற முறையில் மனிதர்களின் வடிவு போன்ற வடிவத்தையும் கொண்டு அவதரிக்கின்றான். இந்த ரூபங்கள் விபவரூபமெனப்படும்.

*(10)* இந்த விபவ ரூபத்தினின்றும் பற்பல உருவங்கள் தோன்றுவதுண்டு அவையெல்லாம் விபவரூபத்தின் பிரிவுகளாகும்.

*(11)* *(4)* அந்தர்யாமி ரூபம் - ஒவ்வொரு ஜீவனுடைய இதயத்திலும் மிகச் சூட்சுமமான வடிவத்துடன் தடையின்றிப் புகுந்து நிற்கும் திருவுருவம். யோகம் செய்பவர்கள் மட்டுமே யோகத்தினால் அந்த உருவத்தை நேரில் காண முடியும்.

*(12)* *(5)* அர்ச்சா ரூபம் - திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள திருமேனி. எம்பெருமான் அடியார்கள் விருப்பத்துக்கு ஏற்ற திருமேனியையும் அவர்கள் இடும் திருநாமத்தையும் கொண்டு அந்த அந்தத் தலங்களில் திருக்கோயில்

கொண்டு எழுந்தருளியிருக்கின்றான். இந்தத் தலங்கள் ஐவகைப்படும். (1) ஸ்வயம் வ்யக்தம் - எம்பெருமான் தானாகவே வந்து தோன்றி எழுந்தருளியுள்ள தலம். (2) திவ்யம் - தேவர்கள் இந்நிலவுலகுக்கு வந்து ப்ரதிஷ்டை செய்த தலம். (3) ஆர்ஷம் - முனிவர்கள் ஸ்தாபித்த தலம் (4) மாநுஷம் - ஸாதாரண மனிதர்கள் தாங்கள் வழிபடுதற்காக விக்ரஹங்களை ப்ரதிஷ்டை செய்த தலம் (5) வைஷ்ணவம் - பரமைகாந்திகள் தங்கள் அநுபவத்துக்காக ஸ்தாபித்த தலம்.

இந்தத் தலங்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் சேதநர் செய்யும் அபசாரங்களை எல்லாம் பொறுத்துக்கொண்டு நிற்கின்றான். தன்னை ஆராதிக்கும் அர்ச்சகர்களின் கையில் எவ்வகையிலும் இவன் அடங்கி நடப்பதால் அவர்களுக்குப் பரதந்த்ரனாயிருக்கும் தன்மையின் கடைசி எல்லை நிலமாய்த் திகழ்கின்றான். சேதநருக்குச் சேஷமாகவும் சேஷியாகவும் நிற்கின்றான். அடியார்கள் ஆராதநம் முதலியன செய்யும்போது அந்தத் திருமேனி அவர்கள் ஆட்டி வைக்கிறபடியெல்லாம் ஆடுவதாலும் சொத்துக்களைப் பங்கிடுதல் முதலியவற்றில் மற்ற வஸ்துக்களுடன் சாளக்கிராமம் விக்ரஹம் முதலிய திருமேனிகளையும் பங்கிட்டுக் கொள்வதாலும் சேஷமாய் நிற்கின்றான். பக்தியோடு ஆராதிக்கப்படுவதால் சேஷியாகவும் விளங்குகின்றான். கண்ணபிரான் தனது அவதார கார்யத்தைத் தலைக்கட்டிவிட்டுத் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும்போது அவன் பிரிவைப் பொறுக்காத முனிவர் இனித்தாங்கள் செய்வதென்? என்று கேட்க இந்நிலவுலகில் நிலவும் தன் திருமேனியை ஆராதிக்குமாறு அவன் தானே கூறித் தேற்றியருளியதாகப் பாரதம் கூறும். அர்ச்சை வடிவத்தைத் திருவுள்ளத்துக்கொண்டுதான் அவ்வாறு கூறியருளினான் கண்ணன்.

(13) இந்த ஐவகைத் திருமேனிகளிலும் பெரிய பிராட்டி கணப்பொழுதும் பிரியாது எம்பெருமானுடனேயே இருக்கின்றாள். இந்த ஐந்து திருமேனிகளும் சுபாச்ரயமென வழங்கும். அதாவது - ஸேவிப்பவர்களின் பாபத்தைப் போக்கும் தாய் உள்ளத்தில் தியானம் செய்தற்கு ஏற்றதாய் உள்ள திருமேனி சுபாச்ரயமெனக் கூறப்படும்.

(14) இப்படி பெரிய பிராட்டியைப் பிரியாத நாராயணனையே பரதேவதையெனக் கண்டறிந்தவன் பிராட்டியைப் பெறாத ஒரு புதுத் தெய்வத்தை உள்ளத்தாலும் நினைக்க மாட்டான்.

தாழ்ந்த தத்துவமும் அதன் பிரிவும்

(15) ஒப்பற்ற ப்ரமாணமாய் விளங்கும் உபநிஷத்துக்களால் இவ்வாறு போற்றப்படுகின்ற திருமாலென்னும் மேம்பட்ட தத்துவத்திற்குத் தாழ்ந்த தத்துவம் சரீரமாயுள்ளதென ப்ரமாணங்கள் கூறுகின்றன. இந்தத் தாழ்ந்த தத்துவம் சேதநம் - அசேதநம் என்று இரு வகைப்படும்.

சேதநம்

(16) சேதநமென்னும் தாழ்ந்த தத்துவமே ஜீவனென வழங்குகின்றது. இதன் உருவம் மிகச் சிறியது இதற்குச் சக்தி முதலிய குணங்களும் மிகக் குறைவாயுள்ளன. இவ்வாறு சிறுமையும் குறைவும் கூடிய 'நான் என்ற சொல்லுக்குப் பொருள் இந்தச் சேதநமே, அதாவது ஜீவனே.

(17) இந்த ஜீவன் தன்னை அறிவதற்குச் சாதனமாக வேறொரு ஞானத்தை எதிர்பாராது 'நான்' என்று தானே தோற்றிக் கொண்டிருப்பான். இந்த ஜீவாத்மா ஞாந வடிவமாகவே உள்ளது. இதன்றி ஞானம் என்கிற குணமும் இந்த ஜீவனிடத்தல் உள்ளது. இவ்வாறு தானே ஞான வடிவாக இருந்து தானே ப்ரகாசிப்பதுடன் தனியாகவும் ஞானத்தைப் பெற்றிருப்பதால் இந்த ஜீவாத்மா ஞானமென்றும் வழங்கும். இந்த ஜீவன் ஞானமென்னும் குணத்தின் உதவியின்றியே தனக்குத்தானே 'நான்' என்று தோன்றும். ஞானமென்னும் குணத்தைக் கொண்டும் ஜீவன் தன்னை அறிய முடியும். மேலும் ஜீவன் தனக்கு எப்பொழுதும் அநுகூலமாயிருப்பதாகவே தனக்குத் தோன்றும். எந்த ஜீவனாவது தனக்குத் தன்னை எதிரியாக நினைப்பதுண்டா? ஜீவன் எந்த இடத்திலும் தடையின்றிப் புகும்படி மிகச் சிறிய உருவுடையது. உலகில் எள்ளுக்குள் எண்ணெய் இருப்பது வெளிப்படையாய்க் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அரணிக் கட்டைக்குள் தீ இருப்பதும் வெளிப்படையாய்ப் புலப்படுவதில்லை. அவ்வாறே ஜீவனும் கண்ணுக்குப் புலப்படாமல் எல்லா அசேதந வஸ்துக்களிலும் உட்புகுந்து அவற்றைச் சரீரமாகக் கொண்டுள்ளது. ஜீவனுடைய உருவத்தில் வளர்ச்சி - குறைதல் முதலிய தன்மைகள் கிடையா. எப்பொழுதும் சிறிதும் மாறுபடாமல் ஒரே நிலையில் இருக்கும் ஜீவனிடத்தில் ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் ஆகிய முக்குணங்களும் கிடையா. இந்த ஜீவனைக் கண்ணால் காணமுடியாது. காதால் கேட்க முடியாது. மூக்கால் முகர முடியாது ; வாயினால் உண்ண முடியாது ; கையினால் பிடிக்க முடியாது.

இப்படி ஐந்து கருவிகளுக்கும் அகப்படாதது ஜீவாத்மா. இந்த ஜீவன் சரீரத்துடன் இருக்கும் நிலையில் மட்டுமே தேவன் - மனிதன் முதலிய சொற்களால் அழைக்கப்படுகின்றது. சரீரத்தை விட்டுப் பரிசுத்தமான நிலையில் ஜீவனைப் பார்க்கும்போது தேவத் தன்மை - மனிதத் தன்மை முதலிய வேறுபாடுகள் ஜீவனிடத்துக் கிடையாவாதலின் தேவன் மனிதன் முதலிய சொற்களால் அழைக்கப்படுவதில்லை. 'நான்' என்று பொதுவான எண்ணம் எல்லாச் சீவர்களுக்கும் வரும். எல்லாரும் 'நான்' என்றே தன்னை அநுபவித்துக் கொள்வார்கள் ; எல்லாரும் தம்மை 'நான்' என்றே கூறிக் கொள்வார்கள்.

*(18)* 'நான்' என்ற சொல்லின் பொருளான ஜீவாத்மாவைப் பிறர் அறியும்போது தூரத்தில் இருப்பவனை 'அவன்' என்றும், அருகில் இருப்பவனை 'இவன்' என்றும், அதிக தூரத்திலும் மிக அருகிலும் இல்லாதவனை 'உவன்' என்றும், பிறனைப் பற்றிக் கேட்கும்போது 'எவன்' என்றும், எதிரில் இருப்பவனை 'நீ' என்றும் அழைப்பர்.

*(19)* இந்த ஜீவனென்னும் தத்துவம் ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்ட ஜீவன் என்றும் அந்தப் பந்தம் அற்ற ஜீவன் என்றும் இருவகைப்படும்.

*(20)* ஸம்ஸாரபந்தத்தில் அகப்பட்டவர்கள் பத்தரெனப் படுவர். இவர்கள் முன் செய்த பல்வகையான கர்மங்களாகிய திடமான பாசத்தால் அழுந்தக் கட்டப்பட்டவர். இந்தச் சரீரம் பெருந் துன்பங்களை அநுபவிப்பதற்கு இடமாகும். ஜீவர்கள் பல சரீரத்துடன் மாறி மாறிப் பன்முறை வெவ்வேறு பிறவிகளை அடைவர். பூமி - ஜலம் - தேஜஸ் - வாயு - ஆகாசம் என்னும் ஐந்து பூதங்களாலாகியது இந்தச் சரீரம். இச் சரீரம் இழுக்கும் வழியிலேயே சென்று உழன்று கொண்டிருப்பர். இந்த வாழ்க்கையில் பாபங்களைச் செய்வர். அந்தப் பாபங்கள்தாம் பின் இவர்கள் பல்வகைப்பட்ட நரகங்களில் வீழ்ந்து அல்லல்படக் காரணமாகின்றன. இந்த ப்ரக்ருதியென்பது நாற்புறமும் சூழ்ந்து கொண்டு எங்கும் வியாபித்துக் கீழும் சென்று மேலுலகங்களிலும் பரந்து முடிவின்றி இருப்பதாகும். இத்தகைய ப்ரக்ருதி மண்டலத்தில் அறிவும் ஒழுக்கமும் கொள்ளாது ஜீவர்கள் உழல்வர். சரீரமே ஆத்மா என்ற பொய்யறிவையும் அதைப் போஷிக்கக் கெட்ட கர்மங்களையும் செய்து கொண்டு அசுத்தமே நிறைந்த இந்தச் சரீரத்துடன் தாம் இருக்க வேண்டிய நிலைமையை இழந்து தகாத தன்மைகளைத் தம் ஆத்மாவுக்கு ஏறிட்டுக்கொண்டு தடுமாறுவர்.

கடலுள் மூழ்கும் மரக்கலம்போல் 'நமக்குத் துணை புரிபவர் யாராவது உளரா?' என்று கவலையுற்று இப் பிறவிக் கடலுள் துன்புற்று நிற்பர். இவர்களே பத்தரெனப்படுவர்.

(21) இவர்கள் செய்த முந்திய கர்மங்கள் வெள்ளம்போல் அநாதியாக வந்து கொண்டிருக்கின்றன. அந்தக் கர்மங்கள் பக்குவமான நிலையில் ஜீவர்களுக்கு ஸுகத்தையோ துக்கத்தையோ அவற்றின் பலனாகக் கொடுத்து அநுபவிக்கச் செய்கின்றன. சில கர்மங்கள் முன்னும் சில பின்னும் பக்குவமாவதுண்டு. அதற்கு ஏற்றவாறு அவற்றின் பலன்களை அநுபவிப்பதிலும் முன் பின் என்ற வேறுபாடுகள் உண்டு. எம்பெருமானுக்கு இவ்வாறு அல்லல்படும் ஜீவர்களைக் கரையேற்ற வேண்டுமென்று கருணை மிக உண்டு. ஆனால் இவர்களின் புண்ணியம் பரிபக்குவமாகி மோக்ஷத்திற்கு உபாயத்தைச் செய்யும் சூழ்நிலையை எதிர்பார்த்து நிற்கின்றது அவன் கருணை. இவ்வாறு உபாயத்தைச் செய்யும்படி தூண்டுகின்ற புண்ணியத்தின் பக்குவ நிலைக்கு ஏற்ப அவன் கொடுக்கும் மோக்ஷமாகிய பலனிலும் முன்பின் என்ற வேறுபாடு உண்டு. சிலர் முன்னும் சிலர் பின்னுமாக மோக்ஷம் பெறுவர்.

(22) ஸம்ஸாரபந்தமற்றவர் முக்தர் - நித்யர் என இரு வகைப்படுவர்.

(23) முக்தர் - சில சேதநர்களை எம்பெருமான் அவர்கள் கர்ப்பத்தில் இருக்கும்போதே கடாக்ஷித்துவிடுகின்றான். இந்தக் கடாக்ஷமென்னும் செல்வத்தைப் பெற்ற இத்தகைய பாக்யசாலிகள் ஸம்ஸாரத்தில் உழன்று கொண்டிருக்கும்போதே இவர்களுக்கு நற்கதி அளிக்கவேண்டுமென்று எம்பெருமானுக்குத் திருவருள் சுரக்கின்றது. மஹா பாபிகளுக்கும் ஒரு நல்ல வாய்ப்பு வருவதுண்டே! பீதாம்பரதாரியான எம்பெருமான் மோக்ஷோபாயத்தை உபதேசிக்கும் ஆசார்யனாக வந்து தன் திருவடிச் சின்னத்தை இவர்கள் முடியில் வைத்து ஞானத்தை உபதேசித்துக் கை கொடுக்கின்றான். இதனால் இவர்களின் அஹங்கார மமகாரங்கள் ஒழிகின்றன. எம்பெருமானுக்கு அடியனான தன்னைச் சுதந்திரனாக நினைப்பது அஹங்காரம். மற்ற வஸ்துக்களைத் தன்னுடையனவாக நினைப்பது மமகாரம். இவை இரண்டும் சேதநர்களுக்குப் படுகுழிகளாகும். உண்மையறிவு பெற்றதும் சேதநர்கள் இப்படுகுழிகளினின்று கரையேறி விடுகின்றனர். பெரிய பிராட்டியும் அவள் உறையும் திருமார்பனான எம்பெருமானுமாகிய திவ்ய தம்பதிகளின் சேர்த்தியை ஸ்ரீவைகுண்டத்தில் அநுபவிப்பதில் வரும் ஆநந்தத்தை

உணருகின்றனர். பின் செவி - வாய் - கண் - மூக்கு - உடல் என்னும் ஐந்து இந்திரியங்களாலும் அநுபவிக்கப் பெறும் உலகவின்பங்களில் ஆசை ஒழிகின்றனர். மற்ற எல்லா இன்பங்களிலும் மேம்பட்டதாய் அளவற்றதெனக் கருதப்படுவதாயுள்ள ஆத்மாநுபவமென்னும் கைவல்ய ஸுகத்தையும் மிகக் குறைவானதென்று உணர்ந்து உதறித் தள்ளுகின்றனர். பின் மோக்ஷம் பெற ஆசையால் அதற்கு உபாயத்தைச் செய்யப் பாரிக்கின்றனர். பக்தியோகம் முதலிய கடின உபாயத்தைச் செய்யத் தமக்குத் தகுதியில்லாமையை உணருகின்றனர். எம்பெருமானையன்றித் தமக்கு வேறு ரக்ஷகன் இல்லையென்று உறுதி கொள்கின்றனர். திருவநந்தாழ்வானாகிய திருப்பள்ளியில் அமர்ந்துள்ள திவ்ய தம்பதிகளின் திருவடிகளையே தமக்குச் சரணமாகக் கருதி அவர் திருவடிகளில் சரணாகதியைச் செய்கின்றனர். எம்பெருமானிடம் "உன் திருவடிகளையே சரணமடைந்தேன். அடியேனுக்கு வேறு கதியில்லை. அடியேனுக்கு அபயமளித்தருளவேண்டும். நெடுங்காலமாகத் தொடர்ந்துள்ள கொடிய கர்மங்களை வேரறுக்கவேண்டும். வஞ்சனை செய்யாது ப்ரக்ருதியின் தொடர்பை அழித்தருள வேண்டும்." என்று அவனை வளைத்துக்கொண்டு நிர்ப்பந்தித்துப் பிரார்த்திப்பர். பின் இந்தச் சரீரம் கழியும் காலத்தை எதிர்பார்த்து நிற்கின்றனர். மரணமடையும்போது இவர்களின் பாபங்கள் இவர்களின் எதிரிகளிடமும் புண்ணியம் இவர்களின் நண்பர்களிடமும் போய்ப் புகுந்துவிடும். இவ்வாறு கர்மங்கள் கழிந்தபின் இந்த ஜீவர்கள் தங்களை மேலே அழைத்துச் செல்பவர்களான அக்நி முதலிய தேவர்களுடன் புறப்படுகின்றனர். சூரிய மண்டலத்தின் நடுவே உள்ள நாடிவழியாய் நடந்து அண்டமெனும் கோட்டையைக் கடந்து பரமபதம் சேருகின்றனர். அங்கே திவ்ய அப்ஸரஸ்ஸுக்கள் "எம்பெருமானுக்கு அடியார்களே! வருக. வருக. இந்த பரமபதத்தை இனி நீங்கள் ஆள்வீர்களாக" என்று கூறி வரவேற்பர். பின் கொடிகளால் அழகு பெற்ற பெரிய மதிள்கள் சூழ்ந்த கோபுரத்தின் வாயிலைச் சேருவர். அங்கு உள்ள த்வாரபாலகர்கள் "எம்பெருமானுக்கு அடியார்களான நீங்கள் எங்களுக்கு ஸ்வாமிகளாதலின் நீங்கள் இங்கு வந்து நாங்கள் புரியும் கைங்கர்யங்களை நீபுரியவேண்டும்" என்று கூறி வரவேற்பர். அங்கு உள்ள நித்ய ஸூரிகள் தங்கள் பாக்ய வசத்தால் இவர்கள் அங்கு வந்ததாகக் கருதி இவர்களைத் தங்கள் திருமாளிகைகளுக்கு அழைத்துச் செல்வர் நல்ல உபசாரத்துடன் இவர்கள் திருவடிகளை தீர்த்தத்தால் விளக்குவர்கள் ; பின் பிராட்டிமார்கள் அழகிய தம்

பணிப்பெண்களுடன் கூட எம்பெருமானுடைய ஸ்ரீ சடாரியையும் வாசனைப் பொடிகளையும் பூர்ண கும்பத்தையும் மங்கள தீபங்களையும் கைகளில் ஏந்திக் கொண்டு வந்து வரவேற்பர். பின் திவ்ய தம்பதிகளும் எதிரே வந்து வரவேற்பர். பின் பரமபதநாதன் இவர்களுக்குத் தன்னைப் போன்ற தன்மையைக் கொடுத்துத் தன் திருவடிக்கீழ் கொள்ளத் திருவுள்ளம் கொண்டு தன் திருவடிகளை இவர்கள் முடியின் மீது வைத்தருள்வான். தேஜோமயமான பரமபதத்தில் சென்று இந்தத் திருவடிகளைப் பெறுதல் என்பது எளிதானதா? இப்படி அவன் திருவடிக்கீழ் சிறந்த வாழ்வைப் பெற்ற இவர்கள் அங்கு உள்ள பாகவத கோஷ்டிகளுடன் கூடி அநாதியாக அளவற்ற பேரின்பத்திலே மூழ்கியிருக்கும் அடியார்களான நித்யஸூரிகளோடு சிறிதும் வாசியின்றிக் கலந்து கொண்டு திருமாமணிமண்டபத்தில் ஸர்வலோகேச்வரனாக புண்டரீகாக்ஷனைச் சிறிதும் குறையின்றி விடாமல் பரிபூர்ணமாய் அநுபவிப்பர். அவ்வநுபவத்துக்குப் போக்கு வீடாக ஸர்வகாலங்களிலும் ஸர்வேச்வரனோடு கூடியிருந்து குறைவற்ற கைங்கர்யங்களைச் செய்து கொண்டேயிருப்பர். இவ்வாறு கைங்கர்யம் செய்ய இவர்கள் வரப்போகின்றனரென்று பரமபதத்தை அலங்கரித்து எம்பெருமான் எதிர்பார்த்துக் கொண்டிருப்பான். இப்படி அவனிடம் மோக்ஷம் பெற்றவர்களே முக்தரெனப்படுவர்.

(24) நித்யர் - ஆதியும் அந்தமுமின்றி நித்யமாய்ப் பரிபூர்ணாய்ப் பரவாஸு தேவனை அநுபவித்துக் கொண்டு எந்நாளும் அஜ்ஞாநத்தின் நாற்றமேயின்றி ஸ்ரீவைகுண்டத்தில் விளங்கிக்கொண்டிருப்பவர்கள். இவர்கலை ஸூரிகளென்றும் ஸாத்ய தேவர்களென்றும் பெயரிட்டு அழைக்கின்றது உபநிடதம். அநந்தன் - கருடன் - விஷ்வக்ஸேநர் முதலியோர் நித்யஸூரிகளெனப் படுகின்றனர்.

(25) ஸம்ஸாரமண்டலத்தில் உழலும் பத்தர்களுக்குக் கர்மபரம்பரை எந்தக் காலம் முதல் வந்தது என்று கூறமுடியாது. விதையினால் முளையா? முளையினால் விதையா? என்ற கேள்விக்கு விடைகாண முடியாதது போல் பிறவியால் கருமம், கருமத்தால் பிறவி என்ற முறையில் கர்மவெள்ளம் இவர்களுக்கு அநாதியாய் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் இதற்கு முடிவு மட்டும் உண்டு. மோக்ஷத்திற்கு உபாயத்தைச் செய்து மோக்ஷம் செல்லும்போது எல்லாக் கர்மங்களும் ஒழிந்துவிடுகின்றன. ஆதலின் பத்தர்களின் கர்மவெள்ளத்துக்கு ஆதி இல்லை ; அந்தம் மட்டும் உண்டு.

(26) ஸம்ஸாரபந்தம் நீங்கி மோக்ஷம் பெற்றவர் பரமபதநாதனுக்கு இடைவிடாது கைங்கர்யம் செய்கின்றனர். இந்தக் கைங்கரிய வெள்ளத்துக்கு ஆதி உண்டு. அந்தம் இல்லை. அதாவது - முக்திபெற்ற பின்பே இவர்கள் கைங்கர்யம் தொடங்குவதால் கைங்கர்யத்திற்கு ஆதி உண்டு. முக்தி பெற்ற பின் திரும்பி வருதல் இல்லாமையால் கைங்கர்யத்துக்கு முடிவு கிடையாது.

(27) நித்யஸூரிகள் செய்யும் கைங்கர்ய வெள்ளத்திற்கோ ஆதியும் இல்லை. அந்தமும் இல்லை. நித்யமானது. இதற்குக் காரணம் அவர்களுக்கு கர்மஸம்பந்தம் என்றும் சிறிதும் இல்லாமையேயாகும். எம்பெருமான் திருவுள்ளத்துக்கு முரண்பட்ட செயலைச் செய்ய நித்யர்களுக்கு எந்நாளும் சிறிதும் விருப்பம் உண்டாவதில்லை. ஆதலின் இவர்களுக்குக் கர்ம ஸம்பந்தம் எப்படி வரும்? கர்மம் இல்லாமையால் இவர்கள் நித்யமாய் அவனை அநுபவித்துக் கைங்கர்யம் செய்கின்றனர். இவர்களின் கைங்கரியங்களிலும் சில வரையறை உண்டு. திருவநந்தாழ்வான் - கருடன் - விஷ்வக்ஸேநர் முதலியவர்களுக்கு முறையே பள்ளியாதல் - வாஹநமாதல் - சேனைத்தலைமை முதலிய அதிகாரங்களில் வரையறை உள்ளது.

(28) மூலப்ரக்ருதி தொடங்கி மஹாந் - அஹங்காரம் என்ற வரிசையில் உள்ள அசேதந தத்துவம் இருபத்துநான்கு. இருபத்தைந்தாவது ஜீவன். இருபத்தாறாமவன் எம்பெருமான். ஜீவன் சரீரமாயும் எம்பெருமான் ஜீவனுக்கு ஆத்மாவாகவும் இருப்பதை வைத்து அவ்விரண்டு தத்துவங்களையும் ஒரே பொருளாகக் கணக்கிடுவதும் உண்டு. அப்படியாயின் எம்பெருமான் இருபத்தைந்தாவது தத்துவமாவான். இப்படி மற்ற த்துவங்களினின்று பிரித்துக் கணக்கிடப்பட்ட பரமாத்வாகிய எம்பெருமான் ஸ்வதந்த்ரன் : எல்லோருக்கும் தலைவன். ஆயினும் எல்லா நிலைகளிலும் அதாவது - பரவாஸுதேவ நிலையிலும் வ்யூஹ நிலையிலும் விபவாவதார நிலையிலும் அந்தர்யாமியாயுள்ள நிலையிலும் அர்ச்சை நிலையிலும் தன் அடியார்களுக்கு வசப்பட்டவனாகவும் அடியனாகவும் இருப்பவன். அவன் தனக்கு உள்ள முழுச் சுதந்திரத்தாலேயே தானாக விரும்பி இவ்வாறு நடந்து கொள்கின்றான். இத்தன்மைகள் அவனுக்கு இயற்கையாயுள்ள சுதந்திரத் தன்மையையும் தலைமையையும் பாதிக்கமாட்டா.

(29) ஜீவர்கள் சில செயல்களைத் தாங்களே சுதந்திரமாகச்

செய்கின்றனர். அவர்கள் கொண்டுள்ள சரீரம் - வீடு முதலிய பொருள்கள் அவர்களின் உரிமைப் பொருள்களாகவே வழங்குகின்றன. ஆதலின் அவர்களுக்கு அப்பொருள்களில் உரிமையுள்ளதாய்த் தெரிகிறது. உண்மை நிலையை ஆராய்ந்தால் எந்த நிலையில் எந்தச் செயலை ஜீவர்கள் சுதந்திரமாகச் செய்தாலும் அந்தச் சுதந்திரம் அவர்களுக்கு இயற்கையாய் அமைந்ததன்று. எம்பெருமானுக்கு மிகவும் அடங்கியிருத்தலால் வருவதேயாகும். எம்பெருமான் தனக்கு முற்றிலும் வசப்பட்ட ஜீவர்களுக்குச் சில செயல்களைச் செய்யுமளவுக்குச் சிறு சுதந்திரத்தை அளிக்கின்றான். அவ்வாறே வீடு - மனை - சரீரம் முதலியவற்றுக்கு ஜீவர்கள் உரிமையாளராய்த் தோற்றுவதும் அவை அவர்களுக்கு உடைமைகளாய்த் தோற்றுவதும் உண்மையில் எம்பெருமான் சிறிது அளவு அளித்த உரிமையைக் கொண்டதேயாகும்.

(30) எம்பெருமானே அனைத்துக்கும் மேலான தலைவனாயிருப்பவன். அவனுக்கு மேம்பட்ட தலைவன் ஒருவனும் இலன். அவன் ஒருவனே மிக மேம்பட்ட தத்துவம். ஜீவர்கள் சில வஸ்துக்களுக்குத் தலைவர்களாய்த் தோற்றினாலும் அவர்கள் நடுவிலுள்ள தலைவரேயாவர். அவர்களுக்கும் மேலான தலைமையுடையனாக எம்பெருமான் விளங்குவதால் அவர்கள் நடுவேயுள்ள சிறுதலைவர்தாமே! ஆதலின் ஜீவர்கள் தாழ்ந்த தத்துவமாவர். இந்த இருவகைத் தத்துவங்களிலும் வேறுபட்டது அசேதநமென்னும் தாழ்ந்த தத்துவம். இது த்ரி குணம் - அத்ரிகுணம் என இருவகைப்படும். த்ரிகுணம் ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களையுடையது. அத்ரிகுணம் மேற்கூறிய மூன்று குணங்களும் அற்றது. காலத்திற்கும் சுத்த ஸத்துவத்துக்கும் இம்மூன்று குணங்கள் கிடையா. ஆதலின் அவை அத்ரிகுணத்தின்பால் சேரும்.

(31) அசேதநம், ப்ரக்ருதி - காலம் - சுத்த ஸத்துவம் எனப் பொதுவாய் மூவகைப்படும். இந்த மூன்றும் அறிவற்றனவாதலின் அசேதநமாகின்றன. இங்கு ஒரு கேள்வி - பிற வஸ்துக்களை அறிவதற்குச் சாதனமாய் ஜீவர்களிடமும் பரமாத்மாவினிடமும் தர்மபூதஜ்ஞானம் என்னும் ஓர் அறிவுண்டே! அதற்கு ஜ்ஞாநம் இல்லையே! ஆதலின் அந்தத் தர்மபூதஜ்ஞாநமும் ஓர் அசேதநப் பொருள்தானே! அதையும் சேர்த்து நான்கு அசேதநமென்றன்றோ கணக்கிட வேண்டும்! அசேதநம் மூவகைப்படுவதாக எவ்வாறு கூறலாம்? என்று. இதற்கு ஸமாதாநம் - இந்த ரஹஸ்யம்

எம்பெருமானுக்குச் சரீரமாய் உள்ள வஸ்துக்களையும் அவற்றைச் சரீரமாகக் கொண்டு உயிராய் நிற்கும் எம்பெருமானையுமே விளக்கத் தொடங்கியது. எல்லாத் தர்மபூதஜ்ஞாநமும் எம்பெருமானுக்குச் சரீரமாகமாட்டா. ஓர் ஆத்மாவுக்கு உள்ள தர்மபூதஜ்ஞாநம் அதற்குச் சரீரமென்னும் வழக்கு உலகிலும் சாஸ்த்ரங்களிலும் கண்டதில்லை. ஜீவர்களுடைய தர்மபூதஜ்ஞாநம் எம்பெருமானுக்குச் சரீரமாயிருந்தபோதிலும் எம்பெருமானுடைய தர்மபூதஜ்ஞாநம் அவனுக்குச் சரீரமாகாது. ஆதலின் அவனுக்குச் சரீரமான அசேதநங்களைக் கணக்கிடும் இந்த வகுப்பில் தர்மபூதஜ்ஞாநத்தைச் சேர்த்துக் கணக்கிடவில்லை. மற்றொரு காரணமும் உண்டு. அதாவது - சேதநர் மோக்ஷம் பெறுவதற்கு எம்பெருமானையும் அவனுக்குச் சரீரமாயுள்ள வஸ்துக்களையும் பற்றிய அறிவே அவசியம் வேண்டுவது. இவற்றைப் பற்றி விளக்கமாய் அறிந்தால் மோக்ஷத்தில் விருப்பம் உண்டாகும். இந்த விசேஷமான பயனைக் கருதியே ஈச்வரனையும் சேதநரையும் விளக்கி அசேதநத்தை மூன்று வகையாய்ப் பிரித்தனர். இந்த தர்மபூதஜ்ஞாநம் அசேதநம் என்பதைப் பற்றிய ஆராய்ச்சி மோக்ஷம் பெறுதற்கு அவசியமானதன்று. ஆதலாலும் அதை நான்காவது அசேதநமாகக் கணக்கிடவில்லை. அந்த மூன்றை மட்டும் அசேதநப் பிரிவில் சேர்த்து முன்னோர்கள் அநுஸந்தித்தனர்.

(32) த்ரிகுணம், ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் ஆகிய மூன்று குணங்களுக்கும் இருப்பிடமான வஸ்து.

(33) இவற்றுள் ஸத்துவகுணம் ஜீவனுக்கு ஜ்ஞாநம் ஸுகம் முதலியவற்றை அளிக்கும். ரஜோகுணம் ஆசை துன்பம் முதலியவற்றை உண்டாக்கும். தமோகுணம் கவனக்குறைவு மதிமயக்கம் முதலியவற்றை விளைவிக்கும்.

(34) மூலப்ரக்ருதியில் ஒரு பகுதி மஹான் என்னும் தத்துவமாக மாறுகின்றது. மஹானில் ஒரு பகுதி அஹங்காரமாக மாறுகின்றது. இம்முறையில் வைத்துப் பார்க்கும்போது ஒரு வஸ்துவே மற்றொன்றாக மாறுவதால் நிலை மட்டும் மாறுவதைக் கொண்டு தனித்தனித் தத்துவமாக எவ்வாறு கணக்கிடலாமென்ற கேள்வி எழலாம். ஸமாதாநம் - அந்த அந்தத் தத்துவத்தில் மாறுபடாத பகுதியும் இருப்பதால் அதைக்கொண்டு தனித்தனித் தத்துவமாகக் கணக்கிடப்பட்டது. மஹாநாக மாறுபாட்டை அடையாத பகுதி ப்ரக்ருதி, அஹங்காரமாக மாறுபாட்டை அடையாது நிற்கும் பகுதி மஹாந் - இந்த முறையை வைத்து

இருபத்திநான்கு தத்துவங்களாகக் கணக்கிட்டுச் சாஸ்த்ரம் பேசுகின்றது. அவையாவன - மூலப்ரக்ருதி - மஹான் - அஹங்காரம் - மனம் - ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்து - கர்மேந்திரியங்கள் ஐந்து - தந்மாத்ரங்கள் ஐந்து - பூதங்கள் ஐந்து என்பன.

(35) மூலப்ரக்ருதியில் ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களும் மிகுதி குறைவில்லாமல் ஸமமான அளவில் இருக்கும் நிலைதான் மஹாப்ரளயம் எனப்படுகின்றது. இந்த மூன்று குணங்களும் சமமாயிருக்கும் வரை இந்த ப்ரக்ருதியினின்று மஹான் முதலிய தத்துவம் உண்டாவதில்லை. பின்பு ஸ்ருஷ்டியைச் செய்ய வேண்டுமென்று ஸர்வேச்வரன் எப்பொழுது ஸங்கல்பிக்கின்றானோ, அப்பொழுதுதான் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் ஆகியவற்றில் ஒன்று குறைந்தும் ஒன்று மிகுந்தும் வேறுபாடுகள் உண்டாகும். அப்பொழுதுதான் ப்ரக்ருதியில் ஏதோ ஒரு பகுதி மஹான் என்ற தத்துவமாய் மாறுகின்றது. அந்த மஹானிலும் ஸாத்துவிகம் - ராஜஸம் - தாமஸம் என்ற பிரிவுகள் உண்டு. இந்தப் பிரிவுகள் அந்த அந்தக் குணத்தின் மிகுதி குறைவுகளைப் பொறுத்தனவாகும்.

(36) இந்த முறையிலேயே பகவத் ஸங்கல்பத்தால் மஹானின் ஒரு பகுதியினின்று அஹங்காரம் என்னும் தத்துவம் தோன்றுகிறது. இந்த அஹங்காரத்திலும் ஸாத்துவிகம் - ராஜஸம் - தாமஸம் என்ற பிரிவுகள் உண்டு.

(37) இந்த மூன்று வகை அஹங்காரங்களுள் ஸாத்துவிக அஹங்காரத்தினிந்து கர்மேந்திரியம் ஐந்து, ஜ்ஞாநேந்திரியம் ஐந்து, மனம் ஆகிய பதினொன்று இந்த்ரியங்களும் உண்டாகின்றன. தாமஸ அஹங்காரத்தினின்று அந்த அந்தத் தந்மாத்ரைகளை வழியாகக்கொண்டு ஐந்து பூதங்களும் உண்டாகின்றன (விளக்கம் கீழே).

தந்மாத்ரங்களும் பூதங்களும் உண்டாகும் முறை - தாமஸ அஹங்காரத்தினின்று சப்ததந்மாத்ரம் பிறக்கின்றது. அதனின்று ஆகாசம் உண்டாகின்றது. ஆகாசத்தினின்று ஸ்பர்சதந்மாத்ரம், அனின்று வாயு, வாயுவினின்று ரூபதந்மாத்ரம், அதனின்று தேஜஸ், தேஜஸிலிருந்து ரஸதந்மாத்ரம், அதனின்று ஜலம், ஜலத்தினின்று கந்ததந்மாத்ரம், அதனின்று பூமி - என்ற முறையில் தந்மாத்ரங்களும் பூதங்களும் உண்டாகின்றன.

தந்மாத்ரமாவது - ஒவ்வொரு பூதமும் பிறக்கும்போது அதற்கு முன்பு ஸூக்ஷ்மமான நிலையில் உள்ளத்ரவ்யம். பால்

தயிராக மாறுபாடு அடையும்போது நடுவில் உள்ள ஒரு நிலை போல் ஒரு பூதமாக ஒரு த்ரவ்யம் மாறும்போது நடுவில் உள்ள நிலை தந்மாத்ரை என்றும் அந்த நிலையையுடைய த்ரவ்யம் தந்மாத்ரம் எனவும் வழங்கும்.

ராஜஸ அஹங்காரத்தின் செயல் யாதெனில் - மற்ற இரண்டு அஹங்காரங்களும் தத்தம் காரியப்பொருள்களை உண்டாக்கும் போது அவற்றுக்குத் துணையாய் நிற்பதுவேயாகும்.

*(38)* பானைக்கு மண்போல் ஐந்து தந்மாத்ரங்களும் ஐந்து பூதங்களுக்குக் காரணமாயுள்ளன. அவற்றில் சப்தம் முதலிய குணங்கள் உண்டு. ஆனால் நாம் அறியமுடியாதவாறு ஸூக்ஷ்மமாய் இருக்கும். ஆகாசம் முதலிய அந்த அந்தப் பூதங்களுக்குச் சப்தம் முதலிய குணங்கள் நாம் அறியுமாறு ஸ்தூலங்களாய் உண்டு. அந்த அந்தத் தந்மாத்ரங்களான வஸ்துக்கள் வேறு. சப்தம் முதலிய குணங்கள் வேறு. இரு வகுப்புக்களும் ஒன்றாகமாட்டா.

*(39)* ஐந்து பூதங்களிலும் உள்ள குணங்கள் ஐந்து, அவையாவன - ரூபம் - ரஸம் - கந்தம் - ஸ்பர்சம் - சப்தம் என்பன. ஐந்து பூதங்களுள் பூமியில் இந்த ஐந்து குணங்களும் உள்ளன. ஜலத்தில் கந்தம் தவிர எஞ்சிய நான்கும் உள்ளன. தேஜஸ்ஸில் ரஸமும் கந்தமுமன்றி மற்ற மூன்றும் உண்டு. வாயுவில் சப்தமும் ஸ்பர்சமும் உள. ஆகாசத்தில் சப்தம் மட்டுமே உண்டு. இந்த முறையைத் திருமழிசைப் பிரான் அருளிய திருச்சந்தவிருத்தத்தில் 'பூநிலாய' என்று தொடங்கும் முதற் பாட்டினால் அறியலாம்.

*(40)* இவ்வாறு ப்ரக்ருதியினின்று மஹாந். அதினின்று அஹங்காரம். அதினின்று தந்மாத்ரங்கள் ஐந்து, பூதங்கள் ஐந்து, இந்திரியங்கள் பதினொன்று ஆகிய இருபத்தொன்று தத்துவங்கள் பிறக்கின்றன. மேலும் பூதங்களை ஒன்றுகொன்று கலந்து எம்பெருமான் படைக்கும் படைப்புக்கு அளவில்லை. எம்பெருமானுடைய இந்தப் படைப்பால் உண்டாகும் காரியப் பொருள்களான ப்ரஹ்மாண்டங்களும் எண்ணற்றவை. பெரிய கடலினின்று பற்பல அலைகளும் நுரைகளும் குமிழிகளும் உண்டாகின்றனவல்லவா? அவைகள் நிலையாய் நிற்கின்றனவா? இல்லை. உண்டாவதும் அழிவதுமே அவற்றின் செயல்கள். ஆயினும் அவற்றைப் போன்ற அலைகளும் நுரைகளும் குமிழிகளும் புதியன புதியனவாய்த் தோன்றி அழிந்து கொண்டேயிருக்கும். ஆற்றில் வெள்ளம் தொடர்ந்து

வந்துகொண்டேயிருக்கின்றது. ஒரே வெள்ளமா? இல்லை. ஆனால் வெள்ளம் தடையின்றித் தொடர்ந்து ஓடிக்கொண்டிருப்பதாகவே காண்கின்றோம். இவ்வாறே ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களையுடைய மூலப்ரக்ருதியினின்று எம்பெருமானது ஸங்கல்பத்தால் தோன்றும் எண்ணற்ற ப்ரஹ்மாண்டங்கள் முதலிய எல்லாக் காரியப் பொருள்களும் அழிந்து அழிந்து பின்னும் உண்டாகிக் கொண்டேயிருக்கும். ஒன்று அழிந்தாலும் மற்றொன்று தோன்றிக் கொண்டேயிருக்கும். இவ்வாறே படைப்பு முறையும் அழிவு முறையும் அநாதியாகத் தடைப்படாமல் நடந்து கொண்டேயிருக்கும். இவ்வாறே படைப்பு முறையும் அழிவு முறையும் அநாதியாகத் தடைப்படாமல் நடந்து கொண்டேயிருக்கும். இவ்வாறு நடப்பதற்குக் காரணம் காலம். அந்தக் காலமும் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தைத் தழுவியே நடப்பதாகும். ஜீவர்களைத் தத்தம் கர்மத்துக்கு ஏற்றவாறு ப்ரக்ருதியால் மயங்கச் செய்து அந்தந்தக் கர்மங்களின் பயனை அநுபவிக்குமாறு செய்வது எம்பெருமானுக்கு ஒரு லீலையாகும். இதனால் இவன் இன்புறுகின்றான். இவ்வாறு படைத்தல் அழித்தல் முதலிய செயல்களுக்கெல்லாம் தன் ஸங்கல்பத்தையும் அதைத் தழுவியே நடக்கும் காலத்தையும் காரணமாக்குகின்றான் எம்பெருமான். இந்தக் காலத்துக்கும் ஆதியும் இல்லை ; அந்தமுமில்லை.

*(41)* காலம் என்பது யாது? - உலகில் எதிர்காலம் - நிகழ் காலம் - இறந்தகாலம் - முன்பு - பின்பு - ஒருகால் - பலகால் என்றெல்லாம் பேசுகின்றோமே ; இச்சொற்களால் வழங்கப்படும் வஸ்துவே காலமென்பது.

*(42)* உலகில் காலத்தின் எல்லையைப் பல் வகையாய் வழங்குகின்றோம். அதாவது - கணப்பொழுது - (நாழிகையாமம் - பகல் - இரவு) நாள் - மாதம் - ஆண்டு - யுகம் - கல்பம் ( - ப்ரஹ்மாவின் ஒரு நாள் ) - பரார்த்தம் ( - ப்ரஹ்மாவின் நூறாண்டு வாழ்நாளில் ஒரு பாதி) - த்விபரார்த்தம் (- ப்ரஹ்மாவின் முழு ஆயுஸ்) - மஹாகல்பம் ( - அதிலும் பெரிய காலம்) என்றெல்லாம் காலத்தின் பகுதிகள் கூறப்படுகின்றனவல்லவா? இவையெல்லாம் கழியக் கழிய மறுபடியும் வந்து வந்து மாறிமாறிச் சுற்றிக் கொண்டேயிருக்கின்றவே! இவையெல்லாம் எதனால் வருகின்றன? ஸ்வதந்த்ரனான எம்பெருமானது ஸங்கல்பத்தாலேயே. ஒரு பெரிய சுழற்காற்று வஸ்த்துக்களைச் சுழன்று சுழன்று வருமாறு செய்வதில்லையா? அவ்வாறே

பகவானுடைய ஸங்கல்பம் இந்தக் காலத்தைப் பல்வகையில் சுழற்றுகின்றது. கணப்பொழுது முதல் மஹாகல்பம் வரையில் உள்ள காலத்தின் பகுதிகள் இதுவரை எத்தனை கழிந்திருக்கும்! எதாவது கணக்கிட முடியுமா? இனிமேல் வரப்போகும் காலப் பகுதிகளைத்தான் கணக்கிட முடியுமா? எவ்வாற்றானும் முடியாது. அவற்றுக்கு அளவு ஏது? காலத்தின் இந்த உட்பிரிவுகளைக் கொண்டே இந்த ஸம்ஸார மண்டலத்தில் உள்ள காரியப் பொருள்களை உண்டாயினவென்றும் நிலைபெறுகின்றனவென்றும் அழிகின்றனவென்றும் வரையறையிட்டு வழங்குகின்றோம்.

(43) சுத்தஸத்துவ மயமாகவேயுள்ள ஸ்ரீ வைகுண்டத்தில் இந்தக் காலம் உண்டா? இல்லையா? உண்டு. ஆனால் இந்த ஸம்ஸார மண்டலத்தில் உள்ள காரியப் பொருள்களின் உற்பத்தி முதலியவற்றுக்குக் காலம் காரணமாவது போல் அங்கு இல்லை. அங்கு உண்டாகும் காரியப் பொருள்களின் உற்பத்தி முதலியவற்றுக்குக் காலம் எதுவும் செய்ய முடியாது. அங்கு எல்லாம் எம்பெருமானுடையவும் நித்யர்களுடையவும் முக்தர்களுடையவும் ஸங்கல்பத்தாலேயே தோன்றுவன.

(44) சுத்த ஸத்துவம் என்பது யாது? - இது ஸத்துவ குணத்திற்கு மட்டும் உறைவிடமான வஸ்து. இது ஸ்ரீவைகுண்டத்தில் தான் உண்டு. இது ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்ற மூன்று குணங்களையும் பெற்றிராத காலத்திற்காட்டிலும் வேறுபட்டது ; மேற்கூறிய முக்குணங்களுக்கும் உறைவிடமான ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டது. இத்தகைய சுத்த ஸத்துவப் பொருளில் தனித்த ஸத்துவ குணம் மட்டுமே உள்ளது. அந்த ஸத்துவ குணமும் இக் கர்ம பூமியில் மற்ற இரண்டு குணங்களுடன் நடையாடும் ஸத்துவ குணம் போன்றதன்று. அது ஓர் அதியற்புதமான ஸத்துவ குணம். இதற்கு உறைவிடமான வஸ்துதான் சுத்த ஸத்துவமெனப்படுகிறது.

(45) இந்தச் சுத்த ஸத்துவத்தின் பெருமையைச் சாஸ்த்ரங்களைக் கொண்டு ஆராய்ந்தால் சிறிது உணரலாம். மஹாயோகிகளான ஸநகர் ஸநந்தநர் முதலியோர்கள் கூட இதன் ஸ்வரூபத்தையோ ஸ்வபாவத்தையோ வாய்விட்டுப் பேச முடியாது. மனத்தாலாவது நினைக்கமுடியுமோ? அதுவும் முடியாது. ஆழ்வார்கள் இந்தச் சுத்த ஸத்துவ வடிவமான ஸ்ரீவைகுண்ட லோகத்தை 'சேணுயர்வானம்' ( - மிக உயர்ந்த ஆகாசம்) 'தெளிவிசும்பு' ( - ஞானம் மலரும் இடம் 'பொன்னுலகு' ( - பொன்போல் ப்ரகாசமான உலகம்) 'கலங்காப் பெருநகரம்'

(எந்நாளும் அழியாது நித்யமான பெரிய நகரம்) மாகவைகுந்தம் (- பெரிய ஆகாசமாகிய பரமபதம்) என்றெல்லாம் புகழ்ந்து மிக விலக்ஷணமானதெனப் பாடியருளியுள்ளனர். இந்த ஸ்ரீவைகுண்டத்தில் அநுபவிக்கப்படும் பொருள்களோ அளவிட முடியாத ஆச்சர்யமாயுள்ளன. அநுபவிக்கக் கருவிகளான வஸ்துக்களோ அதியற்புதமானவை அநுபவிக்கப் பாங்கான இடங்களும் அதியாச்சர்யமானவை. இத்தகைய லோகத்துடன் மிக மேம்பட்டனவான ப்ரஹ்மலோகம் முதலிய லோகங்களைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது அந்த லோகங்களெல்லாம் நரகத்தை ஒத்தனவாய்த் தோற்றும். இந்தச் சுத்த ஸத்துவம்தான் பரமபதத்தில் ஸர்வேச்வரனுக்கும் நித்யஸூரிகளுக்கும் முக்தர்களுக்கும் திருமேனி திருவவயவம் முதலியனவாக வடிவு கொண்டுள்ளது. இவ்வாறே இந்த சுத்தஸத்துவம் பரமபதத்தில் மற்றும் பல வஸ்துக்களாகவும் மாறிக் கொண்டு விசித்திரமான வெள்ளம்போல் மேன்மேலும் செயலாற்றிக் கொண்டேயிருக்கும்.

(46) ஸ்ரீவைகுண்டமென்பது தனிப்பட்ட ஒரு திவ்ய லோகம். இதில் பல தேசங்கள் - பல நகரங்கள் - விமாநங்கள் - மண்டபங்கள் - கோபுரங்கள் முதலிய பல பிரிவுகள் உண்டு. இப்பிரிவுகளுக்கு எண்ணில்லை; எல்லையுமில்லை. இத்துணை ஸ்தாநங்களையுடைய பரமபதத்தில் மிக மிக முக்கியத் தன்மை வாய்ந்தது திருமாமணி மண்டபம் ஒன்றேயாகும். இதில் திருவநந்தாழ்வானென்னும் தெய்வம் ஒரு கட்டில் வடிவமாக அமைந்துள்ளது. இதில் அமர்ந்துள்ள திவ்ய தம்பதிகள் உலகைக் காத்தருளும் சிந்தையைக் கொள்வதால் இந்த ஆதிசேஷனாகிய கட்டிலுக்குத் 'திவ்யயோக பர்யங்கம்' என்று திருநாமம் இதில் திவ்ய தம்பதிகள் பத்தர் - முக்தர் - நித்யர் என்கிற மூன்று வகைச் சேதநர்களையும் ப்ரக்ருதி காலம் - சுத்தஸத்துவம் என்னும் மூன்று வகை அசேதநங்களையும் தமக்கு வசப்பட்டனவாக்கிக் கொண்டு எல்லோருக்கும் தலைமை பூண்டு எழுந்தருளியுள்ளனர். இவ்வாறு பரமபதத்தில் திவ்ய தம்பதிகள் இருக்கும் இருப்பை மோக்ஷத்தைப் பெற விரும்பும் சேதநர் எப்பொழுதும் தம் மனத்தில் அநுஸந்தித்துக் கொண்டேயிருப்பர். முக்திபெற்ற நிலையில் எப்போதும் கண்கூடாகக் கண்டு அநுபவித்துக் கொண்டேயிருக்கலாம்.

(47) தத்துவம் இரண்டு. (1) மேம்பட்டது (2) கீழ்ப்பட்டது. மேம்பட்ட தத்துவம் எம்பெருமான். கீழ்ப்பட்டவை சேதநமும் அசேதநமும். சிற்சில தன்மைகள் மூன்று தத்துவங்களுக்கும் பொதுவாயிருப்பன. சில தன்மைகள் சிலவற்றுக்கே உரியன.

உதாஹரணமாய் - அநுபவிக்கும் தன்மை ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பொதுவாகும். அநுபவிக்கப்படும் தன்மை சேதநம் - அசேதநம் - ஈசுவரன் ஆகிய மூன்று தத்துவங்களுக்கும் பொதுவாகும். ஒன்றுக்குக் காரணமாகும் தன்மை இந்த மூன்று தத்துவங்களுக்குமே உண்டு. செயலாற்றும் தன்மை ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் மட்டுமே உண்டு. இப்படி சில அம்சங்களில் மேம்பட்டதும் கீழ்ப்பட்டனவுமான தத்துவங்கள் ஒத்திருந்தாலும் சில விசேஷாம்சங்களில் வேறுபட்டு நிற்பனவாகும். உதாஹரணமாய் - மேம்பட்ட தத்துவமான எம்பெருமான் சேஷியாய் (சிறப்புப் பெறுமவனாய்) நியமிப்பவனாய், எல்லா வஸ்துக்களிலும் கலந்திருப்பவனாய், எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமாய் நிறபவன். கீழ்ப்பட்ட தத்துவமாகிய ஜீவன் அசேதநம் இரண்டுமோ அத்தன்மைகளுக்கு மாறுபட்ட நிலையில் சேஷமான வஸ்துக்களாய், அவனால் நியமிக்கப்படுவனவாய், அவன் கலந்திருப்பதற்கு ஏற்ற இடமாய், அவனால் தரிக்கப்படுவனவாய் உள்ளன. இவ்வாறு சில தன்மைகளில் ஒத்தும் சில தன்மைகளில் மாறுபட்டும் இருந்து இந்தத் தத்துவங்கள் கூடியிருக்கும் நிலையை * ப்ரணவத்திலும் 'ஸத்யம்' 'புருஷன்' 'நாராயணன்' 'புருஷோத்தமன்' என்ற சொற்களிலும் ஆழ்வார் பாசுரங்களிலும் சுருக்கமாக அநுஸந்திக்கலாம்.

(48) அசேதநம் என்பது அறிவற்ற வஸ்து. இந்த வஸ்து தன்னையோ மற்றொன்றையோ அறிய முடியாது. ஒன்றை அறிந்தால்தானே அதற்கு ஏற்ற செயலைச் செய்யமுடியும்? அறிவே இல்லாதபடியால் அதனால் வரும் செயலும் கிடையாது. ஸுகமோ துக்கமோ அல்லது வேறு பலனோ, எதையும் அநுபவித்தல் இந்த அசேதநப் பொருளுக்குக் கிடையாது. தான் ப்ரகாசிப்பதால் வரும் பலனையும் இந்த அசேதநம் அநுபவிக்கமுடியாது. அறிவில்லாமைதான் இதற்கெல்லாம் காரணமாகும். இவ்வாறு அறிவற்ற வஸ்துவே அசேதநப் பொருளாகும்.

---

* (1) ப்ரணவத்தில் எம்பெருமானுக்கு ஜீவன் அடியனென்பது

(2) ஸத்யம் - ஸத் = சேதநன், தி = அசேதநம், யம் = இரண்டையும் நியமிப்பவன்

(3) புருஷன் - 'புருஷனால் இந்த லோகம் நிறைந்துள்ளது' என்ற வாக்யம். வ்யாபித்திருப்பவன் எம்பெருமான்.

(4) நாராயணன் - எல்லாவற்றுக்கும் ஆதாரமாயிருப்பவன்.

(5) புருஷோத்தமன் - இச்சொல்லில் கீழ்க்கூறிய நான்கு அர்த்தங்களும் உள்ளன.

(49) ஜீவன் என்னும் சேதந தத்த்வத்துக்குக் கீழே கூறிய தன்மைகள் நான்கும் உண்டு. அதாவது (1) ஜீவன் தன்னையும், தர்மபூதஜ்ஞாநத்தைக்கொண்டு பிற பொருள்களையும் அறிகின்றான். (2) அந்த அறிவின் பயனாகச் செயலைச் செய்கின்றான். (3) தன் கர்மங்களுக்குப் பலனாய் வரும் ஸுகம் துக்கம் முதலியவற்றை அநுபவிக்கின்றான். ஆனால் ஒரு விசேஷம் - இந்த நான்கு தன்மைகளையும் இவன் சுதந்திரமாய்ப் பெறமுடியாது. தான் செய்த கர்மங்களுக்கு ஏற்றவாறு எம்பெருமான் கொள்ளும் ஸங்கல்பத்தாலேயே பெறுகின்றான்.

(50) சேதநர், பத்தர் - முக்தர் - நித்யர் என மூன்று வகைப்படுவர் என்றும், அசேதநம், த்ரிகுணம் (ப்ரக்ருதி) - காலம் - சுத்த ஸத்துவம் என்று மூன்று வகைப்படுமென்றும் கீழே கூறினோம். இவையனைத்தும் கீழ்ப்பட்ட தத்துவங்களாகும். இவற்றின் ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் எல்லாம் தான் இட்ட வழக்காம்படி தனக்கு வசமாயிருக்கப் பெற்ற ஸர்வேச்வரனே மேம்பட்ட தத்துவமாவான்.

(51) இவ்வாறு சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களையும் கீழே கூறியபடி அவ்வவற்றின் தன்மையுடன் விளக்கமாய் அறிவதனால் வரும் பயன் என்ன? என்பதைச் சிந்திக்க வேண்டும். நன்கு ஆராய்ந்தால் அப்பயன்கள் தெளிவாய்ப் புலப்படும். அவையாவன -

1. விபரீத ஜ்ஞாநம் நீங்கும் ; 2. தெளிவு ஏற்படும் ; 3. கெட்ட எண்ணம் தீரும் ; 4. நற்பயனில் ஆசை பிறக்கும் ; 5. அதற்கு வேண்டிய வழியை நாடத் தோன்றும். இவற்றின் விளக்கம் வருமாறு

(1) சேதநன் (கீழ் 49ல் சொல்லிய) தன் தன்மைகளை அறிவதில்லை. அதனால் தன் சரீரத்தையே ஆத்மாவாகக் கருதி விடுகின்றான். அசேதநத்துக்கு இல்லாத அத்தன்மைகளைத் தன்னிடம் இருப்பனவாக அறிந்தால் சேதநனான தனக்கும் அசேதநமான தன் சரீரத்துக்கும் உள்ள வேறுபாடு நன்கு புலப்படும். அதனால் இரண்டையும் ஒன்றாக நினைத்தலென்னும் விபரீத ஜ்ஞாநம் ஒழியும். மேலும் சேதநன், தன்னையும் சரீரமாகக் கொண்டுள்ளவன் பரமாத்மா என்ற உண்மையை அறிவதில்லை. அதனால் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்துக் கொண்டிருக்கிறான். தன்னைச் சரீரமாகக் கொடு தன்னைத் தரிப்பவன் எம்பெருமானென்றும் தன்னை எல்லாவகையிலும் நடத்துமவன்

அவனே என்றும் அறிந்துகொண்டால் தான் ஸ்வதந்த்ரன் என்ற விரீத ஜ்ஞாநமும் ஒழிந்து போகும்.

(2) மேலும் தனக்கும் எம்பெருமானுக்கும் உள்ள ஸம்பந்தம் முதலியவற்றை அறிந்துகொண்டால் தான் கைக்கொள்ள வேண்டிய பலன் எது, கைவிட்டு ஒழிக்கவேண்டியது எது என்ற தெளிவு உண்டாகும்.

(3) இதனால் தன் ஸ்வரூபத்திற்குப் பொருந்தாத நிலையற்ற ஸ்வர்க்கம் முதலிய ஸுகங்களை விரும்பியிருந்த கெட்ட நிலை ஒழியும்.

(4) இதனால் மோக்ஷத்தைப் பெற்று எம்பெருமானைச் சாச்வதமாய் அநுபவிக்க வேண்டுமென்ற ஆசை உண்டாகும்.

(5) இதனால் அந்த மோக்ஷத்தைப் பெறுதற்கு வேண்டிய வழியைச் செய்யப் பாரித்து நிற்கும் நிலை உண்டாகும்

இவையே இந்த ரஹஸ்யத்தில் கூறிய தத்துவஜ்ஞாநத்தால் வரும் பயன்களாகும்.

தத்துவ மாத்ருகை முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 7. ரஹஸ்ய மாத்ருகை

(வடமொழியில் 'அ' முதல் 'க்ஷ' வரையில் உள்ள ஐம்பத்தொன்று எழுத்துக்களுக்கு 'மாத்ருகை' எனப் பெயர். இந்த ரஹஸ்யத்தில் திருமந்த்ரம் - த்வயம் - சரமச்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களின் ஸாரார்த்தங்களைச் சுருக்கி ஐம்பத்தொன்று வாக்கியங்களில் அருளிச் செய்வதால் ரஹஸ்ய மாத்ருகை எனத் திருநாமம் வந்தது)

திருமந்திரம்

(1) திருமந்திரம் எட்டு எழுத்துக்களையுடையதாதலின் 'அஷ்டாக்ஷரம்' எனப் பெயர் பெற்றது. அதில் முதலாவது எழுத்து ப்ரணவமாகும். இது முதற்பதமாகவும் ஆகின்றது. இந்த ப்ரணவம்தான் ஸகல வேதங்களுக்கும் மூலமாய் உள்ளது. வேதத்தை ஓதும்போது இந்த ப்ரணவத்தை முதலிலும் கடைசியிலும் ஓதியேயாகவேண்டும். இந்தப் பதம் (ப்ரணவம்) அ - உ - ம் என்ற மூன்று எழுத்துக்களையுடையதாகும். முதல் எழுத்தான 'அ' எல்லா எழுத்துக்களுக்கும் மூல காரணாயிருப்பதால் எல்லாவுலகுக்கும் முதற்காரணமானவன் ச்ரிய : பதி என்பதைக் கூறும்.

(2) மேலும் இந்த 'அ' என்னும் முதல் எழுத்து காத்தல் என்னும் பொருள்கொண்ட 'அவ்' என்னும் வினைப் பகுதியினின்று தோன்றியதாதலின் ச்ரிய : பதி எல்லோரையும் காப்பவன் என்ற பொருள் தேறுகின்றது.

(3) 'அ' என்ற எழுத்தின்மேல் நான்காம் வேற்றுமையுருபாகிய 'ஆய' என்பது ஏறி மறைந்து நிற்கின்றது. அந்த உருபுக்கு அடிமை என்பது பொருள். ஜீவன் எம்பெருமானுக்குச் சேஷன் (அடிமை) என்று பொருள் தேறும். ஆகவே எம்பெருமான் ஜீவனுக்குச் சேஷி (தலைவன்) என்பதும் தேறும். காலம் குறிப்பிடாமையால் எப்பொழுதும் சேஷியென்றும், இதற்குக் காரணம் ஏதும் கூறாமையால் இயற்கையாகவே எம்பெருமான் சேஷி என்பதும், இன்னாருக்கென்று குறிப்பிடாமையால் எல்லோருக்கும் சேஷி என்பதும் தேறும்

(4) கீழ்க்கூறியபடி அகாரத்தின்மேல் ஏறி மறைந்துள்ள நான்காம் வேற்றுமையுருபுக்கு அடிமை என்ற பொருளாதலின் ஜீவன் எம்பெருமானுக்குச் சேஷன் என்பதும் காலம் கூறாமையால் எப்பொழுதும் சேஷன் என்பதும் காரணம் கூறாமையால் இயற்கையாகச் சேஷன் என்பதும் தேறுகின்றன.

(5) ப்ரணவத்தில் நடு எழுத்து 'உ' என்பது இதற்குப் பொருள் பிறரின் தொடர்பை அறுத்தல் என்பது. இது திருமாலுக்கே இயற்கையில் சேஷனாயுள்ள ஜீவாத்மா மற்றொருவருக்குச் சேஷனாகமாட்டான் என்பதைக் காட்டும்.

(6) மூன்றாம் எழுத்து 'ம்' என்பது. இது ஜீவனைக் கூறும். இது வடமொழியின் மெய்யெழுத்துக்களில் இருபத்தைந்தாவதாகும். சரீரம் இந்திரியம் முதலிய அசேதந தத்துவங்கள் இருபத்து நான்கினும் வேறுபட்டு இருபத்தைந்தாவதாகிய ஜீவனென்னும் தத்துவத்தை இந்த 'ம்' என்பது காட்டுகின்றது.

(7) மேலும் 'ம்' என்றும் எழுத்து அறிவு என்னும் பொருள் கொண்ட 'மந்' என்னும் வினைப் பகுதியினின்று தோன்றியதாதலின் ஜீவன் ஞானவடிவாயுள்ளவன் என்று காட்டும்.

(8) மேலும் 'மந்' என்னும் வினைப்பகுதிக்கு அறிவுடைமை என்னும் பொருளும் உண்டு. ஆதலின் ஜீவன் அறிவுடையன் என்ற பொருளும் கிடைக்கின்றது.

(9) மேலும் ஜீவனுக்குத் தன்னுடைய ஸ்வரூபம் எப்பொழுதும் அநுகூலமாகவே தோன்றும். ஆநந்தமென்னும் ஜ்ஞாநமும் ஜீவனுக்குண்டு. ஆதலின் தன் ஸ்வரூபத்தாலும் ஆநந்தவடிவு கொண்ட ஜ்ஞாநத்தாலும் ஜீவன் ஆநந்தவடிவமாகவே உள்ளான்.

(10) ஜீவன் தனக்குத் தானே நான் என்று தோன்றிக் கொண்டேயிருக்கின்றான். ஜீவன் தன்னை அறிவதற்கு வேறொரு ஜ்ஞாநம் வேண்டிய அவசியமில்லை. ஆதலின் 'ஸ்வயம் ப்ரகாசன்' எனப்படுகின்றான் ஜீவன்.

(11) தான் தோன்றுவதால் உண்டான பலனையும் தானே பெருமவனாயுள்ளான். இதனால் 'ப்ரத்யக்' எனப்படுகின்றான் ஜீவன்.

(12) 'அளவு' என்னும் பொருள் கொண்ட' மஸ்' என்னும் வினைப் பகுதியின்றும் 'ம்' என்பது தேறுகின்றது. இதனால்

அளவுடையவன் என்று ஏற்படும். என்ன அளவு என்று கேள்வி வரவே, உபநிஷத்தில் ஜீவனை அணு என்று கூறியிருப்பதால் ஜீவன் அணுவாயிருப்பவன் என்று நிலைத்தது.

(13) திருமந்திரத்தில் இரண்டாவது பதம் 'நம:' என்பது. ந,ம : என்ற இரண்டு பதம் கொண்டதாகும். இங்கு 'கிஞ்சித்' 'ஸ்யாத்' என்ற இரண்டு சொற்களை வருவித்துக் கொள்ளவேண்டும். ம : என்பது 'ம்' என்ற சொல்லின் ஆறாம் வேற்றுமையாகும். 'கிஞ்சித்' என்பதற்கு 'எதுவும்' என்று அர்த்தம். ஜீவனாகிய எனக்கு எந்தத் தீங்கும் 'ந ஸ்யாத்' இருக்க வேண்டாம் என்று பொருள் தேறும். இது விரோதி ஒழிதலைப் பிரார்த்திப்பதாகக் கூறும் பொருளாகும். இதனின்று ஜீவன் அநாதியாக விரோதிகள் கையிலே அகப்பட்டு நின்ற நிலை கூறியதாகின்றது. இந்த விரோதிகள் எவை என்னில் அஜ்ஞாநம் - கர்மம் - ப்ரக்ருதிஸம்பந்தம் முதலியனவேயாம்.

(14) ந, ம: என்பதோடு சேஷித்வம் என்ற பதத்தை வருவித்துப் பொருள் கொண்டால் ஜீவனுக்கு எதைப்பற்றியும் சேஷித்வம் இல்லையென்று பொருள் கிடைத்தது. ஜீவன் எந்த வஸ்துவையும் குறித்து இயற்கையில் தலைவனாகமாட்டானென்று முடிகிறது. வீடு சரீரம் முதலிய வஸ்துக்களுக்கு ஜீவன் உரிமையாளனாகத் தோற்றிடினும் அந்த உரிமை இயற்கையாய் வந்ததன்று. கர்மஸம்பந்தத்தால் வந்ததேயாம்.

(15) ந, ம : என்பதோடு 'ஸ்வாதந்த்ர்யம்' என்ற சொல்லை வருவித்துப் பொருள் கூறுவதும் உண்டு. அப்போது ஜீவனுக்குச் சுதந்திரம் சிறிதும் இல்லையென்றும் எம்பெருமானை எதிர்பாராது செயலாற்றும் தன்மை இல்லையென்றும் ஏற்பட்டது.

(16) கீழ் (நெ. 15) நம : என்ற பதத்தால் ஜீவனுக்குச் சுதந்திரம் இல்லையென்றும் எம்பெருமானுக்கு அவன் வசப்பட்டவனே என்றும் முடிந்தது. ஸ்வந்த்ரனாய் ஸ்வாமியாய் விளங்கும் எம்பெருமான் ஜீவனைத் தன் அடியார்களான பாகவதர்களுக்கும் அடிமைப் படுத்துகின்றான் என்ற கருத்தும் நம : என்பதால் கிடைக்கின்றது.

(17) இவ்வாறு - சுதந்திரம் சிறுதுமின்றி ஜீவன் ஸ்வதந்த்ரனான எம்பெருமானை எதிர்பார்த்தே நிற்பவனாதலின் தன்னைக் காப்பதற்கு எம்பெருமானையன்றி வேறோர் உபாயமற்றவன் என்ற கருத்தும் கிடைக்கின்றது.

(18) 'நம :' என்ற சொல்லுக்கு ஐந்து அங்கங்களையுடைய ப்ரபத்தியைப் பொருளாக நிருக்தத்தில் கூறியுள்ளமையால் இந்த ப்ரபத்தியென்னும் சிறந்த உபாயத்தை ஜீவன் கைக்கொள்ளுகிறான் என்ற அர்த்தமும் கிடைக்கின்றது.

(19) நாராயண சப்தம் ஸகல மங்களங்களையும் அளிக்க வல்லது. அந்தச் சப்தத்தைப் பிரித்துப் பொருள் கூறும்போது 'நர' என்ற சொல்லினின்று 'நார' என்பது தேறுகின்றது. 'நர' என்ற இடத்தில் 'ர' என்கிற சொல் அழிதல் என்ற பொருளையுடைய 'ரீ' என்ற வினைப்பகுதியிலிருந்து தோன்றுவதால் 'ர' என்பது அழியும் தன்மையதான அசேதநத்தைக் கூறுகின்றது. அசேதநத்துக்கு அழிதலாவது - அதன் ஸ்வரூபமே அடியோடு மாறக்கூடிய தன்மை. இத்தன்மை அசேதநத்துக்கு உள்ளமை புலனாகின்றது.

(20) ஸ்வரூபமே அடியோடு மாறுதலாகிய அழிவையுடைய வஸ்து என்று பொருள்படும் 'ர' என்ற சொல்லோடு எதிர்மறைப்பொருள் கொண்ட 'ந' என்பதைச் சேர்த்தால் 'நர' என்ற சொல் ஸ்வரூபத்தில் என்றும் மாறுபாடு இல்லாத ஜீவர்களைக் கூறுகின்றது. ஆகவே ஜீவர்களுக்கு ஸ்வரூபத்தில் சிறிதும் மாறுபாடு இல்லையென்று தேறுகின்றது.

(21) நரசப்தம் அழிவற்றவனான எம்பெருமானையும் கூறும். நரனிடமிருந்து பிறந்த ஜீவர்கள் நாரர்கள். இப்பொருளால் ஜீவர்கள் எம்பெருமானால் படைப்புக்கும் அழிவுக்கும் ஆளாமவர்களென்று புலனாகின்றது. நித்யனான ஜீவனுக்குப் பிறத்தலாவது - சரீரத்தைப் பெறுகையே. அழிதலாவது - சரீரம் நீங்குதலே.

(22) நரர்களுடைய கூட்டங்கள் நாரங்கள் என்றும் கூறுவதுண்டு. இப்பொருளில் ஜீவர்கள் பலர் என்பதும் அவர்கள் எண்ணற்றவர்கள் என்பதும் தெரிகின்றன.

(23) 'ர' என்ற சொல் கீழே (ந. 19) கூறியபடி ஸ்வரூபத்தில் மாறுபாட்டையுடைய அசேதநத்தைச் சொல்வது போல் ஸ்வபாவத்தில் மட்டும் மாறுபாட்டையுடைய சேதநத்தையும் கூறும். இத்துடன் 'ந' என்பதைச் சேர்த்துப் பார்க்கும்போது 'நர' என்ற சொல் ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் மாறுபாட்டை அடையாது நித்யனாய் நிற்பவன் எல்லோரையும் நியமிப்பவனான எம்பெருமான் என்பதைக் காட்டும்.

(24) 'நர' என்ற சொல் நடத்துதல் என்ற பொருள் கொண்ட 'ந்ரு' என்னும் வினைப் பகுதியினின்று பிறப்பதும் உண்டு. ஆகவே ஸகல வஸ்துக்களையும் முன்னின்று நடந்துமவன் எம்பெருமான் என்ற பொருளும் நர சப்தத்தால் கிடைகின்றது.

(25) மேல் உள்ள 'அயநம்' என்ற சொல் ப்ரவேசிக்கப் படும் வஸ்துவைக் கூறுகின்றது. நார + அயந என்று சேர்க்கும் போது நாரங்களாகிய சேதந - அசேதநங்களை ப்ரவேசிக்க உரியனவாகக் கொண்டவன் என்று பொருள்படுவதால் எல்லா வஸ்துக்களிலும் கலந்து நிற்கும் தன்மை வெளியாகின்றது.

(26) 'அயநம்' என்ற சொல்லுக்கு ஆதாரம் என்ற பொருளும் உண்டு. நாரங்களுக்கு அயநம் என்று வைத்துப் பொருள் கூறும்போது நாரங்களாகிய சேதநம் அசேதநம் அனைத்தையும் தாங்கி நிற்கும் தன்மை எம்பெருமானுக்கு வெளியாகின்றது.

(27) இந்த நாராயண சப்தம் அவனே சேதநர்களுக்கு எல்லா வகை உறவினராகவும் ஆகின்றானென்பதையும் காட்டுகின்றது. எவ்வாறெனில் - ஸுபாலோபநிஷத் வெளிப்படையாகவே நாராயணன் என்ற பெயரைக் கூறித் தாய் தந்தை - ஸஹோதரன் - உறைவிடம் - உபாயம் - தோழன் - கதி ஆகிய எல்லாம் அவனே என்று கூறுகின்றது. ஆதலின் அவனே ஸர்வவித பந்து என்று அறியக்கிடக்கின்றது.

(28) 'அயநம்' எனும் சொல் அடைதற்குச் சாதனம் என்ற பொருளையும் கூறும். ஆகவே நாரங்களாகிய சேதநர்களுக்கு எல்லா வகைப் பலன்களையும் பெறுதற்கு எம்பெருமான் உபாயமாய் நிற்பவன் என்ற பொருளும் கிடைக்கின்றது.

(29) 'அயநம்' என்னும் சொல் அடையப்படும் பலனையும் கூறுவதால் முக்தி பெற்றவர்களால் அடையப்படும் பலனாகவும் அவன் உள்ளமை வெளியாகின்றது.

(30) நாராயண சப்தத்திற்குமேல் 'ஆய' என்ற நான்காம் வேற்றுமை உருபு உள்ளது. அதற்குக் கைங்கர்யம் என்பதே முடிவான பொருள். ஆகவே மோக்ஷத்தில் அவனோடு இருந்து எப்பொழுதும் எல்லா இடத்திலும் எல்லா நிலைகளிலும் களங்கமற்ற கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கும் அம்சம் தெளிவாகின்றது.

இவ்வாறு ப்ரணவத்துக்குப் பன்னிரண்டு அர்த்தங்களும் 'நம :' என்பதற்கு ஆறு அர்த்தங்களும் 'நாராயணாய' என்பதற்குப் பன்னிரண்டு அர்த்தங்களும் கூறப்பட்டன. திருமந்திரத்துக்கு இன்னும் பற்பல அர்த்தங்களும் இருப்பினும் இங்குக் கூறிய முப்பது அர்த்தங்களும் சேதநர்கள் முக்கியமாய் அநுஸந்திக்க வேண்டியவை என்று உணர்க.

த்வயம்

எல்லா வேதங்களுக்கும் விதையாயுள்ளது ப்ரணவம். இதை முதலில் கூறிய எந்த வேதத்தையும் தொடங்கவேண்டும். இதுதான் திருமந்திரத்தில் முதற்பதம். இதில்தான் சேதநன் பிறக்கின்றான். அதாவது - ப்ரணவத்தின் அர்த்தத்தை உணர்ந்த பின்பே சேதநனுக்குத் தன்னைப் பற்றிய அறிவு உண்டாகின்றது. இதுதான் உண்மையான பிறவியாகும். பின் இரண்டாம் சொல்லாகிய 'நம : என்பதில் சேதநன் வளர்ச்சியடைகின்றான். அதாவது - நம : என்ற சொல்லை ந, ம : என்ற இரண்டு சொற்களாகப் பிரித்துப் (ந. 13) பொருள் கூறும்போது விரோதிகள் அழிதலென்னும் பொருள் கிடைத்து அஹங்கார மமகாரங்கள் நீங்குவதைப் பிரார்த்திப்பதால் சேதநன் வளர்ந்த நிலையைப் பெறுகின்றான். மேலும் 'நம :' என்ற சொல்லே ப்ரபத்தியைக் கூறுவதால் (ந. 18) அதை அறியும் சேதநன் வளர்ச்சி பெறுகின்றான். மூன்றாம் பதமாகிய 'நாராயணாய' என்ற சொல்லால் மோக்ஷத்தில் கைங்கர்யமாகிய பலனைப் பிரார்த்திக்கும்வரை உள்ள சிறந்த ஞானத்தைப் பெற்று விடுகின்றான்.

இத்தகைய நல்ல விவேகம் பெற்ற சேதநன் இனிச் செய்யவேண்டியது யாது? மோக்ஷத்திற்காக அங்கங்களுடன் கூடிய பரஸமர்ப்பணம் அதாவது ப்ரபத்தியே. இதைத்தான் தெளிவாய் விளக்குவது த்வயம்.

(31) இதில் முதலெழுத்து ஸ்ரீ என்பது. இது எம்பெருமானுக்குப் பத்நியான பெரிய பிராட்டியைக் கூறும். இவள் சேதநர்களைக் காக்குமாறு எம்பெருமானிடம் பரிந்து பேசுவதால் புருஷகாரமெனப்படுகின்றாள். இவள் எந்நாளும் மணம் மாறாத கமல மலரில் வாழுமவள். ஸ்ரீ என்ற சொல் 'ச்ரு' என்ற வினைப்பகுதியினின்று தோன்றி 'அழிப்பவள்' என்ற பொருளைத் தரும். எவற்றை அழிப்பவள்?- சேதநர்களைப் பிரபத்தி செய்யவிடாது தடுத்துக் கொண்டிருக்கும் பாபங்களையும் இது

வரை மோக்ஷம் பெறாது தடுத்துவரும் பாபங்களையும் அழிப்பவளாகின்றாள். இவ்வம்சத்தையும் ஸ்ரீ எனும் சொல் காட்டுகின்றது.

(32) ஸ்ரீமத் என்னும்போது 'ஸ்ரீ' க்குப் பிறகு உள்ளது மதுப் என்னும் விகுதி. இதற்கு எப்பொழுதும் சேர்ந்தே இருத்தல் என்பது பொருள். ஆதலின் பிராட்டி எம்பெருமானுடன் எப்பொழுதும் சேர்ந்திருப்பவள் என்று தேறியது. கதியற்றவர்களாய்த் தன்னை வந்தடைந்தால் அவர்களைக் காப்பவன் எம்பெருமான். அவன் திருமார்பில் கணப்பொழுதும் பிரியாது பிராட்டி உறைகின்றாள். இப் பொருளைக் காட்டுகின்றது மதுப் என்னும் விகுதி.

(33) இங்கு உள்ள நாராயண சப்தம் ஆச்ரிதர்கள் வந்தடைந்தால் அவர்களைக் காப்பதற்கு எம்பெருமானிடம் தாழ்ந்தவர்களிடம் கலந்து பழகும் தன்மை - நாயகத் தன்மை - குற்றத்தைப் பொருள்படுத்தாத அன்பு - எல்லோர்க்கும் எளியனாயிருத்தல் ஆகிய திருக்கல்யாண குணங்களையுடைமையைக் கூறுகின்றது. இவையெல்லாம் எம்பெருமானுடைய ஸ்வபாவங்கள்.

(34) 'சரணௌ' என்னும் சொல் அவனுடைய திருவடிகளைக் கூறும். இப்படித் திருவடிகளைக் கூறும் முகத்தாலே அவனுக்குத் திவ்ய மங்கள விக்ரஹமெனப்படும் திருமேனியுடைமையைக் காட்டுகின்றது சரணௌ எனும் சொல். திருமேனி இல்லாமல் திருவடி மட்டும் இராதன்றோ? எம்பெருமான் சேதநர்களுக்கு உபாயமாய் நிற்கும்போது அவனே அநுபவிக்கப்படும் பயனாய் நிற்கும்போதும் திருமேனியுடன் நிற்கின்றானென்று தேறும்.

(35) சரணம் என்ற சொல் அந்தத் திருவடிகள் இரண்டுமே உபாயமாகுமேயன்றி மற்ற எதுவும் உபாயமாகாதென்பதைக் காட்டுகின்றது. (சரணம் என்னும் சொல் வீடு - காப்பவன் என்ற பொருள்களையும் தருவதாயினும் இங்கு உபாயம் என்ற பொருளையே தருவதாகும். இப்பொருள்தானே இங்கு வேண்டியதாகும்.)

(36) 'ப்ரபத்யே' என்பது வினைமுற்றுச் சொல்லாகும். இது 'பத்' என்னும் வினைப்பகுதியினின்று வருகின்றது. பத் என்பதற்கு நடத்தல் என்பது பொருள். நடத்தல் என்னும் பொருள் கொண்ட

வினைப்பகுதிகளுக்கு அறிதல் என்ற பொருள் உண்டென்பது சாஸ்த்ர முறை. ஆகவே 'ப்ரபத்யே' என்றால் அறிகின்றேன் என்று பொருள். அந்த அறிவு ப்ரபத்திற்கு அங்கமான மஹாவிச்வாஸத்தைக் குறிக்கின்றது. மஹா விச்வாஸம் என்பது யாது? அதிக நம்பிக்கை தானே! அந்த நம்பிக்கையும் அறிவின் ஒரு வடிவு தானே! இப்படி மஹாவிச்வாஸத்தைக் குறித்துவிட்டு அதன் வாயிலாக மற்ற அங்கங்களையும் அங்கியான பரந்யாஸத்தையும் காட்டுகின்றது. ஆகவே அவன் திருவடிக்கீழ் பரந்யாஸம் செய்து அடைக்கலம் புகுந்த நிலையைக் காட்டுகின்றது.

(37) 'ப்ரபத்யே' என்னும்போது 'பத்' என்னும் வினைப் பகுதிக்குப் பின் இருக்கும் விகுதி தன்மையொருமை விகுதி (உத்தம புருஷன், ஏகவசநம்) ஆகும். சரணமடைகின்றேன் என்னும்போது நான் என்னும் எழுவாய் தானே வந்து நிற்கும் எத்தகைய நான்? நானோஎன்னைச் சேர்ந்தவர்களோ மற்றவர்களோ என்னைக் காப்பவராகமாட்டார் என்னும்படி வேறு கதியற்றிருக்கிற நான் என்ற பொருள் தேறுகின்றது.

(38) த்வயத்தின் பிற்பகுதியில் முதலில் 'ஸ்ரீமதே' என்ற பதம் உள்ளது. இச்சொல்லுக்கும் பிராட்டியைக் கணமும் பிரியாது சேர்ந்துள்ளவனான என்றே பொருள். இங்கும் பிராட்டியைக் கூறும் 'ஸ்ரீ' என்னும் சொல்லுக்கு மேல் உள்ள மதுப் என்னும் விகுதிக்குப் பிரியாது நிற்றலே அர்த்தமாகும். ஆனால் முற்பகுதியில் உள்ள 'ஸ்ரீமத்' என்னும் சொல்லுக்குச் சேதநர்களுக்கு உபாயமாகும்போது திவ்ய தம்பதிகள் பிரியாது சேர்ந்திருக்கும் நிலை பொருளாகக் கூறப்பட்டது. இப்பொழுது ஸ்ரீவைகுண்டத்தில் பெரிய பிராட்டி நியமிக்க, கைங்கர்யம் செய்யும் முக்தனுக்கு எம்பெருமான் அநுபவிக்கப்படும் பயனாய் நிற்கும் நிலையிலும் திவ்ய தம்பதிகள் பிரியாமல் சேர்ந்து நிற்கும் நிலை இந்த 'ஸ்ரீமதே' என்னும் சொல்லால் கூறப்படுகின்றது.

(39) மேல் 'நாராயணாய' என்னும் சொல்லில் ஸ்ரீமந் நாராயணன் சேதநர்கள் அநுபவிப்பதற்கு ஏற்றவாறு மிகவும் இனியனாயிருப்பவன் என்பதுவும் அவனுக்கு மேற்பட்ட இனிமையுடைய வஸ்து இல்லையென்னுமதுவும் புலனாகின்றன. ஸ்ரீ வைகுண்டத்தில் சேதநர்கள் குற்றமற்ற கைங்கர்யங்களைச் சேஷியான எம்பெருமானுக்குத்தானே செய்கின்றனர்! அவர்கள் அவனை நன்றாய் அநுபவித்து அதனால் ஏற்பட்ட ஆநந்தத்தின் விளைவாகத்தானே அக் கைங்கர்யங்களைச் செய்கின்றனர்! அவன்

தன் திருமேனி - குணங்கள் முதலியவற்றால் மிகவும் இனியனாயிருந்தாலே அத்தகைய அநுபவமும் அதனால் ஆநந்தமும் ஏற்படும்! ஆகவே அவனுடைய திருமேனி - குணங்கள் முதலியவற்றையும் காட்டி அவனுடைய ஒப்பற்ற இனிமையையும் காட்டுகின்றது நாராயணாய என்னும் சொல்.

(40) 'நம :' என்பது த்வயத்தின் கடைசிச் சொல். இது சேதநர் மோக்ஷத்தில் செய்யும் கைங்கர்யங்கள் குற்றமற்றவை என்று காட்டும். அதாவது - சேதநர் ஸ்ரீவைகுண்டம் சென்று கைங்கர்யங்களைச் செய்தற்குத் தடையாயிருந்த எல்லா விரோதிகளும் ஸ்ரீவைகுண்டம் சேரும்போதே ஒழிந்துவிட்டன. ஆனால் உலகில் ஒரு காரியத்தைச் செய்யும்போது தான் சுதந்திரமாய்ச் செய்வதாயும் தன் பயனுக்காகவே செய்வதாயும் உள்ள விபரீத அறிவுடனேயே செய்வதைக் காண்கிறோம். மோக்ஷத்தில் கைங்கர்யம் செய்யும்போது இத்தகைய விபரீத உணர்ச்சிகள் ஏற்படுவதில்லை. ஏன்? அஹங்கார - மமகாரங்கள் இருந்தால்தானே இந்த விபரீத எண்ணங்கள் உண்டாகும்! ஸ்ரீ வைகுண்டம் சேருபவருக்கு அஹங்கார மமகாரங்களாகிய ஸகல விரோதிகளும் அழிந்துவிடுவதால் அங்குச் செய்யும் கைங்கர்யங்களும் எவ்வகைக் குற்றமுமற்றவையாகின்றன. ந - ம : என்று பிரிக்கும்போது 'ம :' என்ற சொல்லுக்கு 'எனக்கு' என்று பொருளாதலின் 'கிஞ்சித்' என்ற ஒரு சொல்லை வருவித்துக் கொண்டு எனக்கு அடிமையானது ஒன்றும் ந - இல்லை என்று பொருள் கொள்ளவேண்டும். அவ்வாறே 'ஸ்வாதந்த்ர்யம்' என்ற சொல்லை வருவித்துக் கொண்டு எனக்குச் சுதந்திரம் இல்லை என்றும் பொருள் கொள்ள வேண்டும். ஆகவே அஹங்கார - மமகாரங்கள் முதலிய எந்த விபரீதவுணர்ச்சிக்கும் இடமில்லையென்று தேறுகின்றது.

த்வயத்திற்கு எத்தனையோ அர்த்தங்கள் இருப்பினும் இது வரை கூறிய 31 முதல் 40 வரை உள்ள இந்தப் பத்து அர்த்தங்களை மிக முக்கியமான அர்த்தங்களாக அநுஸந்திக்க வேண்டும்

சரமசுலோகம்

கீழே திருமந்திரமும் த்வயமும் சரணாகதியைச் செய்தலைப் பற்றிக் கூறி முடித்தன. இனிச் சரமசுலோகம் அந்த சரணா கதியை அவசியம் செய்தே தீரவேண்டுமென்று விதிப்பதாயுள்ளது.

இதற்குச் சுருக்கமான பொருள் - கடினமான எல்லா உபாயங்களையும் கைவிட்டு என்னிடமே ப்ரபத்தியைச் செய். நான் உனக்குத் தடையாயிருந்த எல்லாப் பாபங்களையும் ஒழித்து மோக்ஷத்தைக் கொடுப்பேன். நீ எதற்கும் வருந்தவேண்டாம்.

*(41)* ஸர்வ தர்மாந் - எல்லாத் தர்மங்களையும். மிக்க கவனத்துடன் செய்யவேண்டிய கர்மயோக ஜ்ஞாநயோகங்களைத் துணை கொண்டு நெடுங்காலம் செய்ய வேண்டிய பக்தியோகத்தில் பல்வகை உண்டே! அவையனைத்தையும் என்று பொருள்.

*(42)* பரித்யஜ்ய = (கீழே கூறிய தர்மங்கள் அனைத்தையும்) அடியோடு கைவிட்டு (நிற்பவனானநீ). பக்தியோகம் முதலியவற்றைச் செய்ய உனக்குத் தகுதியில்லாமையால் அவற்றை அநுஷ்டிக்காமல் கைவிட்டு நிற்கின்ற நீ ப்ரபத்தியைச் செய்ய வேண்டியவனாயுள்ளாய். ப்ரபத்தியோ ப்ரஹ்மாஸ்த்ரம் போன்றது. ப்ரஹ்மாஸ்த்ரம் தன்னைப் பயன்படுத்துமிடத்தில் தன்னுடன் வேறு கயிற்றைச் சேர்த்துக் கட்டுவதைப் பொறுக்குமா? அவ்வாறே ப்ரபத்தியும் தனக்கு இன்றியமையாத ஐந்து அங்கங்களைத் தவிர வேறு எதையும் அங்கமாகக் கொள்ளாது. ஆதலால் அவசியமல்லாத மற்ற கர்மங்களையும் உனக்குச் செய்ய இயலாத கர்மங்களையும் செய்ய முற்படாமல் அவற்றில் பற்றுக் கொள்ளாமல் வேறு கைம்முதலற்ற தன்மையையே துணையாகக் கொண்டு என்பது பொருள்.

*(43)* மாம் - என்னை. மாம் என்று தன்னைச் சுட்டிக் காட்டுகின்றான் கண்ணபிரான். இதனால் அவனுடைய எளிய தன்மை புலனாகின்றது. பெரிய பிராட்டி மிக விரும்பிப் பிரியாது உறையப்பெறும் எம்பெருமான் பெறுதற்கு நமக்கு மிக அருமையானவனேயாவான். ஆயினும் அவனிடம் பக்தி கொண்டு வந்து அடையும் சேதநர்களுக்கு மிக எளியனாய் நிற்பவன். அத்தகைய எம்பெருமான் அடியார்களின்மீது அருள் கலந்த நல்லெண்ணங்கொண்டு அவர்களைக் காக்க முன்வந்து நிற்கின்ற நிலை புலனாகின்றது 'மாம்' என்ற சொல்லால்.

*(44)* ஏகம் - ஒருவனையே. இதனால் பெரிய பிராட்டியுடன் கூடிய எம்பெருமான் ஒருவனே பற்றற்று நிற்பவர்களான சேதநர்கள் வந்து பற்றும்படி நிற்கின்ற நிலை வெளியாகின்றது.

(45) சரணம் - உபாயமாக. எம்பெருமான் கதியற்றவர்களுக்குக் கதியாயிருப்பவன். அவன் திருவுள்ளத்துக்கு மாறுபட்டு நடக்கும் எண்ணத்தைக் கொள்ளாததால் தெய்வத் தன்மையுற்ற நல்ல சேதநர்களுக்குப் பலனைத் தரும் திடமான உபாயமாய் நிற்கின்றான். அதாவது - தன் திருவடி நிழலின் கீழ் அவர்களை அமரச் செய்து தன் சாச்வத கைங்கர்யங்களை அவர்களுக்குக் கொடுக்க அவன் ஒருப்பட்டிருப்பது சரணம் என்பதால் புலனாகின்றது.

(46) வ்ரஜ - அடைவாயாக. எம்பெருமான் சேதநர்கள் தன்னை அடைவதற்கு உள்ள உபாயங்களையெல்லாம் எடுத்து உலகறிய வெளியிட்டவன் ; பரிபூர்ணமான ஜ்ஞாநத்தோடு திகழ்பவன். அவனே சரணாகதியை உபதேசித்துச் சேதநருக்கு ஞானக்கை தந்தான். சேதநர்களாகிய நாம் அவனிடம் அவன் திருவடிகளையன்றி வேறு கதியற்றிருக்கும் நிலையை வெளியிட்டுக்கொண்டு பற்றும்படி அவற்றை உபாயமாகக் காட்டிக் கொடுத்த தன்மை 'வ்ரஜ' என்பதால் புலனாகின்றது.

(47) அஹம் - ஸர்வேச்வரனான நான். எம்பெருமானுக்கு இயலாத செயல் இல்லை. ஸர்வ சக்தன் அவன். ஒரே ப்ரகாசமயமான உயர்ந்த பரமபதத்தில் அவன் திருவடிகளைப் பெற்று அடிமை செய்வதென்பது ஸுலபமானதா? அந்தத் திருவடிகள் சேதநர்க்குத் தம் முயற்சியால் மட்டும் பெறக்கூடியனவா? அவற்றை நம்முடைய முடியில் வைத்து நம் கைங்கர்யங்களை ஏற்றுக் கொள்ளப் பாரித்து நிற்கின்றான் எம்பெருமான். இந்த நிலை 'அஹம்' என்ற சொல்லால் தெரிகின்றது.

(48) த்வா - உன்னை. ப்ரபத்தியைச் செய்தபின் என் திருவருளையே நினைத்திருக்கின்றாய். செய்யவேண்டிய செயலான ப்ரபத்தியைச் செய்து முடித்துவிட்டாய். 'இனி எனக்கு யாரால் எந்தக் குறையைச் செய்ய முடியும்?' என்ற துணிவுடன் இருக்கின்றாய் ; சாதகப் பறவை வேறொன்றையும் நினையாது மழையையே அண்ணாந்து நோக்கி நிற்பதுபோல் நீயும் மோக்ஷத்தையே எதிர்பார்த்திருக்கும்படி உன்னை ஆக்கிவிட்டேன். இந்நிலை பெற்ற உன்னை என்று பொருள்.

(49) ஸர்வபாபேப்ய :- எல்லாப் பாபங்களினின்றும். பல் வகையான நரகங்களில் தள்ளி யமனைப்போல் மேல் விழுந்து உன்னைத் துன்புறுத்தவல்ல கணக்கற்ற பாபங்களை நீ செய்து

விட்டாய். அவை மனத்தால் எண்ணவும் முடியாத துன்பங்களை விளைவிப்பன. அவை எந்நாளுமே அழியமாட்டாவோ என்று அச்சத்தைத் தருவன. அவை எண்ணற்றனவாய்க் கிடக்கின்றன. அவற்றினின்றும் என்று பொருள்.

(50) மோக்ஷயிஷ்யாமி - விடுவிப்பேன். ப்ரபந்நர்கள் அஜ்ஞாநத்தையே தரும் இந்தப் பெரிய உலகத்தில் இனிப் பிறக்க வேண்டாம். அஜ்ஞாநம் நீங்கப் பெற்று மென்மையான மனம் படைத்த ப்ரபந்நர்களுக்கு அவர்கள் வேண்டிய பலனைத் தரும் கொடை வள்ளலாக விளங்குகின்றான் மணிவண்ணனான எம்பெருமான். அவன் அவர்களுக்கு ஸ்ரீவைகுண்டத்தைத் தருவதற்கு விரைகின்றான். மோக்ஷம் பெற இதுகாறும் தடையாய் நின்ற புண்ய பாபங்களாகிய இருவகைக் கர்மங்களையும் ஒழிக்கின்றான். உலக விஷயங்களில் பற்றை நீக்குகின்றான் : 'எல்லாம் அவனே' என்ற உறுதியுடன் தன்னிடமே மனத்தை ஈடுபடுத்தும்படி செய்து இவர்கள் வருகைக்காகப் பரமபதத்தை அலங்கரித்துவைக்கின்றான். இத்தகைய செயல்கள் 'விடுவிப்பேன்' என்ற சொல்லால் புலனாகின்றன.

(51) மா சுச : - வருந்தாதிரு. எம்பெருமான் திருவடிகளையே உபாயமாகப் பற்றி ப்ரபத்தியைச் செய்வதன் எல்லா யாகங்களையும் செய்த பெருமையைப் பெறுகின்றான். எம்பெருமானை அநுபவிப்பதிலேயே வேட்கை கொண்டு நிற்கும் தனக்கு எந்தப் பாபமும் நேராது என்றும், பெறுதற்கு அருமையான திருவடிகளைத் தன் முடிமீது எம்பெருமான் சேர்த்து வைத்ததைத் தான் கண்டதாகவும் மிகத் தெளிவு பெற்ற எண்ணத்தோடு மனம் தேறி இருப்பான். இந்தச் சரீரம் கழியுமளவும் எம்பெருமான் கட்டளையாகிய சாஸ்த்ர முறையைத் தழுவியே நடப்பான். இவன் கர்மங்களைச் செய்யும்போது அக்நி - இந்திரன் முதலிய தேவர்களின் பெயர்களைச் சொல்ல நேரிட்டாலும் அந்தத் தேவர்களை உத்தேச்யராக மனத்தாலும் நினைக்கமாட்டான் : அச்சொற்களெல்லாம் நேராகவோ அவர்களுக்கு அந்தர்யாமியாகவோ எம்பெருமானையே கூறுவனவென்னும் உண்மை நிலையை உணருவான். தான் செய்யும் செயல்களுக்குப் பலனை விரும்பாது பகவத் கைங்கர்யமென்றே நினைத்துச் செய்வதில் இன்பம் காண்கின்றான். அதனாலேயேதான் பயன் பெற்றுவிட்டதாகக் கருதிக் கவலையற்று வாழ்வான். இத்தகைய நிலை பெறுவதை 'வருந்தாதிரு' என்னும் சொல் விளக்குகின்றது.

இவ்வாறு மூன்று ரஹஸ்யங்களிலும் இதுகாறும் கூறிவந்த 51 அர்த்தங்களையும் முக்கியமாகச் சேதநன் அநுஸந்திக்க வேண்டும்.

இவ்வாறு கீழே கூறப்பட்ட ஐம்பத்தொன்று அர்த்தங்களையே மோக்ஷத்தைப் பற்றிய வேதாந்த சாஸ்த்ரங்கள் விளக்குகின்றன. உபநிடதம் முதலிய சாஸ்த்ரங்கள் சேதநன் - அசேதநம் - ஈச்வரன் என்னும் தத்துவங்களைச் சில இடங்களில் சற்று வரிசையை மாற்றிக் கூறுகின்றன. இதைக் கொண்டு முரண்பாடு எதுவும் இருப்பதாகக் கருதக்கூடாது. இங்குத் திருமந்திரம் முதலியவை வரிசையாகக் கூறும் அர்த்தங்களை உள்ளத்துக்கொண்டே விளக்கும்போது வரிசையைச் சற்று மாற்றிக் கூறினவேயன்றி முரண்பாடு ஏதும் இல்லையென்றும் இவ்வர்த்தங்களை மூலமாகக்கொண்டே அந்தச் சாஸ்த்ரங்கள் கூறுவனவென்றும் உணரவேண்டும்.

ரஹஸ்ய மாத்ருகை முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம :

ஸ்ரீ :
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 8. தத்த்வ ஸந்தேசம்

## 1. இந்த ரஹஸ்யம் அவதரித்த வரலாறு

மாதவன் என்ற அரசன் நல்ல ஆஸ்திகனாயிருந்தான். அவனுக்குப் புதல்வன் ஸர்வஜ்ஞ சிங்கப்ப நாயக்கன் என்பவன். அவன் ஸ்ரீ தேசிகன் திருவடிகளை ஆச்ரயித்த நல்ல சிஷ்யன். அவன் சேதநம் - அசேதநம் - ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களின் ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவற்றை அறிந்து கொள்வதற்காகச் சுருக்கமாக கிரந்தத்தை அருளிச் செய்யும்படி ஸ்வாமியைப் பிரார்த்தித்தான். அவனது விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அருளிச்செய்த ரஹஸ்யம் இது. தத்துவங்களைப் பற்றிச் சிஷ்யனுக்கு விடுத்த செய்தியாயுள்ளதால் இந்தப் பெயர் வந்தது.

## 2. முன்னுரை

"மூன்றுவகை சேதநம் - மூன்று வகையான அசேதநம் - இவற்றின் ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் - இவற்றின் பிரிவுகள் ஆகிய அனைத்தையும் தனக்கு வசமாக்கிக் கொண்டவன் எம்பெருமான்" என்ற கருத்துக் கொண்ட வாக்யத்தை ஸ்ரீ ஆளவந்தாரும் ஸ்ரீ பாஷ்யகாரரும் அருளிச் செய்துள்ளார்கள். அந்த வாக்யத்துக்கு வியாக்கியான வடிவமாய் அமைந்தது இந்த ரஹஸ்யம். இந்த வாக்யத்தின் கருத்தை விளக்கி விட்டால் ராஜகுமாரன் கேட்ட விஷயத்தைத் தெளிவுபடுத்தியதாகின்றது.

## 3. முக்கியமான மூன்று வ்யாபக மந்த்ரங்கள்

உலகில் எத்தனையோ மந்த்ரங்கள் நடையாடுகின்றன. அவற்றுள் எம்பெருமானைப் பற்றிய மந்த்ரங்களே சிறந்தனவாகும். அவற்றிலும் வ்யாபகமந்த்ரங்கள் மூன்றுமே மிக முக்கியமானவை. (வ்யாபக மந்த்ரம் = எல்லாப் பொருள்களையும் வியாபித்து நிற்கும் எம்பெருமானைக் கூறும் மந்த்ரம்) இந்த மந்த்ரங்கள் மூன்று.

அவையாவன - (1) திருவஷ்டாக்ஷரம் (2) விஷ்ணுஷடக்ஷரம் (3) த்வாதசாக்ஷரம். இந்த மூன்று மந்த்ரங்களும் எம்பெருமானை எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாய் நிற்பவனென்றும் எல்லாவற்றையும் தனக்குச் சரீரமாய்க் கொண்டு தான் அந்தர்யாமியாயிருப்பவனென்றும் காட்டுகின்றன.

## 4. ஆளவந்தார் - எம்பெருமானார் ஸ்ரீஸூக்தி

இக்கருத்தை உள்ளத்துக் கொண்டே ஆளவந்தார் தம்முடைய ஆத்ம ஸித்தியிலும் ஸ்ரீபாஷ்யகாரர் தம் ஸ்ரீரங்ககத்தியத்திலும் ஸ்ரீ வைகுண்ட கத்யத்திலும்

"ஸ்வாதீந - த்ரிவித - சேதந - அசேதந - ஸ்வரூப - ஸ்த்திதி - ப்ரவ்ருத்தி - பேதம்"

என்று அருளிச் செய்துள்ளனர்.

இனி இதற்குப் பதம் பதமாய்ப் பொருள் விளக்கப்படுகின்றது.

## 5. ஸ்வாதீந - பொருள் விளக்கம்

ஸ்வாதீந = ஸ்வ + அதீந. தனக்கு வசப்பட்ட என்று பொருள். தனக்கு என்பது தன் ஸ்வரூபத்தைக் கூறும். அத்துடன் தன் ஸங்கல்பத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு அம்சங்களையும் உபநிடதம் கூறுகின்றது. அது சேதந அசேதநங்களை எம்பெருமானுக்குச் சரீரமென்றும் அவனை அவற்றுக்கு ஆத்மாவென்றும் கூறுகின்றது. சரீரமாயுள்ள வஸ்து ஆத்மாவின் ஸ்வரூபத்துக்கும் ஸங்கல்பத்திற்கும் வசப்பட்டிருப்பதை உலகிலும் காண்கின்றோமே! ஈச்வரனுடைய ஸ்வரூபத்துக்கு வசப்பட்டிருத்தல் அவனது ஸ்வரூபம் ஒன்று தவிர மற்ற ஸகல வஸ்துக்களுக்கும் உள்ள தன்மையாகும். அதாவது - பகவானுடைய ஸ்வரூபம் ஸகல வஸ்துக்களுக்கும் ஆதாரமென்று ஏற்படுகின்றது. ஆனால் அந்த அந்த வஸ்துக்களுக்கு ஏற்றவாறு நேரிடையாகவும் மற்றொன்றை இடையிட்டும் ஆதாரமாகின்றது. உதாஹரணமாய் - ஒரு த்ரவ்யத்துக்கு எம்பெருமானது ஸ்வரூபம் நேர் ஆதாரமாயுள்ளது. அந்த த்ரவ்யத்தில் உள்ள குணங்களுக்கு

அந்த த்ரவ்யத்தின் வாயிலாக ஆதாரமாகின்றது. குணத்துக்கு த்ரவ்யம் ஆதாரம், த்ரவ்யத்துக்குப் பகவானது ஸ்வரூபம் ஆதாரம் - என்று த்ரவ்யத்தை இடையிட்டு ஆதாரமாகின்றது.

ஈச்வரனுடைய ஸ்வரூபத்துக்கு வசப்பட்டிருத்தலில் மட்டுமே நேரிடை - மற்றொன்றின் வழி என்ற பிரிவு உள்ளதேயன்றி அவனது ஸங்கல்பத்துக்கு வசப்பட்டிருத்தலில் இந்தப் பாகுபாடு கிடையாது. ஜீவனுடைய ஸங்கல்பத்தால் நடக்கும் சரீரம் செயல் முதலியனவும் எம்பெருமானது ஸங்கல்பத்தால் நடப்பனவேயாகும். ஒரு வஸ்துவோ செயலோ ஜீவனுடைய ஸங்கல்பத்துக்கு வசப்பட்டனவாகக் கடவன என்று அவனே ஸங்கல்பிக்கின்றான். ஆகவே எல்லாம் எம்பெருமான் ஸங்கல்பத்திற்கு நேரிடையாய் அடங்கியனவேயாகும்.

உலகில் நித்யமான வஸ்துக்கள் எம்பெருமானுடைய நித்யமான ஸங்கல்பத்துக்கு வசப்பட்டன. இந்த வஸ்து நித்யமாயிருக்க வேண்டுமென்று எம்பெருமான் ஸங்கல்பிக்கிறான். அவனுடைய அந்த ஸங்கல்பமும் நித்யமாயுள்ளது. அதாவது - ஈச்வரனுடைய ஸங்கல்பம் இல்லாவிடில் இந்த வஸ்துவும் இல்லையென்று சொல்லும்படி இருக்கும். அநித்யமான வஸ்துக்களைப் பற்றி நாம் 'இப்பொழுது அந்த வஸ்து இல்லை' என்று வழங்குகின்றோமே; அந்த நிலைமையே நித்ய வஸ்துவுக்கும் அவன் ஸங்கல்பம் இல்லாதபோது வந்து விடும் என்று கருத்து. அநித்யமான வஸ்துக்கள் அவ்வப்போது தோன்றி மறைகின்றனவே! அவையும் எம்பெருமானுடைய ஸங்கல்பத்துக்கு வசப்பட்டனவே. ஆனால் அவனுடைய அந்த ஸங்கல்பமும் அநித்யமாகும். அதாவது - இந்த வஸ்து அநித்யமாயிருக்கக் கடவது என்று எம்பெருமாஈன் ஸங்கல்பிக்கின்றான். அந்த ஸங்கல்பமும் நித்யமாயன்றி அவ்வப்போது தோன்றி மறைவதேயாகும்.

6. சரீரலக்ஷணம் - பொருத்தம்

இப்படி ஸகல வஸ்துக்களின் ஸ்வரூபமும் நீடித்து நிற்றலும் ஈச்வரனது ஸ்வரூபத்துக்கு வசப்பட்டிருப்பதால் அவற்றுக்கு ஆதேயத்வம் ஏற்படுகின்றது. இவ்வாறே ஸகல வஸ்துக்களின்

ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் எல்லாம் ஈச்வரனது ஸங்கல்பத்தாலேயே நடப்பவையாதலின் அவற்றுக்கு விதேயத்வமும் ஏற்படுகின்றது. ஸகல வஸ்துக்களுக்கும் வரும் பயனை முக்கியமாய்ப் பெறுமவன் ஈச்வரனேயாதலின் அந்த வஸ்துக்கள் அனைத்தும் அவனுக்குச் சேஷமாகின்றன. சுதந்திரமாய்ப் பயனைப் பெறுந்தன்மை அவற்றுக்குக் கிடையாதே! எம்பெருமான் தன் பயனுக்காகவே சேதந - அசேதநங்களாகிய ஸகல வஸ்துக்களையும் படைத்துக் காத்துச் செயல்புரியச் செய்கின்றான் என்று உபநிடதம் கூறுகின்றது. இப்படி ஸகல வஸ்துக்களும் ஈச்வரனுக்கு ஆதேயமாய் விதேயமாய்ச் சேஷமாயுள்ளன. ஆதலின் அனைத்தும் அவனுக்குச் சரீரமாயுள்ளன. இந்த மூன்று அம்சங்கள் தாமே சரீரத்துக்கு இலக்கணமாகக் கூறப்பட்டுள்ளன! இவ்வாறே அவன் எல்லாவற்றுக்கும் ஆதாரமாய் நியமிப்பவனாய்ச் சேஷியாயுள்ளான். ஆதலின் அவன் சரீரி (ஆத்மா) ஆகின்றான்.

## 7. த்ரிவித சேதந - விளக்கம்

சேதநர்கள் அனைவரும் எம்பெருமானுக்கு வசப்பட்டவர். அவர்கள் மூவகைப்படுவர். (1) ஸம்ஸார மண்டலத்தில் உழன்று கர்மபலன்களை அநுபவித்துக் கொண்டிருக்கும் பத்தர்கள். (2) ஸம்ஸார மண்டலத்தில் நெடுங்காலம் உழன்று பின் ஓர் உபாயத்தைச் செய்து ஸம்ஸாரபந்தம் நீங்கப் பெற்று மோக்ஷமடைந்த முக்தர்கள். (3) எந்நாளும் அடியோடு ஸம்ஸார பந்தமில்லாமல் எம்பெருமானைப் போலவே உள்ள நித்யர்கள்.

இங்கு ஒரு கேள்வி - ஸம்ஸார மண்டலத்தில் உழன்ற பத்தர்களான சேதநர்கள் தாமே பின் ஓர் உபாயத்தைச் செய்து மோக்ஷம் பெற்று முக்தராக வழங்கப் பெறுகின்றனர். வெவ்வேறு ஆத்மாக்களல்லரே? இப்படி இருக்க, பத்தர் முக்தர் என்று தனியாகப் பிரித்துச் சேதநர்களை மூவகையினராகக் கூறுவது எவ்வாறு பொருந்தும்? என்று. இதற்கு விடை - கேள்வி நேரியது தான். இவ்வாறு பிரித்ததற்கு ஒரு காரணம் உள்ளது. பத்த நிலையில் உள்ள ஜீவரைக் காட்டிலும் நித்யரான ஜீவர்களுக்குப் பல்வேறு வகைகளிலும் மிக்க வேற்றுமை உண்டென்பது

அனைவரும் ஏற்றுக் கொண்டது தானே! அங்ஙனம் பத்தரே முக்தரானாலும் முன்பு ஸம்ஸாரத்தில் உழன்ற நிலைக்கும் இப்பொழுது அதினின்று விடுபட்டு முக்தி பெற்ற நிலைக்கும் மிகுந்த வேற்றுமை உண்டெனக் காட்டவே தனியாகப் பிரித்துக் கூறப்பட்டனரென்று உணர்க.

## 8. த்ரிவித - அசேதந - விளக்கம்

த்ரிவித - மூவகையான. இந்தச் சொல் சேதந - அசேதந என்ற இரண்டு சொற்களுக்கும் முன்பு இருப்பதால் இரண்டிலும் சேருகின்றது. ஆகவே அசேதநமும் மூவகைப்படுமென்று தேறியது.

அசேதநம் மூன்று வகை என்பதற்குச் சிலர் பின்வருமாறு வகுக்கின்றனர். அதாவது - வ்யக்தம் - அவ்யக்தம் - காலம் என்று அசேதநம் மூவகைப்படும். வ்யக்தம் என்பது நம் கண்ணுக்குப் புலப்படும் வஸ்து. அவை பூமி - ஜலம் - தேஜஸ் முதலியன. அவ்யக்தம் என்பது கண்ணுக்குப் புலப்படாத ப்ரக்ருதி - மஹான் - அஹங்காரம் முதலியன. வேறு வகையாகவும் கூறலாம் - வ்யக்தம் என்பது பெயர் உருவம் எல்லாம் நமக்குத் தெரியும்படியுள்ள வஸ்து. அவ்யக்தம் என்பது பெயரும், உருவமும் நமக்குத் தெரியாது முந்திய நிலையிலுள்ள வஸ்து.

மூன்று வகையை இவ்வாறு பிரிப்பவர்களின் கொள்கையில் ஒரு கேள்வி - இந்த மூன்றினும் வேறுபட்ட சுத்தஸத்த்வம் ஒன்று இருக்கின்றதே! அதுவும் அசேதந வகுப்பைச் சேர்ந்ததுதானே! அதை இந்த மூன்றோடு சேர்த்துக் கூறவில்லையே! ஆகவே அது எம்பெருமானுக்கு வசப்பட்டதன்று என்று ஆகிவிடுமே! என்று. இதற்கு ஸமாதாநம் - அவர்களும் வேறொரு வழியில் சுத்த ஸத்துவத்தைச் சேர்த்துள்ளனர். ஈச்வரனைப் பற்றிய விளக்கத்தில் அவன் திருமேனி முதலியவற்றைச் சொல்லும்போது அவை எல்லாம் சுத்த ஸத்துவமயமானவையாதலின் அங்கு இந்தச் சுத்தஸத்துவமும் விசேஷண முறையில் கூறப்பட்டதாகவே ஆகின்றது. ஆகவே அம்முறையில் சுத்தஸத்துவமும் அவற்றுடன் சேர்த்து அநுஸந்திக்கப்பட்டதாகக் கூறுவர்.

வேறு சிலர் அசேதநத்தை ப்ரக்ருதி - காலம் - சுத்த ஸத்துவம்

என்று மூவகையாகப் பிரித்து இவைகளெல்லாம் எம்பெருமானுக்கு வசப்பட்டனவென்று கூறுவர். இந்த மூன்றுக்கும் அறிவு இல்லையாதலின் 'அசித்', 'அசேதநம்' என்று வழங்குவர். இந்த மூன்றுக்குள் சுத்த ஸத்துவம் என்பது இந்த ஸம்ஸார மண்டலத்தில் உள்ளதன்று. ஆதலால் இது ப்ரக்ருதியின் தொடர்பு அற்றதாகும். ஆதலின் சுத்த ஸத்துவம் அப்ராக்ருதமான அசேதநமென்று சொல்லப்படுகின்றது.

இங்கு ஒரு கேள்வி - ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவாத்மாவைச் சேதநன் என்று வழங்குகின்றோமே! அவ்வாறே சுத்தஸத்த்வம் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றதாகில் அதையும் சேதநம் என்றன்றோ கூற வேண்டும்? என்று. இதற்கு ஸமாதாநம் - ப்ரக்ருதி ஸம்பந்தம் அற்றனவெல்லாம் சேதநமாகவே இருக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. ஸ்ரீ வைகுண்டத்திலும் காலம் தர்மபூதஜ்ஞாநம் எல்லாம் உண்டு. அவ்விரண்டும் ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாதவை தாமே! அவற்றைச் சேதநமென்று கூறாமல் அசேதநம் என்று ஏற்றுக் கொள்ளவில்லையா? அவ்வாறே சுத்தஸத்துவமும் ப்ரக்ருதி ஸம்பந்த மற்றதேயாயினும் அப்ராக்ருதமான அசேதநமேயாகும் என்று கொள்வதில் இடர் ஏதுமில்லை.

சில பெரியோர்கள் கூறுவர் - தர்மபூதஜ்ஞாநத்துக்கு ஒரு ஜ்ஞாநம் இல்லாதபடியால் அது அசேதநமென்று வழங்குகின்றது. அதுவே ஜ்ஞாநமாதலால் சித் என்றும் வழங்குகின்றது. அவ்வாறே சுத்தஸத்துவத்திற்கும் ஞானம் இல்லாதபடியால் அசேதநமென்று அது கூறப்படுகின்றது. அது ஞான வடிவமென்று சாஸ்த்ரம் கூறுவதால் சித் என்றும் வழங்கும் - என்று. இக்கொள்கையும் பொருத்தமானதேயாகும்.

பின்னும் ஒரு கேள்வி - தர்மபூதஜ்ஞாநமும் அசேதநமாகில் ப்ரக்ருதி - காலம் - சுத்தஸத்துவம் என்ற மூன்றுடன் சேர்த்து அசேதநத்தை நான்கு வகையாகவன்றோ பிரிக்க வேண்டும்? ஏன் அதை அந்தத் தொகுதியில் சேர்க்கவில்லை? என்று. இதற்கு ஸமாதாநம் - அறிவுடையரான சேதநர்களை மூவகையாகப் பிரிக்கும்போது சேதநர் என்ற சொல்லுக்கு அறிவுடையர் என்று

தானே பொருள் கூற வேண்டும்? அதற்கு ஜீவர்களுக்கு விசேஷணமாய் நிற்பது அறிவு தானே! அந்த அறிவுதான் தர்மபூதஜ்ஞாநம் என்னப்படுகிறது. ஆகவே இங்கு தர்மபூதஞானம் விசேஷணமென்ற முறையில் பிரஸ்தாவிக்கப்பட்டு விட்டபடியால் அசேதந வகுப்பில் நான்காவதாகச் சேர்க்கவில்லை.

உலகில் உள்ள ஸகல வஸ்துக்களுள்ளும் சில வஸ்துக்கள் சில தன்மைகளில் ஒத்திருக்கும்; சில தன்மைகளில் வேறுபட்டிருக்கும். உதாஹரணமாய் - ஜீவன் ஞானவடிவமாயும் ஞானத்துக்கு உறைவிடமாயுமுள்ளவன். பரமாத்மாவும் அவ்வாறே உள்ளவன். ஆகவே இருவரும் இத்தன்மைகளில் ஒற்றுமையுள்ளவர்களே. பரமாத்மா தலைவன். ஜீவன் அடியன். இத்தன்மைகளில் வேறுபாடும் உள்ளது. மேலும் எம்பெருமானுக்கு வசப்பட்டிருக்கும் தன்மையில் சேதநத்துக்கும் அசேதநத்துக்கும் ஒற்றுமை உள்ளது. ஆனால் சேதநனுக்கு அறிவு உண்டு. அசேதநத்துக்கு இல்லை. இவ்வாறு ஒற்றுமை - வேற்றுமைகள் ப்ரமாணங்களால் வரையறுக்கப்பட்டிருக்கிறபடியே ஏற்றுக் கொண்டேயாக வேண்டும்.

இந்தச் சேதநமும் அசேதநமும் மூவகைப்பட்டவை என்றும் இவற்றின் ஸ்வரூபம் - தொடர்ந்து நிற்றல் - செயல் இவற்றின் பிரிவுகளையெல்லாம் தனக்கு வசமாகக் கொண்டவன் எம்பெருமான் என்றும் சொல்லும்போது அவற்றின் விளக்கம் தரப்படுகின்றது.

9. ஸ்வரூப - விளக்கம்

ஒன்றின் ஸ்வரூபமாவது - அதற்கே உரிய தன்மைகளைக் கொண்டு விளக்கித் தெரிந்து கொள்ள வேண்டியதான வஸ்து. உதாஹரணமாய் - மனிதனது ஸ்வரூபத்தைக் கூறவேண்டுமானால் கை, கால் முதலிய அவனுக்கே உரிய அடையாளங்களைச் சொல்லி அவற்றையுடையவன் மனிதன் என்று விளக்க வேண்டும். பசுவின் ஸ்வரூபத்தை அறிவிக்க வேண்டுமானால் அவ்வகுப்பிற்கே உரிய கழுத்துச் சதை முதலியவற்றைக் கொண்டுதான் விளக்க வேண்டும். இந்தத் தனிப்பட்ட தன்மைகளால் விளக்கப்படும் வஸ்துதான் ஸ்வரூபமெனப்படும்.

**10. ஸ்த்திதி - விளக்கம்**

ஸ்த்திதி என்பது நீடித்து நிற்றல். அதாவது பின்னும் தொடர்ந்து நிற்றல். குடம் உண்டானதும் அழிந்து போகாமல் நாள் கணக்காய் மாதக்கணக்காய் நிற்பதுதான் ஸ்திதி என்பது.

**11. ப்ரவ்ருத்திபேதம் - விளக்கும்**

ப்ரவ்ருத்தி - செயல். ஒரு காரியத்தை உணர்ந்து பின் செய்ய விரும்பிப் பின் அதில் முயற்சி செய்கின்றான். இந்த முயற்சியே ப்ரவ்ருத்தியெனப்படும். ஒரு கார்யத்தைச் செய்யாது விடுதலும் இந்தச் செயலின் பிரிவிலேயே சேரும்.

சேதநம் - அசேதநம் இவற்றின் ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் இவற்றின் பிரிவுகள் இவற்றை அந்த அந்த ப்ரமாணங்கள் விளக்கியுள்ளன.

**12. 'ஸ்வாதீந' தொடங்கும் ஸூக்தியில் அநுஸந்திக்க வேண்டிய அர்த்தங்கள்**

இப்படி 'ஸ்வாதீந த்ரிவித' என்று தொடங்கி ஆளவந்தாரும் ஸ்ரீ பாஷ்யகாரரும் அருளிச்செய்துள்ள தொடரால் நாம் அறிந்து அநுஸந்திக்க வேண்டிய முக்கியக் கருத்துக்கள் வருமாறு - (1) ஆள்பவனாகிய ஈச்வரனுக்கும் ஆளப்படுகின்ற வஸ்துக்களுக்கும் பல்வகை வேறுபாடுகள் உண்டு. (2) அவனது ஆளுகைக்கு உட்பட்ட தத்துவங்களாகிய சேதநம் அசேதநம் இவற்றுக்குள்ளேயே ஒன்றுக்கொன்று பல வேறுபாடுகள் உண்டு. (3) அவற்றுள் சேதநரின் உட்பிரிவுகளான பத்தர் - முக்தர் - நித்யர் இவர்களுக்குள்ளும் அசேதநத்தின் உட்பிரிவுகளான ப்ரக்ருதி - காலம் - சுத்தஸத்தும் இவற்றுக்குள்ளும் ஒன்றுக்கொன்று பல வேறுபாடுகள் உண்டு. (4) ஞானத்தையுடையனாதலின் தர்மியெனப்படும் ஜீவனுக்கும் அவனிடம் உள்ள தர்மபூதஜ்ஞாநத்திற்கும் வேறுபாடுகள் உண்டு. (5) நம் வேதாந்த ஸித்தாந்தத்திற்கு மட்டுமே உரியதாய் மிக முக்கியமாய் விளங்கும் ஓர் அர்த்தம் ப்ரதாந ப்ரதிதந்த்ரமென வழங்குகின்றது. அதாவது - எம்பெருமான் ஆத்மாவாய் மற்ற சேதந அசேதநங்கள் அவனுக்குச் சரீரமாய் நிற்றல்.

**13.** மூவகைச் சுருதிகள் - விளக்கம்.

இவ்வம்சங்களையெல்லாம் பேதச்ருதி - அபேதச்ருதி - கடகச்ருதி ஆகிய சுருதிகள் கூறுகின்றன. பேதச்ருதி - ஈச்வரனையும் சேதந அசேதநங்களையும் முற்றிலும் வேறுபட்டவனாகக் கூறும் சருதி. அபேதச்ருதி - ஈச்வரனையும் மற்றவற்றையும் ஒன்றெனக்கூறும் சுருதி. கடகச்ருதி - இவ்விரண்டு சுருதிகளிலும் ஒன்றுக்கொன்று தோன்றும் முரண்பாட்டை இல்லையாக்கி ஸமரஸப்படுத்தும் சுருதி. இந்தக் கடகச்ருதி, பேதச்ருதியில் எல்லாத் தத்துவங்களும் முழுதும் வெவ்வேறு என்பது அவற்றின் ஸ்வரூபம் வெவ்வேறு என்று காட்டுவது என்றும், அபதேச்ருதியில் எல்லாம் ஒன்று என்று கூறுவது எம்பெருமான் ஆத்மாவாய், மற்ற எல்லாத் தத்துவங்களும் அவனுக்குச் சரீரமாயிருப்பதைப் பற்றியதென்றும் கூறி முரண்பாடு இல்லையென ஸமரஸப்படுத்துகின்றது.

**14.** 'தத்துவம் ஒன்றே' - கொள்கை விளக்கம்

இப்படி ஆளும் தத்துவமாகிய ஈச்வரனும் ஆளப்படும் மற்ற தத்துவங்களும் ஸ்வரூபத்தில் வெவ்வேறானவையே என்று உணர்ந்து கொண்டே சிலர் ப்ரஹ்மமாகிய தத்துவம் ஒன்றுதான் உண்டு என்று கூறுகின்றார்கள். இதற்கு உண்மைக் கருத்தாவது - தனக்கு வேறோர் ஆதாரம் வேண்டாதபடி தனக்குத் தானே ஆதாரமாய்ச் சேதந அசேதநங்களைத் தனக்குச் சரீரமாகக் கொண்டதாயுள்ள ஒரே தத்துவம் ப்ரஹ்மமே என்பது. இதுதானே விசிஷ்டாத்வைதம் என்பதும்.

**15.** பிறர் வாதங்களும் - விடைகளும்

சிலர் பரமபதத்தை ப்ரக்ருதிக்கு வெளிப்பட்ட உலகமாகவும் சுத்த ஸத்துவமயமாகவும் இசைவதில்லை. சுருதி, தமஸ் எனப்படும் த்ரவ்யத்திலிருந்து அக்ஷரமென்னும் வஸ்து உண்டாவதாய்க் குறிக்கின்றது. இங்கு தமஸ் என்பது மூலப்ரக்ருதியைக் கூறும். அதின் விகாரமாக (மாறுபாடாக)த் தோன்றும் அக்ஷரமென்பதுவே பரபமதமாகும். ஆகவே ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்ற மூன்று குணங்களுக்கும் உறைவிடமான ப்ரக்ருதியே அக்ஷரமெனப்படும் பரமபதமாகின்றது. மூன்று குணங்களையுடைய வஸ்துவினின்று

பிறக்கும் வஸ்துவும் மூன்று குணங்களையுமுடையதாகத் தானே இருக்கும்! ஆகவே பரமபதம் ரஜஸ் - தமஸ் கலவாத சுத்த ஸத்துவத்துக்கு உறைவிடமாக ஆகாது. இவ்வாறே காலமும் தனிப்பட்ட வஸ்துவாக ஆகாது. அதுவும் ப்ரக்ருதியின் மாறுபாடாகிய ஒரு வஸ்து. இவ்வாறு கொள்கையுடையர் சிலர். இவர்கள் கொள்கையின்படி காலமும் சுத்த ஸத்துவமும் தனிப் பட்ட வஸ்துக்களல்லவாதலின் அசேதநத்தை மூன்று வகையாகப் பிரிக்காமல் ஒன்று என்றே கூறிவிடலாம் என்று ஆகின்றது.

இவ்வாறு சிலர் கூறும் வாதம் நேர்மையானதன்று. இவர்கள் வேறுபாட்டையும் ஒன்றான தன்மையையும் ஒன்றுக்கே கூறிக் குழப்புகின்றனர். எவ்வாறு? - சுத்தஸத்துவம் - காலம் இவற்றின் தன்மைகள் ப்ரக்ருதியின் தன்மைகளோடு மாறுபடுவதால் அவை வெவ்வேறு வஸ்துக்கள் என்ற பேதத்தைக் கூறுகின்றனர். அவையெல்லாம் ப்ரக்ருதியின் மாறுபாடுதான் என்று கூறுவதால் அவை எல்லாம் ஒன்றானவையே என்று அபேதத்தையும் கூறுகின்றனர். இங்ஙனம் பேதத்தையும் அபேதத்தையும் ஒரு வஸ்துவுக்கே கூறுவதால் இவர்களை ஒரு வகையான பேதாபேதவாதிகள் என்னலாம். இவர்களின் கூற்றுப் பொருந்தாது. சுத்த ஸத்துவத்தையும் காலத்தையும் ப்ரக்ருதியின் மாறுபாடுகளாகக் காட்டவல்ல ப்ரமாணம் ஒன்று கூடக்கிடையாது. மாறாக, அம் மூன்றையும் தனித் தனியெனக் காட்டும் ப்ரமாணங்கள் இருப்பதால் இவர்களின் வாதம் ப்ரமாணங்களுக்கு முரண்பட்டதாகவும் ஆகின்றது. மேலும் இவர்கள் ப்ரக்ருதி சேதநர்களுக்கு ஸுக துக்கங்களைத் தரக்கூடியதென்றும் பரமபதம் ஒரே ஸுக வடிவாயுள்ளதென்றும் கூறுகின்றனர். ஆனால் இவர்களே பரமபதத்தை ப்ரக்ருதியின் மாறுபாடென்றும் கூறுகின்றனர். தங்கள் வாதத்திலேயே எத்தகைய முரண்பாடு!! மேலும் கால விஷயத்திலும் முரண்பாடு. மாறுபாடு ஒன்றும் இல்லாமல் ப்ரக்ருதி ஈச்வரனோடு ஒன்றி நிற்கும் நிலையே ப்ரளய காலமென்றும் ப்ரக்ருதி வேறு வஸ்துவாக மாறுபாட்டை அடையும் காலமே ஸ்ருஷ்டி காலமென்றும் இசைகின்றனர். இப்படி காலத்தை ப்ரக்ருதியின்று பிரித்துக் கூறிக் கொண்டே காலத்தை ப்ரக்ருதியின் மாறுபாடாவும் கூறுகின்றனர். இதிலும் தங்கள் வாதத்திலேயே

முரண்பாடு உள்ளது. இங்ஙனம் ப்ரமாணங்களே இல்லாமை - உள்ள ப்ரமாணங்களுக்கு விரோதம் - தங்கள் கொள்கைகளிலேயே முன்பின் விரோதம் ஆகிய குற்றங்கள் நிறைந்த இவர்களின் வாதம் ஏற்றுக் கொள்ள உரியதாகாது.

## 16. 'ஸ்வாதீந' ஸூக்தியால் வரும் தெளிவு

இங்ஙனம் இந்த இரண்டு மஹாசார்யர்கள் அருளிய சொற்றொடரின் அர்த்தங்களை நன்கு உணர்ந்து நல்ல விவேகத்தைப் பெற்றவன் பல விஷயங்களில் நல்ல தெளிவைப் பெறுகின்றான். அவையாவன - (1) தன் ஸ்வரூபம் எம்பெருமானது ஸ்வரூபத்துக்கு வசப்பட்டதென்று உணருகின்றான். (2) தான் செய்யும் ப்ரபத்தி முதலிய செயல்களெல்லாம் அவன் ஸங்கல்பத்தாலேயே நடப்பனவென்று அறிகின்றான். (3) தான் பெறும் பயனெல்லாம் இறுதியில் அவன் பெறும் பயனடியாகவே வருவதென்று காண்கின்றான். இந்த மூன்று அம்சங்களாலும் தான் அவனுக்குச் சரீரமாய் அவன் தனக்கு அந்தர்யாமியாய் நிற்கும் தன்மை நன்கு விளங்கிவிடும்.

## 17. முடிவுரை

இவ்வாறு தத்துவம் - ஹிதம் - புருஷார்த்தம் ஆகிய மூன்றிலும் சேதநன் விவேகம் பெற்றானாயின் தன் தகுதிக்கு ஏற்ற ப்ரபத்தியை உபாயமாகக் கைக்கொண்டு தன் ஸ்வரூபத்தையும் தன்னைக் காக்கும் பொறுப்பையும் அதனால் வரும் பயனையும் எம்பெருமானிடமே ஸமர்ப்பிப்பான். பின் அந்த மூன்றிலும் தனக்கு எத்தகைய தொடர்பும் இல்லையென்று கவலை யற்றிருப்பான்.

தத்த்வ ஸ்ந்தேசம் முற்றிலும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 9. ரஹஸ்ய ஸந்தேசம்

மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தை விளக்கி உபதேசிப்பதால் இதற்கு இப்பெயர் வந்தது. இந்த ரஹஸ்யத்தில் திருமந்த்ரத்தின் அர்த்தங்களைச் சுருக்கமாகக் கூறும் ஒரு சுலோகத்திற்கு ஸ்வாமி தேசிகன் வியாக்கியானம் செய்தருளியுள்ளார். அந்த சுலோகமாவது -

அஹமாத்மா ந தேஹோZஸ்மி விஷ்ணுசேஷோ Zபரிக்ரஹ :। தமேவ சரணம் ப்ராப்த: தத்கைங்கர்ய சிகீர்ஷயா ॥

பதவுரை -

அஹம் - யான்

ஆத்மா - ஜீவன்

தேஹ: ந அஸ்மி - சரீரமாக இல்லை. (அதாவது சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாக உள்ளேன்)

விஷ்ணு சேஷ: - எம்பெருமானுக்கு அடியன்.

அபரிக்ரஹ: - என்னுடையது என்று கூறிக்கொள்ளக் கூடிய ஒன்றுமில்லாதவன்.

தத் கைங்கர்ய - அந்த எம்பெருமானுக்குக் கைங்கர்யத்தை

சிகீர்ஷயா - செய்ய விருப்பத்தால்

தம் ஏவ - அந்த எம்பெருமானையே

சரணம் ப்ராப்த: - சரணமாக அடைந்தேன்.

பத்தனான ஜீவனது நிலை

ஆதிசேஷன் - கருடன் - விஷ்வக்ஸேநர் முதலிய நித்ஸூரிகள் அஞ்ஞானவாசனையேயற்றவர்கள். அவர்கள் அளவற்ற பெரும்பயனான பகவத் கைங்கர்யத்தைச் சாச்வதமாக ஸ்ரீவைகுண்டத்தில் செய்து கொண்டிருக்கின்றனர். அத்தகைய கைங்கர்யத்தை ஸ்ரீவைகுண்டத்தில் நித்ய ஸூரிகளைப் போலவே பெற்று வாழ ஒவ்வொரு ஜீவனுக்கும் இயற்கையில் தகுதி உண்டே! இங்ஙன் இருக்க, ஏன் இந்த ஜீவாத்மா அந்தப் பயனைப் பெறாமல் இங்கு ஸம்ஸார மண்டலத்தில் அல்லல்படுகின்றான்? இதை

ஆலோசிக்க வேண்டும் - அநாதியாய் வருகிற ப்ரக்ருதியின் தொடர்பு இவனுக்கு உள்ள அறிவை மழுங்கச் செய்து விடுகின்றது. அதனால் ஸம்ஸாரமாகிய கடலில் அழுந்திக் கிடக்கின்றான். இந்த ஸம்ஸார ஸமுத்ரம் இவனுக்கு எண்ணிறந்த கஷ்டங்களைக் கொடுக்கின்றது. இவ்வாறு அல்லல்பட்டு மிக்க துயருறும் ஜீவனுக்குப் பாக்ய வசத்தால் ஓர் ஆசார்யன் கிடைக்கின்றான். அவ்வாசார்யன் ஆசார்யகத்துக்கு வேண்டிய குணங்கள் நிரம்பப் பெற்றவனாய் விசேஷ ஞானம் படைத்தவனாயுள்ளான். அவன் ஜீவாத்மாவுக்குத் திருமந்த்ரத்தின் அர்த்தத்தை உபதேசித்து நல்ல விவேகத்தை உண்டாக்குகின்றான்.

மூன்று ரஹஸ்யங்கள்

திருமந்திரம் - த்வயம் - சரமசுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. அவற்றுள் சரமசுலோகம் ப்ரபத்தியைச் செய்யுமாறு விதிக்கின்றது. த்வயம் அந்த ப்ரபத்தியின் ஸ்வரூபம் முதலியவற்றைத் தெளிவாகக் கூறுகின்றது. திருமந்திரம் த்வயத்தில் உள்ள அர்த்தங்களுக்கு அவசியம் வேண்டிய அம்சங்களைச் சுருக்கிக் கூறுகின்றது. அவற்றின் விளக்கம் வருமாறு -

சரம சுலோகம்

எல்லார்க்கும் அடைக்கலமாயுள்ள ச்ரிய : பதியான கண்ணன் தானே சரமசுலோகத்தில் சேதநனை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றான் - "நீ இந்த ஸம்ஸார மண்டலத்தில் மிகுத்த துன்பத்தை அடைந்துள்ளாய். இந்நிலையில் செய்வதற்கு மிகக் கடினமான உபாயம் எதையும் நீ செய்து சிரமப்பட வேண்டாம். உன்னிடம் உள்ள பாபங்கள் அனைத்தையும் ஒழிக்கச் சக்தியுடையவன் நான். ஆனால் அதற்குச் சமயத்தை எதிர்பார்த்து நிற்கின்றேன். இத்தகைய என்னை ஒருவனையே உபாயமாக நீ பற்ற வேண்டும்." என்று.

த்வயம்

கீழ் சொன்ன சரணாகதியைச் செய்ய எல்லாச் சாதியாருக்கும் தகுதியுண்டு. த்வயம் இந்தச் சரணாகதி யாரைப் பற்றியது? அவருக்கு உள்ள விசேஷம் யாது? இந்த ப்ரபத்தியின் உருவம் எது? அதில் உள்ள விசேஷம் என்ன? இதன் அங்கங்கள் யாவை? அவற்றில் உள்ள விசேஷம் யாது? இந்த ப்ரபத்தியால் வரும் பயன் யாது? அப்பலனில் உள்ள விசேஷம் என்ன?' என்ற விசேஷங் களையெல்லாம் தெளிவாய்க் காட்டுகின்றது.

திருமந்த்ரம்

ப்ரபத்தி செய்வதற்கு த்வயம் கரண மந்த்ரமாய் விளங்குகின்றது. அப்பொழுது அதன் அர்த்தங்களையும் அநுஸந்திக்க வேண்டும். அவற்றுள் ஜீவனுடைய ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவற்றை த்வயம் தெளிவாகக் காட்டாமையால் அவற்றைச் சுருக்கமாக ஆனால் தெளிவாகக் காட்டுவது திருமந்திரம். இத்தகைய திருமந்த்ரத்தையும் அதன் அர்த்தங்களையும் ஆசார்யன் சேதநனுக்கு உபதேசிக்கின்றான். அதனால் சேதநனுக்கு வரும் பயன்களாவன - சரீரம் இந்திரியம் முதலியவற்றைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன் என்ற பகுத்தறிவு உண்டாகின்றது. இவ்வாறே ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் உள்ள வேற்றுமையறிவு உண்டாகின்றது. இயற்கையாகவே தான் எம்பெருமானுக்குச் சேஷன்; அவன் சேஷி என்று பகவானுக்கும் தனக்கும் உள்ள ஸம்பந்தத்தை உணருகின்றான் ஜீவன். கர்ம ஸம்பந்தத்தாலே வந்த சரீரம் வீடு, நிலம் முதலியவற்றின் ஸம்பந்தத்தை இழிவாகக் கருதுகின்றான். இப்படி விவேகம் பெற்ற தன் ஸ்வரூபத்துக்கு ஏற்ற மிகச் சிறந்த பலன் மோக்ஷம் தான் என்பதை அறிந்து கொள்கின்றான். அந்த மோக்ஷத்தைப் பெறுதற்காகத் தனக்கு ஏற்றதாய் எளிதில் செய்யக் கூடியதான ப்ரபத்தியென்னும் உபாயத்தைச் செய்கின்றான். பின் 'மோக்ஷத்துக்குச் சென்று எப்போது கைங்கர்யம் செய்வேன்?' என்று அதையே ஆவலுடன் எதிர்பார்த்து நிற்கின்றான். இவை திருமந்த்ரத்தின் அர்த்தத்தை அறிவதால் வரும் பலன்களாகும். இந்த நிலையையே தொடக்கத்தில் கூறிய 'அஹமாத்மா' என்ற சுலோகம் விளக்குகின்றது.

இந்தச் சுலோகத்தின் கருத்து விளக்கம்

அஹம் ஆத்மா

நான் ஜீவாத்மா, சரீரத்திற்காட்டிலும் வேறுபட்டிருக்கிறேன் என்று இரண்டு வாக்கியங்கள் உள்ளன. இந்த இரண்டு வாக்கியங்களும் ப்ரணவத்தில் மூன்றாவது எழுத்தாகிய 'ம்' என்பதன் பொருளை விளக்குகின்றன. எவ்வாறெனில் - மகாரம் வடமொழியின் மெய்யெழுத்து வரிசையில் இருபத்தைந்தாவது எழுத்தாகும். இது ப்ரக்ருதியில் சேர்ந்த இருபத்து நான்கு அசேதந தத்துவங்களினும் வேறுபட்டவது மகாரத்தின் பொருளான ஜீவாத்மா என்பதைக் காட்டுகின்றது. மேலும் 'மந்' என்ற வினைப்பகுதி (தாது) அறிவுவடிவமாயிருப்பதையும் அறிவுக்கு

உறைவிடமாயிருத்தலையும் காட்டுவதால் இவற்றையுடைய ஜீவன் இவையில்லாத அசேதநமான சரீரத்திலும் வேறுபட்டவனென்பதைக் கூறும். மேலும் 'அஸ்மத்' என்ற சொல்லில் 'அஸ்-அத்' என்ற இரண்டு பகுதியையும் தள்ளி விட்டால் நடுவே உள்ள'ம்' என்ற எழுத்து. 'அஸ்மத்' என்ற பொருளைக் கூறும் வாயிலாக 'நான்' (அஹம்) என்ற பொருளைக் கூறுகின்றது.

'அஹம்' என்ற சொல் ஜீவனில் வேறுபட்ட சரீரத்தில் ஜீவன் என்ற எண்ணத்தைத் தடுக்கின்றது.

ந தேஹ: அஸ்மி

கை - கால் முதலிய பல அவயவங்களின் தொகுதியான சரீரத்திற் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன் என்று கூறியது இந்த்ரியங்களையும் சேர்த்துக் கொண்டு அவற்றினும் ஜீவனுக்கு வேறுபாட்டைக் காட்டும். ஆகவே இருபத்தைந்தாவதான ஜீவ தத்துவம் மற்ற எல்லாத் தத்துவங்களினும் வேறுபட்டதென்று தேறியது.

விஷ்ணுசேஷ :

எம்பெருமானுக்கே அடியன் (ஜீவன்) என்று பொருள். இந்தச் சொல் திருமந்திரத்தின் ப்ரணவத்தில் முதலில் உள்ள அகாரம் - அதன்மேல் விகுதி ஆகிய இரண்டின் பொருளையும் காட்டும். எவ்வாறெனில் - ப்ரணவத்தில் முதல் எழுத்தாகிய அகாரம் எம்பெருமானைச் சொல்லுகின்றது. அதன்மேல் 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபு ஏறிப் பின் அழிந்திருக்கின்றது. ஆதலால் அந்த விகுதி இருப்பதாகவே வைத்துக்கொண்டு பொருள் கூற வேண்டும். 'ஆய' என்னும் விகுதிக்கு அவன் பொருட்டு அதாவது அவன் பலனுக்காகவே என்று பொருள். அவன் பயனுக்காகவே இருத்தல் என்பது தான் சேஷத்வம். ஆகவே 'அ+ஆய' என்ற இரண்டும் சேர்ந்து காட்டும் 'எம்பெருமானுக்குச் சேஷன்' என்ற பொருளையே இங்கு 'விஷ்ணுசேஷ :' என்ற பதம் காட்டுகின்றது.

இந்த 'விஷ்ணுசேஷ' என்ற சொல்லே 'நம:' என்பதன் அர்த்தத்தையும் காட்டுகின்றது. எவ்வாறெனில் - ந,ம: என்று பிரித்து எம்பெருமானையன்றி வேறு யாருக்கும் ஜீவன் அடியனல்லன் என்று ஒரு பொருள் உண்டு. இந்தச் சுலோகத்தில் விஷ்ணு என்று அவன் திருநாமத்தைக் குறிப்பிட்டுக் கூறியுள்ள ஸ்வாரஸ்யத்தைப் பார்த்தால் அவனுக்கே சேஷன் என்ற அர்த்தம்

ஏற்படுகின்றது. மேலும் விஷ்ணுசேஷ: என்பதைப் பிரித்துப் பொருள்படுத்தும்போது 'ஏவ' என்ற சொல்லைச் சேர்த்து 'விஷ்ணோ: + ஏவ + சேஷ:' என்றும் பொருள் கொள்ளலாமாதலின் இந்த ஸ்வாரஸ்யத்தைப் பார்த்தாலும் விஷ்ணுவுக்கே சேஷன் என்ற பொருள் கிடைக்கின்றது. ஆகவே நம: என்பதற்கு அவனையன்றி வேறொருவனுக்கும் சேஷனல்லன் என்ற பொருளை இந்த விஷ்ணுசேஷ: என்ற சொல்லும் நன்கு காட்டுவதை உணரலாம்.

அபரிக்ரஹ :

தன்னுடையதென்று உரிமை கொள்ள எந்தப் பொருளும் இல்லாதவன் ஜீவன். ந-ம: என்பதோடு கிஞ்சித் என்ற சொல்லை வருவித்துக் கொண்டால் என்னுடையதாக ஒரு பொருளும் இல்லை என்று தேறும். சேஷத்வம் என்ற சொல்லை வருவித்துக் கொண்டும் பொருள் கூறலாம். அப்பொழுது ஜீவனுக்கு எதைப் பற்றியும் சேஷியாந்தன்மை இல்லையென்று தேறும்.

தமேவ சரணம் ப்ராப்த :

அவனையே சரணமாக அடைந்தேன். 'நம:' என்ற சொல்லுக்குச் சரணாகதி என்றும் ஒரு பொருள் உண்டு. எம்பெருமான் திருவடித்தாமரைகளில் 'நம:' என்பதன் பொருளாகிய சரணாகதியை அவனாலே ஏவப்பட்டவனாய்ச் செய்கிறேன் என்ற பொருள் இத் தொடரால் கிடைக்கின்றது.

தத்கைங்கர்ய சிகீர்ஷயா

அவனுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்ற விருப்பத்தால், இத்தொடர் திருமந்திரத்தில் மூன்றாவது பதமாகிய 'நாராயணாய' என்பதன் கருத்தை விளக்குகின்றது. தத்-அவனுக்கு என்றால் நாராயணனுக்கு என்று பொருள். திருமந்திரத்தில் மூன்றாவது பதமாகிய நாராயணாய என்பதில் 'நாராயண' என்ற பகுதியின் மேல் உள்ள நான்காம் வேற்றுமை விகுதி ஆய என்பது. இந்த விகுதிக்கு அடியனாயிருத்தல் என்று பொருள். இந்த அடியனாந்தன்மை ஜீவனுக்கு இயற்கையாகவே இருப்பதால் இதைப் பிரார்த்திக்க வேண்டியதில்லை. ஆதலால் அடியனாந்தன்மையினால் செய்யும் கைங்கர்யத்தைக் காட்டுகின்றது 'ஆய' என்னும் விகுதி. இந்த விகுதியின் பொருளான கைங்கர்யமே இந்தச் சுலோகத்தில் உள்ள கைங்கர்ய என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றது. 'நாராயணாய' என்ற

சொல்லுக்குப்பின் 'ஸ்யாம்' என்ற ஒரு வினைச்சொல்லை வருவித்துத்தான் (கைங்கர்யம் செய்பவனாக) ஆவேன் என்று பொருள் கூற வேண்டும். ஆகவே இந்தக் கைங்கர்யம் செய்ய ஜீவன் ஆசைப்படுவது தெளிவாகின்றது.

இப்படி அஹமாத்மா என்ற சுலோகம் திருமந்திரத்தின் கருத்தை விளக்குவதாயுள்ளது.

சுலோகத்தின் திரண்ட பொருள்

இங்ஙனம் இந்தச் சிறிய சுலோகத்திற்குப் பதம் பதமாய்ப் பிரித்து அர்த்தம் கூறியாயிற்று. அர்த்தம் தெளிவாகும் முறையில் வரிசைப்படுத்தி இதன் திரண்ட பொருள் வருமாறு - ஜீவாத்மாவாகிய யான் சரீரம் இந்த்ரியம் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன்; ஞானத்துக்கு உறைவிடமாயுள்ளவன்; ஞானவடிவமாகவும் உள்ளவன்; இப்படி ஞானமுடையனாதலின் தான் ப்ரகாசிப்பதால் வரும் பயனைத் தானே பெறுமவனாகின்றான். ஞானவடிவமாதலின் தர்ம பூத ஜ்ஞாநத்தின் உதவியின்றித் தானே ப்ரகாசிக்கின்றான். ஆதலால் ஜீவன் 'ப்ரத்யக்' எனப்படுகின்றான். ஜீவன் எம்பெருமான் ஒருவனுக்கே அடியனாயிருப்பவன்; கர்மவசத்தால் சில பொருள்களுக்கு நான் தலைவனாய்த் தோன்றுகின்றேனேயன்றி இயற்கையில் எதற்கும் எவனுக்கும் தலைவனாகமாட்டேன். ஸ்ரீவைகுண்டத்தில் எல்லையற்ற பகவத் கைங்கர்யம் செய்யும் ஆனந்தத்தை அடைய ஆசையுடையேன். அதற்காக அவனையே சரணமடைந்தேன் என்றவாறு. இதுவே இச்சுலோகத்துக்குத் திரண்ட பொருள்.

முடிவுரை

தன்னைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸம்ர்ப்பித்துப் ப்ரபத்தி செய்தவன் இந்தத் திரண்ட பொருளை அநுஸந்திக் கொண்டேயிருக்க வேண்டும். இந்த அநுஸந்தாநம் ப்ரபத்தி செய்தவன் தனக்கு நிஷ்டை ஏற்பட்டிருப்பதை அறிந்து கொள்வதைச் சொல்லுகிறதாயிருக்கும். மேலும் ப்ரபந்நன் இப்படி அநுஸந்திக்கும் போது அவனுக்கு விசேஷமான ஆநந்தம் ஏற்படும். எம்பெருமானும் இவன்பால் மிக்க மிகழ்ச்சி கொள்வான். ஆதலின் இந்தச் சுலோகத்தின் திரண்ட பொருளாகக் கீழே கூறியிருப்பதை எப்பொழுதும் அநுஸந்திக்க வேண்டும்.

ரஹஸ்ய ஸந்தேசம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 10. ரஹஸ்ய ஸந்தேச விவரணம்

## முன்னுரை

இந்த ரஹஸ்யம் ஸ்ரீ ரஹஸ்ய ஸந்தேசத்தில் த்வயத்தைப் பற்றிக் கூறிய ஒரு வாக்யத்தின் பொருளை விரித்துரைப்பதற்கும் அந்த ரஹஸ்யத்தின் கடைசியில் உள்ள "சீலம் கவர்ந்திடும்" என்கிற பாசுரத்தின் கருத்தை விளக்குவதற்கும் அருளிச் செய்யப் படுகின்றது.

ஸ்ரீரஹஸ்யஸந்தேசத்தில் த்வயத்தைப் பற்றிக்கூறும் போது "சரணாகதியினுடைய விஷய - ஸ்வரூப - பரிகர - பல விசேஷங்களை விசதமாக ப்ரகாசிப்பிக்கிற த்வயத்திற்கு" என்கிற வாக்யத்துக்குப் பொருள் இங்குக் கூறப்படுகின்றது. த்வயம் (1) சரணாகதிக்கு விஷயத்தில் உள்ள விசேஷத்தையும் (2) ப்ரபத்தியின் ஸ்வரூபத்தில் உள்ள விசேஷத்தையும் (3) அதன் அங்கங்களுக்கு உள்ள விசேஷத்தையும் (4) அதன் பலனில் உள்ள விசேஷத்தையும் விளக்குகின்றதென்று இந்த வாக்யத்திற்குப் பொருள்.

### 1. ப்ரபத்திக்கு விஷயத்தில் விசேஷம்

எம்பெருமானைக் குறித்துத்தானே ப்ரபத்தி செய்ய வேண்டும்! ஆகவே எம்பெருமான் ப்ரபத்திக்கு விஷயமாகின்றான். மற்ற தேவதைகள் ரக்ஷகராக மாட்டார். ஆதலின் அவர்களைக் குறித்து ப்ரபத்தி செய்வதற்கே இடமில்லையாதலின் அவர்கள் ப்ரபத்திக்கு விஷயமாக மாட்டார். மற்றவர்களுக்கு இல்லாத இந்தப் பெருமை எம்பெருமான் ஒருவனுக்கு மட்டுமே இருப்பது அவனுக்கு உள்ள ஒரு விசேஷம். மேலும் எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை மட்டும் இலக்காக வைத்து ப்ரபத்தி செய்வதில்லை. அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தையும் இலக்காகக் கொண்டே ப்ரபத்தி செய்ய வேண்டும். இது மற்றொரு விசேஷம். மேலும் எம்பெருமானை மட்டும் விஷயமாக வைத்து ப்ரபத்தி செய்வதில்லை. அவனைக் கணப்பொழுதும் பிரியாத பெரிய பிராட்டியுடன் கூடிய எம்பெருமானையே இலக்காக்கி ப்ரபத்தி செய்ய வேண்டும். இது மற்றொரு விசேஷம். இதனால் ஸ்வரூபம் - திருமேனி - பிராட்டி - சேஷியாயிருக்கும் ஸம்பந்தம் - குணம் இவற்றுடன் கூடிய ஸர்வேச்வரனே ப்ரபத்திக்கு விஷயமானவன் என்று தீர்ந்தது. இந்த அம்சம் தான் ப்ரபத்திக்கு விஷயமான எம்பெருமானுக்கு விசேஷம்.

2. ப்ரபத்தியின் உருவத்தில் விசேஷம்

பக்தி - ப்ரபத்தி ஆகிய இரண்டே மோக்ஷத்துக்கு நேர் உபாயமாகும். இவற்றுள் பக்தியோகமெனப்படும் உபாஸநம், செய்வதற்கு மிகக் கடினமானது. நெடுங்காலம் செய்து கொண்டேயிருக்க வேண்டும். இன்னும் பல ஸங்கடங்கள். இந்த பக்தியோகத்திற் காட்டிலும் முற்றிலும் வேறானது ப்ரபத்தி. ப்ரபத்தி, செய்வதற்கு மிகவும் எளிது. கணப்பொழுதில் இதைச் செய்து முடித்து விடலாம். ஒரு முறை செய்து விட்டால் போதும். ஆதலின் பக்தி - ப்ரபத்தி இவற்றின் உருவத்தில் வேறுபாடுகள் பல. மேலும் யாகம் முதலிய பல கர்மங்கள் உண்டே! உருவத்தில் அவற்றிலும் வேறுபட்டது இந்த ப்ரபத்தி. மேலும் பக்தியோகத்துக்கு அங்கமாகவும் செய்ய வேண்டிய ப்ரபத்தி உண்டே! அந்தப் ப்ரபத்தியினும் இந்த ஸ்வதந்த்ரமான ப்ரபத்தி உருவத்தில் வேறுபட்டதாகும். தன்னைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தலை முக்கியமாகக் கொண்டது இந்த ப்ரபத்தி. இந்த அம்சங்களே ப்ரபத்தியின் உருவத்தில் உள்ள விசேஷங்களாகும்.

3. ப்ரபத்தியின் அங்கங்களில் விசேஷம்

ப்ரபத்திக்கு ஐந்து அங்கங்கள் உண்டு. அவை (1) ஆநுகூல்ய ஸங்கல்பம் (2) ப்ராதிகூல்ய வர்ஜநம் (3) மஹாவிச்வாஸம் (4) கோப்த்ருத்வவரணம் (5) கார்ப்பண்யம் என்பன. மற்றோர் உபாயமாகிய பக்தியோகத்திற்கு யமம் - நியமம் முதலிய ஏழு அங்கங்கள் உள்ளன. இந்த அங்கங்களைக் காட்டிலும் ப்ரபத்திக்குக் கூறிய ஐந்து அங்கங்களும் முற்றிலும் வேறுபட்டன. மேலும் இந்த ஐந்து அங்கங்களும் அங்கிகளாயுள்ள பக்தியோகம், ப்ரபத்தி இவற்றைக் காட்டிலும் வேறுபட்டனவாகும். இத்தகைய வேறுபாடு இருப்பதுவே ப்ரபத்தியின் அங்கங்களுக்கு உள்ள விசேஷமாகும்.

4. ப்ரபத்தியின் பலனில் விசேஷம்

பலன் மோக்ஷம். மோக்ஷமாவது - லீலாவிபூதி. நித்ய விபூதி இரண்டு விபூதிகளையும் ஆள்பவனான பரமபத நாதனைப் பரிபூர்ணமாய் அநுபவித்துக் கைங்கர்யம் செய்தல். இன்ன இடத்தில் தான் இருந்து கைங்கர்யம் செய்ய வேண்டுமென்ற வரையறை இல்லை. இன்ன காலத்தில் தான் கைங்கர்யம் செய்தல் என்ற வரையறையும் இல்லை. எல்லா இடங்களிலும் எல்லாக் காலத்திலும் செய்யக் கூடியது அந்தக் கைங்கர்யம். இந்தப் பெரும்பயன் உலகிலுள்ள ஐச்வர்யமாகிய பலனைக் காட்டிலும்

வேறுபட்டதாகும். அவ்வாறே ஆத்மாவை அநுபவித்தலாகிய கைவல்யமென்னும் பலனினும் வேறுபட்டதாகும். மேலும் ஸாலோக்யம் (எம்பெருமானுடன் ஒரே லோகத்தில் இருத்தல்) ஸாரூப்யம் (எம்பெருமானை ஒத்த உருவம் கொள்ளல்) ஸாமீப்யம் (எம்பெருமானுக்கு அருகே இருத்தல்) ஆகிய மற்ற பலன்களையும் காட்டிலும் இந்த மோக்ஷம் முற்றிலும் வேறுபட்டதாகும். மோக்ஷமாகிய பலன் இவ்வாறு மற்ற பலன்களினும் வேறுபட்டிருப்பதுவே இதற்கு உள்ள விசேஷம்.

ஸ்ரீ ரஹஸ்ய ஸந்தேசத்தின் முடிவில் ஸ்ரீ தேசிகன் அருளிய 'சீலம் கவர்ந்திடும்' என்ற பாசுரத்துக்கு ஸ்வாமி தாமே அருளிச் செய்த உரையின்படி கருத்து விளக்கம் தரப்படுகின்றது.

இந்தப் பாட்டு சிறந்த ஆசார்யனது அருளாலே சிஷ்யன் தனக்கு எல்லாவற்றிலும் மேம்பட்ட பயனாகிய மோக்ஷம் கிடைக்கப் போவதை அநுஸந்திப்பதைக் கூறுகின்றது. ஆசார்யர்கள் கருணை பொறுமை முதலிய ஆத்ம குணங்கள் நிரம்பப் பெற்றவர்கள். சிறந்த அநுஷ்டாநத்தையும் உடையர். தம்மை அடைந்த சீடரைத் தவறான வழியில் செல்லாதவாறு செய்து நல்வழி காட்டுவதற்கு ஏற்றவர்கள். அவர்கள் தங்களையும் தங்களைச் சேர்ந்தவர்களான நம்மையும் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்துப் பரந்யாஸம் செய்பவர். ஸர்வேச்வரன் இந்த ஆசார்யர்களையும் இவர்களைச் சேர்ந்தவர்களையும் காப்பதாக உறுதி கொண்டுள்ளான். இவனை இவ்வாறு செய்வித்தது பரந்யாஸம்தானே! இந்தப் பரந்யாஸத்தின் பெருமையால் ப்ரபத்திக்கு முன் செய்த பாபங்களும் பின் அறியாமல் செய்ய நேரும் பாபங்களும் தீயினில் பஞ்சுப் பொதிபோல் அழிந்து விடுகின்றன. ப்ரக்ருதியின் மாறுபாடாய் ஐந்து பூதங்களாலான இந்தக் கர்ம சரீரத்தின் ஸம்பந்தத்தால் ஜீவாத்மா - பரமாத்மா இவர்களைப் பற்றிய அறிவின்றி அஞ்ஞானத்தில் மூழ்கிக் கிடந்தோம். கர்மத்தின் பலனை அநுபவிப்பதற்குத் தானே இந்தச் சரீரத்தை எடுத்திருக்கிறோம்! இந்தச் சரீரத்தில் இருப்பது ஒரு சிறையில் இருத்தல் போன்றதாகும். இந்தச் சிறை ஒழிவதற்குக் காலத்தை எம்பெருமான் தான் ஸங்கல்பிக்க வேண்டும். அவன் பரிபூர்ணமான சுதந்திரம் உடையவனே. ஆயினும் அவனும் சாஸ்த்ரத்தை அநுஸரித்து நம் கர்மத்திற்கு ஏற்றவாறுதான் நம் சரீரம் கழியும் காலத்தைக் குறிக்க வேண்டும். அந்தக் காலத்தை எதிர்பார்த்து நின்றோம். அந்தக் காலம் நம் முயற்சி ஏதுமில்லாமலே இப்பொழுது தானாகவே மிக நெருங்கி விட்டது.

உதாஹரணமாய் - ஒரு மனிதன் நதியின் அக்கரை சேர ஓடத்தை எதிர்பார்த்து நிற்கின்றான். அந்த ஓடம் தானாகவே வரும். அது வருவதற்காக அவன் செய்ய வேண்டிய முயற்சி ஒன்றும் இல்லை. அதுபோலச் சரீரத்தை விடும் காலம் தானாகவே நெருங்கி விட்டது. இனி நாம் அஜ்ஞானத்தையே தரும் இந்த ஸம்ஸார மண்டலத்தில் மறுபடியும் சரீரத்தை அடைந்து பல துன்பங்களை அநுபவிக்க வேண்டி வருமோ என்ற கவலையும் ஒழிந்தது. ஏனெனில் - பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மத்தில் மறுபடி வேறு சரீரம் பெறுவதற்கு வேண்டிய கர்மப்பகுதி இருந்தாலன்றோ மறுபிறவி வரும்! அந்தக் கர்மம் ஏது நமக்கு? நாம் சிறந்த ஆசார்யனை அடைந்து அவன் திருவருளாலே பரந்யாஸம் செய்துவிட்டோமே! அதனால் அடுத்த பிறவியைத் தரும் கர்மப் பகுதியும் கழிந்து விட்டதே! ஆதலால் இனி இந்த ஸம்ஸார மண்டலத்தில் பிறவியைப் பெறமாட்டோம். இந்தச் சரீரம் கழிய வேண்டியது ஒன்றுதான் எஞ்சியுள்ளது. உடனே ஸ்ரீவைகுண்ட நாதனைச் சேர்ந்து விடுவோம். அவன் திருமேனியை ஸேவித்தால் ஸம்ஸார மண்டலத்திலுள்ள எல்லாத் துன்பங்களும் எல்லாத் தாபங்களும் ஒழிந்து போகுமே! கடலில் ஓடம் வழி தப்பிச் செல்ல நேருவதும் பின் நேரிய வழிகண்டு கரை சேருவதும் உண்டு. அவ்வாறே கர்ம வசத்தால் இதுகாறும் ஸம்ஸார மண்டலத்திலே அல்லல்பட்டு உழன்ற நாம் இப்பொழுது சேருமிடமான பரமபதநாதனைச் சேர்ந்துவிடுவோம்.

செய்ய வேண்டிய கார்யமான ப்ரபத்தியைச் செய்து முடித்த சேதநன் கீழே கூறியபடி கர்மம் - அஜ்ஞானம் - ஸம்ஸாரபந்தம் முதலிய எல்லாத் தீங்குகளும் நீங்கி மோக்ஷத்தில் எல்லையற்ற ஆநந்தவடிவமாய்ப் பரிபூர்ணமான பகவதநுபவத்தைத் தான் பெறுவதற்குக் காரணமாய் அற்புதமான சேர்த்தியை யுடையனவான பரமபதநாதன் திருவடிகள் இரண்டையும் ஸேவித்ததாக அநுஸந்தித்துப் பெரும்பயன் பெற்றவனாகவே தன்னை நினைத்துக் கொள்கின்றான்.

ரஹஸ்ய ஸந்தேச விவரணம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 11. தத்த்வ ரத்நாவளி

முன்னுரை

தத்துவங்களைப் பற்றிய விஷயங்கள் இரத்தினங்கள் போன்றவை. அவற்றைக் கொண்டு கோத்த மாலை போன்றதாதலின் இந்த ரஹஸ்யத்துக்கு இப்பெயர் வந்தது.

இந்த ரஹஸ்யம் முப்பது வாக்யங்கள் கொண்டது. முதல் பத்து வாக்யங்கள் ஜீவனைப் பற்றியும் பிந்திய பத்து வாக்யங்கள் அசேதநத்தைப் பற்றியும் கடைசி பத்து வாக்யங்கள் ஈச்வரனைப் பற்றியும் விளக்குவனவாகும்.

சேதநம் - அசேதநம் - ஈச்வரன் ஆகிய மூன்று தத்துவங்களைப் பற்றி விளக்கமாக அறிவதற்கு ஒரு சிறந்த ஆசார்யனை நாட வேண்டும். அவனால் உபதேசிக்கப் பெற்ற பின்பே தத்துவங்களின் உண்மையை அறிய முடியும். இவ்வாறு அறிய வேண்டிய மூன்று தத்துவங்களில் ஒன்றாகிய ஜீவனைப் பற்றிய விளக்கம் முதலில் தரப்படுகின்றது.

ஜீவதத்த்வம்

(1) ஜீவன் என்பவன் அஹம் (நான்) என்ற சொல்லுக்குப் பொருளாயுள்ளவன். ஜீவனுடைய ஸ்வரூபம் கண்ணுக்குப் புலப்படாது மிகச் சிறிய அணுவாயுள்ளது. ஜீவனுக்கு உள்ள சக்தியும் மிகக் குறைவாயுள்ளது.

(2) ஜீவர்கள், பத்தர் - முக்தர் - நித்யர் என மூவகைப்படுவர். இவர்கள் அனைவருடைய ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் ஆகிய அனைத்தும் எல்லாரையும் காப்பவனாய் ச்ரிய:பதியான எம்பெருமானுக்கே இயற்கையில் வசப்பட்டுள்ளன. வேறு எவனுக்கும் வசப்படாதன. இவ்வம்சங்கள் வேதாந்த சாஸ்த்ரங்களில் உறுதிப்படுத்திக் கூறப்பட்டுள்ளன. ஆதலின் ஜீவன் தன் ஸ்வரூபத்திற்கும் முக்கியமான சேஷியாக மாட்டான்: தனக்கு உள்ள அறிவுச் செயல்களிலும் தான் செய்யும் கைங்கர்யங்களிலும் தான் முக்கிய பலனைப் பெறுபவனாக இருக்க முடியாது. எம்பெருமானுக்குத் தான் செய்யும் கைங்கர்யங்களை அவனுக்கு உபகாரமாகச் செய்வதாக நினைவோ, அவற்றுக்காக

எம்பெருமானும் தனக்குப் பிரத்யுபகாரம் செய்ய வேண்டுமென்ற எண்ணமோ கொள்ளக்கூடாது. எந்த நிலைமையிலும் 'இது என்னுடையது' என்ற பற்றைக் கொள்ளக் கூடாது. இவ்வாறு இருக்க ஜீவன் கடமைப்பட்டுள்ளவன்.

(3) ஜீவனுடைய ஸ்வரூபம் - சக்தி - செயல் முதலியனவெல்லாம் எம்பெருமானுக்கு வசப்பட்டவை. இவனுக்குச் சிறிதும் சுதந்திரம் கிடையாது. ஆதலின் எம்பெருமானுடைய துணையின்றி ஜீவன் தன்னையோ பிறரையோ காக்கவல்லனாக மாட்டான்.

(4) ஜீவன் எம்பெருமானுக்குச் சேஷன். அதாவது - அவனுடைய பயனுக்காகவே இருப்பவன். ஆதலின் சேஷியான எம்பெருமான் சேஷனான ஜீவனைத் தன் இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ள உரிமையுடையவன். ஜீவனும் அதற்கு உட்பட உரியனாயுள்ளான்.

(5) ஜீவன் எம்பெருமானுக்கே வசப்பட்டிருப்பவன். ஆதலால் எம்பெருமான் ஜீவனைத் தன் இஷ்டப்படி பயன்படுத்திக் கொண்டுள்ளான். தனக்கு மட்டுமன்றித் தன் அடியார்களுக்கும் இவனை அடிமையாக்குவதே எம்பெருமானுக்கு இஷ்டமானது. ஆதலின் தன் அடியார்களுக்கு ஜீவனை அடிமையாக்குகின்றான்.

(6) திருப்பாணாழ்வார் 'அமலனாதிபிரான்' பாசுரத்தில் "அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்" என்று அருளியுள்ளார். இத்தொடருக்கு "எம்பெருமான் என்னைத் தன் அடியார்களுக்கு அடிமைப்படுத்திய மஹோபகாரம் செய்து விளங்குபவன்" என்று பொருள். இத்தொடரால் இரண்டு அம்சங்கள் வெளியாகின்றன. இவை (1) தான் பயன்படுவதற்காகவே எச்செயலையும் செய்யும் சேஷியான எம்பெருமான் என்னை அடியார்க்கு அடிமைப்படுத்தியபடியால் தன் கடமையைச் செய்து முடித்தவனாகின்றான் என்பது ஒன்று. (2) எம்பெருமான் அவ்வாறு செய்தமையால் அடியனான ஜீவன் தான் அடைய வேண்டிய பலனைப் பெற்றவனாகின்றான் என்பது மற்றொன்று. இதனின்று எம்பெருமான் என்னைத் தனக்கு அடியனாகக் கொண்டதோடு நில்லாது பாகவதர்க்கும் அடியனாக்கி மஹோபகாரம் செய்ததற்காக அவனிடம் சேதநனுக்கு உள்ள நன்றியறிவும் வெளியாகின்றது.

(7) இங்ஙனம் ஜீவன் எம்பெருமானுக்குச் சேஷனாயிருத்தல் அவனுக்கே வசப்பட்டிருத்தல் இந்தத் தன்மைகளுடன் இவனுக்கு எப்பொழுதும் உள்ள ஞானம் - செயலைச் செய்யும் திறன் இவையும் சேர்ந்து ஜீவனுக்குப் பயன்படுகின்றன. எவ்வாறெனில் - ஜீவன்

சேஷனாயிருப்பதால் சேஷியான எம்பெருமானுக்கு இஷ்டமான உபாயத்தைச் செய்ய முற்படுகின்றான். அவனுக்கு வசப்பட்டித்தலால் ஸ்வதந்த்ரனான அவன் நியமித்த செயலைச் செய்கின்றான். ஞானம் எப்பொழுதும் இருப்பதால் ஜீவன் தனக்கு உரிய உபாயத்தை அறிய முடிகிறது. செயல் புரியும் சக்தி இருப்பதால் அறிந்த உபாயத்தைச் செய்ய முடிகிறது. மேலும் ஜீவனுக்கு ஞானம் இருப்பதால் எம்பெருமான் திருவுள்ளத்தைச் சாஸ்த்ரத்தைக் கொண்டு அறிய முடிகின்றது. சக்தி இருப்பதால் கைங்கர்யங்களைச் செய்யவும் முடிகிறது.

*(8)* இந்த ஜீவன் என்னும் தத்துவம் எம்பெருமானுக்குச் சரீரமாய் நிற்கும். இது எப்பொழுதும் எம்பெருமானுக்கு ஆதேயமாயும் விதேயமாயும் சேஷமாகவும் நிற்கும். இந்த மூன்று அம்சங்களும் இருப்பதால் சரீரமாக முடியும்.

*(அ)* ஆதேயமாயிருத்தலாவது - தன் (ஜீவன்) ஸ்வரூபமும் தொடர்ந்து நிற்றலும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்துக்கு அடங்கியனவாயிருத்தல். அதாவது - அவன் (எம்பெருமான்) ஸ்வரூபம் இருந்தால்தான் இவனுடைய ஸ்வரூபமும் தொடர்ந்து நிற்றலும் உள்ளனவாகும் ஆதலால் ஜீவன் ஆதேயனாகின்றான்

*(ஆ)* விதேயனாயிருத்தலாவது - எம்பெருமானுடைய ஸங்கல்பம் இல்லாவிடில் தன் ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் இவை ஒன்றும் இல்லையென்னும்படி அவன் ஸங்கல்பத்துக்கு அடங்கியிருத்தல். அவனது ஸங்கல்பம் இல்லையேல் ஜீவனுடைய ஸ்வரூபம் இருக்குமா? ஸ்வரூபமே இல்லாதபோது நீடித்து நிற்றலும் செயலும் ஏது?

*(இ)* சேஷமாயிருத்தலாவது - தனக்கென்று முக்கிய பலன் ஏதுமின்றி எம்பெருமான் பெறும் முக்கிய பலனையே தனக்கும் பயனாகக் கொண்டிருத்தல். ஜீவன் தன் செயலால் வரும் பயனைத் தான் முக்கியமாய்ப் பெறமாட்டான். அப்பயனையெல்லாம் முக்கியமாய்ப் பெறுமவன் எம்பெருமானே. ஆதலின் ஜீவன் சேஷனாகின்றான். இப்படி இந்த மூன்று அம்சங்களும் ஜீவனிடம் எப்பொழுதும் உள்ளமையால் அந்தர்யாமியாய் நிற்கும் எம்பெருமானுக்கு இவன் சரீரமாகின்றான். இவ்வாறே இந்த மூன்று அம்சங்களும் ஜீவனது சரீரத்துக்கும் இருப்பதால் அதுவும் எம்பெருமானுக்குச் சரீரமாகின்றது.

*(9)* ஜீவன் எம்பெருமானுக்குச் சரீரமாயிருப்பதால் ஆத்மாவாயுள்ள - அவனுக்கு வசப்பட்டவனாவான்.

சரீரமாயிருக்கும் வஸ்துவெல்லாம் அந்தச் சரீரத்தையுடையனான ஆத்மாவுக்கு வசப்பட்டேயுள்ளனவல்லவா? இந்த ஜீவன் பல சரீரங்களை எடுத்துப் பல்வகையாகப் பிறக்கின்றான். அவன் வஸ்துக்களை அறிகின்றான். செயல்களைச் செய்கின்றான் இங்கு ஓர் ஐயம் எழலாம். அதாவது - இவ்வாறு பல்வகைப் பிறவிகளை எடுத்துப் பல தன்மைகளையும் உடையனான ஜீவனை நித்யனென்றும் மாறுபாடு அற்றவன் என்றும் சொல்வது எவ்வாறு பொருந்தும்? என்பது. இதற்கு ஸமாதாநம் - ஜீவனுடைய ஸ்வரூபம் பிறப்பும் இறப்பும் இல்லாதது. அவனுடைய சரீரம்தான் பிறப்பதும் அழிவதுமாயுள்ளது. அவனுக்குப் பல தன்மைகள் இருப்பதெல்லாம் ஸ்வபாவத்தில் உள்ள மாறுதல்களேயன்றி ஸ்வரூபத்தில் மாறுதல்களாகமாட்டா. ஆதலால் ஜீவனைக் குறிப்பிட்டு நித்யனென்றும் மாறுபாடு அற்றவனென்றும் கூறுவதில் இடர் ஏதும் இல்லை. ஒரு வஸ்துவின் பெயரையே வேறு பெயரிட்டு அழைப்பதற்கு ஏற்றவாறு நிலைமைகள் மாறினால்தான் அந்த வஸ்துவை நித்யமன்று எனக் கூறலாம். ஜீவனுக்கு இத்தகைய மாறுபாடு இல்லை. தேவன் மனிதன் என்று வரும் பெயர்களெல்லாம் சரீரத்தைப் பற்றியனவே யன்றி ஜீவனது ஸ்வரூபத்தைப் பற்றியனவாகா. ஜீவனுக்கு ஜீவன் என்ற பெயர் எந்நாளும் மாறுவதில்லை. ஜீவனை வேறு பெயரிட்டு அழைக்கும்படியான நிலைகள் எந்நாளும் இல்லை. அதனால்தான் ஜீவனை மட்டும் குறிப்பிட்டு நித்யன் என்றும் மாறுபாடு அற்றவனென்றும் சாஸ்த்ரம் கூறுகின்றது.

*(10)* அசேதநத்துக்கு உருவத்திலும் மாறுபாடு உண்டு. ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவாக மாறுவது உண்டே! மண் உருண்டை (பிண்டம்) குடமாக மாறுகின்தே! பொன், வளையாக மாறவில்லையா? அதற்குத் தக்கவாறு மண் - குடம் பொன் - வளை என்று பெயர்களும் மாறுகின்றனவே! ஆதலால் இதை அநித்யம் என்கின்றோம். இங்ஙனம் அசேதநவஸ்து ஒன்று மற்றொன்றாக மாறி வெவ்வேறு பெயர் பெற்றாலும் அதன் உருவம் அடியோடு அழிந்து போவதில்லை ஆகவே ஜீவனுக்கு ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லை. ஸ்வபாவத்தில் மட்டும் மாறுபாடு உண்டு. அசேதநத்துக்கு ஸ்வரூபம் ஸ்வபாவம் இரண்டிலும் மாறுபாடு உண்டு. ஆனால் அடியோடு அழிவது கிடையாது. இப்படி ஸ்வரூபம் அடியோடு அழியாத தன்மை சேதநம் அசேதநம் இரண்டுக்கும் பொதுவாகும்.

அசேதநம்

*(11)* அசேதநம் என்றால் அறிவற்ற வஸ்து என்று பொருள்

*(12)* அசேதநவஸ்து தன்னை அறிந்துகொள்ள முடியாது. பிற வஸ்துவையும் அறிய முடியாது. ஜீவன் தன்னை அறிந்து கொள்கின்றான் ; பிற வஸ்துக்களையும் அறிகின்றான். ஆதலின் தனக்கு வேண்டிய காரியங்களைச் செய்து கொள்ளும் தன்மை ஜீவனுக்கு உண்டு. அதனால் வேண்டியதை எடுத்துக் கொண்டு வேண்டாதவற்றை விலக்குகின்றான். அவ்வாறு செய்வதுவே அறிவுள்ளமைக்குப் பயனாகும். இத்தன்மையைப் பெறுவதால் ஜீவன் ப்ரத்யக் என்னப்படுகின்றான். அசேதநத்துக்கு அறியும் தன்மையும் ஆராய்ந்து செயலைச் செய்யும் தன்மையும் இல்லாமையால் ப்ரத்யக் என வழங்கப்படமாட்டாது. மேலும் ஜீவன் மற்ற வஸ்துக்களை அறிந்து அவற்றால் வரும் இன்ப துன்பங்களை அநுபவிக்கின்றான். அதனால் போக்தா (அநுபவிப்பவன்) எனப்படுகின்றான். அசேதநத்திற்கு அறியும் தன்மை இல்லாததால் பிற வஸ்துக்களை அறியும் தன்மையும் அதனால் வரும் இன்ப துன்பங்களை அநுபவித்தலும் இல்லாமையால் போக்தாவாய் (அநுபவிப்பதாய்) இருக்கும் தன்மையும் இல்லை.

*(13)* ஜீவனுக்குத் தர்மபூஜ்ஞாநமெனப்படும் அறிவு உள்ளது. அது தன்னையும் காட்டும். மற்ற வஸ்துக்களையும் காட்டும். அந்த அறிவைக் கொண்டு ஜீவன் ஒரு செயலைச் செய்ய முற்படுகின்றான். அதனால் கர்த்தா எனப்படுகின்றான். அசேதந வஸ்துவுக்கோ அறிவில்லாமையால் அறிவைக் கொண்டு ஒரு செயலைச் செய்யும் தன்மை கிடையாது. ஆதலின் அசேதநத்துக்குக் கர்த்தாவாகும் தன்மை கிடையாது. தான் புத்திபூர்வமாய்ச் செயலைச் செய்யும் தன்மைதானே கர்த்ருத்வமென்பது!

*(14)* ப்ரக்ருதி - காலம் - சுத்த ஸத்துவம் என்ற மூன்று அசேதநங்களுள் ப்ரக்ருதி என்பது ஸத்த்வம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களையுடையது. அதனால் ப்ரக்ருதிக்கு த்ரிகுணம் என்ற பெயரும் உண்டு. ஸ்ரீவைகுண்டத்திற்குக் கீழே உள்ள இடப்பரப்பு முழுதும் ப்ரக்ருதி மண்டலமெனப்படும். இந்த ப்ரக்ருதி பல்வகையான மாறுபாட்டை அடைந்து எம்பெருமானுக்கு லீலாரஸத்தை உண்டாக்கும். ஆதலால் இந்த ப்ரக்ருதி மண்டலத்தை லீலாவிபூதி என்பர். இந்த ப்ரக்ருதியே இந்த ஸம்ஸாரத்திலுள்ள ஜீவர்களுக்குச் சரீரமாயும் இந்த்ரியமாகவும் மாறுபாட்டை அடைகின்றது. இந்த மாறுபாடுகளுள் அந்த அந்த ஜீவனுக்குச் சில

அநுகூலங்களாகவும் சில ப்ரதிகூலங்களாகவும் இருக்கும். இதற்குக் காரணம் அந்த அந்த ஜீவனுடைய முந்திய கருமங்களில் மாறுபாடு இருத்தலேயாகும். ஒருவனுக்கு ஒரு வஸ்து அநுகூலமாய்த் தோன்றுகிறது. அந்த வஸ்துவே மற்றொருவனுக்குப் பிரதிகூலமாய்த் தோன்றுகின்றது. காரணம் அவனவனுடைய கர்மத்தில் மாறுபாடேயாகும். ஒரு வஸ்துவே ஒரு சமயத்தில் ஒருவனுக்கு அநுகாலமாயும் மற்றொரு சமயத்தில் பிரதிகூலமாகவும் ஆகின்றது. ஏன்? அவனுடைய கர்மங்களில் உள்ள வேறுபாட்டினால் அப்படியாகின்றது.

(15) இப்படி ஸம்ஸாரிகளான சேதநர்களுக்கு அநுகூலமாகவும் பிரதிகூலமாகவும் அவரவர் கருமத்துக்குத் தக்கவாறு தோன்றிய வஸ்துக்களே அவர்கள் முக்தியடைந்தபின் மிகமிக அநுகூலமாய்த் தோன்றும். இதற்குக் காரணம் - எல்லா வஸ்துக்களும் எம்பெருமானுடைய ஆளுகைக்கு உட்பட்டனவாய் அவனுக்குச் சரீரமாயுள்ளன. ஆதலின் ஸகல வஸ்துக்களும் இயற்கையில் மிக அநுகூலமாயிருப்பனவே. மோக்ஷத்தை அடைந்தவர்க்கு இவ்வம்சம் நன்கு புலப்படுவதால் எல்லா வஸ்துக்களும் மிக அநுகூலமாகவே தோன்றுகின்றன.

(16) இப்பொழுது முக்தி பெற்றவருக்குத் தாம் முன்பு ஸம்ஸாரியாயிருந்தபோது தமக்குப் பிரதிகூலமாயிருந்த வஸ்து இன்னது என்று அந்தப் பழைய நிலையும் நன்றாய்த் தெரியும். சில வஸ்துக்கள் ஸம்ஸார மண்டலத்திலுள்ள பிறருக்குப் பிரதிகூலமாய்த் தோன்றுவதும் நன்றாய்த் தெரியும். இந்தப் பழைய நிலையும் இப்போது ஸம்ஸாரியாயுள்ள பிறருடைய நிலையும் முக்தருக்கு நன்றாய்ப் புலப்பட்டாலும் முக்தி நிலையில் எந்த வஸ்துவும் பிரகூலமாயிராது. ஸம்ஸாரிகளுக்குப் பிரதிகூலமாய்த் தோன்றும் வஸ்துக்கள் எம்பெருமானுக்குப் பிரதிகூலமாய்த் தோன்றுகின்றனவா? இல்லையே! எல்லா வஸ்துக்களும் அவனுக்கு அநுகூலமாய்த்தாமே உள்ளன. அவ்வாறே முக்தருக்கும்.

(17) அசேதநங்களுள் ஒன்றாகிய சுத்தஸத்துவம் என்பது ரஜஸ் தமஸ் ஆகிய இரண்டு குணங்களும் சிறிதும் இன்றி ஸத்துவ குணத்துக்கு மட்டும் உறைவிடமான ஒரு த்ரவ்யம். பரமபதம் எம்பெருமானுடைய போகவிபூதியென்று வழங்குகின்றே! இந்தப் பரமபதம் சுத்த ஸத்துவமயமானதே. ரஜோகுணம் தமோகுணம் இவற்றின் வாடையே பரமபதத்தில் கிடையாது. நித்யஸூரிகளால் ஸேவிக்கப்படுகின்ற திவ்ய தம்பதிகளும் நித்யஸூரிகளும் அவர்களைப்போல் ஞான மலர்ச்சி பெற்ற முக்தர்களும் தத்தம்

இஷ்டப்படி திருமேனிகளையும் இந்த்ரியங்களையும் ஸங்கல்பத்தால் படைத்துக் கொள்ளுகின்றார்களே! அவையெல்லாம் இந்தச் சுத்த ஸத்துவமென்கிற த்ரவ்யத்தாலான வைகளேயாகும். அவர்கள் அனைவருக்கும் இந்த த்ரவ்யம் எப்பொழுதும் மிகவும் அநுகூலமாகவே இருக்கும்.

*(18)* அசேதநங்களுள் ஒன்றாகிய காலம் என்னும் வஸ்துவுக்கு ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களும் கிடையா. இந்தக் காலம் லீலாவிபூதியெனப்படும் ஸம்ஸார மண்டலத்திலும் சூழ்ந்து நிற்கின்றது. நித்ய (போக) விபூதியெனப்படும் பரமபதத்திலும் வியாபித்துள்ளது. பரமபதத்திலும் இந்தக் காலமென்னும் தத்துவம் உண்டு. ஆனால் காலத்திற்கு அங்குச் செல்வாக்கு ஏதும் இல்லை. அங்கு நடக்கும் மாறுதல்களுக்கோ நிகழ்ச்சிகளுக்கோ காலம் காரணமாகாது. நாழி - நாள் - மாதம் - வருஷம் முதலிய பிரிவும் பரமபதத்தில் கிடையாது. முன்பு பின்பு என்ற வழக்கு மட்டுமே உண்டு. இந்த ஸம்ஸார மண்டலத்திலோ காலத்திற்கு நாழிகை - பகல் - இரவு - நாள் - மாதம் - கல்பம் - ஆண்டு முதலிய பிரிவுகளெல்லாம் உண்டு. இங்கு நடக்கும் மாறுதல்களுக்கோ மற்ற நிகழ்ச்சிகளுக்கோ இந்தக் காலமே காரணமாகும்.

*(19)* தர்மபூதஜ்ஞாநம் - இது அறிவற்ற வஸ்துவாதலின் அசேதநமான வஸ்து என்று சொல்லப்படுகின்றது. இது ஜீவாத்மாவுக்கும் உண்டு. பரமாத்மாவுக்கும் உண்டு. இதில் ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்ற மூன்று குணங்களும் கிடையா. இந்த ஜ்ஞாநம் தன்னை உடையவனுக்குத் தன்னைக் காட்டும். அதாவது - இது தானே பிரகாசிக்கும். இதை அறிவதற்கு மற்றொரு ஞானம் வேண்டியதில்லை. குடம் - புஸ்தகம் முதலிய மற்ற வஸ்துக்களையும் இந்த ஜ்ஞாநமே காட்டும் இங்ஙனம் இந்த ஜ்ஞாநம் தன்னையும் பிற வஸ்துக்களையும் காட்டுவதால் இதை 'சித்' என்று சொல்வார்கள். இதற்கு ஒரு ஞானம் இல்லாதபடியால் இது 'அசித்' என்றும் கூறப்படுகின்றது.

*(20)* கீழ்க்கூறிய சேதநத்தையும் அசேதநத்தையும் வேறு வகையிலும் பிரிக்கலாம். அதாவது - ஆத்மா, அநாத்மா என்று. சேதநன் ஆத்மாவெனப்படுவான். ஈசுவரனை ஆத்மாவென்று சொல்லவில்லையா? அவ்வாறே சேதநனையும் ஆத்மாவென்று வழங்குகின்றோம். அசேதநம் - அநாத்மா. ஆத்மாவல்லாதது என்று பொருள். மணம் - ரஸம் - சப்தம் முதலியவை குணங்களாயிருக்கின்றனவல்லவோ! ஆதலின் அவற்றை

அநாத்மாவென்று வழங்குகின்றோமே! அவ்வாறே அசேதநப் பொருளை அநாத்மாவென்றும் வழங்குவதுண்டு. ஆகவே சேதநனும் ஈசுவரனும் ஆத்மாவென்ற வகுப்பிலும் அசேதநம் அநாத்மா என்ற வகுப்பிலும் சேருவதால் இவ்வாறு இருவகுப்பாக ஒரு பிரிவும் உண்டு.

ஈச்வரன்

(21) எல்லாவற்றையும் எல்லோரையும் அடக்கியாள் பவனான ஸ்ரீமந்நாராயணனே ஈச்வரனெனப்படுகின்றான்.

(22) 'உலகிலுள்ள ஸகல வஸ்துக்களும் இவனது ஸங்கல்பத்தால் உள்ளவை. நித்யமாய் (பிறப்பு அழிவு இல்லாதனவாய்) சில வஸ்துக்கள் உண்டு. அவை ஜீவன் முதலியன. அநித்யங்களாய் (தோன்றுதல் அழிதல் உள்ளனவாய்)ப் பல வஸ்துக்கள் உண்டு. அவை குடம் ஆடை முதலியன. நித்யமாயுள்ள வஸ்துக்களை இவை நித்யமாயிருக்கக் கடவன என்று ஈச்வரன் ஸங்கல்பிக்கின்றான். அவனது அந்த ஸங்கல்பமும் நித்யமாயுள்ளது. அநித்யமெனப்படும் வஸ்துக்களை இவை அநித்யமாயிருக்கக் கடவன என்று அவன் ஸங்கல்பிக்கின்றான். அந்த ஸங்கல்பமும் அநித்யமாயுள்ளது. இப்படி நித்ய வஸ்துக்களைப் பற்றிய ஸங்கல்பம் அநித்யமாய் உள்ளது என்பது உண்மை நிலை. இப்படி ஸகல வஸ்துக்களும் அவனுடைய ஸங்கல்பத்தால் உள்ளன. அவை அனைத்திலும் இவன் உட்புகுந்து அந்தர்யாமியாயுள்ளான். இந்த ஸகல வஸ்துக்களும் அவனை விட்டுப் பிரிக்க முடியாதபடி அவனுக்கு விசேஷணங்களாயுள்ளன.

(23) எம்பெருமான் உலகில் உள்ள காரியப்பொருள் அனைத்துக்கும் காரணமாகின்றான். எவ்வாறெனில் - மண் குடமாக மாறுகின்றது. மண் காரணம். குடம் காரியம். மண்ணே குடமாக மாறுவதால் மண் உபாதாந காரணமெனப்படும். குடத்துக்கு உபாதாந காரணமான மண்ணிலும் எம்பெருமான் உடபுகுந்து அந்தர்யாமியாய் நிற்கின்றான். இவ்வாறே ஒவ்வோர் உபாதாந காரண வஸ்துவிலும் உட்புகுந்து அந்தர்யாமியாயுள்ளான். அந்த மண்ணே குடமாகும்போது குடமெனும் காரியப் பொருளிலும் உட்புகுந்து அந்தர்யாமியாயுள்ளான். உபாதாந காரணத்தாலே தோன்றும் காரியப் பொருள் உபாதேயமென வழங்கும். காரணமாயிருக்கும் நிலையில் அந்த வஸ்து ஸூக்ஷ்மமாயிருக்கும். காரியமாய் மாறும்போது அந்த வஸ்து ஸ்தூலமாய்ப் புலப்படும். ஸூக்ஷ்மமாய் நிற்கும் காரணப் பொருளும் ஸ்தூலமாய் நிற்கும் காரியப் பொருளும் எம்பெருமானுக்குச் சரீரமாய் நிற்பன.

வாமநாவதாரத்தில் சிறிய வடிவுடன் இருந்த எம்பெருமான் திரிவிக்ரமனாக மாறியபொழுது அவனது உருவம் மிகப் பெரியதாயிற்று. அப்பொழுது த்ரிவிக்ரமனென வழங்குகின்றோம். அவ்வாறே ஸூக்ஷ்மமான வஸ்துக்களைச் சரீரமாகவுடையனான எம்பெருமானை உபாதாந காரணமென்றும் ஸ்தூலமான வஸ்துக்களைச் சரீரமாகவுடையனான எம்பெருமானைக் காரியமென்றும் வழங்குகின்றோம். ஆகவே உபாதாந காரணப் பொருளாகவும் உபாதேய (கார்ய)ப் பொருளாகவும் அவனே ஆகின்றானென்று கூறுதல் பொருத்தமுடைத்து.

(24) எம்பெருமானே நிமித்த காரணமாகவும் ஆகின்றான். உலகில் குயவன் மண்ணைப் பிசைந்து குடமாக்கும்போது அவன் 'இந்த மண்ணைக் குடமாக்கவேண்டு'மென்று நினைத்தே செய்கின்றான். அந்த நினைவு கொள்ளும் குயவன் அந்தக் குடத்துக்கு நிமித்த காரணமாகின்றான். அவ்வாறே எம்பெருமான் உலகிலுள்ள பொருள்களைப் படைக்கும்போது இந்தப் பல வஸ்துக்களாக ஆவேன் என்று ஸங்கல்பிக்கின்றான். ஆதலின் எல்லா வஸ்துக்களுக்கும் நிமித்த காரணமாகவும் ஆகின்றான். மேலும் மண்ணைக் குடமாக்கச் சில சாதனங்கள் உண்டு. அவை குயவன் சுற்றும் கம்பு - சக்கரம் முதலியன. அவையும் குடத்துக்கு நிமித்த காரணமெனப்படுகின்றன. அந்த வஸ்துக்கள் அனைத்தையுமே எம்பெருமான் தனக்குச் சரீரமாகக் கொண்டுள்ளானாதலின் அவனே நிமித்தகாரணமாகவும் ஆகின்றான். உலகில் காரியப் பொருள்களுக்கு உபாதாந காரணமும் நிமித்த காரணமும் வெவ்வேறு வஸ்துக்களாகவே இருப்பதைக் காண்கின்றோம். இங்கு ஸகல வஸ்துக்களும் எம்பெருமானுக்குச் சரீரமாயிருத்தல் பற்றி அவன் ஒருவனே உபாதாந காரணமாகவும் நிமித்த காரணாகவும் ஆகின்றானென்னும் விசேஷம் உணரத்தக்கது.

(25) உபநிடதம் நாராயணனை எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்து நிற்பவன் என்கின்றது. மிகவும் ஸூக்ஷ்மமாய் அணுவான வஸ்துக்களுக்கு 'உள்' என்னும் பகுதியே இல்லாதிருக்க எல்லாப் பொருள்களிலும் உள்ளேயும் எம்பெருமான் புகுதல் எவ்வாறு பொருந்தும்? என்று ஒரு கேள்வி 'உள்' என்ற பகுதியே இல்லாதபோது அங்கு உள்ளே எவ்வாறு இருக்கிறான் என்ற கேள்வியே பொருந்தாது. இவன் உள்ளே புகுந்து நிற்றல் என்றால் ஸகல வஸ்துக்களிலும் எம்பெருமான் இல்லாத இடம் இல்லையென்னும்படி நிற்றலே ஆகும். இதுவே அந்தர்வ்யாப்தியெனப்படுகின்றது. எந்த வஸ்துவின் எந்தப்

புறத்தை எடுத்தாலும் எம்பெருமான் இல்லாத இடமே இல்லையென்னும் உண்மையைக் கண்டு கொள்க.

(26) எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் உள்ளே இருப்பதுபோல் வெளிப்புறத்திலும் இருப்பவன். எம்பெருமானது ஸ்வரூபம் போல் எங்கும் பரந்து நிற்பதால் விபுவெனப்படும் வஸ்துக்கள் சில உண்டு. அவை காலம் தர்மபூதஜ்ஞாநம் முதலியன. அவற்றுக்கு வெளிப்புறமென்பதே யில்லையாதலின் இவற்றின் வெளிப்புறத்திலும் எம்பெருமான் இருப்பதாய்க் கூறவேண்டியதில்லை. ஓர் அளவுக்கு உட்பட்ட உருவத்தோடு அமைந்துள்ள வஸ்துக்கள் பல. கடுகு முதல் மலை வரையில் உள்ள வஸ்துக்களெல்லாம் அவ் வகுப்பிலே சேருவன. அவற்றுக்கு வெளிப்புறத்திலும் எம்பெருமான் இருக்கின்றான். இதையே பஹிர்வ்யாப்தியென்பர்.

(27) எம்பெருமான் எல்லோருக்கும் கதியாய் நின்று காப்பவன். இவன் ஸ்வரூபத்தாலும் மிக மேம்பட்டவன். திருக்கல்யாண குணங்களிலும் இவனுக்கு மேம்பட்டவன் ஒருவனும் இல்லை. இவனுடைய ஆளுகைக்கு உட்பட்ட வஸ்துக்களும் எண்ணற்றவையாதலின் அவற்றாலும் இவன் மிக மேம்பட்டவன். இத்தகைய மேம்பாடுதான் உச்ச நிலையாகும். இதற்குமேல் உயர்வு கிடையாது.

(28) இப்படி ஸர்வேச்வரனான இவனுக்குக் கீழ்க்கூறிய ஒப்பற்ற மேம்பாட்டுடன் ஸௌசீல்யம் - கருணை முதலிய குணங்களாலும் ஒரு மேம்பாடு உள்ளது. அதாவது - ஸௌசீல்யம் - கருணை முதலியவற்றிலும் இவனுக்கு மேம்பட்டவன் ஒருவனும் இலன். மிகப் பெரியன் மிகத் தாழ்ந்தவனோடு வேற்றுமையின்றிக் கலந்து பரிமாறுதல் ஆகிய ஸௌசீல்யம் - தன் பயன் கருதாது பிறர் துன்பம் துடைப்பதற்கு விரும்புதல் ஆகிய கருணை முதலிய இவனுடைய குணங்களும் இவனுக்கு அனைவரினும் மேம்பட்ட தன்மையை அளிக்கின்றன. இந்த உயர்வே இவனுக்கு ஸௌலப்யம் (எளிமை) என்ற குணம் வரையில் கொண்டுவிடுகின்றது. அதனால் எல்லோருடைய ஊனக்கண்ணுக்கும் புலப்பட்டுத் தேரோட்டுதல் தூது செல்லல் முதலிய செயல்களைச் செய்யுமாறு ஏற்படுகின்றது.

(29) இவனுக்கு இத்தகைய ஸௌலப்யம் இருப்பதால்தான் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட பக்தி - ப்ரபத்தி என்ற உபாயங்களால் எம்பெருமான் வசப்பட்டுப் பலன் தருகின்றான். மோக்ஷம் முதலிய பலனுக்குச் சாதனமாயுள்ளன பக்தி ப்ரபத்தி என்னும் உபாயங்கள். இவை சேதநனால் செய்யப்பட

வேண்டியனவாயிருத்தல் பற்றி ஸாத்யோபாயங்களெனப் படுகின்றன. இவற்றால் வசப்படும் எம்பெருமான் பிறரால் செய்யப்பட வேண்டாது தானே உபாயமாய் நின்று பலன் தருவதால் ஸித்தோபாயம் எனப்படுகின்றான்.

(30) உபாயம் இரண்டு வகையானதுபோல் பயனும் இருவகைப்படும். பயனை உபேயம் என்பர். உபேயமாகிய பலன் ஸித்த - உபேயம் ஸாத்ய - உபேயம் என இருவகைப்படும். ஸ்ரீவைகுண்டத்தில் முக்தி பெற்றவன் செய்யும் கைங்கர்யம் ஸாத்ய - உபேயமெனப்படுகின்றது. கைங்கர்யம் முக்தனால் செய்யப்படுவதாகவன்றோ உள்ளது ! அந்தக் கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்பவனாய், தானே அநுபவிக்கப்படும் பலனாகவும் இருப்பது பற்றி எம்பெருமான் ஸித்த - உபேயம் (ஸித்த பலம்) எனப்படுகின்றான்.

முடிவுரை

இங்ஙனம் கீழ் முப்பது வாக்யங்களால் தத்த்வ ரத்நாவளி யென்னும் ரஹஸ்யம் இயற்றப்பட்டது. இந்த வாக்யங்களுள் எதாவது ஒரு வாக்யத்தின் அர்த்தத்தை எல்லா விளக்கங்களுடன் அறிவதென்பதே நமக்கு முடியாது. ஸர்வஜ்ஞானான எம்பெருமானுக்கே அந்த ஜ்ஞாநம் உண்டு. ஆதலின் நாம் மிகப் பயன்படக்கூடிய அளவுக்கு விஷயங்களை விளக்கியுள்ளோம். இந்த அளவுக்குத் தெளிவு பெறுவதே ஓர் உபாயத்தை அநுஷ்டிப்பதற்கும் அதனால் பலன் பெறுவதற்கும் போதுமானதாகும்.

தத்துவ ரத்நாவளி முற்றும்.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 12. தத்த்வ ரத்நாவளி ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம்

முன்னுரை

தத்த்வ ரத்நாவளி என்னும் முந்திய ரஹஸ்யத்திற் கூறிய விஷயங்களின் சுருக்கமாதலின் இதற்கு இப்பெயர் வந்தது.

கீழ் ரஹஸ்யத்தில் முதலில் 'வண்மை யுகந்த' என்று தொடங்கும் ஒரு பாசுரமும் கடைசியில் 'நாராயணன் பரன்' என்று தொடங்கும் ஒரு பாசுரமும் உள்ளன. இந்தப் பாசுரம் இரண்டும் சேதநர்கள் உஜ்ஜீவிப்பதற்காக ஆசார்யன் எடுத்துக் கொண்ட பெருமுயற்சி பயனளித்ததைக் கூறுவன. இவ்விரண்டு பாசுரங்களுக்கும் நடுவில் முப்பத்தொன்று வாக்யங்கள் உள்ளன. 31வது வாக்யம் சேதநனைத் தேற்றுவதாகும். நடுவில் உள்ள 30 வாக்யங்களுள் முதல் 10 வாக்யங்கள் சேதனனைப் பற்றியும், இரண்டாவது 10 வாக்யங்கள் அசேதநத்தைப் பற்றியும் மூன்றாவது பத்து வாக்யங்கள் ஈச்வரனைப் பற்றியும் விளக்குவன. இந்த மூன்று வகுப்பின் 10, 10 வாக்யங்களிலும் கடைசி வாக்யங்கள் அதாவது 10, 20, 30 எண் உள்ள வாக்யங்கள் அந்த அந்தத் தத்துவத்தைப் பற்றிய முடிவைக் கூறுகின்றன. ஒவ்வொரு பத்து வாக்யங்களிலும் முதல் வாக்யங்கள் அதாவது 1, 11, 21 எண்ணுள்ள வாக்யங்கள் ஒவ்வொரு முக்கியமான குழிகளாகும். ஒவ்வொரு பத்து வாக்யத் தொகுதியிலும் 2வது வாக்யம் முதல் 9வது வாக்யம் முடிய 8, 8 வாக்யங்களை 8, 8 குழிகளாக வைத்து ஒவ்வொரு பத்திலும் முதல் வாக்யத்தைத் தலைப்பாகக் கொண்டு எஞ்சிய எட்டு வாக்யங்களும் தத்துவங்களை விளக்குகின்றன. உலகில் பல்லங்குழி ஆடுகின்றார்களே! அதில் மூன்று வரிசைகள் வைத்து ஒவ்வொரு வரிசையிலும் 9 குழிகள் வைத்து அவற்றில் சோழிகளைப் போட்டு விளையாடுவதுண்டே! அம்முறையைத் தழுவியது இந்த விளக்கம்.

ஜீவனைப் பற்றிய விளக்கம் தரும் முதல் பத்து வாக்யத் தொகுதி -

வாக்யம் 1. ஜீவாத்மாவுக்கு இலக்கணம் கூறும். அணுவான உருவத்தையும் குறைந்த சக்தியையும் உடைமைதானே

ஜீவனுக்கு இலக்கணம்!

வாக்யம் 2. ஜீவன் எம்பெருமானுக்கு அடிமையான வகையைக் கூறும். எம்பெருமானுக்கே இயற்கையாய்ச் சேஷனாயிருப்பதுவே அம்முறை.

வாக்யம் 3. ஜீவன் எம்பெருமானுக்கே முற்றிலும் வசப்பட்டவனாதலின் தன்னைக் காத்துக் கொள்ளச் சக்தியற்றவனென்பதைக் கூறும்.

வாக்யம் 4. ஜீவன் எம்பெருமானுக்கே அடியனாதலின் அவன் இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ளத் தகுதியுடையனென்பதைக் கூறும்.

வாக்யம் 5. ஜீவன் எம்பெருமானுக்கு மிகவும் வசப்பட்டவனாதலின் அவனால் இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ளப் பட்டவனென்பதைக் கூறும்.

வாக்யம் 6. ஜீவனை எம்பெருமான் பாகவதர்களுக்கு அடிமையாக்கி விட்டதால் அவன் செய்யவேண்டிய கடமையைச் செய்து விட்டதையும் அவ்வாறு அடியனாக்கியதால் ஜீவன் சிறந்த பயன் பெற்றதையும் கூறும். இவ்விரண்டுமே ஜீவனுடைய அடிமைத் தன்மைக்கும் பரதந்திரத் தன்மைக்கும் ஏற்ற பயனாகும்.

வாக்யம் 7. ஜீவனுடைய இந்த அடிமைத் தன்மையும் பரதந்த்ரத் தன்மையும் ஜீவனுக்கு நித்யமாய் உள்ள ஞானத்துடனும் சக்தியுடனும் சேரும்போது இவன் ஸ்வதந்த்ரனாய்ச் சேஷியான எம்பெருமானது திருவுள்ளத்துக்கு உகப்பான ஓர் உபாயத்தை அறிவதற்கும் அதைச் செய்வதற்கும் அதனால் மோக்ஷமாகிய பலனைப் பெறுதற்கும் பயன்படுவதைக் கூறும்.

வாக்யம் 8. ஜீவன் ஆதேயனாகவும் விதேயனாகவும் உள்ளான். அத்துடன் சேஷனாகவும் பரதந்த்ரனாகவும் உள்ளான். இவற்றால் ஜீவனது சரீரமும் ஆத்மாவும் எம்பெருமானுக்குச் சரீரமாயிருத்தலே பலனாகும் என்பதைக் காட்டும்.

வாக்யம் 9. இப்படி ஜீவன் எம்பெருமானுக்குச் சரீரமாயிருத்தல் - செயல் புரிதல் - ஞான மலர்ச்சி - ஞானச்சுருக்கம் முதலிய தன்மைகள் இருப்பதால் ஆத்மாவுக்குப் பிறப்பு இறப்பு முதலியவை வருமோ என்ற ஐயத்தில் ஆத்மாவின் ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லையாதலின் நித்யமாயிருத்தலில் குறையில்லையென்பதைக் காட்டும்.

வாக்யம் 10. சேதநம் அசேதநம் ஆகிய இரண்டும் ஸ்வரூபத்தில் அழிவற்றனவென்பதைக் காட்டும்

(இது பொது விஷயமாதலின் குழியில் சேர்க்கப்படவில்லை)

அசேதநத்தைப் பற்றிய விளக்கம் தரும் இரண்டாவது பத்து வாக்யத் தொகுதி -

வாக்யம் 11. அறிவற்ற தன்மையை அசேதநத்துக்கு இலக்கணமாகக் காட்டும்.

வாக்யம் 12. அசேதநத்துக்குத் தன்னை அறிந்து கொள்வதற்கோ அறிந்தபின் எதாவது செயலைச் செய்வதற்கோ மற்ற வஸ்துக்களை அறிவதற்கோ அதனால் வரும் பயனை அநுபவிப்பதற்கோ தகுதியில்லையென்பதை விளக்கும்.

வாக்யம் 13. அசேதநத்துக்கு அறிவில்லாமையால் ஒரு செயலைச் செய்தலாகிய கர்த்ருத்வம் இல்லையென்று கூறும்.

வாக்யம் 14. கர்மத்திற்கு வசப்பட்ட ஜீவர்களுக்கு இந்த அசேதநப் பொருள் அவர்களின் கர்மத்துக்கு ஏற்றவாறு சில ப்ரதிகூலமாகவும் சில சிறிது அநுகூலமாகவும் தோற்றுவதைக் கூறும்.

வாக்யம் 15. முக்தியைப் பெற்றுக் கர்மத்திற்கு வசப்படாதிருப்பவர்களுக்கு இந்த அசேதநப் பொருள் மிகவும் அநுகூலமாய்த் தோற்றுவதைக் காட்டுகின்றது.

வாக்யம் 16. முக்தி பெறுவதற்கு முன் தனக்கும் பிறருக்கும் ப்ரதிகூலமாய்த் தோன்றிய சில வஸ்துக்கள் முக்திபெற்ற பின் அவை ப்ரதிகூலமாயன்றி அநுகூலமாகவே தோன்றுவதைக் காட்டும். எம்பெருமானுக்கு எல்லா வஸ்துக்களும் அநுகூலமாய்த் தாமே உள்ளன. அவ்வாறே முக்தன் விஷயத்திலும்.

வாக்யம் 17. ஸ்ரீ வைகுண்டம் எல்லோருக்கும் எப்பொழுதும் அநுபவிக்க மிக இனியதாயிருக்கும் என்று கூறும்.

வாக்யம் 18. எங்கும் பரந்து நிற்கும் காலம் இந்த லாலாவிபூதியில் பல பிரிவுகளைக் கொள்ளுதலைக் கூறுகின்றது.

வாக்யம் 19. தர்மபூதஜ்ஞாநம் ஈச்வரனுக்கும் சேதநர்களுக்கும் தன்னையும் பிற பொருள்களையும் காட்டவல்லதெனக் கூறுகின்றது.

வாக்யம் 20. சேதநத்தை ஆத்மாவென்றும் அசேதநத்தை அநாத்மா என்றும் பிரித்துக் கூறுகின்றது.

ஈசுவரனைப் பற்றிய விளக்கம் தரும்
மூன்றாவது பத்து வாக்யத் தொகுதி -

வாக்யம் 21. எல்லா வஸ்துக்களையும் நியமிப்பவன் என்று ஈச்வரனான நாராயணனுக்கு இலக்கணம் கூறும்.

வாக்யம் 22. ஸகல வஸ்துக்களும் இவனது ஸங்கல்பத்தால் தோன்றுவதால் தடையற்ற சுதந்திரமுடைமையைக் கூறும்.

வாக்யம் 23. குடத்துக்கு மண் போலே இவன் எல்லாவற்றுக்கும் உபாதாந காரணமாகும் முறையைக் கூறுகின்றது.

வாக்யம் 24. குடத்துக்குக் குயவன் சக்ரம் முதலியனபோலே இவனே நிமித்த காரணமாகவும் உள்ளமையைக் கூறுகின்றது.

வாக்யம் 25. எல்லா வஸ்துக்களிலும் உள்ளே புகுந்து நிற்றலின் விளக்கம் கூறுகின்றது.

வாக்யம் 26. எல்லா வஸ்துக்களிலும் புறத்திலும் நிற்றலைக் கூறுகின்றது

வாக்யம் 27. எல்லா வகைகளிலும் இவன் மேம்பட்டவனென்பதைக் காட்டும்

வாக்யம் 28. இவனுக்கு உள்ள மிக்க ஸௌலப்யத்தை விளக்குகின்றது.

வாக்யம் 29. இவன் ஸித்த - உபாயமாய் நிற்பதை விளக்கும்.

வாக்யம் 30. இவனே ஸித்த - உபேயமாய் (பலனாய்) நிற்கும் தன்மையைக் கூறும்.

கடைசிவாக்யம். எல்லாத் தத்துவங்களையும் உள்ளவாறு அறிய முடியாதே என்று சோகித்தவனைப் பார்த்து இந்த ரஹஸ்யத்தில் கூறியவற்றைத் தெளிந்தாலுமே உஜ்ஜீவித்து விடலாமென்று கூறுகின்றது.

கடைசியில் உள்ள சிறு சுலோகம் இந்த ரஹஸ்யம் உருவத்தில் மிகச் சிறியதாயிருப்பதைக் கொண்டு இகழாமல் விஷயத்தின் சிறப்பைக் கண்டு வெளியில் சிதறவிடாமல் உள்ளத்துள் கொள்ளும்படி கூறுகின்றது.

தத்த்வ ரத்நாவளி ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 13. ரஹஸ்ய ரத்நாவளி,
# 14. ரஹஸ்ய ரத்நாவளி ஹ்ருதயம்

*முன்னுரை*

*ரஹஸ்யரத்நாவளி என்னும் ரஹஸ்யம் முப்பது வாக்யங்கள் கொண்டது. இவற்றுக்கு ஒவ்வொரு வாக்யமாக எடுத்துக் கொண்டு மிக விரிவான வ்யாக்யாநம் ஸ்ரீ தேசிகனாலேயே அருளிச் செய்யப்பட்டுள்ளது. அந்த வ்யாக்யாநமும் ரஹஸ்யரத்நாவளி ஹ்ருதயம் என்று பெயர் கொண்ட அடுத்த ரஹஸ்யமாகும். இந்த இரண்டு ரஹஸ்யங்களுக்கும் சேர்த்தே தமிழ் விவரணம் இங்குத் தரப்படுகின்றது.*

*இரத்தினங்களை வைத்து மாலை அமைப்பதுபோல் ரஹஸ்யமான முப்பது விஷயங்களாகிய இரத்தினங்களைப் பொதிந்து ஒரு மாலையாக அமைக்கப்பட்டிருப்பதால் இந்தத் திருநாமம் பெற்றது இது. அடுத்த ரஹஸ்யம் இதன் கருத்துக்களையே விளக்குவதால் ஹ்ருதய மென்ற சொல்லையும் கூட்டிக் கொண்டது.*

*'ஒன்றே புகல்' - பாசுரக் கருத்து விளக்கம்*

*இந்த ரஹஸ்யத்தின் தொடக்கத்தில் "ஒன்றே புகல்" என்று தொடங்கும் ஒரு பாசுரத்தை ஸ்ரீ தேசிகன் தாமே அருளியுள்ளார். அதற்கு ஸ்வாமி தாமே அவதாரிகை வைத்து விரிவான உரையையும் அருளிச் செய்துள்ளார். அந்த உரையையே தழுவித் தமிழில் விளக்கவுரை இங்கு வரையப் படுகின்றது.*

*ஆசார்யனுக்கு உரிய எல்லா லக்ஷணங்களும் பொருந்திய சிறந்த ஆசார்யனால் உபதேசிக்கப் பெற்று ஸர்வேச்வரன் திருவடிகளில் தன்னைக் காக்கும் பொறுப்பை எல்லாம் ஸமர்ப்பித்துப் பரந்யாஸம் செய்துவிட்டு மோக்ஷத்தை விரும்பி நிற்கும் சேதநன் பொறுப்பு நீங்கிக் கவலையற்று நிற்கும் நிலையைச் சொல்லுகிறது முதலில் உள்ள 'ஒன்றே புகல்' என்று தொடங்கும் பாசுரம்.*

அர்த்த பஞ்சகமெனப்படும் ஐந்து விஷயங்களையும் எம்பெருமானுக்கும் ஜீவனுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் சாஸ்திரமாகிய கண்ணைக் கொண்டு நன்கு அறிந்தவர்கள் நம் ஆசார்யர்கள். தங்களிடம் வந்து நன்கு வணங்கிப் பணி விடை செய்து முறையாகக் கேட்குமவர்களுக்கு அவர்கள் அவசியம் அறிந்து கொள்ள வேண்டிய ஸகல விஷயங்களையும் தாங்கள் ஒரு பலனையும் எதிர்பாராமல் உபதேசிப்பதற்குப் பாங்காக நன்றாய் அறிந்தவர்கள். பின் அந்தச் சிஷ்யர்கள் புதிதாய்க் கேட்கவேண்டிய விஷயம் ஒன்றும் இல்லையென்னும்படி உபதேசிப்பவர்கள்.

இத்தகைய ஆசார்யர்கள் நமக்கு வேண்டிய சிறந்த உபாயத்தைக் காட்டினர். நமக்கோ வேறு கதியில்லை. ஸித்தோபாயமான எம்பெருமான் நமக்கு மோக்ஷத்தைத் தர வேண்டும். அவன் நாம் செய்த பாபங்களால் நம்மிடம் சீற்றம் கொண்டுள்ளான். அந்தச் சீற்றத்தைப் போக்கி அவனை வசப்படுத்தினால்தான் அவன் நமக்கு அருள்புரிவான். ஸாத்யோபாயமெனப்படும் ப்ரபத்தியை நாம் செய்தால் அவனை வசப்படுத்திவிடலாம். அவன் கோபம் நீங்கி நமக்குப் பலனைத் தருவான். இந்த ப்ரபத்தியென்னும் ஸாத்யோபாயம் கடினமான பக்தியோகம்போல் பல சங்கடங்களைத் தருவதன்று. இத்தகைய ப்ரபத்தியையும் ஸித்தோபாயமான பகவானையும் ஞானிகளான ஆசார்யர்கள் நமக்கு வெளியிட்டார்கள். இந்த உபதேசத்தாலே 'என்னைக் காக்கும் சக்தி எனக்கு இல்லை. வேறு ஒருவரும் என்னைக் காக்கவல்லவராகமாட்டார். பின்னும் என்னிடமிருந்து எச்செயலையும் எதிர்பாராமல் எனக்கு மோக்ஷம் கொடுத்து என்னைக் காத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து அவனை வசப்படுத்தச் சாதனமான ப்ரபத்தியைச் செய்ய வாய்ப்பு ஏற்பட்டது.

இவ்வாறு ஆசார்யனது உபதேசத்தாலே எம்பெருமானிடம் நாமே ப்ரபத்தி செய்ய முற்படுவதன்றி ஆசார்யர்களே நமக்காக ப்ரபத்தி செய்வதும் உண்டு. அதாவது - ஆசார்யர்கள் 'எம்பெருமான் ஒருவனே கதி' யென்று உறுதியான அறிவு பெற்றவர்கள். அவர்கள் தம்மை ஆச்ரயித்தவர்களான நம்மை வேறு ஒருவராலும் காக்கப்பட உரியரல்லரென்ற உணர்ச்சியுடன் அவன் திருவடிகளில் ஸமர்ப்பித்து ப்ரபத்தியைச் செய்கின்றனர்.

இங்ஙனம் எந்த முறையில் ப்ரபத்தியைச் செய்தாலும்

அவனுக்கு நம் மீது எல்லையற்ற கருணை உண்டாகின்றது. அந்தக் கருணை நம்மிடமிருந்து எந்தக் கைம்மாறையும் எதிர்பாராதது. அதனால் நம்மைக் காக்கும் பொறுப்பை அவன் ஏற்றுக் கொண்டு விடுகின்றான். மேலும் எல்லாவுலகுக்கும் தாயான பெரிய பிராட்டியின் அருள் நம்மிடம் எந்நாளும் அழியாததாயுள்ளது. அவளோ காலத் தாழ்வும் சிரமமும் நமக்கு இல்லாமல் விரைவில் பலன் பெறும்படி செய்விக்க விரும்புகின்றாள். அதற்காக ஆச்ரிதர்களான நம்மைக் காப்பதற்கு முற்படும்படி தன் நாயகனான எம்பெருமானிடம் தனக்கு உள்ள உரிமையைப் பயன்படுத்தி அவனைத் தூண்டுகின்றாள்.

இப்படி எம்பெருமான் தனது கருணையாலும் பிராட்டியின் தூண்டுதலாலும் நம்மைக் காக்கும் பொறுப்பு முழுதையும் ஏற்றுக் கொண்டுவிடுகின்றான். ஆகவே பரந்யாஸத்திற்குப் பின் நம்மைக் காத்துக் கொள்வதற்காக நாம் செய்யவேண்டியதாக எம்பெருமான் எதையும் வைப்பதில்லை. அவன் நமக்கு இவ்வாறு அருள் புரிவதற்காகவே வேகவதி நதியின் வடபுறத்தில் அத்திகிரியில் புண்யகோடி விமாநத்தில் எல்லாரும் அநுபவிப்பதற்கு ஏற்றவாறு பேரருளாளனாக வந்து நிற்கின்றான். அவன் தன் மேம்பாட்டைப் பொருட்படுத்தாது தாழ்ந்தவர்களுடன் வேற்றுமையின்றிக் கலந்து பழகுமவன். நமக்கு மிகவும் எளியனாய் நிற்கின்றான். அடியார்களின் குற்றத்தைப் பொருட்படுத்தாத அன்பு நிறைந்தவனாயுள்ளான். நமக்கு ஸ்வாமியாகவும் உள்ளான். இந்தத் தன்மைகள்தாமே ஆச்ரிதர்களை நன்கு காப்பதற்கு அவசியம் வேண்டியன. தன்னைச் சரணமடைந்தவர்களுக்கு மோக்ஷம் கொடுப்பதற்குத் துடிக்கின்றான். ஆனால் 'எங்களைக் காத்தருள வேண்டு" மென்று வேண்டிப் பரந்யாஸம் செய்யாவிடில் அவனால் காக்க முடியாது. அதற்காக இந்தச் சிறு செயலாகிய ப்ரபத்தியை மட்டுமே அவன் நம்மிடமிருந்து எதிர்பார்க்கின்றான்.

நமக்காகவே அவன் இம் மண்ணுலகில் வந்து தோன்றிப் பலன் தர ஆயத்தமாய் நிற்கின்றான். நாம் இன்றே உயர்ந்த பலனாகிய மோக்ஷத்திலேயே கருத்துக் கொண்டு இப்போதே மோக்ஷம் வேண்டுமென்று கேட்டால் இக்கொடிய உலகத்தில் பின்னும் நம்மை வைக்காமல் சிறந்த சோதிநன்னாடாகிய பரமபதத்திற்கு அழைத்துச் சென்று மற்றவர்கள் பெற அருமையான தன் இரண்டு திருவடிகளிலும் நம்மைச் சேர்த்துக்கொண்டு அருள் புரிவான் மறுபடியும் நாம் இக்கர்ம பூமியில் பிறக்க வேண்டியதில்லை. கர்மம் இருந்தால்தானே மறுபடி பிறக்கவேண்டி

வரும்! பலன் கொடுக்கத் தொடங்கிய (ப்ராரப்த) கர்மங்களைத் தான் நாம் செய்த ப்ரபத்தியால் எம்பெருமான் ஒழித்துவிட்டானே! இனிப் பிறவி ஏது?

மேலும் அழிந்துபோகும் தன்மையையுடைய செல்வங்களையும் ஆத்மாவை அநுபவித்தலாகிய கைவல்யத்தையும் நாம் விரும்பாது ஒழித்துவிட்டோம். உயர்ந்த பலன் எது? தாழ்ந்த பயன் எது? என்பதைப் பற்றிய விவேகம் நமக்கு வந்துவிட்டதால் மோக்ஷம் தவிர மற்ற பலனெல்லாம் இழிவானவைதாமே! ஆயினும் மோக்ஷத்தைப் பெறுவதில் நமக்கு துடிப்பு இல்லை. ஏன்? இவ்வுலகிலேயே எம்பெருமான் அர்ச்சை வடிவு கொண்டு எழுந்தருளியிருக்கும் ஒரு திவ்ய தேசத்தில் வஸித்துக்கொண்டு அவனுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருந்தால் அதுவே ஆநந்தமெனக் கருதுகின்றோம். ஆதலின் விரைவில் மோக்ஷம் பெறவேண்டுமென்ற துடிப்பு நமக்கு இல்லை. எம்பெருமானோ தன் திருவடிகளில் ப்ரபத்தி செய்தவர்கள் மரணமடைந்தவுடன் மோக்ஷம் கொடுப்பவன். ஆதலின் ப்ரபத்தி செய்த நமக்கு மற்றொரு சரீரத்தைக் கொடுக்காமல் இச்சரீரம் முடிந்தவுடனேயே மோக்ஷத்தைக் கொடுத்துக் காக்கின்றான். இனி இக்கர்ம பூமியில் பிறக்கவே மாட்டோம்.

இந்தச் சரீரம் உள்ளவரையில் நமக்குச் சில இன்பங்களும் துன்பங்களும் வந்து கொண்டேயிருக்கும். அவைகளெல்லாம் நமக்குப் பிரியமான நன்மைகளே என்று கருதி நாம் மகிழவேண்டும். இவ்வெண்ணம் நமக்கு எளிதில் வருமா? உண்மையைச் சிந்தித்தால் அவசியம் வரும். அதாவது - நமக்கு இன்பங்கள் வருவது எதனால்? முன்பு நாம் செய்த புண்யங்கள் இன்பமாகிய பலனைக் கொடுக்கத் தொடங்குகின்றன. மோக்ஷத்தையே விரும்பும் நமக்கு இந்த இன்பங்களைத் தரும் புண்ணியங்களும் விலங்குகள் தாமே! இந்தப் புண்யங்களும் சரீரம் கழிவதற்கு முன் கழிந்துவிட வேண்டுமல்லவா? ஆதலின் அவற்றின் பயனாக இன்பங்களைக் கொடுத்து நம்மை அநுபவிக்கச் செய்வதால் அப் புண்யங்கள் இச்சரீரம் இருக்கும்போதே கழிந்து விடுகின்றன. இங்ஙனமே நாம் முன் செய்த பாபங்களும் பலன் கொடுக்கத் தொடங்கித் துன்பங்களைத் தருகின்றன. இதுவும் எம்பெருமான் நம்மைத் தூயராக்குவதற்காகச் செய்கின்ற நல்ல செயலேயாகும். இத் துன்பங்களை அநுபவிப்பதால் பாபங்களில் எஞ்சிய பகுதி கழிந்து பரிசுத்தராகிவிடுகின்றோம்.

இவ்வாறு சரீரத்திலேயே இன்ப துன்பங்களை அநுபவித்துவிடுவதால் அவற்றுக்குக் காரணமாயிருந்த புண்ய பாபங்கள் கழிந்து நாம் தூயராகும்போது மகிழ்ச்சி கொள்ளத் தடை என்ன? மேலும் இவ்வின்ப துன்பங்களை அநுபவிப்பதால் இங்கு உள்ளவரை கைங்கர்யங்களைச் செய்யவேண்டுமென்று கொண்ட ஆசைகளுக்குத் தடை ஏதும் வராது. இவ்வநுபவங்களுடன் கைங்கர்யங்களையும் செய்து கொண்டேயிருப்போம். ஆதலின் எவை வந்தாலும் நன்மையே எனக் கருதி மகிழ்ச்சி கொண்டேயிருப்போம்.

இனிமேல் நாம் செய்யவேண்டியது யாதும் இல்லை ஏன்? நம் பொறுப்பு அனைத்தையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தாயிற்றே! அவன் எத்தகையன்? அவன் அனைத்தையும் அறிந்தவன் ; எதையும் செய்யும் வல்லமையுடையன் ; எல்லையற்ற கருணையுடயவன் ; எல்லோரினும் மேம்பட்ட ஸ்வாமியாயுள்ளவன். இத்தகைய எம்பெருமானிடம் நாம் பரந்யாஸம் செய்து விட்டோம். நம் பொறுப்பைப் பெருமான் முழுதும் ஏற்றுக்கொண்டுவிட்டான். நமக்குச் சரீர வாழ்க்கை ஆத்ம வாழ்க்கை என்று இரண்டு உண்டே! அவற்றுள் சரீரவாழ்க்கையை நம் முந்திய கர்மங்களுக்கு ஏற்றவாறு அவனே நடத்தி வைக்கின்றான். ஆத்மாவின் வாழ்வையோ அவன் முக்கியமான குணமாய்க் கொண்டுள்ள கருணைக்குத் தக்கவாறு நடத்துகின்றான். ஆதலின் நாம் இரண்டு வாழ்க்கையையும் பற்றிக் கவலை கொள்ள வேண்டியதில்லை.

இங்ஙனம் அவனிடம் ப்ரபத்தியைச் செய்து பக்தியுடன் நடக்கின்ற நம்மை அவன் புத்தி பூர்வமாய்ப் பாபங்களைச் செய்யும்படி விடமாட்டான். ஒருகால் அவசியமாயிருந்து தெரிந்தே சில பாபங்களை நம் செய்ய நேரிட்டாலும் அவற்றுக்கு எதாவது பிராயச்சித்தம் செய்யும்படி செய்து அவற்றை ஒழித்து விடுகின்றான். நாம் முரட்டுத் தன்மையால் அவற்றுக்குப் பிராயச்சித்தம் செய்யாமல் இருந்து விடினும் அவற்றுக்குப் பலனாகச் சில தண்டனைகளைக் கொடுத்தாவது அநுபவிக்கச் செய்து அப் பாபங்களை ஒழித்துவிடுகின்றான். நமக்கோ மேம் பட்ட தத்துவமாகிய எம்பெருமானைப் பற்றியும் கீழ்ப்பட்ட தத்துவமாகிய சேதந அசேதநங்களைப் பற்றியும் விளக்கமான அறிவு உண்டாகிவிட்டது. நாம் எந்தச் செயலைச் செய்தாலும் அவனுக்கு வசப்பட்டிருந்தே செய்வதான எண்ணமுடையோம். ஆகவே முழுச் சுதந்திரத்துடன் செயலாற்றும் தன்மை நமக்கு

இல்லையன்றோ!

மேலும் பக்தியோகத்தைச் செய்யத் தகுதியுடையனையும் தகுதியில்லாதவனையும் பற்றித் தெரிந்துகொண்டிருக்கின்றோம். நமக்குப் பக்தியோகம் செய்யத் தகுதியில்லையென்பதை உணர்ந்து நம்மைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடமே ஸமர்ப்பித்து ப்ரபத்தியைச் செய்துவிட்டோம். எல்லாப் பொறுப்பும் அவனுடையனவாயின. ஆதலால் நம்மைக் காத்துக்கொள்ள இனி நாம் செய்யவேண்டியது மீதி எதுவும் இல்லையென்று நாம் கவலையற்றிருக்கின்றோம். நம்மைக் காப்பதுடன் அவன் நிற்கவில்லை. நம்மைச் சேர்ந்தவர்களையும் சேர்த்து ப்ரபத்தி செய்துவிட்டபடியால் அவர்களையும் காத்து விடுவான் என்ற உறுதியுடன் இருக்கின்றோம்.

கீழே ஆசார்யர்கள் அர்த்த பஞ்சகத்தையும் ஸம்பந்தத்தையும் அறிந்தவர்கள் என்று கூறப்பட்டது. அவற்றை இங்கு விளக்குகின்றோம். - ஐந்து விஷயங்களாவன - (1) அடையப்படும் எம்பெருமான். (2) அடைபவனான ஜீவாத்மா (3) அடைதற்கு உபாயம் (4) அடையப்படும் பலன் (5) இதுகாறும் அவனை அடைய முடியாமல் தடை செய்தது.

ஸம்பந்தம் - ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு உள்ள தொடர்பு.

இவற்றின் விளக்கம் வருமாறு -

(1) அடையப்படும் ப்ரஹ்மம் - ஸ்ரீமந் நாராயணனே. அவன் எத்தகையன்? காரியப் பொருள்கள் அனைத்துக்கும் எல்லாக் காரணமுமாயிருப்பவன். என்றும் மாறுபடாதவனாய் - ஞான வடிவனாய் - ஸ்வரூபத்தாலும் தேசத்தாலும் காலத்தாலும் வரையறையற்றவனாய் ஆநந்த வடிவனாய் - இழிவான அம்சங்கள் அற்றவனாய் உள்ளவன் ; ஜ்ஞாநம் சக்தி முதலிய திருக்கல்யாண குணங்களுக்கு உறைவிடமாயுள்ளவன் ; லீலாவிபூதியெனப்படும் இந்த ப்ரபஞ்சத்துக்கும் நித்ய விபூதியெனப்படும் ஸ்ரீவைகுண்டத்திற்கும் ஒப்பற்ற ஒரே தலைவனாயிருப்பவன் ; எல்லோருக்கும் இதயத்தில் உறையும் அந்தர்யாமியாயிருப்பவன். பரம் - வ்யூஹம் - விபவம் - அந்தர்யாமி - அர்ச்சை என்று ஐவகையான திருமேனியை (திவ்யமங்கள விக்ரஹத்தை) உடையன் ; எல்லா நிலைகளிலும் பிராட்டியைக் கணப்பொழுதும் பிரியாதவன் : எல்லா மக்களும் சரணமடையும்படி நிற்பவன் ;

சரணமடைந்தவர்களின் குற்றங்களைப் புறக்கணித்து அவர்களிடம் அன்பு கொள்பவன் ; எவ்வாறு அநுபவித்தாலும் எல்லையற்ற இனிமையுடன் விளங்குபவன். இத்தகைய ஸ்ரீமந்நாராயணனே சேதநர்களால் மோக்ஷத்தில் அநுபவிக்கப்படு மவனாயுள்ளான்.

(2) அடையபவனான ஜீவன் - சரீரம் இந்திரியம் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன் ; ஞான வடிவனாய் ஆநந்த வடிவனாயுள்ளவன் ; அவனிடம் ஞானமும் ஆநந்தமும் உண்டு. அவனை அறிவதற்கு வேறொரு ஜ்ஞாநம் வேண்டாது தானே 'நான்' என்று ப்ரகாசித்துக் கொண்டிருப்பவன் ; தான் ப்ரகாசிப்பதனால் வரும் பயனை அடைபவனும் அவனே. அணுவான வடிவமுடையன் ; எம்பெருமானுக்கு அடியனாயிருப்பதிலேயே சுவை காண்பவன். இவனுடைய ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் எல்லாம் எம்பெருமானால் வருமவை. ஸ்ரீவைகுண்டம் சேர்ந்து எம்பெருமானைப் பரிபூர்ணமாய் அநுபவிக்க உரிமையுடையன். எம்பெருமானை அநுபவித்துத் தன் இஷ்டப்படி கைங்கர்யம் செய்வதே தன் ஸ்வரூபத்துக்கு ஏற்றதென உணர்ந்து அக்கைங்கர்யத்தை விரும்பி நிற்குமவன். இவனே அடைபவனான ஜீவன்.

(3) அடைதற்கு உபாயம் - சேதநன் ஸம்ஸாரமாகிய கடலைக் கடந்து அக்கரையெனப்படும் மோக்ஷத்தைப் பெறுவதற்குச் சாதனமென்று தான் அறிந்து கைக்கொள்ளும்படி சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட உபாயம். இது ஸித்தோபாயம் - ஸாத்யோபாயம் என இருவகைப்படும்.

ஸித்த - உபாயம் என்பது ஜீவனால் புதிதாகச் செய்ய வேண்டாதவாறு முன்பே உள்ளதான ஸாதனம். எம்பெருமான் சேதநனால் செய்யப்பட வேண்டாதபடி முன்பே உள்ள உபாயமாகையால் அவனே ஸித்தோபாயமெனப்படுகின்றான். அவன் எந்நாளும் அழியாமல் நித்யமாயுள்ள ஸ்வரூபத்தையும் திருக்கல்யாண குணங்களையும் உடையவன் ; அவன் அனைத்தையும் அறிந்தவனாகையால் பிறருக்கு எது நன்மை என்பதை நன்றாய் அறிந்தவன் ; எதையும் செய்யச் சக்தியுடையனாதலின் எல்லாருடைய கஷ்டங்களையும் தீர்க்க வல்லவன் ; எல்லாப் பிராணிகளிடமும் இயற்கையாய் நல்லெண்ணமுடையனாதலின் பிறருடைய கஷ்டங்களைப் போக்குதல் முதலியவற்றில் எப்பொழுதும் முன் நிற்பவன் ; ஜீவனைக் காப்பதற்கு அவன் வேண்டும் ஸமயத்தை

எதிர்பார்ப்பவன் ; சரணாகதியால் வசப்படுமவன் ; மோக்ஷத்தை ஒருவனுக்குத் தான் கொடுக்க ஸங்கல்பிக்கும்போது வேறு ஓர் உதவியையும் எதிர்பாராதவன். தான் ஜீவனுக்குப் புரியும் செயல்களெல்லாம் தானே பயன் பெறுமவன்; மோக்ஷத்தைத் தருவதாகத் தானே நேராக ஸங்கல்பிப்பவன். இத்தகைய பெருமைகளையுடயனாய்ப் பெரிய பிராட்டியைப் பிரியாது நிற்கும் எம்பெருமானே ஸித்தோபாயமெனப்படுகின்றான்.

ஸாத்ய உபாயமாவது - மனிதனால் செய்யப்படவேண்டியதாய்ச் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதாய்ப் பலனைப் பெறச் சாதனமாயிருப்பது. மோக்ஷம் பெறுதற்காகச் செய்யவேண்டிய ஸாத்யோபாயம் இருவகைப்படும் (1) பக்தியோகம் (2) ப்ரபத்தி.

முதலில் பக்தியோகத்தைப் பற்றிச் சிறிது விளக்குவோம் - இது தியான வடிவானதால் மனத்தால் செய்யவேண்டியதாகும். அந்த உள்ளமும் தூயதாயிருக்கவேண்டும். அந்தத் தூய்மையைப் பெறக் கர்மயோகத்தையும் ஜ்ஞாந யோகத்தையும் செய்யவேண்டும். அந்தப் பக்தியோகம் அஷ்டாங்க யோகம் (எட்டு அங்கங்களையுடைய யோகம்) என்ற பெயருடையது. அந்த எட்டு அங்கங்களாவன (1) யமம் (2) நியமம் (3) ஆஸநம் (4) ப்ராணாயாமம் (5) ப்ரத்யாஹாரம் (6) தாரணம் (7) த்யாநம் (8) ஸமாதி என்பன. இவற்றுள் முதல் ஏழும் அங்கங்கள். எட்டாவது ஸமாதி என்பதுவே அங்கி. இந்த அங்கியான ஸமாதிதான் பக்தியோகம். அங்கியையும் அங்கங்களையும் சேர்த்து கணக்கிடுவது முன்னோர் வழக்கு. அந்தப் பக்தியோகத்தைச் செய்யச் சாதி முதலிய தகுதிகளில் வரையறைகள் உண்டு. அதைச் செய்பவன் தன் அந்தணத்தன்மை முதலிய ஜாதிக்கும் ப்ரஹ்மசாரித் தன்மை முதலிய ஆச்ரமத்துக்கும் ஏற்பட்ட தர்மங்களை அங்கமாகச் செய்தேயாக வேண்டும். பக்தியோகம் செய்வதற்கு மிகக் கஷ்டமானது. எண்ணெயைப் பெய்யும்போது அதன் தாரை தொடர்ந்து விழுவதுபோல் எம் பெருமான் திருமேனியின் தியானம் இடையறாது தொடர்ந்து கொண்டேயிருக்கவேண்டும். நாள்தோறும் எம்பெருமானை நினைத்து நினைத்துப் பழகிப் பழகி அந்தப் பக்தி யோகத்தைச் சிறப்பாக வளர்த்துக்கொள்ள வேண்டும். சரீரம் கழியும் வரை தொடர்ந்து செய்து கொண்டேயிருக்க வேண்டும் பலன் கொடுக்கத் தொடங்கிய (ப்ராரப்த) கருமம் தவிர முன் செய்து மூட்டையாய்க் குவித்திருந்த புண்யத்தையும் பாபத்தையும் ஒழித்துவிட வல்லது அந்தப்

பக்தியோகம். அதைச் செய்பவனுக்கு மரண காலத்தில் பகவானைப் பற்றிய நினைவு (அந்திமஸ்ம்ருதி) கட்டாயம் வந்தேயாக வேண்டும். அதற்காகச் சேதநன் தானே பெருமுயற்சி கொண்டு பழகிவர வேண்டும். இத்தனை அம்சங்களுடன் கூடியது பக்தியோகம்.

மற்றொன்றாகிய ப்ரபத்தியென்னும் ஸாத்யோபாயமோ உள்ளத்தாலேயே செய்யவேண்டியதாகும். ஆனால் அந்த உள்ளம் மஹாவிச்வாஸம் என்னும் பெரிய நம்பிக்கையால் பண்பாட்டை அடைந்திருக்க வேண்டும். இந்த ப்ரபத்திக்கு ஷடங்கயோகம் (ஆறு அங்கங்களையுடைய யோகம்) என்று பெயருண்டு. ஐந்து அங்கங்கள் (1) ஆநுகூல்ய ஸங்கல்பம் (2) ப்ராதிகூல்ய வர்ஜநம் (3) மஹாவிச்வாஸம் (4) கோப்த்ருத்வ வரணம் (5) கார்ப்பண்யம் என்பன. இங்கும் பக்தியோகத்தில் கூறியதுபோல் ஐந்து அங்கங்களையும் அங்கியான ப்ரபத்தியையும் சேர்த்து ஆறு அங்கங்களையுடைய யோகம் என்னும் கூறுவதுண்டு. இந்த ப்ரபத்தியை எல்லாச் சாதியினரும் செய்யலாம். ஆனால் இதைச் செய்பவர் வேறோர் உபாயத்தைப் பற்றாதவராயிருக்க வேண்டும். இதற்குக் கீழ் கூறிய ஐந்து அங்கங்களையன்றி வேறு அங்கம் கிடையாது. இந்த ப்ரபத்தி, செய்வதற்கு மிகவும் எளிதாயுள்ளது. எம்பெருமானிடம் பிரார்த்தித்துத் தன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பிப்பதே ப்ரபத்தியாகும். இதை மோக்ஷத்திற்காக ஒரு முறைதான் செய்யலாம். வேறு ஒரு செயலைச் செய்து இதற்குச் சிறப்புத் தேட வேண்டியதில்லை. ஒரு முறை ப்ரபத்தியைச் செய்து விட்டால் இதை அடிக்கடி செய்வதோ வேறு செயலைச் செய்வதோ எஞ்சிய செயல் ஒன்றும் கிடையாது. பலன் கொடுக்கத் தொடங்கிய (ப்ராரப்த) கர்மங்களைக்கூட இந்த ப்ரபத்தி ஒழித்துவிடும். மரண காலத்தில் எம்பெருமானைப்பற்றிய நினைவு வருவதற்காக ப்ரபந்நன் தானாக ஒன்றும் முயற்சி கொள்ள வேண்டியதில்லை. எம்பெருமான் தானே தன் ஸங்கல்பத்தால் தன் நினைவை உண்டாக்கி விடுவான்.

இப்படி மோக்ஷத்துக்கு ஸாத்யோபாயமாய் விளங்கும் ப்ரபத்தியைச் சிலர் உபாயமன்று என்கின்றனர். இதன் கருத்து - ப்ரபத்தியும் எம்பெருமானது ஸங்கல்பத்தை எதிர்பார்த்தே பலன் தருவதால் அதை நேர் உபாயமாகக் கருத வேண்டாமே - என்பதுவேயாகும்.

(4) அடையப்படும் பலன் - ப்ரபத்தி செய்த சேதநன் ஸ்ரீவைகுண்டம் சேர்ந்து பரமபதநாதனைப் பரிபூர்ணமாக

அநுபவிக்கின்றான். அந்த அநுபவம் உள்ளடங்காது கைங்கர்யங்களைச் செய்கின்றான். இன்ன இடத்தில் தான் கைங்கர்யம் செய்தல் என்று இடத்தின் வரையறையோ, இன்ன பொழுதில் தான் செய்தல் என்று காலவரையறையோ, இந்தக் கைங்கர்யம் தான் செய்தல் என்று உருவில் வரையறையோ சிறிதும் இன்றி எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லாக் கைங்கர்யங்களையும் சேதநன் பரமபதத்தில் செய்கின்றான். இங்ஙனம் கைங்கர்யங்களைச் செய்து கொண்டே பரமபத நாதனைப் பரிபூர்ணமாக அநுபவிக்கின்றான். இப்படி அநுபவிப்பதாகிய ஆநந்தமே முக்கிய பலனாகும்.

இப்பலனைப் பெறும் வகையின் விளக்கம் வருமாறு - சேதநன் தன் தகுதிக்கு ஏற்றவாறு பக்தியோகத்தையோ ப்ரபத்தியையோ செய்கின்றான். அதனால் எம்பெருமான் அவனுக்கு வசப்பட்டு விடுகின்றான். ப்ரபத்திக்குப் பின் அறியாமல் செய்யும் பாபங்கள் சேதநனிடம் ஒட்டமாட்டா. ப்ரபத்திக்கு முன் செய்த பாபங்கள் ப்ரபத்தியின் பெருமையால் கழிந்து விடுகின்றன. அவனது மரணகாலத்தில் அவனுடைய ஸ்தூல சரீரம் கழிந்து விடுகின்றது. அங்கிருந்து செல்வதற்காக ஸூக்ஷ்மசரீரம்மட்டும் இருக்கின்றது. தலையில் உள்ள 101 வது நாடியின் வழியால் மேல் நோக்கிச் செல்கின்றான். இவனை வழிநடத்தும் அக்நி முதலிய தேவர்கள் வந்து அழைத்துச் செல்வார்கள் பின் இந்த ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்து விடுகின்றான். விரஜாநதிக்குச் சென்றதும் கூடச்சென்ற ஸூக்ஷ்மசரீரத்தையும் தள்ளி விடுகின்றான்.

பின் ப்ரக்ருதியின் ஸம்பந்தமற்ற பரமபதமென்னும் விசேஷமான தேசத்தில் புகுவான். அப்பொழுது ஜீவனுக்கு இயற்கையாயுள்ள ஸ்வரூபம் இதுவரை மறைந்து நின்றது தோன்றி விடுகின்றது. மறைந்து நின்ற எட்டுக் குணங்களும் வெளிவந்து விடுகின்றன. அவையாவன - (1) பாபங்கள் இல்லாமை (2) முதுமையில்லாமை (3) மரணமின்மை (4) துன்பமின்மை (5) பசியின்மை (6) தாகமின்மை (7) நினைத்ததைப் பெறுகை (8) தடையற்ற ஸங்கல்ப முடைமை என்பனவாம். இந்நிலையைப் பெற்ற சேதநன் அவனுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டே அநுபவமாகிய பேரின்பத்தை அடைகின்றான். இதுவே பலனாகும்.

(5) எம்பெருமானை அடைதற்கு எதிரிகள் - உலகில் விதையினின்று முளை பிறக்கின்றதா? முளையினின்று விதை உண்டாகின்றதா? என்று கேட்டால் என்ன விடை? ஒன்றும்

கூறமுடியாது. விதையினின்று முளை உண்டாகின்றது. முளை பெரிதாகி மரம் - செடிகளாகிப் பழமாகி விதை பிறக்கின்றது. எதற்கு எது காரணம் என்று எவ்வாறு கூற முடியும்? சேதநர்கள் பாபங்களைச் செய்கின்றனர். பாபம் இரு வகைப்படும். (1) செய்யத்தகாத காரியங்களைச் செய்தல். (2) செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாது விடுதல். இந்தப் பாபங்களைச் செய்வதால் எம்பெருமான் திருவுள்ளத்தில் சேதநன் மீது சீற்றம் உண்டாகின்றது. இந்தச் சீற்றம் சேதநரின் அறிவைக் கெடுத்து மறுபடியும் பாபத்தைச் செய்யச் செய்கின்றது. முன் கூறிய விதை - முளை என்கிற முறைபோல் சேதநன் செய்யும் பாபத்தால் எம்பெருமானது சீற்றம் (நிக்ரஹம்), இந்தச் சீற்றத்தால் சேதநன் பின்னும் பாபத்தைச் செய்தல் என்கிற முறையில் பெருவெள்ளம்போல் அவ்விரண்டும் நடந்து கொண்டேயிருக்கின்றன.

இந்த முறை சுற்றிச் சுற்றி வந்து மோக்ஷம் பெறும்வரை தொடர்ந்து கொண்டேயிருக்கும். சேதநர் செய்யும் பாபங்களுக்கு ஏதாவது ப்ராயச்சித்தம் செய்யாவிடில் எம்பெருமானது கோபத்தின் பலனை அடையாமல் தப்பமுடியாது. அவனுடைய கோபத்தைச் சாஸ்த்ரத்தைக் கொண்டே அறியமுடியும். இந்திரியங்களுக்குப் புலப்படாது அவனது கோபம். அது எப்போது பலன் தருமென்பதை நாம் ஊஹித்து அறியவும் முடியாது. ப்ரஹ்மா முதல் பூண்டு வரை அவனது கோபத்துக்குத் தப்பமுடியாது. அந்தச் சீற்றத்தின் வெள்ளம் ஒரே வகையாயிருப்பதாயன்றி அவரவர் செய்யும் பாபங்களுக்குத் தக்கவாறு மிகவும் வேறுபட்டிருக்கும். மிகப் பயங்கரமான நரகம் முதலிய பல கஷ்டங்களை வரிசையாய்க் கொடுத்துக் கொண்டேயிருக்கும். இத்தகைய எம்பெருமானின் சீற்றங்களின் தொடர்ச்சியும் அதனால் வருகிற சரீரம் முதலியனவும் அவற்றுக்குக் காரணமான பாபங்களின் தொகுதிகளுமே சக்கரம் போல் சேதநரைச் சுற்றிச் சுற்றி வந்து மோக்ஷம் பெறவொட்டாமல் தடைசெய்து கொண்டேயிருக்கும்.

(6) ஸம்பந்தம் - அடைபவனான ஜீவனுக்கு அடையப் படுகின்ற பரமாத்மாவோடு உண்டான ஸம்பந்தம். இது பல் வகைப்படும். அவையாவன - (1) ஆதேயத்வம் - எம்பெருமானுடைய ஸ்வரூபம் இருந்தால்தான் ஜீவனுடைய ஸ்வரூபம் - தொடர்ந்து நிற்றல் ஆகியவை இருக்கமுடியும் என்னும்படி நிற்றல். (2) விதேயத்வம் - எம்பெருமானுடைய ஸங்கல்பம் இருந்தால்தான்

ஜீவனுடைய ஸ்வரூபம் - தொடர்ந்து நிற்றல் - செயல் எல்லாம் இருக்க முடியும் என்ற நிலையுடைமை. (3) அப்ருதக்ஸித்தத்வம் - எம்பெருமானை விட்டுப் பிரியாமை (4) சேஷத்வம் - எம்பெருமான் பயனுக்காகவே தான் ஏற்பட்டமை (5) சரீரத்வம் - கீழ்க் கூறிய நான்கு தன்மைகளும் இருப்பதால் எம்பெருமானுக்குச் சரீரமாயிருத்தல். (6) வ்யாப்யத்வம் - அவன் கலந்து நிற்க இடமாயிருத்தல். (7) ரக்ஷ்யத்வம் - அவனால் காக்கப்பட உரியனாயிருத்தல். (8) கிங்கரத்வம் - அவனுக்குக் கைங்கர்யம் செய்யும் தன்மை. (9) போக்யத்வம் - அவனுடைய போகத்துக்கு ஏற்றவனாயிருத்தல். (10) போக்த்ருத்வம் - பலன்களை அநுபவிக்கும் தன்மை. இத்தன்மைகளுள் சில சேதநனுக்கும் அசேதநத்துக்கும் பொதுவாயுள்ளன. சில ஜீவனுக்கு மட்டுமே உரியன. இவ்வாறு சேதநனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தம் சாஸ்த்ரங்களில் பல்வகையாய்ப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது.

இனி ரஹஸ்யத்தின் விளக்கம் தொடங்குகின்றது.

மூலம்

1. ஒரு ஜீவனுக்கு ஒரு ஜீவன் தஞ்சமல்லன்

ஒரு சேதநனை மற்றொரு சேதநன் ரக்ஷிக்க முடியாது. எல்லா ஜீவர்களும் எம்பெருமானுக்கு வசப்பட்டவர்கள். அவனுக்கு அடங்கியிருத்தலில் எல்லோரும் சமமானவர்களே. இப்படி இருக்க ஒருவனை ஒருவன் எவ்வாறு காக்கமுடியும்? சாஸ்த்ரங்களும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றன. களிமண் உருண்டைபோல் பரதந்த்ரனான ஜீவன் தன்னைக் காத்துக் கொள்ளவே இயலாதவன், பிறரை எவ்வாறு காக்க முடியும்? நல்ல விவேகிகள் அற்ப பலனையே தர வல்ல பிரமனையும் சிவனையும் மதிக்கமாட்டார்கள். பிரமன் சிவன் முதலிய தேவர் கூட்டமெல்லாம் கர்மத்துக்கு வசப்பட்டு ஸம்ஸாரத்தில் ஆழ்ந்து நிற்பவர்களே. அவர்களும் எம்பெருமானது அருளால்தான் விவேகம் பெறுகின்றனர். ஆதலால் அவர்களை வழிபடுவதில் பயனில்லை. எல்லாச் சீவர்களும் அவனது லீலைக்குக் கட்டுப்பட்டவர்களே. அவர்களை ஸம்ஸாரத்தினின்று விடுவிக்க எம்பெருமானையன்றி வேறு எவரும் வல்லரல்லர். உண்மை நிலை இவ்வாறு இருக்க அவன் துணையின்றி ஒருவன் தன்னையோ பிறரையோ எவ்வாறு காக்க முடியும்?

## 2. ஶ்ரீமானான நாராயணன் ஒருவனே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்

பெரிய பிராட்டியைப் பிரியாத ஶ்ரீமந்நாராயணன் காண்பவர் உள்ளம் கவரும் திவ்யமங்கள விக்ரஹமுடையன். அவன் ஒருவனே ஸகல ஜீவர்களையும் ரக்ஷிக்க முடியும். பெரிய பிராட்டியின் சொல்லை எம்பெருமான் மறுக்கமுடியாது. மேலும் ரக்ஷிப்பதிலும் பிராட்டிக்கு எம்பெருமானுக்குச் சமமான உரிமையுண்டு. மேலும் எம்பெருமானுக்கும் ஜீவர்களுக்கும் ஸ்வாமி - அடியன் என்ற ஸம்பந்தம் உண்டு இந்த ஸம்பந்தத்தை அறுத்துக் கொள்ள முடியாது. மேலும் கருணை முதலிய குணங்கள் அவனிடம் இயற்கையாய் அமைந்துள்ளன. இத்துணைச் சிறப்புக்களால் எம்பெருமான் ஸகல ஜீவராசிகளையும் காப்பவனாயுள்ளான்.

ஜீவர்கள் மோக்ஷம் பெறுவதற்குச் சாதனமாய் பக்தியோகத்தைச் செய்யத் தகுதியற்றவர்களாயுள்ளனர். அவர்கள் பக்தி யோகமாகிய கைம்முதலற்றுச் சரணாகதியையே உபாயமாகக் கொள்கின்றனர். சிலர் பக்தியோகம் செய்யத் தகுதியுடையராய் அதைச் செய்கின்றனர். இவ்விருவகுப்பினருக்கும் ஶ்ரீமந் நாராயணன் ஒருவனே கர்மஸம்பந்தம் முதலிய அநிஷ்டங்களைப் போக்கி மோக்ஷாநந்தமாகிய இஷ்டத்தை அளிக்கின்றான். இதைச் செய்வதற்கு அவனுக்கு எதாவது சாதாரணக் கருவிகள் வேண்டுமோ! ஒன்றும் வேண்டியதில்லை. ஆனால் தன் ஸங்கல்பத்துக்கு வசப்பட்ட எதாவது கருவியை வேண்டுமானால் அவன் வைத்துக்கொள்வான்.

எம்பெருமானைச் சரணமாகப் பற்றியவர்களை ஒருவரும் துன்புறுத்த முடியாது. ஹிரண்யகசிபு பரமபாகவதனான ப்ரஹ்லாதனுக்கு எத்தனையோ துன்பங்களைச் செய்யப் பாரித்தானே? முடிந்ததா? சுமுகன் என்ற பாம்பை கருடனால் துன்புறுத்த முடிந்ததா? இவ்வாறே எம்பெருமானும் வெறுக்கும்படி குற்றம் செய்தவர்களைப் பிறர் எவரும் காக்கவும் முடியாது. எம்பெருமான் இயற்கையில் எல்லோரையும் சமமாய்ப் பாவிப்பவனே. ஆயினும் சேதநன் செய்யும் குற்றத்துக்குத் தண்டிப்பவனேயாவான். காகம் பிராட்டியிடம் அபசாரம் செய்து தன்னைக் காப்பவரைத் தேடி உலகமுழுதும் சுற்றியதே! எவனாவது காக்க முடிந்ததா? இராவணன் படைவலிமையும் வரவலிமையும் பெற்று வாழ்ந்தானே! காத்துக் கொள்ள முடிந்ததா? ஆதலின் எம்பெருமானது வெறுப்புக்கு ஆளானாரை ஒருவரும்

காக்கவியலாது.

3. இஜ்ஜீவன் அநாதிகாலம் அநுபவிக்கப் பெறாத ச்ரிய;பதியைப் பெறுகைக்கு ஹேதுவான உபாயத்தை ரஹஸ்யத்ரய முகத்தாலே உபதேசித்து அவ்வழியாலே ஆசார்யன் இவனுக்குத் தஞ்சமாகின்றான்.

சேதநன் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்துகொண்டு நித்ய ஸூரிகளைப் போலவே பரமபதநாதனைப் பரிபூர்ணமாய் நித்யமாய் அநுபவிப்பதற்குத் தகுதியும் உரிமையும் உடையனே. தந்தையிடமிருந்து செல்வத்தில் பாகம் பெறப் புதல்வனுக்கு உரிமையில்லையா? அம்முறையே இங்கும். ஆனால் சேதநன் அந்த அநுபவத்தைப் பெறாமல் ஸம்ஸார மண்டலத்தில் உழல்கின்றான். இங்ஙனம் தனக்கு உரிமையுள்ள அநுபவத்தை இவன் ஏன் இழந்தான்? தான் முன் செய்த பாபத்தினால்தான். அந்தப் பாபம் இவனை மோக்ஷம் பெறவொட்டாமல் தடை செய்கின்றது.

இத் தடை நீங்கி மோக்ஷாநந்தத்தைப் பெறுதற்காக ஆசார்யன் ஒரு சிறந்த உபாயத்தை உபதேசிக்கின்றான். அந்த உபாயமே ப்ரபத்தி என்பது. வேதாந்த சாஸ்த்ரங்களில் மிகவும் ஸாரமான திருமந்திரம் - த்வயம் - சரம ச்லோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் ஆசார்யன் இவனுக்கு உபதேசிக்கின்றான். அவ்வுபதேசத்தால் 'ப்ரபத்தியைச் செய்தால் பலன் கிடைக்காமற் போகாது' என்ற நம்பிக்கை சேதநனுக்கு உண்டாகின்றது.

எம்பெருமானே ஆசார்யனாய் வடிவு கொண்டு சாஸ்த்ரமாகிய கையைக் கொடுத்து ஸம்ஸாரத்தில் உழல்பவரைக் கைதூக்கி விடுவதாகச் சாஸ்த்ரம் கூறுகின்றது. இவ்வாறு மஹோபகாரம் செய்வதால் ஜீவன் மோக்ஷம் பெறுவதற்கு ஆசார்யன் பரம்பரையாய்க் காரணமாகின்றான். மஹாபாபியான க்ஷத்ரபந்துவும் புண்யசாலியான புண்டரீகனும் ஆசார்யனால் மோக்ஷமடைந்ததாகக் கூறும் ப்ரமாணம் இப்படி ஜ்ஞாநத்தை உபதேசித்துப் பரம்பரையாகக் காரணமாகும் கருத்தையே கொண்டதாகுமென்று அறிக.

4. ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்குச் சேஷபூதையாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்

எல்லோருக்கும் ஸ்வாமியாயிருப்பவன் ஸர்வேச்வரன். அவனைத் தவிர மற்ற ஸகல ஜீவராசிகளுக்கும் தலைவியாய் விளங்குமவள் பெரியபிராட்டி. ஆனால் எம்பெருமானுக்கு மட்டும் அடிமையாயிருப்பவள் பிராட்டி. அவள் எல்லோருக்கும் அருள் புரியுமவளேயன்றி யாரிடமும் சீற்றங்கொள்பவளல்லள். இவள் எம்பெருமானுடன் கூட நின்று சரணமடைந்தவரைக் காத்தல் என்னும் தர்மத்தை நடத்துபவள். இத்தகைய பல விசேஷத் தன்மைகளையுடையவள் பெரிய பிராட்டி. இவள் எல்லோருக்கும் தாயாய் விளங்குமவள். ஸர்வேச்வரனோ குற்றம் செய்பவர்களைத் தண்டிருக்கும் தன்மையன். அவன் தந்தையின் ஸ்தாநத்தில் இருப்பவனாதலின் சற்றுக் கடுந்தன்மையுடன் இருப்பான். ஆதலால் குற்றம் செய்தவர்கள் அவனைத் தங்களுக்கு அநுகூலனாக்கிக் கொள்ள மாட்டாமல் தயங்கி நிற்பர். அவ்வாறு அவர்கள் தயங்காதபடி எம்பெருமானுடைய கடுந்தன்மையைப் பிராட்டி மாற்றி விடுவாள். எவ்வாறு? - அவனிடம் "என்ன இது? இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் எவன் உளன்?" என்பவை முதலிய தகுந்த சொற்களைப் பிராட்டி கூறுவாள். அதனால் அவனுடைய கடுந்தன்மை மாறிவிடும். பின் சேதநர்கள் துணிந்து அவனை அணுகுமாறு செய்து அவன் திருவடிகளில் சேர்த்துவிடுகின்றாள்.

இவ்வாறு இவள் ஜீவர்களுக்காக அவனிடம் பரிந்து பேசுவதற்குக் காரணம் சேதநர்களிடம் உள்ள அன்பின் மிகுதியும் எம்பெருமானிடம் உள்ள உரிமையின் மிகுதியுமே ஆகும். பிராட்டிக்குச் சேதநர்களிடம் உள்ள அன்பு அவர்களிடம் உள்ள குற்றங்களைப் புறக்கணித்து எம்பெருமானிடம் அவர்களுக்காகப் பரிந்து பேசும்படி செய்கின்றது. எம்பெருமானிடம் இவளுக்கு உள்ள உரிமை அவன் தன் வார்த்தையைத் தட்டாமல் தான் சொல்லியபடி சேதநர்களைக் காக்கும்படி பரிந்துபேசுமாறு செய்கின்றது. இவ்வாறு செய்தலால் புருஷகாரம் (பரிந்து பேசுபவள்) எனப்படுகின்றாள்.

இவ்வாறு செய்து எம்பெருமானிடம் சேர்த்தபின் அவனுக்கு அந்தச் சேதநர்களிடம் பிராட்டியினும் விஞ்சிய அன்பு சுரந்து விடுகின்றது. பிறகு பிராட்டி ஒரு சமயத்தில் அந்த ஜீவர்களிடம் எம்பெருமானுக்கு உள்ள அன்பைச் சோதித்துப் பார்க்க எண்ணு கின்றாளாம். அவனிடம் போய் அந்தச் சேதநர்களைப் பற்றிச் சில குற்றங்குறைகளைச் சொல்லுகின்றாளாம். அதைக் கேட்ட எம்பெருமான் "என் அடியார் இக்குற்றத்தைச் செய்யவேமாட்டார்" என்கின்றானாம். செய்ததாய் எதாவது நிரூபித்துக் காட்டினால்

"அவர்கள் செய்தவை நல்லவை போன்றவையேயாகும்" என்கின்றானாம். இப்படிக் கூறுமளவுக்குச் சேதநர்களிடம் எம்பெருமானுக்கு உறுதியான அன்பு ஏற்பட்டுவிட்டதைக் கண்டு தன் முயற்சி பலித்ததென மகிழ்கின்றாள் பிராட்டி. இவ்வாறு சேதநரைக் காப்பவளாகின்றாள்.

5. இவளைப் புருஷகாரமாக்க வேண்டுவது ஈச்வரன் தண்டதரனாகையாலே.

ஸர்வேச்வரனது சுதந்திரத்துக்கு வரையறை இல்லை. அது தடையின்றி விளங்குகின்றது. அவன் அநாதி காலமாகச் சாஸ்த்ரத்தை உலகுக்கு அளித்துள்ளான். சேதநர்களுக்குச் செய்யத் தக்கது எது, தகாதது எது என்ற வரையறையைக் காட்டுவதற்குச் சாஸ்த்ரமே ஆதாரமாய் நிற்கும். நீரின் வெள்ளம் தொடர்ந்து ஓடிக்கொண்டிருப்பது போல் ஜீவர்களின் கர்ம வெள்ளம் அநாதியாக வந்துகொண்டிருக்கிறது. அந்தக் கர்மங்களுக்கு ஜீவர்கள் வசப்பட்டிருப்பதால் எம்பெருமானது கட்டளையாகிய சாஸ்த்ரங்களை மீறி நடந்து வந்திருக்கின்றனர். அத்தகைய சேதநர்களிடம் எம்பெருமான் சீற்றம் கொண்டு பின்னும் பின்னும் ஸம்ஸாரக் கடலிலேயே தள்ளுகின்றானென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இவர்கள் தாம் மிகுதியான பாபங்களைச் செய்திருப்பதால் தங்களுக்கு எம்பெருமான் அளிக்கப்போகும் தண்டனைகளை நினைத்து அஞ்சுகின்றனர். அப்பொழுது தாங்கள் அந்தத் தண்டனைகளினின்று தப்புவதற்கு எம்பெருமானிடம் தங்களுக்காகப் பரிந்து பேசுபவர் ஒருவர் வேண்டுமென்று கருதுகின்றனர். ஆய்ந்து பார்த்து ஸர்வேச்வரன் பத்நியாகிய பெரிய பிராட்டியே அதற்கு ஏற்றவளென உணருகின்றனர். அவள் சொல்லை அவன் மீறி நடக்க முடியாதன்றோ? மேலும் அவன் தண்டிப்பவனாயிருத்தலையும் பிராட்டி அவ்வாறன்றித் தங்களுக்குத் தாயாய்த் தங்கள் குற்றங்களைப் பொருட்படுத்தாத அன்புடையளாயிருப்பதையும் நன்கு காண்கின்றனர்.

மேலும் பல முன்னோர்கள் பிராட்டியை முன்னிட்டே எம்பெருமானை அணுகியுள்ளனர். உலகிலும் அரசியின் பரிவாரங்கள் பெருங்குற்றம் செய்திடினும் அவளுக்காக அவர்களின் குற்றங்களை அவர்கள் செய்யும் சிறிய மன்னிப்புச் செயல்களைக் கொண்டே அரசன் பொறுத்துவிடுகின்றான். நம்மாழ்வார் முதலான ஆசார்யர்களும் பிராட்டியை முன்னிட்டே எம்பெருமானைச் சரணமடைவதாக ஸ்ரீஸூக்திகளை அருளிச்

செய்துள்ளனர். வேதமும் பிராட்டியை முன்னிட்டே எம்பெருமானை ஓதுகின்றது. வேதத்தைத் தழுவிப் பிறந்த ஸ்ம்ருதிகளும் எம்பெருமானை அடைய விரும்புமவன் முதலில் பிராட்டியை அடையவேண்டுமென்று கூறுகின்றன. இவற்றை யெல்லாம் ஆய்ந்து பிராட்டியைப் பற்றினால் அவள் அவனிடம் பரிந்துபேசிக் காத்திடுவாள். ஆதலின் இவளைப் புருஷகாரமாகக் கொண்டுதான் ஆகவேண்டும்.

6. இத்தண்டகாரணம் அநாதியான ஆஜ்ஞாதிலங்கநம்.

"எல்லாப் பிராணிகளிடத்தும் ஸமனாய் நடந்துகொள்வேன்" என்று எம்பெருமான் முழக்கினான். எல்லாருக்கும் சமனாய் நடக்கும் இவன் தன் இஷ்டப்படி சிலரைத் தண்டித்தும் சிலரைத் தண்டியாமலும் விட்டால் பக்ஷபாதம் செய்வதாய் முடியும். எல்லோரையும் தண்டிக்கத் தொடங்கினால் இவன் கருணையற்றவனென்று தேறிவிடும். இந்தக் குற்றங்கள் இவனிடம் வரலாமா? கூடாது. ஆதலால் சிலரைமட்டும் குறிப்பிட்டுத் தண்டிப்பதற்கு முக்கிய காரணம் ஒன்று உள்ளது. அது அநாதிகாலமாக அவனது கட்டளையாகிய சாஸ்த்ரத்தை மீறி நீர் வெள்ளம் போல் மேன்மேலும் பாபச் செயல்களைச் செய்து வந்ததுவேயாகும். இதுவே பல்வகை நரகத்திலே வீழ்த்த வல்லதென்று சாஸ்த்ரங்கள் கூறும்.

7. இப்படி அபராதாநுரூபமாகத் தண்டதரனாய்ப் போரு கின்ற சரண்யனுடைய வசீகரணங்களில் ப்ரதாநம் ஸர்வ அகிஞ்சநாதிகாரமான ஆத்மரக்ஷாபரஸமர்ப் பணம்.

இப்படி அவரவர் செய்யும் பாபங்களுக்குத் தக்கவாறு ஜீவர்களை எம்பெருமான் தண்டிகிறான். அவனுடைய சீற்றத்தை நீக்கி அவனை வசப்படுத்தி அவன் கொடுக்கும் தண்டனைகளினின்று தப்புவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. அவை பக்தி - ப்ரபத்தி என்பன. மோக்ஷத்தை விரும்புமவன் இவற்றுள் ஒன்றைச் செய்தால் எம்பெருமானுக்கு அவனிடம் உள்ள சீற்றம் மாறி அநுக்ரஹம் உண்டாகும் என்று சாஸ்த்ரங்கள் கூறும்.

இந்த இரண்டனுள் ப்ரபத்தியே பல காரணங்களால் முக்கியமாய் விளங்கும். இந்த ப்ரபத்தியை இன்ன ஜாதியினர்தாம் செய்யலாம் என்ற வரையறை ஏதும் இல்லை. பக்தியோகத்தைச் செய்ய அடியோடு தகுதியற்ற எல்லாரும் இதைச் செய்யலாம். இது

எல்லாப் பலனையும் தர வல்லது. பக்தியோகம் செய்பவர்கூட அதில் செய்ய முடியாத பகுதிகளுக்கு இந்த ப்ரபத்தியைச் செய்தால் அப்பொழுது இது அங்க ப்ரபத்தியென்று பெயர் பெற்றுப் பக்தி யோகத்தைத் தலைக்கட்டி வைக்கும். இப்பொழுதே மோக்ஷம் வேண்டுமென்றால் ப்ரபத்தி உடனே மோக்ஷத்தைத் தரும். இச் சரீரத்தின் முடிவில் மோக்ஷம் வேண்டுமென்றால் அப்படியே தரவல்லது.

முன்பு செய்து பலன் கொடுக்கத் தொடங்கிய பாபத்தைக்கூட ஒழிக்கவல்லது இந்த ப்ரபத்தி. மோக்ஷம் பெறுவதில் அவரவர்களுக்கு உள்ள ஆர்வத்தின் வேற்றுமையைப் பொறுத்தது இந்த ப்ரபத்தி பலன் தருவது. இது செய்வதற்கு மிகவும் எளிதாயுள்ளது. கஷ்டப்பட்டுச் செய்யவேண்டிய அங்கம் ஒன்றும் இதற்கு இல்லை. செய்ய எளியனவான ஐந்து அங்கங்கள் மட்டுமே இதற்கு உண்டு. இந்த ப்ரபத்தியை ஒருமுறைதான் செய்யவேண்டும். எல்லோரும் தாம் விரும்பும் பலனை விரைவில் பெறவேண்டு மாயின் இந்த ப்ரபத்தியே அதற்கு முக்கிய சாதனமாகும். இந்த ப்ரபத்தியின் உயிர்நிலை தன்னைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தலேயாகும்.

இதைச் செய்யும் போது தன்னைக் காத்துக் கொள்வதற்காகத் தானே இந்தச் செயலைச் செய்வதென்ற கெட்ட எண்ணம் மட் டும் இருக்கக்கூடாது. அவனையே உபாயமாக நிற்கும்படி பிரார்த்திப்பதுடன் அவன் ஒருவனாலேயே தன்னைக் காக்க முடியுமென்ற விசேஷ உறுதியும் இருக்க வேண்டும்.

8. இது ஸபரிகரமாக ஸக்ருத் கர்த்தவ்யம்

இந்த ப்ரபத்தியை இதற்கு உரிய ஐந்து அங்கங்களுடன் ஒரே முறை செய்யவேண்டும். ஒரு பலனுக்காகச் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மத்தை ஒருமுறைதான் செய்ய வேண்டும் என்று பொதுவாகவே ஒரு நீதியுண்டு. ஆனால் பக்தியோகத்தைமட்டும் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கவேண்டும் என்ற விசேஷ விதி உண்டு. ஆதலால் அது நிறைவேறும்வரை செய்தேயாக வேண்டும். ப்ரபத்திக்கு அத்தகைய விசேஷ விதி யாதும் இல்லை. இராமபிரானும் ஒரு முறை ப்ரபத்தி செய்தவனுக்கு அபயமளிப்பதாகக் கூறியுள்ளான். சாஸ்த்ரமும் ப்ரபத்தியை ஒருமு றை செய்யவே விதிக்கின்றது. ஆளவந்தாரும் ஸ்ரீ பாஷ்யகாரரும் ஒரு முறைதான் ப்ரபத்தியைச் செய்ய வேண்டுமென்கிற ஸம்ப்ரதாயத்தையே வெளியிட்டுள்ளனர். மேலும் த்ரௌபதி -

விபீஷணன் - கஜேந்த்ரன் - ஸுமுகன் - காகம் - புறா முதலியவற்றின் வரலாறுகளைப் பார்த்தால் அவர்கள் அனைவரும் ஒரு முறை ப்ரபத்தி செய்ததாகவே ஏற்படுகின்றது ஆதலால் (1) ஆநுகூல்ய ஸங்கல்பம் (2) ப்ராதிகூல்ய வர்ஜநம் (3) கார்ப்பண்யம் (4) மஹா விச்வாஸம் (5) கோப்த்ருத்வ வரணம் என்ற ஐந்து அங்கங்களுடன் தன்னைக் காக்கும் பொறுப்பை அவனிடம் ஸமர்ப்பித்தலாகிய ப்ரபத்தியை ஒரு முறை செய்வதுதான் சாஸ்த்ரத்துக்கு ஒத்ததாகும்.

இங்கு ஒரு கேள்வி எழலாம் - ப்ரபத்தியைச் செய்யச் சாதன மாகவுள்ள த்வயம் முதலிய மந்த்ரங்களில் ' சரணமடைகின்றேன்' என்ற பொருள் கொண்ட வினை முற்ற நிகழ்காலத்தைக் காட்டுவதால் ப்ரபத்தியைச் செய்து கொண்டேயிருக்க வேண்டுமென்று தெரிகின்றதே! என்று. இதற்கு விடை - நிகழ்கால வினைமுற்று ப்ரபத்தியை அநுஷ்டிக்கும்போது அநுஸந்திக்கவேண்டிய முறையைக் காட்டுவதேயன்றி, தொடர்ந்து செய்து கொண்டேயிருக்க வேண்டுமென்பதைக் காட்டாதென்று உணர்க.

9. இஸ் ஸமர்ப்பணத்தைத் தான் அநுஷ்ட்டிக்கவுமாம் ; தனக்காக ஆசார்யாதிகள் அநுஷ்டிக்கவுமாம்.

இந்த ப்ரபத்தியைத் தானே செய்யத் தகுதியிருந்தால் சேதநன் தனக்காகத் தானே எம்பெருமானிடம் செய்து கொள்ளலாம். இது ப்ரபத்தி வகைகளுள் ஸ்வநிஷ்டை யெனப்படும். அல்லது தனக்காகத் தன் ஆசார்யன் இந்த ப்ரபத்தியைச் செய்யலாம். இது ஆசார்ய நிஷ்டை யெனப்படும். அல்லது ஆசார்யன் த்வயத்தை உச்சரித்துச் சிஷ்யனையும் உச்சரிக்கச் செய்து. ப்ரபத்தியைச் செய்யலாம் இது உக்திநிஷ்டை யெனப்படும். அல்லது ஆசார்யனல்லாத ஒரு பாகவதன் ஒரு சேதநனுக்காக ப்ரபத்தியைச் செய்யலாம் இது பாகவத நிஷ்டை யெனப்படும்.

இங்கு ஒரு கேள்வி எழலாம் - சாஸ்த்ரத்தில் விதிக்கப் பட்ட ஒரு கர்மத்தை ஒருவன் செய்தால் அந்தக் கர்மத்தின் பலன் அச்செயலைச் செய்தவனுக்கே கிடைக்குமென்று சாஸ்த்ரமே வரையறுத்திருக்கின்றதே! இங்கு ப்ரபத்தியை ஆசார்யனோ பாகவதனோ செய்ய அதன் பலன் வேறொரு சேதநனுக்குச் சேருவது எவ்வாறு பொருந்தும்? என்று. இதற்கு ஸமாதாநம் - ஒருவனுக்காக மற்றொருவன் காரியம் செய்வதை உலகில் கண்டுள்ளோம். உதாஹரணமாய் - புத்திரன் முதலியோருக்கு

ஆயுஸ் விருத்தியாவதற்காகத் தந்தை முதலியோர் ஜாதகர்மம் - ஆயுஷ்யஹோமம் முதலிய புண்ணியச் செயலைச் செய்வதைக் காண்கின்றோம். இதைச் சாஸ்த்ரமும் ஏற்றுக் கொண்டுள்ளது.

மேலும் பராசர மஹர்ஷி - சௌநக பகவான் இவர்கள் உலக நலத்துக்காக எம்பெருமானைப் பிரார்த்தித்திருப்பதை அவர்கள் வாக்யங்களாலேயே அறிகின்றோம். இன்னும் பல மஹர்ஷிகளின் வரலாறுகளாலும் ஒருவனுக்காக மற்றொருவன் நற்செயல் புரிவதை உணருகின்றோம். ப்ரஹ்லாதாழ்வான் தன் தந்தை திருந்துவதற்காக எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்தான். விபீஷணன் தன்னுடன் வந்த நான்கு அரக்கர்களுக்காகவும் இராமனைச் சரணமடைந்தான். தசரதன் தன் பிள்ளைகளைக் காக்குமாறு பரசுராமனைச் சரணமடைந்தான். த்ரௌபதி தன் கணவருக்காகக் கண்ணனைச் சரணமடைந்தாள். இன்னும் பலரும் இவ்வாறே தங்களைச் சேர்ந்த சிலருக்காக ப்ரபத்தி செய்துள்ளனர். ஆழ்வாரும் ஆசார்யனைக் கொண்டு ப்ரபத்தி செய்யும் முறையை விளக்கியருளியுள்ளார். ஆண்டாளும் தான் எம்பெருமானை அநுபவிக்கும்படி தன் தந்தையான பெரியாழ்வாரை ஓர் உபாயத்தைச் செய்தருளும்படி வேண்டுகின்றாள். இவ்வாறு பூர்வாசார்யர்களின் அநுஷ்டாந முறையையும் பலர் செய்துவந்த ஸம்ப்ரதாயங்களையும் நோக்கும்போது ப்ரபத்தியைத் தானே செய்தால் பலன் வருவது போலவே தனக்காக ஆசார்யர்களும் பாகவதர்களும் ப்ரபத்தி செய்தாலும் பலன் வருவதில் ஐயமில்லை. இவ்விஷயத்தை வலியுறுத்தி இரண்டு சுலோகங்கள் ந்யாஸ திலகத்தில் ஸ்ரீதேசிகனாலேயே அருளிச் செய்யப்பட்டுள்ளன. (அவற்றையும் அவற்றின் விளக்கத்தையும் ரஹஸ்ய ரத்னாவளி ஹ்ருதயம் வாக்யம் 9ல் காண்க)

**10.** இதற்குக் கோரின பலத்தைப் பற்றப் புந: ப்ரபத்தி முதலான கர்த்தவ்ய சேஷமில்லை.

சேதநன் தான் விரும்பும் ஒரு குறிப்பிட்ட பலனுக்காக ஒரு முறைதான் ப்ரபத்தியைச் செய்யலாம். அதே பலனுக்காக மறுபடி ப்ரபத்தியைச் செய்ய வேண்டியதில்லை. ப்ரபத்தியை ஒரு யாகமாகவும் அதைச் செய்தவனை வேள்வி செய்து முடித்த புண்யவானாகவும் சாஸ்த்ரம் கூறுகின்றது. சேதநன் குறிப்பிட்ட ஐந்து அங்கங்களுடன் ஒரு முறை ப்ரபத்தியைச் செய்துவிட்டால் அந்த ப்ரபத்தியை அதே பலத்திற்காக மறுபடியும் செய்யவேண்டாம். அதற்கு அங்கமாகவும் செய்ய வேண்டிய எஞ்சிய பகுதி ஒன்றும் இல்லை. முதலில் செய்த ப்ரபத்தி

வேறொன்றையும் எதிர்பாராது நின்று பலனைத் தந்துவிடும்.

ஆனால் அதே பலனுக்காக மறுபடி எதையும் செய்ய வேண்டியதில்லையாயினும் ப்ரபந்நன் தன் தகுதிக்கு ஏற்றவாறு ப்ரபத்திக்குப் பின் இங்கு இருக்கும் நாள்வரை சில கைங்கர்யங் களைச் செய்துகொண்டிருப்பான். இந்தக் கைங்கர்யங்களால் எம்பெருமானுக்கு இவன்பால் மிக்க மகிழ்ச்சி உண்டாகும். இவன் இந்தக் கைங்கர்யங்களை வேறு எப்பயனையும் நாடிச் செய்கின்றானல்லன். அவற்றைச் செய்யும்போது எம்பெருமான் திருவுள்ளத்தில் உண்டாகும் மகிழ்ச்சியே அவற்றின் பயனாகும்.

மேலும் இவன் தனக்கு எம்பெருமானிடம் பக்தி வளருவதற்காகவோ, தத்துவங்களைப் பற்றிய ஞானம் பெறுவதற்காகவோ, எம்பெருமானுக்கு ஆலயங்களில் விபவங்கள் பெருகுவதற்காகவோ, பாகவர்களின் ஸம்ருத்திக்காவோ பின்பும் ப்ரபத்தியைச் செய்யலாம். மேலும் சரீர முடிவில் மோக்ஷம் பெறுதற்காக முதலில் ப்ரபத்தி செய்தாகிவிட்ட போதிலும் அதுவரை காலத் தாழ்வைப் பொறுக்காமல் மோக்ஷகாலம் இப்பொழுதே வரவேண்டுமென்றும் மறுபடி ப்ரபத்தி செய்யலாம். மேலும் ப்ரபத்திக்குப் பின் புத்திபூர்வமாய்ப் பாபங்கள் செய்ய நேர்ந்தால் அவை கழிவதற்காகவும் ப்ராயச்சித்த ப்ரபத்தி செய்யலாம். இவற்றாலெல்லாம் முதலில் மோக்ஷத்துக்காகச் செய்த ப்ரபத்தி வேறொன்றை எதிர்பார்த்ததாகாது. ஆதலால் இங்கு முரண்பாடு ஏதும் இல்லை.

**11. இப்படி க்ருதக்ருத்யனான ப்ரபந்நனுக்குவர்ணாச்ரமாதி தர்மங்கள் ஸ்வதந்த்ர - ஆஜ்ஞா ஸித்தங்களான கைங்கர்ய விசேஷங்கள்**

ப்ரபத்தியைச் செய்தவன் 'க்ருதக்ருத்யன்' எனப்படுகின் றான். இச் சொல்லுக்குச் செய்யவேண்டிய காரியத்தைச் செய்து முடித்தவன் என்று பொருள். இவன் பிராமணன் க்ஷத்திரியன் என்ற முறையில் உள்ள தன் ஜாதிக்கும் பிரமசர்யம் இல்லறம் போன்ற ஆச்ரமங்களுக்கும் ஏற்றவாறு சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட தர்மங்களைச் செய்தேயாகவேண்டும். சாஸ்த்ரமென்பது என்ன? ஸ்வதந்த்ரனான எம்பெருமானுடைய கட் டளைதானே! இந்தக் கடமைகளைப் ப்ரபந்நன் வேறொரு பலனைக் கருதிச் செய்யவில்லையென்பது உண்மைதான். ஆனால் இவற்றைச் செய்யாவிடில் எம்பெருமானது கட்டளையை மீறிய குற்றத்துக்கு இவன் ஆளாக வேண்டும்.

இந்த ப்ரபந்நனுக்குச் சேதந - அசேதந - ஈச்வரர்களாகிய தத்துவங்களைப் பற்றியும் உபாயங்களாகிய பக்தி ப்ரபத்திகளைப் பற்றியும் நிச்சயமான ஞானம் இருக்கின்றது. வேறு தெய்வத்தைத் தொழுதல் முதலிய குற்றங்கள் இவனிடம் கிடையா. இவன் தனக்கு உள்ள சக்தியை ஒளிக்காமல் இயன்றவளவுக்கு வர்ணாச்ரம தர்மங்களைச் செய்தேயாக வேண்டும். அவற்றை விட முடியாது. அவற்றைச் செய்வது எம்பெருமான் உகந்த கைங்கர்யத்தைச் செய்வதாகும்.

எம்பெருமானது கைங்கர்யத்திலேயே சுவை கண்ட ப்ரபந்நன் வர்ணாச்ரம தர்மங்களை எதற்காகச் செய்ய வேண்டும்? என்று கேட்கக் கூடாது. இத்தகைய ப்ரபந்நனைக் குறித்தே பல சாஸ்த்ரங்கள் பின்வருமாறு கூறுகின்றன. ப்ரபந்நன் காம்யங்களான (இம்மைப் பயனுக்கு உரிய) கர்மங்களைச் செய்யக்கூடாது. அவ்வாறே பாபகர்மங்களையும் செய்யக் கூடாது. ஸந்த்யாவந்தநம் முதலிய நித்ய கர்மங்களையும் சிராத்தம் முதலிய நைமித்திக கர்மங்களையும் ப்ரபந்நன் செய்தேயாக வேண்டும். தர்மம் குலையாமைக்கும், குலப் பெருமையைக் காக்கவும், உலகத்தார் இவனைப் பார்த்துக் கெடாதிருக்கவும், வர்ணாச்ரம தர்மங்களின் வரையறை அழியாதிருக்கவும், திவ்ய தம்பதிகள் உகப்புக்காவும் புத்திமானாயுள்ள ப்ரபந்நன் வைதிகமான கடமைகளை மீற மனத்தால் கூட நினைக்கக் கூடாது என்று ஸ்ரீ பாஷ்யகாரர் முதலிய பெரியோர்கள் அருளிச் செய்த நித்ய க்ரந்தங்களிலும் கூறப்பட்டுள்ளது.

**12. இவனுக்கு அஜ்ஞா - அநுஜ்ஞா ஸித்தங்களான கைங்கர்யகளெல்லாம் ஸ்வயம் ப்ரயோஜநங்கள்.**

ப்ரபந்நன் ப்ரபத்திக்குப் பிறகு இங்கு இருக்கும் நாள் வரை செய்யும் கைங்கர்யங்கள் இருவகைப்படும் (1) ஆஜ்ஞா கைங்கர்யம் (2) அநுஜ்ஞா கைங்கர்யம் (1) ஆஜ்ஞா கைங்கர்யங்களாவன - ப்ராஹ்மண்யம் முதலிய ஜாதிக்கும் பிரமசர்யம் முதலிய ஆச்சிரமத்துக்கும் ஏற்றவாறு சுத்தமான ஆஹாரத்தையே உண்ணல் - ஆசாரங்களில் வரையறை - பாபங்களைச் செய்யாதிருத்தல் முதலியனவாம். இவற்றைச் செய்வதால் தனிப்பட்ட பலன் இல்லை. செய்யாவிடில் பாபம் உண்டு. ஆதலின் இவை அஜ்ஞாகைங்கர்யமெனப்படும். (2) அநுஜ்ஞாகைங்கர்யங்களாவன

- ஆஜ்ஞாகைங்கர்யங்களுக்குப் போக எஞ்சிய அவகாசங்களில் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை அநுஸந்தித்தல் - அவனைத் துதித்தல் - அவன் திருநாமங்களைக் கூறுதல் - ஸந்நிதியைப் பெருக்குதல் - மெழுகுதல் - திருமாலை கட்டி ஸமர்ப்பித்தல் - திருவிளக்கு ஏற்றுதல் முதலியன. இவற்றை இஷ்டமுள்ளபோது செய்யலாம். இஷ்டமில்லாதபோது செய்யாது விடலாம். இதனால் பாபம் வராது. இப்படி இருப்பதுவே இவற்றுக்கு ஏற்றம். ஆதலால் இவையெல்லாம் அநுஜ்ஞா கைங்கர்யமென்னப்படுகின்றன.

இந்த இருவகைக் கைங்கர்யங்களும் எல்லாவகைப் பந்துவாய் எல்லோருக்கும் தலைவனான எம்பெருமானுக்கு மிக்க மகிழ்ச்சியை விளைவிப்பன. கணவனிடம் மிக்க அன்பு கொண்ட பதிவிரதையான மனைவி அவனுக்குப் பணிவிடை முதலியனவற்றைச் செய்கின்றாள். அவள் கணவனது மகிழ்ச்சியையன்றி வேறு எப்பயனையும் கருதுவதில்லை. முக்தி பெற்றவன் மோக்ஷத்தில் எம்பெருமானுக்குக் கைங்கர்யங்கள் செய்கின்றான். அதற்கு எம்பெருமானது உகப்பன்றி வேறு பயன் இல்லை. இவ்வாறே ப்ரபந்நன் இங்கு இருக்கும் நாள் வரை செய்யும் இந்த இருவகைக் கைங்கர்யங்களுக்கும் எம்பெருமானது உகப்பன்றி வேறு எப்பயனையும் கருதமாட்டான். செய்யும் கைங்கர்யங்களுக்குப் பலன் அக்கைங்கர்யங்களே என்று கருதிச் செய்கின்றான். செய்யும்போது அக்கைங்கர்யங்கள் மிக்க இன்பத்தைப் பயக்கும்.

**13.** கரண - அகரண ரூபங்களான அபசாரங்கள் புகுந்தாலும் ப்ரபந்நனுக்கு நரகாதிகள் இல்லை.

பக்தியோகம் செய்பவன் ப்ரபத்தியை அதற்கு அங்கமாகச் செய்கின்றான். இது அங்கப்ரபத்தியெனப்படும். மற்றொருவன் ப்ரபத்தியையே மோக்ஷத்துக்கு நேர்ச் சாதனமாகக் கொண்டு அதைச் செய்கின்றான். இது ஸ்வதந்த்ர ப்ரபத்தியெனப்படும். இருவருக்கும் ஒவ்வொரு வகையில் எம்பெருமானிடம் செய்யும் இந்த ப்ரபத்தியே கைம்முதலாகும். இதை அங்கமாகவோ ஸ்வதந்த்ரமாகவோ செய்பவன் மோக்ஷம் தவிர வேறு பயனையோ எம்பெருமானையன்றி மற்றொரு தெய்வத்தையோ நாடாதவனாதலின் பரமைகாந்தியெனப்படுகின்றான்.

இத்தகைய சேதநனும் சில ஸமயங்களில் தவறென அறிந்தே

எம்பெருமான் கட்டளையை மீறும்படி நேரிடுகின்றது. பழைய கர்மம் மிக்க வலிமையுடையதாயிருந்து பலன் கொடுக்கத் தொடங்கிவிட்டதால் இவனுக்கு இந்த நிலை வருகின்றது. ஆதலால் செய்யத் தகாத செயலைச் செய்யும்படியும் செய்ய வேண்டியதைச் செய்யாமலிருக்கவும் நேர்ந்து விடுகின்றது. இது அவன் கட்டளையை மீறியதாகத் தானே ஆகும்!

மிகப் பெரியோர்களான சில மஹர்ஷிகள் தர்ம விரோதமான சில செயல்களைச் செய்ததையும் அவர்களுடைய பெருமையால் அக்குற்றங்கள் அவர்களை ஒரு தீங்கும் செய்ய முடியாததையும் கண்டுள்ளோம். அதைப் பார்த்துத் தாழ்ந்தவர்களான நாமும் துணிந்து தர்மத்தை மீற முடியுமா? மீறினால் நாம் துன்பமடைய வேண்டியதுதான். மேலும் அவ்வாறு தர்மத்தை மீறி நடந்த மிகப் பெரியோர்களுக்கும் அவர்களின் தவறான செய்கைகளால் அவர்கள் ஈட்டிய புண்ணியம் அழிந்துவிடுதல் முதலிய தீங்குகளைச் சாஸ்த்ரம் கூறுகின்றது. ஆகவே ப்ரபந்நன் தெரிந்து கொண்டே தகாத செயல்களைச் செய்தால் நிச்சயமாகத் தோஷம் உண்டு. ஆனால் அவனுக்கு நரகம் முதலிய பெரிய கஷ்டம் எதுவும் வராது. ப்ரபத்தியைச் செய்தவனுக்கு எவ்வகையிலும் நரகம் முதலிய பெரிய கஷ்டங்கள் வரமாட்டா என்று ப்ரமாணங்கள் கூறுகின்றன. ஆயினும் அக்குற்றம் நீங்கத் தன் தகுதிக்கு ஏற்ற முறையில் சில காரியங்களைச் செய்தாக வேண்டும். அநியாயமாய்ப் பாபத்தைச் செய்துவிட்டேனே என்று பச்சாத்தாபம் கொள்ள வேண்டும். அப்படி இல்லையேல் ஏதாவது தண்டனை நேரும். ஏதாவது ஒரு வழியில் பாபங்கள் சரீரம் கழிவதற்கு முன்பே ஒழிந்துபோம்.

**14.** *ராஜகுமாரனுக்கும் அவதாநம் பண்ணி நடக்க வேண்டுமாபோலே லகு ப்ரத்யவாயமும் வாராமைக்காக அபசாரங்கள் தூர பரிஹரணீயங்கள்.*

ப்ரபத்தியைச் செய்தவன் எம்பெருமானுக்கு மிகவும் அந்தரங்கனாகி விடுகின்றான். ஆனாலும் ப்ரபந்நன் தனக்குச் சிறு பாபமும் அணுகாதவாறு கவனத்துடன் நடந்துதான் ஆக வேண்டும். எம்பெருமான் ஸர்வவித பந்து என்பதும் ப்ரபந்நனைத் தன் புத்திரன் முதலிய உறவினரைப் போலே கருதி அவனிடம் பக்ஷபாதம் கொண்டு ரக்ஷிக்கக் கடமைப்பட்டுள்ளானென்பதும் உண்மையே. உலகில் அரச குமாரனாயிருந்தாலும் அவன் தனக்குச்

சிறுபிழையும் நேராதவாறு மிக்க கவனத்துடன் நடக்க வேண்டாமா? அவன் சிறுபிழை செய்தாலும் நீதிக்குக் கட்டுப் பட்ட அவன் தந்தை அவனைத் தண்டித்தே விடுவான்.

அவ்வாறே ப்ரபந்நனுக்குப் பாபங்கள் நேர்ந்தால் நரகம் இல்லையேயாயினும் அந்தப் பாபங்கள் நீங்குகைக்குச் சில கஷ்டங்கள் அந்தப் பாபங்களுக்குப் பலனாய் வருகின்றனவென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றனவே! ஆகவே ப்ரபந்நன் தெரிந்தே சில பாபங்களைச் .செய்ய நேர்ந்தால் அதற்கு வருந்த வேண்டும். அந்தப் பாபங்கள் நீங்க ப்ராயச்சித்தமாய் அசக்தன் ப்ரபத்தியையும் சக்தன் அததற்கு வகுத்த முக்யப் ப்ராயச்சித்தத்தையும் செய்ய வேண்டும். அதைச் செய்யாவிடில் எம்பெருமானுக்குச் சீற்றம் உண்டாகி அதனால் இவ்வுலகிலேயே சில தண்டனைகள் வரும்.

இத்தகைய நிலை வராதிருப்பதற்கு அவன் மிக்க கவனத்துடன் நடக்க வேண்டும். அதற்கு ஒரு வழியைச் சாஸ்த்ரமே கூறுகின்றது. அதாவது - உலகில் மனிதன் தன் உறுப்புக்களில் நான்கை அடக்காமலிருப்பதே பாபம் செய்யக் காரணமாகின்றது. அவை - (1) சிற்றின்பத்தை நாடும் உறுப்பு (2) வயிறு (3) கை (4) வாக்கு ஆகியவை. முதல் உறுப்பைத் தவறான வழியில் செல்லாதவாறு அடக்க வேண்டும். பின் அதனால் வரும் தீய விளைவுகளை நினைத்துப் பார்த்தால் கட்டுப்படுத்தி விடலாம். இரண்டாவது வயிறு. இதை நிரப்பப் பல தகாத உணவுகள் கொள்ளப்படுகின்றன. ஸாத்த்விகமான உணவைக் கொண்டும் வயிற்றை நிரப்பலாமே! இதற்கு உறுதி வேண்டும். நாவின் சபலத்தைக் குறைக்க வேண்டும். மூன்றாவது கை. இது திருடுதல் பிறரை அடித்தல் முதலிய தீய செயல்களைச் செய்யவே முற்படுகின்றது. இதையும் அடக்க வேண்டும். நான்காவது வாய். இது படுத்தும் பாட்டுக்கு எல்லையில்லை. வாயை அடக்கிக் கொண்டால் மனிதனுக்கு எந்தக் கஷ்டமும் வராது. இந்த நான்கையும் கட்டுப்படுத்திக் காத்து மிக்க கவனத்துடன் நடந்து கொள்ள வேண்டும். மேலே வரப்போகிற மோக்ஷமென்னும் பேரின்பத்தை எதிர்பார்த்துக் கொண்டே எப்பொழுதும் கூடியவரை பாபங்களை அணுக விடாமல் நடந்து கொள்ள வேண்டும்.

இங்கே ஒரு கேள்வி எழலாம் - ப்ராசீநமான சுலோகம் ஒன்று

உள்ளது. அது எம்பெருமானை நோக்கி அறிஞர் ஒருவர் சொல்லும் சுலோகம். அதன் கருத்து - "பிராட்டியைப் பிரியாத எம்பெருமானே! செய்ய வேண்டிய கடமையிலும் செய்யக் கூடாத செயலிலும் என் அறிவுக்கும் சக்திக்கும் ஏற்றவாறு பொறுப்பு முழுவதையும் உன்னிடம் ஸமர்ப்பித்து விட்டு அரசகுமாரனைப் போல் கவலையற்றிருக்கிறேன்" என்பதாகும். இதனின்று செய்தல் - செய்யாது விடுதல் இரண்டிலும் சேதநனுக்குப் பொறுப்பு ஏதுமில்லையென்றும் எல்லாம் எம்பெருமான் பொறுப்பே என்றும் ஏற்படுகின்றதே! இங்குக் கீழே மிக்க கவனத்துடன் நடக்க வேண்டுமென்று கூறியதில் எல்லாம் நம் பொறுப்பாகவன்றோ தோன்றுகின்றன? என்று. இதற்கு ஸமாதாநம் வருமாறு - இந்தச் சுலோகத்திற்கு உண்மைக் கருத்து வேறு. சாஸ்த்ரம் விதித்த அவசியமான காரியங்களைச் செய்யும் செயல் ஒன்று. சாஸ்த்ரம் செய்யக் கூடாதென்று மறுத்த செயலைச் செய்யாது விடுதல் ஒன்று. இவற்றை என் அறிவுக்கும் சக்திக்கும் எட்டுமளவுக்கு நடத்துகின்றேன். ஆனால் யான் மோக்ஷத்துக்காக ப்ரபத்தியை முன்பே செய்துவிட்டவனாதலின் இவற்றை மோக்ஷத்துக்குச் சாதனமென்ற கருத்துடன் நடத்த மாட்டேன். இவ்வாறே இவற்றை நடத்தாமல் சாஸ்த்ரத்தை மீறி நடந்தால் அதனால் பெரும்பயனாகிய மோக்ஷத்துக்குத் தடை வருமென்றும் நினைக்க மாட்டேன். எம்பெருமானது உகப்பையே பலனாகக் கொண்டு செய்கின்றேன் என்பதுவே அந்தச் சுலோகத்தின் கருத்தாகும்.

**15.** ***ப்ரபத்திக்குக் கோரின பலத்துக்கு ஒன்றாலும் ப்ரதிபந்தமில்லை.***

எம்பெருமான் எதையும் செய்யச் சக்தியுடையன்; அளவற்ற கருணையுடையன். அவன் திருவடிகளில் ஒரு பலனுக்காகச் சேதநன் ப்ரபத்தியைச் செய்கின்றான். அவன் எந்தக் காலத்தில் எந்தப் பலன் வேண்டுமென்று விரும்பினாலும் அந்தக் காலத்தில் அந்தப் பலன் கிடைத்துவிடுவது நிச்சயம். ஆனால் மோக்ஷத்தை விரும்புமவன் ப்ரபத்திக்குப்பின் இங்கு இருக்கும் நாள்களில் புத்திபூர்வமாய் எதாவது பாபம் செய்திருக்கக் கூடும். வேறு பலனுக்காகச் சில காம்ய கர்மங்களையும் செய்திருக்கக் கூடும். ஆனால் அவற்றாலெல்லாம் அவன் கேட்டிருந்த மோக்ஷமாகிய பலனுக்குத் தடை வராது. ஏனென்றால் அவன் தகுதிக்கு ஏற்ற ப்ராயச்சித்தங்களைச் செய்துவிட்டால் அந்தப் பாபம் தீர்ந்துவிடும்.

அவற்றைச் செய்யாத முரடனாயிருந்தாலும் அவனுக்கு எதாவது தண்டனையை எம்பெருமான் கொடுத்துத் தூயனாக்கி விடுவான் ஆதலின் முக்கிய பலனுக்குத் தடை ஒன்றுமில்லை.

இதற்குப் பல காரணங்கள் உண்டு. அவையாவன -

(1) ரக்ஷகனான எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பார்த்தால் எத்தகைய பாபியாயினும் அவனைச் சரணமடைந்து விட்டால் காத்தே தீருவானென்று நிச்சயமாய் ஏற்படுகின்றது. இராமாவதாரத்திலும் கிருஷ்ணாவதாரத்திலும் அவ்வாறே சொல்லியுள்ளானே!

(2) எல்லாத் தவங்களினும் மேம்பட்ட தவம் ப்ரபத்தி என்று அதன் பெருமையை எல்லையற்றதாகச் சாஸ்த்ரம் கூறுகின்றது.

(3) கீதையே ஸாதாரணமாய்ப் பலனில் பற்றின்றிச் செய்யும் தர்மங்களைப் பற்றிக் கூறும்போது இந்தத் தர்மத்தைத் தொடங்கி நடுவே விட்டுவிட நேர்ந்துவிட்டாலும் இந்தத் தர்மம் வீணாவதில்லை. நடுவில் விட்டுவிட்டதால் பாபமும் இல்லை. சிறிது அளவே செய்து நிறுத்தி விட்டாலும் பெரிய ஆபத்தினின்று காத்துவிடும் என்று முடிவு செய்துள்ளது.

பயனில் பற்றின்றிச் செய்யும் ஸாதாரண தர்மத்துக்கே இந்த முடிவு கட்டியிருக்கும்போது வேறு பயனை நாடாது மோக்ஷத்துக்காகவே செய்யும் ப்ரபத்தி வீணாகதென்பதைக் கூறவும் வேண்டுமோ! என்ற முறையில் ப்ரபத்தியின் பெருமை கூறப்படுகின்றது.

(4) சாஸ்த்ரத்தில் வேறு பலனுக்காக விதித்த காம்ய கர்மங்களையும் சாஸ்த்ரம் விலக்கிய செயல்களையும் செய்தால் இவனுக்கு உள்ள நல்ல நிலை தொலைந்து போய்விடும் என்று ஒரு ப்ரமாணம் இருக்கின்றது. இதனால் மோக்ஷத்திற்குத் தடை வந்து விடுமோ என்று அஞ்ச வேண்டாம். காம்ய கர்மங்களையும் பாபங்களையும் செய்யாது கைவிட்டு ப்ரபத்தியாகிய நடுநிலையில் இருக்க வேண்டுமென்று சாஸ்த்ரம் கூறியிருப்பதில் அவற்றை விட்டுவிடுவதென்கிற விசேஷண அம்சத்துக்கு மட்டும் குறைவு வருமேயன்றி ப்ரபத்தியாகிய அந்த நடுநிலைக்கு ஒன்றும் கேடு இல்லையாதலால் மோக்ஷத்துக்கு இடர் ஏதும் இல்லை.

(5) இலங்கையில் அனுமானை ப்ரஹ்மாஸ்த்ரத்தால் அரக்கர் கட்டியபின் அதில் ஸந்தேஹம் வந்து மற்றும் சில கயிறுகளைப் போட்

டுக் கட்டியபோது அரக்கர்களின் நம்பிக்கைக் குறைவால் ப்ரஹ்மாஸ்த்ரம் வீணானதுபோல் ப்ரபத்தியில் நம்பிக்கை குறைந்தால் ப்ரபத்தியும் வீணாகிவிடும் என்று ஒரு வாக்யம் இருக்கின்றது. ஆதலால் நம்பிக்கை குறைந்தால் பலன் கிட்டாமல் போய்விடுமோ என்று சங்கை உதிக்கலாம். அதற்கும் இடமில்லை. ஏனெனில், இந்த வாக்கியம் ப்ரபத்தி செய்யும் காலத்திலேயே நம்பிக்கைக் குறைவு எதாவது வந்தால் மஹாவிச்வாஸம் என்னும் அங்கம் குலைந்துவிடுவதாக ஆகுமாதலால் பலன் தராது போகும் என்ற கருத்தை மட்டும் கொண்டதென்று அறிக.

(6) யாகம் செய்பவன் பொய் கூறினால் யாகத்தின் சக்தி குறையும். தவம் புரிபவன் கர்வமடைந்தால் தவம் ஒழிந்துபோம். அந்தணனை அவமதித்தால் ஆயுஸ் குறைந்துபோம். தான் செய்த தானத்தைத் தானே டம்பமாய் வெளியிட்டுக் கொண்டால் அதன் பலன் இல்லாமற்போகும். இப்படி ஒவ்வொன்றுக்கு ஒவ்வொன்றால் தடையைச் சாஸ்த்ரம் கூறுகின்றது. அவ்வாறு ப்ரபத்திக்குப் பலன் இல்லாது போவதற்குக் குறிப்பிட்டுக் கூறும் விசேஷ வாக்யம் எதுவும் இல்லை.

(7) உலகிலோ வேதத்திலோ சக்தியையும் கருணையையும் உடைய ஒருவனிடம் சரணமடைந்து அந்த ப்ரபத்தி பலன் இல்லாமற் போனதைக் கண்டதில்லை.

(8) ஸ்ரீ பரதாழ்வான் இராமபிரானைத் தானே வனத்திற்குத் துரத்தியதாய் உலகப் பழிச்சொல் வருமென்று அஞ்சினான். சித்ரகூடம் சென்று பர்ணசாலையின் வாயிலில் படுகாடு கிடந்து தலைவணங்கி நகருக்குத் திரும்புமாறு வேண்டினான். இதைக்கொண்டே பரதாழ்வான் ப்ரபத்தி செய்ததாகக் கூறினாலும் அதற்காக இராமபிரான் தன் பாதுகைகளைக் கொடுத்து அரசாளச் செய்து அவனுக்கு வந்த அபவாதத்தைத் தீர்த்து வைத்தது உடனே கிடைத்த பலனாகும். நகருக்குத் திரும்புமாறு வேண்டிச் செய்த ப்ரபத்திக்கு இராமபிரான் உடனே முழுப் பலனையும் கொடுக்க முடியவில்லை. ஏனெனில், இராவண வதத்துக்காக முன்பே தேவர்கள் செய்த சரணாகதிக்கும் பலன் கொடுத்தாக வேண்டுமே! இராவணனைக் கொன்று தேவர்களின் ப்ரபத்திக்குப் பலன் அளித்தபின் நகருக்குத் திரும்பி முடி சூடிப் பரதனது சரணாகதிக்கு முழுப் பலனையும் அளித்தருளினான். ஆகவே சரணாகதிக்கு அவரவர் விருப்பத்தின்படி உரிய காலத்தில் பலன் வராமற்

போகாதென்று தெளிவாகின்றது.

(9) எம்பெருமானைச் சரணமடைந்துவிட்டால் அப்பொழுதே விரும்பிய பலனைப் பெறலாமென்று ப்ரமாணம் கூறுகின்றது.

இத்தகைய பல காரணங்களால் ப்ரபத்தி செய்தவனுக்கு அவன் விரும்பும் பலனுக்கு எதனாலும் தடை வராதென்று அறிக.

**16. புத்திபூர்வ அபசாரங்கள் புகுந்தாலும் ப்ராயச்சித்த விசேஷம் அதிகாரி விசேஷ நியதம்.**

புத்தி பூர்வமாய்ப் பாபம் செய்தவர்கள் தர்ம சாஸ்த்ரத்தை அறிந்த பண்டிதனிடம் வந்து தங்கள் பாபங்களுக்குப் பிராயச்சித்தம் விதிக்கும்படி வேண்டினால் தர்மத்தை அறிந்த அவன் அவரவர்களுக்கு உள்ள பல அம்சங்களைச் சிந்தித்துப் பார்த்து அவ்வவற்றுக்குத் தக்கவாறு பிராயச்சித்தம் கூற வேண்டும். அதாவது - அவர்களின் உடல் நிலை - சக்தி - செல்வநிலை - வயது - சூழ்நிலை - அவன் செய்த பாபத்தின் அளவு ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து பார்த்துப் பிராயச்சித்தம் கூற வேண்டும்.

பலர் ஒரே வகையான பாபங்களைச் செய்தாலும் அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு பிராயச்சித்தம் பல்வகைப்படும். ப்ரபத்தி செய்தவன் - செய்யாதவன், அந்தணர் முதலிய ஜாதிகள், ப்ரஹ்மசர்யம் - இல்லறம் முதலிய ஆச்ரமங்கள், வாலிபம் - முதுமை முதலிய பருவங்கள், சக்தியுடைமை - இல்லாமை முதலிய நிலைகள் - இவற்றுக்கெல்லாம் தக்கவாறு பிராயச்சித்தங்கள் வேறுபடும். ப்ரபத்தி செய்தவன் பாபம் செய்தால் அதற்குப் பிராயச்சித்தமும் கடினம் - எளிது என்று இரண்டு வகைப்படும். அவ்வாறே ப்ரபத்தி செய்யாதவனுக்கும் பிராயச்சித்தம் கடினம் எளியது என்று இரண்டு வகை. இவை முறையே, ப்ரதிபதோக்தம், ப்ரபத்தி என்று வழங்கும். அந்தணன் செய்யும் பாபத்துக்குப் பிராயச்சித்தம் கடினமாயிருக்கும். மற்ற வகுப்பினருக்கு எளியதாய் விதிக்கப்பட்டுள்ளது. ப்ரஹ்மசாரியும் கிருஹஸ்தனும் செய்யும் ஒரே வகை பாபத்துக்குப் பிராயச்சித்தம் வேறுபடுகின்றது. வாலிபனுக்கு விதித்துள்ள கொடிய பிராயச்சித்தத்தைக் கிழவன் செய்ய முடியுமா? ஒருவனுக்கே சக்தி உள்ளபோது கடின பிராயச்சித்தம்; சக்தியற்றிருக்கும் நிலையில் சிறு பிராயச்சித்தம். இவ்வாறு பிராயச்சித்தம் வேறுபாடுகின்றது.

ப்ரபத்தி செய்தவன் புத்தி பூர்வமாய்ப் பாபங்களைச் செய்ய நேரிட்டால் அவன் கடினமான பிராயச்சித்தத்தைச் செய்யச் சக்தியற்றவனாயின் அதற்குப் பிராயச்சித்தமாகப் பிரபத்தியையே செய்யுமாறு குறிப்பிட்டுச் சாஸ்த்ரம் விதிக்கின்றது. மேலும் ஸுக்ரீவன் இராமபிரானுக்குச் செய்த பிழைக்கு இளையபெருமாளைத் திருவடி தொழுது தன் பிழை பொறுக்குமாறு வேண்டுகின்றான். இவ்வாறே உயர்ந்த ஸம்ப்ரதாயத்தில் ஊறிய முன்னோர்களும் பாபத்துக்கு எதாவது பிராயச்சித்தம் செய்து வந்ததாய்ப் பழய அநுஷ்டாநத்தாலும் தெரிகின்றது.

மேலும் ப்ரபந்நனும் புத்திபூர்வமாய்ப் பாபங்கள் செய்ய நேர்ந்தால் அவற்றைப் போக்கக் க்ருச்ச்ரம் - சாந்த்ராயணம் முதலிய கடினமான ப்ராயச்சித்தங்கள் விதிக்கப்பட்டிருப்பது உண்மையே. ஆனால் அவற்றைச் செய்யச் சக்தியில்லாதபோது ப்ரபத்தியையே பிராயச்சித்தமாகச் செய்யும் படியும் சாஸ்த்ரமே விதித்துள்ளது. இப்படி ப்ரபத்தியை எல்லோருக்கும் எல்லா இடத்திலும் எல்லாப் பலனையும் தரும் பெருமையுடையதாய்ச் சாஸ்த்ரங்கள் கூறுவதால் மோக்ஷத்துக்காக ப்ரபத்தியைச் செய்தவனும் புத்தி பூர்வமாக நேர்ந்த பாபங்களைப் போக்க ப்ரபத்திக்கு லக்ஷணம் கூறிய வாக்யத்தின்படி ப்ரபத்தியைச் செய்வதே தன் தகுதிக்கு ஏற்பட்ட பிராயச்சித்தமெனத் தீர்ந்தது.

இங்கு ஒரு கேள்வி எழுகின்றது - சிலர் கூறுகின்றனர் - எம்பெருமானிடம் ஈடுபட்டு ப்ரபத்தியைச் செய்தவனுக்குச் சில பாபங்கள் நேரலாம். அதாவது - செய்யத்தகாத காரியத்தைச் செய்யவும் செய்ய வேண்டியதைச் செய்யாதிருக்கவும் நேரிடலாம். ஆனால் இவன் ப்ரபந்நனாகி விட்டபடியால் இவற்றாலெல்லாம் இவனுக்குப் பாபம் உண்டாகாது. மேலும் ப்ரபத்திக்குப் பிறகு ஒருவன் பாபம் செய்தால் அது அவனிடம் ஒட்டாது என்றும் வசநம் இருக்கின்றதே! இங்ஙன் இருக்க இவன் பிராயச்சித்தமாக ஒரு ப்ரபத்தியை எதற்காகச் செய்ய வேண்டும்? என்று.

இதற்கு ஸமாதாநம் - (1) பாபம் உண்டாகாது என்ற சொல் ப்ரபத்தியின் பெருமையைக் காட்டுவதற்காகச் சற்று மிகைப்படுத்திப் புகழ்ந்ததாகும். (2) பாபம் ஒட்டாது என்னும் வாக்யம் ப்ரபத்திக்குப் பின் அறியாமல் நேருகின்ற பாபம் இவனிடம் ஒட்டாது என்றே கருத்துக் கொண்டதாகும். இந்த அம்சத்தை ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸூக்திகளில் பூர்வாசார்யர்கள்

நிலை நாட்டியுள்ளனர்.

**17. இப்படி ப்ராயச்சித்தத்திலே மூட்டுகிறதும் கடிந ப்ரக்ருதிகளுக்குக் கசை காட்டுவாரைப்போலே அவன் பண்ணுகிற சிக்ஷைகளுமெல்லாம் சரண்ய ப்ரஸாத பலம்.**

எல்லாத் தேவர்களுக்கும் பொதுவான நீதி ஒன்று உண்டு. அதாவது - தேவர்கள் சிலரைக் காக்க நினைத்தால் அவர்களுக்கு நல்லறிவைக் கொடுப்பர். அதனால் அவர்கள் திருந்துவர் என்பது. இச்செயல் எல்லாத் தேவர்களும் செய்யும் செயலாகும். எம்பெருமானைப் பற்றி ஒரு விசேஷ நீதி உண்டு. அதாவது - எம்பெருமான் தன் பக்தர்களைத் தன் சரீரத்தைக் காப்பது போல் காக்கின்றான் என்பது. இந்த இரண்டு நீதிகளையும் தழுவி எம்பெருமான் தன்னைச் சரணமடைந்தவர்களுக்குச் செய்யும் செயலெல்லாம் அவனது அநுக்ரஹத்தால் வரும் பலனாகும்.

ப்ரபத்தி செய்த சிலர் ப்ரபத்திக்குப் பிறகு புத்தி பூர்வமாய்ச் செய்த பாபங்களுக்காக அவர்களைப் பிராயச்சித்தத்திலே மூட்டுகின்றான். உலகில் தம் புதல்வர்களின் நன்மையை விரும்பித் தந்தைமார் முதலியவர்கள் அவர்களைத் திருத்தி நல்வழிப்படுத்துவதில்லையா? அவ்வாறே ப்ரபந்நரான தன் அடியார்களைத் தாங்கள் செய்த பாபத்தை நினைத்துப் பச்சாத்தாபமடையச் செய்கின்றான் எம்பெருமான். பின்னும் அத்தகைய பாபத்தைச் செய்யாது கைவிடச் செய்கின்றான். செய்த பாபத்துக்கு அதற்கு ஏற்ற ப்ராயச்சித்தம் இருப்பதைச் சாஸ்த்ரத்தைக் கொண்டு அறியச் செய்து பிராயச்சித்தம் செய்ய முற்படுமாறு செய்கின்றான். பின் பிராயச்சித்தத்தைத் தலைகட்டி வைத்துத் தூயராக்குகின்றான். இது ஒரு முறை. இது நற்பண்புடைய அடியார்களைத் திருத்தும் முறை.

மற்றொரு முறை உண்டு - ப்ரபத்தி செய்தவர்களிலேயே சில முரடர்கள் உண்டு. இவர்கள் ப்ரபத்திக்குப் பின் சில பாபங்களைத் தெரிந்தே செய்வார்கள். இவர்கள் விஷயத்தில் எம்பெருமான் கையாளும் முறை வேறு. உலகில் தந்தைமார் தம்மிடம் அடங்காத முரட்டுப் பிள்ளைகளைச் சாட்டையால் அடிப்பதாக அச்சமுறுத்தித் திருத்துவதுண்டு. இதுவும் அவர்களை நல்வழிக்குக் கொண்டுவரும் நல்லெண்ணத்தாலேயேயன்றே! அவ்வாறே சில அடியார்கள் ப்ரபத்திக்குப் பின் தெரிந்து பாபத்தைச் செய்து அதற்கு மனம் வருந்தாமலும் பிராயச்சித்தம் செய்யாமலும் இருப்பதுண்டு.

அவர்களுக்கு இவ்வுலகிலேயே சில கஷ்டங்களைக் கொடுத்து அநுபவிக்கச் செய்கின்றான் எம்பெருமான். அவ்வநுபவத்தால் அவர்களின் பாபங்கள் கழிந்து விடும். பின்னும் பாபங்களைத் துணிந்து செய்ய மாட்டார்கள்.

இவ்வாறு இரண்டு வகையில் அவர்களைத் திருத்துவதெல்லாம் எல்லாப் பிராணிகளிடமும் இயற்கையில் நல்லெண்ணங் கொண்ட ஸர்வலோக ரக்ஷகனான எம்பெருமான் தங்களிடம் கொண்டுள்ள கருணையால் விளைவனவென்று உணர்ந்து அவனிடம் மிக்க நன்றியுடையராயிருக்க வேண்டும்.

**18.** *இங்கு இருந்த காலம் தர்மாநுபந்தியான போகத்திலும் போகபுத்தியாலே ப்ராவண்யம் பிறந்ததாகில் இது தன் அதிகார அநுரூபமான கைங்கர்ய அம்ருத ரஸத்துக்குத் தண்ணீர்த் துரும்பு.*

மனிதனுக்குச் சில நற்குணங்கள் முக்கியமானவை. ஆசையற்ற உள்ளம் - பொய்யற்ற பேச்சு - பிறரைத் துன்புறுத்தாத சரீரம் இவை மூன்றும் ஒருவனிடம் அமையுமாயின் இவையே எம்பெருமானுக்கு ஆராதநவடிவமாகும் என்று சாஸ்த்ரம் கூறும். புத்திரன் - மனைவி - வீடு முதலியவற்றில் அளவுக்கு அதிகமான பற்றுக் கூடாதென்றும் சாஸ்த்ரம் கூறுகின்றது. இத்துணைக் குணங்களுடன் இருப்பினும் இல்லறத்தில் இருப்பவனுக்கு இவ்வுலகில் சில போகங்கள் வரக்கூடும். அவை தர்மத்துக்கு முரண்படாதனவாயிருப்பின் அவற்றை க்ருஹஸ்தன் அநுபவிக்கலாமென்று சாஸ்த்ரமே வலியுறுத்திக் கூறுகின்றது.

ஆனால் மோக்ஷத்தை விரும்புமவன் அப்போகங்களை அநுபவிக்கும்போது அவற்றில் போக்யமென்ற புத்தியுடன் (அதாவது இனியவை என்ற மகிழ்ச்சியுடன்) ஈடுபட்டுவிடக் கூடாது. ப்ரமாணம் கூறுவதாவது - தன் சரீரத்தை ஒரு புண்ணாகவும், உணவு உண்பதைப் புண்ணுக்குப் பூசும் மருந்தாகவும், நீர் பருகுதலைப் புண்ணுக்குத் திராவகம் விடுவதாகவும், ஆடை உடுத்தலைப் புண்ணுக்குக் கட்டுப்போடுவதாகவும் கருத வேண்டும் என்று. இத்தகைய எண்ணத்துடனேயே போகங்களை அநுபவிக்க வேண்டும். வைராக்யமும் ஜ்ஞாநமும் பக்தியும் வளருவதற்குச் சாதனமாக எதோ மருந்து உண்பது போல அந்தப் போகங்களை அநுபவிப்பதே மோக்ஷத்தையே விரும்பி நிற்கும் ப்ரபந்நனுக்குக் கடமையாகும்.

இவ்வாறன்றிச் சில சேதநருக்கு இந்நிலை மாறிவிடக்கூடும். அநாதியாகக் கெட்ட பழக்கமே வந்து அதுவே விசேஷமாய் முதிர்ச்சி பெற்றுவிட்டதால் இவர்களுடைய புத்தியைக் கலக்கி விடும். மோக்ஷத்திலன்றி மற்ற பலனிலே ஈடுபட்டவன் வழி தவறி நடப்பது போல இவனும் நடக்க முற்பட்டு உலக சுகங்களிலேயே மிகவும் ஈடுபட்டுவிடவும் கூடும். இதனால் முக்கிய பலனாகிய மோக்ஷத்துக்குத் தடை ஏதுமில்லை. ஆனால் அந்த ஈடுபாடு இவ்வுலகில் இப்பொழுது செய்யும் கைங்கர்யங்களைக் குறைத்து விடும். அந்த அமுத இன்பத்தை அவன் இழக்கத் தானே நேரும்! அது தீர்த்தத்தைப் பருகுமவனுக்கு அதில் உள்ள துரும்பு சற்றுத் தடை செய்வது போலாகும். ஆதலால் உலகவின்பங்களுக்கு அஞ்சி நடக்க வேண்டியதுவே ப்ரபந்நனுக்குக் கடமையாகின்றது.

சில போகங்கள் ப்ரபந்நனுடைய கர்மத்துக்குப் பலனாய் விலக்க முடியாதனவாய் வருகின்றன. அவற்றை அநுபவிக்காமல் விலக்க முடியாது. ஆனால் மோக்ஷத்தில் விருப்பத்தைக் கூட விலக்கும்படியான சில போகங்கள் வரும். மனவுறுதியிருப்பின் அவற்றை விலக்க முடியும். அங்ஙனம் செய்யாது அவற்றில் மிக ஈடுபட்டவர்க்கு ஸர்வேச்வரன் அணுக முடியாதவன் என்று ப்ரமாணம் கூறும். சிலருக்கு மோக்ஷம் ஸ்வர்க்கம் ஆகிய இரண்டிலும் ஆசை வருவதுண்டு. அவர்கள் அதற்குத் தக நடந்து கொண்டால் மோக்ஷம் பெறுவது நீண்ட காலம் கழித்தேயாகும்.

உண்மையில் ப்ரபந்நன் இருக்க வேண்டிய நிலை யாது? - தன்னைக் காப்பதற்குத் தன்னாலும் பிறராலும் முடியா தென்பதையும் காக்கக் கடமையும் இல்லையென்பதையும் உணர வேண்டும். உலகிலுள்ள வஸ்துக்கள் எல்லாம் எம்பெருமானது பயனுக்காகவே ஏற்பட்டனவல்லவென்றும் தனக்காகவோ பிறருக்காகவோ ஏற்பட்டனவல்லவென்றும் கருத வேண்டும் வேறு பயனை அநுபவிக்க முற்படாமல் குற்றமற்றவனாயிருக்க வேண்டும். தான் அநுபவிக்கும் போகங்களையெல்லாம் எம் பெருமானுடைய போகத்திற்கு வசப்பட்டனவாய்க் கருத வேண்டும்.

**19. இப்படி நிஷித்த போக ப்ராவண்யம் கைங்கர்ய அம்ருதரஸ விருத்த மாகையாலே விஷம் போலே தூரபரிஹரணீயம்.**

ப்ரபத்தியைச் செய்துவிட்டு மோக்ஷத்தை எதிர்

பார்த்திருப்பவன் ஸத்துவ குணத்தில் நிலை பெற்றிருக்க வேண்டும். எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகக்காத விஷயங்களைப் புறக்கணித்து விட வேண்டும். இங்ஙனம் இருத்தல் அவனது கடமையாகும். ஆயினும் இது முடிகின்றதா? ஸம்ஸார மண்டலத்தில் உள்ள இவனுக்குச் சாஸ்த்ரங்களில் விலக்கிய போகங்களில் கூட ஈடுபாடு வந்து விடுகின்றதே! என்ன செய்து? உலகில் சொப்பனம் முதலிய நிலைகளில் எல்லோருக்குமே ஒரொரு ஸமயங்களில் தகாத செயல்களைச் செய்ய நேரிடுவதில்லையா? இது மட்டுமா? மிக்க கவனத்துடன் நடந்து கொள்ளும் முனிவர்கள் கூடச் சில ஸமயங்களில் தவறி நடக்க நேரவில்லையா? அவர்கள் புரியும் தவத்தைத் தங்கள் பதவிகளைக் கவர்வதற்காகச் செய்வதாக எண்ணி இந்திரன் முதலிய தேவர்கள் அப்ஸரஸ்ஸுக்களை அனுப்பி அவர்களை மயக்க, அவர்களும் அதில் அகப்பட்டுத் திண்டாடியதாகப் புராணங்களில் கேட்டிருக்கின்றோமே! புலன்களை வென்ற முனிவர்களின் நிலையே இங்ஙன் இருக்க, ப்ரபந்நர்களில் முதிராத நிலையுடையனுக்குக் கேட்க வேண்டுமோ!

அத்தகையனுக்குச சாஸ்த்ரம் மறுத்த போகங்களில் ஈடுபாடு வந்துவிடக்கூடும். அப்படி வந்தால் இவன் கதி என்ன? எதாவது பிராயச்சித்தத்தைச் செய்து தூய்மை பெற வேண்டும். முக்கியமான பிராயச்சித்தம் செய்ய முடியாதவன் அந்தச் சரணாகதியையே பிராயச்சித்தமாகச் செய்து விடலாம். பிராயச்சித்தம் செய்யாத முரடனாயிருந்தால் அவனுக்கு இவ்வுலகிலேயே ஈச்வரன் சில தண்டனைகளைக் கொடுத்து விடுகின்றான். இவனுடைய தவற்றுக்குத் தண்டனைகளைப் பெறுவதுடன் நிற்பதில்லை. வேறு ஒரு குறையும் இவனுக்கு ஏற்படுகின்றது. இங்கு இருக்கும் நான் இவன் செய்யும் கைங்கர்யமாகிய அநுபவத்துக்குத் தகுதியில்லாமல் போய்விடுகின்றது. இது ஒரு பெரிய நஷ்டமன்றோ!

ஸம்ஸாரத்திலேயே உழன்று கொண்டு, தான் இருந்தும் இல்லாதவன் போலிருக்கும் இச்சேதநன் உஜ்ஜீவிப்பதற்கு இங்குச் செய்யும் கைங்கர்யம் சாதனமாகவன்றோ உள்ளது! மேலும் அது பெரிய ஸுகாநுபவமாகவுமன்றோ உள்ளது! கைங்கர்யத்தைச் செய்யும் போதே அமுதத்தைப் பருகுவது போல் இருக்குமே! பாவம் செய்த ப்ரபந்நனுக்கு இத்தகைய கைங்கர்யத்தைச் செய்யும் தகுதியன்றோ போய் விடுகின்றது! ஆதலின் தகாத போகங்களில் ஈடுபாடு கைங்கர்யமாகிய அமுதத்தைப் பெறத் தடையாயிருக்கும்.

இவ்வுண்மைகளை அறிந்து ப்ரபந்நன் தகாத போகங்களை விஷத்தைப் போல நினைத்துத் தூரத்தில் உதறியெறிய வேண்டும். இந்தப் போகங்கள் விஷத்தைக் காட்டிலும் கொடியன வாயுள்ளனவே! விஷம்உண்டால்தான் மனிதனைக் கொல்லும். உலக போகங்களாகிய விஷயங்கள் மனத்தால் நினைத்தால் கூட மனிதனுடைய ஆத்மாவைக் கெடுத்துக் கொன்று விடுமே! இந்த அம்சத்தை நன்கு கருத்தில் கொள்ள வேண்டும்.

அந்தப் போகத்திற்கு உரிய வஸ்துக்கள் இருக்குமிடத்தில் மனிதன் இருந்தால் அவற்றை விடமுடியாதபடி அவனது பாபம் புத்தியைக் கலக்கி அந்தப் போகத்தில் அகப்படச் செய்து விடும். இந்தத் தீங்கை ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். பாம்பு முதலிய துஷ்ட ஜந்துக்கள் நடமாடுமிடத்தில் வஸிக்கத் துணிவானா ஒருவன்? அவற்றின் ஸஞ்சாரமில்லாத இடத்தில் அமைதியாக வஸிக்க மனிதன் முற்படுவதுபோல் தகாத போகங்களுக்கு இடமேயல்லாத ஸ்தாநங்களில் ப்ரபந்நன் வஸிக்க வேண்டும்.

மேலும் ஒருவனுக்குப் பாபத்தால்தான் புத்தி கெடுகின்றது. புத்தி கெட்டவன் மறுபடி பாபத்தையே செய்ய முற்படுகின்றான். இப்படி ஒரு பாபத்துக்குக் காரணம் முந்திய ஒரு பாபமென்று நினைத்து அந்த முதல் பாபத்துக்கே ப்ராயச்சித்தமாக ஒரு ப்ரபத்தியை முதலில் செய்து பின் பாபம் நேரிடாமல் காத்துக் கொள்வதும் ப்ரபந்நனது கடமையாகும். இந்நிலையில் உள்ளவனைத் தேவர்களும் மிகப் போற்றுவார்கள். இவன் ஸர்வேச்வரனுக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை விளைவிப்பான்.

சாஸ்த்ரங்களிலும் கூட்டத்தைக் கண்டு பாம்பினிடத்திற் போல் அஞ்சுபவனாய், பிறர் செய்யும் ஸம்மாநத்தை மரணம் போல் எண்ணுபவனாய், பிறர் மனைவியரைப் பிணம் போல் வெறுப்பவனாயுள்ள ஏகாந்த சீலனைத் தேவர்களும் போற்றுவதாய்க் கூறப்பட்டுள்ளது. அவ்வாறே பிறரிடம் குற்றம் காண்பதில் குருடர்களாய், பிறர் மனைவியரிடம் நபும்ஸகர்களாய், பிறரைப் பழிப்பதில் ஊமைகளாயுள்ளவர்களிடம் தனக்கு மிக்க அன்பு உண்டென்கிறான் எம்பெருமான். அவனிடமே உள்ளத்தைச் செலுத்தி உலகசுகங்களை வெறுப்பவர்களிடம் எம்பெருமான் அருகிலேயே இருப்பதாயும் பாகவதர்களின் பிரிவைக் கணப்பொழுது கூட எம்பெருமான் பொறுப்பதில்லையென்றும் ப்ரமாணங்கள் கூறுகின்றன.

**20. கைங்கர்யமாவது - ஸ்வாமி உகந்த ஏவற்றொழில் செய்கை யாகையாலே இது யதாசாஸ்த்ரம் பண்ணினால் உகப்பாம்.**

கைங்கர்யம் என்றால் என்ன? நாதனாயிருப்பவனது உள்ளத்துக்கு உகப்பான அடிமைத் தொழிலைச் செய்வதேயாகும். இந்தக் கைங்கர்யத்தை ப்ரபந்நன் சாஸ்த்ரத்தில் கூறிய முறைப்படி செய்தால்தான் எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பாயிருக்கும். ஸ்ரீவைகுண்டத்தில் நித்யஸூரிகளும் முக்தர்களும் பரமபதநாதனுக்குக் கைங்கர்யம் செய்கின்றார்கள். இந்த ஸம்ஸார மண்டலத்தில் இருக்கும் ப்ரபந்நர் இவ்வுலகில் உள்ள வரையில் கைங்கர்யம் செய்கின்றனர். இவ்விரு வகுப்பினரும் செய்யும் முறை வெவ்வேறானது.

நித்யரும் முக்தரும் எம்பெருமானைக் கண்கூடாகக் காண்கின்றனர். அவன் திருவுள்ளத்திற்கு உகப்பைத் தரும் விஷயங்களைத் தம் ஞானத்தால் நேராகக் காண்கின்றனர். அவர்களின் ஞானம் நம்முடையதைப் போல் இந்திரியம் முதலிய சாதனங்களை எதிர்பாராது. ஸகலத்தையும் அவர்களின் அறிவு இலக்காக்கிக் கொள்ளும் ஆற்றலையுடையது. அவர்கள் எம்பெருமான் திருவுள்ளத்தை நேராகவே கண்டு கைங்கர் யங்களைச் செய்கின்றனர்.

ஸம்ஸார மண்டலத்தில் உள்ள சேதநர்களுக்கு அந்த முறை இயலுமா? இயலாது. இவர்களின் அறிவு இந்திரியங்களை எதிர்பார்க்கின்றது. இந்திரியம் இல்லையேல் அறிவு வராது. மேலும் கண்கூடாகக் காணமுடியாத விஷயங்களை அறிவதற்குச் சாஸ்த்ரம் வேண்டும். இவர்களுக்குச் சாஸ்த்ரமே கண்ணாகும். சாஸ்த்ரமே விஷயங்களைக் காட்டும் கைவிளக்காகவும் ஆகும். சாஸ்த்ரத் தாலன்றி வேறொன்றாலும் அறிவு பெற முடியாது. சாஸ்த்ர விதியைக் கொண்டே செயல்களைச் செய்ய வேண்டும். சாஸ்த்ர விதியை மீறித் தம் இஷ்டப்படி நடந்தால் இம்மைப் பயனையோ மறுமைப் பயனையோ பெறமுடியாதென்றும் சாஸ்த்ரத்துக்கு விலக்கான செயல்கள் அசுரச்செயல்கள் என்றும் பொதுவாக ப்ரமாணம் கூறுகின்றது. ப்ரபந்நன் வேறு பயனை நாடாது இங்குச் செய்யுஞ் கைங்கர்யத்துக்கும் அந்த நீதி வருமே! அதாவது - இந்தக் கைங்கர்யத்தையும் சாஸ்த்ரத்தை மீறிச் செய்தால் பலனற்றுப் போவதுடன் தீங்கையும் விளைவிக்குமே! ஆதலால் சாஸ்த்ரத்தைக்

கைக்கொள்ளாத வரையில் "ஒன்றையுமறியாது நிற்கின்றோமே!" என்ற உணர்ச்சியுடன் தான் இருக்க வேண்டும்.

இந்நிலையில் சாஸ்த்ர விதியை மதிக்காமல் தம் மனத்துக்குப் பிடித்தது என்பதையே கொண்டு ஒன்றைக் கைங்கர்யமென்று நினைத்துச் செய்வதாக வைத்துக் கொள்வோம். ஆனால் அது எம்பெருமானுக்கு உகப்பாகவே இருக்குமென்று உறுதியாய்க் கூற முடியாதே! அவன் திருவுள்ளத்துக்கு முரண்பட்டதாகவும் அது இருக்கக் கூடுமே! இவ்வம்சங்களைத் திருவுள்ளத்திற் கொண்டே ஸ்ரீ பாஷ்யகாரர் தம் நித்யக்ரந்தத்தில் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கும் வஸ்துக்கள் உலகில் மிகப் பிரியமானவைகளாயும் ஆராதிப்பவனுக்கும் இஷ்டமானவைகளாயும் இருப்பதுமட்டும் போதாதென்றும் சாஸ்த்ரத்துக்கு முரண்படாத வஸ்துக்களாயும் இருத்தல் வேண்டும் என்று அருளிச் செய்துள்ளார்.

மேலும் உலகில் கண்ணுக்குப் புலனாக நடக்கும் நடைமுறையில் கூடத் தாஸனாயிருப்பவன் தன் ஸ்வாமியைப் பார்த்து "அடியேன் என்ன செய்ய வேண்டுமென்று நியமிக்க வேண்டும்?" என்று பிரார்த்திப்பதையும், ஸ்வாமியாயுள்ளவன் எதை நியமிக்கின்றானோ அதைத் தாஸன் செய்வதையும் அதுவே கைங்கர்யமாவதையும் காண்கின்றோம். இம்முறையில் ஸ்வாமியான எம்பெருமான் திருவுள்ளத்தை எப்படி அறிவது? சாஸ்த்ரத்தைக் கொண்டுதானே அறிய வேண்டும்! ஆகவே ப்ரபத்தியென்னும் வேள்வியைச் செய்து முடித்த ப்ரபந்நன் இவ்வுலகில் தன் சரீரம் கழியுமளவும் தன் தகுதிக்கு ஏற்றவாறு சாஸ்த்ரத்தைத் தழுவிக் கைங்கர்யங்களைச் செய்து வந்தால் இவனது செயல் எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பு என்னும் முக்கிய பலனைத் தருவதாகும்.

**21. பகவத் கைங்கர்யமும் பாகவத கைங்கர்யமும் சேர அநுஷ்டிக்க அரிதானபோது பரமபுருஷார்த்த காஷ்ட்டையான பாகவத கைங்கர்யமே உபாதேயதமம்.**

ப்ரபந்நன் ஆசார்யனிடம் ரஹஸ்யங்களைக் காலக்ஷேபம் செய்தவனாதலின் ப்ரணவத்தால் எம்பெருமானுக்கே அடிமையாயுள்ள தன் ஸ்வரூபத்தை உணர்ந்துள்ளான். நாராயண சப்தத்தின் மேலுள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுயுருபினால் வெளியிடப்படும் பகவத் கைங்கர்யம் செய்தல் ப்ரபந்நனுக்குக் கடமையாகின்றது. அவ்வாறே நடுவில் உள்ள நம: என்ற சொல்லால்

தன் ஸ்வரூபம் மிகப் பரதந்த்ரமாயிருப்பதையும் எம்பெருமானால் பாகவதர்களுக்கும் அடிமையாக்கப்பட்டதையும் நன்கு உணர்ந்தவனாதலின் பாகவதர்களுக்குக் கைங்கர்யம் செய்தலும் அவசியமான கடமையாயிற்று.

இங்ஙன் இருக்க பகவத் கைங்கர்யம் - பாகவத கைங்கர்யம் இரண்டையும் சேர்த்து ஒரே ஸமயத்தில் செய்ய முடிந்தால் மிகவும் நல்லது. இரண்டில் ஒன்றைக் கைவிட்டு மற்றொன்றை மட்டுமே செய்ய இயலும்படியான ஸங்கடம் வரலாம். அப்பொழுது எதை விடுவது? எதைச் செய்வது? பகவத் கைங்கர்யத்தைச் செய்யாது விட்டுப் பாகவத கைங்கர்யத்தையே செய்ய வேண்டும். ஏன்? ப்ரமாணங்கள் இதை வலியுறுத்துகின்றன. "பாகவதர்களை மகிழ்வித்தால்தான் எம்பெருமான் மகிழ்வான். தன்னிடம் பக்தியுடையரிடத்தில் காட்டிலும் பாகவதர்களிடம் பக்தி கொண்டவரிடத்தே அவனுக்கு அன்பு மிகுந்துள்ளது. ஆராத நங்கள் அனைத்திலும் எம்பெருமானை ஆராதிப்பதே சிறந்தது. ஆனால் அதனினும் மிகச் சிறந்தது பாகவதர்களை ஆராதித்தல் - பாகவதர்களை ஆராதிக்காதவனிடம் எம்பெருமான் அன்பு கொள்வதில்லை. அவனை ஆராதிப்பதைக் கைவிட்டும் அடியார்களை ஆராதிப்பவர்களிடமே அவனுக்கு அன்பு மிகுந்து வேண்டிய பலனை அளிக்கின்றான்" என்றெல்லாம் ப்ரமாணங்கள் கூறுகின்றனவே! திருமழிசையாழ்வாரும் பகவானைப் போற்றுமவர்களினும் பாகவதரைப் போற்றுமவரின் தவம் மிகச் சிறந்ததென்று அருளியுள்ளார். ஆகவே பொதுவான இந்த முறை ப்ரபந்நன் வேறு பயனைக் கருதாமல் அதையே பயனாகக் கொண்டு செய்யும் கைங்கர்யத்துக்கும் ஒக்கும்.

மேலும் பகவானுக்குக் கைங்கர்யம் செய்யாமல் பாகவதர்களுக்கு மட்டுமே கைங்கர்யம் செய்தாலும் அதிலேயே பகவத் கைங்கர்யமும் அடங்கி விடுதலைக் காணலாம். எவ்வாறு? - கைங்கர்யமென்பது யாது? ஸ்வாமி உகந்ததைச் செய்வது தானே! பாகவத கைங்கர்யம் எம்பெருமானுக்கு மிக்க உகப்பை விளைவிப்பதன்றோ! ஆகவே அதுவே எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யமாகவும் ஆகிவிடுகின்றது. இப்படி பாகவத கைங்கர்யத்திலேயே பகவத் கைங்கர்யமும் அடங்கி விடுதலைக் கண்டு பெரும் பயன் பெற்றதாய் மகிழ்ந்து நிற்கலாம். பாகவத கைங்கர்யமே பகவத் கைங்கர்யத்தின் எல்லை நிலமாகும்.

22. இவை இரண்டிலும் ப்ரதாநம் ஆசார்ய கைங்கர்யம்.

எம்பெருமானை நாம் வழிபடும் முறையிலேயே ஆசார்யனையும் வழிபட வேண்டுமென்று வேதம் கூறுகின்றது. இவ்வளவோடு நிற்கவில்லை. மற்றுமுள்ள ப்ரமாணங்களும் இதை வலியுறுத்துவதுடன் இன்னும் அதிகமாகவும் ஆசார்யனைப் பற்றிப் பேசுகின்றன. அது வருமாறு - ஆசார்யனைக் காட்டிலும் சிறந்த வஸ்து இல்லை. ஆசார்யனையன்றி வேறொருவனை நினைக்கக் கூடாது. அவனது சொல்லையும் அவன் சரிதத்தையும் அவன் திருநாமத்தையுமே எப்பொழுதுமே ஜபிக்க வேண்டும். ஆசார்யனே பரப்ரஹ்மம்; அவனே சிறந்த பலன்; அவனே சிறந்த வித்யை. அவனே உயர்ந்த செல்வம். அவனே விரும்புதற்கு ஏற்ற வஸ்து. அவனே ஆச்ரயிப்பதற்கு ஏற்றவனாவான்" என்று இவ்வாறெல்லாம் கூறப்பட்டுள்ளன. ஆகவே ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கரியத்தின் முக்கியத்தன்மை இந்த ப்ரமாணங் களாலெல்லாம் நன்கு விளங்குகின்றது.

மேலும் பகவானுக்கோ பாகவதனுக்கோ கைங்கர்யங்கள் செய்வதானால் ஆசார்யனது அநுமதி பெற்றே செய்ய வேண்டும். மேலும் ஆசார்ய கைங்கர்யத்தைப் பற்றி ஆராய்ந்து பார்த்தால் இது எம்பெருமானுடைய கட்டளையாகிய சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்டதாயுள்ளமை பற்றி ஆசார்ய கைங்கர்யமே பகவானுக்குச் செய்யும் கைங்கர்யமுமாகின்றது. அவனது நியமநத்தின்படி செய்வதுதானே அவனுக்குச் செய்யும் கைங்கர்யம்! மேலும் ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கர்யமே பாகவத கைங்கர்யமுமாகி விடுகின்றது. ஆசார்யனும் ஒரு பாகவதன் தானே! இவ்வாறு ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கர்யமே பகவத் கைங்கர்யம் - பாகவத கைங்கர்யம் என்ற இரண்டு உருவையும் கொள்வதால் இதுவே எல்லாவற்றினும் முக்கியமானதாகும். ஆசார்ய கைங்கர்யத்தை விட்டு பகவத் கைங்கர்யத்தையோ பாகவத கைங்கர்யத்தையோ செய்யக்கூடாது.

சாஸ்த்ரங்களும் கண்ணுக்கு இலக்காய் மிக எளியனாய் நிற்கும் ஆசார்யனை விட்டுக் கண்ணுக்குப் புலப்படாது சாஸ்த்ரத்தாலேயே அறிய வேண்டியவனாய் அரியனாய் நிற்கும் எம்பெருமானை விரும்புமவன் கையில் உள்ள நீரைக்கொட்டி விட்டு மழை நீரை எதிர்பார்ப்பவனாகவும் கையில் உள்ள செல்வத்தை உதறிவிட்டுப் பூமியில் மறைந்துள்ள புதையலைத் தேடுமவனாகவும்

கூறிப் பழிக்கின்றன. ஸ்ரீமதுரகவிகளும் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்தில் தமக்கு ஆசார்யனாகிய ஆழ்வாருடைய கைங்கர்யமே தமக்கு முக்கியமென விளக்கியுள்ளார். மேலும் அதில் தம் ஆசார்யனான ஆழ்வாருடைய திருவுள்ளத்துக்கு உகப்பாயிருக்கிறதென்பதற்காகவே எம்பெருமானைத் தாம் ஸேவிப்பதாகக் கூறுகின்றார். அவ்வாறே ஒவ்வொரு சேதநனும் ஆசார்யனுக்குக் கைங்கர்யம் செய்வதையே முக்கியமாகக் கொள்ள வேண்டும். இதைச் செய்ததுபோக எஞ்சிய காலங்களில் ஆசார்யன் திருவுள்ளத்துக்கு உகப்பான செயல் என்று நினைத்து அந்த அந்தக் காலத்துக்கு ஏற்றவாறு பகவானுக்கும் பாகவதர்களுக்கும் கைங்கர்யம் செய்து ஆநந்தத்தை அநுபவிப்பது சேதநனது கடமையாகும்.

**23. இக் கைங்கர்ய பரனுக்குப் பரமைகாந்திகள் உகந்த இடமே உசிதஸ்த்தாநம்.**

தர்மத்தைச் செய்தலையே கடமையாகக் கொண்ட ஸாத்துவிகர்கள் வசிப்பதற்கு உரிய இடங்களாகச் சில புண்ணியத்தலங்களைச் சாஸ்த்ரங்கள் வகுத்துள்ளன. ஆனால் இது கலிகாலம். இன்னும் பல குற்றங்கள், நல்ல புண்ணியத் தலங்களையெல்லாம் ம்லேச்சர் முதலியவர்கள் ஆக்ரமித்துக் கொண்டு விட்டனர். ஆதலால் சாஸ்த்ரங்கள் குறிப்பிட்டதற்காக அவற்றில் போய் வசிக்க முடியுமா? ஆதலால் அத்தலங்கள் விலக்குதற்கு உரியனவேயாகும்.

மேலும் புண்ணியத்தலத்துக்கு இலக்கணங்கள் (அடையாளங்கள்) நூல்களில் கூறப்பட்டுள்ளன. ஆனால் புண்ணியத்தலங்களென ஏற்றுக் கொண்ட சில தலங்களில் இந்த இலக்கணம் பொருந்தவில்லை. புண்ணியத் தலமாகக் கொள்ளாத சில இடங்களில் புண்ணியத் தலத்துக்குக் கூறிய இலக்கணம் பொருந்துகின்றது. ஆகவே இலக்கணத்தை வைத்துக் கொண்டு புண்ணியத் தலத்தை நிச்சயித்துக் கூற முடியாது. பெரும்பாலும் புண்ணியத் தலங்களுக்கு இந்த இலக்கணங்கள் இருக்கக் கூடுமென்ற கருத்தாலேயே இலக்கணம் கூறப்பட்டதாகக் கொள்ள வேண்டும்.

தன் மனம் தடையின்றி ஒரு தலத்தை விரும்பிச் செல்வதாலேயே அதைப் புண்ணியத் தலமாகக் கொண்டு வசிக்கலாமே என்று கூறவும் முடியவில்லை. மானிடராகிய நம்

அறிவைக் கொண்டு ஒன்றை முடிவு செய்யப் பார்ப்பதில் தவறுதலும் ஸம்பவிக்கக் கூடுமன்றோ! புண்யமல்லாததைப் புண்ணியத் தலமென்று நாம் முடிவு செய்து விடவும் கூடுமே! மேலும் ஒரு மனிதன் தனியாய் நின்று ஒரு முடிவைச் செய்து விடக்கூடாதென்று சாஸ்த்ரமும் தடை செய்கின்றதே!

இன்னும் சிலரைக் கலந்து கொண்டு அவர்கள் புண்ணியத் தலமெனக் குறிப்பிடுவதை ஏற்றுக் கொள்ளலாமே என்று கூறலாம். ஆனால் அந்த மனிதர்கள் ரஜோ குணம் தமோ குணம் உடையராயிருக்கக் கூடும். அதனால் அவர்கள் அறிவு கலங்கித் தவறான வழியைக் காட்டவும் கூடும். சில ஸமயங்களில் அவர்களின் கலக்கம் நமக்கு உள்ள தெளிவையும் போக்கி நம்மையும் கலக்கி விடக்கூடும்.

பின் எவ்வாறுதான் புண்ணியத்தலத்தை நிர்ணயம் செய்வது? இவ்வாறு - மஹான்கள் தேர்ந்தெடுத்து எழுந்தருளியிருக்கும் இடமே நமக்கு வஸிக்க ஏற்றதாகும். எத்தகைய மஹான்கள்? ஒருவனுக்கு விசேஷமான ஞானம் ஏற்பட வேண்டுமானால் அவனுக்கு ஸத்துவ குணம் தலையெடுக்க வேண்டும். அவ்வாறு ஸத்துவ குணம் தலையெடுக்க வேண்டும். அவ்வாறு ஸத்துவ குணம் நிரம்பிய பெரியோர்கள் எம்பெருமானையன்றி வேறெருவருக்கும் தங்களை அடியராகக் கருதமாட்டார்கள். ப்ரபத்தியையன்றி வேறோர் உபாயத்தைக் கைக்கொள்ள மாட்டார்கள்; மோக்ஷத்தையன்றி வேறொரு பயனையும் நாடமாட்டார்கள். இவ்வாறு நல்ல விவேகம் பெற்ற பரமைகாந்திகள் தங்களுக்குக் கடமையாக ஏற்பட்ட பகவத் கைங்கர்யத்தைச் செய்வதற்கு இதுவே ஏற்ற இடமென்று ஓர் ஆக்ஷேபமுமின்றி ஒருமுகமாய் நிச்சயித்துக் கொள்வார்கள். அந்த இடத்தில் மகிழ்ச்சியுடனும் சிரத்தையுடனும் வாஸம் செய்யத் தொடங்குவார்கள். அதுவே புண்யக்ஷேத்ரமாகும். அந்த இடம் சாஸ்த்ரத்தில் விதித்த ஆர்யாவர்த்தம் முதலிய க்ஷேத்ரங்களில் சேராதிருப்பினும் தோஷமில்லை. இன்னும் புண்ய க்ஷேத்ரங்களுக்குச் சொல்லிய அடையாளங்கள் இல்லாவிடினும் பாதகமில்லை.

மேலும் இந்திரியங்களை வென்ற பாகவதன் வஸிக்குமிடமே குருக்ஷேத்ரம் - நைமிசம் - புஷ்கரம் ஆகிய எல்லா க்ஷேத்ரமுமாகுமென்றும், பாகவதர்கள் வஸிக்குமிடத்தில்

எம்பெருமானும் வஸிக்கிறனென்றும், பாகவதர்கள் அரை நிமிஷம் வஸித்தாலும் அந்த இடமே புண்ணியத் தலமாகுமென்றும் இவ்வாறெல்லாம் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆதலின் பாகவதர்கள் வஸிக்கும் இடமே எல்லாத் தலங்களிலும் மேம் பட்ட புண்ய க்ஷேத்ரமாகும். ஆகவே வேறு பயனை நாடாது எம்பெருமான் திருவுள்ளம் உகப்பதையே பயனாகக் கொண்டு பகவத் கைங்கர்யம் - பாகவத கைங்கர்யம் - ஆசார்ய கைங்கர்யம் ஆகிய மூவகைக் கைங்கர்யங்களிலும் ஈடுபட்டுள்ள பரமைகாந்தியான ப்ரபந்நன் ஸகல கைங்கர்யங்களையும் செய்வதற்குப் பாங்கான இடம் அதுவேயாகும். அந்த இடத்தின் பெருமை. எத்தகைய தடைவரினும் அதைப் போக்கிக் கைங்கர்யத்தை நன்கு நடைபெறச் செய்யும்.

பரமைகாந்தி என்பவன் எத்தகையன்? மேம்பட்ட தத்துவம் - மேம்பட்ட உபாயம் - மேம்பட்ட பலன் ஆகிய மூன்றும் எம்பெருமானே என்ற உறுதியுடன் ப்ரமாணங்கள் கூறுகிறபடி அவனையன்றி வேறொருவனும் அவ்வாறு ஆகமாட்டானென்ற விசேஷ உறுதியுடையவன். பாகவதன் - வைஷ்ணவன் என்ற சொற்களுக்கும் இத்தகைய உறுதியையுடைய பரமைகாந்தியே முக்கியப் பொருளாவான்.

24. இப்படி துலியசீலர் கிடையாதபோது விபரீத ஸம்ஸர்க்கம் ஏகாந்தவாஸ பரிஹார்யம்.

கெட்ட மனிதனிடம் எத்தகைய கல்வி இருப்பினும் அவனுடன் பழகக் கூடாது. பகவத் பக்தி இல்லாத துஷ்டனுடன் ஸஹவாஸம் செய்வதைக் காட்டிலும் தீயின் கொழுந்து நடுவே வஸிப்பது நல்லது என்று ப்ரமாணம் கூறுகின்றது. கெட்டவனுடன் பழகுவது பாம்புடன் ஒரே வீட்டில் வஸிப்பது போன்றது. துஷ்டர்களின் ஸம்பந்தத்தை மிக்க தூரத்திலேயே விலக்க வேண்டும்.

நல்ல ஸாத்துவிகர்களுடன் பழக வேண்டும். நாடு மிகவும் கெட்டிருப்பதால் நல்லவர்கள் கிடைப்பது கஷ்டமாயிருக்கலாம். அப்படியானால் ஏகாந்தமான இடத்தை நாடி அதில் வஸிக்க வேண்டும். அங்கு உறுதியான விரதங்கொண்டு உலக சுகங்களில் அதிகமாய் ஈடுபடாமல் பிறரைத் துன்புறுத்தாமல் பரமாத்மாவின் தியானத்தில் இருப்பவனுக்கு மோக்ஷம் கிடைப்பது நிச்சயம் என்று சாஸ்த்ரம் கூறுவதன் கருத்தை உணர வேண்டும். நமக்கு எம்பெருமானையன்றி வேறு மனிதர் துணையாக மாட்டாரென்று

அறிந்து இயன்றவரை அவர்களிடமிருந்து விலகியிருக்க வேண்டும். எம்பெருமானது ஸங்கல்பத்துக்கு வசப்பட்டிருப்பதை அநுஸந்தித்துக் கொண்டிருக்க வேண்டும். நம் உயிர்த் துணைவனான எம்பெருமானுடன் பரமபதத்தில் கூடி வாழப் போவதை நினைத்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

**25. இவனுக்குக் கதிசிந்தநாதிகள் சித்தஸந்தோஷ ஹேதுவான காலயாபநம்.**

பக்தியோகம் ப்ரஹ்மவித்யை என வழங்கும். அவ்வாறே ப்ரபத்தியும் ப்ரஹ்மவித்யை எனப்படும். இவை இரண்டுமே மோக்ஷத்துக்குச் சாதனமாகும். பக்தியோகமாகிய ப்ரஹ்மவித்யையைச் செய்பவனுக்குச் சாஸ்த்ரங்கள் பல அங்கங்களை விதித்துள்ளன.

அவற்றுள் சில முக்கியமான அம்சங்களை அடிக்கடி சிந்திக்க வேண்டுமென்றும் இந்தச் சிந்தனையும் பக்தியோகத்துக்கு விசேஷமான அங்கமாகுமென்றும் சாஸ்த்ரம் கூறுகின்றது. அந்த அம்சங்களாவன - (1) பக்தியோகத்தைத் தொடங்குமுன் உள்ள பாபங்கள் ஒழிந்துவிடுதலும் பிறகு தெரியாமல் செய்யும் பாபங்கள் ஒட்டாமையும். (2) சரீரத்தினின்று ஜீவன் வெளியேறும் முறை. (3) முக்தி பெறும் போது அவனுடைய புண்ய பாபங்கள் கழிந்து புண்யங்கள் அவனுடைய நண்பர்களிடமும் பாபங்கள் அவன் பகைவர்களிடமும் புகுதல். (4) அக்நி முதலிய தேவர்கள் வழி நடத்திக் கொண்டு செல்லும் முறை (5) மோக்ஷம் சென்றபின் பெறப்போகும் அநுபவாநந்தம் என்பன. இவ்வம்சங்களைப் பக்தியோகம் செய்பவன் அடிக்கடி சிந்தித்தேயாக வேண்டும். இதைச் செய்யாவிடின் அங்கங்கள் நிறைவேறாததுடன் அங்கியான பக்தியோகமும் நிறைவேறாது போய்விடும்.

ப்ரபத்தியும் ஒரு ப்ரஹ்ம வித்யையாதலால் இதைச் செய்பவனும் கீழே கூறிய சிந்தனையை ப்ரபத்திக்கு அங்கமாகச் செய்தாக வேண்டும் என்று ஊஹிக்கக் கூடும். உண்மை நிலை வேறு. ப்ரபத்திக்கு உரிய அங்கங்களைக் கூறுமிடத்தில் இந்தச் சிந்தனையை விசேஷ அங்கமாகக் கூறவில்லை. ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலிய ஐந்து அங்கங்களைத் தான் வெளிப்படையாய்ச் சாஸ்த்ரம் கூறியுள்ளது. இவற்றுடன், தத்துவங்களை அறிந்து மோக்ஷத்தை மட்டுமே விரும்பி ப்ரபத்தி செய்பவனுக்கு மற்றொன்றையும் அங்கமாக விதித்துள்ளது.

அதாவது - தான் ப்ரபத்தியை ஸ்வதந்த்ரமாகச் செய்வதான எண்ணம் - தன் பயனுக்காகச் செய்வதான எண்ணம் முதலியவற்றை விடுகை. இதுவும் மோக்ஷத்துக்காகச் செய்யும் ப்ரபத்திக்கு அங்கமாகும். இவற்றைத் தவிர ப்ரபத்திக்கு வேறு அங்கமே கிடையாது. ப்ரபத்தி வேறு எதையுமே எதிர்பார்க்காது என்று கூறும் ப்ரமாணத்துக்குக் கீழே குறிப்பிட்ட ஐந்து அங்கங்களையன்றி வேறு அங்கங்களை எதிர்பாராது என்றே கருத்துக் கூறியாக வேண்டும். இன்னும் சில அங்கங்களைச் சேர்த்துக் கொண்டு இந்த ப்ரமாணத்தைக் குறுக்கிக் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை. ஆகவே கீழ்க் கூறிய ஐந்து அம்சங்களின் சிந்தனை ப்ரபத்திக்கு அங்கமாகாது.

அப்படி அவற்றால் ப்ரபத்தி நிறைவேற உதவி ஒன்றும் இல்லாவிடின் அவற்றின் நினைவுதான் எதற்காக? என்று கேட்கலாம். வரப்போகிற ஆநந்தங்களை இப்பொழுது இங்கு நினைத்துக் கொள்வதால் உள்ளத்துக்கு மகிழ்ச்சியன்றோ ஏற்படுகின்றது! அது தகுந்த முறையில் நல்ல பொழுது போக்காகவுமன்றோ இருக்கும்! உலகில் தன் நாயகனைப் பிரிந்து நிற்கும் ஒரு தர்மபத்நி தூரதேசத்தினின்று திரும்பி வரவிருக்கும் நாயகனை நினைந்து கொண்டு மகிழ்ந்து இன்பமாய்ப் பொழுது போக்குவதைக் காண்கின்றோமே! அவ்வாறே இங்கும். ஆழ்வார் ஸ்ரீவைகுண்டத்தை ஸேவிப்பதற்குத் தமது உள்ளம் இரவு பகலென்ற வேற்றுமையன்றி எப்பொழுதும் அதையே சிந்திப்பதாகக் கூறுகின்றார்.

இந்தச் சிந்தனைகளெல்லாம் ப்ரபத்திக்கு அங்கமாக மாட்டா என்பது உண்மைதான். அதற்காக அவை வேண்டாமென்று புறக்கணித்து விட முடியுமா? நாம் புறக்கணிக்க முயன்றாலும் விலக்க முடியாதே! நமக்கென்று ஏற்பட்ட மோக்ஷாநுபவத்தில் மனத்துக்கு ஏற்பட்ட ஈடுபாட்டின் மிகுதியாலன்றோ அச்சிந்தனைகள் தாமாகவே வருகின்றன! த்வயத்தை அர்த்தத்துடன் எப்பொழுதும் அநுஸந்திக்க வேண்டுமென்றும், ஸ்ரீரங்கம் முதலிய திவ்ய தேசங்களில் சரீரம் கழியுமளவும் வஸிக்க வேண்டுமென்றும், பகவதாராதநம் செய்து கொண்டே நாள்களைக் கழிக்க வேண்டுமென்றும் ப்ரமாணங்கள் கூறுகின்றனவே! இவை எல்லாம் ப்ரபத்திக்கு அங்கமா? அல்லவே! எதற்காக இவையெல்லாம்? என்று கேட்க முடியுமா? இவற்றிலெல்லாம் ஆநந்தமான பொழுது

போக்கையன்றோ காண்கின்றோம்! அசோக வனத்தில் சிறையிருந்த பிராட்டி தன் உள்ளத்தாலேயே தூரத்திலிருந்த பெருமாளுக்கு அருகே செல்லப் பாரித்ததையும் அருகில் உள்ள அரக்கியரையோ பழுத்துக் குலுங்குகின்ற கனிகள் முதலியவற்றையோ பாராமல் இராமனையே சிந்தித்துத் தேறுதலுற்றதையும் இங்கு உவமானமாக அநுஸந்திக்கலாம்.

**26. சாதகவ்ருத்தியான இவனுக்கு அந்திம ப்ரத்யயம் ஸ்வயத்ந ஸாத்யமன்று.**

ஸ்ரீ கீதையில் எட்டாவது அத்யாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு ஒரு முக்கிய விஷயத்தைக் கூறினான். அதாவது - மரண காலத்தில் மனிதனுக்குக் கடைசி நினைவு எதைப் பற்றி வருகின்றதோ, அதற்கு ஏற்றவாறே பலன் கிடைக்கும் என்பது. தவநிலையில் இருந்த ஜடபரதர் மரண காலத்தில் தான் வளர்த்த மானையே நினைத்ததால் மறுபிறவியில் அவர் மானாகப் பிறந்ததாய்ப் புராணம் கூறுகின்றதே! கண்ணன் கீதையில் கூறியதைச் சிந்திக்கும் போது ப்ரபந்நர்களுக்கு ஒரு கவலை ஏற்படுகின்றது. நாம் மோக்ஷத்தில் எம்பெருமானை அடைய வேண்டியிருப்பதால் நம் மரண காலத்தில் இறுதி நினைவு அவனைப் பற்றி வராமலிருந்து விட்டால் நம் கதி யாது? ஆதலின் நாம் மிக்க முயற்சி கொண்டு நல்ல நினைவு வரும்படி நாமே செய்து கொள்ள வேண்டும். இது ஸாத்யமாகுமா? என்பதுவே அக்கவலை.

மோக்ஷத்திற்காக ப்ரபத்தி செய்தவருக்கு அந்தக் கவலை சிறிதும் வேண்டியதே இல்லை. ஏனென்றால் வராஹப்பெருமான் பிராட்டிக்கு உபதேசித்த சரம சுலோகத்தில் கூறியதாவது - சரீரம் இந்திரியம் முதலியன நல்ல நிலையில் இருக்கும்போது ப்ரபத்தியைச் செய்தவனுக்கு மரண காலத்தில் அவனது முயற்சியின்றியே என்னைப் பற்றிய நினைவு வரும்படி நானே செய்து மோக்ஷத்திற்கு அழைத்துச் செல்வேன் என்று. சாஸ்த்ரமும் ப்ரபந்நன் புண்ணியத் தலத்திலோ இழிவான இடத்திலோ நல்ல நினைவு இன்றி மரணமடைந்தாலும் மோக்ஷத்தை அடைகின்றான் என்று கூறுகின்றது.

ஸ்ரீ சரணாகதி கத்யத்திலும் ஸ்ரீ பாஷ்யகாரர் எம்பெருமான் வாக்யமாக அருளிச் செய்யும்போது ப்ரபந்நன் மரண காலத்தில் தன் ஸங்கல்பத்தால் பூர்ணமான ஞானத்தோடு இருப்பானென்றும் முந்திய நல்ல நினைவுகள் பழக்கம் எல்லா மாறாமல் இருக்கப்

பெறுவானென்றும் விளக்கியுள்ளார். பெரியாழ்வாரும் தம் மரண வேதனை ஸமயத்தில் எம்பெருமானைப் பற்றிய நினைவு வராமற்போகுமென்றும் அதற்காக இப்பொழுதே அவனை அநுஸந்தித்து விடுவதாயும் அருளிச் செய்துள்ளார். இவற்றினாலெல்லாம் நாம் அறிந்து கொள்வது யாது? ப்ரபந்நராகிய நாம் எம்பெருமானிடம் பொறுப்பை முன்பே ஸமர்ப்பித்து விட்டபடியால் மோக்ஷம் பெறும் விஷயத்தில் பொறுப்பின்றிக் கவலையின்றி இருக்கின்றோமே! அவ்வாறே மரண காலத்தில் இறுதி நினைவு நல்லதாய் வரவேண்டுமே என்ற கவலையும் இல்லாதிருப்போம். எம்பெருமான் திருவருளால் நல்ல நினைவு தானாகவே அவசியம் வரும்.

பக்தியோகம் செய்பவர்கள் மட்டுமே மரணகாலத்தில் மிக்க முயற்சி கொண்டு எம்பெருமானை உள்ளத்தில் இருத்திக் கொண்டேயாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் உண்டு. ப்ரபத்தியைச் செய்தவருக்கு இந்த நிர்ப்பந்தம் கிடையாதே! ப்ரபந்நன் ப்ரபத்திக்குப் பின் மரணம் வரையில் இங்கு இருக்க வேண்டிய முறை என்ன? மழை நீரையே எதிர்பார்த்து அண்ணாந்து நிற்கும் சாதகப்பறவை போல் மோக்ஷம் பெறுதற்குக் கண்ணனாகிய காளமேகத்தின் கருணையாகிய இனிய நீரை எதிர்பார்த்திருக்க வேண்டியது ஒன்றே இவனுக்கு உரிய கடமையாகும்.

நீ செய்ய வேண்டியன வருமாறு - ஸாத்துவிகர்களான பெரியோர்களின் திருவுள்ளம் உகக்கச் செய்ய வேண்டும். ஸாதுக்களின் செய்கையைப் பின்பற்றி நடக்க வேண்டும். ப்ரஹ்மவித்துக்களிடம் அபசாரம் செய்வதற்கு அஞ்ச வேண்டும். அறம் - பொருள் - இன்பம் ஆகியவற்றிலேயே ஈடுபட்டு நிற்பவர்களைத் துரும்பாகக் கருதிப் புறக்கணிக்க வேண்டும். எப்பொழுதும் சேஷியாய் எல்லாவற்றையும் பொறுப்பவனாயுள்ள ச்ரிய: பதியிடம் பொறுப்பையெல்லாம் ஸமர்ப்பித்துவிட்டுச் சாதகப் பறவை போல் நின்று க்ஷேமத்தையடைய வேண்டும்.

**27. இப்படி க்ஷணக்ருத்யமான ஆத்ம ஸமர்ப்பண யாகத்துக்கு பகவத் ஸங்கல்ப ஸாத்யமான தேஹாவஸாநம் அவப்ருதம்.**

ஆத்மாவை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்தலாகிய ப்ரபத்தியை ஒரு வேள்வியாக உபநிடதம் விதிக்கின்றது.

ஆத்மாவே ஒரு ஹவிஸ்ஸாகும். அதை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதே ஒரு வேள்வியாகும். இது ஒரே க்ஷணத்தில் செய்யக் கூடியதே. இந்த ப்ரபத்தியாகிய வேள்வியைச் செய்தவனுக்கு இச் சரீரம் கழிவதை அவப்ருதமென்கிறது உபநிடதம். ஒவ்வொரு யாகத்திற்கும் முடிவுக்குப் பிறகு செய்ய வேண்டியது அவப்ருத ஸ்நாநம் எனப்படும். அத்துடன் யாகம் பூர்த்தியாகும். அவ்வாறே ப்ரபத்தியாகிய வேள்விக்குப் பிறகு நேரும் மரணம் பூர்த்தியாகிய அவப்ருதமாகும்.

இங்கு ஒரு கேள்வி எழலாம். மரணத்தை அவப்ருதமென்று கூறுவதாயின் வேள்வியின் அவப்ருத ஸ்நாநம் மனிதம் செய்ய வேண்டியிருப்பது போல் மரணமும் மனிதன் செய்ய வேண்டியதாகவன்றோ ஏற்படும்! மரணத்தை மனிதன் எவ்வாறு செய்ய முடியும்? மரணம் அவரவர் கர்மத்துக்கு ஏற்றவாறு ஏதோ ஒரு காலத்திலோ பகவானுடைய ஸங்கல்பத்தால் மட்டுமே தானே வரக்கூடியதன்றோ! இதை மனிதன் செய்ய வேண்டியதான அவப்ருதமாக எவ்வாறு கூற முடியும்? என்பது.

ஒருகால் மரணத்தை அவப்ருதமாக மனத்தில் நினைத்துக் கொள்ள வேண்டும் என்று விதிப்பதாய்க் கூறிவிடலாமா? இதுவும் பொருந்தாதே! அவன் ஸங்கல்பத்தாலே தானே வரக்கூடிய மரணத்தை அதற்கு முரண்பாடாக மனிதன் செய்ய வேண்டிய அவப்ருதமாக எப்படி நினைத்துக் கொள்ள முடியும்? ப்ரபந்நர்கள் மரணத்துக்கு அஞ்சாமல் பிரியமான விருந்தாளியை வரவேற்பது போல் எதிர்பார்ப்பதாக ப்ரமாணம் கூறுவதால் மரணம் தானே வருவதென்று தெரிகின்றதே! பின் மரணத்தை அவப்ருதமாகக் கூறியதன் கருத்துயாதென்று பார்க்க வேண்டும்.

அது வருமாறு - உபநிடதம் ந்யாஸ வித்யை என்னும் ப்ரபத்தியை விதிக்கும் இடங்களில் ஆத்மாவை ஸமர்ப்பித்து ப்ரபத்தி செய்தலை ஒரு வேள்வியாகவே பேசியுள்ளது. மற்ற ப்ரமாணங்களும் அந்த ப்ரபத்தியை அதற்கு ஏற்பட்ட அங்கங்களுடன் ஒரே முறை செய்ய வேண்டுமென்று கூறுகின்றன. உபநிடதத்தில் ப்ரபத்தியை விதித்துள்ள பகுதிக்குப் பின்பகுதி ப்ரபந்நன் செய்ய வேண்டிய காரியங்கள் அனைத்தும் தாமே நன்கு நிறைவேறி விட்டனவாகும் என்று புகழ்கின்றது. இந்தப் புகழ்ச்சி எந்த அம்சத்தைக் காட்டுகின்றது? என்று ஆராய்ந்தால் முற்பகுதியில் கூறிய ப்ரபத்தியைச் செய்தவன் அதன் பலனுக்காக

இனிச் செய்ய வேண்டிய எஞ்சிய செயல் எதுவும் இல்லையென்பதையே காட்டுகின்றது. ஆகவே மரணத்தை அவப்ருதமென்று கூறியதன் தாற்பரியம் இந்த ப்ரபத்தியாகிய யாகத்துக்கு வேறோர் அவப்ருதம் கிடையாதென்பதும் சரீரம் கழிந்தவுடனேயே ஸ்ரீ வைகுண்டமென்னும் திவ்யலோகத்தை அடைந்துவிடலாமென்பதுவுமேயாகும்.

**28. ஸதாசார்ய பரிக்ரஹத்துக்கு முன்புள்ள அநாதிகாலமெல்லாம் ஒரு காளராத்ரி.**

சேதநன் இதுவரை எத்தனை பிறவிகளை எடுத்துள்ளான் என்பதைக் கூறமுடியுமா? முடியாது. மோக்ஷம் பெறும் வரை இவனுடைய கர்மங்களால் ப்ரக்ருதி என்னும் திரை இவனுக்கு நல்ல விஷயம் புலப்படாமல் மறைத்துக் கொண்டேயிருக்கின்றது. இந்த ப்ரக்ருதி என்பது யாது? ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களையுடைய ஒரு வஸ்து. இது சேதநனுக்கு உள்ள அறிவு பயன்படாதபடி ஒரு திரையாய் நின்று மறைத்து விடுகின்றது. விதையினால் முளை உண்டாகின்றது. முளையினால் விதை உண்டாகின்றது. எதற்கு எது காரணம்? எது முதலில் வந்தது? விடை கூறமுடியுமா? காரணம் கண்டுபிடிக்க முடியாமல் அநாதியாய் வருகின்றது இந்த முறை. அவ்வாறே சேதநனுக்குக் கர்மத்தால் அஜ்ஞாநம் வருகின்றது - அஜ்ஞாநத்தால் கர்மங்களைச் செய்கின்றான். எதற்கு எது காரணம் என்று கூறமுடியாமல் அநாதியாய்க் கர்மமும் அஜ்ஞாநமும் மாறி மாறித் தொடர்ந்து வருகின்றது. சேதநன் செய்கிற அபசாரத்துக்கு அளவில்லை. ஆற்று வெள்ளம் தொடர்ந்து வருவதுபோல் சேதநன் செய்யும் அபசாரங்களும் தொடர்ந்தே நடைபெறுகின்றன. ஒரு நீண்ட சங்கிலித் தொடரில் ஒரு வளையத்தில் மற்றொரு வளையமாகக் கோத்துக் கொண்டு தொடருவதுபோல் ஓர் அபசாரத்தின் முடிவில் மற்றோர் அபசாரமாகச் செய்து கொண்டே போகின்றான் சேதநன்.

இவன் இருக்கும் இடமோ அஞ்ஞானத்தையே விளைவிக்கும் பெரிய நிலமாகும். அதில் அகப்பட்டுத் தவிக்கும் இவனுக்குத் திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய ரஹஸ்யங்களையோ அவற்றின் பொருளையோ அறியும் வாய்ப்பு ஏது? ஆகவே தன் ஸ்வரூபத்தை எவ்வாறு அறிய முடியும்? தன் ஆத்மா தன்னை அறிவதற்கு வேறொரு ஞானத்தை எதிர்பாராமல் ஸ்வயம்ப்ரகாசமாய் அதாவது தானே 'நான் நான்' என்று தோன்றிக் கொண்டேயிருக்கின்றதே! இந்த ஆத்மாவைப்

பற்றியுள்ள அம்சங்களை அறிகின்றானா? அதுவுமில்லை. தன் ஆத்மாவைப் பற்றியே அறியமுடியாத இவன் பரமாத்மாவை எவ்வாறு அறிவான்? எல்லாக் காலங்களிலும் எல்லாவிடத்திலும் ஓர் இடமும் விடாது பரந்து விபுவாய் நிற்கும் எம்பெருமானாகிய அழியாத ஒரு சேமநிதி இவனிடமும் அந்தர்யாமியாய் இருக்கின்றதே! எப்பொழுதும் அருகில் உள்ள இதை அறிய முடிகின்றதா இவனால்? நல்ல அறிவைப் பெறுவதற்குச் சிறிது முயற்சி கூட இவனுக்கு இல்லையே! ஆகவே அநாதியான ஸம்ஸார ஸம்பந்தத்தால் உறங்கிக் கொண்டு கிடக்கும் இவனுக்கு அநாதியான காலமெல்லாம் பயங்கரமான காளராத்ரியாகவல்லவோ கழிந்துள்ளன!

இவ்வாறு அஞ்ஞானவிருளில் மூழ்கிக் கிடக்கும் இவனுக்கு ஏதோ ஒரு ஸுக்ருத விசேஷத்தால் இவன் ஞானமெனும் பகலைக் காண ஒரு வழி ஏற்படுகின்றது. ஒரு சிறந்த ஆசார்யன் வந்து இவனை ஏற்றுக் கொள்கின்றான். இது இவன் பிறகு காணப்போகும் பெரும் பகலுக்கு அருணோதயம் போலாகின்றது. அந்த ஆசார்யன் இவனது அஞ்ஞானவிருளைப் போக்க முற்படுகின்றான்; சாஸ்த்ரார்த்தங்களையெல்லம் ஒன்று திரட்டி இவனுக்கு உபதேசிக்கின்றான்; இவனை நல்ல ஆசாரத்தில் நிலைநிற்கும்படி செய்கின்றான்; தானும் அநுஷ்டித்துக் காட்டுகின்றான்; இவனுடைய அஞ்ஞானவிருளையெல்லாம் ஒழிக்க வல்ல ஞானமாகிய ஒளிவிளக்கைத் தருகின்றான்.

இவ்வாறு நல்வழிகாட்டி ஒப்பற்ற மஹோபகாரம் செய்த ஆசார்யன் விஷயத்திலே இவன் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? அவன் செய்த உதவிக்கு இவன் எதாவது கைம்மாறு காணமுடியுமா? இவனுக்கு மேம்பட்ட தேவர்களுக்குமே காணமுடியாதே! ஆதலின் இவன் தன்னை ஆசார்யன் விஷயத்தில் எந்நாளும் கடன்பட்டவனாகக் கருத வேண்டும். இந்த உணர்ச்சியை எந்நாளும் உள்ளத்துக் கொண்டு இந்த ஸம்ஸார லோகத்தில் மட்டுமன்றி ஸ்ரீவைகுண்டம் சென்றாலும் இந்த ஆசார்யன் திருவடிகளே தனக்குத் தஞ்சம் என்ற உறுதியுடன் இருப்பதுவே இவன் கடமையாகும்.

### 29. பின்பு தேஹாவஸாநத்தளவும் நல்விடிவு

பலன்பெற முக்கிய காரணம் ஆசார்யன் சிஷ்யனை ஏற்றுக் கொள்ளுதல். ஆசார்யன் ஏற்றுக் கொண்டவுடனேயே மோக்ஷும்

வந்து விடுகின்றதா? இல்லை. சேதநன் ப்ரபத்தி செய்யும்போது உடனே மோக்ஷத்தைக் கேட்கவில்லையே! இச்சரீர முடிவில் மோக்ஷம் வந்தால் போதுமென்றுதானே கேட்டு பிரபத்தி செய்கின்றான். அதுவரையில் இந்தச் சரீரமாகிய சிறைக்கூடத்தில் இவன் இருந்துதானே தீர வேண்டும்! இந்தச் சிறைக் கூடத்துக்குத் தூண்கள் யாவை? சரீரத்தில் உள்ள எலும்புகள்தாம். இந்தச் சேதநன் ஆசார்யனருளால் ஞானம் பெற்றிருப்பினும் அஞ்ஞான இருள் கலவாது நடக்க முடிகின்றதா?

இச்சரீரம் உள்ளவரையில் பலன் கொடுக்கத் தொடங்கிய கர்மங்களையும் அவற்றால் வரும் பலன்களையும் ப்ரபந்நன் ஏற்றுக் கொண்டுதானே இருக்கின்றான். ஆதலின் அக்கர்மங்களின் விளைவாகச் சிறிதளவாவது அஞ்ஞானவிருள் கலந்துதான் வாழ்க்கை நடத்த முடியும். அதனால் பெருந்தீங்கு ஒன்றும் வந்துவிடாது, சிறந்த ஆசார்யனுடைய அநுக்ரஹத்தையன்றோ பெற்றிருக்கின்றான்! அதன் வலிமையால் இவனுக்கு ஞானமும் வைராக்யமும் பக்தியும் பூ மலர்வது போல் நிச்சயமாய் மலரும். இதனால் வரும் மகிழ்ச்சியையும் அநுபவித்துக் கொண்டிருப்பான்.

இந்த நிலையில் இவனது விவேகம் இவனைத் தட்டியெழுப்புகின்றது. ப்ரக்ருதி பல சிற்றின்பங்களைக் காட்டி இதுவரை தன்னில்மயங்கிப் படுத்திருக்கும்படி செய்திருந்தது. இப்பொவுது அவ்வுறக்கத்தினின்று விழித்துக் கொள்கின்றான். எம்பெருமானை அறிவதிலோ காண்பதிலோ அநுபவிப்பதிலோ சிறிதும் ஐயமின்றி நிலையான மனவுறுதியோடு நிற்கின்றான். உலக சுகங்களை உதறித் தள்ளுகின்றான். இச்சரீர முடிவில் கார்மங்கள் முதலிய எல்லாப் பொல்லாங்குகளும் நீங்கி எல்லையற்ற பேரின்பமாகிய மோக்ஷம் வரப்போவதை நினைத்துக் கொண்டு இந்திரியங்களையெல்லாம் எம்பெருமானிடமே ஈடுபடுத்திக் கொண்டு இருக்க வேண்டியது ப்ரபந்நனது கடமையாகும். ஆகவே இச்சீரம் கழியுமளவும் நல்ல விடியற் காலப்பொழுதாகவே இருக்கும்.

**30. மேல் முழுக்க ஸ்வச்சந்த கைங்கர்ய மஹோத்ஸவ திவஸம்.**

முன்பு சேதநன் செய்த ப்ரபத்தியாலே இவனைக் கைவிடாமல் காக்கப்பட வேண்டிய வஸ்துவாக எம்பெருமான் ஏற்றுக் கொண்டு விட்டான். மோக்ஷம் பெற ஆசைப்பட்டுத் தானே சரணாகதி செய்தான்! ஆகவே செய்ய வேண்டிய கடமையைச்

செய்து முடித்தவனாகி விட்டான். உலகில் ஒரு சுரங்கத்தினின்று ஒரு பெரிய இரத்தினத்தை எடுக்கும்போது சுற்றிலும் மண்பற்றுப் பூசிக்கொண்டு ஒளி புலப்படாதிருக்கும். மண்பற்றைக் கழற்றிக் கழுவி விட்டால் அந்த இரத்தினத்தின் ஒளி எங்கும் பரவும். அவ்வாறே சுரங்கத்தினின்று எடுத்த இரத்தினம் போல் உள்ளான் ப்ரக்ருதி ஸம்பந்தத்தோடு கூடிய இந்தச் சேதநன். இவனுக்கு இச்சரீரம் கழியுமளவும் ஸ்தூலமான ப்ரக்ருதி ஸம்பந்தம் உண்டு. இவன் சரீரமே ப்ரக்ருதியால் ஆனதுதானே! சரீரம் கழிந்து பரமபதத்துக்குச் செல்லும் நிலையில் விரஜாநதிக்குப் போகும் வரை ஸூக்ஷ்மமான சரீரத்தின் வடிவில் ப்ரக்ருதி ஒட்டிக் கொண்டேயிருக்கும். இந்த ஸ்தூல - ஸூக்ஷ்மமான இரண்டு ஸம்பந்தத்தையும் எம்பெருமான் கழிப்பது இரத்தினத்தின் மண்பற்றைக் கழற்றுவது போலாகும்.

பின் இவனுடைய ஞானம் எல்லாவற்றையும் அறியக்கூடியதாய் மலர்ச்சி பெற்றுவிடும்படி செய்கின்றான் எம்பெருமான். இது இரத்தினம் இயற்கையொளியைப் புலப்படுத்தும்படி எம்பெருமான் செய்வது போன்றதாகும். திருமார்பில் எப்பொழுதும் அணிந்துள்ள கௌஸ்துப ரத்நம் எப்படி எம்பெருமானுக்கு மகிழ்ச்சியை விளைவிக்கின்றதோ, அவ்வாறே அதன் அம்சமான ஜீவனும் அவனுக்கு மகிழ்ச்சியை விளைவிப்பான். ச்ரிய:பதியான எம்பெருமான் திருவடிகளில் ஸ்ரீவைகுண்டத்தில் எல்லா இடத்திலும் எந்நாளும் எந்த நிலையிலும் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்து கொண்டிருப்பான். எம்பெருமானுக்கு, இன்ன இடத்தில்தான் இருப்பான், இன்ன ஸமயத்தில்தான் இருப்பான், இன்ன வஸ்துவாகத்தான் இருப்பான் என்ற வரையறை எவ்வாறு இல்லையோ, அவ்வாறே சாஸ்த்ரங்களாலும் ப்ரமாணங்களாலும் காட்டப்பட்டுச் சேதநன் மோக்ஷத்தில் செய்யும் கைங்கர்யத்துக்கும் வரையறை கிடையாது. இவ்வாறு பரமபதத்தில் கைங்கர்யம் செய்வதே ஒரு மஹோத்ஸவமாகும்.

இந்த உத்ஸவத்தைத் தரக் காரணமாயுள்ளவன் யாவன்? அவ்வெம்பெருமானே. உண்மையான ஆத்மஸ்வரூபம் அப்பொழுதே தோன்றும். அது தோன்றுவதே ஒரு முறையே விடிந்து வந்த தொடர்ந்து நிற்கும் நற்பகலாகும். இந்தப் பகலுக்குப் பிறகு மாலைப்பொழுது வரவே வராது. இந்த நற்பகல்

வரக்காரணம் யார்? அவ்வெம்பெருமானே. உலகில் பகற்பொழுது வரக் காரணம் யார்? சூரியன்தானே! இங்கு மோக்ஷாநுபவமாகிய நற்பகல் வருவதற்குக் காரணம் எம்பெருமானாகிய சூரியனே என்று உணர வேண்டும்.

உலகில் உள்ள சூரியனுக்கு உதயம் - அஸ்தமனம் - கிரகணம் இவை எல்லாம் உண்டு. இந்த எம்பெருமானாகிய மஹாஸூர்யனுக்கோ அவை ஒன்றும் கிடையாது. சூரியனை விட்டு ஒளி பிரியாதிருப்பதுபோல் பிராட்டி அவனை விட்டுக் கணப்பொழுதும் பிரியாதிருக்கின்றாள். உலகில் உள்ள சூரியனது உருவத்தை அளவிட்டு விடலாம். இந்த மஹாஸூர்யனை அளவிட முடியாது. இந்த ஸூர்யன் எப்பொழுதும் ப்ரகாசித்தலே தனக்கு ஸர்வமங்களங்களையும் சாச்வதமாகப் பெறுதலாக அநுஸந்தித்துக் கொண்டிருப்பதுவே சேதநனது கடமையாகும்.

சிலர் எம்பெருமான் ஜீவனை அடைகின்றானேயன்றி ஜீவன் எம்பெருமானை அடைவதில்லையென்றும், லாபமும், நஷ்டமும் எம்பெருமானுக்கேயன்றி ஜீவனுக்கு இல்லையென்றும் இன்னும் இவ்வாறு பல கொள்கைகளைக் கூறுகின்றனர். இக் கொள்கைகளைக் கண்டிக்க வேண்டிய அவசியமில்லை. இக்கொள்கைகளின் உட்கருத்தை நாம் நல்லதாகவே கொண்டுவிட முடியும்.

எவ்வாறெனில் - ஜீவன் எம்பெருமானுக்கு அடியனா யிருத்தலிலேயே சுவை கண்டவன். மோக்ஷத்தில் இவனுக்கு ஞானமலர்ச்சி முதலிய பல விசேஷங்கள் வருகின்றன. இவையெல்லாம் ஸர்வேசுவரனுக்கு மிகவும் போக்யமாயுள்ளன. புஷ்பம் சந்தனம் முதலியவற்றைத் தரித்தால் அவற்றின் மணம் முதலியன தரிப்பவர்க்கே மகிழ்ச்சியை விளைவிப்பதுபோல் ஆத்மாக்களெல்லாம் எம்பெருமானுக்கே சேஷமாயிருப்பதால் ஜீவனுக்கு வரும் விசேஷங்களால் மகிழ்ச்சியடைபவனும் ஸர்வேச்வரனேயாவான் என்ற கருத்தைக் கொண்டன. அவர்களின் கொள்கைகள் என்று கூறிவிடுதல் நன்று.

இது ஸாத்த்விக ஹ்ருதயங்கமையான ரஹஸ்ய ரத்நாவளி.

இதுகாறும் முதலில் கூறிய பாசுரம் தொடங்கிப் பின் முப்பது வாக்யங்களால் பல விசேஷார்த்தங்கள் கூறப்பட்டன. மோக்ஷ சாஸ்த்ரங்களுள் மிகவும் ஸாரமெனக் கூறப்பட்டவை திருமந்திரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்கள். இந்த

ரஹஸ்ய க்ரந்தத்தில் கூறப்பட்ட சிறந்த விஷயங்களெல்லாம் அந்த மூன்று ரஹஸ்யங்களில் சுருக்கமாய்க் கூறப்பட்டனவேயாகும். முக்கியமாய் உயர்ந்த தத்துவமாகிய எம்பெருமான் - உயர்ந்த உபாயமாகிய ப்ரபத்தி - உயர்ந்த பலனாகிய மோக்ஷம் ஆகியவற்றைப் பற்றிய சிறந்த விஷயங்களெல்லாம் மூன்று ரஹஸ்யங்களில் சுருக்கி அமைந்துள்ளவற்றைத் தழுவி இங்கு விவரித்துக் கூறப்பட்டுள்ளன. இவ்விஷயங்களைப் புறக்கணிப்பவர் மரகத ரத்தினத்தைக் கூழாங்கல் என்று புறக்கணிக்கும் மூடர்களின் குழுவில் சேர நேரும். அவ்வாறு செய்யாமல் இந்த விஷயங்களின் சிறப்பு - இனிமை - பெருமை - மங்களத் தன்மை - எளிதில் அறிய ஏற்றமை முதலிய விசேஷங்களை நன்கு அறியவல்ல ஸாத்துவிகர்கள் இந்த ரஹஸ்ய ரத்நாவளி என்றும் ரஹஸ்யத்தை மாலையை மார்பில் பூணுவது போல் எப்பொழுதும் தம் உள்ளத்தில் தரிப்பர்.

இங்குச் சில ப்ரமாணங்களைக் கொண்டு பின்வரும் முக்கியமான விஷயங்களை அநுஸந்திக்க வேண்டும் - சேதநன், ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களுள் ஸத்துவ குணத்தை மட்டும் பெறப் பழக வேண்டும். வேதங்கள் பற்பல விஷயங்களை உபதேசித்த போதிலும் நமக்குப் பயன்படக்கூடிய அவசியமான விஷயங்களை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும் நாம் உணர வேண்டிய விஷயங்கள் எண்ணற்றவை. நம் வாழ்நாளோ மிகக் குறைவு. அதிலும் எத்தனையோ தடைகள். ஆதலின் மிகவும் ஸாரமானவற்றையே பொறுக்கி ஏற்றுக் கொள்ள வேண்டும். திருமந்திரத்தில் அடங்காத விஷயம் இல்லை. அது மற்ற மந்திரங்கள் அனைத்தினும் சிறந்தது; எல்லாப் பயனையும் அளிக்க வல்லது. ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை. ஸம்ஸார பந்தத்தை நீக்குதற்குச் செய்யும் செயலே உண்மையான செயல். மோக்ஷத்தைத் தரும் கல்வியே உண்மைக் கல்வி. மற்ற செயலும் கல்வியும் பயனற்றவை. எம்பெருமானை ஆராதிப்பதினும் சிறந்த புண்ணியம் வேறு இல்லை. ஸம்ஸாரத்தில் அல்லல்படுமவர்க்கு மோக்ஷம் ஒறே இன்பம் தர வல்லது. அங்கு எம்பெருமானை அநுபவிப்பதே ஸம்ஸார நோய்க்குச் சிறந்த மருந்தாகும். அவனையன்றி வேறொருவனைத் தெய்வமாகக் கருதக்கூடாது. திவ்ய தம்பதிகளின் திருவடிகளைத் தியானித்து நற்கதி பெற வேண்டும் - என்பன.

மேலே 'சிறுபயனில்' என்று தொடங்கும் ஒரு பாசுரம் உள்ளது. அதற்கும் ஸ்ரீதேசிகன் தாமே இட்ட உரையைத் தழுவி உரை விளக்கம் இங்குத் தரப்படுகின்றது -

சிறுபயனிற் படியாத தகவோரெம்மைச்
சேர்க்கவடைக்கலங்கொண்ட திருமால், தானே
மறுபிறவியறுத்தழியா வானில் வைக்கும்
மனமே நீ மகிழாதேயிருப்பதென்கொல்
உறுவதுனக்குரைக்கேனிங்கிருக்குங்காலம்
ஒரு பிழையும் புகுதாத வுணர்த்தி வேண்டிப்
பெறுவதெலாமிங்கே நாம் பெற்று வாழப்
பேரடிமையாலேதென்றிகழேல் நீயே.

இப்பாசுரம் தம் உள்ளத்துக்குச் செய்யும் உபதேசமாகின்றது. கீழ் முப்பது வாக்யங்களின் பொருளை நன்கு அறிந்தால் ப்ரபந்நன் மனச் சஞ்சலம் நீங்கி நிலையான அறிவைப் பெறுவான். இவன் ப்ரபத்திக்குப் பிறகு வேறு பயனைக் கருதாது செய்யும் கைங்கர்யங்களால் அவன் மனமே மிக்க மகிழ்ச்சி கொள்ளும். மனம் என்னும் இந்திரியம் மனிதனுக்கு மிக்க உதவி புரிகின்றது. அது அநுகூலமாயிராவிட்டால் எந்த நற்காரியமும் செய்ய இயலாது. மனத்தைக் காட்டிலும் ஜீவனுக்கு அந்தரங்கமானது யாது? அதற்குச் செய்யும் உபதேசமாயுள்ள இப்பாசுரம் ப்ரபத்திக்குப் பின் சேதநனுக்கு உள்ள மகிழ்ச்சியைக் கூறுகின்றது.

சிறுபயனில் படியாத தகவோர்

நம் ஆசார்யர்கள் எத்தகையர்? அற்பமான பலன்களில் ஆசை கொள்ள மாட்டார்கள். பலன் கொடுக்கத் தொடங்கிய கர்ம வசத்தாலே எதாவது பலன் வந்தாலும் அதில் பற்றுக் கொள்ள மாட்டார்கள். த்வயத்தின் பிற்பகுதியில் கூறப்படும் பகவத் கைங்கர்யத்தில் ஊற்றமுடையராயிருப்பார்கள். கருணையுடையரான இத்தகைய ஆசார்யர்கள் தம்மிடம் சிஷ்யராக வருபவர்களை நன்கு பரீக்ஷை செய்து பார்த்து நல்ல சிஷ்யர்களை ஏற்றுக் கொள்வர். அவர்களுக்கு உபதேசித்து அவர்களுக்கு உள்ள துன்பத்தைப் போக்க விருப்பமுடையராயிருப்பர். அந்த உபதேசத்தைச் சிஷ்யர்களுக்குச் செய்தாலன்றி உயிர் தரிக்க மாட்டாதவராயுள்ளனர். அந்த உபதேசம் செய்வது எதாவது பலனைக்

கருதியோ? இல்லை. புகழ் வருமென்றோ - பொருள் கிடைக்குமென்றோ - மரியாதை கிடைக்குமென்றோ இத்தகைய எப்பயனையும் எதிர்பாராமல் உபதேசிக்கும் கருணை யுடையராயுள்ளனர்.

எம்மைச் சேர்க்க

நாம் எவ்வாறு உள்ளோம்? மோக்ஷம் பெற நம்மிடம் கைம்முதல் உண்டா? நம்மால் பக்தியோகம் செய்ய முடியுமா? முடியாது. கைம்முதலற்று இருக்கின்றோம். ஆதலால் ப்ரபத்திக்குப் பூர்ணமான தகுதியுடையராயுள்ளோம். பெருங்காற்றால் வழிதவறித் தடுமாறும் ஒரு மரக்கலத்தைப் பின் ஓர் அநுகூலமான காற்று வீசிக் கரை சேர்த்து விடுவதைக் காண்கின்றோமே! அவ்வாறே கர்ம வசத்தாலே ஸம்ஸார ஸமுத்ரத்தில் வீழ்ந்து தவிக்கும் நமக்கு ஆசார்யர்கள் அநுகூலமான காற்றைப்போல் முற்பட்டு நம்மை ஸர்வேச்வரன் திருவடிகளிலே கொண்டு சேர்த்தனர்.

அடைக்கலம் கொண்ட திருமால்

நம் நிலை என்ன? நம்மை நாமே காத்துக் கொள்ள முடியாது. பிறரும் நம்மைக் காக்க முடியாது. இப்படி நிற்கும் நம்மை ஆசார்யர்கள் எம்பெருமான் திருவடிகளில் கொண்டு போய் ஸமர்ப்பித்தார்கள். வேறு ஒருவராலும் காக்கமுடியாத நம் நிலையை அவனிடம் விண்ணப்பித்தனர். எம்பெருமான் மறுக்க முடியுமா? நமக்காகப் பிராட்டி வேறு பரிந்து பேசுகின்றாள். இவளை மீறி நடக்கமுடியுமா எம்பெருமானால்? அவன் சேஷி, நாம் சேஷர்கள் என்ற ஸம்பந்தமும் உள்ளதே! நம்மை ஏற்றுக்கொள்வது அவனுக்குக் கடமையுமன்றோ! அவனுக்கு இயற்கையாயுள்ள கருணை முதலிய குணங்களும் நம்மை ஏற்றுக் கொள்ளுமாறு தூண்டுகின்றன. இவற்றைத்தாம் மீறிமுடியுமா அவனால்? ஆகவே நம்மைக் காக்கும் பொறுப்பை அவன் ஏற்றுக் கொண்டு விட்டான்.

தானே மறுபிறவியறுத்து

இதுவரையில் எம்பெருமான் நமக்காக எவ்வளவு பாடுபட் டிருக்கின்றான்! முதலில் சரீரத்தைக் கொடுத்தான்; இந்திரியங்களைக் கொடுத்தான்; அறிவைக் கொடுத்தான். இவ்வாறு எத்தனையோ உதவி செய்துள்ளான். அவனே நமக்கு ஸர்வவித பந்துவாயுள்ளான். அவன், தானே முன் நின்று நாம் மறுபடி வேறு சரீரம் எடுத்துப் பிறவாதிருப்பதற்காகப் புண்ணியம் -

பாபமெனப்படும் நம் கர்மங்களையெல்லாம் ஒழித்து விடுகின்றான். அந்தக் கர்மங்கள் இருந்தால் தானே நமக்கு மறுபடியும் சரீரத்தைக் கொடுக்கும்! அவை கழிந்து விட்டால் மறுபிறவி ஏது?

அழியா வர்னில் வைக்கும்

எந்நாளும் அழியாமல் நித்யமாயுள்ளது ஸ்ரீவைகுண்டலோகம். அது உள்ளத்தால் அளவிட்டுப் பார்க்க முடியாதது. சாஸ்த்ரத்தைக் கொண்டே அறியக் கூடியது. அங்கு முதுமை முதலிய துன்பங்கள் கிடையா. அந்த லோகத்தையும் ஸ்வர்க்கம் முதலியவற்றையும் சீர்தூக்கிப் பார்த்தால் ஸ்வர்க்கம் முதலியன நரகம் என்றே சொல்லும்படியிருக்கும். அங்கு நித்யஸூரிகளுக்கும் புதிதாய்ச் செல்லும் முக்தருக்கும் எந்த வேற்றுமையும் கிடையாது. பின்பு அங்கிருந்து இந்தக் கர்ம பூமிக்குத் திரும்புவதென்பதே கிடையாது. நமக்குப் பிரதிநிதியாக (ஜாமீனாக)ப் பிராட்டியையே வைத்துக் கேட்டாலும் அங்கிருந்து நாம் திரும்புதற்குப் பரமபதநாதன் அநுமதிக்க மாட்டான். இத்தகைய லோகத்தில் நம்மை எம்பெருமான் கொண்டு வைப்பான்.

மனமே நீ மகிழாதேயிருப்பது என்கொல்?

நம்முடைய கர்மம் முதலிய எல்லாக் களங்கங்களையும் மீதியில்லாமல் வேரறுத்துத் தனக்கு மேம்பட்டதில்லாத பெரும் பயனாகிய மோக்ஷத்தை நாம் பெறும்படி செய்வதற்கு எம்பெருமான் ஸங்கல்பித்து விட்டான். அவன் ஸங்கல்பத்தில் யாராவது குறுக்கிட முடியுமா? அவனை ஒத்தவனோ மேம்பட்டவனோ உண்டா? அவன் நினைத்ததை மாற்ற வேறு யாராலும் அவனாலுமே முடியாதே! அத்தகைய எம்பெருமான் நமக்கு மோக்ஷம் கொடுக்க ஸங்கல்பித்தபின் நீ பெருமகிழ்ச்சி கொள்ள வேண்டியிருக்க, என் மனமே! நீ எவ்வகையாலும் வருந்துவதற்கு இடமே இல்லையே! ஏன் மகிழாது இருக்கின்றாய்?

உறுவது உனக்கு உரைக்கேன் இங்கு இருக்கும் காலம்.

மனமே! ஆயினும் நீ வருத்தமுறக் காரணம் உள்ளது. இந்தச் சரீரத்தைப் பற்றிச் சாஸ்த்ரம் மிக இழிவாய்ப் பேசுகின்றது. இச்சரீரம் எவ்வாறு அமைந்துள்ளது என்பதைச் சிந்தித்தால் இதன் இழிவு புலப்படும். எலும்புகளே தூண்கள். நரம்புகளே கட்டும் கயிறுகள். மாம்ஸம் இரத்தத்துடன் சேர்ந்து மிகுதியான சேறு. தோலால் மூடப்பட்டது. மலமூத்ரங்களின் ஸம்பந்தத்தால்

துர்க்கந்தம் வீசுவது. முதுமை துக்கம் இவற்றுடன் கூடியது. பல நோய்களுக்கும் அழுக்குக்களுக்கும் இருப்பிடம். அழியும் தன்மையது. ஒன்பது துவாரங்களையுடையது. இந்த நிலையிலுள்ளது பிராணிகளுக்கு உறைவிடமான இந்தச் சரீரம். இதை விடவேண்டுமென்று சாஸ்த்ரம் கூறுகின்றது. ஆழ்வார்களும் இதையே வலியுறுத்திக் கூறிவிட்டு இதை விடுவது எளிதன்று என்கின்றனர். இந்திரியங்களோ தாம் போகும் வழியில் உன்னை (மனத்தை) இழுத்துச் செல்கின்றன. உன்னை அடக்குவது கடினம்தான். நீயும் சஞ்சலத்தன்மையுடையவன். இப்படி தடுக்கவோ விடவோ முடியாத பல குற்றங்கள் நிறைந்த சரீரத்தோடும் இந்திரியங்களோடும் கூடத்தான் நீயும் இருக்க வேண்டியுள்ளது. மேலும் ரஜோ குணத்தாலும் தமோ குணத்தாலும் எத்தனையோ விளைவுகள். இக்குணங்கள் மனிதனுக்கு வந்தால் வரும் தீங்குகளாவன - மிக்க கர்வத்தை உண்டாக்கும்; காரணமின்றி எப்பொழுதும் சிரிக்கச் செய்யும்; இஷ்டப்படி பேசச் செய்யும்; டம்பம் அடித்துக் கொள்ளச் செய்யும்; சரீரத்தையே ஆத்மாவாக நினைக்கச் செய்யும்; சில ஸமயங்களில் தன்னைப் பழித்தும் சில ஸமயங்களில் புகழ்ந்து கொள்ளவும் செய்யும். இத்துணைச் செயல்களையும் ரஜோ குணமும், தமோ குணமும் தாமே செய்கின்றன! இத்தனை இழி நிலைகளுக்கும் விளைநிலம் இந்தப் பொல்லாவுலகம் தானே! இந்த உலகத்தில் அஞ்ஞானத்தோடு இன்னும் எத்தனை காலம் இருக்க வேண்டுமோ! அதுவரையில் என்ன அபசாரங்கள் வருமோ? இப்பொழுதும் அபசாரங்கள் கலவாமல் செய்ய வேண்டுவனவான முக்கிய கைங்கர்யங்களை இழந்துதாமே நிற்கின்றோம்! என்றெல்லாம் நீ நினைத்து வருத்தமடையக்கூடும். அவ்வாறு வருந்த வேண்டாம். நீ செய்த ஸாத்யோபாயமாகிய ப்ரபத்தியால் ஸித்தோபாயனான எம்பெருமானை வசப்படுத்தியாயிற்று. மோக்ஷத்தில் செய்யப் போகும் ஸாத்ய உபேயமாகிய கைங்கர்யத்தைப் பெறப் போகுமவன் ஸித்தோபாயனான எம்பெருமான். ஆகவே மோக்ஷத்தில் நித்ய கைங்கர்யம் செய்யப் போவதில் உனக்குச் சிறிதும் ஐயமில்லை. இங்கு இருக்கும் நாள் வரை வரப்போகிற நிலைமைக்குத் தானே நீ வருந்துகின்றாய்! உன் வருத்தம் தீரும்படி உனக்கு ஏற்ற ஒன்றைக் கூறுகின்றேன். கேள்.

ஒரு பிழையும் புகுதாத உணர்த்தி வேண்டி

பகவதபசாரம் - பாகவதாபசாரம் - ஆசார்ய அபசாரம் ஆகியவை நேரக் காரணம் யாது? தத்துவஜ்ஞாநம் இல்லாமையேயாகும். இந்த ஞானம் வளருவதற்கு ஆசைப்பட வேண்டும். எம்பெருமானிடம் அவன் திருவடிகளில் பக்தி - ஞானம் இவற்றைத் தவிர வேறு பலனைத் தான் யாசிக்கக் கூடாதென்று சாஸ்த்ரம் கூறுவதால் அத்தகைய தத்த்வஜ்ஞாநம் ஆசார்யர்கள் மூலமாக வளர வேண்டுமென்று எம்பெருமானிடம் பிரார்த்தித்து முற்கூறிய அபசாரங்களுக்கு இடம் தராத தத்துவஜ்ஞாநத்தைப் பெற நீ விரும்பு வேண்டும்.

பெறுவதெலாம் இங்கே நாம் பெற்று வாழ

நாம் எம்பெருமானுக்கு அடியர் என்ற உணர்வைப் பெற்றுள்ளோம். மோக்ஷம் பெறப் பக்தியோகமாகிய கைம்முதல் நம்மிடம் இல்லை. மோக்ஷத்தையன்றி வேறு பலனையும் நாம் விரும்பவில்லை. நம்மைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பித்துச் சரணாகதி செய்துவிட்டோம். இனி நமக்கு எந்தப் பொறுப்பும் இல்லை. இங்கு உள்ள நாள் வரை கைங்கர்யங்களை அபசாரம் கலக்கவிடாமல் செய்து கொண்டிருக்க வேண்டும். எத்தகைய கைங்கர்யங்கள்? பரமபதத்துக்குச் சென்றபின் திருவநந்தாழ்வான் ஸேனை முதலியார் முதலிய நித்யஸூரிகளைப் போல நாம் செய்யப்போகும் கைங்கர்யங்களையெல்லாம் இவ்வுலகிலேயே அர்ச்சாவதார விஷயத்தில் செய்து மகிழ வேண்டும். இது சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியதா? எம்பெருமான் கட்டளையை மீறி அவனோடு எதிரம்பு கோத்து நிற்கும் லோகமன்றோ இது! இந்த லோகத்திலேயே அபசாரம் கலவாத மோக்ஷகைங்கர்யங்களைப் பெறுவதென்பது கும்மட்டியில் தாமரை மலரைப் பெறுவது போலவும் பாலைவனத்திற் பெரிய பொய்கையைக் கண்டாற் போலவுமன்றோ ஆகும். இவற்றைப் பெற்று வாழ்ந்தால் மகிழ்ச்சிக்குத் தடை என்ன?

பேரடிமையால் ஏது என்று இகழேல்

எம்பெருமான் எதையும் செய்யும் ஆற்றலுடையன். அவனது கருணைக்கோ அளவில்லை. அவன் திருவடிகளில் பரந்யாஸத்தைச் செய்து விட்டோம். இனி மோக்ஷம் பெறுவது நிச்சயம். இங்கு உள்ள நாள் வரை நாம் செய்யப்போகும் கைங்கர்யமோ மோக்ஷத்து'க்குச் சாதனமாகாது. இப்படியிருக்க, சரீரம் முதலியவற்றைச் சிரமப்படுத்திக் கொண்டு வீண் ப்ரயாஸம் ஏன்

பட வேண்டும்? என்று கருதி இங்குச் செய்யும் கைங்கர்யங்களைப் புறக்கணிக்கக் கூடாது. அவனுக்கு அடமையான நம் ஸ்வரூபத்திற்கு ஏற்ற செயல் அந்தக் கைங்கர்யமேயாகும். அதைச் செய்வதே பரமாநந்தம் . ஆதலின் அதைப் புறக்கணிக்கக் கூடாது.

நீயே.

மேலும் பரமபத்தில் செய்யப்போகும் கைங்கர்யத்தையே முக்கிய பலனாக விரும்பி ப்ரபத்தியைச் செய்தாயே! மோக்ஷத்தில் செய்யப்போகும் கைங்கர்யம் மோக்ஷத்திற்கு உபாயமாகுமா? அதுவேயன்றோ பயன். அங்ஙனமே இங்கு உள்ள நாள் இனிச் செய்யும் கைங்கர்யமும் மோக்ஷத்துக்கு உபாயமாக ஆகவிடினும் அதனையே பயனாக நீ உணர்ந்து செய்ய வேண்டியேதேயாகும்.

மேல் 'ரக்ஷந்த்வநந்ய' என்று தொடங்கும் ஒரு சுலோகம் ஆர்யா வ்ருத்தத்தில் ஸ்ரீதேசிகனாலேயே அருளிச் செய்யப்பட்டுள்ளது. இந்தச் சுலோகம் இந்த ரஹஸ்யார்த்தங்களை விபரீதர் கைக்குப் போகாதபடி காக்க வேண்டுமென்று கட்டளையிடுகின்றது. திருட்டுத் தன்மையுடன் க்ரஹிப்பவன் - ஆசார்யனுக்கு த்ரோஹம் செய்பவன் - வேதத்தையும் ஈச்வரனையும் தூஷிப்பவன் ஆகிய மஹாபாபிகள் கையில் அகப்படாதபடி ரஹஸ்யார்த்தங்களைக் காக்க வேண்டியது அவசியம்தானே!

இந்தச் சுலோகத்திற்கும் ஸ்வாமி தாமே உரையிட்டருளியுள்ளார். அதையே முற்றும் தழுவி இங்குக் கருத்து விவரிக்கப்படுகின்றது. -

ரக்ஷந்த்வநந்யரக்ஷ்யாம் லகீயஸீமபி கரீயஸீம் ஸந்த:1

லக்ஷ்மீஸஹாய ஹ்ருத்யாம் ரஹஸ்யரத்நாவளிம் ரம்யாம்2

இந்த ரஹஸ்ய ரத்நாவளி என்னும் ரஹஸ்யம் முப்பது வாக்யங்கள் கொண்டது. உலகில் இரத்தினங்களைக் கோத்தஹாரம் சேர்த்தியில் ஒளி அழகு எல்லாம் நிறைந்து ப்ரகாசிக்கின்றது. இங்கு ரஹஸ்ய ரத்நாவளி என்னும் ஹாரம் முப்பது வாக்யங்களாகிய ரத்நங்களைக் கோத்து அமைக்கப் பெற்றதால் அறிவொளியை மிகுதியாய்ப் பரப்புவதாயுள்ளது. சொல்லழகும் பொருளின் சீர்த்தியும் இயற்கையில் அமைந்துள்ளது. ப்ரமாணங்களுக்கு மிகவும் ஒத்திருக்கும் பெருமையையும் இதில் மிளிர்கின்றது. அதனால் சிறுவர் முதல் பெரிய பண்டிதர் வரையிலும்

எப்பொழுதும் அநுபவிக்க ஏற்றதாயுள்ளது இந்த ரஹஸ்யம்.

பெரிய பிராட்டியைத் திருமார்பிலே உடைய எம்பெருமான் அழகிய பெரிய இரத்தின ஹாரத்தையும் முத்துமாலையையும் தன் திருமார்புக்கு ஏற்ற திருவாபரணமாகத் தரித்திப்பதுபோல் இந்த ரஹஸ்ய க்ரந்தமாகிய ஹாரத்தையும் தன் திருவுள்ளத்துக்கு உவப்பான அணியாகக் கொள்ளும்படியிருக்கின்றது. இரத்தினமாலை உருவில் சிறியதாயிருப்பினும் ப்ரகாசம் விலை முதலியவற்றால் மிக்க பெருமையுடையதாயிருக்கும். அவ்வாறே இந்தக் கிரந்தமும் உருவில் சிறியதாயிருப்பினும் அவசியம் அறிய வேண்டிய ஸகல ஸாரார்த்தங்களின் சுருக்கமாதலின் மிகுத்த பெருமையுடையதாயுள்ளது.

இந்த அருமையான ரஹஸ்யத்தை நல்லோர்தாம் காக்க வேண்டும். எத்தகைய நல்லோர்? ஸாரம் அஸாரம் இவற்றைப் பற்றிய பகுத்தறிவு மிக்கவர்களாய்ப் பொறாமையற்றவர்களாய்ச் சாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டவர்களான பெரியோர்களே இந்நூலை உரிய முறையில் காப்பார்கள். இவர்களுக்கு இந்த விசேஷ குணங்கள் அமைந்திருப்பதன் பெருமையை ஸ்ரீ பாஷ்யகாரர் தாமே அருளிச் செய்துள்ளார். அத்தகைய பெரியோர்களே இந்த ரஹஸ்யத்தின் மேன்மையை உள்ளவாறு அறிந்து தகாதவர்களுக்குச் சொல்லாமல் காப்பர். கொடிய ஆபத்து வந்தாலும் தகுதியற்றவர்களுக்குக் கூறக்கூடாதென்றும் அவ்வாறு கூறுவது உவர் நிலத்தில் விதை விதைப்பது போன்றதென்றும் தகுந்தவர்கள் கிடைக்காவிடில் அந்த வித்யையோடு மரிப்பதும் மேலென்றுமல்லோ சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆதலின் வித்யையைத் தகாதவனிடம் சிந்தவிடாமல் காக்க வேண்டும். விரும்பிக் கேட்காதவனுக்கோ முறை தவறிக் கேட்பவனுக்கோ ஸித்தாந்த ரஹஸ்யார்த்தங்களைச் சொல்லக்கூடாதென்றும் சாஸ்த்ரங்களே கூறுகின்றன.

இந்த வரையறையைக் கடந்து அபாத்ரத்திலே உபதேசிக்கப் புகுமவர் வேறு ஏதோ பயனைக் கருதியே அவ்வாறு

---

ஒன்றே புகலென்றுணர்ந்தவர் காட்டத் திருவருளால்
அன்றேயடைக்கலங்கொண்ட நம்மத்திகிரித் திருமால்
இன்றேயிசையினிணையடி சேர்ப்பரினிப் பிறவோம்
நன்றே வருவதெலாம் நமக்குப் பரமொன்றிலதே.

செய்கின்றனர். இது மிகவும் தகாத செயலாகும். உவர் நிலத்தில் விதை விதைத்தல் - அலிக்குப் பெண்ணைக் கொடுத்தல் - குரங்கின் கையில் பூ மாலையைக் கொடுத்தல் இவற்றையெல்லாம் விட மிகப் பாதகமான செயல் தகாதவர்க்கு உபதேசம் செய்தல் என்ற சாஸ்த்ரத்தை மறந்து அவ்வாறு செய்ய முற்பட்டால் மாணிக்கத்தின் பெருமையறியாது குரங்குகள் அவற்றை வீசியெறிவது போலாகும். இந்த ரஹஸ்யத்துக்கு உரிய காப்பு இல்லாது போய் விடும். ஆகவே வேறு பயனை நாடாத மஹான்கள் தகுதியற்றவருக்கு உபதேசிக்க விரும்பாமல் இந்த ரஹஸ்யத்தைக் காத்திடுவார்களாக.

இங்ஙனம் ரஹஸ்யரத்நாவளிக்கு ஸ்ரீ தேசிகன் தாமே விரிவான உரையிட்டருளி இதில் கூறியுள்ள ஸார விஷயங்களைத் தொகுத்து அருளிச் செய்கின்றார் - இந்த ரஹஸ்யரத் - நாவளியென்னும் ரஹஸ்யம் மோக்ஷத்தை விரும்பி நிற்கும் சேதநனுக்குப் பிரபத்திக்கு முன்பு உள்ள நிலை - ப்ரபத்தியை அநுஷ்டிக்கும் நிலை - ப்ரபத்திக்குப் பின் இருக்க வேண்டிய நிலை ஆகிய இவற்றை உணர்த்துகின்றது.

இதில் முதலில் உள்ள 'ஒன்றே புகல்' என்ற பாசுரம் இந்த ரஹஸ்யமாகிய இரத்தினஹாரத்தைக் கோக்கும் நூலின் ஸ்தாநத்தில் உள்ளது. இந்தப் பாசுரத்தில் ஆசார்யன் மூலமாகப் பிரபத்தியைச் செய்து அந்தப் பொறுப்பை எல்லாம் ஸர்வேச்வரனிடம் ஸமர்ப்பித்துவிட்டு அந்தப் பொறுப்பையும் எம்பெருமானால் ஏற்றுக் கொள்ளப் பெற்றவனான சேதநன் தான் ஒரு பொறுப்பும் அற்றவனாய்த் தன்னை நினைத்துக் கொள்ள வேண்டிய நிலை காட்டப்படுகின்றது.

வாக்யம்

**1, 2** எம்பெருமானே எல்லோருக்கும் ரக்ஷகன்.

**3, 4** எம்பெருமானோடு சேதநனைக் கூட்டிவைக்கும் ஆசார்யன் பிராட்டி இவர்களின் செயல்.

**5, 6** பரிந்துபேசுதற்குப் பிராட்டி வேண்டுவதன் காரணம்

**7, 8** ரக்ஷகனான எம்பெருமானை வசப்படுத்தும் உபாயமாகிய ப்ரபத்தி

**9, 10** ப்ரபத்தியின் செய்தற்கு எளிமை, செய்யும் வகை முதலியன

**11, 12** ப்ரபத்திக்குப் பின் செய்ய வேண்டிய காரியங்கள்

13, 14 ப்ரபத்தி செய்த பின் நேரும் பாபங்களைப் போக்கும் வழியும் அதனால் விளையும் பலனும்

15, 16 ப்ரபத்திக்கு உள்ள விசேஷப் பெருமை

17, 18 ப்ரபத்திக்குப் பின் ஸுகதுக்க - அநுபவமோ இரண்டு மல்லாத அநுபவமோ வந்தால் அவற்றில் ப்ரப்ந்நன் கொள்ள வேண்டிய எண்ணம்.

19, 20 சாஸ்த்ரத்தை மீறி நடக்க நேரும்போது அதைத் தவிர்க்கும் வழி

21, 22 தகுந்த கைங்கர்யங்களில் எம்பெருமான் உகப்பதில் உள்ள வேற்றுமை

23, 24 ப்ரபந்நன் கைங்கர்யங்கள் செய்து கொண்டு வாழ்வதற்குப் பாங்கான வாஸஸ்தாநம்

25,26,27 மற்றும் சிலவும் அங்கமோ என்று எழும் ஐயங்களைத் துடைத்தல்

28,29,30 ஸம்ஸாரத்துக்கும் மோக்ஷத்துக்கும் நடுவில் உள்ளவனுக்கு மிக்க மகிழ்ச்சியை விளைவிப்பதற்கும் மோக்ஷத்தை விரும்பாத சேதநனுக்கு அதில் விருப்பத்தை உண்டாக்குவதற்கும் ப்ரபத்திக்கு முன்பு உள்ள காலம் - ப்ரபத்திக்குப்பின் இச்சரீரம் உள்ளவரை உள்ள காலம் - சரீரம் கழிந்தபின் மோக்ஷத்தைப் பெறும் காலம் ஆகிய முக்காலங்களிலும் உள்ள வேற்றுமை.

முடிவு வாக்கியம் - எல்லா விஷயங்களையும் சேர்த்து அநுபவிக்கும்படி இந்தச் சிறு க்ரந்தம் அமைந்திருக்கும் சிறப்பைக் காட்டுகின்றது.

மேல் 'சிறுபயனில் படியாத' என்னும் பாசுரம் ஆசார்யன் பெருமையையும் எம்பெருமான் குணங்களையும் கண்டு மோக்ஷம் பெறுவதில் சிறிதும் ஐயமற்று நிற்கும் ப்ரபந்நன் ப்ரபத்திக்குப் பின்பு முக்தன் பரமபதத்தில் செய்யும் கைங்கர்யத்தைப் போல இவ்வுலகில் தான் செய்யும் கைங்கர்யத்தைக் கண்டு மகிழ்ச்சி கொள்வதைக் கூறுகின்றது.

மேல் 'ரக்ஷந்து' என்று ஆர்யாவ்ருத்தத்தில் அமைந்துள்ள சுலோகம் இந்தக் கிரந்தத்தின் பெருமையை உணர்ந்து தகுதியுடையன் - தகுதியற்றவன் என்ற பாகுபாட்டை அறிந்து தகுதியுடையனுக்கு இக்கிரந்தத்தை உபதேசிக்குமாறு கூறுகின்றது.

ரஹஸ்ய ரத்நாவளி ஹ்ருதயம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம .

# 15. தத்த்வத்ரய சுளகம்

## 1. முன்னுரை

சுளகம் என்ற சொல்லுக்கு உள்ளங்கை என்று அர்த்தமாகும். அசேதநம் - சேதநன் - ஈச்வரன் என்னும் தத்துவங்களைப் பற்றிய விஷயங்களை உள்ளங்கையில் வைத்தாற் போல் எளிதில் காட்டுவதால் இந்த ரஹஸ்யத்திற்கு இப்பெயர் வந்தது

### தத்த்வஜ்ஞாநத்தின் ஆவச்யகதை

ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளே சேதநர்க்கு உபாயமாகவும் அதனால் வரும் பலனாகவும் ஆகும். இவ்வெண்ணத்துடன் அவன் திருவடிகளைப் பற்ற வேண்டுமானால் முதலில் மூன்று தத்துவங்களைப் பற்றிய உண்மைகளை விரிவாய் அறிய வேண்டும். இவற்றை அறிந்தால் மட்டுமே சில விபரீத ஜ்ஞாநங்கள் ஒழியும். அவையாவன - (1) சரீரத்திலும் ஆத்மா வேறுபட்டிருக்கும் உண்மையை அறியாமல் சரீரத்தையே ஆத்மாவாகக் கருதுதல். (2) எம்பெருமானுக்கு அடிமையாக இருக்கும் ஆத்மாவை ஸ்வதந்த்ரனாக நினைத்தல். மூன்று தத்துவங்களையும் நன்கு அறிந்தால்தான் இந்த விபரீத எண்ணங்களெல்லாம் ஒழியும்.

### தத்த்வங்கள் மூன்று

மூன்று தத்துவங்களாவன - (1) அசேதநம் (2) சேதநன் (3) ஈச்வரன்

### அசேதநம் - விளக்கம்

அசேதநம் என்ற சொல் அறிவற்ற வஸ்துவைக் குறிக்கும். அவை மரம் - கல் - மண் முதலியன. அசேதந வஸ்துவுக்கு அசைதல் முதலிய செயல் உண்டு. ஆனால் அறியும் தன்மை இல்லை. ஆதலால் அறிவைக் கொண்டு செயல்புரியும் தன்மையாகிய கர்த்ருத்வம் இல்லை. அறிவு இல்லாமையாலே ஸுகதுக்கங்களை அநுபவித்தலாகிய போக்த்ருத்வமும் இல்லை.

### அசேதநம் மூன்று

இந்த அசேதந வஸ்து மூவகைப்படும். (1) த்ரிகுணம் (2) காலம் (3) சுத்த ஸத்துவம். இந்த மூன்றுக்கும் அறிவு கிடையாது. ஆதலால் அசேதநமாகும்.

## தர்மபூதஜ்ஞாநத்தின் நிலை

இங்கு ஒரு கேள்வி - ஜீவனிடம் உள்ள அறிவைத் தர்ம பூதஜ்ஞாநம் என்று கூறுகின்றோமே! அதற்கும் அறிவு இல்லையே! அறிவுக்கு ஓர் அறிவு ஏது? ஆதலின் அதுவும் ஓர் அசேதந வஸ்துவாய் உள்ளதே! இந்த மூன்றைப் போல் அதையும் அசேதந வஸ்துவில் சேர்த்து நான்காகக் கூற வேண்டாமா? என்று.

ஸமாதாநம் - உண்மை தான். இந்தத் தர்மபூதஜ்ஞாநத்தை அசேதந வஸ்துவில் சேர்த்துக் கூறாததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. (1) அறிவுடையனான சேதநனைப் பற்றி விளக்கும்போது அந்த ஜீவனுக்கு அடைமொழியாக அறிவு நிற்கின்றது. சேதநன் என்ற சொல்லுக்கே அறிவுடையனென்று தானே பொருள்! அதில் அடைமொழியாய் நிற்கும் அறிவுதானே தர்மபூதஜ்ஞாநமென வழங்குகின்றது! இவ்வாறு தர்மபூதஜ்ஞாநம் விசேஷணமாய்ச் சொல்லப்பட்டு விடுவது ஒன்று. 2) கீழ்க்கூறிய மூன்று அசேதந வஸ்துக்களைப் பிரித்து ஒவ்வொன்றையும் விளக்குவதில் முக்கியமான விசேஷ பலன் உண்டு. அத்தகைய பயன் தர்மபூதஜ்ஞாநத்தைப் பற்றி விளக்குவதில் இல்லையென்பதால் இந்த மூன்று அசேதநங்களுடன் சேர்க்கவில்லை.

## அசேதநங்களை விளக்குவதன் பயன்

இந்த மூன்றை மட்டும் பிரித்து விளக்குவதன் காரணத்தை ஆராய்வோம். த்ரிகுணம் என்னும் ப்ரக்ருதியைப் பற்றி விளக்கினால் இருபத்தைந்தாவது தத்துவமாகிய ஜீவனைப் பற்றி விளக்கமாய் அறியமுடியும். அந்த ப்ரக்ருதியின் மாறுபாடாகிய சரீரத்தினும் ஜீவனுக்கு வேறுபாடு தெரியவேண்டுமன்றோ! இவ்வாறே காலத்தைப் பற்றிய விளக்கம் தெரிந்தால்தான் இம்மைச் செல்வம் நெடுங்காலம் நிலைக்கக்கூடியதன்று என்ற விவேகம் ஏற்படும். மேலும் இந்தக் காலத்திற்குக் கட்டுப்படாத பரமபதத்தில் ஆசை உண்டாகும். மேலும் அந்த அந்தக் காலத்தில் செய்ய வேண்டிய காரியங்களை உரிய காலத்தில் செய்வதற்கு எண்ணம் கொள்ளவும் காலத்தைப் பற்றிய விளக்க அறிவு பயன்படும். இங்ஙனமே சுத்த ஸத்துவத்தைப் பற்றிய விரிவான அறிவு உபாயமும் பலனுமாய் நிற்கும் எம்பெருமானுடைய திருமேனி முதலியன சுத்த ஸத்துவ மயமாயிருப்பதை நன்கு அறியப் பயன்படும். இந்த மூன்று அசேதநங்களின் விளக்க அறிவு

பயன்படுமளவுக்குத் தர்மபூதஜ்ஞாநத்தின் விளக்கம் பயன்படாதாகையாலும் அதை இந்த மூன்று அசேதநங்களுடன் சேர்க்கவில்லை.

### த்ரிகுணம் (ப்ரக்ருதி) விளக்கம்

த்ரிகுணம் என்ற சொல்லுக்கு மூன்று குணங்களையுடைய வஸ்து என்று பொருள். ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களுக்கும் இருப்பிடமான ப்ரக்ருதி, த்ரிகுணம் என வழங்கும். இந்த ப்ரக்ருதி சேதநர்களுக்குப் பகவானுடைய ஸ்வரூபத்தைக் காட்டாமல் மறைக்கின்றது. இன்னும் பல தீங்குகளையும் விளைவிக்கின்றது.

### மூன்று குணங்களின் விளக்கம்

ஸத்துவம் - இது உயர்ந்த குணம். இது சேதநருக்கு வஸ்துக்களின் உண்மையான நிலையைக் காட்டும். மனிதன் ஸுகம் பெறுதற்கும் காரணமாகும். இந்தக் குணம் சிலருக்கு மிகவும் அதிகமாகி விட்டால் மோக்ஷத்துக்குச் சாதனமான செயலைச் செய்யத் தூண்டி உதவி புரியும். ரஜஸ் என்பது நடுத்தரமான ஒரு குணம். இது சேதநருக்கு ஆசை - துன்பம் - விபரீத ஜ்ஞாநம் முதலியவற்றை உண்டாக்கும். தமஸ் என்பது இழிவான குணம். இது மனிதருக்குக் கவனமில்லாமை - சோம்பல் - உறக்கம் - அஜ்ஞாநம் முதலியவற்றைத் தரும்.

### ஸ்ருஷ்டி ப்ரளயங்கள்

இந்த மூன்று குணங்களும் ப்ரக்ருதியில் ஏற்றக் குறைவின்றி ஸமமான அளவுக்கு இருக்கும் ஸமயமே மஹாப்ரளயமாகும். ஸ்வதந்த்ரனான எம்பெருமான் ஸங்கல்பித்தால்தான் இம்மூன்று குணங்களும் ஸமமான அளவுக்குச் சேரும். எப்பொழுது அவன் ஸங்கல்பிப்பான் என்பதைச் சாஸ்த்ரம் கூறியுள்ளது. அந்த ஸங்கலபத்துக்கு அவனே காலத்தைக் குறிப்பிட்டுக் கொள்வான்.

இவ்வாறே இந்த மூன்று குணங்களும் ப்ரக்ருதியில் சில ஸமயத்தில் ஒன்றுக்கொன்று ஏற்றக் குறைவாய் இருக்கும். இந்த ப்ரக்ருதி அப்பொழுதுதான் மஹாந் அஹங்காரம் முதலிய மாறுபாடுகளை அடைகின்றது. அப்பொழுது தான் உலகில் ஸ்ருஷ்டி (படைப்பு) ஏற்படுகின்றது. நம் சரீரத்தில் வாதம் - பித்தம் - கபம் என்ற தாதுக்களில் ஒன்று குறைவதும் மற்றொன்று கூடுவதுமாய் இருக்கவில்லையா? அவ்வாறே ப்ரக்ருதியில்

இம்மூன்று குணங்களுள் ஒன்று ஏறுவதும் மற்றொன்று இறங்குவதுமாய் இருப்பதுண்டு. அப்பொழுதுதான் ப்ரக்ருதி பல வஸ்துக்களாய் மாறுபாட்டையடைகின்றது. இவ்வாறு குணங்களில் ஏற்படும் ஏற்றச் சுருக்கங்களுக்கு அளவேயில்லை.

மூல ப்ரக்ருதி

முற்கூறிய மூன்று குணங்களும் ஸமமான நிலையில் இருக்கப் பெற்ற வஸ்துவே மூல ப்ரக்ருதி என வழங்குகின்றது. இந்த மூலப்ரக்ருதிக்கு அறிவு கிடையாது; அழிவு கிடையாது; பிறர் பயனுக்காகவே ஏற்பட்டது. எப்பொழுதும் மாறுபாடு அடைந்து கொண்டேயிருப்பது. ஸ்ரீவைகுண்டம் தவிர மற்ற இடங்களில் இது இல்லாத இடம் இல்லையென்னலாம்படி எங்கும் பரவியுள்ளது. இந்த ப்ரக்ருதி மிவும் ஸூக்ஷ்மமான சில மாறுபாட்டை அடையும்போது அதற்குத் தமஸ் முதலிய சில பெயர்ப் பிரிவுகளைச் சுருதி சொல்லுகின்றது.

வ்யக்தம் அவ்யக்தம் - விளக்கம்

இந்த ப்ரக்ருதி பல்வேறு வஸ்துக்களாய் மாறுபடும்போது வ்யக்தமெனப் பெயர் பெறும். ஒரே வகையான மாறுபாட்டை அடையும்போது அவ்யக்தமெனப் பெயர் பெறும். இந்த ப்ரக்ருதி மாறுபடும் நிலையில் வயக்தமெனப் பெயர் கொண்டு மஹாந் முதல் ப்ருதிவீ வரை உள்ள இருபத்துமூன்று தத்துவமாக மாறும். ப்ரக்ருதியின் முழுப் பகுதியும் இப்படி இருபத்து மூன்று தத்துவங்களாக மாறுவதில்லை. அதில் ஒரு பகுதியே இப்படி மாறுகின்றது. மற்ற பகுதி மாறாமல் அப்படியே இருந்து கொண்டிருக்கும். ப்ரக்ருதியில் மற்ற வஸ்துக்களாக மாறுபடும் பகுதி கடலில் அலைகளையுடைய பகுதி போன்றதாகும். மாறுபடாமல் அப்படியே நிற்கும் பகுதி கடலில் அலையேயில்லாத இடம் போன்றதாகும். இப்படி மஹாந் முதலிய மாறுபாட்டை அடையாமல் அப்படியே நிற்கும் ப்ரக்ருதியின் பகுதியிலும் கூட ப்ரளய நிலையில்போல் மிகவும் ஸூக்ஷ்மமாய் நமக்குப் புலப்படாதனவாய் ஒரே வகையான மாறுபாடுகள் இருந்து கொண்டேயிருக்கும்.

தத்துவங்கள் பிறக்கும் முறை

இப்படி ப்ரக்ருதியில் ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களின் ஏற்றச் சுருக்கங்களால் ஏற்படும் மாறுபாடுகளில் முதல் மாறுபாடு மஹாந் என்பது. ஜீவனுக்கு

நிச்சயவடிவமான .ஞானத்தை மநஸ்ஸுதான் உண்டாக்குகின்றது. அப்பொழுது இந்த மஹாந் மனத்துக்குத் துணையாயிருக்கும். ஆதலால் இந்த மஹாந் புத்தி என்று வழங்கப்பெறும். இந்த மஹானும் தன்னிடம் உள்ள குணத்தைக் கொண்டு மூன்று வகைப்படும். மஹானில் ஸத்துவகுணம் அதிகமாயிருந்தால் ஸாத்துவிக மஹாந் என்றும், ரஜோ குணம் மிகுந்திருந்தால் ராஜஸ மஹாந் என்றும், தமோ குணம் அதிகமாயின் தாமஸ மஹாந் என்றும் அழைக்கப்படும்.

இந்த மஹானிலிருந்து பிறக்கும் தத்துவம் அஹங்காரம் என்பது. இதன் செயல் வருமாறு - ஜீவனிலும் வேறுபட்ட சரீரத்தையே ஆத்மாவாக நினைத்து அதில் நான் என்ற எண்ணத்தை மனம் உண்டாக்குகின்றது. அப்பொழுது மனத்துக்கு இந்த அஹங்காரம் துணை புரிகின்றது. அதனாலேயே இதற்கு அஹங்காரம் என்ற பெயர் வந்தது. இந்த அஹங்காரமும் தனக்குக் காரணமான மஹான் போலேஸாத்துவிகம் - ராஜஸம் - தாமஸம் என்று குணங்களின் மிகுதி குறைவுகளைக் கொண்டு மூவகைப்படும். இவற்றுள் ஸாத்த்விக அஹங்காரத்தினின்று இந்திரியங்கள் பிறக்கின்றன. தாமஸ அஹங்காரத்தினின்று பின் தரும் விளக்கத்தின்படி பூதங்கள் பிறக்கின்றன. இந்த இரண்டு அஹங்காரங்களும் தத்தம் காரியங்களைப் பிறப்பிக்கும்போது ராஜஸ அஹங்காரம் இவ்விரண்டுக்கும் தூண்டித் துணை புரியும்.

உள் இந்திரியம் - மனம்

ஸாத்துவிக அஹங்காரத்தினின்று பதினொன்று இந்திரியங்களும் பிறக்கின்றன. இந்த்ரியங்கள் உள் இந்திரியங்களென்றும் புற இந்திரியங்களென்றும் இருவகைப்படும். உள் இந்திரியமென்பது மனம்தான். இந்த மனம் ஸம்ஸாரலோகத்தில் உள்ள சேதநர்கள் ஒன்றைச் செய்ய ஸங்கல்பிப்பதற்கும் ஒன்றை நினைத்தற்கும் மற்றும் சில எண்ணங்கள் உண்டாவதற்கும் காரணமாயிருக்கும். வெளி இந்திரியங்கள் தத்தம் செயலைச் செய்ய இந்த மனம் துணையாய் நிற்கும். உலகில் மனிதனுக்கு நிச்சயமான எண்ணம் உண்டாகின்றதன்றோ! அந்த எண்ணத்துக்கு மனம்தான் காரணமாகின்றது. அப்பொழுது மனம் புத்தி என்று பெயரால் வழங்கும். மனிதன் ஒன்றை வேறொன்றாகத் தவறிக் கருதுகின்றான். அதற்கும் மனம் தானே காரணம்! அந்த நிலையில் மனம்

அஹங்காரம் என்ற பெயர் பெறுகின்றது. மனிதன் ஒரு விஷயத்தைப் பற்றி ஆலோசிக்கின்றான். இந்த ஆலோசனைக்கும் மனமே காரணம். இந்த நிலையில் மனம் சித்தம் என்று அழைக்கப்பெறும்.

மனத்தின் முக்கியத் தன்மை

இந்த மனம் உலகில் உள்ள விஷயங்களில் ஈடுபடுமானால் அதிலேயே பற்றுக்கொண்டு ஸம்ஸாரபந்தத்தில் அகப்பட்டுத் தவிக்கக் காரணமாகின்றது. உலகத்தில் உள்ள புறப்பொருள்களை உதறித் தள்ளி நமக்கு ஏற்ற விஷயமான எம்பெருமானிடம் ஈடுபடுமானால் அந்த மனமே அவனை அடைதலாகிய மோக்ஷத்திற்கு வேண்டிய சாதனங்களைச் செய்வித்து மோக்ஷம் பெறக் காரணமாகும்.

புற இந்திரியங்களின் விளக்கம்

வெளி இந்திரியங்கள் பத்து. கர்மேந்திரியங்கள் ஐந்து, ஜ்ஞாநேந்திரியங்கள் ஐந்து, (1) வாக்கு (2) கை (3) கால் (4) மலத்வாரம் (5) ஜலத்வாரம் ஆகிய ஐந்தும் கர்மேந்திரியங்கள். வாக்கு பேசுவதற்கும், கை எடுப்பதற்கும், கால் நடப்பதற்கும், மலத்வாரம் மலத்தை வெளியேற்றுவதற்கும், ஜலத்வாரம் மூத்ர நீரை வெளியேற்றுதற்கும் சாதனமாகின்றன. (1) செவி (2) தோல் (3) கண் (4) நாக்கு (5) மூக்கு ஆகிய ஐந்தும் ஜ்ஞாநேந்திரியங்கள். செவியால் ஒலியைக் கேட்கலாம். உடலால் ஒன்றைத் தொடலாம். கண்ணால் நிறத்தைப் பார்க்கலாம். நாவினால் சுவையை ருசிக்கலாம். மூக்கினால் மணத்தை முகரலாம். இவற்றுள் கண் நிறத்தைக் காட்டுவது போல் நிறத்துக்கு இருப்பிடமான வஸ்துவையும் காட்டும். இங்ஙனமே தோலெனப்படும் ஸ்பரிசேந்திரியம் ஸ்பரிசத்து இருப்பிடமான பொருளையும் காட்டும். உதாஹரணமாய் - கண் சிவப்பு நிறத்தைக் காட்டுவது போல் அந்நிறத்துக்கு இடமான ஆடையையும் காட்டுகின்றதன்றோ! அவ்வாறே ஸ்பரிசேந்திரியம் கண் இல்லாவிடினும் தடவிப்பார்க்கும் போது ஸ்பரிசத்துக்கு இடமான பொருளையும் காட்டுகின்றதன்றோ!

ஜ்ஞாநேந்திரியங்களுக்குப் பூதங்களின் உதவி

இந்த ஜ்ஞாநேந்திரியங்கள் ஐந்தும் தத்தம் செயலைப் புரியும் போது அவற்றின் சக்தியை ஐந்து பூதங்களும் வளர்த்துப்

போஷிக்கின்றன. காதுக்கு ஆகாயமும், ஸ்பரிசேந்திரியத்துக்கு வாயுவும், கண்ணுக்குத் தேஜஸ்ஸும், நாவுக்கு ஜலமும், மூக்குக்குப் பூமியும் துணைநின்று அவ்விந்திரியங்களின் சக்தியை வளர்க்கின்றன. இவ்வாறே உள்ளிந்திரியமாகிய மனத்துக்குப் பூமி என்னும் பூதம் போஷகமாயுள்ளது. ப்ராண வாயுவை ஜலம் போஷிக்கிறது. வாக்குக்குத் தேஜஸ் போஷகமாகும்.

பஞ்ச தந்மாத்ரங்கள் - விளக்கம்

தாமஸ அஹங்காரத்தினின்று பூதங்கள் தோன்றுவதாகக் கூறினோம்; அவை பிறக்கும் முறையின் விளக்கம் வருமாறு- நாம் பூதங்கள் ஐந்து என்று அறிவதுபோல் தந்மாத்ரங்கள் ஐந்து என்பதையும் அவற்றின் உருவத்தையும் அறிந்து கொள்ள வேண்டும். தந்மாத்ரம் என்றால் முந்திய நிலை முழுதும் கழியாமலும் பிந்திய நிலை முழுதும் வராமலும் நடுநிலையில் உள்ள பொருள். உதாஹரணம் - பாலைக் காய்ச்சித் தோய்த்துத் தயிராக்குகின்றோம். பால்தான் தயிராகின்றது. ஆனால் பாலைக் காய்ச்சித் தோய்த்த பின் பாலின் தன்மை முழுதும் நீங்காமலும் தயிர்நிலை முழுதும் வந்துவிடாமலும் உள்ள ஒரு நிலையைக் காண்கின்றோமே! இந்த நிலையில் உள்ள வஸ்துவை ஏடு என்று கூறுவதுண்டு. பூதங்கள் விஷயத்திலும் இந்த நிலையில் உள்ள த்ரவ்யத்தைத் தான் தந்மாத்ரம் என்கின்றோம்.

பஞ்ச பூதங்கள் பிறக்கும் முறை

ஐந்து பூதங்களுக்கும் ஐந்து தந்மாத்ரங்கள் உண்டு. அவை பிறக்கும் முறை - தாமஸ அஹங்காரத்தினின்று சப்த - தந்மாத்ரம் உண்டாகின்றது. இதனின்று ஆகாசம் என்னும் பூதம் உண்டாகின்றது. சப்த - தந்மாத்ரம் என்றால் தாமஸ அஹங்காரத்தின் உருவம் முழுதும் அழிந்து விடாமலும் ஆகாசத்தின் உருவம் முழுதும் வந்து விடாமலும் இருக்கும் நடுவிலுள்ள ஒரு நிலையுள்ள வஸ்து. இப்படியே மற்ற தந்மாத்ரங்களைப் பற்றியும் அறிந்து கொள்க. இந்த நிலையில் உள்ள வஸ்து மிகவும் ஸூக்ஷ்மமான பூத உருவமாகும். ஆகாசத்தினின்று ஸ்பர்ச-தந்மாத்ரம் பிறக்கும். இதனின்று வாயு என்னும் பூதம் பிறக்கும். வாயுவினின்று ரூப-தந்மாத்ரம் பிறக்கும். இதனின்று தேஜஸ் தோன்றும். இதனின்று ரஸ-தந்மாத்ரம் உண்டாகும். ரஸ-தந்மாத்ரத்தினின்று ஜலம் பிறக்கும். ஜலத்தினின்று

கந்த தந்மாத்ரம் உண்டாகும். இதனின்று ப்ருதிவீ என்னும் பூதம் தோன்றும். இதுவே பஞ்ச பூதங்களும் பிறக்கும் முறையாகும்.

தந்மாத்ரங்களில் சப்தம் ஸ்பர்சம் முதலிய குணங்கள் மிக ஸூக்ஷ்மமமாய் இருக்கின்றன. ஆதலால் தந்மாத்ரங்களை அவிசேஷங்கள் (சப்தம் முதலிய குணங்கள் தெளிவாய் அறிய முடியாதன) என்று கூறுவதுண்டு. பூதங்களில் அந்த குணங்கள் தெளிவாயிருப்பது பற்றி பூதங்களை விசேஷங்களென்று கூறுவதுண்டு.

### பஞ்சபூதங்களின் குணங்கள்

ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களிலும் சப்தம் முதலிய குணங்கள் மேன்மேலும் அதிகமாயிருக்கும். அதாவது - ஆகாசத்தில் சப்தம் என்னும் ஒரே குணம் உள்ளது. வாயுவில் சப்தமும் ஸபர்சமும் உள்ளன. தேஜஸ்ஸில் சப்தம் - ஸ்பர்சம் - ரூபம் என்னும் மூன்று குணங்களும் இருக்கின்றன. ஜலத்தில் சப்தம் - ஸ்பர்சம் - ரூபம் - ரஸம் என்னும் நான்கு குணங்களும் வாழ்கின்றன. ப்ருதிவியில் சப்தம் - ஸ்பர்சம் - ரூபம் - ரஸம் - கந்தம் ஆகிய ஐந்து குணங்களும் உறைகின்றன.

சில இடங்களில் தந்மாத்ரங்களைச் சபதம் - ஸ்பர்சம் - ரூபம் என்று குணங்களின் பெயராலேயே கூறியிருக்கின்றன. இது எப்படிப் பொருந்தும்? தந்மாத்ரம் என்பது ஏடு (கலிலம்) போன்ற நடுநிலையில் உள்ள வஸ்து என்றன்றோ கீழே கூறியிருப்பது! சப்தம் முதலியவற்றை அவற்றிலுள்ள குணங்களாகவல்லவோ கூறியிருப்பது! வஸ்துவை, அதனில் வேறுபட்டு அதில் உள்ள குணங்களின் பெயரால் கூறுவது பொருந்தாதே! என்று கேள்வி. ஸமாதாநம் - உண்மைதான். ஒரு வஸ்துவை அதன் குணத்தின் பெயராலேயே சொல்வது உபசார வழக்கு என்று அறிக.

### பூதங்கள் பிறப்பதென்பது நிலைமை மாறுதலே

ஒரு வஸ்து மற்றொன்றாக மாறுகின்றதென்று கீழே கூறினோம். ப்ரக்ருதியின்று மஹாந் என்னும் தத்துவமும், மஹானிலிருந்து அஹங்காரமென்னும் தத்துவமும், அஹங்காரத்தினின்று இந்திரியங்களும் பூதங்களும் பிறப்பனவாகக் கூறப்பட்டது. மஹானிலிருந்து அஹங்காரம் பிறக்கின்றது என்பதற்கு மஹானிலிருந்து புதிதாய் அஹங்காரமென்ற வஸ்து உண்டாவதென்ற கருத்து இல்லை. மஹானே அஹங்காரமென்று மாறுபடுகின்றதென்றுதான்

பொருள். பழங்காலத்தில் பனையோலைகளைத் தோடாகச் சுருட்டிப் பெண்கள் காதுகளில் அணிவதுண்டு. நீளமாயிருந்த பனையோலை சுருட்டினால் தோடு என்ற நிலையைப் பெறுகின்றது. புதிதாகத் தோடு உண்டாவதில்லை.

இப்படி உலகில் ஒரு நிலைமையில் உள்ள வஸ்து வேறு நிலையை அடைந்ததும் நிலைமையின் மாறுதலை மாத்திரம் கொண்டு பெயர் வேறுபடுவதுபோல் இங்கும் மஹாந் என்னும் தத்துவம் அஹங்காரமென்னும் நிலையை அடைந்தபோது அஹங்காரம் என்ற பெயரைப் பெறுகின்றது. ஆகவே பெயர் மாற்றம் நிலைமையின் மாறுதலைப்பற்றியதேயன்றி, புதிய வஸ்து உண்டாவதைப் பற்றியதன்றென்று உணர்க. ஆனால் ஐம்பூதங்களுள் ஒன்றான ப்ருதிவி வேறு வஸ்துவாக மாறும்போது அப்பொழுது ப்ருதிவி என்றே வழங்குவது எப்படியென்னில், அப்பொழுது அந்த வஸ்துவுக்கு ப்ருதிவி என்ற தன்மையும் விடாமல் இருந்து வருவதால் ப்ருதிவி என்றும் வழங்குமென உணர்க.

ஸமஷ்டி - வ்யஷ்டி ஸ்ருஷ்டி:

மஹாந் என்ற தத்துவம் தொடங்கி ப்ருதிவி வரையில் உள்ள எம்பெருமானது படைப்பு ஸமஷ்டி ஸ்ருஷ்டியெனப்படும். இந்த மஹான் முதலிய தத்துவங்களின் பகுதிகளைக் கொண்டு செய்யப்படும் படைப்பு வ்யஷ்டி ஸ்ருஷ்டி எனப்படும்.

அண்டங்கள் எண்ணற்றவை

நாம் இருப்பது ஓர் அண்டம். இப்படி எத்தனையோ அண்டங்கள் உள்ளன. அண்டந்தோறும் பிரமன் முதலிய தேவர்கள் வேறுபடுவர். அண்டங்களனைத்தையும் சுற்றித் தத்துவங்கள் மூடிக் கொண்டிருக்கின்றன. அவை ஆவரணங்களெனப்படும். அண்டத்துக்குள்ளேயே பதினான்கு லோகங்கள் இருக்கும் நிலை முதலியன அதியற்புதமாயிருக்கும்.

வஸ்துக்களின் படைப்பு - பஞ்சீகரணம் - விளக்கம்

மேலும் பூதங்களைக் கொண்டு எம்பெருமான் பல வஸ்துக்களைப் படைக்கின்றான். படைக்கப்படும் ஒவ்வொரு வஸ்துவிலும் எல்லாப் பூதங்களுடைய அம்சத்தையும் கலந்தே படைக்கின்றான். இவ்வாறு கலப்பதைப் பஞ்சீகரணம் என்பர். பஞ்சீகரணமாவது - ஈச்வரன் ஒவ்வொரு பூதத்தையும் இரண்டாகப் பிரிக்கின்றான். ஒவ்வொரு பாதியை நிறுத்திக் கொள்கின்றான்.

மற்றொரு பாதியான பகுதிகளை நான்கு நான்கு கூறாகப் பிரிக்கின்றான். ஒவ்வொரு பூதத்தின் பாதி பாகத்தை மற்ற பூதங்களின் அரைக்கால் அரைக்கால் பாகங்களுடன் சேர்த்து முழு வடிவமாக்குகின்றான். இங்ஙனம் எல்லாப் பூதங்களையும் கலக்கும் போது அந்த அந்தப் பூதத்தின் அரைப்பகுதியும் மற்ற நான்கு பூதங்களின் அரைக்கால் அரைக்கால் பகுதிகளும் சேர்ந்து முழு உருவமாகின்றது (1/8+1/8+1/8+1/8+1/8= 1) உதாஹரணமாய் ப்ருதிவியில் பாதியும் ஜலம் - தேஜஸ் - வாயு - ஆகாசம் ஆகிய நான்கில் 1/8 பங்குகளும் சேர்ந்து ஒரு வஸ்துவாகின்றது. இதில் ப்ருதிவியின் பாகம் மிகுத்திருப்பதால் பார்த்திவம் (ப்ருதிவியைச் சார்ந்த வஸ்து) என்று வழங்கும். இப்படியே மற்ற ஒரு பூதத்தின் அரை அரைப் பகுதியும் மற்ற பூதங்களின் அரைக்கால் அரைக்கால் பகுதியாக அரைப் பாகமும் சேர்ந்து வஸ்துக்கள் உண்டாகும்போது பாதி பாகத்தை அளித்த தத்துவத்தைச் சார்ந்த பொருளாய் வழங்கும். இப்படி எம்பெருமான் பூதங்களைக் கலந்து படைப்பதைத்தான் பஞ்சீகரணம் (ஐந்து பூதங்களையும் கலத்தல்) என்று சாஸ்த்ரம் கூறும்.

இந்த அண்டம் - அதன் மறைவு - பதினான்கு லோகங்களின் விசேஷங்கள் - பஞ்சீகரணம் முதலியவற்றை எல்லாம் புராணங்களில் விரிவாய்க் காணலாம். ஆகவே இதுவரை கூறியவாற்றால் ப்ரக்ருதி - மஹாந் - அஹங்காரம் - ஐந்து பூதங்கள் - ஐந்து தந்மாத்ரங்கள் பதினொன்று இந்திரியங்கள் ஆக இருபத்தினான்கு தத்துவங்கள் என்று ஏற்பட்டது இவற்றுள் ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், ஐந்து பூதங்கள் ஐந்து தந்மாத்ரங்கள் இவை சரீரத்துக்கு உபாதாந காரணமாகின்றன. மட்குடத்திற்கு மண் உபாதான காரணமாவதுபோல் இந்தப் பதின்மூன்றும் சரீரத்தை உட்படுத்த உபாதானகாரணமாகின்றன. எஞ்சிய இந்திரியங்கள் பதினொன்றும் - ஒவ்வொன்றும் கணக்கிட்டுப் பார்க்க முடியாதபடி எண்ணற்றனனவாய் ஒவ்வொரு மனிதனுக்கும் சரீரந்தோறும் வேறுபட்டனவாகும். இந்த இந்திரியங்கள் எல்லாம் ஓர் ஆபரணத்தில் பதித்த இரத்தினங்கள் போல் சரீரத்தில் அமைந்துள்ளன.

சரீர லக்ஷணம்

சரீரத்திற்கு இலக்கணம் வருமாறு - ஜீவனைக் குறித்து ஆதேயமாய் விதேயமாய் சேஷமாய் உள்ளது சரீரம். (1)

ஆதேயமாயிருத்தலாவது - ஜீவனது ஸ்வரூபம் இருந்தால் தான் சரீரம் நிற்கும். ஜீவனது ஸ்வரூபம் இருந்தால்தான் சரீரம் நிலைத்து நிற்கும். ஜீவன் இல்லாவிடில் சரீரத்தின் இருப்பும் அது நிலைபெற்று நிற்றலும் ஏது? ஆதலால் சரீரம் எப்பொழுதும் ஆதேயமாக இருக்கும். (2) விதேயமாயிருத்தலாவது - ஜீவன் இஷ்டப்பட்டால்தான் கீழே விழாது நிற்க முடியும். அவன் ஸங்கல்பித்தால்தான் சரீரம் செயலைச் செய்ய முற்படும். ஆதலால் எப்பொழுதும் விதேயமாகின்றது. (3) சேஷமாயிருத்தலாவது - அறிவற்ற சரீரத்துக்கென்று தனிப்பயன் எதுவும் கிடையாது. ஜீவனுடைய பயனே சரீரத்துக்கும் பயனாகின்றது. ஆதலால் சரீரம் எப்பொழுதும் ஜீவனுக்குச் சேஷமாகின்றது. இப்படி மூன்று அம்சங்களும் சரீரமெனப்படும் வஸ்துவுக்கு இருப்பதால் சரீரமாகின்றது. சரீரம் எப்பொழுதும் ஜீவனை விட்டுப் பிரிக்க முடியாமல் இருக்கும்.

இப்படி த்ரிகுணமெனப்படும் வஸ்து பல வஸ்துக்களாக மாறுவதில் அந்த அந்த வஸ்துவுக்கு எப்பொழுது படைப்பு? எப்பொழுது அழிவு? என்ற காலவரையறையின் விளக்கமெல்லாம் சாஸ்த்ரங்களில் கண்டு கொள்க.

காலம்

காலம் - இதற்கு ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் என்னும் மூன்று குணங்களும் கிடையா. எதிர்காலம் - நிகழ்காலம் - இறந்த காலம் - நேற்று - இன்று முதலிய பேச்சுக்களுக்கெல்லாம் இந்தக் காலமே முக்கிய காரணமாகும். இது நித்யமாயிருப்பது: எப்பொழுதும் எங்கும் பரந்து நிற்பது. க்ஷணம் முதல் பரார்த்தம் (பரம் என்பது பிரமனது ஆயுட்காலம். அதில் பாதி) வரையில் காலம் ஒரு சக்கரம்போல் சுழன்று கொண்டிருக்கின்றது. இவையெல்லாம் இக்காலத்தின் பிரிவுகளேயாவன.

இந்தக் காலம், ப்ரக்ருதி - அதன் மாறுபாடுகள் - ஜீவன் ஆகியவற்றைக் காட்டிலும் வேறான வஸ்து என்று ப்ரமாணம் கூறுகின்றது. இந்தக் காலத்தைப்பற்றி விளக்கமாக அறிந்து விட்டால் இதுவரை பல காலங்கள் வீணாகப் போய் விட்டனவே என்று வருந்திப் புலம்ப வேண்டிய அவசியம் இல்லாமல் ஜீவன் தன் ஸ்வரூபத்துக்கு ஏற்றதாய்த் தான் உஜ்ஜீவிப்பதற்கு ஏற்ற செயல்களைச் செய்ய முற்பட முடியும். ஆதலின் காலத்தைப்பற்றிய அறிவு மிக அவசியமானது.

இப்படி நல்ல செயலில் சேதநர்கள் ஈடுபட்டால் எல்லாவற்றையும் நடத்துபவனான எம்பெருமான் அவர்கள் விஷயத்தில் கலியுகத்தின் தீமையை ஒடுக்கிக் கிருதயுகமாகச் செய்து அருள் புரிவான். எம்பெருமானுடைய லீலா விபூதியெனப்படும் இந்த ஸம்ஸார மண்டலத்தில் பல வஸ்துக்கள் தோன்றியும் அழிந்தும் ஆவனவெல்லாம் இந்தக் காலத்தின் பிரிவுகளின் வரையறைக்கு உட்பட்டேயாக வேண்டும். அதாவது - இன்ன காலத்தில் இந்த வஸ்து உண்டாகும்; இன்ன காலத்தில் அழியும் என்பவை முதலிய வரையறைக்குக் கட்டுப்பட்டே நடக்கும். ஆனால் சுத்த ஸத்துவமயமான ஸ்ரீவைகுண்டத்தில் காலம் என்ற வஸ்து இருந்தபோதிலும் அதன் சக்தி எதுவும் இல்லாமல் பெயரளவில் மட்டும் நிற்கும். அங்கு நடப்பனவெல்லாம் எம்பெருமானது ஸங்கல்பத்தால் மட்டுமே நடக்கின்றன.

சுத்த ஸத்துவம்

சுத்த ஸத்துவம் - ஸத்துவ குணத்துக்கு மட்டும் இருப்பிடமான ஒரு வஸ்து. இதில் ரஜோ குணமும் தமோ குணமும் சிறிதும் இருக்கமாட்டா. இதில் உள்ள ஸத்துவ குணமும் இந்த ஸம்ஸார மண்டலத்திலுள்ள ஸத்துவ குணம் போன்றதன்று. மிக விலக்ஷணமான ஒரு ஸத்துவ குணம். இந்தச் சுத்த ஸத்துவத்தின் உருவத்தைப் பற்றிச் சில கருத்துவேற்றுமைகள் உண்டு. அவையாவன - சிலர் இந்தச் சுத்த ஸத்துவத்தை ப்ரக்ருதியையும் காலத்தையும் போல ஜடம் என்கின்றனர். அதாவது - தானே ப்ரகாசிக்காமல் வேறொன்றால் புலப்படுத்த வேண்டியதாயுள்ளதென்கின்றனர். சிலர் சுத்த ஸத்துவத்தை ஸ்வயம் ப்ரகாசமென்கின்றனர். அதாவது - இதைக் காண்பதற்குச் சாதனமாய் வேறொன்றும் வேண்டியதில்லையென்றும் தானே ப்ரகாசித்துக் கொண்டிருக்குமென்றும் கூறுகின்றனர்.

ஆத்மா - தர்மபூதஜ்ஞாநம் - சுத்த ஸத்த்வம் - ஒற்றுமை வேற்றுமைகள்

இந்தச் சுத்த ஸத்துவம் ஸ்வயம்ப்ரகாசமென்னும் கொள்கையையே ஆதரித்துச் சில விஷயங்கள் கூறப்படுகின்றன. பரமாத்மா, அவனுடைய தர்மபூதஜ்ஞாநம், ஜீவாத்மா, அவனுடைய தர்மபூதஜ்ஞானம், சுத்த ஸத்த்வம் ஆகிய இவையெல்லாம் ஸ்வயம்ப்ரகாசம் என்று தேறுகின்றது. ஆத்மா 'நான்' என்று எப்பொழுதும் தோன்றிக் கொண்டேயிருப்பதால் இதை அறிய

வேறு ஞானம் வேண்டியதில்லை. ஆதலால் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசம். ஆத்மாவிடம் உள்ள ஞானம் தர்மபூதஜ்ஞா - நமெனப்படும். இந்த ஞானம் தன்னை அறிய வேறொரு ஞானம் வேண்டாதபடி தானே ப்ரகாசிப்பதால் இதுவும் ஸ்வயம்ப்ரகாசம் என்னப்படுகின்றது.

இவ்வாறே சுத்த ஸத்துவமும் தன்னை அறிய வேறொரு ஞானம் வேண்டாதபடி தானே ப்ரகாசிக்கின்றது. ஆதலின் இதுவும் - ஸ்வயம் ப்ரகாசம். ஆக ஆத்மாக்களும் தர்மபூத ஜ்ஞாநமும் சுத்த ஸத்த்வமும் ஸ்வயம் ப்ரகாசம் என்ற முறையில் ஒற்றுமையுடையன. ஆயினும் ஆத்மாவையும் தர்மபூதஜ்ஞாநத்தையும் காட்டிலும் சுத்த ஸத்துவத்துக்குச் சில வேற்றுமைகளும் உண்டு. இந்த வேறுபாடுகள் சாஸ்த்ரங்களால் நிச்சயிக்கப்பட்டனவாகும். உதாஹரணமாய் - ஆத்மாவுக்கு மாறுபாடு கிடையாது. சுத்த ஸத்துவம் வேறொரு வஸ்துவாய் மாறுபாட்டை அடைவது. தர்ம பூதஜ்ஞாநம் மற்றொரு வஸ்துவைக் காட்ட வல்லது. சுத்த ஸத்துவம் தன்னை மட்டும் காட்டுமேயன்றி மற்றொரு வஸ்துவைக் காட்ட வல்லதன்று. இப்படி சிற்சில வேற்றுமைகளையும் சாஸ்த்ரமே வரையறுத்துள்ளது.

இத்துணைத்தூரம் செல்வானேன்? ஆத்மாவுக்கும் அதன் தர்ம பூத ஜ்ஞாநத்துக்கும் தானே ப்ரகாசிக்கும் தன்மையில் ஒற்றுமை இருப்பினும் அந்த இரண்டுக்குள்ளேயே ஒன்றுக்கொன்று வேற்றுமைகளும் உண்டே! உதாஹரணமாய் - ஆத்மா, தான் புலப்படுமேயன்றி மற்ற வஸ்துவைக் காட்டாது. தர்மபூதஜ்ஞாநமோ தானே புலப்படுவதுடன் மற்ற வஸ்துவையும் காட்ட வல்லது. ஆத்மா தான் புலப்படுவதால் வரும் பயனைத் தானே பெறும். தர்மபூத ஜ்ஞாநம் தான் புலப்படுவதால் வரும் பலனைத் தான் அடைய முடியாது. அசேதநம்தானே! ஆத்மாவுக்குச் சுருக்கமோ மலர்ச்சியோ கிடையாது. தர்மபூதஜ்ஞாநம் சுருங்குவதும் மலருவதும் உண்டு. இந்த வேற்றுமைகளையும் சாஸ்த்ரம் வலியுறுத்திக் கூறுவதால் ஏற்றுக் கொண்டேயாக வேண்டியிருக்கின்றதன்றோ! இவ்வாறே இந்த இரண்டிலும் காட்டிலும் இந்தச் சுத்த ஸத்துவத்திற்குக் கீழ்க் கூறியவாறு சில வேற்றுமைகளையும் முன் கூறிய ப்ரமாணங்களை ஒத்த ப்ரமாணங்கள் வலியுறுத்திக் கூறுவதால் இசைந்தேயாக வேண்டும்.

### சுத்த ஸத்துவத்தின் வேறு பெயர்கள்

இந்தச் சுத்த ஸத்துவத்தின் தன்மைகளையும் பெருமைகளையும்

ஆராய்ந்தால் ப்ரஹ்மா முதலிய உயர்ந்த தேவர்களின் ஸ்தாநமெல்லாம் கூட நரகமாய்த் தோன்றும். இப்படி எல்லையற்ற இன்பம் விளைவிப்பதால் சுத்த ஸத்துவத்தையே பரமபதம் (அடைய வேண்டிய மிகச் சிறந்த ஸ்தாநம்) என்பர். இந்தச் சுத்த ஸத்துவத்தின் தன்மைகள் நமக்கு மிகவும் அநுகூலமாயிருப்பதால் சுத்த ஸத்துவத்தை ஆநந்தமயம் என்றும் கூறுவர். இது எம்பெருமானுடைய ஞானம் - சக்தி - பலம் - ஐச்வர்யம் - வீர்யம் - தேஜஸ் ஆகிய ஆறு குணங்களும் நமக்குப் புலப்படும்படி செய்வதால் ஷாட்குண்யமயம் என்றும் அழைக்கப்படும். பஞ்சோபநிஷந் மந்த்ரங்கள் என்று ஐந்து மந்த்ரங்கள் உண்டு. (இவை திருவாராதன காலத்தில் பூதசுத்தியில் அநுஸந்திக்கப்படுகின்றன) இந்த மந்த்ரங்கள் சுத்த ஸத்துவத்தின் தன்மைகளைக் கூறுவதால் சுத்தஸத்துவத்தைப் பஞ்சோபநிஷந்மயம் என்றும் கூறுவர். சுத்த ஸத்துவம், பூமி - ஜலம் - தேஜஸ் - வாயு - ஆகாசம் என்ற ஐந்து பூதங்களாய் உருக் கொண்டது. ஆனால் இந்த ஐந்து பூதங்களும் ஸம்ஸார மண்டலத்தில் உள்ள ஐந்து பூதங்கள் போன்றவையல்ல. ப்ரக்ருதி ஸம்பந்தமற்றவையாய் ஸ்ரீவைகுண்டத்தில் மட்டும் உள்ளனவான பூதங்கள். இந்தப் பூதங்கள் ஐந்தின் வடிவான சுத்த ஸத்துவத்தைப் பஞ்ச சக்தி மயம் என்பர்.

ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள ஐந்து பூதங்களும் அழிவற்றவை. அங்கு உள்ள சரீரங்களும் திருவாபரணங்கள் - திருவாயுதங்கள் - விமாநங்கள் - மண்டபங்கள் - கோபுரங்கள் முதலியனவுமெல்லாம் அழிவின்றி நித்யமாய் மிகுதியாயிருப்பது பற்றிச் சுத்த ஸத்துவத்தை நித்ய விபூதியென்பர். பரவாஸுதேவனுடையவும் நித்ய ஸூரிகளுடையவும் திருமேனிகள் எந்நாளும் அழியாதனவாய் நித்யமாயிருக்கும். அவ்வப்போது எம்பெருமானும் நித்யஸூரிகளும் பல திருமேனிகளை எடுத்துக் கொண்டு அவதரிப்பதும் உண்டு. பரமபதம் சேர்ந்த முக்தர்களும் தாங்கள் விரும்பினால் தங்களுக்கு இஷ்டமான சரீரங்களை எடுத்துக் கொள்ளலாம். முக்தர்கள் தங்களுக்குத் தாய், தகப்பன் முதலிய உறவினர்களைப் படைத்துக் கொள்ள விரும்பினால் தம் ஸங்கல்பத்தாலேயே அவர்களைப் படைத்துக் கொள்ளலாம். இவ்வாறெல்லாம் இவ்வுலகத்திற்போல் ஸ்ரீவைகுண்டத்திலும் உண்டாக்கிக் கொள்வது ஸம்ஸார மண்டலத்தை மறுபடி

ஏற்படுத்திக் கொள்வதாகுமோ? என்று அஞ்ச வேண்டாம். உலகில் வஸந்த உத்ஸவத்தை நடத்தும்போது அதில் ஜநங்கள் பல வேஷங்களைப் போட்டுக் கொண்டு உல்லாஸமாய் நடிப்பது போலவே ஆகும். அங்கு முக்தர்கள் செய்யும் எந்தச் செயலும் தலைவனான எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பான விசேஷ கைங்கர்யங்களிலேயே சேரும்.

நித்ய விபூதியெனப்படும் ஸ்ரீவைகுண்டத்திலும் ஆகாசம் வாயு - தேஜஸ் - ஜலம் - பூமி என்ற ஐந்து பூதங்களும் தனித்தனியே உண்டென்றும் அவை ஸம்ஸார மண்டலத்திலுள்ளவை போன்றனவல்லவென்றும் கீழே விளக்கினோம். அவற்றில் உள்ள சப்தம் - ஸ்பர்சம் - ரூபம் - ரஸம் - கந்தம் ஆகிய குணங்களெல்லாம் அழியாமல் நித்யமாய் அந்த அந்தப் பூதங்களில் இருக்கும். அததற்கு ஏற்பட்ட குணங்களின் வேறுபாடு கொண்டு அந்த அந்தப் பூதங்களின் வேறுபாட்டை அறியலாம்.

இரு விபூதிகளின் எல்லை விளக்கம்

த்ரிகுணம் எனப்படும் ப்ரக்ருதி ஜீவர்களுக்கு ஸம்ஸார பந்தத்தைக் கொடுத்துக் கர்மபலனை அநுபவிக்கும் இடமாயுள்ளது. இதற்குக் கீழ்ப்புறத்தில் எல்லை கிடையாது. அதாவது - கீழே எவ்வளவு தூரம் இந்த ப்ரக்ருதி நிற்கின்றதென்பதை வரையறுத்துக் கூற முடியாது. சுத்த ஸத்துவமாகிய ஸ்ரீவைகுண்டமோ ஜீவர்கள் முக்தி பெறும் இடமாயுள்ளது. இது மேலே எவ்வளவு தூரம் போகிறதென்பதைக் கூற முடியாது. ஆகவே ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேல் எல்லையுண்டு; கீழ் எல்லை கிடையாது. நித்ய விபூதிக்குக் கீழ் எல்லை உண்டு. மேல் எல்லை கிடையாது. ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேல் ஸ்ரீவைகுண்டமும் ஸ்ரீவைகுண்டத்துக்குக் கீழ் ப்ரக்ருதி மண்டலமும் இருப்பதால் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் எல்லை மட்டும் உண்டென்று அறிக.

அசேதநநிரூபணாதிகாரம் முற்றும்.

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஜீவ நிரூபணாதிகாரம்

ஜீவன் அறிவையுடையவன்; அணுவான உருவத்தை யுடையவன்; எம்பெருமானுக்கு வசப்பட்டு நிற்பவன். செயலுக்கு இருப்பிடமாந்தன்மையாகிய கர்த்ருத்வம் இவனுக்கு உண்டு. அதனால் வரும் பலனை அநுபவிக்கும் தன்மையும் உண்டு. ப்ரக்ருதி - காலம் - சுத்தஸத்துவம் என்ற மூன்று வகை அசேதநங்களுக்கும் செயல்புரியும் தன்மையும் அதனால் வரும் பலனை அநுபவித்தலும் கிடையா. ஆதலால் அசேதநத்திற் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன்.

ஜீவன் எம்பெருமானால் தாங்கப்படுகின்றான். அவனால் ஆளப்படுகின்றான். அவனுக்கு அடிமையாயுள்ளான். எம்பெருமான் ஜீவனுக்கு ஆதாரமாயிருப்பவன்; ஆள்பவன்; ஸ்வாமியாயிருப்பவன். ஆதலின் எம்பெருமானைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன்.

அசேதநத்தின் உருவமே மாறுபடுவதுண்டு. உதாஹரணமாய் - ப்ரக்ருதி மஹானாக மாறுகின்றது. மஹாந் அஹங்காரமாய் மாறுகின்றது. ஆனால் சேதநனான ஜீவனுடைய ஸ்வரூபம் மாறவே மாறாது. ஆனால் ஜீவனது ஸ்வபாவத்தில் மாறுதல் உண்டு. அதாவது - ஸம்ஸாரிகளான ஜீவர்களுக்கு அவர்களின் தன்மையான ஞானத்திற்குச் சுருக்கமும் மலர்ச்சியும் உண்டு. அவர்களின் ஞானம் சில ஸமயம் மலர்ந்திருக்கும். சில ஸமயத்தில் சுருங்கியிருக்கும். இதுவே ஜீவனுடைய ஸ்வபாவத்தின் மாறுதலாகும். ஆனால் எம்பெருமானுக்கும் நித்ய ஸூரிகளுக்கும் முக்தருக்கும் ஞானத்தில் சுருக்க மலர்ச்சிகள் கிடையா. எப்பொழுதும் மலர்ந்தே நிற்கும். ஆனால் அவர்களின் ஞானம், ஸங்கல்பம் - ஸுகம் - ப்ரயத்நம் முதலிய நிலைமைகளாய் மாறுவதுண்டு. இதுவே அவர்களுக்கு ஸ்வபாவத்தில் மாறுதலாகும். இவ் வம்சங்களையெல்லாம் சாஸ்த்ரங்கள் இவ்வாறு வரையறையிட்டுக் கூறுகின்றன.

அசேதநத்தில் ஏற்படும் செயல்களெல்லாம் ஜீவனுடைய அறிவினால் ஏற்படுவன. ஒரு குடம் தானாக அசைவதில்லை.

ஒருவன் அதை அசைக்க வேண்டுமென்று நினைத்து அசைத்தால்தான் அசையும். இங்ஙனமே அசேதநப் பொருள்களில் ஏற்படும் செய்கைகளெல்லாம் எப்பொழுதும் பிறனுடைய புத்தியால் வருமவையே. எம்பெருமானுடைய செயல்களெல்லாம் எப்பொழுதும் அவனுடைய ஸங்கல்பத்தாலே நடப்பனவே.

ஜீவன் செய்யும் செயல்களில் சில எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் மட்டும் நடப்பன. சில எம்பெருமான் ஸங்கல்பத்துக்கு ஏற்றவாறு ஜீவனும் ஸங்கல்பித்து நடப்பன. ஜீவனிடம் அவன் அறியாமலே ஏற்படும் செயல்களெல்லாம் எம்பெருமானது ஸங்கல்பத்தால் மட்டுமே நடப்பன. ஜீவன் தான் அறிந்து செய்யும் செயல்கள் முதலில் எம்பெருமான் ஸங்கல்பித்து, அதற்குத் தக்கவாறு பின் ஜீவனும் நினைத்து நடப்பன என்று உணர வேண்டும்.

ப்ரக்ருதி - காலம் - சுத்த ஸத்துவம் என்ற மூன்று வகை அசேதநமும் சரீரமாகவே நிற்கும். இவற்றுக்கு வேறொன்று சரீரமாயிருப்பதும் அதற்கு இது ஆத்மாவாக இருப்பதும் கிடையா. எம்பெருமான் ஆத்மாவாகவே இருப்பான். பிறருக்குச் சரீரமாக இருக்கவே மாட்டான். ஜீவாத்மாவோ தான் எம்பெருமானுக்குச் சரீரமாகவும் தன் சரீரத்துக்கு ஆத்மாவெனப்படும் உயிராகவும் இருப்பான்.

இந்த ஜீவாத்மாவைப் பற்றிய விளக்கத்தை ஸ்ரீ ஆளவந்தார் தாம் அருளிச் செய்த ஸித்தித்ரயத்தில் ஆத்மஸித்தி என்ற பகுதியில் 'தேஹேந்த்ரிய' என்று தொடங்கும் சுலோகத்தில் அருளிச் செய்தார் -

"தேஹேந்த்ரிய மந: ப்ராணதீப்யோ Zந்யோ Zநந்யாஸாதந: I
நித்யோ வ்யாபீ ப்ரதிக்ஷேத்ரமாத்மா பிந்ந: ஸ்வதஸ்ஸுகீ II"

இதற்குச் சுருக்கமான பொருள் வருமாறு - ஜீவாத்மா, சரீரம் - இந்த்ரியம் - மநஸ் - ப்ராண வாயு - தர்மபூதஜ்ஞாநம் இவற்றிற் காட்டிலும் வேறுபட்டவன். தானே ப்ரகாசிப்பவன். அழிவற்றவன்; எந்த அசேதநத்திலும் உள்ளே புகவல்லவன். சரீரம்தோறும் வேறுபட்டவன். இயற்கையில் ஸுகஸ்வரூபனும் ஸுகத்தைப் பெறத் தகுதியுடையவனுமாயிருப்பவன்.

இந்தச் சுலோகத்துக்கு ஸ்ரீதேசிகன் தாமே அருளிய

விளக்கம் வருமாறு -

தேஹ - இந்த்ரிய - மந : - ப்ராண - தீப்ய : அந்ய :-

சரீரத்திற்காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன். சரீரம் என்பது ஐந்து பூதங்களின் சேர்க்கையால் ஏற்படுவது. சரீரம் இளைக்கும்; பெருக்கும். கை, கால் முதலிய பல அவயவங்களையும் சரீரம் தன் பகுதியாகக் கொண்டது. இத்தகைய சரீரத்திற் காட்டிலும் ஜீவாத்மா வேறுபட்டு நிற்பவன்.

அசேதநமான இந்தச் சரீரத்துக்கே அறிவு உண்டு என்கின்றனர் சிலர். இது தவறு. ஏனென்றால் - ஐந்து பூதங்களின் சேர்க்கையும் பல அவயவங்களின் கூட்டமும் தானே சரீரனெப்படுகின்றது! இந்தச் சரீரத்துக்கு அறிவு உண்டு என்றால் - பூதங்களில் ஒவ்வொன்றுக்கும் அவயவங்களில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக அறிவு உண்டென்று கூறுவதா? அல்லது ஐந்து பூதங்களின் கூட்டத்திலும் அவயவங்களின் தொகுதியிலும்தான் அறிவு உண்டென்று கூறுவதா? தனித்தனியாக அறிவு உண்டென்றால் ஒரு சரீரத்தில் அநேக ஆத்மாக்கள் உண்டென்று ஏற்க வேண்டி வரும். அப்பொழுது உலகில் ஒரு சரீரத்தில் உள்ள ஜீவாத்மா "நான்" என்று தன்னை ஒருவனாகவே நினைப்பது பொருந்தாதுபோம். பூதங்களுடையவும் அவயவங்களுடையவும் சேர்க்கை வடிவாயுள்ள கூட்டத்தில்தான் அறிவு உண்டு என்று கூறினால் காரணம் இல்லாமல் காரியப் பொருள் உண்டாவதாகக் கூற வேண்டி வரும். குடத்தில் கருமை நிறம் வருவதாயின் காரணமான மண்ணிலும் கருமை நிறம் இருந்தே தீர வேண்டுமன்றோ! பூதங்களிலும் அவயவங்களிலும் தனித் தனியாக அறிவு இல்லாவிடின் அவற்றின் சேர்க்கையான சரீரத்தில் மட்டும் எவ்வாறு அறிவு வரும்? மேலும் என் சரீரம் என்ற உணர்ச்சி வருகின்றதே! நான் என்று கூறிக்கொள்ளும் ஆத்மாவைக் காட்டிலும் இச்சரீரம் வேறுபட்டதாகத் தானே புலனாகின்றது! இவ்வாறே இன்னும் இத்தகைய முரண்பாடுகளும் வருகின்றன. ஆதலின் சரீரத்தில் அறிவு உண்டு என்று கூறி அதையே ஆத்மாவாகக் கொள்ளுதல் பொருந்தாது.

இந்திரியங்களைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா. இந்திரியங்கள் பத்து. கர்மேந்திரியம் ஐந்து, வாக்கு - கை - கால் - மலத்வாரம் - ஜலத்வாரம் என்பன. இந்த ஐந்தினுள் ஒன்றின்

செயலை மற்றொன்று செய்ய முடியாமையைக் காண்கின்றோம். வாயினால் எடுக்க முடியுமா? கையினால் பேச முடியுமா? இந்த இந்திரியங்கள் தத்தம் செயலைச் செய்யும்படி செய்கின்ற செயலாளன் ஒருவன் இருக்கின்றான். அவனே ஜீவாத்மா எனப்படுகின்றான். அவன் தன் வாயினால் சொல்லியதைக் கையால் செய்வதாக எண்ணுகின்றான். ஆகவே இந்தக் கர்மேந்திரியங்கள் தத்தம் செயலைச் செய்யுமாறு செய்யும் ஆத்மா அவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனென்று தேறுகின்றது.

ஞானேந்திரியங்கள் ஐந்து. அவை செவி - வாய் - கண் - மூக்கு - உடல் என்பன. இவற்றைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன். இந்த ஐந்து இந்திரியங்களும் தனித் தனியே தங்கள் விஷயத்தைக் காட்டுகின்றன. செவி சப்தத்தைக் கேட்கும். நாக்கு சுவையை மட்டும் அறியும். கண் உருவத்தைக் காட்டும். மூக்கு மணத்தை நுகரும். உடல் ஸ்பரிசத்தை உணரும். இவற்றுள் ஒன்று காட்டுவதை மற்றொன்று காட்ட வல்லதன்று. இவை காட்டும் விஷயங்களையெல்லாம் தன் எல்லா இந்திரியங்களைக் கொண்டுதான் உணருவதாக ஜீவன் கருதுகின்றான். 'சப்தத்தைக் கேட்கின்றேன். நறுமணத்தை முகர்கின்றேன். வஸ்துவைப் ஸ்பரிசிக்கின்றேன்'. என்றெல்லாம் ஒருவனான ஜீவாத்மா தானே உணருகின்றான். இத்தனை உணர்ச்சிகளைச் சேர்த்து ஒருவன் தானே அடைகின்றான். ஆதலால் அந்த அந்த உணர்ச்சிகளைப் பெறுவிக்கும் சாதனமான இந்திரியங்கள் வேறு. அந்த உணர்ச்சிகளைப் பெறுமவனான ஜீவாத்மா வேறு என்று தேறுகின்றது.

மனத்தைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன். விளக்கம் வருமாறு - மனம் என்ற இந்திரியம் உண்டு என்று எதனால் ஏற்படுகின்றதென்பதைக் கவனிக்க வேண்டும். ஜீவனிடம் அறிவு உள்ளது. ஜீவன் முதன் முதலாக ஒரு விஷயத்தை அறிகின்றான். பின் சில காலம் கழித்து முதலில் அறிந்த விஷயத்தைப் பற்றிய நினைவு வருகின்றது. இதற்குக் காரணம் என்ன என்று சிந்திக்க வேண்டும். முதலில் ஒன்றைப் பற்றிய அறிவு வந்தபின் அதன் தொடர்ச்சியான ஒரு பழக்கம் (ஸம்ஸ்காரம்) மனத்தோடு தொடர்பு கொள்கின்றது. அந்தப் பழக்கம் எப்பொழுது தலையெடுக்கின்றதோ அப்பொழுது அந்த நினைவு ஜீவனுக்கு வருகின்றது. ஆகவே ஜீவனுக்கு நினைவு வருதற்குக்

கருவியாயுள்ளது மனம். இந்த யுக்தியால்லலது மனம் என்ற ஒன்று ஸித்திக்காமல் போய்விடும். மேலும் சுருதியும் மனம் என்பதைப் பிரித்துக் கூறுகின்றது. இப்படி நினைவுக்குக் கருவியாயுள்ள மனத்தைக் கொண்டு நினைவைப் பெறும் ஜீவாத்மா மனத்திலும் வேறுபட்டவனென்பதில் என்ன ஆக்ஷேபம்?

ப்ராண வாயுவைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன். விளக்கம் வருமாறு - சரீரத்திற் காட்டிலும் ஜீவனுக்கு வேறுபாட்டுக்குச் சொல்லிய யுக்திகளையே இதற்கும் கொள்ளலாம். அதாவது - ப்ராணவாயுவென்பது வாயு என்னும் தத்துவத்தின் மாறுபாடுதானே! இதற்குப் பருத்தல் சிறுத்தல் முதலிய மாறுபாடுகளெல்லாம் உண்டு. மாறுபாடே இல்லாத ஜீவன் மாறுபாடுகளையுடைய ப்ராண வாயுவைக்காட்டிலும் வேறுபட்டவன்தானே!

தர்மபூத ஜ்ஞாநத்திற்காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன். விளக்கம் வருமாறு - தர்மபூதஜ்ஞாநம் என்பது யாது? ஜீவனை விட்டுப் பிரியாது நிற்கும் ஞானமேயாகும். இந்த ஞானம்தான் உலகில் உள்ள வஸ்துக்களை ஜீவனுக்குக் காட்டுகின்றது. இதை அறிவதற்கு மற்றொரு ஞானம் வேண்டாதபடி தானே ப்ரகாசிக்கின்றது. ஆதலால் தர்மபூதஜ்ஞாநம் ஸ்வயம்ப்ரகாசமெனப்படுகின்றது. இது எந்நாளும் அழியாது ஜீவனிடம் நிற்கும் ஒரு த்ரவ்யமாகும். ஆயினும் இதையுடைய ஜீவனுக்கு இது ஓர் உடைமையாகின்றது. இதை ப்ரத்யக்ஷம் - அநுமாநம் - சப்தம் என்ற மூன்று ப்ரமாணங்களாலும் அறியலாம். 'நான் குடத்தை அறிகின்றேன்' என்ற உணர்வு ஜீவனுக்கு வரும்போது அந்த ஞானம் கண்கூடாக ப்ரத்யக்ஷத்தாலேயே ஜீவனுடைய தர்மம் என்று அறியப்படுகின்றது. இதை அநுமாநத்தாலும் உணரலாம். அதாவது - ஜீவனிடம் ஞானம் தனியாக உறையும் காரணத்தைக் கொண்டு ஜீவனிற்காட்டிலும் தர்மபூதஜ்ஞாநம் வேறுபட்டதென்று ஊஹித்தும் உணரலாம். இவ்வாறே சுருதிகளில் ஜீவனையும் அவனது ஞானத்தையும் பிரித்துப் பேசியிருப்பதைக் கொண்டு ஞானத்திலும் ஜீவனை வேறுபட்டவனாக உணரலாம். இது சப்தத்தால் உணர்வதாகும். இப்படி அறிபவனான ஜீவனுக்கு உடைமையாகவே தோன்றுகிற தர்மபூதஜ்ஞாநத்தைக் காட்டிலும் 'நான்' என்று எப்போதும் தனக்குத் தானே தோற்றுகிற ஜீவாத்மா

வேறுபட்டவன் என்பதில் ஸந்தேஹம் என்ன?

இந்த ஜீவனுடைய தர்மபூதஜ்ஞாநத்துக்குப் பல நிலைமைகள் உண்டு. அவையாவன - (1) ப்ரத்யக்ஷத்தால் வரும் அறிவு - (2) ஊஹித்தலால் வரும் அறிவு - (3) வேதம் முதலியவற்றால் வரும் அறிவு என்றெல்லாம் பல மாறுபாடுகள் உண்டு. ப்ரத்யக்ஷத்தால் வரும் அறிவிலேயே கண் - செவி - மூக்கு முதலிய இந்திரியங்களால் ஏற்படும் ஞானங்களெல்லாம் தர்மபூதஜ்ஞாநத்துக்கு ஏற்படும் வெவ்வேறு விகாரங் (மாறுபாடு)களாகும். மேலும் தர்மபூதஜ்நாமே ஆசையாகவும் பகைமையாகவும் ஸங்கல்பமாகவும் முயற்சியாகவும் ஸுகமாகவும் துக்கமாகவும் ஸந்தேஹமாகவும் விபரீத ஜ்ஞாநமாகவும் இவ்வாறே இன்னும் பல்வகை மாறுபாடுகளை அடைகின்றது. இந்த நிலைமைகளெல்லாம் தர்மபூதஜ்ஞாநத்தின் மாறுபாடுகள் (விகாரங்கள்) எனப்படும். இந்த ஜ்ஞாநத்துக்கு உறைவிடமான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்திலோ இவ்விதமான மாறுபாடு ஒன்றும் கிடையாது. ஜீவன் நான் என்று எப்பொழுதும் தானே தன்னைமட்டும் தனக்கு மட்டும் காட்டிக் கொண்டு ஒரே வகையாய்ப் பிரகாசித்துக் கொண்டேயிருப்பான்.

அசேதநம் - சேதநன் - தர்மபூதஜ்ஞாநம் இவற்றின் ஸ்வபாவ விளக்கம்

சரீரம் முதலிய அசேதநங்கள் எல்லாம் ஜடமானவை. அதாவது - இவை தாமே புலப்படமாட்டா. வேறென்றாகிய தர்மபூத ஜ்ஞாநத்தால்தான் இவற்றை அறிய வேண்டும். ஜீவாத்மாவுக்குத்தான் இவை புலப்படும். தர்மபூதஜ்ஞாநமோ வேறொரு தர்மபூதஜ்ஞாநத்தாலும் அறியப்படவல்லது; தானேயும் ப்ரகாசிக்க வல்லது. விளக்கம் - ஒரு ஜீவனது தர்மபூதஜ்ஞாநம் அந்த ஜீவனுக்கு மற்றொரு வஸ்துவைக் காட்டும்போது அவனுக்கு மட்டும் அந்த ஜ்ஞாநம் தானே பிரகாசிக்கும். அவனுடைய தர்மபூதஜ்ஞாநத்தை மற்றொருவன் அறியப் புகும்போது அவன் தன் ஞானத்தாலேயே இதை அறிய முடியுமேயன்றி அவனுக்கு இது தானே பிரகாசிக்காது. மேலும் அவனுக்கே மற்றொரு வஸ்துவை இந்தத் தர்மபூதஜ்ஞாநம் காட்டாத ஸமயங்களில் இதை வேறொரு ஞானத்தால்தான் அறிய வேண்டும். இதுவே தர்மபூதஜ்ஞாநத்தைப் பற்றிய ஸூக்ஷ்மம்.

ஜீவாத்மாவின் ஸ்வபாவத்தை ஆராய்வோம். ஜீவன் நான்

என்று எப்பொழுதும் தனக்கு ஸ்வயம்ப்ரகாசமாய்த் தோன்றிக் கொண்டேயிருப்பான். ஆனால் அந்த ஜீவனே தன்னைச் சரீரத்தை விட வேறுபட்ட தன்மை - ஆநந்த வடிவமாயுள்ள தன்மை முதலியவற்றுடன் அறிய வேண்டுமானால் தர்மபூத ஜ்ஞாநத்தாலே தான் அறிய வேண்டுமேயன்றித் தானே அறிய முடியாது. மேலும் ஒரு ஜீவனை மற்றொரு ஜீவன் அறிய வேண்டுமானால் அவனது தர்மபூதஜ்ஞாநத்தைக் கொண்டே அறிய வேண்டும்.

ஜீவனுக்குத் தன் சரீரத்தைப் பற்றி 'என் சரீரம்' என்ற எண்ணம் உண்டாகின்றது. இந்த எண்ணத்தால் நான் என்னப்படுகின்ற வஸ்துவைக் காட்டிலும் சரீரம் எனப்படும் வஸ்து வேறுபட்டது என்று நன்கு புலப்படுகின்றது. சரீரமே ஆத்மா என்ற தவறான எண்ணத்துக்குப் பலவிதமான மறுப்புக்கள் இருப்பது போல் என் சரீரம் என்று காணும் வேறுபாட்டுக்கு மறுப்பு எதுவும் இல்லை. ஒருவனால் இயற்றப்படாது எவ்வகைக் குற்றமும் அற்றுச் சாச்வதமாய் விளங்கும் சுருதியும் சரீரத்தைக் காட்டிலும் ஆத்மாவை வேறுபட்டதாகவே கூறுகின்றது. ஆகவே ஜீவன், சரீரம் - இந்திரியம் முதலியவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனென்று அறிந்து கொள்க.

அநந்ய ஸாதந :- ஜீவன் தன்னை அறிவதற்கு வேரு ஒரு ஸாதநம் வேண்டாதபடி தர்மபூதஜ்ஞாநத்தைப் போலத் தானே பிரகாசிப்பவன். இப்படித் 'தானே ப்ரகாசிப்பவன்' என்று பொருள் கூறியதால் இங்குத் தோன்றும் முரண்பாடு நீங்கியதாயிற்று. அதாவது - தர்மபூதஜ்ஞாநம் ஞான வடிவமாயிருப்பதுபோல் ஜீவாத்மாவும் ஞான வடிவமாயிருப்பது உண்மையாயிற்றே! தர்மபூதஜ்ஞாநத்திற்கு வேறொரு ஞானம் கிடையாதே! அவ்வாறே ஞான வடிவமான ஆத்மாவுக்கும் தனியாக ஒரு ஞானம் இருக்கக்கூடாதே! என்று ஒரு முரண்பாடு தோன்றும். இதற்குப் பரிஹாரம் வருமாறு - ஞான வடிவமாயிருப்பதாலேயே ஜீவன் வேறொரு ஞானத்தையுடையனாயிருக்கக் கூடாது என்பதில்லை. ஞான வடிவமாயுள்ளவன் ஜீவன் என்பதற்குத் தானே ப்ரகாசிப்பவன் - அதாவது வேறொரு ஞானம் வேண்டாதபடி 'நான்' என்று தானே தோன்றிக் கொண்டிருப்பவன் என்பது மட்டும் பொருளேயன்றி மற்றொரு ஞானம் இருக்கப் பெறாதவன் என்று கூடப் பொருள் இல்லை. உதாஹரணமாய் -

கற்கண்டாலேயே உருவாக்கப்பெற்ற ஒரு பதுமைக்குக் கையிலும் ஒரு கற்கண்டைக் கொடுத்திருப்பது பொருந்துவது போல் ஞான வடிவமாகவே உள்ள ஜீவனுக்குத் தனியாகவும் ஞானம் இருப்பதில் இடர் ஏதும் இல்லை.

ஜீவனுடைய தர்மபூதஜ்ஞாநம் குடம் முதலிய மற்றொரு பொருளைக் காட்டும்போது அந்த ஜீவனுக்கு அந்த ஞானம் தானே பிரகாசிக்கும். ஜீவாத்மாவோ எப்பொழுதுமே தனக்குத் தானே 'நான்' என்று தோற்றிக் கொண்டேயிருக்கும்.

நித்ய :- ஜீவாத்மா எக்காலமும் அழிவின்றி நித்யமாயிருப்பவன். ஜீவன் தன் கர்ம வசத்தால் மாறி மாறிப் பல சரீரங்களில் பிறக்கின்றான். சரீரங்கள் மாறுகின்றனவேயன்றி ஜீவனுக்கு மாறுதல் கிடையாது. ஜீவன் பல சரீரங்களை எடுத்து இந்த ஸம்ஸார மண்டலத்தில் பெறும் நிலைமைகளிலெல்லாம் இவனுடைய ஞானம் சுருங்குவது மலர்வது ஆகிய மாறுபாடுகளெல்லாம் உண்டு. ஆனால் ஜீவனது ஸ்வரூபத்தில் எவ்வகை மாறுபாடும் கிடையாது. ஜீவனுக்கு எந்த நிலைமைகள் மாறி வந்தாலும் பெயரை மாற்றி அழைக்கும்படியான நிலைமைகளே கிடையா. அசேதநப் பொருளிலோ மண் உருண்டை குடமாக மாறியபிறகு 'மண் பிண்டம்' என்ற பெயர் மறைந்து குடம் என்ற பெயர் வந்து விடுகின்றது. நூல் ஆடையாக மாறிய பிறகு நூல் என்ற பெயர் போய் ஆடை என்ற பெயர் வருகின்றது. ஜீவன் விஷயத்திலோ அவன் வெவ்வேறு சரீரத்தில் புகுந்து கொண்டாலும் ஞானத்தில் சுருக்க மலர்ச்சிகள் வந்தாலும் எக்காலத்திலும் ஜீவன் என்ற பெயரை மாற்றி வேறு பெயரிட்டு அழைக்கப்படுவதே இல்லை. ஆதலின் ஜீவன் நித்ய னெனப்படுகின்றான்.

மேலும் ஜீவன் முன் அநுபவித்த ஒரு விஷயத்தை இப்பொழுது நினைத்துக் கொள்கின்றான். ஆத்மா நிலைத்தவனாயன்றி முன் ஆத்மா போய் வேறு ஆத்மா உண்டாவதக ஏற்றுக் கொண்டால் ஓர் ஆத்மா அநுபவித்ததை மற்றோர் ஆத்மா எவ்வாறு நினைத்துக் கொள்ள முடியும்? ஆகவே ஜீவன் நிலையாயுள்ளவன் என்பதை நாமே கண்கூடாகக் காணலாம். மேலும் ஜீவன் நித்யென்பதாக அநுமாநம் என்னும் ஊஹத்தாலும் அறியலாம். அதாவது - ஜீவன் வெவ்வேறு

சரீரங்களை அடைகின்றான். தாய் வயிற்றினின்று பிறந்தவுடனேயே தாய்ப்பாலைப் பருக வேண்டுமென்ற ஆசை உண்டாகின்றது. இதற்குக் காரணம் யாது? அப்பொழுதே புதிய சரீரம் வந்திருப்பதால் வேறொரு காரணத்தைக் கூற முடியாது. முந்திய சரீரத்தில் இருந்தபோது உண்டான பழக்கமே காரணமென்று ஊஹித்து உணர வேண்டும். ஆத்மா வெவ்வேறாக இருந்தால் அந்தப் பழக்கம் இந்தச் சரீரத்தில் வருமா? ஆத்மா நித்யனென்று கொண்டால் முந்திய சரீரத்தில் ஜீவனுக்கு இருந்த பழக்கவுணர்ச்சியே இச்சரீரத்தில் புகும்போது வருவதாக உணர்ந்து ஜீவன் நித்யன் என்று ஊஹித்தலாகிய அநுமாநத்தால் அறியலாம்.

மேலும் வேதங்களும் ஸ்ம்ருதிகளும் ஆகமங்களும் ஜீவனை அழியாது நித்யனாய் உள்ளவனாகக் கூறுகின்றன. ப்ரளய காலத்திலும் கூட அழியாதவன் என்று அவை கூறுகின்றன. ப்ரளயங்களில் பல்வகை உண்டு. அவை நைமித்திக ப்ரளயம் - ப்ராக்ருத ப்ரளயம் - ஆத்யந்திக ப்ரளயம் முதலியன. நைமித்திக ப்ரளயம் - பிரமனது இரவில் உண்டாவது. இதில் ப்ரஹ்மலோகம் தவிர மற்ற எல்லா லோகங்களும் அழிந்து போகின்றன. ப்ராக்ருத ப்ரளயம் - மூலப்ரக்ருதி தவிர மற்ற வஸ்துக்களெல்லாம் அழிந்துவிடும் காலம். அப்பொழுது மூலப்ரக்ருதி மட்டும் எம்பெருமானிடம் லயித்திருக்கும். ஆத்யந்திக ப்ரளயம் - ஸம்ஸார பந்தம் நீங்கி மறுபடி இந்தப் பிறவிகள் எடுக்காதபடி மோக்ஷம் பெறும் நிலை. இந்த ப்ரளயங்கள் அனைத்திலும் கூட ஜீவன் அழியமாட்டானென்று வேதம் முதலிய ப்ரமாணங்கள் கூறுகின்றன.

வ்யாபீ - ஜீவன் உள்ளே புகும் சக்தியுடையவன். அவன் ஸ்வரூபம் அணுவானதேயாகும். ஈச்வரனைக் காட்டிலும் ஜீவனை வேறாகப் பிரித்துக் கூறும் சுருதி ஜீவன் அணுவென்ற காரணத்தைக் கூறி எங்கும் பரவி நிற்கும் விபுவான ஈசுவரனைக் காட்டிலும் ஜீவனை வேறுபடுத்தி ஓதியுள்ளது. இப்படி ஜீவன் அணுவாயிருப்பினும் எல்லா அசேதநங்களிலும் உட்புகச் சக்தியுடையன். மரத்தினுள் அக்நி இருப்பது போலவும் எள்ளினுள் எண்ணெய் இருப்பது போலவும் பாலினுள் நெய் மறைந்திருப்பது போலவும் ஜீவன் மிக ஸூக்ஷ்மனாயிருப்பதால் தடையின்றி எல்லா அசேதநங்களுள் புக வல்லவன் என்று ப்ரமாணங்கள் கூறுகின்றன.

இங்கு ஒரு கேள்வி - ஜீவன், முக்தியடைந்த பின் தன்ஸங்கல்பத்தால் பல சரீரங்களை எடுத்துக் கொள்வதாக உபநிடதம் கூறுகின்றது. இவ்வுலகிலேயே ஸ்வப்ந நிலையில் அத்ருஷ்டத்தால் ஒருவன் பல சரீரங்கள் எடுத்துக் கொள்வது உண்டு. முனிவர்கள் தங்கள் தவ வலிமையால் பல சரீரங்களை ஒரே ஸமயத்தில் எடுத்துக் கொண்டு பல பெண்களுடன் இல்லறம் நடத்தியதாகப் பாரதத்தில் காண்கின்றோம். இங்கெல்லாம் அணுவான ஜீவன் ஒரு சரீரத்தில் எவ்வாறு செயல்கள் நடைபெறுகின்றன? என்று. இதற்கு ஸமாதானம் வருமாறு - ஜீவன் ஒரு சரீரத்தில் மட்டுமே இருப்பான். மற்ற சரீரங்களில் அவனுடைய தர்மபூதஜ்ஞாநம் பரவி நின்று ஜீவன் செய்யும் செயலைச் செய்கின்றது. ப்ரஹ்மஸூத்ரம் இதற்கு ஓர் உதாஹரணம் காட்டுகின்றது. தீபம் ஒரே இடத்தில் இருப்பினும் தன் ஒளியை மற்ற இடங்களிலும் பரவச் செய்து எவ்வாறு செயல் புரிகின்றதோ, அவ்வாறே ஜீவன் அணுவாய் ஒரே சரீரத்தில் இருப்பினும் தன் தர்மபூதஜ்ஞாநத்தை மற்ற சரீரங்களிலும் பரவச் செய்து காரியங்களை நடத்துவதாக ப்ரஹ்மஸூத்ரமும் கூறுகின்றது. ஜீவன் தன் சரீரத்தினுள் ஒரு புறத்தில் இருப்பினும் தன் தர்மபூதஜ்ஞாநம் பரவுதலைக் கொண்டு தன் மற்ற அவயவங்களிலும் நான் என்ற எண்ணத்தைக் கொள்ளவில்லையா? அவ்வாறே இங்கும் கொள்வதில் இடர் ஏதும் இல்லை. ஆகவே ஜீவன் அணுவாயிருப்பினும் எல்லா அசேதநங்களிலும் உள்புகும் வல்லமையுடையதென்று அறிக.

ப்ரதிக்ஷேத்ரம் ஆத்மா பிந்ந:

ஒவ்வொரு சரீரத்திலும் இருக்கும் ஆத்மா வெவ்வேறு. எல்லாச் சரீரத்திலும் ஒரே ஆத்மாதான் உள்ளது என்று ஒரு கொள்கை உண்டு. இது பொருந்தாது. ஒவ்வோர் ஆத்மாவுக்கும் ஜ்ஞாநம் - ஸுகம் - துக்கம் முதலியவற்றில் வரையறைகள் உண்டு. அதாவது - ஒரு ஜீவனுக்கு வரும் ஜ்ஞாநம் - ஸுகம் - துக்கம் முதலியன மற்றொரு ஜீவனுக்கு அதே வகையுடையனவாக வருவதில்லை. எல்லா ஆத்மாக்களும் ஒன்றாகவேயிருக்குமானால் ஞானம் ஸுகம் துக்கம் முதலியவற்றை ஆத்மா ஒரேவகையாகவன்றோ பெற்றிருக்க வேண்டும்.

மேலும் ஒரு சரீரத்தில் உள்ள ஜீவன் உணர்வதை மற்றொரு

சரீரத்தில் உள்ள ஜீவன் உணருவதில்லை. மேலும் ஒவ்வொரு சரீரத்திலும் உள்ள ஒவ்வொரு ஜீவனும் தத்தம் கர்மத்துக்கு ஏற்றவாறு வெவ்வேறு பலன்களை அநுபவிக்கின்றான். எல்லா ஆத்மாக்களும் ஒன்றேயாகில் ஒரேவகையான பலனையன்றோ அநுபவிக்க வேண்டும்! ஆதலின் சரீரந்தோறும் ஆத்மா வெவ்வேறு என்று உணர வேண்டும்.

ஸ்வத : ஸுகீ. இயற்கையில் ஜீவன் இன்பவடிவ மாயிருப்பவன். ஒவ்வொரு ஜீவனுக்கும் தன் ஸ்வரூபம் எப்பொழுதும் அநுகூலமாகவே தோன்றும். தன்னைத் தனக்கு எதிரியாக ஒருவனும் கருதமாட்டான் இப்படி இன்பவடிவமாக இருப்பதுமட்டுமன்றி இன்பத்தை எப்பொழுதும் உடையனாகவும் உள்ளவன். மேலும் ஜீவன் ஸ்ரீவைகுண்டத்தில் பரிபூர்ணமாய்ப் பகவானை அநுபவிக்கும் ஆநந்தத்திற்கும் உரிமையுடையன். நித்யஸூரிகளைப் போல் ஒவ்வொரு ஜீவனும் மோக்ஷாநந்தத்தை அநுபவிப்பதற்கு இயற்கையில் தகுதியுடையனாய் அதற்காகவே இட்டுப் பிறந்தவன்தான். அங்ஙனன்றி இவன் ஸம்ஸாரத்தில் துக்கம் முதலியவற்றை ஏன் அநுபவித்துக் கொண்டிருக்க வேண்டும்? என்ற கேள்வி வரும். இதற்கு விடை - இவன் கர்மலோகத்தில் இருக்கும் வரையில் புண்யபாபங்களாகிய கர்மங்களுக்கு வசப்படேயிருக்க வேண்டுமாதலால் அவற்றின் பயனாய் ஸுகதுக்கங்கள் இவனுக்கு வருகின்றன.

இந்த ஜீவர்கள், பத்தர் - முக்தர் - நித்யர் என மூவகைப்படுவர். வேறு வகையிலும் ஜீவர்களைப் பிரிப்பதுண்டு. அதாவது - ஜீவர்கள் இருவகைப்படுவர். (1) ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டவர்கள் (2) ஸம்ஸாரத்தில் கட்டுப்படாதவர்கள் கட்டுப்படாதவர் முக்தர் நித்யர் என இருவகைப்படுவர். ஆகவே பத்தர் - முக்தர் - நித்யர் என்ற மூவகைப் பிரிவில்தான் மற்றப் பிரிவும் முடிவுற்றது. விளக்கம் வருமாறு -

பத்தர் - ஸம்ஸார மண்டலத்தில் உழல்பவர். ஜீவர்களுக்கு அஜ்ஞாநம் உள்ளது. அஜ்ஞாநத்தால் கர்மங்களைச் செய்கின்றனர். இப்படி கர்மங்களைச் செய்து செய்து ஒரு பழக்கம் வந்து விடுகின்றது. அதனால் மறுபடி கர்மங்களைச் செய்ய ஆசை எழுகின்றது. கர்மங்களைச் செய்வதற்குச் சாதனமான சரீரம் இந்திரியம் இவற்றின் தொடர்பு வருகின்றது. இதையே ப்ரக்ருதி

ஸம்பந்தம் என்பர். அஜ்ஞாநம் தொடங்கி ப்ரக்ருதி ஸம்பந்தம் வரை உள்ள வரிசைகளெல்லாம் ஒவ்வொரு ஜீவனுக்கும் வெவ்வேறு வகையாய் ஆற்று வெள்ளம்போல் அநாதியாய் வந்து கொண்டிருக்கின்றன. இவற்றில் எது முதல் என்பதைக் கூறமுடியாது. உதாஹரணமாய் - அவித்தையையால் கர்மம் நேருகின்றது? கர்மத்தால் அவித்யை வருகின்றதா? என்று கேட்டால் இதை நிர்ணயித்துக் கூறமுடியாது. உலகில் "விதையால் முளையா, முளையால் விதையா? எது முதல்" என்று கேட்டால் என்ன விடை வரும்? விதை விதைத்துத் தான் முளை உண்டாகின்றது. முளை முற்றிப் பழமாகி அதனின்று விதை உண்டாகின்றது. எது எதற்குக் காரணம்? எது முந்தியது? என்று கேட்டால் விடை கூற முடியுமா? அநாதியாய் இப்படியே வரிசை வருகின்றதென்றே கூற வேண்டும். அவ்வாறே இங்கும் அஜ்ஞாநம் கர்மம் முதலிய வரிசைகளையும் அநாதியென்றே முடிவு கட்ட வேண்டும்.

இந்த வரிசையில் அகப்பட்டு நிற்கும் ஜீவர்கள் தம் ஸ்வரூபத்தை மறந்து விடுகின்றனர். அதாவது - தம் ஸ்வரூபம் ஞானாநந்த வடிவமானதென்பதையும் எம்பெருமானுக்கு அடிமையானதென்பதையும் சேநர் உணர்ந்து கொள்வதில்லை. இது தம் ஸ்வரூபத்தை இழந்ததாகத் தானே ஆகின்றது! தேவர் மனிதர் முதலிய பாகுபாடுகளெல்லாம் சரீரத்தைப் பற்றியனவேயன்றி ஆத்மாவைப் பற்றியனவல்ல என்னும் உண்மையை அறியாது அத்தன்மைகள் எல்லாம் தாமாகிய ஆத்மாவைப் பற்றியனவாகக் கருதுகின்றனர். இதனால் ஸம்ஸாரத்தில் எத்தனையோ அல்லல்களை அடைகின்றனர். முதலில் கர்ப்பத்தில் வாஸம் - பிறகு பூமியில் பிறத்தல் - குழந்தைப் பருவம் - வாலிபப் பருவம் - விழித்தல் - கனவு - உறக்கம் - மயக்கம் - கிழப்பருவம் - மரணம் - பின் ஸ்வர்க்கம் - நரகம் சேர்தல் - பின் மறு பிறவி - ஒரு காலத்தில் ப்ரளயம் இன்னும் உள்ள விசித்திரமான பல்வேறு நிலைமைகளை அடைய வேண்டும் மூன்று தாபங்களால் தவிக்கின்றனர். இந்த

மூன்று தாபங்கள் - (1) ஆத்யாத்மிகம் - சரீரத்தைப்பற்றி வரும் தலைவலி - ஜலதோஷம் முதலியனவும் மனத்தைப் பற்றி வரும் காமம் கோபம் பயம் முதலியனவும் (2) ஆதிபௌதிகம் - மிருகம் பட்சி மனிதவர்க்கம் முதலிய பூதங்களால் வருவன. (3) ஆதிதைவிகம் - குளிர் - சூடு - காற்று - மழை முதலியவற்றால் தெய்விகமாக வருவன.

மூன்று தாபங்களும் அநாதியாய் வருவன. பலவகையில் சேதநரை இவை துன்புறுத்துகின்றன. மிகப் பொறுக்க முடியாத கஷ்டத்தை விளைவிப்பன. இவ்வாறு ஸம்ஸார மண்டலத்தில் அல்லல்படுமவர் தங்களுக்கு இயற்கை உரிமையாயுள்ள பகவதநுபவம் முதலிய பெருமைகளையெல்லாம் இழந்து நிற்க நேரிடுகின்றது. இத்தகைய சேதநரே பத்தரெனப்படுவர். இந்தப் பத்தர்கள் கர்மம் காலம் இந்திரியம் முதலியவற்றுக்கு வசப்பட்ட சேதநராவர். இவர்களுக்கு ஞானம் வருவதானால் இந்திரியங்களால் தான் வர வேண்டும். இந்தப் பத்தரான ஜீவர்களுக்கு மட்டுமே சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டிய தன்மையும் மீறி நடந்தால் தண்டனையும் உண்டு. முக்தரும் நித்யரும் சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியதில்லை.

முக்தர் - ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு மோக்ஷம் பெற்றவர். ஸம்ஸாரத்தில் உழன்று கொண்டிருப்பவர்களுக்கே ஒரு ஸமயத்தில் நற்காலம் வரும். ஸர்வேசுவரனது அருள் இயற்கையாயுள்ளதே. அவன் எல்லாப் பிராணிகளையும் சமமாய்ப் பார்ப்பவனே. ஆயினும் சேதநனுடைய புண்ணியம் பக்குவமாகும் ஸமயத்தை அவனது அருள் எதிர்பார்த்து நிற்கின்றது. அச்சமயம் வந்ததும் அவனது அருள் உதவி செய்கின்றது. சேதநர் தம் நிலையை ஆராய்ந்து பார்க்கின்றனர். எம்பெருமானிடம் முன்பு இருந்த பகைமை நீங்குகின்றது. அவனிடம் ஈடுபட முற்படுகின்றனர். பின் சிறந்த ஆசார்யரை அடைகின்றனர். அவர்களது உபதேசத்தால் தாம் எம்பெருமானுக்கு அடியரென்று உணர்கின்றனர். இந்த உணர்வு எளிதில் வராது. எம்பெருமானுக்கு அடிமையாயிருத்தல் என்பது ஒரு சேமநிதி (புதையல்) போன்றது. இதுபின் தாம் அடையும் ஸகலமங்களங்களுக்கும் காரணமாகும். ஒரு பெரும்புதையலைக் கண்ணாலே காணவேண்டுமென்றால் ஸித்தர்கள் தரும் மையை வாங்கிக் கண்ணில் தடவிக் கொள்ள வேண்டும். எம்பெருமானுக்குத் தாம் அடிமை என்று உணர்வது ஒரு புதையலைக் காண்பதுபோலாகும். பக்தி தான் அதைக் காணச் சாதனமான மையாகும். சாஸ்த்ரமே நமக்குக் கண்ணாகும். பக்தியுடன் சாஸ்த்ரங்களைக் கொண்டே எம்பெருமானைப் பற்றிச் சேதநர்களுக்கு உள்ள அடிமைத் தன்மையை உணர முடியும்.

இவ்வறிவு வந்த பின் ஸ்வாமியான எம்பெருமானை ஸ்ரீவைகுண்டத்தில் பரிபூர்ணமாக அநுபவிக்க வேண்டுமென்ற

ஆசை உண்டாகின்றது. அதற்காகத் தம் தகுதிக்கு ஏற்ற ஓர் உபாயத்தைச் செய்கின்றனர். அது பக்தியோகம் அல்லது சரணாகதியென்னும் ப்ரபத்தியாகும். இதைச் செய்த பின் ஸர்வேசுவரனுக்கு இவர்களிடம் மகிழ்ச்சி உண்டாகின்றது. பின் இவர்களுக்கு மோக்ஷத்தைத் தரவேண்டுமென்று விசேஷ ஸங்கல்பத்தை செய்கின்றான் எம்பெருமான். அந்த ஸங்கல்பத்தால் சேதநருக்கு ஸம்ஸாரபந்தம் அடியோடு ஒழிகின்றது. கடலினின்றும் ஸ்ரீகௌஸ்துபரத்நத்தை எடுத்ததும் ஒளி வீசுமன்றோ! அவ்வாறே கௌஸ்துபரத்நத்தை தேவதையாகக் கொண்ட ஜீவர்களுக்கும் பரமபதம் சேரும்போது ஞானம் சுருக்கம் நீங்கி மலர்ந்து விடுகின்றது. பின் பரமபுருஷனது உள்ளத்துக்கு மிக இனியராகின்றனர். பின் கர்மம் முதலியவற்றின் பிணிப்பின்றிக் கைங்கர்யம் செய்வார்கள். இந்தக் கைங்கர்யங்கள் உள்ளத்துக்கு எல்லையற்ற இனிமை தருவனவாயிருக்கும். பரமபதத்தில் இவர்கள் செய்யும் கைங்கர்யங்களுக்கும் நித்யஸூரிகள் செய்யும் கைங்கர்யங்களுக்கும் சிறிதும் வாசியில்லை. இவ்வாறு ஸம்ஸாரபந்தம் நீங்கிப் பரமபதம் சேர்ந்து கைங்கர்யம் செய்பவர்களே முக்தரெனப்படுவர்.

இங்கு ஓர் உவமானம் - ஓர் இரத்தினம் அழுக்கடைந்து அதனால் ஒளியிழந்து நிற்கின்றது. அதைக் கழுவி அவ்வழுக்கைப் போக்கிவிட்டால் அதன் ஒளி தானாக வீசும். புதிதாய் ஒளியைப் புகவிட வேண்டியதில்லை. இவ்வாறே முக்தி பெற்றவர்களுக்கும் ஞானம் ஆநந்தம் முதலிய குணங்கள் புதிதாய் உண்டாவதில்லை. அவை எப்போதும் ஜீவர்களிடம் நித்யமாய் உறைவனவே. ஆனால் அவை கர்ம ஸம்பந்தத்தால் சுருங்கிக் கிடக்கின்றன. அந்தக் கர்மம் தொலைந்துவிட்டால் ஜீவர்களின் ஞானம் முதலியன மலர்ச்சியுறுகின்றன. இவ்வுண்மையை உணர்க.

நித்யர்கள் - எம்பெருமானைப் போல் எப்போதும் ஸ்ரீவைகுண்டத்திலேயே வாழும் அநந்தன் - கருடன் - விஸ்வக்ஸேநகர் முதலியவர்கள். இவர்களின் ஞானம் எந்நாளும் சுருங்குவதேயில்லை. இதற்குக் காரணம் யாது? ஸம்ஸாரிகளுக்கு ஞானம் ஏன் சுருங்குகின்றது? எம்பெருமான் திருவுள்ளத்துக்கு முரண்பட்ட பாபச்செயல்களைச் செய்கின்றனர். இந்தக் கர்மவசத்தால் இவர்களின் ஞானம் சுருங்கி விடுகின்றது. நித்யஸூரிகள் எம்பெருமான் திருவுள்ளத்துக்கு விரோதமான

கார்யத்தை எக்காலத்திலும் செய்ய மாட்டார்கள். அதற்கு வாய்ப்பே இல்லை. அவர்கள் அவன் திருவுள்ளத்தை நேரிலேயே கண்டவர்களாதலின் அதற்கு முரண்பட்ட செயலைச் செய்வார்களா? இவர்களுக்குக் கர்ம ஸம்பந்தமே கிடையாது. கர்மம் இல்லாவிடில் ஞானம் சுருங்குவதற்கு இடமேயில்லையே! இவர்கள் ஸகல பதார்த்தங்களையும் எப்பொழுதும் ஒரே காலத்தில் கண்கூடாகக் காணும் தன்மையுடையராய் விளங்குவார். அநாதிபுருஷனான ஸ்ரீவைகுண்ட நாதனைப் பரமபதத்திற்கு இளவரசனாகப் பெற்றுள்ளனர். அவனுக்கு எவ்வகைக் குறைபாடுமில்லாத கைங்கர்யத்தைச் செய்து கொண்டு ப்ரக்ருதி ஸம்பந்த மற்ற சுத்தஸத்துவ மயமான திருமேனியாடு வாழும் இவர்களே நித்யரெனப்படுகின்றனர். இத்தகைய நித்யர்கள் எண்ணற்றவர்கள் உள்ளனர். இவர்களுள் அநந்தன் - கருடன் - விஷ்வக்கேஸநர் முதலியவர்கள் முக்கியமானவர்கள். இவர்களில் ஒவ்வொருவருக்கும் சில விசேஷ அதிகாரங்கள் உண்டு. உதாஹரணமாய் - திருவனந்தாழ்வானுக்குத் திருப்பள்ளி யாயிருத்தல் - கருடனுக்கு வாஹநமாயிருத்தல் - விஷ்வக்ஸேநருக்கு ஸேனைத் தலைவராயித்தல் ஆகியவை. இந்த அதிகாரங்கள் அவரவர்களுக்கு வரையறுக்கப்பட்டுள்ளன. இந்த வரையறை அநாதியாக உள்ளது. இந்த வரையறையும் எம்பெருமான் ஸங்கல்பத்தால் வந்தது. இந்த அவனது ஸங்கல்பமும் நித்யமாயுள்ளது.

முக்தர் - நித்யர் - எம்பெருமான் இவர்களின் செயல்கள் வெவ்வேறானவை. முக்தரின் செயல்கள் - எம்பெருமானை அநுபவித்தலும் பல பல கைங்கர்யம் செய்தலும். நித்யருக்கு இவற்றுடன் முன் கூறியபடியே வெவ்வேறு அதிகாரங்கள். எம்பெருமான் செயல்கள் - உலகத்தைப் படைத்தல் காத்தல் முதலியன. அவரவர்களுக்குச் செயல் வெவ்வேறாயினும் அநுபவமாகிய ஆநந்தத்தில் வேற்றுமையில்லை. ஏனென்றால் எல்லோராலும் அநுபவிக்கப்படுமவன் சேதந அசேதநங்களைச் சரீரமாகக் கொண்ட எம்பெருமான் ஒருவன்தானே! ஆதலால் அநுபவ ரூபமான ஆநந்தத்தில் வேறுபாடு இல்லை.

ஜீவ நிரூபணம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

## ஈச்வர நிரூபணம்

### அவன் பெருமைகள்

ஈச்வரன் - பெரிய பிராட்டிக்கு நாயகனான நாராயணனே ஈச்வரனெனப்படுகின்றான். இவன் சேதநம் - அசேதநம் ஆகிய அனைத்தையும் எப்பொழுதும் தரிப்பவனாயுள்ளான். அதாவது - இவன் ஸ்வரூபம் இருப்பதாலேயே சேதந அசேதநங்களின் உருவமும் நீடித்து நிற்றலும் உள்ளனவாதலின் இவன் தரிப்பவனாகின்றான். சேதந அசேதநங்களுக்கு நியந்தாவாகவும் ஆகின்றான். அதாவது - இவன் ஸங்கல்பம் இருப்பதாலேயே இவற்றின் உருவம் - நீடித்து நிற்றல் - செயல் எல்லாம் நடைபெறுகின்றன. அவற்றுக்கு இயற்கையில் சேஷியாகவும் உள்ளான் எம்பெருமான். அதாவது - சேதநம் அசேதநம் ஆகிய இவற்றுக்கென்று ப்ரயோஜனம் இல்லை. இவற்றால் வரும் பயனையெல்லாம் எம்பெருமானே பெறுகின்றான். இந்த மூன்று அம்சங்களும் இருப்பதால் இவன் ஆத்மாவாய்ச் சேதந அசேதநங்கள் இவனுக்கு சரீரமாக ஆகின்றன. உலகில் உள்ள காரியப் பொருள் அனைத்துக்கும் காரணமாகின்றான். எவ்வகைக் கெட்ட குணங்களும் இல்லாதவன்; இயற்கையாகவே எல்லாவற்றையும் அறிந்தவன்; எல்லாவற்றையும் செய்யச் சக்தியுடையவன்; இன்னும் மற்ற எல்லாத் திருக்கல்யாண குணங்களுக்கும் உறைவிடமாயுள்ளவன்; தன்னைத் தவிர மற்ற ஸகல வஸ்துக்களிலும் வேறுபட்டவன்; குறிப்பிட்ட ஒரு சேதநனையோ அசேதநத்தையோ மட்டும் சொல்ல வேண்டுமென்று நினைத்துச் சொல்லும் சப்தங்களைத் தவிர மற்ற ஸகல சப்தங்களாலும் சொல்லப்படுமவன் எம்பெருமான். உதாஹரணமாய் - 'தேவதத்தன்' என்றோ 'குடம்' என்றோ சொன்னால் அச்சொல் அவ்விரண்டுக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவையும் சொல்லும். ஆனால் சரீரம், உடல், தேஹம் என்று சொல்லும்போது அந்தச் சப்தம் அந்தர்யாமி வரையிலும் சென்று எம்பெருமானைக் குறிப்பிட மாட்டாது. மேலும் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் சேதநர் செய்கின்றார்களே! அக்கருமங்களாலெல்லாம் ஆராதிக்கப்படுமவன் ஸர்வேச்வரனே.

இவனே அக்கர்மங்களின் எல்லாப் பலன்களையும் கொடுப்பவன். எல்லாப் பிராணிகளிடமும் இயற்கையாக நல்லெண்ண முடையவன். மோக்ஷத்தைப் பெற விரும்புமவர்களால் ஆச்ரயிக்கப்படுமவனும் இவனே. முக்தி பெற்றவர்களால் அடையப்படும் பலனாக உள்ளவனும் இவனே எவ்வகையில் பார்த்தாலும் இவனைக் காட்டிலும் அநுபவிக்க இனிய வஸ்து வேறு இல்லையென்னும்படி பரமபோக்யனாயிருப்பவன் இவனே. எல்லா ப்ரமாணங்களிலும் மேம்பட்டு விளங்கும் உபநிடதத்தால் போற்றப்படுமவனும் இந்தப் புருஷோத்தமனே.

மூவகைக் காரணம் - விளக்கம்

உலகில் காரியப் பொருள் ஒவ்வொன்றுக்கும் மூன்று காரணங்கள் உண்டு. அவையாவன - (1) உபாதாந காரணம் (2) நிமித்த காரணம் (3) ஸஹகாரி காரணம் என்பவை. இந்த மூன்று காரணங்களும் வெவ்வேறு வஸ்துக்களாகவே இருக்கும். உதாஹரணமாய் - மண்ணாயிருக்கும் வஸ்துவே குடமாக ஆகின்றது. குடம் காரியப்பொருள். அதற்கு உபாதாந காரணம் மண். குயவன் மண்ணைக் குடமாகச் செய்கின்றான். அவன் குடத்திற்கு நிமித்த காரணமாகின்றான். மண் குடமாவதற்குக் காலம் முதலியனவும் துணை புரிகின்றது. ஆகவே குடத்திற்குக் காலம் முதலியன ஸஹகாரி காரணமாகின்றன. இப்படி உலகில் ஒவ்வொரு காரியப் பொருளுக்கும் உள்ள மூன்று காரணப் பொருள்களும் வெவ்வேறாயிருக்கக் காண்கின்றோம். எம்பெருமான் விஷயத்திலோ இந்த அம்சம் விசித்திரமானது. இந்த மூன்று வகைக் காரணங்களும் எம்பெருமானேயாகின்றான்.

(1) எம்பெருமான் உபாதாநகாரணம்

இந்தப் பிரபஞ்சத்துக்கு உபாதாந காரணம் எம்பெருமான். ஸூக்ஷ்மமான நிலையில் உள்ள சேதந - அசேதநங்கள் ஸ்தூலமான சேதந - அசேதநங்களாக மாறுகின்றன. ஆகவே அந்த வஸ்துக்கள் ஸூக்ஷ்மமான நிலையிலும் ஸ்தூலமான நிலையிலும் எம்பெருமானுக்குச் சரீரமாகவே உள்ளன. ஸூக்ஷ்மமான நிலையில் உள்ள சேதந அசேதநங்களைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மம் ஸ்தூலமான சேதந அசேநங்களைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மமாக மாறுகின்றது என்று வழங்குவது ஸம்ப்ரதாயம். ஆகவே ப்ரபஞ்சத்துக்கு எம்பெருமான் உபாதாந காரணமாகின்றான்.

மேலும் ப்ரக்ருதியின் மாறுபாடன மஹான் அஹங்காரமாகின்றது. ஆகவே அஹங்காரத்துக்கு மஹானை உபாதாந காரணமென்கின்றோம். உண்மையில் அந்த மஹானிலும் எம்பெருமான் தானே அந்தர்யாமியாயுள்ளான்! ஆதலின் அவன் தானே அஹங்காரம் முதலிய வஸ்துக்களுக்கு உபாதாந காரணமாகின்றான்.

(2) எம்பெருமானே நிமித்த காரணம்

இப்படியே அவன் 'நானே பல வஸ்துக்களாக ஆகின்றேன்' என்று ஸங்கல்பிக்கின்றான். அவ்வாறே பல பொருள்களாக ஆகின்றான். 'இந்த மண்ணைக் குடமாகச் செய்கின்றேன்' என்று ஸங்கல்பித்துச் செய்யும் குயவன் குடத்துக்கு நிமித்த காரணமாவது போல் பல வஸ்துக்களாக மாறுவதாக ஸங்கல்பித்து அவ்வாறே செய்யும் எம்பெருமான் ப்ரபஞ்சத்துக்கு நிமித்த காரணமாகவும் ஆகின்றான். மேலும் எம்பெருமான் நியமநப்படி உலகத்தைப் படைத்தல் முதலியன செய்யும் பிரமன் முதலிய தேவர்கள் நிமித்த காரணெனப்படுகின்றனர். உண்மையில் அவர்களுக்கும் அந்தர்யாமியாய் நின்று எம்பெருமானே படைத்தல் முதலியவற்றை நடத்துவதாலும் அவனே நிமித்த காரணமாகவும் ஆகின்றான்.

(3) எம்பெருமானே ஸஹகாரி காரணம்

மேலும் காரியப் பொருள்கள் உண்டாவதற்குக் காலம் முதலியவற்றை ஸஹகாரிகாரணம் (துணைபுரியும் காரணம்) என்கிறோம். அந்தக் காலம் முதலியவற்றிலும் எம்பெருமானே அந்தர்யாமியாயிருந்து துணைபுரிவதால் அவனே ஸஹகாரி காரணமாகவும் ஆகின்றான். இவ்வம்சங்களைக் கருத்தில் கொண்டே மூன்று வகைக் காரணமும் ப்ரஹ்மமேயாகுமென்று வேதாந்தங்கள் நிர்ணயித்துப் பேசின.

எம்பெருமானுக்கு லக்ஷணம்

எம்பெருமான் எங்கும் நிறைந்து நிற்பவனாய் அறிவுக்கு உறைவிடமாயிருப்பவன். வேறு ஒருவருக்கும் வசப்படாதவன்; தனக்கு ஓர் ஆதாரமில்லாதிருப்பவன்; உலகுக்குக் காரணமாயுள்ளவன்; மோக்ஷம் கொடுப்பவன்; எல்லாவற்றுக்கும் ஆதாரமாயுள்ளவன்; எல்லாவற்றையும் அடக்கியாள்பவன்; எல்லாவற்றுக்கும் சேஷியாயிருப்பவன்; எல்லாவற்றையும் தனக்குச்

சரீரமாகக் கொண்டு தான் அவற்றுள் கலந்து ஆத்மாவாயிருப்பவன்; எல்லாச் சொற்களாலும் கூறப்படுமவன்; ஸகலவேதாந்தங்களாலும் போற்றப்படுமவன்; எல்லாவுலகங்களுக்கும் அடைக்கலமாயிருப்பவன்; மோக்ஷத்தை விரும்பும் அனைவராலும் உபாஸிக்கப்படுமவன்; எல்லாப் பலன்களையும் அளிப்பவன்; எங்கும் பரவியுள்ள ஜ்ஞாநம் ஆநந்தம் இவற்றின் வடிவமாயுள்ளவன்; பெரிய பிராட்டியைப் பிரியாதிருப்பவன்; இத்தகைய இன்னும் பல இலக்கணங்களையும் உடையவன்.

இருவகை விசேஷணங்கள்

எம்பெருமானுக்கு இரண்டு வகைப்பட்ட தன்மைகள் உண்டு. (1) ஸ்வரூப நிரூபக தர்மங்கள் (2) நிரூபித ஸ்வரூப விசேஷணங்கள்.

(1) ஸ்வரூப நிரூபக விசேஷணம் - விளக்கம்

ஸ்வரூப நிரூபகங்களாவன - ஒரு வஸ்துவின் ஸ்வரூபத்தை எந்தத் தன்மைகளையுடையதாகக் கூறியே விளக்கினாலன்றி அந்த வஸ்துவை அறிய முடியாதோ அந்தத் தன்மைகள். எம்பெருமானுக்கு (1) ஸத்யத்வம் (2) ஜ்ஞாநத்வம் (3) அநந்தத்வம் (4) ஆநந்தத்வம் (5) அமலத்வம் என்னும் ஐந்து தன்மைகளும் ஸ்வரூபநிரூபக விசேஷணங்கள். எம்பெருமானைப் பற்றி அறிய முற்படும்போது இந்தத் தன்மைகளை அறிந்தே இவற்றுடன் கூடியவனாக அவனை உணர வேண்டும். இந்த ஐந்தையும் சேர்க்காமல் அவன் ஸ்வரூபத்தை மட்டும் அறியமுடியாது.

(1) ஸத்யத்வம் - எப்பொழுதும் மாறுபடாது ஒரே நிலையில் நிற்றல்.

(2) ஜ்ஞாநத்வம் - எப்பொழுதும் குறைவுபடாத ஞான வடிவனாயிருக்கும் தன்மை.

(3) அநந்தத்வம் - 'இங்குதான் இருக்கின்றான்' என்று தேசத்தாலும், 'இப்பொழுது தான் இருக்கின்றான்' என்று காலத்தாலும் 'இந்த வஸ்துவின் அந்தர்யாமியாகத்தான் இருக்கின்றான், என்று வஸ்துவினாலும் அளவிட முடியாதபடி எவ்விடத்திலும் எக்காலத்திலும் எந்த வஸ்துவையும் சரீரமாகக் கொண்டு நிற்கும் தன்மை.

(4) ஆநந்தத்வம் - ஆநந்த ஸ்வரூபனாய் நிற்றல்.

(5) அமலத்வம் - தோஷங்களில்லாத தன்மை.

இந்த ஐந்து குணங்களையும் உடையவனாகவே எம்பெருமானை எல்லா ப்ரஹ்மவித்யைகளிலும் உபாஸிக்க வேண்டும். அதாவது பல்வகைப்பட்ட பக்தியோகத்தையோ ப்ரபத்தியையோ செய்யும்போதெல்லாம் இந்த ஐந்து குணங்களுடையவனாகவே எம்பெருமானைத் தியானிக்க வேண்டும். ஆதலால் இந்த ஐந்து தன்மைகளும் ஸ்வரூப நிரூபகதர்மமெனப்படும்.

(2) நிரூபிதஸ்வரூப விசேஷணம் - விளக்கம்

(2) நிரூபிதஸ்வரூபவிசேஷணம் - ஒரு வஸ்துவின் ஸ்வரூபத்தை விளக்கிய பின் அதன் பெருமை புலப்படுவதற்குப் புகழ்ந்து பேசும் குணங்கள். முற்கூறிய ஐந்து குணங்களுடனேயே எம்பெருமானை விளக்கியபின் அவன் பெருமையை அறிவதற்காக அவனிடம் உள்ள ஜ்ஞாநம் - சக்தி முதலிய குணங்களும் இவற்றின் உட்பிரிவுகளான ஸௌசீல்யம் (மிக மேம்பட்டவன் தாழ்ந்தவர்களோடு இடையீடின்றிக் கலந்து பழகும் தன்மை) முதலிய தன்மைகளும் கூறப்படுகின்றன. இவையெல்லாம் நிரூபித ஸ்வரூப விசேஷணங்களாகும். இக்குணங்களின் இலக்கணங்களையும் இவை பயன்படும் முறை முதலியவற்றையும் விரிவாக அறிய வேண்டுமானால் சாஸ்த்ரங்களின் உதவியை நாடிக் கொள்க.

எம்பெருமானுடைய செயல்கள்

எம்பெருமான் செய்யும் செயல்களாவன - எல்லாவுலகங்களையும் படைத்தல் - காத்தல் - அழித்தல் - எல்லா வஸ்துக்களிலும் உட்புகுந்து நியமித்தல் - தண்டித்தல் - அநுக்ரஹம் செய்தல் முதலியன. இவன் ஜ்ஞாநம் - சக்தி முதலிய குணங்களுடன் கூடிய தன் ஸ்வரூபத்துடனேயே எல்லா வஸ்துக்களிலும் உட்புகுந்து நியமிக்கின்றான்.

திருமேனியின் தத்துவங்களின் நிலை

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் முதல் அம்சத்தின் இருபத்திரண்டாவது அத்யாயத்திற்கு அஸ்த்ர பூஷணாத்யாயம் என்று பெயர். இவ்வத்யாயத்தில் எல்லாத் தத்துவங்களும் எம்பெருமானுடைய திருமேனியில் திருவாயுதங்களாகவும் திருவாபரணங்களாகவும் நிற்கும் நிலை விளக்கமாய்க் கூறப்பட்டுள்ளது. ஆதலால் இவ்வத்யாயத்துக்கு இப்பெயர் வந்தது.

இத்தனைத் தத்துவங்களுக்கும் உறைவிடமாயுள்ளது எம்பெருமான் திருமேனி. இந்தத் திருமேனி திவ்யமங்கள விக்ரஹமென வழங்கும். இத்திருமேனியுடன் கூடியவனாயுள்ளான் ஸர்வேச்வரன்.

எம்பெருமானுடைய ஐவகைத் திருமேனிகள்

இந்தத் திருமேனி (1) பரம் (2) வ்யூஹம் (3) விபவம் (4) அந்தர்யாமி (5) அர்ச்சை என்று ஐவகைப்பட்டதாயிருக்கும்.

(1) பரரூபம் - விளக்கம்

(1) பரம் - ஸ்ரீவைகுண்டத்தில் ஆநந்த ஸ்வரூபனாய் நிற்கும் பரவாஸுதேவனுடைய திருமேனி. இது நித்யஸூரிகளும் முக்தி பெற்றவர்களுமே ஸேவிக்க உரியது. எந்நாளும் அழியாது நித்யமாய் உள்ளது.

சாந்தோதிதம் - நித்யோதிதம் பிரிவுகள்

இதில் சாந்தோதிதம் - நித்யோதிதம் என்ற பிரிவுகள் உண்டு. நித்யோதிதம் என்பது ஸ்ரீவைகுண்டத்தில் நித்யரும் முக்தரும் அநுபவிக்க உரியதாய்ப் பரவாஸுதேவனாய் எம்பெருமான் எழுந்தருளியுள்ள நிலை. சாந்தோதிதம் என்பது அந்தப் பரவாஸுதேவனிடமிருந்து தோன்றியதாய் ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் என்ற மூன்று வ்யூஹ வடிவங்களுக்கும் காரணமாயுள்ள வ்யூஹ வாஸுதேவ ரூபத்துடன் எம்பெருமான் நிற்கும் நிலை. இந்த இரு நிலைகளையும் வேறு வகையாகவும் விளக்குவதுண்டு. நித்யோதிதம் என்பது பரவாஸுதேவன் நித்ய விபூதி - லீலா விபூதி ஆகிய இரண்டையும் தான் அநுபவிக்கும் நிலை. சாந்தோதிதம் என்பது அந்த இரண்டு விபூதிகளையும் விட்டுத் தன் ஸ்வரூபத்தை மட்டும் தான் அநுபவிக்கும் நிலை என்றும் கூறுவர். இதுவன்றி, நித்ய விபூதியை நடத்தவல்ல ஸங்கல்பத்தோடு எம்பெருமான் கூடிய நிலையை நித்யோதிதம் என்றும், லீலாவிபூதியை நடத்த வல்ல ஸங்கல்பத்தோடு அவன் கூடிய நிலையைச் சாந்தோதிதம் என்றும் கூறுவதுண்டு.

(2) வ்யூஹரூபம் - விளக்கம்

(2) வ்யூஹம் - பரவாஸுதேவனுடைய உருவத்தினின்று வ்யூஹமெனப்படும் நான்கு உருவங்கள் தோன்றுகின்றன. அவையாவன - வாஸுதேவன் - ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் என்ற உருவங்கள். இந்த நான்கு திருமேனிகளுக்கும் யுகங்கள் மாறி மாறி வருவதற்கு ஏற்ப நிறங்களும் மாறிமாறி வரும்.

அதாவது - வாஸுதேவ ரூபத்துக்குக் கிருதயுகத்தில் வெண்மை நிறமும் த்ரேதாயுகத்தில் செம்மை நிறமும் த்வாபர யுகத்தில் மஞ்சள் நிறமும் கலியுகத்தில் கருமை நிறமும் தோன்றும். ஸங்கர்ஷணனுக்கு இவ்வாறே நான்கு யுகங்களிலும் முறையே செம்மை - மஞ்சள் - கருமை - வெண்மை நிறங்கள் வரும். ப்ரத்யும்ந உருவத்துக்கு முறையே மஞ்சள் - கருமை - வெண்மை - செம்மை நிறங்களும் அநிருத்த வடிவுக்கு முறையே கருமை - வெண்மை - செம்மை - மஞ்சள் நிறங்களும் வருமென்று உணர்க.

### வ்யூஹம் மூன்றாகக் கணக்கிடும் கொள்கை

இந்த நான்கு வ்யூஹரூபங்களில் முதலாவதான வாஸுதேவ ரூபத்தை விலக்கி ஸங்கர்ஷணன் - ப்ரத்யும்நன் - அநிருத்தன் - என்ற மூன்று வ்யூஹங்களை மட்டும் கணக்கிட்டுக் கூறும் கொள்கையும் உண்டு. இவர்களில் வாஸுதேவனை விட்டுக் கணக்கிட்டதற்கு ஒரு காரணம் உண்டு. அதாவது - ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள பரவாஸுதேவன் ஜ்ஞாநம் - பலம் ஐச்வர்யம் - வீர்யம் - சக்தி - தேஜஸ் என்னும் ஆறு குணங்களையும் உலகுக்குப் புலப்படுமாறு காட்டிக் கொண்டு நிற்கின்றான். அவனிடமிருந்து தோன்றிய வ்யூஹங்கள் நான்கில் முதலாவதான வாஸுதேவ ரூபமும் மேற்கூறிய ஆறு குணங்களையும் காட்டிக் கொண்டு நிற்கின்றது. இந்த அம்சத்தில் வேற்றுமை யில்லாதபடியால் பரவாஸுதேவ ரூபத்துடன் வ்யூஹவாஸுதேவ ரூபத்தையும் சேர்த்து எஞ்சிய மூன்றை மட்டும் கணக்கிட்டுக் கூறியுள்ளனர்.

### வ்யூஹம் மூன்றும் வெளியிடும் குணங்கள்

மற்ற மூன்று ரூபங்களிலும் இரண்டிரண்டு குணங்கள் வெளிப்படையாகப் புலப்படும். ஸங்கர்ஷண ரூபத்தில் ஜ்ஞாநமும் பலமும் தோன்றும். ப்ரத்யும்ந ரூபத்தில் ஐச்வர்யமும் வீர்யமும் புலப்படும். அநிருத்த ரூபத்தில் சக்தியும் தேஜஸ்ஸும் வெளியாவன.

### வ்யூஹம் மூன்றும் வெளியிடும் செயல்கள்

இவ்வாறே இந்த மூன்று வ்யூஹ ரூபங்களுக்குச் செயல்களும் வெவ்வேறு. ஸங்கர்ஷணனுக்கு உலகை அழித்தல் - சாஸ்த்ரத்தை வெளியிடல் இரண்டும் செயல்கள். ப்ரத்யும்நனுக்கு உலகைப் படைத்தலும், தர்மங்களை நடத்தலும் செயல்கள். அநிருத்தனுக்கு உலகைக் காத்தலும் தத்துவ ஜ்ஞாநத்தை உண்டாக்குதலும் செயல்களாகும்.

### விசாகயூபம் - விளக்கம்

ஸ்ரீவைகுண்டத்தில் 'விசாகயூபம்' என்னும் ஒரு தூண் இருக்கின்றது. அது ஞான வடிவமாயுள்ளது. அதில் மேல் கீழாக நான்கு இடங்கள் உள்ளன. ஒவ்வோர் இடத்திலும் கோரை முளைத்தாற்போல் நான்கு திசைகளிலும் நான்கு கிளைகள் உண்டு. அந்தக் கிளைகளாகவும் எம்பெருமானே வடிவு கொண்டுள்ளான். ஒவ்வோர் இடத்திலும் உள்ள நான்கு கிளைகளில் கிழக்கில் வாஸுதேவமூர்த்தியும், தெற்கில் ஸங்கர்ஷணமூர்த்தியும், மேற்கில் ப்ரத்யும்ந மூர்த்தியும், வடக்கில் அநிருத்த மூர்த்தியுமாக வடிவுகொண்டு எம்பெருமானே அமர்ந்துள்ளான். அடிப்பாகத்தில் உள்ள மேற்கூறிய நான்கு மூர்த்திகளும் வெளியிந்திரிங்களின் செயல்களையுடையனவாய் விழித்துக் கொண்டிருப்பனபோல் உள்ளன. அதற்கு அடுத்த மேலிடத்திலுள்ள நான்கு மூர்த்திகளும் வெளியிந்திரியங்களின் செயலின்றி மனத்தின் செயலோடு மட்டும் சொப்பன நிலையில் உள்ளன. அதற்கு மேலிடத்திலுள்ள நான்கு மூர்த்திகளும் வெளியிந்திரியம் மனம் இவற்றின் செயலுமின்றி உறங்கும் நிலையில் உள்ளன. அதற்குமேல் கடைசியிடத்திலுள்ள நான்கு மூர்த்திகளும் மூச்சுவிடுதலுமின்றி மயக்க நிலையில் உள்ளன. இம்மூர்த்திகளை மனிதர் உபாஸிக்கும் முறைகள் ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் விளக்கமாய்க் கூறப்பட்டுள்ளன. இம் மூர்த்திகளை உபாஸிப்பவன் தன் இதயத்தில் மேற்கூறிய விசாகயூபத்தையும் அதன் நான்கு இடங்களையும் தியானிக்க வேண்டும். பின் ஒவ்வோர் இடத்திலும் கோரை போன்ற நான்கு கிளைகளின் வடிவு கொண்ட நான்கு மூர்த்திகளையும் தியானிக்க வேண்டும். அப்பொழுது அந்த அந்த மூர்த்திகளைப்போல் உபாஸிப்பவன் தானும் விழித்தல் - சொப்பனம் - உறக்கம் - மயக்கம் ஆகிய நிலைகளில் இருந்து கொண்டு உபாஸிக்க வேண்டும்.

### வ்யூஹங்களினின்று தோன்றும் உருவங்கள்

முற்கூறிய நான்கு வ்யூஹங்களில் ஒவ்வொன்றிலிருந்து மும்மூன்று உருவங்கள் தோன்றும். அதாவது - வாஸுதேவனிடமிருந்து கேசவன் - நாராயணன் - மாதவன் என்னும் மூன்று உருவங்கள் தோன்றுகின்றன. ஸங்கர்ஷணனிடமிருந்து கோவிந்தன் - விஷ்ணு - மதுஸூதநன் என்னும் மூன்று உருவங்கள் உண்டாகின்றன. ப்ரத்யும்நனிடமிருந்து த்ரிவிக்ரமன் - வாமநன் - ஸ்ரீதரன் என்னும் மூன்று உருவங்கள் பிறக்கின்றன. அநிருத்தனிடமிருந்து ஹ்ருஷீகேசன் - பத்மநாபன் - தாமோதரன்

என்னும் மூன்று உருவங்களும் உதிக்கின்றன.

### பன்னிரண்டு மூர்த்திகளுக்கும் செயல்கள்

இந்தப் பன்னிரண்டு உருவங்களையும் நான்கு வ்யூஹங்களின் ஒருவகைப் பிரிவு என்பர். இந்தப் பன்னிருவருக்கும் மாதங்களுடன் ஸம்பந்தம் உண்டு. அதாவது - மார்கழி முதல் கார்த்திகை வரை கணக்கிட வேண்டும். இந்தப் பன்னிரண்டு மாதங்களுள் ஒவ்வொரு மாதத்துக்கும் ஒவ்வொரு ஸூர்யனாகப் பன்னிரண்டு ஸூர்யர்கள் தலைவர்களாயுள்ளனர். அவர்களுள் இந்தக் கேசவன் முதலிய பன்னிரு மூர்த்திகளும் உட்புகுந்து அவர்களின் செயலை முறையாக நடத்தி வைக்கின்றனர். மேலும் பன்னிரண்டு திருமண் காப்புக்களை அணிகின்றோமே! அவற்றில் கேசவன் முதலிய பன்னிருவர்க்கும் முக்கியத் தன்மை உண்டு. அந்த அந்தத் திருமண் காப்புக்கு ஏற்றவாறு இவர்களுக்குத் திருவாயுதம் - நிறம் - இருப்பிடம் - திசை இவை வேறுபட்டிருக்கும். பன்னிருநாமத்தில் விளக்கம் காண்க.

### 3. விபவரூபம் - விளக்கம்

3 விபவரூபம் - கீழே கூறிய வ்யூஹ ரூபத்திலிருந்து பத்மநாபன் முதலிய முப்பத்தாறு ரூபங்கள் ஏற்படுகின்றன. இவை விபவரூபமெனப்படும். சில ப்ரமாணங்கள் முப்பத்தெட்டு என்றும் சில முப்பத்தொன்பது என்றும் கூறுகின்றன. மத்ஸ்யம் - கூர்மம் - ராமன் - கிருஷ்ணன் முதலிய தசாவதாரங்களும் விபவரூபத்தில் தான் சேரும். ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதையில் முப்பத்தொன்பது விபவரூபங்களுக்கும் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவையாவன - (1) பத்மநாபன் (2) ஸநத்குமாரன் (3) த்ருவன் (4) அநந்தன் (5) சக்த்யாத்மா (6) மதுஸூதநன் (7) கபிலன் (8) விச்வரூபன் (9) விஹங்கமன் (10) க்ரோடாத்மா (11) படபாவக்த்ரன் (12) தர்மன் (13) ஹயக்ரீவன் (14) ஹம்ஸன் (15) மத்ஸ்யம் (16) கூர்மம் (17) அம்ருதாஹரணன் (18) வராஹன் (19) ந்ருஸிம்ஹன் (20) ராஹுஜித் (21) காலநேமிக்நன் (22) பாரிஜாதஹரன் (23) தத்தாத்ரேயன் (24) வடபத்ரசாயி (25) வாமனன் (26) த்ரிவிக்ரமன் (27) நரநாராயணர் (28) ஹரி (29) நாரதன் (30) ப்ருது (31) வ்ருஷபன் (32) தந்வந்தரி (33) வ்யாஸன் (34) பாதாளசயநன் (35) பரசுராமன் (36) ராமன் (37) பலராமன் (38) க்ருஷ்ணன் (39) கல்கி என்பன.

விபவாவதாரங்கள் இவ்வாறு பற்பலவாயிருப்பினும் தசாவதாரங்களை மட்டும் மிக முக்கியமாய்ப் போற்றுவதற்குக்

காரணம் மற்ற விபவாவதாரங்களிற் காட்டிலும் தசாவதாரங்களால் உலகுக்கு விசேஷமான உபகாரங்கள் ஏற்பட்டிருப்பதுவேயாகும்.

இந்த விபவாவதாரங்களுள் ஒரு ரூபமே மற்றொரு ரூபமாக மாறக்கூடும். உதாஹரணமாய் - வாமனனே பலியிடம் தானம் வாங்கியதும் த்ரிவிக்ரமனாக மாறுவதாகக் காண்கின்றோமே! இவ்வாறு ஒரு ரூபம் மற்றொரு ரூபமாக மாறினாலும் அவையும் விபவரூபத்தின் தொகுதியைச் சேர்ந்தவையே என்று கூறவேண்டும். கபிலர் - பரசுராமர் முதலிய உருவங்கள் நேராக எம்பெருமானுடைய அவதாரங்களாகமாட்டா. அவர்கள் ஜீவர்களே. ஆனால் பெரும்புண்ணியத்தால் பெரும் புகழ் படைத்தவர்கள். அவர்களுக்குள் எம்பெருமான் தன் திருமேனியோடு உட்புகுந்து சில விசேஷச் செயல்களைச் செய்கின்றான். அதனால் அந்த ஜீவர்களுக்கு மேன்மை உண்டாகின்றது. இந்த ரூபங்கள் பரமைகாந்திகளுக்கு வழிபட உரியனவல்ல. கீழ்க்கூறிய ஒவ்வோர் உருவத்திலிருந்தே பற்பல அவதாரங்கள் உண்டாகும். இந்த வகையில் தோன்றும் உருவங்களுக்கு எண்ணிக்கையேயில்லையென்று சாஸ்த்ரம் கூறுகின்றது.

### (4) அந்தர்யாமி ரூபம் - விளக்கம்

(4) அந்தர்யாமி ரூபம் - ஒவ்வொருவருடைய இதயத்தின் உட்புறத்தை இடமாக்கிக் கொண்டு எம்பெருமான் கொண்டுள்ள மிக ஸூக்ஷ்மமான உருவம். இந்தத் திருமேனியை நம்மால் காண முடியாது. தவம் புரியும் யோகிகள் தாம் தங்கள் யோக வலிமையால் காணமுடியும்.

### (5) அர்ச்சாரூபம் - விளக்கம்

(5) அர்ச்சாவதாரம் - ஊனக் கண்ணுடையரான நாமும் அநுபவிக்கும்படி திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகள். பரம் - வ்யூஹம் முதலியவற்றுக்கு முன் கூறிய பெருமைகளில் ஒன்றும் குறையாமல் இவ்வர்ச்சை வடிவிலும் காட்சி தருகின்றான் எம்பெருமான்.

### ஐவகைத் தலங்கள் - விளக்கம்

அவன் அர்ச்சை வடிவுடன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்கள் ஸ்வயம்வ்யக்தம் - ஸைத்தம் - ஆர்ஷம் - திவ்யம் - மாநுஷம் என்ற பிரிவுடையனவாயிருக்கும். ஸ்வயம் வ்யக்தம் - பிறர் ஸம்பந்தமின்றி எம்பெருமான் தானே வந்து அவதரித்த

தலம். ஸைத்தம் - ஸித்தர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. ஆர்ஷம் - முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. திவ்யம் - தேவர்களால் அமைக்கப்பட்டது. மாநுஷம் - மானிடரால் நிர்மாணம் செய்யப்பட்டது.

*அர்ச்சையில் உள்ள ஸௌகர்யம்*

இத்தலங்களில் எழுந்தருளியுள்ள அர்ச்சைத் திருமேனிகளை ஸேவிப்பதில் மற்ற திருமேனிகளைப் போலத் தேசத்தாலோ காலத்தாலோ அநுபவத்தை நாம் இழக்க வேண்டியதில்லை. அதாவது - பரரூபமும் வ்யூஹரூபமும் நமக்கு இப்பொழுது எட்டாத ஸ்ரீ வைகுண்டத்தில் உள்ளன. விபரூபமோ வேறு யுகத்திலோ நெடுங்காலத்துக்கு முன்போ நமக்கு எட்டாத காலத்தில் உள்ளன. அந்தர்யாமி ரூபமோ யோகிகளுக்கு மட்டுமே காண உரியது. அவற்றிலுல்ள வரையறைகளெல்லாம் இன்றி நாம் எல்லோரும் இந்த மாம்ஸக்கண்ணுடனேயே ஸேவித்து அநுபவித்து மகிழலாம்படியன்றோ இருப்பது இந்த அர்ச்சாவதாரத் திருமேனி!

*அர்ச்சையில் உள்ள சிறப்புக்கள்*

ஜ்ஞாநம் - சக்தி - பலம் - ஐச்வர்யம் - வீர்யம் - தேஜஸ் ஆகிய ஆறு குணங்களும் மற்ற ரூபங்களைக் காட்டிலும் அர்ச்சா மூர்த்தியான எம்பெருமானிடம் மிகுதியாகப் பிரகாசிப்பதாகச் சாஸ்த்ரம் கூறுகின்றது. மேலும் அர்ச்சைத் திருமேனி நாம் எல்லோரும் எளிதில் ஆராதிக்கக் கூடியது என்றும் நாம் செய்யும் அபராதங்களையெல்லாம் அர்ச்சையெம்பெருமான் பொறுத்துக் கொள்ளக் கூடியவனென்றும் தன் திருமேனியை ஆராதிப்பவர்க்கு வசமாக்கிவிட்டவனென்றும் முன்னோர்களான பெரியோர்கள் அநுபவித்துப் பேசியுள்ளனர். எம்பெருமானுக்கு மற்றைய ரூபங்களைக் காட்டிலும் அர்ச்சைத் திருமேனியிலேயே உகப்பு மிகுதியாகும். திரு ப்ரதிஷ்டையைச் சாஸ்த்ர முறைப்படி செய்வதாலும் இந்தத் திருமேனிக்குப் பெருமை அதிகமாகின்றது. எம்பெருமான் அர்ச்சை விக்ரஹத்தின் அளவுக்கு ஏற்றவாறு தன் உருவத்தை ஆக்கிக் கொண்டு அதில் அமருகின்றான். மேலும் இந்த அர்ச்சைத் திருமேனியில் அவன் உள்ளே புகுந்திருப்பது மற்றைய வஸ்துக்களில் புகுந்துள்ளது போலன்று. சுத்த ஸத்துவ மயமான திருமேனியுடன் உட்புகுந்து இந்த அர்ச்சை வடிவில் நீரும் பாலும் போல் கலந்து விடுகின்றான். மேலும் அர்ச்சைத் திருமேனியிலேயே எப்பொழுதும் மிக்க மகிழ்ச்சியுடன் க்ஷணமும் அகலாது நித்யமாய் எழுந்தருளியுள்ளான். இன்னும் இத்தகைய பல அம்சங்களாலும் மற்ற ரூபங்களையெல்லாம் விட அர்ச்சை வடிவு

மிகப் பெருமை பெற்று விளங்குகின்றது.

எந்த நிலையிலும் பிராட்டியைப் பிரியாமை

ஸர்வ ரக்ஷகனான ஸர்வேச்வரனுக்கு உள்ள பரம் - வ்யூஹம் - விபவம் - அந்தர்யாமி - அர்ச்சை என்ற ஐந்து நிலைகளிலும் பெரிய பிராட்டியைப் பிரியாது அவன் கூடியே நிற்பான். சரணமடைந்தவரைக் காத்தல் என்னும் அவனுடைய கடமையில் அவளும் துணைபுரிந்து அத்தருமத்தை நன்றாய் நடத்தச் செய்வாள். பெரிய பிராட்டி அவன் திருவுள்ளத்துக்கு உகந்தவளாய் அவனுக்கு ஏற்ற திருமேனி முதலியவற்றுடன் அவனுடன் சேர்ந்தே நிற்பவள்.

கீழ்க்கூறிய பரம் - வ்யூஹம் முதலிய ரூபங்கள் அமர்ந்துள்ள இடங்களைப் பற்றிய விளக்கத்தையும் இன்னும் அவன் திருக்கைகள் - நிறம் - திருவாபரணங்கள் - திருவாயுதங்கள் - தேவிமார் - பரிவாரங்கள் - பெருமைச் சின்னங்கள் முதலியவற்றின் விளக்கத்தையும் சுருதி - ஸ்ம்ருதி - ஸ்ரீ பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் - ஸ்ரீ ஸ்தோத்ரரத்நம் - ஸ்ரீ சரணாகதிகத்யம் முதலியவற்றில் கண்டு கொள்க.

திருமேனியே சுபாச்ரயம்

எம்பெருமான் திருமேனிகளுடன் கூடிய நிலையில் சுபாச்ரயனெனப்படுகின்றான். அதாவது - அவன் திருமேனி சுபாச்ரயமெனப்படும். சுபம் என்பதற்குப் பாபத்தைப் போக்குவது என்று பொருள். அவன் திருமேனியை ஸேவித்தால் ஸகல பாபங்களும் தொலைந்து விடுமே! ஆச்ரயம் என்பதற்குத் தியானத்துக்கு எளிதாயிருப்பதென்று பொருள். திருமேனியைத் தான் தியானிக்க முடியும். அவனது ஆத்மஸ்வரூபத்தை நாம் தியானிக்க முடியாதன்றோ! ஆகவே சுபமாயிருத்தல் - ஆச்ரயமாயிருத்தல் என்னும் இரண்டு தன்மைகளும் அவனுடைய ஐவகைத் திருமேனிகளுக்கே உண்டு. அவன் திருமேனிகளைத் தவிர வேறு எதற்கும் சுபாச்ரயமாயிருத்தல் கிடையாது. ஆதலின் அவன் திருமேனிகள் மட்டுமே சுபாச்ரயமெனப்படும். அவன் திருமேனியைத் திவ்யமங்கள விக்ரஹமென்றும் அவனது ஆத்மஸ்வரூபத்தை திவ்யாத்ம ஸ்வரூபமென்றும் வழங்குவது வேதாந்திகளின் ஸம்ப்ரதாய முறை. சுபாச்ரயமான திருமேனிகளை யுடையனாயிருத்தலால் எம்பெருமானும் சுபாச்ரயனெனப் படுகின்றான்.

பிரமன் முதலியவர் வழிபடத்தகாதவர்

பிரமன் உலகைப் படைக்கின்றான். சிவன் அழிக்கின்றான். இவ்வாறே இந்திரன் முதலிய தேவர்கள் சிற்சில செயல்களைச் செய்வதாக் கூறுகின்றோம். உண்மையில் அவர்கள் சுதந்திரமாய் அச்செயல்களைச் செய்யச் சக்தியற்றவர். எம்பெருமான் அந்த அந்தத் தேவர்களுக்கு உட்புகுந்து அந்த அந்த ஸமயங்களில் அந்த அந்தச் செயல்களைச் செய்விக்கின்றான். எம்பெருமான்தான் அவர்களுக்குள் புகுந்துள்ளானே என்பதற்காக அவர்களை ஸேவிக்கலாமோ எனக் கருதக்கூடாது. ஏனெனில் - அந்தத் தேவர்கள் தங்கள் புண்ணிய வசத்தாலேயே தத்தம் அதிகாரத்தைப் பெற்றுள்ளனர். ஆதலால் புண்ய பாபங்களாகிய கர்மத்துக்கு வசப்பட்டவர்களேயாவர். மோக்ஷத்தை விரும்பும் ஞானிகள் அத்தேவர்களை வழிபடக் கூடாதென்று மஹாபாரதமும் பௌஷ்கரஸம்ஹிதையும் மற்றும் பல ப்ரமாணங்களும் கூறும்.

கர்மங்களால் ஆராதிக்கப்படுமவன் எம்பெருமானே.

மோக்ஷத்துக்கு உபாயமாகவுள்ள பக்தியோகத்தின் பிரிவுகள் முப்பத்திரண்டு உண்டு. அவற்றுள் ப்ரதர்த்தநவித்யை என்பதும் ஒன்று. அதில் இந்திரனை வந்தடைந்த ப்ரதர்த்தநன் என்பவனுக்கு இந்திரன் இந்த வித்யையை உபதேசிக்கின்றான். "என்னைச் சரீரமாகவுடைய எம்பெருமானை உபாஸநம் செய்" என்கின்றான் இந்திரன். இவ்வாறு செய்யும் உபாஸநத்தில் அயல்சேதநனாகிய இந்திரனோடு கூடிய எம்பெருமானையே உபாஸிக்கும்படியாய் வருகின்றது. இதில் இந்திரன் முக்கியமாயில்லாவிடினும் விசேஷணமாகவாவது உபாஸநத்தில் அடங்கிவிடுகின்றான். இவனையும் சேர்த்தே உபாஸிக்கவேண்டுமென்று சாஸ்த்ரம் வலிமையாய் விதித்துள்ளதே! அப்பொழுது உபாஸநம் செய்பவனுக்கு ஐகாந்த்யம் (எம்பெருமானையே பற்றிய தன்மை) குலைந்து விடாதா? மேலும் அந்தண்மை முதலிய அந்த அந்த ஜாதிக்கும் பிரமசர்யம் முதலிய அந்த அந்த ஆச்சிரமத்துக்கும் உரிய கர்மங்களை அவரவர் செய்தே தீரவேண்டுமன்றோ! அந்த அந்தக் கர்மங்களில் இந்திரன் - பிரமன் - சூரியன் - சிவன் முதலிய தேவர்களின் பெயரைச் சொல்லியே செய்தாக வேண்டுமென்று சாஸ்த்ரம் பலமாய் விதிக்கின்றதே! இதனாலும் ஐகாந்த்யம் குலையாதா? என்று ஆக்ஷேபம் வரலாம். ஸமாதாநம் வருமாறு - ஐகாந்த்யம் சிறிதும் குலையாது. ஏனெனில் - இந்தக் கர்மங்களாலெல்லாம் உண்மையில் ஆராதிக்கப்படுமவன் யார்? பரமாத்மாவான எம்பெருமானே. இந்திரன் முதலிய தேவர்களுக்கு அவற்றில் ஸம்பந்தமேயில்லை. முக்கியத் தன்மையற்று அவனுக்குச் சரீரமாய் நிற்குமளவுக்கே அவர்களுக்குத் தொடர்பு உள்ளது.

உதாஹரணமாய் - ப்ராணன் என்ற அசேதநத்தைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவை உபாஸிக்கும்போது அசேதநமான ப்ராணன் சரீரமாய் நிற்பதோடு ஒழிவது போல் இந்திரன் முதலிய மற்றைச் சேதநர்களும் எம்பெருமானுக்குச் சரீரமாய் நிற்பதோடு ஒய்ந்துவிடுகின்றனர். இந்திரன் முதலிய சேதநர்களும் ப்ராணன் முதலிய அசேதநங்களும் எம்பெருமான் அணிந்த சட்டை போன்றவர்களே. உலகில் ஒருவனுக்குச் சட்டைக்குமேல் ஆபரணங்களையும் மாலைகளையும் போட்டாலும் அவற்றைத் தாங்குவதுடன் சட்டையின் தொடர்பு நின்று விடுகின்றது. உள்ளேயுள்ள ஜீவனல்லனோ மகிழ்ச்சி பெறுகின்றான்!. இங்கும் அவ்வாறே அந்தர்யாமியான எம்பெருமானே அக்கர்மங்களால் ஆராதிக்கப்படுகின்றான். ஆதலின் வேறு தெய்வத்தை வழிபடும் குற்றம் சிறிதும் இன்றிச் சுத்தயாஜிகளைப் போல் இவர்களும் பரமைகாந்திகளாய் விளங்குவரென்று உணர்க.

சுத்தயாஜிகள் - மிச்ரயாஜிகள் பிரிவு

சுவேதத்வீபமென்னும் தீவில் பரமைகாந்திகளே வசிக்கின்றனர். அவர்கள் தாங்கள் செய்யும் கர்மங்களில் எம்பெருமானையன்றி வேறு தெய்வத்தின் பெயர்களைச் சொல்லாதவாறு அவர்கள் மட்டும் கர்மங்கள் செய்யும் முறையைச் சாஸ்த்ரம் தெரிவித்துள்ளது. அவர்களுக்குச் சுத்தயாஜிகள் என்று பெயர். அதாவது - வேறு தெய்வத்தின் பெயரைக் கலவாது தூய்மையான முறையில் கர்மங்களைச் செய்பவர்கள் என்று பொருள். நாம் அனைவரும் மிச்ரயாஜிகள் எனப்படுகின்றோம். கலந்துள்ள கர்மங்களைச் செய்பவர்கள் மிச்ரயாஜிகள். அதாவது - எம்பெருமானையே முதன்மையாக வைத்து இந்திரன் முதலிய தேவர்களின் பெயரையும் கலந்துகொண்டு கர்மங்களைச் செய்பவர்கள். இந்த இரு வகுப்பினரும் ஸமமாகவே ஆகின்றனர். இருவருக்கும் முக்கியமாய் ஆராதிக்கப்படும் பரதேவதை எம்பெருமான் தானே!

அவதாரங்களில் அபிநயம்

கீழ்க்கூறியவாறு கபிலர் - பரசுராமர் முதலிய ஜீவர்களில் புகுந்து செய்யும் அவதாரங்களன்றி, எம்பெருமான் தானே நேராகச் செய்யும் ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் பல உண்டே! அவ்வவதாரங்களிலும் கர்மத்துக்கு வசப்பட்டவர்கள் போலவே ஸுகதுக்கங்களை அநுபவித்தல் முதலியன உள்ளனவே! இவை எவ்வாறு பொருந்தும்? என்ற கேள்வி எழலாம். ஆனால் அங்கு உண்மைநிலை வேறு. அசுரத்தன்மையையுடைய

மஹாபாபிகள் சிலர் உலகில் உண்டு அவர்கள் எவ்வழியிலும் திருந்துவதற்கு இடமேயில்லை. அவர்களை நரகப் படுகுழியில் வீழ்த்தவேண்டும். அவர்களின் அறிவைக் கெடுக்கவேண்டும். உள்ள அறிவுதான் பயன்படவில்லையே! அதற்காக எம்பெருமான் அவ்வவதாரங்களில் மனிதரைப் போல் ஸுகதுக்கங்களுக்கு அகப்படுமவனாகவும் கர்மத்துக்கு வசப்பட்டவனாகவும் நடிக்கின்றான். இவ்வுண்மையை அறியாத பாபிகள் அறிவு கெட்டு இவனையும் தம்மைப் போன்றவனாகவே கருதி அபசாரப்பட்டுப் பின் அதன் பலனை அநுபவிக்கின்றனர். இச்செயல் அவர்களை மயக்குவதற்காக எம்பெருமான் செய்யும் நடிப்பேயாகும்.

சுத்த ஸ்ருஷ்டி - அசுத்தஸ்ருஷ்டி

ஸ்ருஷ்டி (படைப்பு) இருவகைப்படும். (1) சுத்தஸ்ருஷ்டி (2) அசுத்தஸ்ருஷ்டி. சுத்தஸ்ருஷ்டி - ரஜோகுணமும் தமோ குணமும் கலவாமல் சுத்த ஸத்துவப் பொருளாலேயே ஆகும் படைப்பு. அசுத்த ஸ்ருஷ்டி - ஸத்துவம் - ரஜஸ் - தமஸ் ஆகிய முக்குணங்களையும் கொண்டு படைக்கும் படைப்பு எம்பெருமானுடைய நேர் அவதாரமெல்லாம் சுத்த ஸ்ருஷ்டியின் பிரிவில் சேரும். மற்ற உலகில் உள்ள படைப்பெல்லாம் அசுத்த ஸ்ருஷ்டியாகும்.

அவதார ரஹஸ்யம்

எம்பெருமானுடைய அவதாரங்களைப்பற்றிய ஆறு ரஹஸ்யங்கள் உண்டு. அவையாவன (1) எம்பெருமானுடைய அவதாரம் ஒவ்வொன்றும் இந்த்ரஜாலம் போலன்றி உண்மையாயிருத்தல் (2) அவதாரதசையிலும் எம்பெருமானுக்கு இயற்கையாயுள்ள தன்மைகளை விடாதிருக்கப் பெறுதல் (3) அவதாரத்திலும் உள்ள அவன் திருமேனி ரஜஸ் - தமஸ்ஸுக்களின் ஸம்பந்தமேயில்லாது சுத்தஸத்துவமயமாகவேயிருத்தல் (4) அவன் இக்கர்மபூமியில் அவதரிப்பதற்குக் கர்மம் முதலியவனவன்றின் தன் ஸங்கல்பமே காரணமாயிருத்தல் (5) பூமியில் தர்மம் குறைந்து அதர்மம் தலையெடுக்கும்போது அவதரிக்கும் தன்மை (6) ஸாதுக்களை ரக்ஷிப்பதே அவதாரத்திற்குப் பலனாயிருத்தல் என்பன. இந்த ஆறு அம்சங்களாகிய அவதார ரஹஸ்யத்தின் உண்மையை அறிந்தால் இவ்வறிவு சீக்கிரத்தில் ஓர் உபாயத்தைச் செய்து முடிக்கச் செய்யும் ; பின் அந்த ஜந்மத்திலேயே மோக்ஷம்

கிடைத்துவிடும். மறுபிறவி இல்லை. ஆதலின் இந்த அவதார ரஹஸ்யத்தை அவசியம் அறிந்து கொள்ளவேண்டும்.

இருவகைப் படைப்புக்கும் காரணம்

கீழே கூறிய சுத்த ஸ்ருஷ்டி - அசுத்த ஸ்ருஷ்டி ஆகிய இரண்டுக்கும் காரணம் எதுவென்று ஆராய்ந்து பார்ப்போம். இந்தப் படைப்புக்களில் ப்ரக்ருதியின் காரியமான ஒரு வஸ்துவுக்கு எம்பெருமானது ஸங்கல்பத்தை எதிர்பாராத நித்தியமான ஒரு வஸ்து மட்டும் காரணமாக ஆவதாகக் கூற முடியாது. ஏனெனில் காரணப்பொருள் நித்யமாய் எப்பொழுதும் இருப்பதால் படைப்பு எப்பொழுதுமே நடந்து கொண்டிருக்கவேண்டிவரும். அநித்யமான வஸ்துமட்டும் காரணமென்றும் கூற முடியாது. அதாவது - முந்திய கார்யவஸ்து மற்றொன்றாக மாறுபட்ட காரியப் பொருளுக்குக் காரணம் என்றும் கூற முடியாது. அப்படிக் கூறினால் படைப்பு - ப்ரளயம் என்ற வரையறையே இல்லாதுபோகும். ஆதலால் இந்த இருவகைப் படைப்புக்கும் நித்யமான வஸ்துக்களும் அநித்யங்களான எம்பெருமான் ஸங்கல்பம் முதலியனவும் சேர்ந்தே காரணமாகின்றன. அதாவது - மண் முதலிய வஸ்து குடம் முதலிய வஸ்துவாக மாறினாலும் அவற்றின் ஸ்வரூபம் நித்யமானதுதானே! இத்தகைய பொருள்களைக் கொண்டு படைப்பு நடக்கின்றது. இத்துடன் எம்பெருமானுடைய பற்பல ஸங்கல்பம் முதலியனவும் சேரவேண்டும். இந்த ஸங்கல்பங்கள் அவ்வப்பொழுது உண்டாவனவாதலின் அநித்யமானவையாகும்.

இப்படி நித்யமான வஸ்துக்களும் அநித்யங்களான அவன் ஸங்கல்பம் முதலியனவும் சேர்ந்தே படைப்புக்குக் காரணமாகின்றன. இவ்விருவகைக் காரணங்களும் கூடினால்தான் உலகில் படைப்பு ஏற்படும். ஆனால் எம்பெருமானே முக்கிய காரணம். அவன் பிறருக்கு வசப்படாது ஸ்வதந்த்ரனாயிருப்பதால் அவனே முக்கிய காரணமாகின்றான். வஸ்துக்களும் ஸங்கல்பமும் அவனுக்கு வசப்பட்டனவாதலின் அவை முக்கிய காரணமாகமாட் டா.

எம்பெருமானுடைய எட்டு நிலைகள்

எம்பெருமானைத் தவிர மற்ற சேதநர்கள் பல செயல்களைச் செய்கின்றனர். அசேதந வஸ்துக்களிலும் அசைதல் உடைதல் முதலிய செயல்கள் உண்டாகின்றன. அச்செயல்களையெல்லாம் அதததற்கு ஏற்றவாறு எம்பெருமானே நடத்துகின்றான். அவன் எட் டுவகையான நிலைகளையுடையனாயுள்ளான். (1) கர்த்தா (2)

ப்ரேரகன் (3) அநுமந்தா (4) ஸஹகாரி (5) ஸாக்ஷி (6) பலப்ரதன் (7) பலி (8) உதாஸீநன் என்று அந்த அந்த நிலைகளில் பெயர் பெறுகின்றான்.

(1) கர்த்தா - வஸ்துவினுள் புகுந்து படைப்பு முதலியவற்றைச் செய்பவன்.

(2) ப்ரேரகன் - ஜீவனுக்கு அறிவைக் கொடுத்து ஒரு செயலைச் செய்யுமாறு ஏவுபவன்.

(3) அநுமந்தா - சேதநன் செயலைச் செய்யும்போது அதைச் செய்விப்பவன்.

(4) ஸஹகாரி - சேதநன் செய்யும் செயலில் தான் பெரும்பகுதியை ஏற்றுத் துணை செய்பவன்.

(5) சேதனன் செய்யும் செயலை நேரில் பார்த்துக் கொண்டிருப்பவன்.

(6) பலப்ரதன் - சேதநன் செயல்களுக்குப் பலனை அளிப்பவன்.

(7) பலி - அச்செயலின் பலனை முக்கியமாய்ப் பெறுமவன்.

(8) உதாஸீநன் - சேதநன் செய்யும் செயலில் தான் விசேஷமான தொடர்பற்றுப் பொதுக் காரணமாக இருப்பவன்.

அந்த அந்தச் செயலுக்கு ஏற்றவாறு எம்பெருமான் கொள்ளும் நிலைகளின் வரையறையை உணர்ந்து கொள்க.

எம்பெருமான் ஏவுதலில் பாகுபாடு

சேதநம் - அசேதநம் இரண்டிலும் ஏற்படுகின்ற செயல்களில் எம்பெருமான் தன் ஸங்கல்பத்தால் மட்டும் செய்யும் ஏவுதல் உண்டு. அவனுக்குச் சரீரமான சேதந - அசேதநங்கள் இரண்டிலும் அவன் ஸங்கல்பத்தால் செய்யும் ஏவுதல் ஸமமாகத்தான் இருக்கும். ஆனால் சாஸ்த்ரத்துக்கு வசப்பட்டுள்ள சேதநர்கள் விஷயத்தில் எம்பெருமான் செய்யும் ஏவுதலுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அவன் கருணையோடு ஆசார்யன் செய்யும் உபதேசத்தின் வாயிலாகச் சேதநரை நல்வழிப்படுத்தற்காக அவர்களைத் தூண்டுதலில் ஒரு விசேஷமில்லையா? சாஸ்த்ரத்துக்கு வசப்படுதற்கு இடமில்லாத அசேதநங்களின் செயலில் இத்தகைய ஏவுதல் பொருந்தாதன்றோ? ஆதலின் சேதநர்க்குச் செய்யும் இத்தகைய ஏவுதலில் விசேஷம் உள்ளது.

அறியவேண்டிய முக்கிய அம்சங்கள்

1. தத்துவங்களுள் முக்கியமானது - இப்படி எல்லா வஸ்துக்களையும் தனக்குச் சேஷமாகவும் சரீரமாகவும் கொண்டு அநுபவிப்பதற்கு இவனைக் காட்டிலும் இனிய வஸ்து இல்லையென்னும்படி நிற்கும் ச்ரிய:பதியான எம்பெருமானே தத்துவங்களுள் முக்கியமானவன்.

2. ஸம்பந்தத்துக்குள் முக்கியமானது - எம்பெருமானுக்கும் நமக்கும் பல்வகையான ஸம்பந்தங்கள் உண்டு. அவற்றுள் முக்கியமானது சரீராத்மபாவமென்னும் ஸம்பந்தமேயாகும். எம்பெருமான் நமக்கு ஆத்மாவாய் நாம் அவனுக்குச் சரீரமாக இருப்பதுவே அந்த ஸம்பந்தம்.

3. அறியவேண்டுமவற்றுள் முக்கியம் - எம்பெருமானை அடைதலாகிய மோக்ஷத்துக்கு அவனே உபாயமாகின்றான். அவனே அடையப்படும் பலனாகவும் ஆகின்றான். இந்த இரண்டு அம்சங்களே முக்கியமாய் அறியவேண்டுவன.

4. அவன் திருநாமங்களுள் முக்கியமானது - இப்படி அவன் ஒருவனே உபாயமாகவும் பலனாகவும் இருத்தல் என்ற அம்சத்தைத் தனக்குள் அடக்கிக் கொண்டுள்ள நாராயணன் என்பதே அவன் திருநாமங்களுள் முக்கியமானதாகும்.

5. உபாயங்களுள் முக்கியமானது - எம்பெருமானிடம் பிரார்த்தித்து நம்மைக் காக்கும் பொறுப்பை அவனிடம் ஸமர்ப்பித்தலாகிய ப்ரபத்தியே மோக்ஷத்துக்கு முக்கியமான உபாயம்.

6. பலன்களுள் முக்கியமானது - எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பான கைங்கர்யங்களைச் செய்வதே முக்கியமான பலனாகும்.

7 ஆசார்யர்களுள் முக்கியமானவன் - தத்துவம் - உபாயம் - புருஷார்த்தம் ஆகியவற்றில் நல்ல தெளிவும் திடமான நம்பிக்கையும் ப்ரபத்தியைச் செய்வதில் விரைவும் சேதநனுக்கு அவசியம் வேண்டும். இவை வருவதற்கு ஆசார்யன் திருமந்த்ரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தங்களைச் சிஷ்யனான சேதநனுக்கு நன்றாய் உபதேசிக்கவேண்டும். இத்தகைய உபதேசத்தைச் செய்த ஆசார்யனே முக்கிய ஆசார்யனாக ஆகின்றான்.

8. சிஷ்யர்களுள் முக்கியமானவன் - ஆசார்யன் செய்த உபதேசத்தால் சிஷ்யனுக்குச் சிறந்த ஞானம் பிறந்துவிடும் பின் சாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்ட செயல்களைச் செய்யமாட்டான். உலகவின்பங்களில் ஆசை ஒழிந்துவிடும். எம்பெருமானிடத்தில் பக்தி பெருகிவிடும். எத்தகைய பக்தி?

பதிவ்ரதையான மனைவி கணவனையன்றி அயலானைக் கனவிலும் கருதாது கொள்ளும் பக்தியைப் போல் வேறொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாது எம்பெருமான் ஒருவனிடமே கொண்டுள்ள பக்தி. இத் தன்மைகளுடன் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட பகவத் பாகவத ஆசார்ய கைங்கர்யங்களில் ஊற்றமுடையனாய் மண்டி நிற்பவனே சிஷ்யர்களில் முக்கியமானவன்.

இத்தகைய சிஷ்யன் மோக்ஷம் பெறுதற்கு முதற்காரணம் சேதநம் - அசேதநம் - ஈச்வரன் ஆகிய மூன்று தத்துவங்களில் விளக்கமான அறிவேயாகும். இந்த அறிவு பெறும் முறையை உபநிஷத்துப் பசு - பால் - நெய் என்ற மூன்று உதாஹரணங்களைக் கூறி விளக்கியுள்ளது. அந்த விளக்கம் வருமாரு - பசுக்கள் பல்வேறு நிறமுடையனவாயினும் அவற்றினின்று தோன்றும் பால் ஒரே வகையாயுள்ளது. அவ்வாறே அசேதநமான சரீரங்கள் தேவர் - மனிதர் முதலிய பிரிவையுடையனவாயினும் அவற்றுள் இருக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ஒரு வகையதேயாகும். மேலும் பாலுக்குள் மறைந்துள்ள நெய் நம் கண்ணுக்குப் புலப்படாதது போல் அந்த ஜீவர்களுக்குள் அந்தர்யாமியாய் நிற்கும் எம்பெருமானும் நம் கண்ணுக்குப் புலப்படுவதில்லையென்பது. இந்தக் கருத்தையே தமிழ் மறைமுடியான திருவாய்மொழியும் 'கறந்த பாலுள் நெய்யே போல்' என்று பேசியது. இந்த ஸூக்தியில் சேதநம் மட்டுமன்றி அசேதநத்தையும் கூட்டிக் கொண்டு அவனுக்குச் சரீரமான சேதநம் அசேதநம் இரண்டிடினுள்ளும் உட்புகுந்து எம்பெருமான் அந்தர்யாமியாய் நிற்பதை அநுஸந்தித்துக் கொள்ளவேண்டும்.

முடிவுரை

தத்துவங்களைப்பற்றி இத்தகைய தெளிவு பெற்றுப் பரந்யாஸம் செய்தால் முன் செய்த பாபங்களை நினைத்துப் பச்சாத்தாபப்படவேண்டாம். எல்லாப் பாபங்கள் தொலைவதும் மோக்ஷம் பெறுவதும் நிச்சயமாகிவிட்டனவே! இந்தத் தத்துவங்களைப் பற்றிய தெளிவுணர்ச்சி இல்லாமலே பரந்யாஸம் செய்துவிட்டாலும் காலத்தாழ்வு செய்யாமல் இவன் விரும்பிய காலத்திலேயே மோக்ஷம் பெறுதற்கு ஏற்றவாறு ஞானமாகிய கையைக் கொடுத்து எம்பெருமான் நல்ல தெளிவான அறிவை உண்டாக்கிப் ப்ரபத்தியைப் பூர்ணமாக்கிப் பலனைக் கொடுத்து விடுவான். எத்தகைய பாபத்தைச் செய்திடினும் அடியார்கள்பால் அருள் சுரக்கும் பித்தனாகிய பரம கருணாமூர்த்தியன்றோ நம் திருவரங்கநகரப்பன்!!!

ஈச்வர நிரூபணாதிகாரம் முற்றும்

**தத்த்வத்ரய சுளகம் முற்றும்**

---

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

# 16. ரஹஸ்யத்ரய சுளகம்

(ஸாரஸங்க்ஷேபம்)

## திருமந்த்ராதிகாரம்

### முன்னுரை

ஆசார்ய லக்ஷணங்கள் நிறைந்த சிறந்த ஆசார்யனை அடைந்து அவன் கடாக்ஷத்தால் ஞானம் பெற்று ப்ரபத்தியைச் செய்தவனுக்கு அந்த ப்ரபத்திக்குப் பின் திருமந்த்ரம் - த்வயம் - சரம சுலோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களை அநுஸந்தித்துக் கொண்டும் அவற்றின் அர்த்தங்களை சிந்தித்துக் கொண்டும் இருப்பது எப்பொழுதும் இன்பத்தைத் தரும்.

### திருமந்திரத்தின் அமைப்பு

இந்த மூன்று ரஹஸ்யங்களுள் திருமந்த்ரம் சேதநன் முக்கியமாய் அறியவேண்டிய எல்லா விஷயங்களையும் சுருக்கமாய்த் தெரிவிக்கும். இது எட்டு அக்ஷரங்கள் கொண்டது. இதில் மூன்று பதங்கள் உண்டு. முழுதும் ஒரே வாக்யமாயிருக்கும்.

### ப்ரணவத்தின் உருவம்

இதில் முதற்பதம் ப்ரணவம். இந்த ப்ரணவம எலலா வேதங்களுக்கும் மூலமானது. இதைச் சொல்லிவிட்டுத் தான் வேதத்தைத் தொடங்க வேண்டும். இது ஒரே எழுத்தாக உள்ளது. வேதமும் ஸ்ம்ருதிகளும் இந்த ஒரெழுத்தான ப்ரணவத்தை மூன்று எழுத்துக் கொண்டதாகக் கூறி அந்த மூன்று அக்ஷரங்களையும் மூன்று பதமாகப் பிரித்து ஒரு வாக்யமாக வைத்துப் பொருள் கூறியுள்ளன.

### அகாரத்தின் அர்த்தம்

இந்த ப்ரணவத்தில் அ-உ-ம் என்ற மூன்று எழுத்துக்கள் உள்ளன. இதில் முதல் எழுத்தான 'அ' என்பது பிராட்டியைப் பிரியாத எம்பெருமானைச் சொல்லுகிறது. எத்தகைய எம்பெருமானை? எல்லாவற்றுக்கும் காரணமாய் எல்லோரையும்

காப்பவனாய் எல்லோருக்கும் சேஷியான எம்பெருமானைக் காட்டும். இந்த மூன்று அம்சங்களையும் அகாரம் எவ்வாறு காட்டுகின்றது என்பதை ஆராய்வோம் - உலகில் சொற்களும் அச்சொற்களால் கூறப்படும் பொருள்களும் உண்டல்லவா? சொற்களுக்கெல்லாம் மூலமான எழுத்து அ என்பது. எழுத்துக்கள் 'அ' வில் தானே தொடங்குகின்றன! இவ்வாறே சொற்கள் கூறும் பொருள்களுக்கெல்லாம் மூல காரணமாயுள்ளவன் எம்பெருமானே. இப்படி சொற்களுக்கு மூலமான அகாரம் சொற் பொருள்களுக்கு மூல காரணமான எம்பெருமானைக் கூறுவது பொருத்தம் தானே! இவ்வம்சத்தை வாமன புராணமும் காட்டுகின்றது. ஆகவே அ என்பதால் அனைத்துக்கும் எம்பெருமான் காரணம் என்ற பொருள் தேறியது. மேலும் 'அ' என்னும் எழுத்து 'அவ்' என்ற தாதுவிலிருந்து தேறுகின்றது. 'அவ்' என்ற வினைப்பகுதி (தாது) காத்தல் என்ற பொருளைக் காட்டும். இவ்வழியால் எல்லோரையும் காப்பவன் என்ற பொருள் தேறும். மேலும் இந்த 'அ' என்னும் எழுத்தின் மேல் 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபு ஏறிப் பின் மறைந்திருக்கின்றது. இந்த வேற்றுமையுருபுக்கு அடிமைத் தன்மை பொருளாகும். இங்கு எம்பெருமானால் காக்கப்படும் ஜீவன் அவனுக்கு அடியன் என்று பொருள் கிடைக்கின்றது. இப்படி ஜீவன் அவனுக்குச் சேஷன் என்று ஏற்பட்டால் எம்பெருமான் ஜீவனுக்குச் சேஷியாகின்றான். ஆகவே எல்லாவற்றுக்கும் காரணமாய் எல்லோரையும் காப்பவனாகத் திகழும் எம்பெருமான் எல்லோர்க்கும் சேஷியாகவும் உள்ளானென்று அகாரத்தால் தேறியது. இப்படி ஜீவன் அடியனாய் எம்பெருமான் தலைவனாய் நிற்றலாகிய சேஷ சேஷிபாவமென்னும் ஸம்பந்தம் ஒருநாளும் யாராலும் நீக்க முடியாததலின் இதனால் ஜீவன் சரீரமாயும் எம்பெருமான் ஆத்மாவாயும் நிற்பதென்ற சரீர சரீரிபாவ ஸம்பந்தமும் கூறப்பட்டதாகின்றது. சரீரத்தின் இலக்கணத்தில் சேஷத்வம் ஒரு பகுதியன்றோ!

### பிராட்டியின் பிரியாமை

இப்படி எல்லாவற்றுக்கும் காரணமாய் எல்லாவற்றையும் ரக்ஷிப்பவனாய் எல்லாவற்றுக்கும் சேஷியாய் அகாரத்தால் தேறிய எம்பெருமானோடு பெரிய பிராட்டியும் பிரியாதிருப்பதாக அநுஸந்திக்க வேண்டும். பல ப்ரமாணங்களும் எம்பெருமான் சரணமடைந்தவரைக் காக்கும் தர்மத்தைச் செய்யும்போது பிராட்

டியும் உடன் இருந்தே அச்செயலை நடத்துவதால் மிகப் பயன்படுமவளாகக் கூறுகின்றன. த்வயத்தில் பிராட்டியின் சேர்க்கை வெளிப்படையாகவே கூறப்பட்டுள்ளது. இங்குக் கருத்தாகக் கொள்ள வேண்டியுள்ளது.

உகாரத்தின் பொருள்

ப்ரணவத்தில் 'உ' என்பது நடுவெழுத்து. இதற்கு அவதாரணம் பொருள் என்பர் வடநூலார். அவதாரணத்தைத் தமிழர் தேற்றேகாரம் என்பர். இரண்டும் பரியாயச் சொற்கள். அவதாரணமென்பதற்கு 'அவனுக்கு மட்டும்' 'இவனுக்கே' என்ற முறையில் வரையறுத்தலே பொருளாகும். 'அ' என்பதுடன் 'உ' என்ற எழுத்துச் சேரும்போது அகாரத்தால் கூறப்படும் எம்பெருமானுக்கே அடியன் ஜீவன் என்று வரையறுத்த பொருள் தேறும். இதனால் எம்பெருமானையன்றி மற்றுள்ளாரோடு ஜீவனுக்கு இயற்கையான ஸம்பந்தம் ஏதுமில்லையென்று தேறியது. இதனால் எம்பெருமானையன்றி மற்ற தேவதைகளை விலக்க வேண்டிய அவசியம் ஏற்படுவதுடன் மற்ற தெய்வங்களை நாடுமவர்களையும் அணுகாது விலக்க வேண்டுமென்பதும் தேறியது.

மகாரத்தின் பொருள்

ப்ரணவத்தில் மூன்றாவது எழுத்து 'ம்' என்பது. இதுவே மகாரமென வழங்கும். இது உயிரெழுத்துக் கலவாத தனி மெய்யெழுத்தாயுள்ளது. இச்சொல் ஜீவாத்மாவைக் கூறும். இந்த 'ம்' என்ற எழுத்து ஜீவனைக் கூறும் பொருளில் உருவாவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. (1) வடமொழியில் 'மந்' என்ற ஒரு தாது (வினைப்பகுதி) உள்ளது. இந்தப் பகுதிக்கு அறிவு என்பது பொருள். இந்த வினைப்பகுதியினின்று வியாகரண முறைப்படி 'ம்' என்று தேறிவிடுகின்றது. அப்பொழுது ஞான வடிவான ஆத்மா என்று பொருளாகும். (2) மற்றொரு வழி - வடமொழியில் 'அஸ்மத்' என்ற ஒரு சொல் உண்டு. இது தன்மைப் பொருளில் வருவது. வேதத்திற்கு இலக்கணம் தனி. அந்த இலக்கணத்தின்படி 'அஸ்மத்' என்ற சொல்லில் முன்னே உள்ள 'அஸ்' என்பதுவும் பின்னே உள்ள 'அத்' என்பதுவும் அழிகின்றன. எஞ்சியுள்ள பகுதி 'ம்' என்பதுவே. இப்படி 'அஸ்மத்' என்ற முழுப்பகுதியே 'ம்' என்று ஆகியிருப்பதால் அந்தப் பொருளே இதற்கும் உண்டு. ஆதலின்

'நான்' என்ற பொருள் 'ம்' என்பதற்கு வருகின்றது. ஒவ்வொருவனும் 'நான்' என்று நினைத்துக் கொள்ளலாமன்றோ! 'நான்' என்ற சொல் சரீரத்தைக் கூறாமல் ஜீவாத்மாவைத் தானே கூறும்! ஆகவே 'ம்' என்னும் மகாரம் ஜீவனைக் கூறுவதாய்த் தேறியது. 'மந்' என்ற வினைப்பகுதியினின்று ஞான வடிவன் ஜீவாத்மா என்று தேறியது போல் ஆநந்த வடிவமாயுள்ளவன் என்றும் தேறும். எவ்வாறெனில் - 'நான் என்று ஒவ்வொருவனும் உணரும்போது அந்த ஜீவன் அநுகூலனாகவே தோன்றுகின்றான். 'நான்' என்று உணரும் எவனுக்காவது தன் ஆத்மா ப்ரதிகூலனாய்த் தோன்றுவதுண்டா? ஆகவே இன்பவடிவமாகவே தோன்று கின்றான் ஜீவன். ஆதலின் ஆநந்த வடிவமாயுமுள்ளவனென்றும் தேறுகின்றது. இவ்வாற்றால் ஞானவடிவனாய் ஆநந்தவடிவனாய் முன்கூறிய அடிமைத் தன்மையுடையவனாயுள்ளவன் ஜீவாத்மா என்று பொருள் தீர்ந்தது.

### ப்ரணவத்தின் முழுப்பொருள்

ப்ரணவத்தில் இந்த மூன்று அக்ஷரங்களின் அர்த்தத்தையும் சேர்த்து ஒரு பொருளாகப் பார்க்கும்போது ஜீவனைப் பற்றிய பின்வருமாறு உள்ள அநுஸந்தாநம் பலிக்கும். அதாவது - "ஜீவாத்மா தன்னை அறிய வேறொரு ஞானம் வேண்டாதபடி தானே 'நான்' என்று ப்ரகாசிப்பவன்; எப்பொழுதும் அநுகூலனாகவே தோற்றுமவன்; தன் ஞானத்தாலே வஸ்துக்களை அறிபவன்; தான் ப்ரகாசிப்பதால் வரும் பயனைத் தானே பெறுமவன்; (ப்ரக்ருதி - மஹாந் - அஹங்காரம் - ஜ்ஞாநேந்த்ரியம் ஐந்து - கர்மேந்த்ரியம் ஐந்து - மனம் - தந்மாத்ரங்கள் ஐந்து - பூதங்கள் ஐந்து ஆகிய) இருபத்துநான்கு அசேதந தத்துவங்களைக் காட்டிலும் வேறுபட்டவன். இத்தகைய ஜீவாத்மா, எல்லாவற்றுக்கும் காரணமாய் எல்லோரையும் காப்பவனாய் எல்லோருக்கும் தலைவனான ச்ரிய:பதிக்கே இயற்கையில் அடியனாயிருப்பவன்; வேறு எவனுக்கும் அடியனாகத் தகுதியுடையனல்லன்". என்பதுவே. ப்ரணவத்தால் இந்த அர்த்தத்தை அறிந்து சேதநன் அநுஸந்திப்பான். இப்படி ஜீவாத்மாவாகிய தான் எம்பெருமானுக்குச் சேஷமென்று தீர்ந்ததால் தனக்கு உடைமையாயுள்ள ஸகல வஸ்துக்களும் எம்பெருமானுக்கே சேஷமாயுள்ளனவென்றும் தேறுகின்றது.

### அனைத்தும் பிராட்டிக்கும் சேஷம்

ப்ரணவத்தில் நடுவிலுள்ள உகாரத்துக்குத் தேற்றம் (அவதாரணம்) பொருள் என்று கூறி ஜீவன் எம்பெருமானுக்கே சேஷன் என்று வரையறுக்கும் பொருள் கீழே கூறப்பட்டது. இங்குப் பிராட்டியையும் சேர்த்துத் திவ்ய தம்பதிகள் இருவருக்குமே ஜீவன் சேஷன் என்று கொள்ள வேண்டும். உலகில் இல்லற வாழ்க்கை நடத்தும் தம்பதிகளுள் கணவனுக்கு உரிமையுள்ள பொருள்களில் மனைவிக்கும் சம உரிமை உண்டன்றோ! எல்லாம் எம்பெருமானுக்குச் சேஷமென்றும் தீர்ந்துவிட்டபின் பிராட்டிக்கும் சேஷமென்று தானே தேறவில்லையா? இன்னும் ஒரு வழியும் உண்டு - உகாரத்திற்கே பொருள் பிராட்டியென்று சுருதி முதலியன கூறுகின்றன. ஆகவே ப்ரணவத்தில் கடைசி எழுத்தான மகாரத்தால் கூறப்படும் ஜீவன் முதலெழுத்தான அகாரத்தால் கூறப்படும் எம்பெருமானுக்கும் நடு எழுத்தான உகாரத்தால் கூறப்படும் பிராட்டிக்கும் தாஸனாய் நிற்பவன் என்று பொருள் தேறுகின்றது. ஆனால் இவ்வாறு பொருள் கொண்டால் அவர்கள் இருவருக்கே தாஸன் என்ற வரையறை எவ்வாறு கிடைக்கும் என்று கேட்கலாம். கருத்து வகையில் பெற்றுவிடலாமென்பது விடை. குறிப்பிட்டு இருவரைக் கூறி அவர்களுக்குச் சேஷமென்றால் வேறு ஒருவருக்கும் சேஷனல்லன் என்று தானாகவே தேறிவிடுமென்றோ?

### நம: சப்தத்தின் பொருள்

திருமந்திரத்தில் நடுப்பதம் 'நம:' என்பது. மந்த்ரங்களின் அர்த்தங்களை அவற்றில் உள்ள எழுத்துக்களின் பொருத்தத்தைக் கொண்டு விளக்குவது நிருக்தம் என்னும் நூல். அதில் நம: என்னும் சொல்லுக்கு அக்ஷரங்களைப் பிரித்து ஸௌக்ஷ்மம் என்ற பெயர் கொண்ட ஓர் அர்த்த விளக்கம் கூறப்பட்டுள்ளது. இந்த முறையில் 'நம:' என்பதை ந, ம: என்று இரண்டு எழுத்தாகப் பிரித்து அவற்றை இரண்டு பதமாகக் கொண்டு ஒரு வாக்யமாக்கி அர்த்தம் கூறுகின்றது நிருக்தம். அதன் விளக்கம் - ந, ம: என்று இரண்டெழுத்தாகப் பிரிக்கும்போது 'ம:' என்பதற்கு எனக்கு என்று பொருள். 'ம்' என்பது ஜீவனைக் கூறுவதால் அதன் ஆறாம் வேற்றுமையில் தேறும் 'ம:' என்பதற்கு ஜீவனாகிய எனக்கு என்று பொருள் கிடைக்கின்றது. எனக்கு என்ற எண்ணம் ஒரு விரோதி. 'நான்' 'எனக்கு' என்ற எண்ணங்கள் வருவது நம் ஸ்வரூபத்துக்குப் பொருந்தாதவையாதலின் விரோதியெனப்படுகின்றன. 'நான்'

என்பது அஹங்காரம். 'எனக்கு' என்பது மமகாரம். அஹங்கார மமகாரங்கள் விரோதிகளல்லவா? இங்கு ம: - எனக்கு என்று மமகாரத்தை மட்டும் சொல்லியிருப்பினும் அஹங்காரம் ஸ்வாதந்த்ர்யம் ஆகிய மற்ற விரோதிகளும் சொல்லப்பட்டனவாக உணர்க.

இங்கு 'ந-ம:' என்பதற்கு 'எனக்கு நான் உரியனல்லன்; மற்றவற்றிலும் எனக்கு உரிமையில்லை' என்று பொருள் தேறுவதால் தன்னைக் காத்துக் கொள்ளத் தனக்குச் சக்தியற்றமை - வேறு புகலற்றமை முதலிய பொருள்களும் கருத்து வகையில் கிடைக்கின்றன.

ந என்பது மறுப்பைக் கூறும் சொல். ம: என்பதால் கூறப் பட்ட விரோதியான அம்சத்தை ந என்பது கூடாதென்று மறுக்கின்றது. இங்கு ப்ரணவத்தின் கடைசி யெழுத்தாகிய 'ம்' என்பதை இழுத்து வைத்துக்கொண்டு பொருள் கூறவேண்டும். 'ம்' என்பதற்கு ஜீவனாகிய நான் என்று கீழேயே பொருள் கூறப்பட் டது. இப்பொழுது 'நம:' என்பதன் பொருளைப் பார்த்தால் 'ம: - எனக்கு, ம் - நான், ந - உரியனல்லேன் - அதாவது - என்னைப்பற்றி எனக்கு எந்த உரிமையும் இல்லை - நான் சுதந்திரனல்லேன்' என்று பொருள் தேறியது; ம:, ந என்ற இரண்டுடன் சிறிதும் என்ற பொருள் கொண்ட 'கிஞ்சித்' எனும் சொல்லை வருவித்துப் பொருள் கூறும்போது எனக்கு உரியது ஏதும் இல்லை; அதாவது - எந்தப் பொருளையும் என்னுடையதாக உடையேன் அல்லேன் என்று பொருள் தேறும். இவ்வர்த்தத்தை நிருக்தியென்னும் கிரந்தம் "என் செயல்களும் என்னுடையனவாகா: நானும் என்னுடையவனல்லன்; எம்பெருமானுக்கே நான் அடியன்" என்று விளக்கியது. இதைத் தழுவி ப்ரணவத்துக்கும் நம: என்பதற்கும் சேர்த்துப் பொருளை ஆராய்ந்தால் 'ஜீவனாகிய நானும் என்னுடையனவாகக் கூறப்படும் பொருள்களும் உண்மையில் என்னுடையனவாகமாட்டா. பிறருக்கும் இவற்றில் சிறிதும் உரிமையில்லை. இவை அனைத்தும் மற்றவருக்கு உரிமையில்லாதவாறு எம்பெருமானுக்கே சேஷமாயுள்ளன' என்று அநுஸந்திக்க வேண்டியதாய் முடிந்தது.

இங்கு சேஷித்வம் என்ற ஒரு சொல்லை. வருவித்துக் கொண்டு "ம: சேஷித்வம் ந" என்று வைத்து எனக்கு என்னைப்பற்றியும் என் உடைமைகளைப் பற்றியும் உரிமை இல்லையென்றும் பொருள்

கூறலாம். இதனால் தன்னுடனும் தன் உடைமைகளுடனும் தனக்கு ஸம்பந்தத்தை நன்றாய் அறுத்துவிட்டதாக ஆகிறதன்றோ?. 'நான்' என்னுடையவை' என்பவை தாமே முறையே அஹங்கார - மமகாரங்கள்! இவ்வெண்ணங்கள் தாமே நாம் ஸம்ஸாரத்தில் உழல்வதற்கு மூலகாரணமாக இருந்திருக்கின்றன! இந்த விரோதிகள் கீழ்க்கூறியவாறு நம: சப்தத்தின் பொருள்களை அறிவதால் வேருடன் அறுக்கப்பட்டனவாக ஆகின்றன. இங்கு ஒரு விஷயம் - நம் ஸ்வரூபத்துக்கு ஏற்ற நல்ல அஹங்கார - மமகாரங்களும் உண்டு. அவையாவன - அசேதநப் பொருளைக் காட்டிலும் வேறுபட்டவனான நான் ச்ரிய: பதியான எம்பெருமானுக்கே அடியன். அவன் என்னுடைய ஸ்வாமி (தலைவன்), என்ற உண்மைநிலையை அநுஸந்திக்கும்போது 'நான்' 'என்னுடைய' என்ற அஹங்கார - மமகாரங்கள் ஸ்வரூபத்துக்கு ஏற்றனவாய் விரும்பத் தக்கனவாயுள்ளன. ஆதலால் இந்த அஹங்கார - மமகாரங்கள் மிகப் பொருத்தமானவை. 'நானே தலைவன்' என்னுடையவை இந்தப் பொருள்கள்' என்று வரும் அஹங்கார - மமகாரங்கள்தாம் குற்றமுள்ளவை. இழிவான இந்த அஹங்கார - மமகாரங்களே இங்கு 'நம:' சப்தத்தால் ஒழிக்கப்படுவன. மற்றோர் அர்த்தமும் உண்டு - ப்ரணவத்தில் 'எம்பெருமானுக்கே ஜீவன் அடியன்' என்ற அர்த்தம் கூறியதால் வேறு ஒருவனுக்கும் அடியனல்லாத தன்மை கிடைத்து விட்டது. அவ்வாறே தானும் தனக்கு அடியனல்லன், வேறொருவனுக்கும் தான் இயற்கையில் தலைவனல்லன் என்ற அர்த்தங்களும் கீழேயே முடிவாகி விட்டன. ஆதலால் இப்பொழுது நம: என்னும்போது 'ஸ்வாதந்த்ர்யம்' என்ற சொல்லை வருவித்துக் கொண்டு எனக்குச் சுதந்திரம் கிடையாது என்ற அர்த்தமும் கொள்ளலாம். உலகில் காணப்படும் பணியாளர்கள் யஜமானர்களிடம் தம் ஜீவநத்துக்காக ஏற்றுக் கொண்ட பணிக்குத் தொடர்புள்ள செயல்களில் மட்டும் தம் தலைவர்களின் கட்டளையை எதிர்பார்க்கின்றார்களேயன்றித் தம் சொந்த விஷயங்களில் அவர்களை எதிர்பாராமல் சுதந்திரமாகவே நடந்து கொள்வார்கள். அவ்வாறு இல்லாமல் இங்கு எம்பெருமானுக்கு அடியனான ஜீவன் தன்னுடைய எந்தச் செயலிலும் எப்பொழுதும் எம்பெருமானை எதிர்பார்த்தே நடக்க வேண்டிய அளவுக்குச் சுதந்திரமின்றி நிற்கின்றான் என்று பொருள் தீர்ந்தது.

பாகவத சேஷத்வம் - விளக்கம்

இப்படி ஜீவர்கள் ஸ்வதந்த்ரனாய் ஸ்வாமியாயுள்ள எம்பெருமான் இட்ட வழக்காய் நிற்கின்றனர். இவ்வாறு இவர்கள் இருப்பதால் இவர்களைப் பாகவதர்களுக்கும் அடியராக்குகின்றான் எம்பெருமான். ஆகவே ஜீவாத்மாக்கள் பாகவதர்களுக்கு சேஷராவர் என்றதாயிற்று. இங்குப் பாகவதர்களென்றால் பகவானைச் சேர்ந்தவர்கள் என்று பொருள் கொள்ளக்கூடாது. ப்ரபஞ்சம் முழுதுமே அவனுக்கு உரியதாயிருக்க அவனைச் சேராதவர் யார் உளர்? ஆதலின் பாகவதர்கள் என்ற சொல்தாம் எம்பெருமானுக்கு அடியர் என்பதை உறுதியாய் உணர்ந்து கொண்டு இந்த அநுஸந்தாநத்தில் சுவை கண்டவர்களையே குறிக்கும். இத்தகைய மஹான்களான பாகவதர்களுக்கும் ஜீவர்கள் அடியராயிப்பதில் என்ன ஆக்ஷேபம்? எவ்வளவு பெருமை!

'நம:' சொல் ப்ரபத்தியைக் கூறுதல்

இங்கு நம: என்ற சொல்லில் ப்ரபத்தி என்னும் சிறந்த மோக்ஷோபாயமும் கூறப்படுவதாகத் தேறிவிடுகின்றது. எவ்வாறெனில் - ஜீவன் மோக்ஷத்தைப் பெறுவதானால் எம்பெருமானை வசப்படுத்தியாக வேண்டும். அதற்காக நமக்குத் தலைவனான எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகந்த ஓர் உபாயத்தைச் செய்தேயாக வேண்டும். பக்தி - ப்ரபத்தி ஆகிய இரண்டே மோக்ஷத்திற்கு உபாயமாயுள்ளன. ஜீவனிடமோ பக்தியோகம் என்ற கைம்முதல் இல்லை. இதைச் செய்வதற்கு ஜ்ஞாநம் சக்தி முதலிய பல தகுதிகள் வேண்டும். அவை ஜீவனிடம் கிடையா. ஆதலின் இவன் ப்ரபத்தியையே செய்தாக வேண்டும். அதைச் செய்யும்படியும் ஸ்வதந்த்ரனான எம்பெருமானே செய்ய வேண்டும். இப்படி ப்ரபத்தியென்னும் ஓர் உபாயத்திலே எம்பெருமான் புகவிட்டானாகில் இந்த ப்ரபத்தியே அவனை வசப்படுத்தி விடுகின்றது. 'நம:' என்பதன் பொருளைக் கீழே விளக்கியபடி அறிந்து தனக்குச் சுதந்திரமில்லையென்பதை உணர்ந்தானாகில் தானே அவன் காட்டிய வழியைப் பற்றிக் கொண்டு தன்னைக் காக்கும் பொறுப்பை அவனிடமே ஸமர்ப்பித்தலென்னும் பரந்யாஸத்தைச் செய்து விடுகின்றான். ஆகவே நம: என்பதால் ப்ரபத்தியென்னும் அர்த்தமும் கடைசியாய்த் தேறிவிடுகின்றது.

இப்படி நம: என்ற சொல் முடிவில் குறிப்பால் ப்ரபத்தியை உணர்த்துவது மட்டோடு நிற்கவில்லை. நேரிடையாக நம: என்ற சொல்லுக்கே ப்ரபத்தி என்ற பொருளும் உண்டென்ற கருத்தில் முன்னோர்களின் ப்ரயோகங்கள் காணப்படுகின்றன. பாரதத்திலும் ஸ்ரீ பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளிலும் உரிய தகுதிகளோடு கூடிய ப்ரபத்தியையே நம: என்ற சொல் கூறுவதாகத் தெளிவாய்க் காண்கின்றோம். ஆதலின் நம: என்ற சொல்லே ப்ரபத்தியை நேரிடையாகவும் கூறுகின்றது.

நாராயண சப்தத்தின் அர்த்தம்

கீழே ப்ரபத்தியைப் பற்றிக் கூறினோமே! இந்த ப்ரபத்தியை யாரிடம் செய்ய வேண்டும்? ஸ்ரீமந் நாராயணனிடமே தான். அவனே ப்ரபத்திக்கு இலக்காகின்றான். ரக்ஷிப்பவனுக்கு வேண்டிய எல்லாக் குணங்களும் நிரம்பப் பெற்று நின்று காப்பவன் அவனே. அவ்வாறு காப்பதால் வரும் பயனை அவனே பெறுவதால் சேஷியும் அவனே. அவனுடைய தன்மைகளையெல்லாம் வெளியிடுகின்றது இந்த நாராயண சப்தம். இது மட்டுமோ! ப்ரபத்தியைச் செய்பவனான ஜீவனுடைய தன்மைகளையும் கூறும் இந்த நாராயண சப்தம். எம்பெருமானால் ரக்ஷிக்கப்பட வேண்டியதற்கு வேண்டிய நற்குணங்களையெல்லாம் உடையவன் ஜீவாத்மா. எம்பெருமான் தன்னைக் காப்பதால் வரும் பயனும் எம்பெருமானுடையதேயன்றித் தன்னுடையதன்றென்ற உணர்ச்சியுடையனாதலின் ஜீவாத்மா சேஷனாகின்றான். இந்த ஜீவனுக்கு மற்றும் உள்ள தன்மைகளையும் வெளியிடுகின்றது நாராயண சப்தம்.

நாராயண சப்தத்துக்கு இருவகை ஸமாஸங்கள்

நாராயண சப்தம் நார - அயந என்ற இரண்டு பதங்கள் சேர்ந்து உருக்கொண்டதாகும். இதை இரண்டு விதமாய்ப் பிரிக்கலாம். (1) பஹுவ்ரீஹி (அன்மொழித்தொகை) (2) தத்புருஷன் (வேற்றுமைப் புணர்ச்சி) என்று.

பஹுவ்ரீஹி ஸமாஸம் - நாரசப்தார்த்தம்

முதலாவதின் விளக்கம் - நாரா: அயநம் யஸ்ய = நாராயண:. இது பஹுவ்ரீஹிஸமாஸம் என்று பெயர் கொண்டது. இதனின்று நாரங்களை அயநமாகவுடையன் எம்பெருமான் என்று தேறும்.

அக்ஷரங்களைப் பிரித்துப் பார்க்க வேண்டும். நார பதத்தில் அடங்கியுள்ளது. 'நர' என்னும் சொல். இந்த 'நர' என்னும் சொல்லில் அடங்கியுள்ள ந,ர என்னும் இரண்டு எழுத்துக்களும் பொருளுடைய இரண்டு பதங்களாகும். இவற்றுள் 'ர' என்னும் பதம் 'ரீ' என்ற வினைப்பகுதியினின்று பிறந்ததாகும். இந்த வினைப்பகுதிக்கு அழிதல் என்பது பொருள். ஆகவே 'ர' என்னும் சொல் அழியக் கூடிய அசேதநப் பொருள்களைக் கூறும். 'ந' என்னும் சொல் வேறுபாட்டைக் கூறும். இது 'ர' என்பதுடன் சேர்ந்து கொண்டு 'நர' என்று ஆகும்போது அழியும் பொருளான அசேதநத்திற் காட்டிலும் வேறுபட்ட அழியாப் பொருளான ஜீவாத்மாவைக் கூறும். நார என்னும் சொல்லுக்கு நராணாம் ஸமூஹா: = நாரா: என்று கூட்டி ஜீவாத்மாக்களின் கூட்டங்கள் என்று பொருள் கொள்ள வேண்டும். நாரா: என்று பன்மையில் இருப்பதால் ஜீவர்களின் கூட்டங்கள் பலவென்று கூறியதாயிற்று.

இவ்வாறு நாரசப்தம் ஜீவர்களின் கூட்ட்ங்களைச் சொல்வது ஒருபுறம் இருக்க, இந்தச் சப்தமே சேதநம் அசேதநம் ஆகிய எல்லாவற்றையுமே கூறுவதற்கும் வழி உள்ளது. அது வருமாறு - நர என்னும் சொல் அழியாத ஜீவனைக் கூறுவதாக முன் சொல்லிய வழியாலேயே எவ்வகையிலும் அழியாத ஸர்வேச்வரனையும் கூறுமன்றோ? ஆகவே ஸர்வேச்வரன் நரனாகின்றான். மேலும் நரசப்தம் 'ந்ரு' என்ற வினைப்பகுதியினின்று தேறுவதும் உண்டு. இந்த வினைப்பகுதிக்கு 'ந்ரு- நயே' என்றபடி வழியில் நடத்திச் செல்லல் பொருளாகும். ஆகவே எல்லாப் பிராணிகளையும் அந்த அந்த வழியில் நடத்துமவனான எம்பெருமானை 'நர' என்ற சொல் கூறுவதில் தடை என்ன? ஆகவே இவ்விரண்டு வழிகளாலும் நர சப்தம் எம்பெருமானையே கூறிவிடுகின்றது. நார சப்தத்தை நரஸம்பந்தி = நாரம் என்று கூட்டிப் பார்த்தால் ஸர்வேச்வரனுடன் தொடர்புள்ளவை என்று பொருள் தேறும். அவனோடு தொடர்பற்ற வஸ்து ப்ரபஞ்சத்தில் ஏது? ஆதலின் ப்ரமாணங்கள் சொல்லுகிறபடி அவனுக்குச் சேஷமாகவோ சரீரமாகவோ அவனைச் சேர்ந்த சேதநம் அசேதநம் ஆகிய ஸகல வஸ்துக்களுமே நார சப்தத்திற்குப் பொருளாகி விடுகின்றன. இப்படி நார சப்தத்துக்கு முதலில் ஜீவர்களின் கூட்டமென்றும், பின்பு கூறிய முறையில் சேதந அசேதநங்களின் கூட்டமென்றும் பொருள் தேறி நிற்கின்றது.

பஹுவ்ரிஹி - அயநசப்தார்த்தம்

அயநம் என்ற சொல்லுக்கு இருப்பிடம் - சூழ்ந்து நிற்கப் பெறும் வஸ்து என்ற இரண்டு பொருள் உண்டு. நாரங்களை அயநமாகவுடையன் என்னும்போது முதற் பொருளில் சேதந அசேதநங்களைத் தனக்கு இருப்பிடமாகவுடையன் எம்பெருமான் என்றும் இரண்டாம் பொருளில் சேதந அசேதநங்களைத் தான் சூழ்ந்து நிற்கும் வஸ்துக்களாகக் கொண்டவன் என்றும் பொருள் கிடைக்கின்றது. இங்கு முதற் பொருளில் அவை உள்ளவிடத்தில் தான் இல்லையென்று சொல்ல முடியாதவாறு கலந்து நிற்பதாகிய அந்தர்வ்யாப்தி கூறப்பட்டதாகின்றது. இரண்டாம் பொருளில் அந்த வஸ்துக்கள் இல்லாதவிடத்திலும் தான் உளன் என்று கூறும்படி நிற்றலாகிய பஹிர்வ்யாப்தி சொல்லப்பட்டதாகின்றது. இப்படி அந்த அந்த வஸ்துக்களில் உள்ளும் புறமும் சிறிதும் தப்பாதவாறு பரிபூர்ணமாய் எம்பெருமான் நிற்கின்ற நிலை வெளியாகின்றது. மேலும் சேதந - அசேதந வஸ்துக்களுள் சாச்வதமாகப் புகுந்து நியமித்துக் கொண்டும் சூழ்ந்து கொண்டும் எம்பெருமான் இருப்பதால் அவை இவனுக்குச் சரீரமாயுள்ளமையும் இவன் அவற்றுக்கு ஆத்மாவாய் நிற்பதுமாகிய ஸம்பந்தம் விளங்குகின்றது.

தத்புருஷ ஸமாஸம் - அயந சப்தார்த்தம்

'நாராணாம் அயநம்' என்ற தத்புருஷ ஸமாஸத்தில் பொருளைப் பார்ப்போம். அயநம் என்ற சொல்லுக்கு உபாயம் - பலன் - ஆதாரம் என்ற மூன்று பொருள்கள் உண்டு. அயநம் என்ற சொல்லை 'ஈயதே அநேந' என்று விரித்தால் ஒன்றை அடையக் காரணமாயிருப்பவன் என்று பொருள் தேறுவதால் உபாயம் என்று கிடைத்துவிடும். 'ஈயதே அஸௌ' என்று விளக்கினால் அடையப்படும் பலனாயுள்ளவன் என்று பொருள் கிடைக்கும். 'ஈயதே அஸ்மிந்' என்று பிரித்தால் ஆதாரம் என்ற பொருள் தேறிவிடும்.

நரசப்தத்தால் ஜீவனைக்கூறி அவற்றின் கூட்டமெனப் பொருள் கொண்டு நாரங்களுக்கு அயநமாயுள்ளவன் என்று கூறினால் ஜீவவர்க்கத்துக்கு எம்பெருமான் உபாயமாய் நிற்பவன் என்ற பொருளைப் பெறலாம். அயந சப்தத்துக்கு இரண்டாவதான பலன் என்ற பொருளைக் கொண்டால் ஜீவவர்க்கத்துக்குப்

பலனாகவும் அவனே ஆகின்றான் என்று தேறும். சேநர்கள் எம்பெருமானை நோக்கி 'நீயே உன்னை அநுபவிக்கும் படி தர வேண்டு' என்று பிரார்த்திக்கின்றனர். நீயே தரவேண்டும் என்பதில் அவன் உபாயமென்பதும் உன்னைத் தரவேண்டும் என்பதில் அவன் பலனாய் நிற்பதும் புலப்படவில்லையா? மேலும் நரன் என்ற சொல்லால் அழியாத எம்பெருமானைச் சொல்லி அவனிடமிருந்து தோன்றிய சேதந அசேதநங்கள் இரண்டையுமே நாரசப்தத்தால் சொல்லி அவற்றுக்கு அயநம் = ஆதாரம் என்று பொருள் கொள்ளும்போது ஆதாரம் என்ற மூன்றாவது பொருளும் வந்துவிடுகின்றது. நம் சரீரத்தில் ஜீவாத்மா இருப்பதுபோல் அவன் சேதந அசேதநங்களில் கலந்தும் உட்புகுந்தும் உயிராய் நின்று அவற்றைத் தாங்கி நிற்பதால் ஆதாரமாகவும் ஆகவில்லையா? இவ்வாறு தனக்கு மேம்பட்டவன் இல்லாத சேதநனான எம்பெருமானை விட்டுப் பிரிக்க முடியாமலிருந்து அவனால் தாங்கப்படுமவையாயிருப்பதால் சேதநமும் அசேதநமும் அவனுக்குச் சரீரமாயுள்ளனவென்பதும் ஸித்திக்கும். உலகில் ஜீவனை விட்டுப் பிரியாமலும் ஜீவனால் தாங்கப்படுவதாகவும் இருப்பதால் தானே மனிதவுடல் ஜீவனுக்குச் சரீரமெனப் படுகின்றது?

## நாராயண சப்தமும் ப்ரஹ்மஸூத்ரங்களும்

ப்ரஹ்மஸூத்ரங்கள் நான்கு அத்யாயங்கள் கொண்டன. முதல் அத்யாயத்தில் எம்பெருமானே ப்ரபஞ்சத்துக்குக் காரணமென்பது கூறப்படுகின்றது. இரண்டாவது அத்யாயத்தில் இதற்குமேல் வரும் ஆக்ஷேபங்களுக்கு ஸமாதாநம் சொல்லி அவனுடைய காரணமாந்தன்மை நிலைநாட்டப் பெறுகின்றது. மூன்றாவது அத்யாயத்தில் பக்தி ப்ரபத்திகளால் வசப்பட்ட எம்பெருமான் மோக்ஷத்துக்கு உபாயமாய் நிற்றல் கூறப்படுகின்றது. நான்காம் அத்யாயத்தில் அவனே பலனாயுள்ள தன்மை விளக்கப்படுகின்றது. அந்த நான்கு அதயாயங்களின் ஸாரார்த்தங்களும் திருமந்திரத்தில் உள்ள நாராயண சப்தத்தில் சுருக்கமாய்க் கூறப்பட்டுள்ளன. எவ்வாறெனில் - நரசப்தத்தால் எம்பெருமானைக் கூறி அவனிடமிருந்து தோன்றிய சேதந அசேதநங்களை நார சப்தத்துக்குப் பொருளாகக் கூறும்போது ப்ரபஞ்சத்துக்கு அவன் காரணமென்று ஏற்படுவதால் முதல் அத்யாயத்தின் பொருள் கூறுவதாகக் கொள்ளுதல் பொருந்தும். நரன் என்ற சொல்

எம்பெருமானை அழிவு, மாறுபாடு முதலிய குற்றமற்றவனெனக் கூறுவதால் அவனது காரணத்தன்மை தடையற்றதாய் உறுதியாக்கப்பட்டு இரண்டாம் அத்தியாயத்தின் பொருளைக் காட்டுகின்றது. அயநம் என்ற சொல்லுக்கு உபாயம் என்ற பொருளைக் கொண்டால் சேதநர்களுக்கு உபாயமாயுள்ளவனென்ற மூன்றாவது அத்யாயத்தின் பொருள் கிடைக்கின்றது. அயந சப்தத்துக்குப் பலன் என்ற பொருளைக் கொண்டு. சேதநர்களால் அநுபவிக்கப்படும் பலனாகவும் உள்ளானென்று நான்காவது அத்யாயத்தின் பொருளையும் இங்குக் கண்டுவிடலாம்.

## இரு விபூதிகள் - இரு சின்னங்கள் - விளக்கம்

இங்கு நரனைச் சேர்ந்தவை நாரங்களென்று பொருளில் மோக்ஷம் என்னும் நித்யவிபூதி - இந்த ப்ரபஞ்சமென்னும் லீலாவிபூதி ஆகிய அவனைச் சேர்ந்த இரண்டு விபூதிகளையும் ஆளும் தன்மை கூறப்பட்டது. மேலும் இங்கு அவனுடைய உபய லிங்கத்வமும் கூறப்படுகின்றது. உபயலிங்கத்வம் என்றால் என்ன? - இழிவான குணங்களைப் பெறாமை - கல்யாண குணங்கள் அனைத்தும் நிரம்பப் பெற்றமை ஆகிய இரண்டு சின்னங்களையுடைமை. 'நர' சப்தத்தால் அழிவு - மாறுபாடு முதலிய இழிவான அம்சங்கள் அற்றவன் என்பதும் அவனைச் சேர்ந்தவை நாரங்கள் என்னும் போது கல்யாண குணங்களையுடைமையும் கூறப்பட்டுள்ளன. கல்யாண குணங்களும் அவனைச் சேர்ந்தவை தாமே!

## நாராயணன் ஸர்வவித பந்து

மேலும் நரனான எம்பெருமானைச் சேர்ந்தவை நாரங்களான ஜீவர்கள் என்னும் பொருளாலும், நாரங்கள் எனப்படும் சேதநக் கூட்டங்களுக்கு அயநம் - உபாயம், பலன், ஆதாரம் எல்லாமாக உள்ளவன் எம்பெருமான் என்னும் பொருளாலும் அவன் சேதநர்களுக்கு எல்லாவகை உறவினனாகவும் உள்ளவன் என்றும் தேறுகின்றது. திருமந்த்ரத்தை இவ்வர்த்தங்களோடு சேர்த்து அநுஸந்திக்க வேண்டும். இத் திருமந்த்ரத்தின் பெருமையை ஆழ்வார்களும் பல படிகளாலும் போற்றியுள்ளனர். அவற்றைக் கொண்டும் கண்டு கொள்க.

ஆய என்னும் உருபின் பொருள்

நாராயண சப்தத்தின் மேல் உள்ளது ஆய என்பது. இது நான்காம் வேற்றுமையின் உருபு. இதற்குத் தமிழில் 'கு' என்பது உருபு. அதாவது நாராயணனுக்கு என்று அர்த்தம். அவனுக்கு என்றால் அவன் பயனுக்காக ஜீவன் இருத்தல் என்று ஏற்படும். இதை விளக்கினால் எம்பெருமானாது பயனையே ஜீவன் தன் பயனாகக் கொள்பவன் என்று தேறும். இதுதானே சேஷத்வம் என்பதும். ஆகவே எம்பெருமானுக்குச் சேஷனாயிருத்தலை ஜீவன் ப்ரார்த்திப்பதாகக் கூற வேண்டி வந்தது. இங்குச் சேதநன் எப்பொழுதும் அவனுக்குச் சேஷனாக இருப்பவன் தானே! இப்பொழுது அந்தச் சேஷனாந் தன்மையைப் புதிதாய் ப்ரார்த்திக்க வேண்டியதில்லையே என்ற கேள்வி எழுகின்றது. உண்மைதான். ஜீவன் தன்னிடம் உள்ள சேஷத்வத்தின் பலனான கைங்கர்யத்தைப் பிரார்த்திப்பதாகக் கொண்டு விட்டால் பொருத்தமாகி விடும். சேஷனாயிருப்பவன் வாளா இருக்க மாட்டான். சேஷியாயுள்ளவனுக்கு எதாவது கைங்கர்யம் செய்யவே முற்படுவான். ஆதலின் சேஷனாந் தன்மைக்குப் பலன் கைங்கர்மாகின்றது. இந்தக் கைங்கர்யத்தை விரும்பி அவனிடம் பிரார்த்திப்பது பொருத்தம் தானே! ஆகவே சேஷனாந் தன்மையை முன்னிட்டுக் கொண்டு அதன் பலனாகப் பிரார்த்திக்கப்படும் கைங்கர்யமே ஆய என்ற நான்காம் வேற்றுமையுருபின் பொருளாய் முடிந்தது.

திருமந்திரத்திற்குப் பல அர்த்தங்கள்

திருமந்திரத்தின் பதங்களை வாக்கியமாகச் சேர்த்துப் பொருள் கண்ட பெரியோர்கள் பத்துவகை அர்த்தங்களை அநுஸந்திப்பர். அந்தப் பத்துவகைப் பொருள்களும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் விளக்கமாய்க் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் நால்வகைப் பொருள்கள் மட்டும் இங்குக் கூறப்படுகின்றன.

(1) முதற்பொருள் - திருமந்திரம் முழுதும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையே விளக்குவதாகக் கொண்டு பார்க்க வேண்டும். அகாரத்தால் சொல்லப்படுமவனாய் நாராயண சப்தம் சொல்லும் பொருளின் படியே உள்ளவனான ச்ரிய: பதிக்கு நான் வேறு ஒருவருக்குமல்லாத முறையில் சேஷனாயிருக்கின்றேன். என்னைப் பற்றிய எந்த உரிமையையும் யான் உடையனல்லேன் என்பது

முதற்பொருள். இந்தப் பொருளைக் கொள்ளும்போது ஜீவனது ஸ்வரூபம் - நீடித்து நிற்றல் - செயல் ஆகிய இவை எம்பெருமானுக்குச் சேஷமாயிருத்தலென்ற இன்பமுடையனவாய் அவனுக்கு வசப்பட்டனவாய் உள்ள நிலையை அந்த அந்த இடத்திற்குத் தக்கவாறு அநுஸந்தித்துக் கொள்ள வேண்டும்.

(2) இரண்டாவது பொருள் - ப்ரணவமும் நம: சப்தமும் ஜீவனது ஸ்வரூபத்தைக் கூறுவதாகவும் 'நாராயணாய' என்பது புலனை எம்பெருமானிடம் பிரார்த்திப்பதாகவும் பொருள் கூறுவது மற்றொரு முறை. இந்த முறையில் ஜீவனாகிய நான் எம் பெருமானுக்கே சேஷமாயிருப்பவன்; எனக்குச் சுதந்திரமோ மற்றொன்றை எனது உடைமையாகக் கொள்ளும் உரிமையோ கிடையாது; நாராயணனுக்குக் கைங்கர்யம் செய்பவனாக ஆவேன் என்ற பொருள் தேறும். ஜீவன் சேஷமாயிருப்பதற்குப் பலன் எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யமே. இந்தக் கைங்கர்யமே சேஷனான ஜீவனுடைய ஸ்வரூபத்துக்கு ஏற்றதாகும். இத்தகைய கைங்கர்யத்தைத் தனக்குத் தந்தருளும்படி எம்பெருமானைப் பிரார்த்திப்பதாய்க் கருத்துப் புலனாம்.

(3) மூன்றாவது பொருள் - ப்ரணவம் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைக் கூறும். நம: என்பது ஜீவனுக்கு இஷ்டமல்லாதது விலக வேண்டுமென்பதைப் பிரார்த்திப்பதைக் கூறும். 'ஸ்யாத்' என்ற க்ரியாபதத்தை (வினைமுற்றை) வருவித்துக் கொண்டு நம: என்பதுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். நாராயணாய என்பது ஜீவனுக்கு இஷ்டமானதைத் தரும்படி ப்ரார்த்தித்தலைக் கூறும். ஆனால் இங்கும் 'ஸ்யாம்' அல்லது 'பவேயம்' என்ற வினைமுற்றை வருவித்துக் கொண்டு பொருள் கூற வேண்டும். ஆகவே ப்ரணவம் எம்பெருமானுக்கே சேஷன் ஜீவன் என்ற பொருளைக் கூறி ஜீவனது ஸ்வரூபத்தை அறிவித்தது. நம: என்பது ம: - ஜீவனாகிய எனக்கு, ந ஸ்யாத் - இஷ்டமல்லாத ஒன்றும் வராதிருக்க வேண்டும் என்று ப்ரார்த்திப்பதான பொருளைக் கூறும். நாராயணாய என்பது வருவித்த 'ஸ்யாம்' அல்லது 'பவேயம்' என்ற சொல்லுடன் சேர்ந்து நாராயணனுக்குக் கைங்கர்யம் செய்பவனாக நான் ஆக வேண்டும் என்று வேண்டுவதாய்க் கூறி ஜீவன் தனக்கு இஷ்டத்தைப் பிரார்த்திப்பதைக் குறிப்பிடுவதாய் முடிந்தது.

(4) நான்காவது - ப்ரணவம் ஜீவனது ஸ்வரூபத்தைக் கூறும். 'நம:' என்ற முழுச்சொல் ப்ரபத்தியைக் கூறும். நாராயணாய என்பது

பலனைக் கூறும். விளக்கம் வருமாறு - அகாரத்தால் கூறப்படும் நாராயணனுக்கு நான் வேறு ஒருவனுக்கும் உரியனல்லாதவாறு அடியனாயுள்ளேன். அவன் திருவடிகளையே சரணமாகப் பற்றுதலாகிய ப்ரபத்தியைச் செய்தேன். அவன் திருவடிகளில் எப்பொழுதும் உடன் இருந்து கோதற்ற கைங்கர்யத்தைச் செய்வேன் என்ற கருத்துத் தேறும். இப்பொருளில் ப்ரணவம் - நம: - நாராயணாய என்ற மூன்று சொற்களும் முறையே ஸ்வரூபம் - உபாயம் - புருஷார்த்தம் (பலன்) ஆகிய மூன்றையும் வெளியிட்டனவாய் முடிந்தது. இந்த மூன்று பதங்களினின்று முறையே ஜீவனுக்கு எம்பெருமானையன்றி வேறொருவனுக்குச் சேஷனல்லாத தன்மையும், ப்ரபத்தியைய்ன்றி வேறொன்றை உபாயமாகப் பற்றாத தன்மையும், அவனுக்குக் கைங்கர்யத்தையன்றி வேறொன்றைப் பயனாகக் கொள்ளாத தன்மையும் தேறுகின்றன. இத்தன்மைகளைப் பெற்ற சேதநன் ஸம்ஸார மண்டலத்தில் இருக்கும்போதே முக்தி பெற்றவனைப் போன்ற பெருமையடைவான்.

இவ்வாறு ப்ரணவத்தின் அர்த்தத்தைக் கொண்டு சேதநன் எம்பெருமானுக்கே அடியனான தன் ஸ்வரூபத்தைப் பற்றிய தெளிவைப் பெறுகின்றான். நாராயணாய என்ற சொல்லின் பொருளால் தன் ஸ்வரூபத்துக்கு ஏற்ற பலனாகியது கைங்கர்யமென அறிகின்றான். நம: சப்தத்தின் பொருளை உணர்ந்து தன் தகுதிக்கு ஏற்ற ப்ரபத்தியென்னும் உபாயத்தை உறுதியோடு செய்கின்றான். இவனுக்கு ப்ரபத்தி நிறைவேறி விட்டால் ப்ரபத்திக்கு முன் இவன் செய்த பாபங்களெல்லாம் அழிந்துபோம். ப்ரபத்திக்குப் பின் இவன் அறியாமல் செய்ய நேரிடும் பாபங்களெல்லாம் இவனிடம் ஒட்டாமலே போய்விடும். தெரிந்தே செய்ய நேரிட்ட பாபங்களுக்கு எதாவது பிராயச்சித்தம் செய்தால் கழிந்துவிடும். பிராயச்சித்தம் செய்யாத முரடனாயிருந்தால் எம்பெருமான் கொடுக்கும் சிறு தண்டனைகளால் கழிந்துபோம். இப்படி ப்ரபத்தியால் முன் செய்த பாபங்கள் பின் செய்தவை ஆகிய அனைத்தும் எதாவது வகையில் ஒழிந்துவிடும்.

திருமந்த்ராதிகாரம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

## த்வயாதிகாரம்

### முன்னுரை

இரண்டாவது ரஹஸ்யம் த்வயம். இதன் பொருளை விளக்குவது இந்த அதிகாரம். முன்னோர்களான பெரியோர்கள் 'திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைக நிஷ்டராவீர்' என்று சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்கள். இதன் பொருள் விளக்கம் வருமாறு

திருமந்திரத்திலே பிறத்தல்

திருமந்த்ரத்திலே பிறக்கையாவது - முதல் ரஹஸ்யமான திருமந்த்ரத்தையும் அதன் அர்த்தங்களையும் ஆசார்யனால் உபதேசிக்கப் பெற்றால் சேதநனுக்குப் புதிய பிறவி உண்டாகின்றது. இதுவரை விவேகம் பெறாமலிருந்தபடியால் முன் தாய் வயிற்றில் பிறந்த பிறவி நேர்மையானதாகாதாகையால் இவனைப் பிறந்தவனாகவே கருத முடியாது. திருமந்திரத்தின் அர்த்தத்தை அறிந்தபின் ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபம் - எம்பெருமானுடைய ஸ்வரூபம் - இருவருக்கும் உள்ள ஸம்பந்தம் முதலிய பற்பல முக்கிய விஷயங்களை அறிய முடிவதால் இப்பொழுது தான் அவன் உலகில் பிறந்தவனாகின்றான்.

த்வயத்தில் வளர்தல்

த்வயத்தில் வளருகையாவது - திருமந்திரம் கூறிய அர்த்தங்களை மிக விளக்கமாகக் கூறுகின்றது த்வயம். உயர்ந்த தத்துவமாய் எல்லோரையும் காக்கவல்ல எம்பெருமானை த்வயம் நன்கு தெளிவுபடுத்துகின்றது. நமக்குப் பெரிய நன்மையை விளைவிப்பதாய் நமக்குச் செய்ய ஏற்றதான சரணாகதியைத் திருமந்திரத்திற் காட்டிலும் விளக்கமாய்க் கூறுகின்றது த்வயம். மேலும் மோக்ஷத்தில் அவனுக்குச் செய்யும் கைங்கர்யமாகிய சிறந்த பலனையும் கூறுகின்றது த்வயம். மேலும் அப்பலனுக்காக ப்ரபத்தியைச் செய்ய வேண்டிய முறையையும் முக்கியமாக வைத்துத் தெளிவாய்க் காட்டுகின்றது இந்த த்வயம். இவ்வுண்மைகளை அறிந்து சரணாகதியைச் செய்தலே

த்வயத்தினால் சேதநன் பெற்ற வளர்ச்சியாகும்.

### த்வயத்திலேயே நிஷ்டையுடைமை

த்வயத்திலேயே நிஷ்ட்டனாகையாவது - ப்ரபத்திக்குப் பின் அவகாசமுள்ள போதெல்லாம் த்வயத்தையே அநுஸந்தித்துக் கொண்டேயிருந்து வேறு உபாயத்தையும் வேறு பயனையும் நாடாமல் த்வயம் காட்டிய சரணாகதியிலும் அவன் கைங்கர்யமாகிய பலனிலும் மிக்க ஊற்றத்துடன் நிற்கை.

### த்வயத்தின் அமைப்பு

இந்த த்வயம் இரண்டு பகுதியாயுள்ளது. முற்பகுதி உபாயமான சரணாகதியையும் பிற்பகுதி பலனான கைங்கர்யத்தையும் ஆக இரண்டையும் தெளிவாய் விளக்குவதால் த்வயம் (இரண்டு) என்று பெயர்பெற்றது.

### முற்பகுதியின் அர்த்தம்

### ஸ்ரீசப்தத்தின் பொருள்

முற்பகுதியில் ஸ்ரீமந்நாராயண - என்று தொடங்கும்போது உள்ள 'ஸ்ரீ என்னும்' சொல் பிராட்டியைக் கூறும். பிராட்டி ரக்ஷகனான எம்பெருமானைப் பிரியாது அவனுடன் நின்று அவன் செய்யும் ரக்ஷணத்தில் தானும் சம உரிமை கொண்டு காக்கின்றாள்.

### பிராட்டி புருஷகாரமாதல் - விளக்கம்

மேலும் இவள் புருஷகாரமாகவும் ஆகின்றாள். புருஷகாரம் என்னும் சொல் பரிந்து பேசுபவரைக் கூறும். (உலக வழக்கில் சிபாரிசு செய்பவரென்பர்) ஒருவனுக்காகப் பரிந்து மற்றொருவனிடம் பேசுவதென்றால் பேசுபவர் அவ்விரண்டு பேர்களிடமும் ஸம்பந்தமுடையராயிருக்க வேண்டும். பிராட்டி எல்லாச் சேதநர்களையும் தன் குழந்தைகளாகக் கருதுமவள். ஆதலால் அவர்களின் குற்றங்களைப் பொருட்படுத்தாத மிகுதியான அன்புடையள். ஆகவே அவர்களுக்காகப் பரிந்து பேசுவது நியாயம் தானே! எம்பெருமானிடம் பரிந்து பேசுகின்றாள். அவள் நாயகனான எம்பெருமானிடம் அவளுக்கு மிக்க சலுகை உண்டு. அவள் ஒன்றைக் கேட்டால் அவனால் புறக்கணிக்க முடியாது. ஆதலின் சேநர்களின் குற்றங்களைப் பொருட்படுத்தாது காக்க

வேண்டும் என்று அவனிடம் பரிந்து பேசுகின்றாள். ஆதலால் புருஷகாரம் எனப்படுகின்றாள். பின் அவனுடன் சேர்ந்து இருவருமாய்ச் சேதநரைக் காக்கின்றனர். இத்தகைய பிராட்டியைச் சொல்லுகிறது ஸ்ரீ எனும் சொல்.

## ஸ்ரீ சப்தத்தின் ஆறு பொருள்கள்

இந்த ஸ்ரீ என்னும் சப்தத்துக்கு இலக்கண முறையைத் தழுவி ஆறு வகைப் பொருள்களைச் சாஸ்த்ரம் கூறுகின்றது. அவையாவன -

(1) ச்ரீயதே = ஆச்ரயிக்கப்படுகின்றாள். நற்கதியைப் பெற வேண்டுமென்று விரும்பும் எல்லாச் சேதநர்களும் இவளை வந்து ஆச்ரயிக்கின்றார்கள்.

(2) ச்ரயதே - அடைகின்றாள். யாரை? ஸர்வேச்வரனை. அவன் அபராதம் செய்த சேதநர்களைத் தண்டிக்க முற்படும்போது பிராட்டி அவனை அடைந்து அவன் கொண்ட சீற்றத்தை ஆற்றி அவர்களைக் காக்குமாறு செய்து விடுகின்றாள்.

(3) ச்ருணோதி - கேட்கின்றாள் (செவி சாய்க்கின்றாள்). அபராதிகளான சேதநர்கள் இவளிடம் வந்து தங்களை எம்பெருமான் திருவடிகளில் காட்டிக் கொடுத்து ரக்ஷித்தருள வேண்டுமென்று மனம் நொந்து சொல்லும் சொற்களைக் கேட்டுக் கொள்கின்றாள்.

(4) ச்ராவயதி - கேட்கும்படி செய்கின்றாள். அதாவது - எடுத்துச் சொல்லுகின்றாள். சேதநர்கள் ஈனக்குரலோடு கூறியவற்றைக் கூறி அவர்களின் துயரம் தீர்க்குமாறு ஸர்வேச்வரனிடம் விண்ணப்பிக்கின்றாள்.

(5) ச்ருணாதி - ஒழிக்கின்றாள். அடியார்களின் குற்றங்களையெல்லாம் தீர்க்கின்றாள். இதுவரை உபாயத்தைச் செய்யவும் மோக்ஷமாகிய பலனைப் பெறவும் தடையாயிருந்த கர்மங்களையெல்லாம் ஒழிக்கின்றாள்.

(6) ச்ரீணாதி - பரிபக்குவ நிலையை உண்டாக்குகின்றாள். தன்னை அடைந்தவர்களுக்குத் தன் அருளால் ஜ்ஞாநம் பக்தி முதலிய நற்குணங்களைப் பரிபக்குவ நிலைக்குக் கொண்டு வருகின்றாள்.

இவ்வாறு ஆறு பொருள்களால் கூறப்பட்ட பெருமையுடையள் பெரிய பிராட்டி என்று ஸ்ரீசப்தம் விளக்குகின்றது. இந்த ஆறு அர்த்தங்களுள் முதல் நான்கும் பிராட்டி புருஷகாரமாவதைக் காட்டுவனவென்றும் பிந்திய இரண்டும் பிராட்டி நேராக உபாயமாவதைக் காட்டுவனவென்றும் பெரியோர் கூறுவர்.

மதுப் விகுதியின் பொருள்

'ஸ்ரீமத்' என்னும் போது ஸ்ரீ என்னும் சொல்லுக்கு மேல் 'மதுப்' என்னும் விகுதி உள்ளது. இந்த விகுதி எப்பொழுதும் பிரியாதிருத்தலைக் கூறும். இவளது பிரியாமை குற்றம் செய்த சேதநர்களும் நினைத்த போதே சிறிதும் ஐயம் இன்றி ஸர்வேசுவரனைச் சென்று அடைதற்கு உதவி புரிகின்றது.

'ராயண சப்தத்தின் பொருள்

நாராயண எனும் சொல் கீழே கூறியபடி பற்பல விசேஷ குணங்களையும் அவனுக்கும் சேதநர்க்கும் உள்ள விசேஷ ஸம்பந்தங்களையும் வெளியிட்டுக் கொண்டு எல்லாவகை உறவுகளையும் உடைய ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகின்றது.

'சரணௌ' சப்தார்த்தம்

சரணௌ = திருவடிகளை. மோக்ஷத்திலோ வேறு பயனிலோ ஆசை பிறந்தபோது இந்தத் திருவடிகளைத் தைர்யமாய்ப் பற்றலாம். இந்தத் திருவடிகளை இன்னார் தாம் பற்றலாமென்ற நிர்ப்பந்தம் கிடையாது. தெய்விகத் தன்மையையுடைய ஸாத்துவிகர்களும் பற்றலாம். அசுரத் தன்மையையுடையரான பாபிகளும் பற்றலாம். இதில் வாசியில்லை. இவ்வழகிய திருவடிகள் எல்லோருக்கும் பொதுவானவை. இந்தச் 'சரணௌ' என்பது அந்தத் திருவடிகளைச் சொல்வதுடன் மட்டும் நின்றுவிடுவதில்லை. இவற்றை முன்னிட்டுக் கொண்டு அவன் திருமேனியையும் குறிப்பால் உணர்த்துகின்றது. அந்தத் திருமேனி 'திவ்ய மங்கள விக்ரஹம்' என்று வழங்கும். அந்தத் திருமேனி ஸேவிப்பவர்களின் பாபங்களையெல்லாம் போக்கும். தியானத்துக்கு ஏற்றதாயுள்ளது. சுத்த ஸத்துவ மயமானது. தான் மங்கள வடிவமாயிருப்பதுடன் ஸேவிப்பவர்க்கும் மங்களங்களை அளிக்கவல்லது. இத்தகைய திருமேனியையுடையன் எம்பெருமான்.

'சரணம்' என்பதன் பொருள்

சரணம் = உபாயமாக. எம்பெருமான் திருவடிகளையன்றி வேறு பற்றில்லாதவனாய் பக்தியோகம் முதலியவற்றைச் செய்ய முடியாமையால் கைம்முதலற்றவனாய்த் தவிக்கும் சேஷனான சேதநன் இந்தத் திருவடிகளைப் பற்றினால் பற்றுக்கோடான இவை அவன் விஷயத்தில் உபாயமாய் நின்று காக்குமென்பதைக் காட்டுகின்றது. இந்தச் 'சரணம்' எனும் சொல். எல்லாத் துன்பங்களையும் போக்கவல்ல ஒளியையுடைய இத்திருவடிகளே சேதநனுக்குத் தீமையானவற்றைப் போக்கி இஷ்டமான பலனைத் தரவல்ல உபாயமாய் நிற்கின்றனவென்று கருத்து.

'ப்ரபத்யே' என்பதன் பொருள்

ப்ரபத்யே = (உபாயமாக) அடைகின்றேன். 'பத்' என்னும் வினைப்பகுதியால் தேறும் பொருள் அறிவு என்பது. இங்கு அவசியமாய் வேண்டிய ஞானம் எம்பெருமான் நிச்சயமாய்க் காப்பான் என்ற நம்பிக்கையேயாகும். 'ப்ர' என்னும் உபஸர்க்கம் (உரிச்சொல்) அந்த நம்பிக்கையின் மிகுதியைக் காட்டும். ஆகவே மிகுதியான நம்பிக்கை என்பதே மஹாவிச்வாஸமெனப்படுகின்றது. இந்த மஹாவிச்வாஸம்தானே ப்ரபத்திக்கு உள்ள ஐந்து அங்கங்களுள் மிக முக்கியமானது! இதைக் கூறும் வாயிலாக இதை முன்னிட்டுக் கொண்டே செய்ய வேண்டிய ப்ரபத்தியும் கூறப்பட்டதாகின்றது. ஆகவே மஹாவிச்வாஸத்துடன் கூடிய ப்ரபத்தியைச் செய்கின்றேன் என்றதாயிற்று. இந்த அங்கங்களுடன் கூடிய ப்ரந்யாஸத்தை ஒரு பலனுக்காக ஒருமுறை தான் செய்ய வேண்டும்.

'ப்ரபத்யே' என்பதில் தன்மையொருமை (உத்தமபுருஷ ஏகவசநம்) உள்ளது. இது சேதநனான தன்னை ப்ரபத்திக்குக் கர்த்தாவாக (செய்பவனாக)க் காட்டும். எத்தகைய கர்த்தாவை? தன் தகுதியையும் ஸ்வரூபத்தையும் தெளிந்தவனை. தகுதி என்பது யாது? ஆகிஞ்சந்யம். அதாவது பக்தியோகம் முதலிய வேறு உபாயங்களைச் செய்ய முடியாமை. இதுவே ப்ரபத்தியைச் செய்வதற்கு வேண்டிய தகுதியாகும். இந்தத் தகுதியையும் எம்பெருமானுக்கே சேஷமான தன் ஸ்வரூபத்தையும் நன்கு தெளிந்து கொண்டு ப்ரபத்தியைச் செய்யும் அதிகாரியைக் காட்டும் இந்தத் தன்மை ஒருமை விகுதி.

த்வயத்தின் பிற்பகுதி

முன்னுரை

கீழே த்வயத்தின் முற்பகுதியில் ப்ரபத்தியைப் பற்றிக் கூறியாயிற்று. உலகில் நேராக ஒரு வழியில் போகும் நீரைத் தடுத்து வேறு இடங்களில் போய்ப் பாயும்படி செய்வதுண்டே! அவ்வாறு பாய்வதற்கு மடைமாறுதல் என்று பெயர். இங்கு ப்ரபத்தியென்னும் சிறந்த உபாயத்தை மோக்ஷமென்னும் சிறந்த பலனுக்குச் ஸாதனமாகக் கொள்ள வேண்டியதை விட்டு வேறு பலனுக்காகப் பயன்படுத்துவது மடைமாறும்படி செய்வது போலாகுமன்றோ! அங்ஙனம் செய்யவிடாமல் இந்த த்வயத்தின் பிற்பகுதி எல்லாவற்றிலும் உத்தமமான பலனைக் காட்டி அதில் ஈடுபடச் செய்கின்றது.

'ஸ்ரீமதே' என்பதன் பொருள்

ஸ்ரீமதே - பிராட்டியைக் கணமும் பிரியாதவனான. எல்லாருக்கும் சேஷியாய் (தலைவனாய்) உள்ள எம்பெருமான் உபாயமாகும்போதும் பலனாய் நிற்கும்போதும் இன்னும் எந்த நிலையிலும் பிராட்டியுடன் கூடியே நின்று கைங்கர்யங்களை ஏற்றுக் கொள்ளுகிறான் என்று ஏற்பட்டது. ஆகவே "எம்பெருமான் - பிராட்டி ஆகிய இருவரிடமே ப்ரபத்தி செய்ய வேண்டும். கைங்கர்யங்களையும் இவ்விருவருக்குமே செய்ய வேண்டும். இத்திவ்ய தம்பதிகள் இருவருமே உபாயமாகவும் பலனாகவும் நிற்பவர்" என்பதே நம் ஸித்தாந்தத்தின் தத்துவம்.

நாராயண சப்தார்த்தம்

'நாராயணாய' என்னும் போது நாராயண சப்தம் கீழே கூறியவாறு எல்லாக் குணங்களுடனும் கூடியிருத்தலைக் கூறிய போதிலும் இங்குப் பிற்பகுதியில் அவன் பலனாய் நிற்பதற்கு அவசியம் அநுஸந்திக்க வேண்டிய இரண்டு தன்மைகளை மட்டும் மிக முக்கியமாகக் கூறுகின்றது. அவையாவன - (1) ஸ்வாமித்வம் (எல்லோருக்கும் தலைவனாயிருத்தல்) (2) ஸர்வப்ரகாரநிரதிசய போக்யத்வம். (அதாவது - எல்லா வகைகளிலும் இவனைக் காட்டிலும் இனிய வஸ்து வேறு இல்லையென்னும்படி அநுபவிக்க மிகவும் இனியனாயிருத்தல்) இவ்விரண்டும் மிக முக்கியமானவை.

'ஆய என்னும் வேற்றுமையுருபின் பொருள்

'ஆய'. இது நான்காம் வேற்றுமையுருபு. இதற்கு 'அவன் பொருட்டு' என்று பொருள். அதாவது அவனுக்குச் சேஷம் என்று தேறும். இங்கு 'பவேயம்' அல்லது 'ஸ்யாம்' என்று ஒரு வினைமுற்றுச் சொல்லை வருவித்துக் கொள்ள வேண்டும். இதற்கு

'ஆவேன்' அல்லது 'நான் ஆக வேண்டும்' என்பது பொருள். ஆகவே நான் நாராயணனுக்குச் சேஷமாக ஆக வேண்டும் என்று பிரார்த்திப்பதாய் அர்த்தம் தேறியது. இந்தச் சேஷனாம் தன்மையை எதற்காகப் பிரார்த்திக்க வேண்டும்? இத்தன்மைதான் ஜீவனுக்கு எப்பொழுதும் சாச்வதமாக உள்ளதாயிற்றே! ஆதலின் அந்தச் சேஷனாந் தன்மைக்குப் பலனாயுள்ளதைப் பொருளாகக் கொண்டு அதைப் பிரார்த்திப்பதாய்க் கூற வேண்டும். சேஷமாக இருப்பதற்குப் பலன் கைங்கர்யம் செய்தலேயாகும். அந்தக் கைங்கர்யத்தை அருளுமாறு எம்பெருமானைப் பிரார்த்திப்பது பொருத்தம்தானே!

நம: என்பதன் அர்த்தம்

கீழே திருமந்திரத்தில் உள்ள 'நம:' என்பதற்குக் கூறியபடியே இங்கும் நம: சப்தத்திற்குப் பொருள் கூற வேண்டும். அதாவது ந, ம: என்ற இரண்டு எழுத்துக்களையும் இரண்டு பதமாக வைத்து இவற்றை ஒரு வாக்யமாக்கிக் கொள்ள வேண்டும். பின் 'ஸ்யாம்' என்ற வினைமுற்றை வருவித்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது ம: - எனக்கு, ந ஸ்யாம் - சேஷனல்லேன் - நான் எனக்குச் சேஷனல்லேன் என்று பொருள் தேற, இதனால் அஹங்காரம் நீங்குதல் கூறியதாயிற்று. மேலும் 'கிஞ்சித்' 'ஸ்யாத்' என்ற இரண்டு சொற்களை வருவித்துக் கொண்டு ம: - எனக்கு, கிஞ்சித் - ஒரு பொருளும், ந ஸ்யாத் - இருக்க வேண்டாம் என்றும் பொருள் கூற வேண்டும். இதனால் எல்லாப் பொருள்களிலும் 'தன்னுடையவை' என்று எண்ணும் மமகாரம் நீங்குவதைப் பிரார்த்திப்பதாகவும் ஆகும். இப்படி எதிரியாயுள்ள மமகாரத்தை வேண்டாமென்று மறுப்பதன் வாயிலாக நமக்குத் தீங்கு தரும் எல்லா அநிஷ்டங்களும் கழிய வேண்டுமென்று பிரார்த்திப்பதாகக் கொள்ளலாம். அந்த அநிஷ்டங்கள் எவை? - அஜ்ஞாநம் - கர்ம - இதுவரை உலக ஸுகங்களை அநுபவித்த பழக்கம் - பின்னும் அவற்றில் ஆசை - ஸம்ஸார பந்தம் ஆகியன. இவையும் கழியும்படி பிரார்த்திப்பதாகவும் கூறலாம்.

மேலும் இவ்வுலகில் செயல்களைச் செய்யும்போதும் போகங்களை அநுபவிக்கும்போதும் சேதநனுக்கு 'நானே செய்கிறேன்' 'எனக்காகவே அநுபவிக்கிறேன்' என்று தீய எண்ணங்கள் வருவதைக் காண்கின்றோமல்லவா! அவ்வாறே மோக்ஷம் சேர்ந்து பரிபூர்ண அநுபவம் பெற்றுக் கைங்கர்யங்கள் செய்யும்பொழுதும் இந்தத் தீய எண்ணங்கள் வருமோ என்று ஐயம் எழலாம். இவ்வெண்ணங்கள் கைங்கர்யத்துக்குக் களைகள் தாமே!

இந்தத் தவறான எண்ணங்களெல்லாம் மோக்ஷத்தில் செய்யும் கைங்கர்யங்களில் கிடையா என்பதையும் இந்த நம: சப்தம் காட்டுகிறதென்று உணர வேண்டும். ஆகவே மோக்ஷத்தில் புரியும் கைங்கர்யங்களில் இக்குற்றங்களில்லாமலிருப்பதுவே நம: சப்தத்தில் முக்கியமாய் அநுஸந்திக்கப்பட வேண்டியதாகும்.

இப்படி த்வயத்தை மூன்று வாக்யமாகப் பிரித்துப் பொருள் கூறப்பட்டது. இந்த உட்பிரிவான மூன்று வாக்யங்களையும் சேர்த்து ஒரு வாக்யமாகக் கொண்டு பொருளைப் பார்த்தால் கீழ்வரும் கருத்துத் தேறும்

த்வயத்தின் திரண்ட பொருள்

நான் எம்பெருமானுக்கே அடியன். வேறு ஒருவருக்கும் அடியனல்லேன். மோக்ஷம் பெறுவதற்கு என்னிடம் பக்தியோகம் முதலிய கைம்முதல் எதுவும் இல்லை. எனக்கு இந்த ஸம்ஸார மண்டலத்தில் ஏற்படும் விபரீதங்கள் கழிய வேண்டும். பின்பு பிராட்டியைப் பிரியாத நாராயணனை அடைய வேண்டும். அவனே மிகவும் போக்யனாயிருப்பவன். அவனுக்கு மேம்பட்ட இனிய வஸ்து கிடையாது. ஆதலின் முக்கியமான பலன் அவனேயாவான். எக்காரணத்தையும் முன்னிடாமல் இயற்கையில் சேஷியாயிருப்பவன் அவனே. ஆதலின் ஸ்ரீவைகுண்டத்தில் நான் சாச்வதமாய்ச் செய்யும் கைங்கர்யத்தைப் பெற்றுக் கொள்பவன் அவனே. அவன் திருவடிகளில் ஸ்ரீவைகுண்டத்தில் எல்லா இடத்திற்கும் எல்லாக் காலத்திற்கும் எல்லா நிலைமைகளுக்கும் ஏற்ற எல்லாவகைக் கைங்கர்யங்களையும் நான் செய்ய வேண்டும். இத்தகைய பலனைப் பெறுதற்காகப் பிராட்டியுடன் கூடிய நாராயணன் திருவடிகளையே உபாயமாக உறுதியாக நம்புகிறேன். அவனையே பக்தியோகத்தின் ஸ்தாநத்தில் நின்று பலன் தரும்படி பிரார்த்தித்து என்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தலாகிய பரந்யாஸத்தைச் செய்கிறேன்.

(இங்கு த்வயத்தின் பிற்பகுதியை முன்னே வைத்து முற்பகுதியைப் பின்னர் வைத்துக் கருத்துக் கூறப்பட்டுள்ளது. பலனில் விருப்பம் ஏற்பட்டபின்பே அதன் உபாயத்தைச் செய்ய முற்படுவது என்ற உலகவியற்கையைத் தழுவி இந்த முறையில் கருத்துக் கூறலாயிற்று)

த்வயாதிகாரம் முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

ஸ்ரீ :

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

## சரமசுலோகாதிகாரம்

கீழே திருமந்திரமும் த்வயமும் சிறந்த உபாயமாகிய ப்ரபத்தியை வெளியிடுவதாகக் கூறலாயிற்று. சரம சுலோகமும் ப்ரபத்தியைத் தான் வெளியிடுகின்றது. ஆனால் இன்னும் விரிவாய்த் தெளிவிக்கின்றது. ப்ரபத்தி செய்வதற்கு வேண்டிய தகுதி முதலியவற்றைக் காட்டுவதுடன் 'இதைச் செய்' என்று கட்டளையிடுகின்றது சரம சுலோகம்.

### சரமசுலோகம் அவதரித்த வகை

அர்ஜுநன் தான் பக்தியோகம் செய்ய முடியாதிருப்பதைப் பற்றி மிக வருந்தினான். அதன் அங்கங்களைச் செய்வது கடினம். அதற்கு விசேஷ ஞானம் வேண்டும். அங்கியான பக்தியோகமும் செய்வதற்கு மிகக் கடினமானது. நெடுங்காலம் செய்தாக வேண்டும். தானோ குறைந்த அறிவுடையன். சக்தியும் மிகக் குறைவானது. வாழ்நாளோ மிகச் சொற்பம். இந்தச் சூழ்நிலையில் பக்தியோகம் தன்னால் செய்து தலைக்கட்டுதல் மிகக் கடினமென்று உணர்ந்து மிகவும் சோகித்தான் அர்ஜுநன். இதைக் கண்ட கண்ணன் மிக எளிய உபாயமான ப்ரபத்தியை உபதேசிக்கின்றான். இதன் அங்கங்களைச் செய்வதும் அங்கியான ப்ரபத்தியைச் செய்வதும் மிக எளிது. ஒரு முறை செய்தாலே போதும். இப்படி ஸுலபமான உபாயமாகிய ப்ரபத்தியை உபதேசித்து 'நீ வருந்த வேண்டாம்' என்று அருச்சுனனைத் தேற்றுகின்றான் கண்ணபிரான்.

### சரம சுலோகம் - பொருட்சுருக்கம்

இந்தச் சுலோகத்திற்குச் சுருக்கமான பொருள் "எல்லாத் தர்மங்களையும் அடியோடு விட்டுவிட்டு என்னை ஒருவனையே சரணமாக அடை. நான் உன்னை ஸகல பாபங்களின்றும் விடுவிக்கப் போகின்றேன். நீ வருந்த வேண்டாம்" என்பதேயாகும். இதற்கு விரிவான பொருள் தரப்படுகின்றது.

### ஸர்வதர்மாந் - பொருள் விளக்கம்

ஸர்வதர்மாந் - எல்லாத் தருமங்களையும். தர்மம் என்பது யாது? நாம் விரும்பும் பயனைத் தர வல்லதே தர்மமாகும். ஆனால் அது சாஸ்த்ரத்தைக் கொண்டே அறிய வேண்டியதாயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது தர்மமாகும். இந்தத் தர்மசப்தம் பொதுவாக உபாயம் என்ற பொருளைக் குறித்த போதிலும் இங் ஸந்தர்ப்ப ஒட்டி மோக்ஷத்துக்கு ஸாதநமாக விதித்த பக்தியோகத்தை கூறுகின்றது. தர்மாந் என்று பன்மையில் கூறியதால் பக்தியோகத்தின் முப்பத்திரண்டு வகைகளையும் கூறியதாயிற்று. இந்தப் பன்மையாலேயே பக்தியோகத்தின் வகைகளையெல்லாம் கூறிய பிறகு ஸர்வ (எல்லா) என்ற சொல் எதற்காக என்ற கேள்வி எழுகின்றது. விடை - பக்தியோகத்தின் வகைகளில் ஒன்று கூட விடாமல் சொல்வதற்காக ஸர்வ என்னும் சொல் இருப்பதாக உணர்க. அல்லது ஸர்வ என்னும் சொல் பக்தியோகத்தின் அங்கங்களையும் கூட்டிக் கொள்வதற்காக உள்ளதாக உணர்க.

### பரித்யஜ்ய - பொருள் விளக்கம்

பரித்யஜ்ய - சிறிதும் தொடர்பின்றி அடியோடு விட்டு, தர்மங்களை அடியோடு விடுகை என்றால் என்ன? பக்தியோகம் நம்மால் செய்ய முடியாதிருப்பதை நினைந்து அதைச் செய்ய அடியோடு ஆசையற்றுப் போகை. இங்குப் 'பரி' என்ற உபஸர்க்கம் (உரிச்சொல்) அப்படி ஆசையறுதலின் மிகுதியைக் காட்டுகின்றது. பிறகு சக்தி வரும்போது செய்வேனென்றும் ஏதோ இயன்றவரை செய்து பார்ப்பேன் என்றும் ஆசைப்படாமல் எந்தக் காலத்திலும் எவ்வகையிலும் தனக்குத் தகுதியின்மையைக் கருதவேண்டுமென்று காட்டுகின்றது.

### தர்மங்களை விடுதல் - விதியா? அநுவாதமா?

இங்கு ப்ரபத்தியைச் செய்யும்படி விதிக்கும் இந்தச் சரம ச்லோகத்தில் முதலில் எல்லாத் தருமங்களையும் விட்டுவிட்டு என்று இருப்பதைக் கொண்டு தர்மங்களை விடுதலையும் விதிப்பதாகப் பொருள் கொள்ளக்கூடாது. ஏன்? உலகில் மனிதன் தான் விரும்பும் பலனுக்குச் சாதனமானவற்றைச் செய்ய வேண்டியது

அவசியமாயுள்ளது. இங்குத் தருமங்களை விடும்படி சரம சுலோகம் விதிப்பதாகக் கூறுவதாயின், அத்தருமங்களைச் செய்யச் சக்தியுடையவனைக் குறித்து அவற்றை விடும்படி விதிக்கின்றதா? சக்தியற்றவனைக் குறித்து விதிக்கின்றதா? என்பதைச் சிந்திக்க வேண்டும். சக்தியுடையவனைப் பற்றி விதிப்பதாயின் சக்தியுடையவன் அத்தருமங்களைச் செய்தேயாக வேண்டுமாதலின் அவற்றை விடும்படி விதிப்பதாகக் கூறுதல் பொருந்தாது. சக்தியுடைய மனிதன் தான் விரும்பும் பலனுக்குச் சாதனமானவற்றைச் செய்தேயாக வேண்டுமன்றோ; சக்தியற்றவனைக் குறித்து விதிப்பதாகவும் கூறமுடியாது. சக்தியற்றவன் தருமங்களைச் செய்ய முயற்சி கொள்ளவே மாட்டானே! அவனுக்குத் தர்மங்களை விடும்படி விதிக்க வேண்டுமோ? முடவனைக் குறித்து நீ ஓடவேண்டாமென்று கட்டளையிட வேண்டுமோ? ஆதலின் எவ்வகையினும் இங்கு எல்லாத் தருமங்களையும் விடும்படி விதிப்பதாகக் கொள்ளுதல் பொருந்தாது. ஆகவே ஒருவனிடம் முன்பே உள்ள தகுதியை மறுபடி இந்தச் சுலோகம் சொல்வதாகக் கொள்ள வேண்டும். எல்லாத் தருமங்களையும் கைவிட்டு நிற்கின்ற நீ என்னைச் சரணமடை என்று விதிப்பதாகக் கொள்ளுதல் மிகப் பொருந்தும்.

பிறர் கொள்கைகள் - மறுப்பு

இங்குச் சிலர் ஸர்வதர்மங்களின் ஸ்வரூபத்தையே செய்யாது விட்டுவிட வேண்டுமென்று விதிப்பதாய்க் கூறுகின்றனர். இது பல ப்ரமாணங்களுக்கும் முரண்பட்டதாகும்.

இன்னும் சிலர் ஸர்வதர்மங்களையும் விட்டு என்னும் பொருள் கொண்ட தொடர் ஸாத்துவிகத்யாகத்தை விதிப்பதாகக் கூறுகின்றனர். அதாவது - எந்தக் கருமத்தைச் செய்தாலும் 'நான் செய்கின்றேன்; இது எனது செயல், இதனால் பலன் பெறுமவன் நானே' "என்றெல்லாம் கருதாமல் எம்பெருமான் தானே தனது செயலாகத் தன் பலனுக்காகவே செய்கின்றான் என்ற கருத்தோடு செய்ய வேண்டும். இதுவே ஸாத்துவிகத்யாகமெனப்படும். ஆகவே இங்கு தர்மங்களை விட்டு என்பதற்குத் தானே தன் பயனுக்காகத் தன் செயலாகச் செய்யும் எண்ணத்தை விட்டு எம்பெருமான் தன் பயனுக்காகத் தானே செய்விக்கின்றான் என்னும் அம்சத்தை விதிப்பதாகக் கொள்ள வேண்டும் என்றதாயிற்று.

இக்கருத்தைக் கொள்வதாயின் இந்த எண்ணமாகிய ஸாத்துவிகத்யாகத்துடன் கர்மங்களை ப்ரபத்திக்கு அங்கமாகச் செய்ய வேண்டுமென்று தேறிவிடும். அப்பொழுது ப்ரபத்திக்குக் குறிப்பிட்ட ஐந்து அங்கங்களையன்றி மற்ற எதுவும் அங்கமாகாதென்ற ஸித்தாந்தக் கொள்கைக்கு முரண்பட்டு விடும்.

தர்மங்களை விடுகையின் விதிக்கும் இடம் உண்டு

எபபடியும் இச்சுலோகம் ஸர்வ தர்மங்களையும் விடுதலை விதிப்பதாகக் கொள்ள வேண்டுமென்று ஆர்வம் இருந்தால் அதற்குப் பொருத்தமான வழியில் அர்த்தம் கூற வேண்டும். அதாவது - ஸாத்துவிகத்யாகத்துடன் கூடிய ஸகல தர்மங்களையும் ப்ரபத்தி, தனக்கு அங்கமாகக் கொள்வதில்லையென்பதை விதிப்பதாகக் கொள்வது மிகப் பொருந்தும்.

ஆக்ஷேபம் - ஸமாதாநம்

இங்கு ஒரு கேள்வி - இப்படி ப்ரபத்தி வேறு தர்மங்களை அங்கமாக எதிர்பார்க்காது என்று கூறினால் அந்தண்மை முதலிய ஜாதிக்கும் பிரமசரியம் முதலிய ஆச்ரமத்துக்கும் வேண்டிய ஸந்த்யாவந்தநம் முதலிய கர்மங்களையும் செய்ய வேண்டாமென்று ஏற்படுகின்றதே! ப்ரபத்திதான் இவற்றை எதிர்பார்ப்பதில்லையே! என்று. இதற்கு ஸமாதாநம்-அந்தக் கர்மங்களை எப்பொழுதும் கைவிடாது செய்தே தீரவேண்டுமென்று தனிப்பட்ட முறையில் சாஸ்த்ரங்கள் விதித்திருப்பதால் அவற்றைக் கைவிட முடியாதென்று உணர்க.

பின்னும் ஆக்ஷேபம் - ஸமாதாநம்

பின்னும் ஒரு கேள்வி - ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்த ஸ்ரீ சரணாகதி கத்யத்தில் த்வயத்தை அதன் அர்த்தத்தை நினைத்துக் கொண்டே எப்பொழுதும் அநுஸந்திக் கொண்டிருக்க வேண்டுமென்று நியமித்துள்ளாரே! ஸந்த்யாவந்தநம் முதலிய நித்யகர்மங்களை விட்டு த்வயத்தையே எப்பொழுதும் உச்சரிக்க வேண்டுமென்று ஏற்படுகின்றதே! என்று. இதற்கு ஸ்மாதாநம் - இந்த ஸம்ஸார மண்டலத்தில் வாழும் சேதநர்களுக்கு இந்தச் சரீரத்தின் தொடர்பால் மூன்று சூழ்நிலைகள் விலக்க முடியாதனவாய் உண்டு. அவையாவன - (1) ஸ்வபாவ ப்ராப்தம் (2) அர்த்த ப்ராப்தம்

(3) சாஸ்த்ர ப்ராப்தம் என்பன. (1) ஸ்வபாவப்ராப்தம் - தும்மல், இருமல், உறக்கம் முதலியன. இவை அவ்வப்போது இயற்கையாய் வந்தே தீரும். இவற்றை விலக்கமுடியுமா? (2) அர்த்த ப்ராப்தம் - பசியைத் தவிர்க்க முடியுமா? இதைப் போக்குவதற்காக உணவை உட்கொள்கின்றோமே! இதை அர்த்த ப்ராப்தம் என்பர். (3) சாஸ்த்ர ப்ராப்தம் - ஸந்த்யாவந்தநம் முதலிய நித்ய கர்மங்களைத் தவறாது செய்தாக வேண்டுமென்று சாஸ்த்ரங்கள் விதிக்கின்றன. இவற்றைச் செய்யாதிருக்க முடியுமா? இவற்றைச் சாஸ்த்ர ப்ராப்தமென்பர். ஆகவே கைவிட முடியாத இந்த மூவகைச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறுதான் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீஸூக்திக்குப் பொருள் கொள்ள வேண்டும். ஆகவே ஸந்த்யாவந்தநம் முதலிய நித்ய கர்மங்களுக்கும் அமாவாஸ்யை தர்ப்பணம் முதலிய நைமித்திக கர்மங்களுக்கும் உரிய காலம் போக எஞ்சிய பொழுதிலேயே த்வயத்தை அநுஸந்திக்க வேண்டுமென்றுதான் முடிவு காண வேண்டும்.

மாம் ஏகம் - பொருள்

மேல் இவ்வாறு தாம் விரும்பும் பலனுக்குச் சாதனமாகச் செய்ய பக்தியோகம் முதலிய கைம்முதல் இல்லாமல் வேறு பற்றின்றி நிற்கும் சேதநர்கள் வந்தடையும்படி நிற்கும் தன்னை எம்பெருமான் 'மாம் ஏகம்' என்று காட்டுகின்றான் -

மாம் ஏகம் - என்னை ஒருவனையே (சரணமாக அடை) என்பது பொருள். இங்கும் பிராட்டியுடன கூடிய என்னை என்றே பொருள் கொள்ள வேண்டும். இந்தச் சரம சுலோகத்தில் விதிக்கும் சரணாகதியை எப்படிச் செய்வது என்பதைக் காட்டுவது த்வயம் என்று கீழேயே கூறப்பட்டுள்ளது. அந்த த்வயத்தில் 'ஸ்ரீமத்' என்று தொடக்கத்திலேயே அவன் பிராட்டியுடன் பிரியாதிருத்தல் வெளிப்படையாகவே கூறப்பட்டுள்ளது. அதையும் இன்னும் மற்ற ப்ரமாணங்களையும் தழுவி இங்கும் பிராட்டியுடன் கூடிய என்னை ஒருவனையே (சரணமாக அடை) என்றே பொருள் கொள்ள வேண்டும்.

இங்கு 'மாம்' என்று எம்பெருமான் தன்னைக் கூறிக் கொண்டதற்கு 'நீ என்னை உபாயமாகப் பற்றுவதற்கு என்னிடம் இருக்க வேண்டிய ஸௌலப்யம் - ஸௌசீல்யம் முதலிய குணங்கள் நிரம்பியுள்ள என்னை என்று கூறியதாகக் கொள்ள வேண்டும்.

### மிகுதியான 'ஏகம்' சொல்லுக்குப் பயன்

இங்கு ஒரு கேள்வி - 'மாம்' 'ஏகம்' என்று இரண்டு பதங்கள் உள்ளனவே! 'மாம்' என்ற சொல் ஒருமைச்சொல் (ஏகவசநம்) தானே! இதனாலேயே ஒருவன் என்ற பொருள் தேறியிருக்கின்றதே! பின்னும் 'ஏகம்' என்று அதிகமான ஒரு சொல்லைக் கொண்டு ஒருவனை என்று ஏன் பொருள் கூற வேண்டும்? - என்று. இதற்கு ஸமாதாநம் - கேள்வி நேர்மையானதுதான். ஆனால் 'மாம்' என்ற ஒருமைச் சொல்லே ஒருவன் என்பதைக் காட்டிவிட்டபோதிலும் மறுபடி 'ஏகம்' என்ற மிகுதியான சொல் இருப்பது ஒரு விசேஷமான பொருளைக் காட்டுகின்றது. அப்பொருளாவது

(1) நீ என்னையே உபாயமாகப் பற்றிச் சரணாகதி செய்த பிறகு மறுபடியும் நீ வேறோர் உபாயத்தைச் செய்யவேண்டிய சுமையை நீ சுமவாதபடி உன் சுமையை நானே ஏற்று வேறென்றையும் நான் எதிர்பாராமல் நின்று பலன் தருவேன் என்பதுவேயாகும்.

(2) அல்லது உலகில் பலனுக்குச் சாதனம் - அச்சாதனத்தால் வரும் பயன் இரண்டும் வெவ்வேறாக இருப்பது போலன்றி உபாயமும் பலனும் எம்பெருமான் ஒருவனே என்பதைக் காட்டுவதற்காக இந்த மிகுதியான ஏகம் என்ற சொல் என்று கூறலாம்.

(3) (A) அல்லது - சேதநன் ப்ரபத்தியைச் செய்தே பலன் பெற வேண்டியிருப்பதால் தன்னையும் முக்கியமான உபாயமாக நினைக்கக் கூடும். இங்கு 'ஏகம்' சொல் அங்ஙனம் எண்ணவிடாமல் தடுக்கின்றது. எவ்வாறெனில் - சேதநன் செயல் புரிபவன் என்பது உண்மையே. ஆயினும் அவனது செயல் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் ஏற்பட்டதன்றோ! அவன் கொடுத்த சரீரம் இந்திரியங்கள் முதலியவற்றைக் கொண்டு அவன் காட்டிய உபாயத்தை அவனுடைய உதவியால் நடத்தி அவன் கொடுக்கப் போகும் பலனுக்கு அண்ணாந்து நின்று கொண்டு இப்படிச் சுதந்திரமின்றி எம்பெருமானுக்கு வசப்பட்டு நிற்கும் சேதநன் தன்னை ஸ்வதந்த்ரனான ஸர்வேசுவரனோடு சேர்த்து முக்கிய உபாயமாகக் கருதக்கூடாதென்ற கருத்தை ஏகம் என்ற சொல் காட்டுவதாகவும் கூறலாம்.

(B) அல்லது - ப்ரபத்தியைச் செய்தால்தானே மோக்ஷம் பெறமுடிகின்றது! ஆதலால் ப்ரபத்தியும் ஒரு முக்கிய உபாயமாகும் என்ற எண்ணம் வரக்கூடும். அவ்வாறு கருதுவதைத் தடுக்கவே ஏகசப்தம் என்றும் கூறலாம். சேதநன் செய்யும் பாபங்களால் எம்பெருமான் திருவுள்ளத்தில் சீற்றம் உண்டாகின்றது. சேதநன் செய்யும் ப்ரபத்தி அவன் சீற்றத்தைத் தணித்து அவன் உள்ளத்தில் கருணையை உண்டாக்குகின்றது. இத்துடன் ப்ரபத்தியின் செயல் தீர்ந்துவிடுகின்றது. ஆகவே ப்ரபத்தி முக்கியமான உபாயமாக ஆகாமல் எம்பெருமானே மோக்ஷம் தரவல்ல முக்கிய உபாயமாவன் என்பதைக் காட்டுகின்றது மிகுதியான ஏகமென்னும் சொல் என்றும் கூறலாம்.

(4) மேலும் மற்றொரு கருத்தும் கூறலாம் - ஒவ்வொரு தர்மம் ஒவ்வொரு பலனைத் தருகின்றது. அத்தனை தருமங்களும் தனித்தனியே கொடுக்கும் பலன்களையெல்லாம் அநாதியாக தர்மவடிவனாய் ஸித்தோபாயமாகவுள்ள நானே கொடுக்கின்றேன் என்ற கருத்தை ஏகம் என்ற சொல் கூறுவதாகவும் கொள்ளலாம். இதனால் அத்தனை தர்மங்களுக்கும் எதிர்த்தட்டாக நான் ஒருவனே நின்று பலன் தருகின்றேன் என்றதாயிற்று.

'சரணம் வ்ரஜ' பொருள் விளக்கம்

சரணம் - உபாயமாக. வ்ரஜ - அடைவாயாக. என்னை ஒருவனையே சரணமாகப் பற்று என்று விதித்தாயிற்று. இதன் தாத்பர்யம் வருமாறு - வேறு கதியற்ற அனைவருக்கும் ரக்ஷகனான என்னிடம் மஹாவிச்வாஸம் முதலிய அங்கங்களுடன் கூடியதாய்த் தன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்தலாகிய ப்ரந்யாஸத்தைச் செய் என்று கூறியதாயிற்று.

என்னைச் சரணமாக அடை என்றது என் திருவடிகளிலே ப்ரபத்தியைச் செய் என்ற பொருள் கொண்டது. வேறு உபாயத்தைச் செய்யச் சக்தியின்மையால் கைம்முதலற்று எம்பெருமானுக்கு அடிமையாயிருக்கிற சேதநன் ஸுலபமாய்ப் பற்றக் கூடியவை என் திருவடிகள் தாமே! செய்ய முடியாமல் கைவிட்ட உபாயங்களின் ஸ்தாநத்தில் நேர்மையான பற்றுக்கோடாய் நின்று காப்பவை என் திருவடிகள் தாம் என்று எம்பெருமான் கூறுவதாய்த் தீர்ந்தது.

### ச்ரம சுலோகம் - பிற்பாதிக்கு முன்னுரை

இங்ஙனம் இந்தச் சரம சுலோகத்தில் முற்பாதியில் ஸர்வேசுவரனான கண்ணபிரான் சேதநன் செய்ய வேண்டிய செயலைக் கூறினான். அதாவது - தன்னிடம் பக்தியோகம் முதலிய கைம்முதலும் இல்லாமல் வேறு பற்றும் இல்லாத சேதநன் செய்வதற்கு ஏற்ற எளிதான உபாயமாகிய ப்ரபத்தியை முற்பாதியால் விதித்தருளினான். இனிப்பிற்பாதியால் அந்தச் சேதநன் விஷயத்தில் தான் செய்ய வேண்டிய செயலை - ஸர்வபாபங்களினின்று விடுவித்தலை எம்பெருமான் வெளியிடுகின்றான்.

### அஹம சப்தார்த்தம்

அஹம் - நான். இங்கு நான் என்று எதற்காகக் கூற வேண்டும்? மேலே 'விடுவிக்கப் போகின்றேன்' என்று பொருள்கொண்ட 'மோக்ஷயிஷ்யாமி' என்ற வினைமுற்றில் (க்ரியாபதத்தில்) தன்மையொருமையுருபு விகுதி. (உத்தம புருஷன் - ஏகவசநம்) இருப்பதாலேயே நான் என்பது ஏற்பட்டுவிடுமே! என்ற கேள்வி எழலாம். இதற்கு விடை - உண்மைதான். ஆயினும் தனக்கு உள்ள இருவகைப் பெருமைகளைக் குறிப்பால் வெளியிடுவதற்காக நான் என்று கூறிக்கொள்கின்றான். அவையாவன - (1) சேதநர் செய்யும் பாபங்களால் அவர்களுக்கு ஸம்ஸார பந்தமாகிய விலங்கைப் பூட்டி வைத்திருக்கிறேன். அவர்கள் ப்ரபத்தியைச் செய்துவிட்டால் அந்த விலங்கை வெட்டியெறிந்து மோக்ஷம் கொடுக்க வேண்டுமே! அதற்கு வல்லவர் என்னையன்றி வேறு ஒருவரும் இலர் (2) மேலும் முழுச்சுதந்திரத்துடன் நானே விலங்கிட்டு வைத்த அவர்களுக்கு அந்த விலங்கை வெட்டி மோக்ஷத்தைக் கொடுக்க முற்படும்போது என் சுதந்திரத்தில் குறுக்கிட்டுத் தடுக்கவல்லவர் என்னையன்றி வேறு ஒருவரும் இலர் - என்பனவாம். இந்த இருவகைச் சிறப்புக்களும் தனக்கே உண்டு என்று தன் ஏற்றத்தைக் காட்டுவதற்காக அஹம் என்று சொல்லிக் கொண்டான்.

### 'த்வா' சப்தத்தின் பொருள்

த்வா - உன்னை. எத்தகையனான உன்னை? உனக்கு மோக்ஷம் கொடுத்துக் கொள்ள உன்னாலும் முடியாது. பிறராலும் முடியாது.

இந்த அம்சத்தை நன்கு உணர்ந்து கொண்டாய். நானோ எல்லாவற்றையும் அறிந்தவன்; எதையும் செய்யச் சக்தியுடையவன்; எல்லையற்ற கருணையுடையவன். என்னிடம் உன்னைக் காக்கும் பொறுப்பை ஸமர்ப்பித்து ப்ரபத்தி செய்து விட்டாய். இத்தகைய உன்னை.

'ஸர்வபாபேப்ய:' சப்தார்த்தம்

ஸர்வபாபேப்ய: - எல்லாப் பாபங்களினின்றும். பாபம் என்றால் என்ன? பின்பு நமக்குத் தீங்குகளைத் தரச் சாதனமாயுள்ளதுவே பாபம் எனப்படும். பாபத்தால் தீங்கு வருவதை நாம் நேரில் கண்டறியமுடியுமா? ஆதலால் இதைச் சாஸ்த்ரத்தைக் கொண்டே அறிய வேண்டும். இங்கு பாபேப்ய: என்று பன்மையில் (பஹுவசநத்தில்) கூறியதால் பாபங்கள் நெடுங்காலமாய்ச் செய்யப்பட்டுப் பலவகையாய் உள்ள நிலையைக் கூறியதாயிற்று. பல்வகைப் பாபங்களைப் பன்மையால் காட்டிய பிறகும் ஸர்வ சப்தம் எதற்காகவென்றால், அந்தப் பாபங்களில் ஒன்று கூட விடாமல் சேர்த்து அவை அனைத்தையும் ஒழிப்பதாகக் கூறுவதைக் காட்டுவதற்காக எல்லாப் பாபங்களின்றும் என்று கூறப்பட்டது.

பாப சப்தத்தில் சில புண்ணியங்களும் அடங்குதல்

இங்குப் பாபங்கள் என்ற சொல்லுக்குச் சில புண்ணியங்களும் பொருளாகச் சேரும். எவ்வாறெனில் - கீழே பாபம் என்ற சொல்லுக்குப் பின்பு தீங்கு விளைவிப்பதற்குச் சாதனமாயுள்ளதென்று பொருள் கூறப்பட்டது. சில புண்ணியங்களும் தீங்கு விளைவிப்பனவாயின் அவையும் பாபத் தொகுதியில் சேர வேண்டியவை தாமே! ஒரு சேதநன் இவ்வுலகில் எதாவது அற்ப பலனையோ ஸ்வர்க்கத்தையோ விரும்பிச் சில புண்ணிய கர்மங்களைச் செய்திருக்க கூடும். அவனே பின் நல்லறிவு பெற்று மோக்ஷத்துக்காக ப்ரபத்தியைச் செய்து விடுகின்றான். அத்தகையனுக்கு முன் செய்த புண்ணியங்களால் வரும் மற்ற பலன்களெல்லாம் அவன் விரும்பாத பலன்கள் தாமே! ஆகவே அந்தப் பலனைத் தரும் புண்ணியங்களும் அவனுக்குப் பாபக்குழுவில் சேர வேண்டியவையல்லவோ! அவையும் ஒழிந்தாக வேண்டுமே! ஆதலின் எல்லாப் பாபங்களில் அந்தப்

புண்ணியங்களும் சேர்ந்து ஒழிக்கப்பட வேண்டியனவாய்த் தீர்ந்தன.

### கழியும் பாபங்களின் வகைகள்

மேலும் இந்தப் பாபங்களில் அவித்யை - கர்மம் - பழயவாஸனை - அவற்றில் விருப்பம் - சரீரஸம்பந்தம் ஆகியவையும் சேருவன. அவற்றினின்றும் விடுவிப்பதாய்க் கூறுகின்றான்.

இன்னும் சில பாபங்களும் இவற்றில் சேரும். அவையாவன - முன்பு நெடுங்காலமாய்ச் சேதநன் அளவற்ற பாபங்களைச் செய்து வந்திருக்கின்றான். அவற்றுள் சில பாபங்களே பலன் கொடுக்கத் தொடங்கியுள்ளன. எஞ்சிய பெரும் பகுதிகள் மூட்டை மூட்டையாய்க் குவிந்துள்ளனவே! அந்தப் பாபங்களுள் அறிந்து செய்தவை - அறியாமல் செய்தவை என்று இரண்டு வகையானவை இருக்குமே! அவற்றையெல்லாம் ஒழித்து விடுவதாய்க் கூறுகின்றான் எம்பெருமான்.

மேலும் பலன் கொடுக்கத் தொடங்கிய பழய பாபங்களிலும் ப்ரபத்தி செய்த சேதநனுக்கு இஷ்டமில்லாதனவாய்த் துன்பத்தைத் தருவனவாயுள்ள பகுதிகளையும் ஒழித்து விடுகின்றான். அதாவது - முன்பு செய்த பாபங்களில் அடுத்த பிறவியைத் தரும் பாபங்களும் இருக்குமல்லவா! அவை எல்லாம் துன்பத்தைத் தரக்கூடியவையாதலின் இவனுக்கு இஷ்டமில்லா தனதாமே! அந்தப் பாபங்களையும் எம்பெருமான் ஒழித்து விட்டால் மறுபிறவி வராமற் போகுமன்றோ!

இவ்வாறு ப்ரபத்திக்கு முன்பு செய்துள்ள பாபத்தைக் கழிப்பது மட்டுமன்றி ப்ரபத்திக்குப் பின்பு அறியாமல் செய்ய நேரும் பாபங்களையும் எம்பெருமான் ப்ரபந்நனிடம் ஒட்டாமல் செய்து கழித்து விடுகின்றான்.

### தெரிந்தே செய்யும் பாபங்கள் கழியும் வகை

ப்ரபத்திக்குப் பின் தெரிந்து செய்யும் பாபங்களின் கதி என்னவென்றால் - அவற்றுக்கு ப்ராயச்சித்தமாக ஒரு ப்ரபத்தியை மறுபடி செய்துவிட்டால் அந்தப் பாபங்களும் தொலைந்து போமென்று சாஸ்த்ரம் கூறியுள்ளது. இப்படி ப்ரபத்திக்குப் பின்

அறிந்தே செய்யும் பாபங்களையும் 'ஸர்வபாபேப்ய:' என்ற எல்லாப் பாபங்களில் சேர்த்து அவற்றையும் எம்பெருமான் கழிப்பதாய்க் கூறவேண்டுமென்று விரும்பினால் அதற்குச் சாஸ்த்ரங்களுக்கு முரண்படாத வழியில் கருத்துக் கூற வேண்டும். அதாவது - ப்ரபத்திக்குப் பின் தெரிந்தே செய்ய நேரும் பாபங்களுக்காக எதாவது ஒரு பிராயச்சித்தத்தைச் செய்யுமாறு தூண்டி அதை நிறைவேற்றி அதன் வாயிலாக அவற்றை எம்பெருமான் ஒழித்து விடுகின்றான். பிராயச்சித்தம் செய்ய இசையாத முரடனாயிருந்தால் அவனுக்கு இவ்வுலகிலேயே எதாவது தண்டனையைக் கொடுத்து அந்தப் பாபங்களைப் போக்கிவிடுகின்றான் என்றே கருத்தைக் கொள்ள வேண்டும்.

### காம்ய கர்மங்களில் நல்லனவும் தீயனவும் - விளக்கம்

மேலும் உலகில் உள்ள அற்ப பலன்களை ஆசைப்பட்டுச் செய்த சில காம்ய கர்மங்களும் இந்தப் பாபத் தொகுதியில் சேரும். ஆனால் பகவத் பக்தி வளர வேண்டுமென்றோ, தத்துவங்களைப் பற்றிய அறிவு பெருக வேண்டுமென்றோ, எம்பெருமானுக்கு ஸந்நிதிகளில் விபவம் பெருக வேண்டுமென்றோ, பாகவதர்கள் செழித்து வாழ வேண்டுமென்றோ இத்தகைய பலன்களுக்காகச் சில காம்ய கர்மங்களைச் செய்தால் கழிய வேண்டியதில்லை. அவை ஸம்ஸார பந்தத்தைத் தருவனவல்லவே! அவை ஸ்வரூபத்துக்கு ஏற்ற கைங்கர்யமாக வல்லவோ ஆகும்! ஆகையால் அத்தகைய காம்ய கர்மங்களைத் தவிர வேறு பசு - புத்திரர் - செல்வம் முதலிய உலகியற்பயனை விரும்பிச் செய்த காம்ய கர்மங்களெல்லாம் கழிக்க வேண்டும் பாபங்களுள் அடங்கி ஸர்வ பாப சப்தத்தாலே சொல்லப் பெறுகின்றன. அவற்றைக் கழிப்பதற்குப் பிராயச்சித்தமாய்ப் ப்ரபத்தி செய்ய வேண்டும். செய்யாவிடில் இங்கு உள்ள நாள் பெறக்கூடிய பகவதநுபவத்துக்குத் தடை முதலிய குற்றங்கள் வரும். இன்னும் பெரியோர்களின் பழிப்பு - பஹிஷ்காரம் - விருப்பம் நிறைவேறாததால் துன்பம் முதலியனவும் வரும்.

### எம்பெருமான் மோக்ஷம் தரும் காலம் - விளக்கம்

இப்படி எம்பெருமான் தன் திருவடிகளில் பரந்யாஸம் செய்த எல்லோருக்கும் ரக்ஷகனாய் நின்று அவர்களின் சரீரம் கழிந்தவுடன் மோக்ஷத்தைக் கொடுக்கின்றான். உதாஹரணமாய்

(1) சிலர் இந்த ஸம்ஸார லோகத்தில் இனி க்ஷணகாலம் இருப்பதைக் கூடப் பொறுக்காமல் உடனேயே மோக்ஷம் பெற விரும்பி ப்ரபத்தியைச் செய்வர். இதற்கு ஆர்த்த ப்ரபத்தி என்று பெயர். இதைச் செய்தவர்க்கும் உடனே சரீரத்தைக் கழித்து எம்பெருமான் மோக்ஷத்தைத் தருகின்றான்.

(2) பலர் இந்தச் சரீரம் தானாக உள்ள வரையில் இந்த ஸம்ஸார போகங்களை நுகர்ந்து இச்சரீரம் கழிந்ததும் மறுபிறவியின்றி மோக்ஷம் பெற வேண்டுமென்று ப்ரபத்தி செய்வர். இது த்ருப்த ப்ரபத்தி எனப்படும். இந்த ப்ரபத்தியைச் செய்தபின் இவ்வுலகில் இருக்கும் வரை பாபச் செயல்கள் புரியாமலே பகவதநுபவத்திலும் கைங்கர்யத்திலும் மண்டியிருந்து வாழ்க்கை நடத்துவார்கள். இவர்களுக்குப் பாபச் செயல்கள் நேராததற்குக் காரணம் யாதெனில், இவர்கள் ப்ரபத்தியைச் செய்யும்போதே இச்சரீரம் உள்ளவரை பாபங்கள் கலக்காத கைங்கர்யங்கள் நடக்க வேண்டுமென்று ஸங்கல்பம் செய்து பிரார்த்தித்திருக்கலாம். அந்த ப்ரபத்தியின் வலிமை இவர்கள் பாபச் செயல்களைப் புரியாதவாறு தடுத்துவிடும். மற்றொரு காரணமும் இருக்கலாம் - இவர்கள் முன்பு விசேஷமான புண்ணியங்களைச் செய்திருக்கலாம். அவை இப்பொழுது பலன் கொடுக்கத் தொடங்கியிருக்கும். பாபம் நேராமை அவற்றின் பயனாகவும் இருக்கலாம். இவர்களுக்கும் சரீரம் கழிந்தவுடன் மோக்ஷம் கொடுக்கின்றான் எம்பெருமான்.

(3) ப்ரபத்தியைச் செய்தவர்களில் பலருக்கு இவ்வுலகில் உள்ளவரை தெரிந்தே பாபம் செய்ய நேருவது இயற்கையே. அதனால் இவர்களுக்கு மோக்ஷம் இல்லாமற்போய் விடுமோ என்ற கவலை வேண்டாம். இவர்களும் தம் செயலுக்கு வருந்தி அதற்காக ஏதாவது பிராயச்சித்தம் செய்து விடுவார்களாதலின் அந்தப் பாபங்கள் நீங்கிவிடும். தூய்மை பெற்ற இவர்களுக்கும் சரீர முடிவில் நிச்சயமாய் எம்பெருமான் மோக்ஷமளிப்பான்.

(4) இங்குப் பாபங்களைத் தெரிந்தே செய்து கொண்டும் அதற்காக வருத்தம் கொள்ளாமலும் ப்ராயச்சித்தம் ஏதும் செய்யாமலும் சில முரடர்கள் இருக்கக்கூடும். இவர்களுக்குக் கூடவா மோக்ஷம் கிடைக்கும்!! என்று ஐயம் வரலாம். எம்பெருமான் எப்பொழுதும் நன்மை செய்ய விரும்புமவனல்லனோ! ஆதலின் இவர்களின் பாபத்தையும் போக்க வேண்டும். மோக்ஷமும் தர

வேண்டும். அதற்காக இவ்வுலகிலேயே இவர்களுக்குச் சில சிறு தண்டனைகளை எம்பெருமான் கொடுத்து விடுகின்றான். அதனால் இவர்களும் தூய்மை பெற்று விடுகின்றனர். உலகிலும் தந்தை, புத்திரன் தவறு செய்தால் தண்டிக்கின்றான். இது புத்திரன் நன்மைக்காகத்தானே! இங்ஙனமே ஆசார்யன் சிஷ்யனைத் தண்டிக்கின்றான். இதுவும் அவனை நல்வழிப் படுத்தத் தானே! இவ்வாறே பாபம் செய்து கொண்டு பிராயச்சித்தமும் செய்யாத முரடர்களுக்குச் சில தண்டனைகளைக் கொடுத்துத் தூயராக்கிச் சரீரமுடிவில் மோக்ஷமும் தருகின்றான் எம்பெருமான்.

எம்பெருமான் பல தடைகளைக் கழிக்கும் முறை - விளக்கம்

எம்பெருமான் இயற்கையாகச் சேதநர்களிடம் மிக்க கருணையுடையன். கருணை வடிவான பிராட்டியும் உடனிருக்கின்றாள். அவன் சேதநர்க்கு விரோதியாயுள்ள அம்சத்தைக் கழித்து அவர்களுக்கு நல்வாழ்வு அளிக்கத் துடிப்பவனே. ஆயினும் அதற்கு உரிய ஸமயத்தை ஆவலுடன் எதிர்பார்க்கின்றான். தான் அவர்களுக்கு நல்வாழ்வளிப்பதற்கு அவர்களிடம் எதாவது ஒரு சிறுஸாதநம் இருந்தாலும் போதுமென்று நினைக்கின்றான்.

(1) சேதநர்களிடம் ஸத்துவ குணம் இருந்தால் தானே நற்கருமங்களைச் செய்ய வாய்ப்பு உண்டு! அந்தக் குணத்துக்குத் தடையாக எதோ கருமம் உள்ளது. அதைக்கழிக்க வேண்டும். சேதநர்கள் தங்களையும் அறியாமல் எதாவது புண்ணியம் செய்திருக்கிறார்களா என்று எம்பெருமான் பார்ப்பான். அதுவே போதும் அவனுக்கு. அதைக் கொண்டே ஸத்துவ குணத்துக்குத் தடையாயுள்ள கர்மத்தைக் கழித்து விடுகின்றான். ஸத்துவகுணம் வளருகின்றது. பின் நற்செயலைச் செய்யச் சேதநர்கள் முற்படுவர்.

(2) சேதநருக்குத் தத்துவஞானம் அவசியம் வேண்டும். அதாவது - சேதநம் - அசேதநம் - ஈசுவரன் என்ற மூன்று தத்துவங்களைப் பற்றியும் இன்னும் மற்றுமுள்ள அவசியமான விஷயங்களைப் பற்றியும் தெளிவான அறிவு வேண்டும். அத்தகைய அறிவு வராதவாறு சில விபரீதஜ்ஞாநங்கள் தடுத்துக் கொண்டிருக்கின்றன. அவற்றைக் கழிக்க வேண்டுமே! அதற்காகச் சேதநர்களுக்கு ஆசார்ய ஸம்பந்தத்தை ஏற்படுத்துகின்றான் எம்பெருமான். ஆசார்யன் சேதநருக்குத் தத்துவவுணர்வுக்குத் தடையாயுள்ள

விபரீதஜ்ஞாநங்களைப் போக்கித் தத்துவங்களைப் பற்றிய தெள்ளிய அறிவை உபதேசிக்கின்றான்.

(3) சேதநர்கள் மோக்ஷத்தைப் பெறப் பக்தியோகத்தையாவது ப்ரபத்தியையாவது செய்தேயாக வேண்டும். அதைச் செய்யவிடாமல் சில பாபங்கள் தடுத்துக் கொண்டிருக்கின்றன. அதனால் அவர்கள் எம்பெருமானிடம் நெருங்க முடியாதிருக்கின்றனர். அவர்கள் செய்த பாபங்களால் அவர்களிடம் எம்பெருமானுக்குச் சீற்றம் உள்ளது. அவர்களுக்காகப் பிராட்டி புருஷகாரமாகின்றாள். புருஷகாரமென்பதற்குப் பரிந்து பேசுபவளென்று பொருள். சேதநர்கள் முதலில் பிராட்டியைச் சரணமடைய வேண்டும். அதனால் அவள் எம்பெருமானிடம் பரிந்து பேசி அவர்கள் மீது அவனுக்கு உள்ள சீற்றத்தைப் போக்கி அவர்களின் பாபங்களைப் பொறுக்கச் செய்கின்றாள். அதனால் சேதநர்கள் அவனை எளிதில் அணுகி ப்ரபத்தியைச் செய்ய முடிகின்றது. இவ்வாறு பிராட்டியைக் கொண்டு ப்ரபத்திக்குத் தடைகளை நீக்கிவைப்பவனும் அவ்வெம்பெருமானேயாவான்.

(4) சேதநர்கள் மோக்ஷத்தைச் சேர்ந்து எம்பெருமானைச் சாச்வதமாய் அநுபவித்துக் கொண்டு இருக்க இயற்கையில் உரிமையுடையர்களே. ஏன் அவர்கள் அவனை அடையாமல் ஸம்ஸாரத்தில் உழல்கின்றனர்? அவர்கள் எம்பெருமானை அடைவதற்குத் தடையாகச் சில பாபங்களைச் செய்திருக்கின்றனர். அதனால் அவன் திருவுள்ளத்தில் சீற்றம் ஏற்பட்டுவிட்டதால் எம்பெருமானை அடைய முடியவில்லை. அதற்காகப் பக்தியோகத்தையோ ப்ரபத்தியையோ செய்ய வேண்டும். அதைச் செய்யுமாறும் எம்பெருமானே செய்கின்றான். அதைச் செய்தவுடன் அவனுக்கு உள்ள சீற்றம் கழிந்து விடுகின்றது. பின் சேதநன் மோக்ஷத்தை அடைவதற்குத் தடை என்ன? எதுவுமில்லை.

இவ்வாறு தன்னை அடைதற்குத் தடையாயுள்ளவற்றை எம்பெருமான் பக்தி அல்லது ப்ரபத்தியின் வாயிலாக ஒழித்து மோக்ஷம் தருகின்றான்.

இந்தச் சரம ச்லோகத்தின் முற்பாதி பக்தியோகம் முதலிய கைம்முதல் சிறிதும் இல்லாதவனாய் மோக்ஷம் பெற முடியாதே என்று சோகித்தவனைக் குறித்துப் பரந்யாஸத்தைச் செய்யுமாறு விதித்தது. பிற்பாதி அவனை ஸகல பாபங்களினின்றும்

விடுவிப்பேன் என்று எம்பெருமான் கூறியதாயுள்ளது. பரந்யாஸம் செய்து முடித்தவனைக் குறித்துப் பிற்பாதி கூறுவதால் ஸகல பாபங்கள் என்பதற்கு ப்ரபத்தியைச் செய்யாது தடை செய்த பாபங்கள் என்று பொருள் கொள்ளக் கூடாது. அவன்தான் ப்ரபத்தியைச் செய்து முடித்துவிட்டானே! ஆகையால் மோக்ஷம் பெறத் தடையாயிருந்த பாபங்களினின்று விடுவித்து மோக்ஷம் தருவதாகத் தான் பொருள் கூற வேண்டும்.

### உபாயங்கள் பலனைக் கொடுக்கும் வழி

ஆகவே எம்பெருமான் திருவுள்ளம் உகக்கச் செய்யும் பக்தியையோ ப்ரபத்தியையோ செய்தால் அவன் திருவுள்ளத்தில் சேதநர் விஷயத்தில் உள்ள சீற்றம் கழிந்துபோம். அவன் சீற்றம் கழிந்துவிட்டால் மோக்ஷம் தந்து விடுவான். பின் ஸம்ஸார நிலையில் சுருங்கியிருந்த ஞானம் முழு மலர்ச்சியைப் பெற்றுவிடும். இந்த அறிவுச் சுருக்கம் நீங்கிப் பரிபூர்ண மலர்ச்சி வருவதும் சீற்றம் நீங்கிய எம்பெருமானாலேயே. இந்த அறிவின் முழு மலர்ச்சியே அவனை அடைதல் என்பது. மலர்ந்த ஞானத்தில் அவன்தானே 'இலக்காகின்றான்!

### மோக்ஷயிஷ்யாமி - சப்தார்த்தம்

மோக்ஷயிஷ்யாமி - விடுவிக்கக் கடவேன். இதுவரை உன்னை ஸம்ஸாரத்தில் அகப்படச் செய்த ஸங்கல்பத்தை இன்று விட்டுவிடுவேன் என்றதாயிற்று.

### முக்தருக்கு நாள் குறைவேயன்றி அநுபவத்தில் குறைவின்மை

இங்குப் பாபங்களினின்று விடுவிக்கப் போவதாய் எதிர்காலத்தைக் குறிப்பிட்டதால் அந்தக் காலம் எப்பொழுது வரும் என்று கேட்கலாம். ப்ரபத்தியைச் செய்தவன் எந்தக் காலத்தைக் குறிப்பிட்டு மோக்ஷம் கேட்டானோ அதுவே எதிர்காலத்தின் எல்லை. ஸம்ஸார பந்தத்தில் வெறுப்பு மிக ஏற்பட்டு க்ஷணகாலமும் பொறுக்க முடியாமல் ஆர்த்த ப்ரபத்தியைச் செய்தவனுக்கு அப்பொழுதே மோக்ஷமாகிய பலன் கிடைத்து விடும். அத்தகைய துடிப்பு இல்லாமல் இச்சரீரம் தானாகக் கழிந்தபின் மோக்ஷம் கிடைத்தால் போதுமென்ற ஆறுதலுடன் த்ருப்த ப்ரபத்தியைச் செய்தவனுக்கு அவன் விரும்பியபடியே சரீரமுடிவில் மோக்ஷம்

கிடைக்கும். அந்நாள் வரை மோக்ஷத்தில் பெறும் பகவதநுபவத்தை இழக்கின்றானே என்னில், அது யாருடைய குற்றம்? அவனுடைய துடிப்புக் குறைவால் இழந்ததுதானே? ஆனால் நாள் குறைந்து போயினவேயன்றிப் பின்பு பெறும் பகவதநுபவத்தில் ஒரு குறைவுமில்லை. முன்பே மோக்ஷம் பெற்றவனுக்கும் பிறகு பெறுமவனுக்கும் நாள்களில் மிகுதி குறைவேயன்றி அநுபவத்தில் ஒரு வேறுபாடும் இல்லை.

*மா சுச: - சப்தார்த்தம்*

*மா சுச:* - வருந்தாதே. இவ்வாறு பகவதநுபவம் உனக்கு வரப்போவதால் இனி நீ வருந்துவதற்கு இடமேயில்லை என்கிறான் எம்பெருமான். நீ ப்ரபத்தியைச் செய்வதற்கு முன் "என்னிடம் பக்தியோகம் முதலிய கைம்முதல் எதுவும் இல்லையே! எப்படி ஸம்ஸார பந்தம் நீங்கி மோக்ஷம் பெறுவேன்?" என்ற கவலையுடன் துக்கித்தாய். இந்தத் துக்கம் ப்ரபத்தி செய்வதற்குத் தகுதியாயிருந்து நன்மையாயிற்று. ப்ரபத்திக்குப் பின் மோக்ஷம் பெறுதல் நிச்சயமாயிருக்கும் போது மகிழ்ச்சி கொள்ள வேண்டியிருக்க, இன்னும் கவலை கொண்டு வருந்தினால் அது முட்டாளின் செயலாகும்.

*சரம சுலோகத்தின் முழுப்பொருள் விளக்கம்*

அப்பனே! பக்தியோகம் முதலிய மற்ற உபாயம், அதற்கு வேண்டிய ஞானம் சக்தி முதலிய தகுதியில்லாத உனக்குப் பொருந்தாது. ஆதலால் அவ்வுபாயத்தில் நீ அலைய வேண்டாம். நானோ சேதநனுடைய ஜாதி குணம் முதலிய சிறப்புக்களைக் கவனிப்பவனல்லேன்; எல்லோருக்கும் ரக்ஷகனாயிருப்பவன். என்னையே உபாயமாக நிச்சயமாய்க் கருதி என்னைச் சரணமடைந்து ப்ரபத்தி செய்துவிட்டாய். நான் வரம் கேட்பவர்க்குக் கற்பகமரமாய் நின்று வாரி வழங்குமவன். நான் ஒன்றை ஸங்கல்பித்துவிட்டால் அதை என்னாலும் தடை செய்ய முடியாது. இத்தகைய நான் ப்ரபத்தி செய்த உன்னுடனேயே அநாதியாய்த் தோன்றி நிற்கும் விரோதிகளான கர்மங்களின் தொகுதிகள் எல்லாவற்றினின்றும் உன்னை விடுவித்து முக்தியில் பெறவேண்டிய உன் இயற்கையுருவைத் தோன்றச் செய்வேன். உயர்ந்த நித்ய ஸூரிகளுடன் உன்னைச் சேர்த்து விடுவேன். அவர்களுடன் பிரியாது நின்று எனக்குக் கைங்கர்யம் செய் என்று கட்டளையிடுவேன். இனி ஒரு நாளும் ஸம்ஸார மண்டலத்துக்குத் திரும்புதலில்லாத கைங்கர்யத்தை உன்னிடமிருந்து ஏற்றுக்கொள்வேன். நீ இனி எதற்கும் வருந்தாதிரு. 'யமதூதர்

தலையில் காலடி வைத்து நடப்பேன். துன்பம் தரும் நரகம் இனி ஒழிந்தது. யமனுக்குக் காரியம் இங்கு எதுவும் இல்லை. எமன் இனி என் பாபங்களை எண்ணிப் பார்க்க முடியாது' என்றெல்லாம் நினைத்துக் கொண்டு இரு. யமனுக்கு இனி அடங்கி நடக்கவேண்டியதில்லையாதலாலும் கைங்கர்யமாகிய மோக்ஷஸாம்ராஜ்யம் கைக்கு வருவதாலும் நீ மிக்க மகிழ்ச்சி கொள்ளவேண்டும். இல்லறத்திலிருப்பவன் வருவதாகச் சொல்லிய நல்ல விருந்தினனை ஆவலுடன் எதிர்பார்ப்பது போல் ஸ்ரீ வைகுண்டத்தை அடைவதற்கு நாளை எண்ணிக் கொண்டிரு என்று கூறுவதாய் ரக்ஷகனான கண்ணன் திருவுள்ளம்.

## எம்பெருமான் சொல்லில் நம்பிக்கை அவசியம்

எம்பெருமான் ஸங்கல்பித்தது பொய்யாகாது. அவன் கூறும் வாக்கியம் ஸத்யமானது அவன் இச்சரம சுலோகத்தில் கூறிய உண்மைப் பொருளில் நம்பிக்கைகொண்டு இதில் மிக உறுதியுடன் இருக்க வேண்டும். அப்படி இல்லாதவன் மிக்க வருத்தத்துக்கு உள்ளாவான். காலமே ஒருவெள்ளம் போல் போய்க் கொண்டிருக்கிறது. இதைத் தடுக்க முடியுமா? இத்தகைய காலப்போக்கில் என்றைக்கு நான் உரிய நிலைமையை அடைவேனோ! என்ற கவலையுடன் சோகித்துக் கொண்டேயிருப்பான். இந்தக் கண்ணனுடைய வார்த்தையில் நம்பிக்கையுடயனாய் பிரபத்தி செய்தவன் இனி நம் முயற்சி சிறிதும் அவசியம் இன்றி மோக்ஷஸாம்ராஜ்யத்தைப் பெற்று விரைவில் பரவாஸுதேவகைங்கர்யத்தில் ஈடுபடப் போகின்றேனென்று மேண்மேலும் மிக்க மகிழ்ச்சி கொள்வான்

## ஸ்ரீ சரணாகதிகத்யம் - சரமசுலோகத்தின் விளக்கம்

ஸ்ரீ சரணாகதிகத்யத்தில் 'எப்பொழுதும் கைங்கர்யம் செய்பவனாக ஆவேன்' என்ற பொருள் கொண்ட ஒரு வாக்யம் உள்ளது. இந்த வாக்யம் வரையில் சரம சுலோகத்தில் முற்பாதியில் விதிக்கப்பட்ட சரணாகதியைச் செய்யும் முறையைக் கூறுகின்றது. இதற்குமேல் உள்ள வாக்கியமெல்லாம் சரமசுலோகத்தில் பிற்பாதியின் உட்கருத்தை விளக்குவதாகுமென்று உணர்க.

ஸ்ரீ ரஹஸ்யத்ரய சுளகம் (ஸாரஸங்க்ஷேபம்)

முற்றும்

---

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :

